# இல்லற நெறி

(வேலனுக்கு வேங்கடத்தானின் கடிதங்கள்)

பேராசிரியர்

டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்,

எம்.ஏ., பி.எஸ்ஸி., எல்.டி., பிஎச்.டி

தமிழ்த்துறைத் தலைவர்,

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.




தமிழ்ப் புத்தகாலயம்

576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

# அன்புப் படையல்

சாந்தியின் வடிவம்; செந்தமிழ்த் தென்றல்
சால்பினுக் கமைந்ததோர் உறைகல்;
காந்தியின் நெறியால் நல்வழி காட்டி;
கருணையாம் திரைதவழ் வேலை;
பாந்தளை முல்லை அலங்கலாய்ச் செய்யும்
பண்புரு; பெண்மையைப் போற்றும்
ஏந்தலார்-அமரர்-திரு. வி. க. பதத்தில்
எழில்மணம் பெறுகஇந் நூலே.

# நன்றியுரை

காந்தியடிகள் காட்டிய அறநெறி நின்று தமிழ்நாட்டில் பல்லாண்டுகளாகக் கல்வி, சமூகம், மருத்துவம் என்ற முத்துறைகளிலும் தொண்டாற்றிப் பெரும் புகழ்பெற்ற தமிழ்ப் பெருமகள் டாக்டர் டி. எஸ். செளந்திரம் இராமச் சந்திரன் அவர்கள். இன்று தமிழகத்தில் மதுரை மாவட்டத் தில் காந்தி கிராமத்திலுள்ள கல்வி நிலையங்கள் யாவும் அம்மையாரின் சீரிய பணியை எடுத்துரைக்கும் சான்று களாகும். இவரது அடக்கமான பணியை அறிந்த மைய அரசு இவருக்குப் பொருத்தமான கல்வித் துறையில் துணை—அமைச்சர் பொறுப்பை வழங்கிப் பெருமைப் படுத்தியது. இன்று கல்வித்துறை அமைச்சில் மணிவிளக்கு போல் அணிசெய்யும் அம்மையார் அவர்கள் இந்நூலுக்கு முன்னுரையை வழங்கி ஆசி கூறினமைக்கு என் உளங்கனிந்த நன்றியும் வணக்கமும் என்றும் உரியவை.

திருப்பதி,
14–12–1964

ந. சுப்பு ரெட்டியார்

இந்திய அரசாங்கக் கல்வித்துறைத் துணை - அமைச்சர்
டாக்டர் சௌந்திரம் இராமச்சந்திரன் அவர்களின்

# முன்னுரை

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களுடைய 'இல்லற நெறி' என்ற புத்தகத்தைப் படித்தேன். வேலனுக்கு வேங்கடத்தான் எழுதும் கடிதங்கள் மூலமாக ஆசிரியர் இல்லற நெறியைப் பலகோணங்களிலிருந்தும் விளக்கியிருக்கின்றார். ஆங்கிலத்தில் இதுபோன்ற புத்தகங்கள் ஏராளமாக உள்ளன. இளந்தம்பதிகள் அவைகளை விருப்பத்துடன் படிக்கின்றனர். தற்காலத் தேவைக்கேற்பத் தமிழில் அத்தகைய நூல்கள் மிகவும் அவசியம். பேராசிரியர் ரெட்டியார் அந்த அவசியத்தை உணர்ந்து அதனை ஒருவாறு நிறைவேற்ற முன் வந்தது மிகவும் பாராட்டுதற்குரியது.

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் வெகு சிரத்தையுடன் முயற்சி எடுத்து 'இல்லற நெறியை' எழுதியிருக்கின்றார். இல்லறத்தை வெற்றியுடன் நடத்த மனோ தத்துவ ரீதியில் அதிகம் ஆலோசனை கொடுப்பது மிகவும் அவசியம். அங்க அமைப்பு விவரங்களின் விஸ்தரிப்பைக் குறைத்திருந்தால் புத்தகத்தின் பளுவும் குறைந்திருக்கும். ஆனால் தமிழ்நாட்டுப் பொதுமக்களுக்கு விஞ்ஞான அறிவு குறைவாக இருக்கும் எனக் கருதி அப்பகுதியை விஸ்தாரமாக எழுதியிருக்கின்றார் போலும்!

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் புத்தக உலகத்திற்குப் புதியவர் அல்லர். பல விஞ்ஞானப் புத்தகங்களை அவர் எழுதியுள்ளார். ஆகவே, அவருடைய இந்த முயற்சி தமிழ் மக்களுக்கு, அதுவும் இளந்தம்பதிகளுக்கு, மிகவும் உபயோகமாக இருக்கும் என்பதில் ஐயம் இல்லை. அவருடைய முயற்சியையும் ஆர்வத்தையும் நான் பாராட்டுகின்றேன்.

புது டில்லி,
8-12-1964

T. S. ஸௌந்திரம்

# நூல் முகம்

வரங்கொண்ட வுமைமுலைப்பால்
மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும்
பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சும்
சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலும்என்றன்
கண்ணைவிட்டு நீங்காவே.[1]

—சுவாமிநாத தேசிகர்

இம்மண்ணுலகில் தோன்றிய ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் பிறப்பு, திருமணம் இறப்பு ஆகிய மூன்று நிகழ்ச்சிகளும் மிகப் பெரியவை; சிறப்புடன் குறிப்பிடத் தக்கவை. இவை மூன்றும் முறையே ஒருவரது வாழ்வின் முற்பகுதி, நடுப்பகுதி, பிற்பகுதிகளில் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும். உலகிலுள்ள எல்லாச் சமூகங்களும் இம்மூன்றற்கும் முக்கியத்துவம் அளித்துள்ளன. இம்மூன்றிலும் நடு நாயகமாக அமைந்துள்ள திருமணமே மக்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளது; நாகரிகம் அடைந்த எல்லா மக்களும் இதனைக் கருத்துடன் கவனித்துப் பல கட்டுப்பாடுகளை அமைத்துள்ளனர். இதற்குக் காரணம் என்ன? காரணம் மிகவும் வெளிப்படை. திருமணம் என்பது தனிப்பட்டோரின் உடல்பற்றியதும், உளம் பற்றியதும், உள்ளக் கிளர்ச்சிபற்றியதும், ஆன்மிக உறவுபற்றியதுமான முதிர்ச்சியினைக் காட்டும் சமூகச் சான்றாகும். அஃது ஒரு குறிப்பிட்ட தருணத்தில் ஓர் இளைஞனைக் கணவன்-தந்தையாகவும், ஒரு யுவதியை மனைவி-தாயாகவும் மாற்றுகின்றது. இந்நிலையில் அது அவர்கட்குச் சமூகத்தில் ஓர் உயரிய நிலையையும், கடமைகளையும் உரிமைகளையும் பொறுப்புகளையும்

---

1. திருச்செந்திற் கலம்பகம்-செய். 20

நல்குகின்றது. பெரும்பான்மையான ஆடவர்-மகளிர் வாழ்க்கையில் திருமணம் உயிர்நாடிபோல் அமைந்து மிக நெருங்கிய உடல், உள, ஆன்மிக ஒருமைப்பாட்டினை விளை வித்து விடுகின்றது; 'யான்' 'எனது' என்ற தன்னல நிலை கள் மறைந்து 'நாம்' 'நமது' என்ற பொதுநல நிலைகள் தோன்றுகின்றன. ஒரு நல்ல திருமணத்தில்கணவன்-மனைவி யரின் தனிப்பட்ட முனைப்புகள் ஒன்றிக் கலக்கின்றன. ஒரு வருடைய சுக துக்கங்கள் மற்றவரின் சுக துக்கங்களாக அமைகின்றன. அவர்களுடைய மதிப்பீடுகள், விருப்பங்கள் வாழ்க்கை யநுபவங்கள் இவை யாவற்றையும் இருவரும் பகிர்ந்து கொள்ளுகின்றனர். இறக்கும் வரையில் இருவரது பற்றுறுதியும் யாதொரு நிபந்தனையுமின்றி இருவரையும் இறுகப் பிணைக்கின்றது. திருமணத் தளை என்பது உண்மை யில் தெய்விகத் தன்மையுடையது; எவரும் அதனைச் சிதைத் தல் முடியாது.

இங்ஙனம் ஒருயிர் ஈருடல் எனப் பிணிக்கும் திருமணம் ஒருவருடைய தனிமைக்கு மருந்தாக அமைகின்றது; காதல் உணர்ச்சியைத் தூய்மையாக்குவதற்கும் அவ்வுணர்ச்சி சிறப் பாகப் பொலிவதற்கும் வாய்ப்பினைத் தருகின்றது. அத் தகைய மணமக்களுக்குப் பிறக்கும் குழவிகளின் சமூக வாழ்க்கையையும் வளமாவதுகின்றது. நினைப்பிற்கெட் டாத நெடுங்காலமாகவே மணத்தினால் பிணைக்கப்பெற்ற பெற்றோர்கள் தம் குழவிகட்குச் சிறந்த ஆசிரியர்களாக அமைந்துகொண்டு வருகின்றனர்; புதிதாகப் பிறந்த மானிடப் பிராணிகளைச் சிறந்த சமூகப் பொறுப்புடைய ஆட்களாகச் செய்வதற்குக் குடும்பம் முக்கிய பள்ளியாக அமைகின்றது. 'குடும்பம் எவ்வழி அமைகின்றதோ, அவ் வழியே சமூகமும் அமையும்' என்ற பொன்மொழியும் இதனால் எழுந்தது.

மேலும், கணவன்-மனைவி ஆகிய இருவருள் ஒருவர் மற்றவர்பால் கொண்டுள்ள அன்பும் தம் குழந்தைகட்டுக் கல்வி நல்கும் பொறுப்பும் அவர்களுடைய படைப்பாற்றல் களைக் கிளர்ந்தெழச் செய்யவும், அவற்றைச் சிறந்த முறை யில் வளரச் செய்யவும் துணை செய்கின்றன. தம்முடைய கல்வி, சமூகநிலை, சமயம், பொருளாதாரநிலை இவை எங்ஙனமிருப்பினும் ஒவ்வொரு தம்பதிகளும் திருமணத் தினால் எழக்கூடிய படைப்புத் தூண்டலினால் மிக்க மன நிறைவு கொள்ளுகின்றனர். இம்முறையில் திருமணம் ஒவ் வொரு குடிமகனுக்கும் சிறந்த பயிற்சிப் பள்ளியாக

அமைகின்றது. இத்தகைய படைப்புத் தூண்டல் மானிட இனத்திற்குமட்டிலும் சிறப்பாக அமைந்த ஓர் அற்புதப் பண்பாகும்; இம்மன நிறைவு வாழ்க்கை இன்பத்திற்கே இன்றியமையாத தேவையுமாகும்.

திருமண உறவினை, பெற்றோர்கள் சிறப்புறத் தூய்ப்பதனல் பல பெரிய கடமைகள் தாமாக நிறைவேறுகின்றன. மானிட இனம் வாழையடி வாழையாக வளர்ச்சியுறுகின்றது. பெற்றோர்கள் தம் மக்கள் வழியே தம்முடைய மரபு வழிப் பண்புகளையும் வாழ்க்கையில் பெற்ற சிறப்பியல்புகளையும் வழிவழியே நடத்துகின்றனர். திருமணத்தினால் தம்முடையவும், தம் முன்னோருடையவும், ஒரு குறிப்பிட்ட மரபு வழியினருடையவுமான சமூக மார்க்கண்டேயத்தை[2] அடைய முடிகின்றது. தம்முடைய நற்பெயர், மதிப்பீடுகள், மரபு வழிப் பண்புகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றைத் தம்முடைய குழந்தைகள், பேரன்மார்கள், பின் சந்ததியினர் இவர்கட்குத் தருவதனல் இவை நல்ல பாதுகாப்பாக அமைந்து விடுகின்றன. இக்காரணங்களால்தான் உலகிலுள்ள எல்லாச் சமூகத்தினரும் திருமணத்தை மானிட இனத்தின் இருப்பிற்கே இன்றியமையாத நிகழ்ச்சியாகவும் சமூகம் அழியாதிருக்கக் கூடிய அறுதியீடும் கூறுகவும் கருதுகின்றனர்.

பெண், ஆண் என்னும் இருபாலாரும் உற்ற வயதடைந்ததும் இருவர் மாட்டும் ஒருவித இன்ப உணர்வு எழுகின்றதன்றோ? இவ்வுணர்வு உயிர்களிடத்து எழுவதன் நோக்கம் என்ன? இன்பத் தோற்றத்துக்கென மெல்லுறுப்புகளும் அவைகளின் காப்புக்கென வல்லுறுப்புகளும், அவைகளின் அரணுக்கென நரம்பு, எலும்பு, தசை, தோல் முதலிய ஏனைய அமைப்புகளும் இயற்கையில் அமைந்திருக்கும் நுட்பத்தை ஒவ்வொருவரும் உன்னிப் பார்த்தல் வேண்டும்; அவற்றின் நோக்கங்களையும் உணர்தல் வேண்டும். உடற்கூற்றின் அமைப்பும், அதனல் எழும் இன்பமும் பெண் ஆண் சேர்க்கை இயற்கையில் பொருந்தியதொன்று என்பதைச் செவ்வனே அறிவுறுத்துகின்றன பெண்-ஆண் சேர்க்கையின் மூலம் துன்ப இருளிற்கட்டுண்டு கிடக்கும் உயிர்கட்கு ஆண்டவன் உடலை ஈந்து இவ்வுலக வாழ்வை நல்குகின்றான் என்றும், ஆண்டவன் படைப்புக்கு இச் சேர்க்கை ஒரு வழியாக அமைந்துள்ளது என்றும் ஆன்றோர் கூறுகின்றனர்.

---

2. சமூக மார்க்கண்டேயம்-Social immortalitiy

## 2

'இல்லற நெறி' என்ற இந்நூல் திருமண வாழ்வில் நுழையும் நம்பி-நங்கையர் அறிந்துகொள்ள வேண்டிய அடிப்படைச் செய்திகளனைத்தையும் ஐம்பது கடிதங்களில் விரித்தோதுகின்றது. இச்செய்திகள் மணப்பொருத்தம், அறிவியலடிப்படையில் திருமணம், இனப்பெருக்கம், குடும்பக் கட்டுப்பாடு, மக்கட்பேறு, திருமணக்கலை, பால் பொருத்தக் கேடுகள், திருமண வாழ்வில் உடல்நலம், மகிழ்வுடைய இல்வாழ்க்கை, மங்கல வாழ்த்து என்ற பத்து இயல்களில் பாங்குறப் பாகுபாடுசெய்து கூறப்பெற்றுள்ளன. ஒவ்வொரு இயலின் தொடக்கத்திலும் அவ்வியலின் திரண்ட கருத்து சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளது இம்முறை அவ்வியலைப் படிக்கப் புகுவோருக்கு ஆர்வம் எழுப்பக்கூடியதாக இருக்கும். எல்லாப் பகுதிகளையும் ஊன்றிப் பன்முறைப் படித்துச் செய்திகளைத் தெளிவாக உளங்கொள்ளல் சாலப் பயன் தரும். நூலின் இறுதியில் பின்னிணைப்புக்களாகச் சேர்க்கப் பெற்றுள்ள பயன்பட்ட நூல்களின் பெயர்கள், பொருளடைவு ஆகியவை இந்நூலினைப் பயில்வோருக்குப் பல துறைகளிலும் ஆற்றுப்படுத்த துணையாக அமையும். அவற்றைப் பயனறிந்து ஏற்ற பெற்றிப் பயன்படுத்திக் கொள்வார்களாக.

கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலிய அனைத்திற்கும் நிலைக்களன் உடல் என்பதை ஒவ்வொருவரும் நன்கு உணர்தல் வேண்டும். அறிவு விளக்கம் மன அமைதியைப் பொறுத்து நிற்பது உடல் நலம் இனத்தை அறிவிக்கும் உறுப்பின் அகப்புற வளத்தைப் பொறுத்து நிற்பது. அவ்வுறுப்பிற்குப் பழுது நேரின் வாழ்வே குலைந்து போகும். உடலில் எவ்வுறுப்பிற்கு ஊறு நேரினும் சிகிச்சை செய்துகொள்ள இயலும்; எவ்வுறுப்பினை இழப்பினும் உயிர் வாழ்தல் கூடும். ஆயின், குறிக்கு ஊறு நேரின் அதற்கு எவ்விதச் சிகிச்சையும் இல்லை; சிகிச்சை செய்து கொள்ளினும் ஊறு நீங்காது; ஊறுடன் உயிர் வாழ்தலும் இயலாது. இந்நுட்பத்தினை நன்குணர்ந்தே தமிழ் மக்கள் அவ்வுறுப்பிற்கு 'உயிர் நிலை' என்று பெயர் சூட்டிப் போற்றினர்.

எத்தனையோ மணமக்கள் உடற்கூறு தெரியாது பல வழிகளிலும் கெடுகின்றனர். ஆணுறுப்புபற்றியும் அதனோடு தொடர்புள்ள சிறு சிறு உறுப்புகள் பற்றியும் அறியாத

ஆடவர்களும், கருக்குழியைப் பற்றியும் அதன் சினைகளாக உள்ள சிறுசிறு உறுப்புகள் பற்றியும் போதிய அறிவு பெறாத மகளிரும் நன்முறையில் தாம்பத்திய உறவு கொள்ள முடிவதில்லை. இவர்கள் உறுப்புகளின் நிலையை உணராது, அவற்றின் வழி துறை தெரியாது உழன்று, இன்பத்தை இழந்து நிற்பதுடன் நெறி தவறிய வாழ்வினால் வேறு பல நோய்களையும் தேடிப் பாழ்படுகின்றனர். இப்போது மேனாட்டு அறிஞர்கள் உயிர் நிலைகளின் நுட்பங்களைச் செவ்வனே ஆய்ந்து அவற்றின் இயல்புகளை எவரும் எளிதில் உணரும் முறையில் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளனர். அந்த நுட்பங்களையெல்லாம் மனத்திற்கொண்டு பல அறிவியல் கருத்துகள் இந்நூலில் விளக்கப்பெற்றுள்ளன. உயிர் நிலையாகவுள்ள உறுப்புகளைப் போற்றிப் புரத்தலும், நெறியுடன் ஆளுதலும் மணமக்களின் முதலாய கடனாகும்.

"நமது நாட்டுப் பழமை என்னும் 'உயிர்' இக்கால மேல்நாட்டுப் புதுமை என்னும் 'உடல்' தாங்கும் முறையில் தாய்மொழியில் நூல் பல யாத்தல் காலத்துக்கு இயைந்த தொண்டாகும்; அத்தகைய நூல்களின் இன்றியமையாமையைச் சொல்லவும் வேண்டுமோ" என்ற திரு. வி. க. அவர்களின் குறிப்பே[3] என்னை இந்நூலை எழுதத் தூண்டியது. அப்பெரியாரின் ஆசியால் நூலும் ஓரளவு நன்முறையில் அமைந்தது என்று கருதுகின்றேன். என்னுடைய உயர்நிலைப் பள்ளி வாழ்க்கை முதற்கொண்டே அப்பேரறிஞர்பால் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறியாக இந்நூலை அவர்களின் திருவடிகட்குப் படைக்கின்றேன். அவர்கள் காட்டிய பாதையில் செல்லும் இந்நூல் அமரத்துவம் பெற்றுள்ள அவர்களது ஆசியால் தமிழ் கூறு நல்லுலகில் பெருமிதத்துடன் உலாப்போந்து பல மணமக்களின் வாழ்வினை வளமாக்கும் என்பது என் திடமான நம்பிக்கை.

## 3

பொருள் விளக்கத்திற்குப் படங்கள் பெருந்துணை புரியும் என்பது கல்வியறிஞர்கள் கண்ட துணிபு. இந்த நூலை 55 படங்கள் அணி செய்கின்றன. இப்படங்களை எழுதி உதவியவர் என் அரிய நண்பர் திரு. வே. முனியாண்டி என்பவர்; காரைக்குடி அழகப்பா மாதிரி உயர்நிலைப் பள்ளியில் ஓவிய

3. 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை' —முன்னுரை.

ஆசிரியராகப் பணியாற்றுபவர். அறிவியல் துறையில் அமையவேண்டிய நுட்பங்களையெல்லாம் நுணுகி அறிந்து திறம்படப் படங்களை அமைத்துத் தந்த அவருக்கு என் உளங் கனிந்த நன்றி. அவருக்கு எல்லா நலன்களையும் திருவேங் கடத்தான் அருள்வானாக.

காலத்துக்கேற்ப நூல்களை அணி அணியாக வெளியிட் டுத் தமிழ் பணி புரிந்து வரும் தமிழ்ப் புத்தகாலயம் இந்த அறிவியல் நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அதன் அதிபர் திரு கண. முத்தையா செட்டியார் அவர்கட் கும், நூலை அழகுற அச்சிட்டுக் கற்போர் கைகளில் களி னுடன் தவழச் செய்த இராமன்ஸ் அச்சகத்தினருக்கும் என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை வெளியிட இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அப் பல்கலைக் கழகத் தைச் சீரிய முறையில் இயக்கி வரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C வாமன்ராவ் அவர்கட்கு—என் மனமுவந்த நன்றியைப் பணிவன்புடன் புலப்படுத்திக் கொள்ளு கின்றேன்.

என்னிடம் இயல்பான பல குறைகளிருந்தும் என்னையும் ஒரு கருவியாகக்கொண்டு என்னுளே நின்று என்னை இயக்கி இந்நூலை எழுதித் தமிழன்னையின் புதுவாழ்வில் பணியாற்ற அடியேன் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம்வல்ல நீலமேனி நெடியோனை மனம், மொழி, மெய் களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

ஃ ஃ ஃ

பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே.[4]

திருப்பதி
1-12-1964

ந. சுப்பு ரெட்டியார்

4. திருமூலர்: திருமந்திரம்—1158

# உள்ளுறை

## பெண் உறுப்புகள்

# மணப் பொருத்தம்

வாழ்க்கையின் தத்துவம் திருமணத்தில் தொடங்குகின்றது. அதுவே அறனும் அன்பும் உடைய இல்வாழ்க்கையில் விளக்கமடைகின்றது. இல்வாழ்க்கை சிறப்புடன் அமைய வேண்டுமாயின் ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுக்கப்பெறுபவர் எல்லா நிலைகளிலும் சரியாக அமைய வேண்டும். ஒத்த உடல் நிலை, கிட்டத்தட்ட ஒத்துப்போகும் உள்ளக் கிளர்ச்சி நிலை, தேவையான அளவு பொருளாதாரநிலை முதலியவை நன்கு அமைய வேண்டும். இக் குடும்பத்தின் நன் மக்கட் பேறு ஏற்பட வேண்டுமாயின், மணமக்களாக அமைவோரின் மரபுவழி நன்கு பொருந்த வேண்டும்; அறிவியல் அடிப்படையில் மரபுவழியைப்பற்றிய அறிவு மணமக்களுக்கு ஏற்படவேண்டும். மரபுவழியாக இறங்கும் உடல்-உளக் கூறுகள், பிறவி சார்ந்த குறைகள், மரபுவழியாகக் கடத்தப்பெறும் நோய்கள் முதலியவைபற்றிய சில கருத்துக்களை அறிதல் மிகவும் இன்றியமையாதது. ஒரு குழந்தையின் வளர்ச்சியில் மரபுவழி, சூழ்நிலை இவற்றின் பங்கு என்ன என்பதையும், உறவினர்களுக்குள் மண உறவு கொள்வதன் விளைவுகள் யாவை என்பதையும் அறிதல் பெரிதும் பயன் தரும். இச் செய்திகள் பற்றிய பல கருத்துக்கள் ஆறு கடிதங்களில் (1–6) இந்த இயலில் கூறப்பெற்றுள்ளன.

# 1

அன்பு நிறைந்த செந்தில்வேலனுக்கு,
நலன். நலனேயாகுக.

இந்த உலகம் ஆண்—பெண்வடிவாக இலங்குகின்றது; முழுமுதற்பொருளும் ஆண் பெண் வடிவாகப் பொலிகின்றது. ஆகலின், பெண்ணும் ஆணும் கூடி வாழும் வாழ்வே வாழ்வாகும்;

> **மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**
> **எண்ணினல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலைக்**
> **கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்**
> **பெண்ணிநல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.**[1]

என்ற ஞானசம்பந்தப் பெருமானின் திருப்பாடலை நினைவு கொண்டு வாழ்க்கையைக் கூர்ந்துநோக்கின் அண்டம் ஆண்-பெண்ணாக அமைந்திருப்பதன் உண்மையும் பிண்டமும் அதனையொட்டி அவ்வாறே அமைந்திருப்பதன் தத்துவமும் புலனாகும். இன்றைய உயிரியல்[2] ஆராய்ச்சியும் இவற்றைத் தெளிவாக்கும்.

**திருமணம்:** ஒருபாதியாகிய பெண்ணும் மற்றொருபாதியாகிய ஆணும் ஒன்று படுவதையே ஆன்றோர் திருமணம் என்ற பெயரால் குறித்தனர். திருமணம் என்பது வெறும் விளையாட்டு நிகழ்ச்சியன்று; ஒரு பொழுது தோன்றி மறுபொழுது அழியும் சாதாரணச் செயலன்று. அஃது 'ஆயிரங் காலத்துப் பயிர்'. ஒவ்வொரு பாதியாக வளர்ந்து வரும் இரண்டு உயிர்கள் ஒன்றி முழுத்தன்மை எய்திக் கடனாற்று

---

1. தேவாரம்—அடங்கன்முறை—3052.
2. உயிரியல்—Biology.

வதற்கு அவற்றை அன்புக் கயிற்றால் இயற்கை பிணிக்கின்றது; இப்பிணிப்பே திருமணம் ஆகும். இப்பிணிப்பிற்கென்றே இயற்கை இருபாலாரையும் பாதி பாதியாகத் தோற்றுவிக்கின்றது. இங்ஙனம் அம்மை—அப்பன்போலப் பாதி பாதியாகத் தோன்றிய உயிர்களின் அறிவும் மனமும் ஏனைய உறுப்புக்களும் பண்பட்டபின் இயற்கை திருமணத்தின் மூலமாக அவர்தம் இருமை கெடுத்து ஒருமையாக்கி முழுமை வழங்குகின்றது. ஒருமை என்பது ஆன்ம நேய ஒருமைப்பாடு. இதனைத் திருமணம் அநுபவத்தில் பெற வைக்கின்றது.

வீட்டில் நின் பெற்றோர்கள் திருமணப்பேச்சு தொடங்கியுள்ளனர் என்று எழுதியிருந்தாய். நீ திருமணம் செய்து கொள்வதற்கு முன் என் யோசனைகளைக் கூறுமாறும் கேட்டிருந்தாய். திருமணம் புரிந்துகொள்வதற்குமுன் மூத்தோர்களை அண்மி திருமணம்பற்றிய கருத்துக்களை அறிந்து கொள்வது நல்லதே. திருமணத்தில் பங்கு பெறும் உடற்கூறு, உளக்கூறு பற்றிய செய்திகளைத் தெளிவாக அறிந்து கொண்டால் வாழ்க்கையில் மனநிறைவு கொள்ளும் முறையில் பொருத்தப்பாடு[3] பெறுவதற்குத் துணையாக இருக்கும்.

திருமணம் பற்றிய ஒரு சில நூல்களைக் கூடப் படிக்கவில்லையென்றும், படிக்க வேண்டிய நூல்களைக் குறிப்பிட்டெழுதுமாறும் கேட்டிருந்தாய். புத்தகச் சந்தையில் பல கேடு பயக்கும் நூல்கள் வெளிவந்துள்ளன; வந்துகொண்டுமிருக்கின்றன. சில நூல்கள் காமவிகாரத்தை எழுப்பி இளைஞர்களைத் தவறான நெறிகளில் கொண்டு செலுத்தக் கூடியனவாகவும் உள்ளன. அவை ஒருபுறம் இருக்க, இன்னொருபுறம் நெறிகோணி நடந்து நோய்க்குள்ளானவர்கட்கு இழந்த இளமையைத் திரும்பப் பெறுவதற்குரிய மருந்துக்கள் பற்றி எண்ணற்ற விளம்பரங்கள் தோன்றிய

3. பொருத்தப்பாடு—Adjustment.

வண்ணமுள்ளன. நீ அத்தகைய நூல்களைப் படிக்கவும் வேண்டாம்; அத்தகைய விளம்பரங்களைப் பார்க்கவும் வேண்டாம். தமிழில் அறிவியல் அடிப்படையில் நல்ல நூல்களே இல்லை எனலாம்; அத்தகைய நூல்கள் நம் தமிழகத்திற்கு மிகமிகத் தேவை; இன்றியமையாதவை. திருமணம் பற்றி நீ படிக்கவேண்டிய சில ஆங்கில நூல்களை ஆங்காங்குக் கடிதங்களில் குறிப்பிடுவேன். அவற்றைப் படித்துப் பயன் பெறுவாயாக.

உன் பெற்றோர்கள் உனக்காகத் தேர்ந்தெடுத்த பெண் உனக்குப் பிடித்திருக்கின்றாள் என்பதை அறிந்தேன். திருமண ஏற்பாடுகள் யாவும் செய்தபிறகு திருமணப் பொருத்தத்தைப் பார்ப்பதில் பயன் இல்லை. இதுபற்றிய செய்திகளை அறிவதில் நீ உண்மையிலேயே அக்கறை கொண்டிருப்பாயாயின், இதுவரை அப்பிரச்சினையைத் தள்ளிப்போட்டிருத்தல் கூடாது. திருமணப் பொருத்தத்தைப்பற்றி அறிந்துகொள்ளவேண்டுமாயின், மணமக்களின் கடந்தகால, தற்கால உடல்நலத்தைக் குறிப்பிடும் பதிவேடுகள்,[4] அவர்களின் பொதுவான உடல்நிலை ஆகியவைபற்றி விவரமாக ஆராயவேண்டும். திருமணம் பற்றிய ஏற்பாடுகள் நிறைவு பெறுவதற்குமுன் இவற்றை ஆராய்ந்திருக்கவேண்டும்.

**திருமண நோக்கங்கள்:** இன்றைய நிலையில் திருமணப் பொருத்தத்தைப்பற்றி அறிவியல் அடிப்படையில் வரையறுக்கப்பெற்ற எந்தவிதமான முடிவுகளும் இல்லை. ஏனைய துறைகளைப் போலவே, திருமணத்திலும் பொருத்தப்பாடு என்பது இன்றியமையாத தேவைகளை அல்லது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளும் திறனே. ஓர் ஆடவனும் பெண்ணும் பல காரணங்களுக்காக மணந்துகொள்ளுகின்றனர் என்பது உண்மையேயாயினும், மூன்று முக்கிய நோக்கங்களுக்காக மணந்து கொள்ளுகின்றனர் என்று

4. உடல் நலத்தைக் குறிப்பிடும் பதிவேடு—Health record.

கூறலாம்: ஒருவர் மற்றொருவர்பால் அன்பு, நட்பு இவற்றின் அடிப்படையில் நிலையான உறவு கொள்ளல்; உரிமையாகவும் சுதந்திரமாகவும் இணைவிழைச்சு புரிதல்; குடும்பம் அமைத்து இல்வாழ்க்கையாகிய நல்வாழ்க்கையை அமைத்துக்கோடல்—ஆகிய மூன்று நோக்கங்களுக்காகவே நாகரிகமடைந்த மக்கள் 'திருமணம்' என்ற ஒரு தெய்விக ஏற்பாட்டைக் கண்டனர். இதுவே உயர்ந்த பண்பாடென்றும் எல்லா நாட்டு அறிஞர்களும் ஒரு மனத்துடன் ஒப்புக்கொண்டுள்ளனர். உடல்-மனம்-அறிவு என்னும் மூன்றும் ஒருமைப்பட்ட வாழ்வே அன்புக்குரிய இல்வாழ்வாகும். அதுவே திருமணத்தின் உண்மை நோக்கங்களை நிறைவேற்றுவதுமாகும்.

மானிட இனத்தின் சிறப்பியல்பு: திருமண ஏற்பாட்டினால் ஓர் ஆண்—பெண்ணிடம் சிறந்த நட்பு ஏற்படுகின்றது. இருவரிடையேயுள்ள பொதுக் கவர்ச்சிகள், பொதுவான குறிக்கோள்கள் ஆகியவை இந்த உறவைப் பின்னும் உறுதியடையச் செய்கின்றன. இருவரும் சேர்ந்து வாழ்ந்து தம் அநுபவங்களைப் பகிர்ந்து கொள்ளவும் இடையறவு படாத இன்பம் துய்க்கவும் விழைகின்றனர். மேலும், இருவரும் உடலுறவு கொள்ளவும் விரும்புகின்றனர். தமிழ் நூல்கள் உள்ளப் புணர்ச்சியைப் பெரிதும் போற்றிப் பாராட்டினாலும், மெய்யுறு புணர்ச்சியே உள்ளப் புணர்ச்சியை உறுதிப்படுத்தி மரபுவழி பெருகவும் வித்திடுகின்றது. காதல் என்பது புலனுணர் இன்பமும்[5] பற்றும்[6] கலந்த ஒரு கலப்புணர்ச்சியே.

> **கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
> **ஒண்டொடி கண்ணேயுள.[7]**

என்ற வள்ளுவப் பெருமானின் வாக்கை எண்ணி ஓர்க. ஓர்

---

5. புலனுணர் இன்பம்—Sensuality.
6. பற்று—Sentiment. 7. குறள்—1101.

ஆணிடமும் பெண்ணிடமும் தீவிரமான கவர்ச்சி ஏற்படு மாயின், அஃது உடலுறவில் கொண்டு செலுத்தும் விழை வினை எழுப்பிவிடும். திருமணம் சமூக, சட்டபூர்வமான, அற ஒழுக்கத்தில் வழுவாத பாலுறவினை[8] ஏற்படுத்து கின்றது. உயிரியல் அடிப்படையில் நோக்கினுல் திருமணம் மக்கட்பேற்றுக்கு அடிகோலி மரபுவழிப் பெருக்கத்தை வளர்க்கின்றது. குழவிகளைப்போற்றி வளர்த்துத் தக்க பாது காப்பு அளிக்கும் பழக்கம் எந்த உயிரினத்தினிடத்தும் இராத சிறப்பு முறையில் மனிதனிடம் அமைந்துள்ளது. மனிதன் தன் மக்கள், அவர்களுடைய மக்கள், வருங்கால சந்ததியினர் ஆகியவர்கட்கெல்லாம் பாதுகாப்பு அளிக்கும் முறையில் பொருளாதாரத்திட்டம், கல்வித் திட்டம் போன்ற திட்டங்களை வகுப்பதை எண்ணி ஓர்க. எனவே, திருமணம் என்பது இணைவிழைச்சுக்கு மட்டுமன்று; இனப் பெருக்கத்திற்குமாகும். நாகரிக அடிப்படையில் அமைந்த இனப்பெருக்கமே மானிட இனத்தின் சிறப்பியல்பாகும்.

பொருளாதாரப் பொருத்தம்: உன்னுடைய பெற்றோர் மணமகள் கொண்டு வரும் பரிசத்தைப்பற்றி அதிகமாக வற் புறுத்துவதால் திருமணம் நிகழ்தலில் தாமதம் ஏற்படுகின் றது என்று குறிப்பிட்டிருந்தாய். இன்று உலகியலில் எத் தனையோ மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன. தொல்காப்பியத் தில்[9] திருமணத்திற்கு ஒத்தபிறப்பு, ஒத்த ஒழுக்கம், ஒத்த ஆண்மை, ஒத்த வயது, ஒத்த உரு, ஒத்த அன்பு, ஒத்த நிறை, ஒத்த அருள், ஒத்த அறிவு, ஒத்த செல்வம் என்று பத்து வகைப் பொருத்தங்கள் கூறப்பெற் றுள்ளன. இக்காலத்தில் பெரும்பாலோர் பணத்தினையே அதிகம் வற்புறுத்துகின்றனர். செல்வம் மிக்க ஒரே மகன் உள்ள குடும்பத்தில் தம் மகளைக் கொடுக்க விரும்புகின்றனர் பெண்ணின் பெற்றோர்; செல்வம் மிகுந்த ஒரே பெண் ணுள்ள குடும்பத்தில் தம் மகனுக்குப் பெண் கொள்ள விரும்

8. பாலுறவு—Sexual relationship.
9. மெய்ப்.—நூற் 25.(நச்).

கின்றனர் மணமகனின் பெற்றோர். கல்வி ஓரளவு பெருகி வரும் இக்காலத்தில் மணமகன் நன்ருகக் கல்வி கற்றிருக்க வேண்டும் என்று கருதும் பழக்கம் முகிழ்க்கத் தொடங்கி யிருக்கின்றது. மணமகளின் கல்வியைப்பற்றி யாவரும் அதிகமாக வற்புறுத்துவதில்லை. கல்வி பெருகி மக்கள் உண்மையை உணருங் காலத்தில்தான் அனைத்தும் சீர்படும். ஆனல், பணத்தாசை கற்றவரையும் கல்லாதாரையும் ஆட்டிவைக்கும் பேயாகத் தோன்றி வருகின்றது. இந்தப் பேயாட்டத்தை அறிவினல்தான்—உண்மைக் கல்வியினல் தான்—மட்டுப்படுத்த வேண்டும். இந்தப் பேயை அடியோடு ஓட்ட எந்த அறிஞராலும் முடியாது. புத்தர்பிரான் எடுத்த முயற்சி எந்த அளவு வெற்றியடைந்தது என்பதை நாம் அறிவோம். பிறவியிலேயே பேதையரும் தோன்றுகின் றனர்; மேதையரும் தோன்றுகின்றனர்: சூழ்நிலையும்[10] இந்த இருவகையினரை உண்டாக்குகின்றது. இந்த உண் மையை இன்று உளவியல் காட்டுகின்றது. நன்கு கல்வி கற்ற நீ பணத்தாசை மக்களிடம் அளவுடன் இருக்க வேண் டும் என்பதை வற்புறுத்தவேண்டும்; அதற்குப் பிரசாரமும் செய்ய வேண்டும். மேடைப் பேச்சினல் இப்பிரசாரம் பயன் தராது. மக்களைத் தனித் தனியாகச் சந்தித்துப் பேச வேண்டும்.

**திருமணம் வளர்ந்த கதை :** பொருளாதாரக் கூறினை மக்கள் அதிகமாக வற்புறுத்துகின்றனர் என்பது குறித்து நீ வியப்பெய்த வேண்டியதில்லை. குடும்பமும் திருமணமும் வளர்ந்த கதையினை ஆராய்ந்தால் இவ்வுண்மை ஓரளவு புலனகாமற் போகாது. அண்மைக் காலம் வரையில் உலகி லுள்ள எல்லாச் சமூகங்களிலும் ஆடவனே பொருள் திரட்டு பவன்; பெண்ணே குடும்பம் நடத்துபவள். ஆடவனே 'இல்லான்' என்ற பொருளில்லாத நிலையிலிருந்து பொரு ளீட்டுபவன்; பெண்ணே குடும்பத்தை ஆளும்—வீட்டை ஆளும்—'இல்லாள்'. பண்டைக் காலத்தில்—ஏன்? இன்றுங்

10. சூழ்நிலை—Environment.

கூட—ஆடவனின் பொருளீட்டும் திறனே அவனைத் திருமணத்திற்குப் பொருத்தமானவனாகச் செய்கின்றது. இன்று பெண் வீட்டார் 'மாப்பிள்ளை என்ன செய்கின்றார்? என்ன படித்திருக்கின்றார்?' என்ற வினாக்களையே முதலில் விடுக்கின்றதை நீ கேட்டிருப்பாய். கல்வியையும் பொளீட்டும் திறனாகக் கருதுகின்றனர். மனிதன் காட்டுமிராண்டியாக வாழ்ந்த காலத்திலும் ஆடவன் ஒரு மகளின் உள்ளத்தைக் கவர வேண்டுமாயின் தன் உடல் திறனையும் துணிவையும் காட்ட வேண்டியிருந்தது. படித்த சமூகத்தினர் இன்று ஆடவனின் பொருளீட்டும் திறனையே வற்புறுத்துகின்றனர்; சில சமூகத்தினர் இரு பாலாரின் பொருளீட்டுந் திறனையும் கணக்கிற்கு எடுத்துக் கொள்ளுகின்றனர். எனினும், ஆடவனின் திறனுக்கே முதலிடம் அளிக்கப்பெறுகின்றது.

கல்வி பெறவேண்டிய அளவு பெற்று ஒரு வேலையில் அமர்ந்த பிறகுதான் திருமணம் புரிந்துக் கொள்ளவேண்டும் என்று நீ எண்ணுகின்ற எண்ணம் சரியே. இதுவே சிறந்த குறிக்கோள். தமிழ் இலக்கணங்களில் 'களவு' நிகழ்ந்த பிறகு 'பொருள்வயிற் பிரிதல்' என்ற துறை அமைக்கப்பட்டிருப்பதை எண்ணி ஓர்க. மனிதன் தானே தனது தாளாண்மையினால் திரட்டும் செல்வமே அனைத்திலும் சிறந்தது என்று பண்டையோர் விதித்திருக்கும்பெருமையினை எண்ணிப்பெருமிதம் கொள்க. ஓர் ஆடவன் வேட்டையாடுதலில் தன் திறனைக் காட்டித் தன் துணைவியையும் மக்களையும் காப்பதுடன் தன் மனைவியின் பெற்றோர்களையும் காத்து ஆதரவு அளிக்க முடியும் என்று மெய்ப்பித்த பிறகே அவன் ஒருத்தியைத் தன் மனைவியாகக் கொள்ளும் உரிமையைப் பெற முடியும் என்ற வழக்கம் சில எஸ்கிமோ சமூகத்தினரிடையே இருந்ததாக எட்வர்ட் வெஸ்ட் மார்க் என்ற அறிஞர் குறிப்பிட்டுள்ளார். ஆயின், இன்று பெண்ணைப் பெற்றோர் அத்தகைய துணிவினைத் தமக்கு மருமகனாக வரும் ஆடவனிட

11. The History of Human Marriage (Mac Millan Company;

மிருந்து எதிர்ப்பார்ப்பதில்லை; தம்மை அவன் ஆதரிப்பான் என்றும் கருதுவதில்லை. குடும்பத்தை நடத்தும் திறன், பொருளீட்டுத்திறன், கல்வியறிவு போன்ற ஒரு சில இன்றியமையாத கூறுகளே இன்று மணமகனிடம் அமைய வேண்டியவை என்று பெரும்பாலோர் கருதுகின்றனர். இன்றைய சமுதாய நிலையில் சில சமூகங்களில் கணவனும் மனைவியுமே பொருளீட்டுந் திறனுடையவர்களாக இருத்தல் விரும்பப்பெறுகின்றது. ஆயினும், ஆண் மகனே குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்புடையவனாக இருத்தல் வேண்டும். அத்தகைய பொருளாதார நிலை ஏற்பட்ட—பிறகு தான் அவனுக்குத் திருமணம் புரிந்து கொள்ளும் தகுதி வருகின்றது என்பதே பெரும்பான்மையோரின் கருத்தாக இருந்து வருகின்றது. இன்று திருமணம்பற்றிச் செய்தித் தாள்களில் வரும் விளம்பரங்களை நோக்கின் இவ்வுண்மை புலனாகாமற் போகாது. 'வினையே ஆடவர்க்குயிர்' என்ற குறுந்தொகை[12] அடியையும், 'உத்தியோகம் புருஷ லட்சணம்' என்ற மக்களின் பேச்சு வழக்குத் தொடரையும் எண்ணிப் பார்ப்பாயாக. தேன் கூட்டின் சோம்பேறி ஈயின் வாழ்க்கையை எந்த ஆடவனும் மேற்கொள்ளலாகாது என்பதே என் கருத்து. எனவே, ஆடவனின் பொருளாதார நிலை முக்கியமான திருமணப் பொருத்தமாகின்றது என்பது நோக்கத்தக்கது.

மேற்கூறியவற்றிலிருந்து ஆடவனுக்குப் பொருளாதார நிலை—அவனுக்குப் பொருளீட்டுந்திறன் ஏற்பட்ட பிறகு தான் நம்பியும் நங்கையும் மணமக்களாக வேண்டுமா என்று நீ கேட்கலாம். இல்லை; அப்படி ஏற்படவேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. குடும்பத்தைச் சரியாக ஆட்சிசெய்யும் பொறுப்பு ஆடவனுக்கு வரும்வரையிலும் திருமணத்தைத் தள்ளிப் போடுதல் அறிவுடைமை ஆகாது என்பது என் கருத்து. பொருளாதாரப் பாதுகாப்பு ஏற்படும் பல்லாண்டு

---

12. குறுந்—135.

கட்கு முன்னரே இளைஞர்களின் உடல்நிலை திருமணத்திற்கு ஏற்ற முற்றிய நிலையை அடைந்து விடுகின்றது; இந்த இடைவெளி சதா விரிந்துகொண்டே போகின்றது. ஆகவே, திருப்தியான பொருளாதார நிலை ஏற்படும் வரையிலும் திருமணத்தை ஒத்திப் போடுதல் அறிவுடைமையன்று. கணவனுக்குச் சரியான பொருளாதார நிலை ஏற்படும் வரை மனைவியும் குடும்பநிர்வாகத்திற்குச் சிறிது வருவாய் நல்குதல் சிறிது பொருத்தமே. இதன் பொருட்டே இன்றும் சிலர்—ஏன்? பெரும்பாலோர்—மணமகனுக்குச் சிறிதாவது சொத்து அல்லது தொழில் இருக்க வேண்டும் என்றும், மணமகளுக்கு அவள் பெற்றோர் சில தங்கநகைகள் பூட்டியனுப்பவேண்டும் என்றும் வற்புறுத்துகின்றனர். இந்தப் பொருளாதார நுட்பம்தான் நாளடைவில் அறிவின்மையாலும் பேராசையாலும் வரதட்சிணைப் பேயாக மாறியது. இப்பேய்தான் இன்று பாராளுமன்றத்தினரால் அன்பளிப்புத் தேவதையாக மாற்றப்பெற்றுள்ளது! மக்கள் மனம் மாறுதவரை எந்தச் சட்டத்தாலும் பயன் இல்லை என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும். பாராளுமன்றத்திலுள்ளவர்களும் சாதாரண மக்கள்தானே? கல்வியறிவு இல்லாத மக்களாட்சியில் அறிஞர்கட்கு இடம் ஏது?

இன்னும் சிலர் திருமண வயது வந்தவுடன் திருமணம் புரிந்துகொண்டாலும், மக்கட்பேறு ஏற்படுவதைத் தள்ளிப் போட்டுக் கொள்ளலாம் என்று கருதுகின்றனர். பெரும்பாலான இளந்தம்பதிகளின் முன் நிற்பது இந்தப் பிரச்சினையே; நம் நாட்டில் இளைஞர்கள் இதை அதிகமாகக் கருதுவதில்லை; மேனாட்டில் இஃது ஒரு முக்கிய பிரச்சினையாக இருந்து வருகின்றது. திருமணத்திற்குப் பிறகு குழந்தைப் பிறப்பைத் தள்ளிப் போடவேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையிலேயே பலர் அங்குத் திருமணம் புரிந்துகொள்ளுகின்றனர். கருத்தடைபற்றிய சிறந்த முறைகளின் விவரங்கள் யாவும் அங்கு மணமக்கள் அறிந்து கொள்ளுகின்றனர். இதைக் கருத்தில் கொண்டும், மக்கள் தொகையின் பெருக்கத்தைக்

கட்டுப்படுத்தவும் இன்று 'குடும்பக் கட்டுப்பாடு' என்பது. பற்றி அரசாங்கமே பிரசாரம் செய்து வருகின்றது; இப் போக்கு மிகவும் மட்டரகமானது என்றும், அகப்பொருள் பற்றிய கருத்துக்களை புறப்பொருளாக்குவது மதியீனம் என்றும், அதுவும் பொது மேடையிலும் சுவரொட்டிகள்[13] மூலமும் பிரச்சாரம் செய்வது அறிவுடைமையன்று என்றும் பல செய்தித்தாள்கள் தலையங்கங்கள் தீட்டியிருப்பதை நீ படித்திருப்பாய். இராஜாஜி போன்ற ஞானச் செல்வர்கள் கண்டித்துப் பேசுவதையும் கேட்டிருப்பாய். இதுபற்றிய கருத்தினை அறிஞர்கள் இன்னும் நன்றாகச் சிந்திக்கவேண்டும்

திருமணத்திற்கு உடல்நிலை முற்றுதலும் பொருளா தாரப் பொருத்தமும் முக்கியம் என்று பெரும்பாலோர் கருதினாலும், வேறு சில இன்றியமையாத பொருத்தங்களும் உள்ளன. அவற்றை அடுத்து எழுதும் கடிதங்களில் தெரி விப்பேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

13. சுவரொட்டி—Wall Poster.

# 2

அன்பு நிறைந்த செந்தில்வேலனுக்கு,
நலன். நலனே விழைகின்றேன்.

சென்ற கடிதத்தில் 'திருமணம்' என்ற தெய்விக ஏற்பாட்டின் முக்கிய நோக்கங்களைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். காதல், இடையறவு படாத நட்பு, இணை விழைச்சு, இனப் பெருக்கம் போன்ற நோக்கங்களின் அடிப்படையில் திருமணம் ஏற்பாடு செய்யப்பெறுமாயின், அந்த ஏற்பாடு வெற்றியுடன் திகழவேண்டும். இத்தகைய தெய்விக ஏற்பாட்டைச் செய்துகொண்ட எத்தனையோ மணமக்களின் வாழ்க்கை 'மண-முறிவில்'[14] முடிந்ததை நீ அறிந்திருப்பாய். உங்களூரிலுள்ள பழநிவேலுவின் வாழ்க்கையே இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். பணக்காரக் குடும்பத்தில் பிறந்து கல்வியின்றி வாழ்க்கையில் எந்தவிதக் குறிக்கோளுமின்றிக் காமுகனாகத் திரிந்தவனுக்குக் கல்வி, அழகு, ஏனைய குணப் பண்புகள் நிறைந்த மைதிலியைத் திருமணம் புரிவித்ததனாலல்லவோ அந்த நிலை ஏற்பட்டது? இதிலிருந்து வாழ்க்கை செம்மையுற அமையவேண்டுமாயின் செல்வ நிலை ஒன்று மட்டிலும் போதாது என்பதை அறிந்துகொள்வாயாக. எனவே, திருமணம் வெற்றிபெற வேண்டுமாயின் மணமக்களின் உள்ளக் கிளர்ச்சிகள்[15] அமைதியுடனும் முற்றிய நிலையிலும் இருக்கவேண்டும்; இருவருக்கும் பாலுணர்ச்சிகள், கவர்ச்சிகள் ஒத்திருக்கவேண்டும். உடலுறுப்புக்களின் முதிர்ச்சியும்[16] இயன்றவரை பொருந்து

---

14. மண-முறிவு—Divorce.
15. உள்ளக் கிளர்ச்சி—Emotion.
16. முதிர்ச்சி—Maturity.

மாறு அமைதல் வேண்டும்; இருவருடைய உடல்நிலையும் பிள்ளைப்பேற்றிற்கேற்றவாறு பக்குவப்பட்டிருத்தல் வேண்டும். மணமக்களின் வயதில் கிட்டத்தட்ட நான்கு யாண்டுகளாவது வேற்றுமையிருக்க வேண்டும். இதை எண்ணித்தான் பண்டைத் தமிழ் இலக்கணங்களில் மணமகனின் வயது பதினாறு என்றும், மணமகளின் வயது பன்னிரண்டு என்றும் வரையறை செய்யப்பெற்றுள்ளது: 'இவனும் பதினாறாட்டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டைப்பிராயத்தாளாய்' என்று பண்டைய அறிஞர்கள் வயதினை வரையறை செய்துள்ளதை எண்ணுக. இதிலிருந்து நாற்பதுவயது நிரம்பிய நரை மூதாளர் ஒருவருக்குப் பதினான்கு வயதுள்ள ஓரிளங் கன்னியை இரண்டாந்தாரமாக மணம் புரிவித்தல் மிகக் கொடுமை என்பதை நீ அறிவாய். வேண்டுமானால் அவர் முப்பது வயதிற்கு மேற்பட்ட ஒரு கைம்பெண்ணை மணந்துகொள்ளலாம். "திருமணம் நடந்தவுடன் அஃது ஓராண்டு ஈராண்டுக்குள் மனைவி மரித்தால், பிள்ளைப்பேறு கருதி இன்னொருத்தியை மகன் மணக்கலாம். வயது முதிர்ந்த ஒருவன், மனைவியை இழந்தபின், மனைவிநசையால் இடர்ப்படுவனேல், அவன் தன் வயதிற்கியைந்த ஒருத்தியை—அதாவது கணவனை இழந்த ஒருத்தியை—அவளும் விரும்பின்—மணந்துகொள்ளலாம்; அங்ஙனம் செய்யாது, கிழவன் கன்னியைக் கட்டுவது கூடாது. இருவர் எவ்வயதில் எந்நிலையில் மணஞ் செய்துகொள்ளினும், வயது வேற்றுமை நான்கு அல்லது ஐந்துக்குமேல் இருத்தல் கூடாதென்பது கவனிக்கத்தக்கது," என்ற திரு. வி. க. அவர்களின்[17] அறிவுரையைச் சிந்திப்பாயாக.

இந்நிலையில் அவர்களுடைய உடல்நிலைகளும் உளக் கவர்ச்சிகளும் ஒத்துப் போவதற்கு வாய்ப்புண்டு; அது கிடக்க.

---

17. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை (எட்டாம் பதிப்பு) — பக்கம்: 233—34.

**உள்ளக் கிளர்ச்சி முதிர்ச்சி :** உள்ளக் கிளர்ச்சியின் முதிர்ச்சி[18] என்பதுபற்றிவிவரமாகவும் விளக்கமாகவும் பின்னர் உனக்கு எழுதுவேன்; நேரிலும் பேசுவேன். பொதுவாக நோக்குமிடத்து மனநிலையிலும், மீப்பண்பு[19] முதிர்ந்த நிலையிலுமுள்ள பலர் மிகச் சங்கடமான சூழ்நிலைகளிலும் மணம் புரிந்துகொண்டு திருப்தியான முறையில் பொருத்தப்பாடுற்றிருப்பதையும், வேறு பலர் தம்முடைய மீப்பண்புகள், மன நிலைகள்,[20] முதிர்ச்சியடையாத நிலைபோன்ற காரணங்களால் எந்தவிதமான நல்ல சூழ்நிலைகளிலும் திருமணம் புரிந்து கொண்டு சரியான முறையில் பொருத்தப்பாடடைந்து வாழமுடியாது திண்டாடுவதையும் காணலாம். ஆகவே, நிலையானதும் மகிழ்ச்சியானதுமான உறவு முறை அமைப்பதில் ஒரு தனியாளின்[21] ஆளுமை[22] பெரும் பங்கு பெறுகின்றது என்பதை நீ அறிவாயாக. ஆனால், கணவனும் மனைவியும் ஒத்து வாழ்வதால் இந்த உறவுமுறை நன்கு அமைதல் கூடும் என்று நீ கருதக்கூடும். அதுதான் இல்லை; அங்ஙனம் அமைய வேண்டிய இன்றியமையாமையும் இல்லை. 'உள்ளக்கிளர்ச்சிப் பொருத்தம்' என்பது கணவனும் மனைவியும் ஒருவரோடொருவர் சேர்ந்து வாழ்வதில் இல்லை; அஃது அவர்களுடைய ஆளுமைகளைப் பொருத்ததாகும். ஆளுமை என்பது உளவியலறிஞர்கள் கண்ட பேருண்மையாகும். ஒரு மனிதனுடைய நடத்தை, வழக்கம், மனப்போக்கு, எண்ணங்கள், நோக்கங்கள், கருத்துக்கள், நம்பிக்கைகள், மனப்பான்மைகள் முதலியவை அனைத்தும் கலந்து நிற்கும் மனப்பாங்கே ஆளுமை எனப்படும். அஃது அவற்றின் வெறுஞ்சேர்க்கை மட்டும் அன்று; அச்சேர்க்கையில் ஒருமைப்பாடும் உண்டு. அண்மையில் யான் சென்னையில் கண்ட இரண்டு தம்பதிகளைப்பற்றிச் சில சொற்கள் கூற

---

18. உள்ளக் கிளர்ச்சியின் முதிர்ச்சி—Emotional maturity. 19. மீப்பண்பு—Temperament. 20. மன நிலை—Disposition. 21. தனியாள்—Individual. 22. ஆளுமை—Personality.

விரும்புகின்றேன். அவர்களுள் ஒருவர் மூன்றாந் தாரமாக ஒரு பெண்ணை மணந்து கொண்டவர். குடும்பத்தில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளின் காரணமாகவும், அடிக்கடிநேரிட்ட சில்லறைச் சச்சரவுகளின் காரணமாகவும் இரண்டு மனைவியரை நீதிமன்றம் மூலம் 'மண-முறிவு' செய்துவிட்டார். மூன்றாந் தாரமாக ஒரு பெண்ணை மணந்துகொண்ட பிறகும் குடும்பத்தில் அமைதி இல்லை. குடும்ப வாழ்க்கையில் இன்பமும் இல்லை. புதிய சங்கடங்களும் முரண்பாடுகளும், பிணக்குகளும் தோன்றத் தொடங்கியுள்ளன. அன்னாரது வாழ்க்கையைப்பற்றி அறிந்ததிலிருந்து அவரைப் பலமுறை சந்தித்து உரையாடினேன். எங்களிடையே உள்ளந்திறந்து பேச்சு நடந்தது. பலமுறை சந்தித்த பிறகு அந்த மனிதரின் நரம்புநோய் ஆளுமைதான்[23] இவ்விதப் பொருத்தப்பாடின்மைக்கு[24] அடிப்படை என்பதை அறிந்தேன். அவர் தன் அன்னையின்மீது கொண்டிருந்த மிகுதியான பற்றுதலே[25] இதற்குக் காரணம் என்பதும் தெரிய வந்தது. இந்தப் பற்றுதலின் காரணமாகவே அவர் புதிதாக வந்தவளுடன் தேவையான அளவு உறவு வைத்துக்கொள்ள இயலவில்லை. இன்னொரு தம்பதிகளுள் அந்த ஆடவர் அவருடைய அன்னைக்கு ஒரே பிள்ளை; அவருடைய தந்தை சிறு வயதிலேயே இறந்து விட்டார். அவருடைய அன்னையோ பொறாமைக் குணம் படைத்தவள்; தன் மருமகள் நல்ல ஆடையணிகளை அணிந்துகொள்வதைக் கண்டும் பொறுக்காதவள். அந்த ஆடவருக்கு 'எது நல்லது, எது கெட்டது' என்பதைச் சரியாக அறிந்து சரியான முடிவுக்கு வரும் ஆற்றல் இல்லை. இவர்கள் வாழ்க்கையிலும் இன்பம் இல்லை ஆனால், இவர் புதிய அலுவல் பெற்று வேற்றூரில் தன் மனைவியுடன் தன் அன்னையை விட்டுத் தனிமையாக வாழ நேர்ந்ததிலிருந்து அவருடைய வாழ்க்கையில் ஒரு புதிய

23. நரம்பு நோய் ஆளுமை—Neurotic Personality.
24. பொருத்தப்பாடின்மை—Mal-adjustment.
25. பற்றுதல்—Attachment.

குதூகலம் ஏற்பட்டுள்ளது என்பதையும் அறிந்தேன்; இதனால் இளங்காதலரின் இன்ப வாழ்க்கையில் பெற்றோரின் தலையீடு கூடாதெனத் தெரிகின்றதல்லவா? இதனால்தான் சில சமூகங்களில் திருமணம் கழிந்த பின்னர் இளங்காதலர் கட்குத் 'தனிக் குடும்பம்' அமைத்துக் கொடுத்து மனையறம் படுத்துகின்றனர்; இப்பழக்கம் வழி வழி வரும் ஒரு நற் பழக்கமாகும்; இதனால் மாமியார்—மருமகள் பூசல்கள் ஓரளவு ஒழிகின்றன.

குடும்பத்தின்மீதுள்ள அளவற்ற பற்றுதலும் தன் பெற்றோர்மீதுள்ள பற்றுதலும் மன நிறைவு கொள்ளத்தக்க முறையில் திருமணம் வெற்றியடைவதற்குத் தடையாகுமா என்று நீ நினைக்கலாம். ஆம்; இதில் உண்மை இல்லாமல் இல்லை. சாதாரணமாகக் குடும்பத்தின்மீதுள்ள ஈடுபாடு[26] அல்லது பற்றுறுதி திருமணத்திற்குரிய உள்ளக்கிளர்ச்சிப் பொருத்தத்தில் தலையிடக் கூடாது; ஓர் ஆடவன் திருமணத்திற்கு முன்னர் தனக்கிருந்த பொறுப்பையும், திருமணத்திற்குப் பிறகு தனக்குள்ள பொறுப்பையும் எடை போட்டு உணர வேண்டும்; புதிய உறவினால் தன்னுடைய குடும்ப ஈடுபாட்டில் ஏற்பட்டுள்ள புதிய திருப்பத்தை எண்ணிப் பார்க்கவேண்டும். புதிதாக மணந்துகொண்ட தம்பதி களுக்குச் சுதந்திரம் வேண்டும்; இவர்கள்வாழ்க்கையில்பெற் றோரின் தலையீடு—ஆக்கிரமிப்பு—கூடாது. அன்றியும், இளந் தம்பதிகள் தத்தமக் கிடையேயுள்ள பற்றுறுதியிலும், தம் பெற்றோரிடத்தே தமக்குள்ள பற்றுறுதியிலும்[27] ஒரு சராசரி நிலையினை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். ஒன்றினால் பிறி தொன்றைப் புறக்கணிக்கவோ வெறுக்கவோ கூடாது. இந்த மனநிலை வந்தவர்கட்குத்தான் 'உள்ளக் கிளர்ச்சிப் பொருத் தம்' வந்துவிட்டது என்று கருதலாம். பெற்றோரின்மீது கொண்டுள்ள அளவுக்குமீறிய பற்றுதலே பெரும்பாலோ ரிடையே உள்ளக் கிளர்ச்சிப் பொருத்தம் அமையாதிருக்கக்

---

26. ஈடுபாடு—Devotion;
27. பற்றுறுதி—Loyalty;

காரணமாகின்றது. இதனைத் தவிர வேறு பல காரணங்களும் உள்ளன. நரம்பு நோய் ஆளுமை அல்லது உள நோய் ஆளுமையைக் கொண்ட பலர் எந்த விதமான துணையுடனும்[28] திருப்தியான மணப் பொருத்தப்பாடு அமைத்துக் கொள்ள இயலாத நிலையிலுள்ளனர். இன்னும் சிலரிடம் வலுக்கட்டாயம் செய்யும் மனப்பான்மை, தொந்தரவு செய்யும் இழிகுணம் ஆகியவை அமைந்திருக்கும் காரணத்தால் அவர்கள் உண்மை வாழ்க்கையிலிருந்து தப்பித்துக் கொள்வான் வேண்டிக் குடிவகைகளை மேற்கொண்டு தம்மையும் மறந்த நிலையிலிருக்கின்றனர்! வேறு சிலர் பாலுணர்ச்சியில் வழி விலகிச் சென்று பல நெறிகோணிய பாலுறவு பெற்று மகிழ்கின்றனர். இத்தகைய சந்தர்ப்பங்களில் 'உள்ளக் கிளர்ச்சிப் பொருத்தம்' என்பது கருத்துடன் கவனிக்க வேண்டிய கூறு ஆகின்றது.

உடற் பொருத்தம் : 'உடற் பொருத்தம்' என்று முன் கடிதத்தில் குறிப்பிட்டேன் அல்லவா? அதையும் சிறிது உனக்கு விளக்கவேண்டும். கட்டும் அழகும் திரண்டு அமுதெனப் பொலியும் ஓர் இளங்கன்னியை உடல் நலன்பெறாத ஒரு 'தேரை' மணந்தால் என்ன பயன்?

உடற் பொருத்தம் என்பது ஓர் ஆடவன் ஒரு பெண்ணிடம் பாலுறவு கொள்ளும் திறன்—அஃதாவது கலவி புரியும் திறன்—ஆகும். இந்தப் பிரச்சினை பெரும்பாலும் ஆணைப்பற்றியதேயாகும்; சில பெண்களிடமும் இத்தகைய உடற்குறைகள் இருந்து அவர்கள் கலவிக்கே பொருத்தமிராமல் இருப்பதுண்டு. பெரும்பாலும் ஆடவனின் கலவி புரியும் ஆற்றல்[29] குறைவாக இருப்பதே நாம் அடிக்கடி காணும்நிலையாகும்; இக்குறையிருப்போர் கலவியில்—உடற்புணர்ச்சியில்—நிறைவேற்றம் செய்ய முடியாது. இத்தகைய குறையை

---

28. துணை—Mate.

29. கலவி புரியும் ஆற்றல்—Potency.

நிவர்த்தி செய்து கொள்ளாமல் திருமணம் புரிந்து கொள்ளு தல் மிகப் பெருந்தவறு; இவர்கள் சரியான மருத்துவ யோசனைக்குப் பிறகுதான் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அண்மைக் காலம்வரையில் திருமணத்திற்கு முன்னர்தான் 'சர்வாங்க சவரம்' செய்துகொள்ளும் வழக்கம் இருந்து வந்தது. அச்செயலை நிறைவேற்றும் மயிர் வினைஞர் மருத்துவத்திலும் நிபுணராக இருப்பார். அவர் அச் செயலை நிறைவேற்றி மணமகனின் "யோனிப் பொருத்தத்தைப் பற்றி"ப் பெண்வீட்டாருக்குக் குறிப்புகொடுப்பதுவழக்கம். அதற்கென ஒரு கட்டணம் வழங்கும் வழக்கமும் இருந்து வந்ததாகத் தெரிகின்றது. இதனை முந்தையோர் "கன்னீர் (கன்னி நீர்) ஆடுதல்" என்றும் வழங்கி வந்ததாகத் தெரி கின்றது. இன்னும் நம் நாட்டில் பண்டையோரிடமும் ஆட வனின் ஆண்மையைக் குறித்துச் சோதனை செய்யும்வழக்கம் இருந்து வந்ததாகவும், இச் சோதனையில் யாதொரு ஐயப் பாடுமின்றி ஆடவனின் ஆண்மை நிலைநிறுத்தப்பெற்றால் தான் அந்த ஆடவன் திருமணத்திற்கு அருகதையுள்ளவன் என்று முடிவு செய்யும் வழக்கமும்இருந்து வந்ததாக அறியக் கிடக்கின்றது.

கலவிபுரியும் ஆற்றல்: இவ்விடத்தில் நின் மனத்தில் இயல்பாகவே ஓர் ஐயம் எழலாம். ஒருவருக்கு இணைவிழைச்சு புரிந்த அநுபவமே இல்லாதிருந்தால், அவருக்குக் கலவி புரியும் ஆற்றல் உள்ளதா, இல்லையா என்பதை யாங்ஙனம் அறிதல் கூடும் என்று நீ வினவலாம். இதனை நேரல்முறை யினால்தான்[30] அறிதல் கூடும். சாதாரணமாக ஒவ்வொரு வரும் நடைமுறையில் இணைவிழைச்சு அநுபவம் இல்லா திருந்தாலும் பாலுறவுபற்றி ஏதாவது ஒருவித அநுபவத் தைப் பெற்றே இருப்பர். ஆனை ஆனேறு தழுவுதல், நாய்ப்புணர்ச்சி, குரங்குப்புணர்ச்சி போன்ற விலங்குப் புணர்ச்சிகளைக் காணுங்காலும், கோழிப்புணர்ச்சி, புறுப்

30. நேரல் முறை—Indirect means.

புணர்ச்சி போன்ற பறவையினங்கள் கலவி புரிதலைக் காணுங் காலும் இளைஞர்களின் மனத்தில் ஏதோ ஓர் உணர்ச்சி கிளர்ந்தெழுந்து ஆண்குறி விரைத்தல் போன்ற செயல் நேரிடலாம். ஆகவே, சாதாரணமாக ஓர் ஆடவன் கலவி புரியும் தன் ஆற்றலை ஓரளவு அறுதியிட முடியும். சில சமயம் ஆடவன் தன்னுடைய கலவி புரியும் ஆற்றலைப்பற்றியே ஐயுற்றிருந்து திருமணத்திற்குப்பிறகு எதிர்பாராத சங்கடங் களை அநுபவிக்க நேரிடுவதுண்டு. இத்தகைய ஒரு நிகழ்ச்சி சென்னையில் செல்வந்தர் ஒருவர் வீட்டில் ஏற்பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கின்றேன். முதற் கலவியின் போதுதான் அவ்வாடவனுக்குக் குறியே இல்லாதது தெரிந்ததாம்! பிறகு அவனது பெற்றோர் அவனை அமெரிக்காவிற்கு அனுப்பி அறுவைமுறை சிகிச்சை மூலம் சரிப்படுத்தமுயன்றும் அதில் வெற்றியே இல்லை என்பதாகச் சொல்லப்படுகின்றது. ஆடவன் பெண்ணாதலும், பெண் ஆணாதலும் போன்ற வியத்தகு திடீர் மாற்றங்களைக் காணும் நாம் இத்தகைய உடற்குறைக்கு அறிவியறிஞர்கள் கழுவாய் காணாதிருப்பது வியப்பாகவே உள்ளது!

கலவி புரியும் ஆற்றல் ஒருவரிடம் நன்முறையில் அமைந் திருந்தால், அவரிடம் இனப்பெருக்கத் திறனும் இருத்தல் வேண்டும் என்ற நியதி இல்லை. கலவி புரியும் ஆற்றல் வேறு; கருவுறச் செய்யும் ஆற்றல்[31] வேறு. ஓர் ஆடவன் கலவி புரி யும் ஆற்றலுடன் இருக்கலாம்; ஆனால், கருவுறச் செய்யும் ஆற்றல் அவனிடம் இல்லாதிருக்கலாம்; அங்ஙனமே, கலவி புரியும் ஆற்றலே இல்லாதவனிடம் கருவுறச் செய்யும் ஆற் றல் நிறைந்திருக்கவும் இடமுண்டு. இனப்பெருக்கம்பற்றிய பிரச்சினைகளை ஆராயுங்கால் இதனை நன்கு விளக்குவேன். 'இனப் பெருக்கப் பொருத்தம்' என்பது உடல் நலமுள்ள குழவிகளைப் பெறுவது. அஃதாவது, மணமக்களிடம் உறுதி யற்ற தன்மை அல்லது நோய் அமைந்திருந்தால் அஃது

31. கருவுறச் செய்யும் ஆற்றல்—Fertility.

உடல் முறையிலும்[32] இன மேம்பாட்டியல் முறையிலும்[33] இனப் பெருக்கத்திற்குத் தடையுண்டாக்கும்; அத்தகைய நிலை அவர்களிடம் இல்லாதிருப்பதே இனப்பெருக்கப் பொருத்தமாகும். பெரும்பாலும் இந்நிலை மணமக்களின் பொது உடல் நலத்தையும் வேறு சில கூறுகளையும் பொறுத்தது. இதனை அடுத்த கடிதத்தில் ஓரளவு தெளிவாக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

32. உடல் முறையில்—Physically.
33. இனமேம்பாட்டியல் முறையில்—Eugenically.

# 3

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்; நலனறிய அவா.

இனப் பெருக்கப் பொருத்தம் : சென்ற கடிதத்தில் இனப் பெருக்கத்தைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? ஒரு மகனுக்கு அல்லது ஒரு மகளுக்குப் பிள்ளைப்பேறு ஏற்படுமா அல்லது ஏற்படாதா என்பதை முன்னரே அறிந்துக்கொள்ள இயலுமா என்ற ஐயம் இயல்பாகவே உன் மனத்தில் எழலாம். ஆம்; இயலும். ஓர் ஆடவனின் புதிதாக எடுக்கப் பெற்ற விந்துவை[34] நுண் பெருக்கியால் சோதித்து அவனது கருவுறச் செய்யும் ஆற்றலைக் கிட்டத்தட்ட மிகச் சரியாக அறுதியிட முடியும். பிறவி சார்ந்த[35] இயல்பிகந்த தன்மை[36] யினாலோ அல்லது நோயினாலோ பிற காரணத் தாலோ இனப்பெருக்க உறுப்புக்கள் பழுதடைந்த காரணத் தாலோ ஓர் ஆடவனின் கருவுறச் செய்யும் ஆற்றலைப்பற்றி ஏதாவது ஐயம் இருக்குமாயின், இத்தகைய சோதனையைத் திருமணத்திற்கு முன்னதாகச் செய்தல் இன்றியமையாதது. அமெரிக்கா போன்ற நாடுகளில் திருமணத்திற்கு முன்னர் செய்யப்பெறும் பொது மருத்துவச் சோதனையின் பொழுதே இச்சோதனையும் செய்யப்பெறுதல் வேண்டும் என்று சிலர் வற்புறுத்துகின்றனர். இங்ஙனமே, ஒரு பெண்ணின் கருவுறச் செய்யும் ஆற்றலையும் மதிப்பிடுதல் கூடும். ஆயின், ஒரு குறிப்பிட்ட மணமக்கள் ஒன்று சேர்ந்து கருவுறச் செய்யும் ஆற்றலுடையவர்களா என்று உறுதியாக அறுதியிடுவதற் கேற்ற சரியான முறைகள் இதுகாறும் கண்டறியப்பெற வில்லை. எனினும், ஒரு மருத்துவர் சோதனையின் மூலம் பிள்ளைப்பேறு சிரமமாக இருக்கமா அல்லது பிள்ளைப்பேறே

---

34. விந்து—Semen. 35. பிறவி சார்ந்த—Congenital; 36. இயல்பிகந்த தன்மை—Abnormality.

இயலாத செயலாகுமா என்ற நிலையினைத் தீர்மானித்தல் இயலும்.

Rh கூறு: அண்மையில் குருதி ஆராய்ச்சியில் Rh கூறு என்பதாக ஒரு கூறினைக் கண்டறிந்துள்ளனர். இது குருதியிலுள்ள ஒரு பிரத்தியேகமான பொருள். Rhesus என்பது ஒருவகைக் குரங்கு; முதன் முதலாக இப்பொருள் அவ்வகை குரங்கினிடம் கண்டறியப்பெற்றதால் அதன் பெயரில் முதல் இரண்டெழுத்தாகிய Rh என்பதாலேயே அப்பொருளுக்குப் பெயரிடப்பெற்றது. வெள்ளையரில் 85 விழுக்காடு தம் குருதியில் இப்பொருளைக் கொண்டவர்கள்; இவர்களை 'Rh பாஸிட்டிவ்' என்று வழங்குவர். எஞ்சிய 15 விழுக்காட்டு மக்களின் குருதியில் இப்பொருள் இல்லை. அவர்கள் 'Rh நெகட்டிவ்' என வழங்கப்பெறுகின்றனர். நீக்ரோக்கள் சீனர்கள் போன்றவர்களுள் 'Rh பாஸிட்டிவ்' மக்கள் 85 விழுக்காட்டிற்குமேல் அதிகம் உள்ளதாகக் கூறப்பெறுகின்றது.

ஓர் Rh பாஸிட்டிவ் ஆடவன் ஓர் Rh நெகட்டிவ் பெண்ணை மணந்து அவர்கட்குப் பிள்ளைப் பேறு ஏற்படுமாயின், அவர்கட்குப் பிறக்கும் குழவிகளில் சிலருக்கு, பிறப்பின்பொழுது அல்லது பிறந்த சில நாட்களில் 'எரித்ரோ பிளாஸ்டாஸிஸ்'[37] என்ற அபாயகரமான நிலை ஏற்படும். குழந்தைகட்கு ஏற்படும் குருதிச் சோகை[38], மஞ்சட்காமாலை[39], உடல் வீக்கங்கள் போன்ற குறிகளால் இந்நிலை அறியப்படும். சில சமயம் குழந்தை இந்நிலையினால் பிறப்பதற்குமுன்பே மரித்துப்போவதுமுண்டு. எனினும், இங்ஙனம் பிறந்த 150 அல்லது 200க்கு ஒரு குழந்தைக்கே எரித்ரோ பிளாஸ்டாஸிஸ் என்ற நிலை ஏற்படுகின்றது என்றும், குழந்தை பிறந்தவுடனே புதிதாகக் கண்டறியப்பெற்ற முறைகளால் குருதியைச் செலுத்தி இவ்வாறு பாதிக்கப்

37. எரித்ரோ பிளாஸ்டாஸிஸ்—Erythroblastasis.

38. குருதிச் சோகை—Anaemia.

39. மஞ்சட்காமாலை—Jaundice.

பெற்ற ஏராளமான குழவிகளின் உயிர்கள் பாதுகாக்கப் பெறுகின்றன என்றும் அண்மையில் கண்டறியப்பெற்ற புள்ளி விவரங்களிலிருந்து அறியக் கிடைக்கின்றது. இதனால் திருமணம் புரிந்து கொள்வதற்கு முன்னர் தம்பதிகள் Rh கூறுக்குக் குருதிச் சோதனை செய்து கொள்வது உகந்தது தானா என்று நீ கேட்கலாம் ஆம்; இயலுமாயின் செய்து கொள்வது நல்லதே. ஒருவருடைய குருதி ஒத்திராவிடில், இம்முடிவினால் மட்டிலும் அவர் குழந்தை பெறுவதற்கு உகந்தவர் அல்லர் என்பது பொருளன்று. Rh கூறுகள் பொருந்தாத பெரும்பாலான தம்பதிகள் ஒரு குழந்தையைப் பெறுகின்றனர்; அவர்கள் சங்கடங்கள் யாதொன்றுமின்றிப் பல குழவிகளையும் பெறலாம். இத்துறையில் ஆராய்ச்சி வேகமாக நடைபெற்றுக் கொண்டு வருகின்றது; குருதிப் பொருத்தமின்மையை எவ்வெவ்வாறெல்லாம் சமாளிப்பது என்பதுபற்றி ஆராய்ச்சிகள் நடைபெற்றவண்ணமுள்ளன.

உடல் நலப் பொருத்தம்: இதுகாறும் கூறியவற்றிலிருந்து ஒருவருடைய உள்ளம் திருமணப் பொருத்தத்திற்கு மிகவும் இன்றியமையாதது என்பதை நீ அறிந்து கொண்டிருப்பாய் இஃது எல்லாருக்கும் எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தக்கூடிய உண்மை. கல்லீரல் சரியாக இல்லாத ஒருவருக்குச் சரியாகப் பசி இராது; உண்ணும் உணவும் நன்கு செரிக்காது. இத்தகைய உடல் நிலையைக் கொண்ட ஒருவர் செய்து கொள்ளும் எல்லா வகைப் பொருத்தங்களும் உடைய திருமணம் வெற்றியடையாது போதலும் கூடும். எனினும், பொதுவாகப் பார்த்தால் சரியான உடல் நலம் திருமணத்திற்கு இன்றியமையாதது என சொல்வதற்கில்லை. எடுத்துக்காட்டாக ஒருவருக்கு இளமையில் ஏற்பட்ட நச்சுக் காய்ச்சலால்[40] அவருடைய சிறு நீரகங்கள் தீராத நிலையில் பாதிக்கப் பெற்றிருக்கலாம்; அல்லது ஒரு சமயம் அவர் கீல்வாதத்தால்[41] தாக்குண்டு அவருடைய இதயம்[42] பாதிக்கப்

40. நச்சுக் காய்ச்சல்—Scarlet fever.
41. கீல்வாதம்—Rheumatism. 42. இதயம்—Heart.

பெற்றிருக்கலாம். இக் காரணங்களால் அவரிடம் திருமணப் பொருத்தம் அமையவில்லை என்று கொள்ளுதல் கூடாது. இத்தகைய காரணத்தால் அவருடைய எதிர்கால வாய்ப்புக்கள்[43] கெட்டுப் போகலாம்; அவருடைய வாழ்நாளையும் குறைக்கலாம்; அல்லது அவருடைய பொது மனநிலைகளையும் பாதிக்கலாம்; ஆனால் இஃது அவரிடம் திருமணத்திற்கே பொருத்தமானவர் அன்று என்ற நிலையினை உண்டாக்காது; இதனால் அவர் சிறந்த கணவராக முடியாது என்று சொல்லு வதற்குமில்லை. தம்பதிகளுள் ஒருவர் உடல் நிலை பாதிக்கப் பெற்று நடைபெற்ற எண்ணற்ற திருமணங்களில் தம்பதிகள் திருப்தியுடனும் மகிழ்ச்சியுடனும் இருப்பதை நான் கண்டி ருக்கின்றேன்; பலர் சொல்லக் கேட்டுமிருக்கின்றேன். என்ற போதிலும், தம்பதிகளுள் ஒருவரிடம் தீராத உடற் குறை இருக்குமாயின், அதை மற்றவர் திருமணத்திற்கு முன்னர் அறிந்து இருவராலும் அந்நிலை சரியென்று ஒப்புக் கொள்ளப்பெறுதல் வேண்டும். பெற்றோர்கள் இத்தகைய குறையினை எக்காரணத்தாலும் மறைத்து வைக்கக்கூடாது. திருமணம் உறுதி செய்யப்பெறுங்கால் இதனை எடுத்துக் காட்டி மணமக்களைத் திருப்தி செய்து விடவேண்டும். இத் தகைய குறைகளை முன்னரே எடுத்துக் காட்டாமல் திருமணங்கள் செய்வதால் திருமணத்திற்குப் பிறகு ஒரு வருடைய குறையை மற்றவர் அறிந்தவுடன் பல்வேறு குழப் பங்கள் எழுகின்றன; அவை 'மண-முறிவிலும்' கொண்டு செலுத்துகின்றன.

மணமகளாகப்போகும் ஒரு பெண்ணிடம் இத்தகைய தீராக் குறையிருப்பின் அதை அவசியம் அவளுடைய பெற் றோர் வெளிப்படுத்த வேண்டும். இத்தகைய குறை அவ ளுடைய பிள்ளைப்பேற்றிற்குத் தடையாக இருந்து, அவள் கருவுயிர்க்குங்கால் அவளுடைய உயிருக்கே ஆபத்து விளை விக்கக்கூடியதாகவும் முடியலாம். எடுத்துக்காட்டாக, பாதிக் கப்பெற்ற இதயத்தையுடைய ஒரு பெண் கருக்கொள்வதால்

43. எதிர்கால வாய்ப்புக்கள்—Prospects.

அஃது அவளுடைய உடல்நிலையைப் பாதிக்கலாம்; சிலசமயம் அவளுடைய உயிரே போயினும் போகலாம். எனவே, இத் தகைய நிலையினையுடைய பெண்ணைக் கொண்டுள்ள பெற்றோர்கள் திருமணத்திற்கு முன்னர் நிலையினை எடுத்துக் காட்டிவிட வேண்டும்; இந்நிலையை மணமகன் ஒப்புக் கொண்டாக வேண்டும். இதனால் திருமணத்திற்குப் பிறகு தம்பதிகளிடம் உடல் உள்ளக் கிளர்ச்சிப் பொருத்தப் பாடுகள் சரியான முறையில் அமைய ஏதுவுண்டு.

குழந்தைப்பேறு ஏற்படாத நிலையிலுள்ளவர்கள் அல்லது குழந்தைப்பேறே வேண்டாம் என்று கருதுகின்றவர்கள் திருமணமே புரிந்துகொள்ளக் கூடாதா என்று நீ வினவலாம். இல்லை, இல்லை; புரிந்துகொள்ளக் கூடாது என்ற கட்டாயம் இல்லை. இந்த நிலையையறிந்து திருமணம் புரிந்து கொண்டவர்களின் மணவாழ்க்கை வெற்றியுடன் திகழ்வதை நான் கண்டிருக்கின்றேன்; கேட்டுமிருக்கின்றேன். குழந்தை பெறமுடியாது என்ற கூறினை விஞ்சக்கூடிய ஏனைய கூறுகள் ஓர் ஆடவனையோ பெண்ணையோ திருமணத் திற்குத் தூண்டக் கூடியனவாகவும் உள்ளன. இத்தகைய சந்தர்ப்பங்களில் தம்பதிகள் தாம் திருமணம் புரிந்துகொள் வதற்கு முன்னர் ஒருவருடைய குறையைப் பிறிதொருவர் நன்குபுரிந்துகொள்ள வேண்டும்; தம்முடைய மனநிலைகளை யும் அதற்கேற்பப் பக்குவப்படுத்திக்கொள்ளவும் வேண்டும். தம்முடைய திருமணம் தாம் எதிர்பார்க்கும் தேவைகளனைத் தையும் தந்து திருப்தி செய்ய முடியாது என்ற நிலையினை முன்னரே அறிந்த நிலையிலும், ஆழ்ந்த தெளிவான காதலால் தூண்டப்பெற்ற ஓர் இளைஞனும் ஒரு பெண்ணும் கட்டாயம் திருமணம் புரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புவதை நாம் பல இடங்களில் காணலாம். இதனால் தம்முடைய எதிர்கால உறவுபற்றித் தாம் கொண்ட அச்சமும் கவலையும் அடிப்படையற்றவையாக மாறியதை யும் நாம் காணலாம்.

**இனமேம்பாட்டியல் பொருத்தம்:** பெற்றோர்கள் ஏதாவது நோயால் பீடிக்கப்பெற்றிருந்தாலும் அவர்கட்குப் பிறக்கும்

குழவிகளும் நோயுற்றிருக்க வேண்டும் என்ற நியதி இல்லை. இதிலிருந்து ஒரு தம்பதிகட்குப் பிறக்கும் குழவிகளின் உடல் நலத்தை முன்னரே அறுதியிடுவதற்கு ஏதாவது வழி உள்ளதா என்ற ஐயம் எழலாம். இஃது இனமேம்பாட்டியலைப்பற்றிய[44] பிரச்சினையாகும். இதனைச் சிறிது விளக்குவேன். இயல்பாகத் திருமணம் புரிந்துகொள்ளும் ஆணும் பெண்ணும் தமக்குப் பிறக்கும் குழவிகள் உடல் வன்மையிலும் உளவளத்திலும் நன்முறையில் இருக்கும் என்றே எதிர்பார்ப்பர். பெற்றோர் உடல்நலத்துடனும் பிறருக்குக் கடத்தக்கூடிய யாதொரு நோயும் இல்லாது இருந்தால், மரபுவழியாக இறங்கிவரும் இயல்பிகந்த பண்புகள் அவர்கள் குடும்ப வரலாற்றில் இல்லாதிருக்குமானால், அவர்கட்குப் பிறக்கும் குழவிகளும் சாதாரணமாகவே இருப்பர் என்று கருதுவது பொருத்தமே. அதிலும் உடற் பண்புகளையும் உளப்பண்புகளையும் அறுதியிட்டு முன்னரே தெரிவிக்கக் கூடிய சோதனைகள் கண்டறியப் பெறுதிருக்கும்பொழுது இவ்வாறு எண்ணுவது மிகவும் பொருத்தமாகும். ஆயினும், தம்பதிகளுள் யாராவது ஒருவர் உடலிலோ உள்ளத்திலோ தம் சந்ததியினருக்குக் கடத்தக்கூடிய நோயால் பீடிக்கப் பெற்றிருந்தாலும், அல்லது மரபுவழியாக இறங்கக்கூடிய மாசு ஒன்று குடும்பவரலாற்றில் காணப்பட்டாலும், அது பற்றிய எல்லா விளைவுகளையும் யோசிக்கத்தான் வேண்டும்; திருமணத்திற்கு முன்னர் அதுபற்றிய தகுதியான மருத்துவ அறிவுரையையும் நாடவேண்டும். மரபுவழியாக இறங்கக் கூடிய இயல்பிகந்த பண்புகளைப் பற்றி நீ அறிந்துகொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது. இதனை அடுத்த கடிதத்தில் ஓரளவு விரிவாக விளக்குவேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

---

44. இனமேம்பாட்டியல்—Eugenics.

# 4

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்; நலன் தெரிக்க;

சென்ற கடிதத்தில் பெற்றோர்களிடமிருந்து தம் குழவிகட்கு மரபுவழியாக இறங்கும் பண்புகளைப்பற்றிக் குறிந்பிட்டேன் அல்லவா? அதுபற்றிய சில கருத்துக்களை ஈண்டு விளக்குவேன்.

மானிட உடல் மிகமிகச் சிக்கலான உயிரி[45]; பல்வேறு வகையான சிறு குறைகள் மரபுவழியாக இறங்கும் தன்மையுடையது; எனினும், நம்முடைய நற்பேற்றின் காரணமாக மிகப்பெரும்பான்மையான குழவிகள் இத்தகைய குறைகளின்றியே பிறந்துவிடுகின்றன! இவ்வாறு மரபுவழியாகப் பெறுபவை பல்வேறு இயல்பிகந்த உடற்பண்புகள், குருதி பற்றிய நோய்கள், நரம்புபற்றி நோய்கள், சுரப்பிகள்[46] பற்றிய நோய்கள், மனநோய்கள் அல்லது குறைகள், குருடு செவிடு இவை போன்றவை எண்ணற்ற அரிய குறைபாடுகளாகும். இத்தகைய சில குறைகள் மரபுவழியல்லாத கூறுகளாலும் சூழ்நிலையாலும் உண்டாகக்கூடியவை; ஆகவே, ஒவ்வொரு வகையிலும் இந்நிலை மரபுவழியாக வந்ததா அல்லது சூழ்நிலையால் அமைந்ததா என்பதை நிலைநிறுத்த வேண்டியது இன்றியமையாதது.

மரபு வழியின் பொறி நுட்பம்: முதலில் பண்புகள் ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்கும், இவ்வாறு தொடர்ந்தும் எவ்வாறு இறங்குகின்றன என்பதை விளக்குவேன்; பெற்றோர்கள் எண்ணற்ற கூறுகளைத் தம் குழந்தை

45. உயிரி—Organism.
46. சுரப்பிகள்—Glands.

கட்குக் கடத்துகின்றனர்; இவை உடற் பண்புகளாகவும் உளப்பண்புகளாகவும் பரிணமித்துத் தலைக்காட்டுகின்றன. ஒவ்வொரு பிராணியும் ஒற்றை உயிரணுவாகவே தன்




படம்-1: உயிரணு பிளவுறும் விதம்.

1. உயிரணு அமைதியாக இருக்கும்பொழுது குரோமேட்டின் உட்கருவில் சிதறிக் கிடத்தல்.
2. உயிரணு பிளப்பதற்கு முன் குரோமேட்டின்கோல் போல் ஒழுங்காக அமைதல்; இவையே நிறக்கோல்களாதல்.
3. நிறக்கோல்கள் இரண்டாகப் பிளவுறுதல்.
4. பிளவுற்ற நிறக்கோல்கள் உட்கருவின் இரு எதிர்ப் புறங்களிலும் ஒட்டிக்கொள்ளுதல்.
5. உயிரணு இரண்டாகப் பிளவுறுதல்; பிளவுற்ற இரண்டு பகுதிகளிலும் உட்கரு தனியே உண்டாதல்; அவற்றில் நிறக்கோல்கள் இருத்தல்.
6. உயிரணு முற்றிலும் பிளந்து கொள்ளுதல்; நிறக்கோல்கள் முன்போல் குரோமேட்டினாக மாறி உட்கருவில் பரவிக் கிடத்தல்.

வாழ்க்கையைத் தொடங்குகின்றது. தனி மனிதனுடைய வாழ்க்கை கருவுற்ற 1/200 அங்குலம் குறுக்களவுள்ள ஒரு சிறிய முட்டையினின்றும்[47] தொடங்கு

47 கருவுற்ற முட்டை—Fertilised ovum.

கின்றது: இந்த ஒற்றையணு தாயின் சூற்பையிலுள்ள[48] ஒரு முட்டையும், தந்தையின் விரையினின்று வெளிப் போந்த ஒரு விந்தணுவும் சேர்ந்ததனால் உண் டானது. இதுபற்றிய கருத்துக்களை இனப்பெருக்கத்தைப் பற்றிக் கூறும்போது விரிவாக விளக்குவேன். இந்த முட்டை விந்தணு என்ற இரண்டு மிகச் சிறிய உயிரணுக்களில் கோல் போன்ற பொருள்கள் அடங்கியுள்ளன. இந்தக் கோல் போன்ற பொருள்கள் யாவை? உட்கரு[49] எனப்படும் உயிரணுவின்உட்பாகத்தில் 'குரோமேட்டின்'[50] என்ற தனிப் பொருள் உள்ளது; இதில் பாதி தாயின் முட்டையணுவி லிருந்தும், பாதி தந்தையின் விந்தணுவிலிருந்தும் வந்தவை. ஓர்உயிரணு இரண்டாகப்பிளவுறும்போது இப்பொருள்களே கோல்கள்போல் மாறுகின்றன; உயிரணு தனியாகப் பிரிந்த தும் பாதியாகப் பிளந்துகொண்ட நிறக்கோல்கள்[51] விரை வில் தங்களுடைய பழைய உருவத்தை அடைந்து விடுகின்



படம்-2 : மானிட உயிரணுவிலுள்ள நிறக்கோல்கள்.

றன. இச்செயல் படத்தில் (படம்-1) விளக்கப்பெற்றிருப்ப தைக் காண்க. இஃது ஆறுநிலைகளில் காட்டப்பெற்றுள்ளது; இந்த நிறக்கோல்களுள் சில நீளமாகவும், சில குட்டை யாகவும், சில நேராகவும், சில வளைந்தும் இருக்கும்; ஆனால்,

48. சூற்பை—Ovary.
49. உட்கரு-Nucleus 50. குரோமேட்டின்-Chromatin
51. நிறக்கோல்—Chromosome.

ஒரு தனியாளின் ஒவ்வோர் உயிரணுவிலும் ஒரேவகை உயிரினங்களின் உடலிலுள்ள உயிரணுவிலும் ஒரே எண்ணிக்கையுள்ள நிறக்கோல்களே உள்ளன; இரப்பரில் மிக நுண்ணிய நூலிழுத்து அதை நீளமாகவும் குட்டையாகவும் சிறு சிறு துண்டுகளாக வெட்டினால் எப்படியிருக்குமோ அவ்வாறு இந்நிறக்கோல்கள் காணப்பெறுவதைப் படத்தில் (படம் 2) காண்க. நிறக்கோல்களை 'வண்ண நொசிகள்' என்றும் வழங்குவர்.

நிறக்கோல்கள்: உயிரணுவின் ஒரு சிறப்பியல்பு யாதெனில், அதில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள நிறக்கோல்கள் அடக்கியிருப்பதேயாகும். இஃது உயிரிக்கு உயிரி மாறுபடும். ஈயின் உயிரணுவில் 4 இணைநிறக் கோல்களும், எலியின் உயிரணுவில் 20 இணைகளும், குரங்கின் உயிரணுவில் 54 நிறக்கோல்களும், மாட்டின் உயிரணுவில் 16

படம் 3: மானிட உயிரணுவின் நிறக்கோல்கள் 23 இணைகளாக வைக்கப்பெற்றிருத்தல்.

நிறக்கோல்களும் உள்ளன. மானிட உயிரணுவில் 23 இணை நிறக்கோல்கள் இருக்கின்றன. இந்த நிறக்கோல்களை 23 இணைகளாகப் பிரித்து வைத்தால் ஒவ்வோர் இணையும் பார்வைக்கு ஒரே மாதிரியாக இருக்கும். இதனைப் படத்தில் (படம் 3) காண்க. உயிரணுப்பிரிவில்[52] ஒவ்வொரு நிறக்

52 உயிரணுப்பிரிவு—Cell division.

கோலும் தன் நீளத்தை அச்சாக வைத்து இரண்டாக உடைகின்றது. ஆகையால் உயிரணு இரண்டாகப் பிரியுங்கால் ஒவ்வோர் உயிரணுவிலும் 23 இணை[53] நிறக்கோல்கள் அமைகின்றன. இவை யாவும் கருவுற்ற முட்டையினின்றே தோன்றியவையாதலின், ஒவ்வோர் உயிரணுவிலும் மரபுவழிக் கூறுகள் அடங்கியுள்ளன.

இவ்விடத்தில் இன்னொரு முக்கிய குறிப்பையும் நீ நினைவில் இருத்த வேண்டும். ஒவ்வொரு மானிட உயிரணுவிலும் 23 இணை நிறக்கோல்கள் இருக்கின்றன என்று மேலே கூறினேன் அல்லவா? அதனால் கருவுறுவதற்குக் காரணமான முட்டையிலும் விந்தணுவிலும் 23 இணை நிறக்கோல்களே இருக்குமென்று நீ கருதுவாய். அதுதான் இல்லை. ஒருவர் பால் முதிர்ச்சி[54] அடையுங்கால் இன்னொரு வகையான உயிரணுப்பகுப்பு அவர் உடலில் நடைபெறுகின்றது. இதன் மூலமாகத்தான் இனப்பெருக்க உயிரணுக்கள்[55] பெண்ணிடத்தில் முட்டையாகவும் ஆணிடத்தில் விந்தணுவாகவும் அமைகின்றன. இது குறைத்துப் பகுத்தல்[56] என்று வழங்கப் பெறும். இதில் இனப்பெருக்க உயிரணு ஒவ்வொன்றிலும் முதலிலுள்ள உயிரணுக்களில் பாதியே கிடைக்கின்றது. சாதாரண உயிரணுப்பகுப்பில் நிறக்கோல்கள் இரட்டிக்கின்றன. ஆனால், குறைத்துப் பகுத்தல் செயலில் அவ்விணை நிறக்கோல்கள் பிரிந்து ஒவ்வொன்றும் சேய் உயிரணுவிற்குச் செல்லுகின்றது. பின்னர் ஆண் பெண் இனப்பெருக்க உயிரணுக்கள் இணையுங்கால் திரும்பவும் முழு நிறக்கோல்களின் தொகுதியைக் கொண்ட உயிரணு பிறக்கின்றது. இதுவே கருவுறுதல் என்பது. இவ்வாறு உருப்பெற்ற உயிரணு மீண்டும் பிரிந்து வளர்ந்து குழந்தையாகின்றது.

---

53. இணை—Pair.
54. பால்முதிர்ச்சி—Sexual maturity.
55. இனப்பெருக்க உயிரணு—Reproductive cell.
56. குறைத்துப் பகுத்தல்—Reduction division.

இச்செயல்களைப் படம் (படம் 4) விளக்குகின்றது. படத்தில் (படம் 4) 48-க்குப் பதிலாக 46-ம், 24-க்குப் பதிலாக 23-ம் கொள்க. (அண்மை ஆராய்ச்சியின் முடிவு இது.) இவற்றி லிருந்து தனிச் சிறப்புக்குரிய ஓர் உண்மை உனக்குப் புலனு கும். ஒவ்வோர் இணையிலுமுள்ள ஒரு நிறக்கோல் விந்தணு விலிருந்து வந்தது; மற்றொன்று கருவுவதற்கு முன் முட்டை




படம் 4: தந்தையிடமிருந்து விந்தணுவும் தாயிட மிருந்து முட்டையணுவும் சேர்ந்து கருவுற்றுக் குழந் தையாக வளருங்கால் நிறக்கோல்கள் பிரிந்து இணைதல்

யிலேயே இருந்தது. எனவே, ஒரு குழந்தை தன் உடலி லுள்ள உயிரணுவின் நிறக்கோல் இணையில் ஒன்றினைத் தந்தையிடமிருந்தும் மற்றொன்றினைத் தாயினிடமிருந்தும் பெறுகின்றது என்பதை நீ அறிவாயாக. தாய் தந்தையரின்

நெட்டை அல்லது குட்டை, சிவப்பு அல்லது கறுப்பு நிறம், அழகு அல்லது அழகின்மை, கோபம், பிடிவாதம், கருணை, இரக்கம் போன்ற பல குணங்களும் இந்த நிறக்கோல்களுக்குள் அடங்கியுள்ளன. இவற்றுடன் இரு சாராரின் குடும்பத்தில் உள்ள மூதாதையரின் குணங்களையும் இவை தம்முளே ஒளித்து வைத்துக் கொண்டுள்ளன.

இன நிறக்கோல்கள்: இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிந்துகொள்ளுதல் வேண்டும். மானிட உயிரணுவில் 23 இணை நிறக்கோல்கள் உள்ளன என்று மேலே சொன்னேன். பெண் உயிரணுவிலுள்ள ஒவ்வோர் இணையின் உருவமும் ஒரேமாதிரியாக இருக்கும்; ஆனால், ஆண் உயிரணுவில் 22 இணைகள் மட்டிலும் அவ்வாறிருக்க ஓர் இணை மட்டிலும் உருவத்தில் வேறுபட்டிருக்கும். படம்3–இல் இறுதியாக உள்ளவற்றைப் பார்த்து இதனைத் தெளிவு பெறுக. இந்த உருவ வேறுபாடுள்ள நிறக்கோல்கள்தாம் ஒரு குழந்தை ஆணு பெண்ணு என்று அறுதியிடுகின்றன. ஆதலின் இவை 'இன நிறக்கோல்கள்' என்று வழங்கப்பெறுகின்றன. இவற்றை நுண்பெருக்கி வழியாக உற்று நோக்கினால் பலவித தோற்றங்களைக் காணலாம்; அதற்குத் தக்கபடி அவற்றிற்கு 'எக்ஸ்' (x) நிறக்கோல் என்றும், 'ஒய்' (y) நிறக்கோல் என்றும் பெயரிட்டிருக்கின்றனர். பெண் உயிரணுவிலுள்ள இருபத்து மூன்றுவது இணையான இன நிறக்கோல் எப்பொழுதும் 'எக்ஸ்' ஆகத்தான் உள்ளது. ஆனால், ஆண் உயிரணுவிலுள்ள இருபத்து மூன்றுவது இணையில் நிறக்கோல் 'எக்ஸ்' ஆகவும் இருக்கலாம்; அல்லது 'ஒய்' ஆகவும் இருக்கலாம். உயிரணுக்கள் முதிர்ச்சி பெற்று முட்டையாகவும் விந்தணுவாகவும் மாறுங்கால் அவை ஒவ்வொன்றிலும் 23 நிறக்கோல்கள் (உயிரணுவிலுள்ளவற்றில் பாதி)தானிருக்கும் என்றும் மேலே கூறினேன். இவை ஒவ்வொன்றும் இணைக்கொன்றாக 23 இணைகளிலிருந்தும் வந்தவை. ஆகவே, முட்டையில் எப்பொழுதும் 'எக்ஸ்' நிறக்கோல் ஒன்றிருக்கும். ஆனால், விந்தணுவில் எப்பொழுதும் 'எக்ஸ்' நிறக்கோல் இருக்கும் என்பதில்லை; சிலவற்றில் 'எக்ஸும்' சிலவற்றில் 'ஒய்'யும், இருக்கும்;

'எக்ஸ்' இன நிறக்கோல் உள்ள பெண் கரு அணுவுடன் 'எக்ஸ்' இன நிறக்கோலுள்ள ஆண் கரு அணு சேர்ந்தால் அதனால் பிறக்கும் குழந்தை பெண் குழந்தையாக இருக்கும்; அங்ஙனமின்றி, 'எக்ஸ்' இன நிறக்கோலுள்ள பெண் கரு அணுவுடன் 'ஒய்' இன நிறக்கோலுள்ள ஆண் கரு அணு சேர்ந்தால் அதனால் பிறக்கும் குழந்தை ஆணாக இருக்கும். எனவே, பிறக்கப்போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்று அறுதியிடும் கூறு தந்தையிடமே உள்ளது என்பதை நீ அறிதல் வேண்டும். ஒரு தம்பதிகளுக்கு ஆண் குழந்தை பிறக்கவில்லை என்று பெண்ணைக் குறை சொல்வது அறியாமை. ஆணை மட்டும் குறை சொல்லமுடியுமா? அவனுடைய எந்த விந்தணு முதலில் முட்டையைப்போய் அடைகின்றது என்று அவனுக்கும் தெரியாதல்லவா? இதைத் ''தற்செயல்[56]'' தான் அறுதியிடுகின்றது. பறவைகளிலும், வண்ணாத்திப் பூச்சிகளிலும் சிலவகை மீன்களிலும் இந்த நியதி மாறுபட்டுள்ளது. அவற்றுள் 'ஒய்' நிறக்கோல் பெண்ணின் முட்டையிலிருக்கின்றது!

'ஜீன்'கள்[57]: ஒவ்வொரு நிறக்கோலிலும் மரபுவழிக் கூறுகள் அடங்கிக் கிடக்கின்றன என்று மேலே கூறினேன். இந்த மரபுவழிக் கூறுகளைத் தாங்கிக்கொண்டிருக்கும் நுண்ணிய உறுப்புகளை 'ஜீன்கள்' என வழங்குவர். 'ஜீன்களின்' தொகுதியாலேயே நிறக்கோல்கள் அமைந்து கிடக்கின்றன. உயர்ந்த நுண்பெருக்கியாலும் ஜீனைத் தனியாகக் காண்பது அரிது. ஆற்றல்மிக்க நுண்பெருக்கியால் ஒரு நிறக்கோலை ஆய்ந்ததில் அது கயிற்றில் கோக்கப்பெற்ற உருண்டை மணிகள்போல் காணப் பெறுகின்றது. நிறக்கோலின் தோற்றத்தைப் படத்தில் காண்க (படம் 5). முக்கியமாக, அஃது ஒரு திட்டமான ஒழுங்கில் அமைக்கப்பெற்ற ஜீன்களின் கோவையே. மானிட ஜீன்கள் கிட்டத்தட்ட ஆயிரத்திற்கு மேற்பட்டவை; அவை 46 நிறக்கோல்களிலும் சம

56. தற்செயல்—Chance.
57. ஜீன்கள்—Genes.

மின்றி விளியோகிக்கப் பெற்றுள்ளன. ஜீன்கள் எப்பொழுதும் இரட்டைகளாகவே இருக்கும். அவைகளில் ஒன்று தாயிடமிருந்தும் மற்றொன்று தந்தையிடமிருந்தும் வந்தவையாகும். இணையாகவுள்ள நிறக்கோல்களின் ஓர் இணையிலுள்ள




படம் 5: ஒரு நிறக்கோலின் தோற்றம்.
1. நீண்ட நிலை; 2. சுருளத்தொடங்கும் நிலை; 3. சுருள்கள் இறுகும் நிலை; 4. இறுக்கமாகச் சுருண்டு கோல் போன்ற தோற்ற நிலை.

ஒரு நிறக்கோலின் ஒரு ஜீன் அந்த இணையிலுள்ள மற்றொரு நிறக்கோலின் ஒரு ஜீனுடன் இணைந்திருக்கின்றது. இந்த ஜீன்கள்தாம் ஒரே மாதிரியான முறையில் அல்லது மாறுபட்ட முறையில் ஒரே செயலைப் புரிகின்றன. ஓர் இணையிலுள்ள ஜீன்கள் தம் செயலில், ஒரே மாதிரியான முறையில் செயற்பட்டால் அவற்றால் ஆக்கப்பெறும் சிறப்பியல்பு தலைக்காட்டும். இவ்வாறு காட்டுவதற்கு வேறு இணை உயிரணுக்களின் தலையீடு இல்லாதிருத்தல் வேண்டும். அவை மாறுபட்ட முறையில் செயற்பட்டால் இந்த இரண்டு ஜீன்களின் வேறுபட்ட செல்வாக்குகள் ஒன்றாக இணைந்து இடைப்பட்ட சிறப்பியல்பினை விளைவிக்கலாம்; அல்லது ஒரு ஜீன் பிறிதொன்றின் செல்வாக்கை மறைத்தும் விடலாம்

வேறொரு ஜீனின் முன்னிலையில் வன்மையான ஜீன் ஒன்று ஒரு சிறப்பியல்பினை உண்டாக்குமேயானால், அந்த ஓங்கி நிற்கின்றதாகப்[58] பேசப்பெறும்; மறைந்த உயிரணு பின் தங்கி நிற்கின்றதாகக்[59] கூறப்பெறும். இச்செய்திகள் உனக்குப் புரிந்துக்கொள்வதற்குச் சற்றுக் கடினமாக இருக்கலாம். இவைபற்றிய முழு விளக்கங்களை உயிர் நூல்களில் கண்டு தெளிக. எனினும், சில எடுத்துக்காட்டுகள் ஓரளவு இச்செய்திகளைத் தெளிவாக்கும்.

மரபுவழிப் பண்புகள் இறங்கும் முறை : முதலாவதாக உயரம் என்ற பண்பினைத் தம்முள் கொண்ட இரண்டு ஜீன்களை எடுத்துக்கொள்வோம். பெற்றோர் இருவரும் குட்டையாக இருந்தால் அவர்கட்குப்பிறக்கும் குழந்தையின்உடலில் உள்ள உயிரணுக்கள் எல்லாவற்றிலும் உயரத்தைப்பற்றியுள்ள ஜீன்களில் குட்டையாக வளரும் தன்மைதான் குடிகொண்டிருக்கும். குழந்தையும் பெற்றோர்களைப்போல் குட்டையாகவே இருக்கும். பெற்றோர்கள் இருவரும்நெட்டையாக இருந்தால் அவர்கட்குப் பிறக்கும் குழந்தையும் உயரமானவனாக வளர ஏதுவிருக்கின்றது. ஆனால், தாய் குட்டையானவளாகவும் தந்தை நெட்டையானவராகவும் இருந்துவிட்டால் அவர்கட்குப் பிறக்கும் குழந்தையின் உடலிலுள்ள உயிரணுக்கள் ஒவ்வொன்றிலும் உயரம் என்ற பண்பிற்குப் பொறுப்பாகவுள்ள ஜீன்களில் ஒன்று நெட்டையாக வளரும் தன்மையைத் தன்னுள் கொண்டிருக்கும்; இன்னொன்று குட்டையாக வளரும் தன்மையைப்பெற்றிருக்கும். இவ்வாறு வேறுபட்டுள்ள இரண்டு ஜீன்களில் ஒன்று மற்றதைவிட ஆற்றல் வாய்ந்ததாக இருக்கும்; இன்னொன்று மிகவும் தளர்ந்ததாக இருக்கும். எடுத்துக்காட்டாக, குட்டையான தாய்க்கும் நெட்டையான தந்தைக்கும் பிறந்த குழந்தையிடம் உள்ள ஜீன்களில் நெட்டைத்தன்மையைக்கொண்ட ஜீன்கள் குட்டையாக வளரும் தன்மையுடைய மற்ற ஜீன்களைவிட

58. ஓங்கி நிற்றல்—Dominant.
59. பின்தங்கி நிற்றல்—Recessive.

மிகவும் ஆற்றல்வாய்ந்தவை என்று வைத்துக்கொள்வோம்: குட்டையான தாய்க்குப் பிறந்த குழந்தையாயினும், அவன் நெட்டைத் தன்மை வாய்ந்த ஜீனின் வலிமையினுல் தந்தையைப் போலவே மிகவும் உயரமாக வளர்வான்.

ஓர் உயிரின் மரபுவழியில் பின்தங்கி நிற்கும் ஜீன்கள் அடியோடு மறைந்து போவதில்லை. செவிட்டூமையராக இருப்பது மரபுவழியாகவந்த கூறே என்பதை நீ அறிக. அதற்கென உள்ள ஜீன்கள் பின்தங்கி நிற்பவையாகும். சாதாரண மனிதனுக்கும் ஒரு செவிட்டூமைப் பெண்ணுக்கும் பிறக்கும் குழந்தைகள் சாதாரணமாகப் பேசக் கூடியவைகளாகவே இருக்கும்; அவர்களின் காதும் நன்கு கேட்கும். ஆனுல் இம் மாதிரி பிறந்த குழந்தை ஒரு செவிட்டூமையுடன் சேர்ந்ததாலோ அல்லது தன்னைப்போலச் செவிட்டூமைக்குப் பிறந்தவர்களுடன் சேர்ந்ததாலோ பிறக்கும் குழந்தைகளில் சில செவிட்டூமைகளாக இருக்கும். இங்ஙனமே, தவிட்டுநிறக் கண்களையுடைய[60] தாய் தந்தையர்கட்கு நீல நிறக்கண்களையுடைய குழந்தைகள் பிறப்பதற்கும் இதுவே காரணமாகும். தாய்தந்தையர் தலைமுறையில் ஒளிந்து கிடந்த நீல நிறக் கண்ணையுண்டாக்கும் பண்பு அடுத்த தலைமுறையில் தலைகாட்டியுள்ளது. அஃதாவது, குழந்தையின் பாட்டன் பாட்டியாரிடம் பின்தங்கி நின்ற நீல நிறக் கண்களைத் தரும் பண்பு பேரன் பிறப்பின் போது ஓங்கி நின்றதே நீலநிறக் கண்ணுடன் இருப்பதற்குக் காரணமாகும்.

ஆணின் விந்தணு பெண்ணின் முட்டையணுவுடன் சேரும் நிலையில் தாய் தந்தையிடமுள்ள 46 நிறக்கோல்களில் 23 தாயிடமிருந்தும் 23 தந்தையிடமிருந்தும் சேர்கின்றன என்பதை மேலே கூறினேன். படத்தின் மூலமும் அறிந்து கொண்டாய். இவ்வாறு நிறக்கோல்கள் பாதியாகக் குறையும் பொழுது இணை இணையாக அவைகளில் காணப்பெறும் ஜீன்களும் தங்களுடைய இணையை இழந்து ஒற்றையாகி விடு

60. தவிட்டுநிறக் கண்—Brown eye.

கின்றன. இதையும்ஓர் எடுத்துக்காட்டால்விளக்குகின்றேன். நெட்டையான தந்தைக்கும் குட்டையான தாய்க்கும் பிறந்த குழந்தையின் உடல் உயிரணுக்களில் உயரம் என்ற பண்பிற்குக் காரணமான ஜீன்களில் ஒன்று நெட்டையாக வளரும் தன்மையையும், மற்றொன்று குட்டையாக வளரும் தன்மையையும் கொண்டிருக்கும் என்பதை நீ அறிவாயல்லவா? இந்தக் குழந்தை இளைஞனாகும்பொழுது அவனுடைய விந்தணு தயாராகையில் தன்னுள் இருக்கும் நிறக்கோல்களைப் பாதியாகக் குறைத்துக் கொள்ளுங்கால் உயரம் என்ற பண்பிற்கு உரித்தான ஜீன்களில் இரண்டில் ஒன்றை இழந்து விடுகின்றது. அது தாயிடமிருந்து வந்த குட்டையாக வளரும் தன்மையைக் கொண்ட ஜீனாகவும் இருக்கலாம்; அல்லது தந்தையிடமிருந்து வந்த நெட்டையாக வளரும் தன்மையைக் கொண்ட ஜீனாகவும் இருக்கலாம். ஆகவே குழந்தை பெரியவனாகி அவனுடைய விந்தணு வேறொரு பெண்ணின் முட்டையணுவுடன் சேரும்பொழுது அதனால் பிறக்கப்போகும் குழந்தைக்கு உயரம் என்ற பண்பினைக் கொண்டுள்ள ஒரு ஜீன் அதனுடைய தந்தை வழிப்பாட்டனிடமிருந்தோ, அல்லது பாட்டியிடமிருந்தோதான் வருகின்றது. பாட்டி, பாட்டன் என்ற இரண்டு பேரிடமிருந்து உயர ஜீன்கள் வரமுடியாது. அதேபோல் மற்றொரு பகுதி ஜீன் தாய் வழிப்பாட்டன் அல்லது பாட்டியிடமிருந்துதான் வருகின்றது. இவ்வாறு வந்த உயரத்திற்குக் காரணமாக இருக்கும் ஜீன் குட்டைப் பண்புடையதாக இருக்குமாயின் பிறக்கப் போகும் பேரனின் உடலில் உள்ள ஜீன்கள் யாவும் குட்டையாக வளரும் தன்மையுடையனவாக இருந்து அவனைக் குள்ளனாக்குகின்றன; அல்லது இரண்டும் நெட்டைப்பண்புடையனவாக இருப்பின் பேரன் நெட்டையனாக வளர்கின்றான்: ஒரு குட்டை ஜீனும் ஒரு நெட்டை ஜீனுமாக இருந்து விட்டால், குட்டை ஜீன் நெட்டை ஜீனைவிட வன்மை மிக்கதாக இருந்தால், பேரன் குட்டையாகவே வளர்வான். தாய் தந்தையர் இருவரும் நெட்டையாக இருந்தும் அவர்கட்குக் குட்டையாக ஒரு குழந்தை

பிறப்பதற்கும், அல்லது தாய் தந்தையார் இருவரும் பொன்னிற மேனியராக இருந்தும் அவர்களுடைய குழந்தை மாநிறமேனியதாக இருப்பதற்கும் பாட்டன் பாட்டி வழியே குழந்தையிடம் வந்துள்ள ஜீன்களே காரணமாகும்.

மேற்கூறியவற்றால் ஒவ்வொரு குழந்தையும் தாயிடமிருந்தும் தந்தையிடமிருந்தும் ஒரே மாதிரி மரபு வழியைப் பெறுகின்றது என்பது பெறப்படுகின்றதல்லவா? இந்த ஒவ்வொரு பெற்ருேரும் தத்தம் பெற்ருேர்களிடமிருந்து சமநிலைகளில் மரபுவழியைப் பெறுகின்றனர் என்றும் அவர்களும் அங்ஙனமே தம் பெற்ருேர்களிடம் சமமாகப் பெறுகின்றனர் என்றும் தெரிகின்றது. எனவே, ஒவ்வொரு குழந்தையும் தன்னுடைய மரபுவழிப்பண்புகளில் பாதியை நேர் பெற்ருேரிடமிருந்தும், $\frac{1}{4}$ பகுதியை பாட்டன்—பாட்டிமாரிடத்தும், $\frac{1}{8}$ பகுதியை முப்பாட்டன்—பாட்டியமாரிடமிருந்தும், இங்ஙனமே தொடர்ந்து வடிவகணித விகிதத்தில்[61] பெறுகின்றது. வாழ்க்கை என்னும் நீரோட்டம் தொடர்ந்து போய்க்கொண்டே இருக்கின்றது; குழந்தை தன்னுடைய மூலதனத்தைப் பெற்ருேர்களிடமிருந்து அல்லது பெற்ருேர்கள் மூலம் பெறுகின்றது. இங்ஙனம் ஒரு குழந்தையின் மரபு வழிப் பண்புகள் அதன் முன்ஞேர் அனைவரையும் பொறுத்ததாதலின் ஒரு குழந்தையின் தாடை அதன் தாயின் தாடையைப் போன்றுள்ளது; அதன் நெற்றி அதன் தந்தையினுடையதைப் போன்றுள்ளது; அதன் கூந்தல் பாட்டியினுடையதைப்போல் காணப்படுகின்றது; அதன் பிடிவாத குணம் பாட்டனுடையதைப்போல் இருக்கின்றது. இவ்வாறு காணப்பெறுவதற்கு இந்த ஜீன்களே காரணமாகும்.

மரபுவழியாக இறங்கக்கூடிய பண்புகள்: இதுகாறும் அறிந்தவற்றிலிருந்து எவை எவை குழந்தையிடம் மரபுவழியாக இறங்குகின்றன என்பதை அறிந்து கொள்ளும் அவாவுடையவளுக இருப்பாய் என்று கருதுகின்றேன். அவற்றைப்

61. வடிவகணித விகிதம்—Geometrical ratio.

பற்றியும் சிறிது கூறுவேன். நீளமான அல்லது சப்பையான மூக்கு, உயரம், கூந்தலின் நிறம், நெளிந்த அல்லது நீண்ட கூந்தல், நீண்ட அல்லது குட்டையான பருத்த விரல்கள், கருவிழிகள், நீலவிழிகள், செம்மை படர்ந்த விழிகள், பொன்னிறமேனி, மாநிறமேனி, நாவற்பழமேனி, குட்டை, நெட்டை என்று ஒருவருடைய தோற்றத்தில் காணப்பெறும் பல சிறப்பியல்புகள் பல தலைமுறைகளிலிருந்து குழந்தைக்கு வருகின்றன. கூர்த்தமதி, செய்திகளை விரைவாக ஏற்குந் திறன், மந்தமதி முதலியனவும் மரபுவழிப் பண்புகளே. ஆழ்ந்த யோசனை, அவசரக் குடுக்கைத்தனம், கவனமின்றிக் காரியங்களைப் பொறுமையின்றிச் செய்தல், தந்திரமாகவும் எளிதாகவும் செயல்களையாற்றல் போன்ற பண்புகளும் மரபு வழியாகக் குழந்தையிடம் காணப்பெறலாம். எவ்வளவு ஊட்ட உணவுகளை உண்டாலும் குச்சிபோல் இருப்பது, எவ்வளவுபட்டினிகிடந்தாலும் பலூன்போல் பருத்திருப்பது போன்ற தன்மைகளும் மரபுவழியைப்பற்றியனவே. நெஞ்சு படபடப்பு, கைகால் உதறல் போன்ற நரம்புத்தளர்ச்சி பற்றிய குணங்களும் மரபுவழியாகவே ஏற்படுகின்றன.

மரபுவழிபபற்றிய செய்திகளை ஒரே கடிதத்தில் முடித்து விடவேண்டும் என்று எண்ணியதால் கடிதம் சற்று நீண்டு விட்டது. மரபுவழியுடன் இணைத்து அறியவேண்டியது சூழ்நிலையின்[62] பங்கு ஆகும். ஒரு குழந்தையின் பிறப்பில் காணப்பெறும் குறைகள் யாவும் மரபுவழியாக வந்தனவா? அன்றி சூழ்நிலையால் ஏற்பட்டனவா? மரபுவழியாக வருபவை யாவை? சூழ்நிலையால் ஏற்படுபவை எவை? அங்ஙனமே, நோய்கள் மரபுவழியாக வருகின்றனவா? அன்று? இவைபற்றிய கருத்துகளை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

62. சூழ்நிலை—Environment.

# 5

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

சூழ்நிலை: சென்ற கடிதத்தின் இறுதியில் சூழ்நிலை என்பதைக் குறிப்பிட்டேன். சூழ்நிலை என்பது உளவியலில்வரும் கலைச்சொல். பள்ளியிலும் வெளியிலும் ஒரு குழந்தைக்குக் கிடைக்கும் அநுபவங்களே சூழ்நிலை என்பது; ஆசிரியர், பெற்றோர், மற்றோர் அளிக்கும் ஊக்கம், குழந்தைக்குக் கிடைக்கும் வெற்றி தோல்விகள் ஆகியவை அனைத்தும் அடங்கிய நிலையே அது. மனப்பண்புகளும்[63] மீப்பண்புகளும்[64] மரபுவழியாக இறங்குகின்றன என்பதுபற்றி கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. தொடக்கக் காலத்திலிருந்த இனமேம்பாட்டியல் அறிஞர்கள்[65] ஒரு குழந்தையின் அறிதிறனும்[66] ஆளுமையும் மரபுவழியால் அறுதியிடப் பெறுகின்றன என்று வற்புறுத்தினர். பின்னர் நடத்தைக் கொள்கையினர்[67] சூழ்நிலையே—கல்வி, பயிற்சி, தொடக்க கால அநுபவங்கள், ஆக்க நிலையுறுத்தல்[68] முதலியவை அடங்கிய நிலை—குழந்தையை ஆக்குவதற்கும் அது துலக்கமடைவதற்கும்[69] முழுதும் பொறுப்பாகின்றன என்று வற்புறுத்தினர். இன்று உளவியலறிஞர்கள் மரபுவழிக்கூறுகளும் சூழ்நிலைக் கூறுகளும் பிரித்து அறியப்பெறாதவை

63. மனப்பண்பு—Mental quality.
64. மீப்பண்பு—Temperamental quality.
65. இனமேம்பாட்டியலறிஞர்—Eugenist.
66. அறிதிறன்—Intelligence.
67. நடத்தைக்கொள்கையினர்—Behaviourist.
68. ஆக்க நிலையுறுத்தல்—Conditioning.
69. துலக்கம்—Dovelopment.

என்றும் இவை இரண்டும் பிணைந்து நிற்பவை என்றும் நம்புகின்றனர். சூழ்நிலையும் மரபுவழியும் ஒரு குழந்தையின் வாழ்வில் இடைவிடாது இடைவினை புரிகின்றன[70] என்று அவர்கள் கூறுகின்றனர்; ஒரு குழந்தை பிறப்பதற்கு முன்னரே அது சூழ்நிலையின் செல்வாக்கைப் பெறுகின்றது என்று எடுத்துக்காட்டுகின்றனர். ஜென்னிங்க்ஸ் என்ற உயிரியலறிஞர் தமது "மானிட இயல்பின் உயிரியல் அடிப்படை" என்ற நூலில்[71] மரபுவழியும் சூழ்நிலையும் ஒன்றோடொன்று கலந்து உறவாடும் முறையைப்பற்றி மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். முடிவாக அவர் ஒரு குழந்தையின் அறிதிறன், நடத்தை, மீப்பண்பு, மனநிலை முதலியவை மரபுவழி அல்லது சூழ்நிலையால் மாற்றப்படும் தன்மையுடையவை என்று கூறி முடிக்கின்றார். கிட்டத்தட்ட சரியான மரபுவழியைப் பெற்றுள்ள ஒரு கரு இரட்டையரையும்[72] தனித்தனியாகப் பிரித்து வெவ்வேறு சூழ்நிலையில் வைப்போமாயின் அவர்கள் மனவளர்ச்சி, ஆளுமை, சால்பு[73] முதலியவற்றில் சில மாறுபாடுகளைப் பெறுகின்றனர். சுருங்கக் கூறின், மரபுவழியையோ சூழ்நிலையையோ மாற்றி இரண்டு தனியாள்களிடையே கணிசமானவேறுபாடுகளை உண்டாக்குதல் முடியும் என்பது இன்றைய உளவியல்[74] காட்டும் உண்மையாகும்.

வளரும் ஒவ்வொர் உயிரியும்[75]—தாவரம், பிராணி, மனிதன் ஆகியவற்றுள் எதுவாயினும்—மரபுவழியும் சூழ்நிலையும் கலந்ததொன்று என்பதைத் தெளிவாக அறிய வேண்டுமாயின் ஒரு தாவரத்தின் வளர்ச்சியில் விரையின்

---

70. இடைவினைபுரி—Interact.
71. Jenninga:The Biologi a' Basis of Human Nature
72. ஒரு கரு இரட்டையர்—Identical twins.
73. சால்பு—Character.
74. உளவியல்—Psychology.
75. உயிரி—Organism.

பங்கையும்[76] மண்ணின் பங்கையும் அறிந்தால்போதுமானது. விரையினுள் அது ஒருவகைத் தாவரமாக வளரும் ஆற்றலின் கூறு அடங்கியுள்ளது; அது நல்முறையில் வளர்வதும் நன்றல்லாத முறையில் வளர்வதும் அஃது அடையும் மண்ணைப் பொறுத்துள்ளது. அது பாறையில் விழுந்தாலும் வெயிலில் விழுந்து நசுக்குண்டாலும் முளைப்பதில்லை. அஃது அதிகமான நீருள்ள அல்லது வறட்சியையுடைய வளமற்ற மண்ணில் விழுந்தாலும் முளைக்கும்; ஆனால் நீண்ட காலம் வாழாது, அல்லது பயன் தராது. கோயில்கள் போன்ற கட்டிட இடுக்குகளில் விழுந்தால் என்ன நேரிடும் என்பதை நீ நன்கு அறிவாய். விரை நல்ல நிலத்தில் வீழ்ந்து உரம், நீர், வெயில் போன்ற சாதகமான நிலைமைகளைப் பெற்றால், அஃது ஒரு சிறந்த தாவரமாக வளரும்; நிறைந்த பயனையும் தரும். தாவர வளர்ச்சிக்கு விரையும் வேண்டும்; மண்ணும் வேண்டும். ஒன்றில்லாமல் மற்றொன்றால் வளர்ச்சி என்பதே இல்லை. இரண்டும் தனித்தனியாகவும் செயற்பட முடியாது; இரண்டும் ஒன்றையொன்று தழுவி நிற்கின்றன இவ்வாறே ஒரு குழந்தையின் வளர்ச்சியிலும் மரபுவழியும் சூழ்நிலையும் இன்றியமையாத பங்கினைப் பெறுகின்றன. மரபுவழி ஒருவனுக்குச் சாத்தியமாகக்கூடிய கூறுகளைக் குறிக்கின்றது; சூழ்நிலை அவற்றைச் சிறந்த முறையில் வளர்க்கும் வாய்ப்பினைத் தருகின்றது; அவ்வளவுதான். இப்பொழுது ஒருவர் வாழ்க்கையில் மரபுவழியும் சூழ்நிலையும் பெறும் பங்கு உனக்குத் தெளிவாக விளங்கியிருக்கும் என எண்ணுகின்றேன்.

சில நோய்கள்: மேற்கூறியவற்றிலிருந்து ஏதாவது சில குறைகளுடன் பிறக்கும் குழந்தையிடம் அக்குறைகளை[77]

---

76. விரை—வித்து; விரை—மணம்; மணத்தைத்தரும் பூவிலுள்ள பொடி; இதுதான் தாவரத்தின் ஆண் உயிரணு; இதுவே முட்டையுடன் (Ovum) சேர்ந்து வித்தாகின்றது; எனவே, விரை வித்தினைக் குறிக்கின்றது.

77. குறைகள்—Defects

மரபுவழியாக வந்தனவாகத்தானே கருதவேண்டும் என்று நீ நினைக்கலாம்: அப்படித்தான் அமையவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஒரு குழந்தை தாயின் கருப்பையில்[78] வளர்ந்து கொண்டிருக்கும் நிலையிலோ, அல்லது அது பிறக்கும் நிலையிலோ சில குறைகளை அல்லது நோய்களைப் பெறலாம்; இத்தகைய குறைகள் மரபுவழியாக வந்தவையன்று; பிறவியைச் சார்ந்த நிலையையும்—அஃதாவது பிறப்பின் பொழுது இருப்பது— மரபுவழியாக வந்தநிலையையும் நீ பிரிந்தறிந்து கொள்ளத் தெரிந்துகொள்ள வேண்டும். அண்மைக் காலத்தில் அறிவியலறிஞர்கள் இதுபற்றிய சிலசோதனைகளை மேற்கொண்டு சரியான முடிவுகட்கு வந்துள்ளனர். ஒருதாய் கருவுற்ற முதல் மூன்று மாதங்களில் ஜெர்மன் தட்டம்மை[79] நோயால் பீடிக்கப்பெற்று அதன் காரணமாக அந்நோயின் 'வைரஸ்'[80] எனப்படும் நுண்ணிய கிருமிகள் தாயிடமிருந்து அவள் வயிற்றில் வளரும் குழவியிடம் பாய்ந்து அக்குழந்தையின் வளர்ச்சியில் கடுமையான இயல்பிகந்த பண்புகளை உண்டாக்குகின்றன. அதன் பிறகு குழந்தை பிறக்குங்கால் உடலில் பல்வேறு கோளாறுகளுடன் பிறக்கலாம்; அக்குழந்தை வாழ்நாள் முழுவதும் குருடாகவோ செவிடாகவோ இருக்கவும் ஏதுவுண்டு. இத்தகைய நிலை பிறவி சார்ந்தது; அஃதாவது, குழந்தை அக்குறையுடன் பிறந்தது. இது மரபுவழியைச் சார்ந்தது அன்று; இக்குறை அடுத்த தலைமுறைக்கு இறங்கவும் செய்யாது. இங்ஙனமே, ஒரு தாய் கருவுற்றிருக்குங்கால் பித்தக்காய்ச்சலால்[81] தாக்குண்டு, அவள் வயிற்றிலுள்ள குழந்தை அக்காய்ச்சற் கிருமிகளால்[82] பாதிக்கப்பெற்று, அது பிறக்குங்கால் அந்நோய் இருந்தாலும் அதுவும் மரபுவழியாக வந்தது அன்று. எனவே மரபுவழிப் பண்பு என்பது, பெற்றோரின் இனப்பெருக்க உயிரணுக்களில் இருப்

---

78. கருப்பை—Womb. 80. வைரஸ்—Virus.
79. ஜெர்மன் தட்டம்மை—German measles.
81. பித்தக் காய்ச்சல்—Typhoid fever.
82. கிருமிகள்—Germs.

பது; அதுதான் குழந்தையின் உடலமைப்பின் ஒரு பகுதி யாகக் கடத்தப்பெறுகின்றது.

இவ்விடத்தில் இயல்பாகவே ஓர் ஐயம் உன் மனத்தில் எழலாம். ஒரு குழந்தையின் உடற்கூறினுள் காணப்பெறும் இயல்பிகந்த குறை மரபுவழியாக வந்ததா, அன்று என்பதைக் கூறுவது சாத்தியமா என்று நீ வினவலாம். இஃது ஒரு குறிப்பிட்ட குறையினைப் பொறுத்தது. இங்கும் நீ மரபுவழியாக வந்த நோயினையும்[83] இடையில் நேர்ந்த[84] நோயினையும் வேறு பிரித்து அறிந்துகொள்ளவேண்டும். இடையில் நேர்ந்தநோய்கள் குடும்பத்தைப் பற்றியவையன்று. எடுத்துக்காட்டாக ஒருவர் சிறுவயதில் தனக்கு நேரிட்ட இளம்பிள்ளை வாதத்தின்[85] காரணமாக ஒரு குறையை அடைதல்கூடும்; இவ்வகைக் குறை மரபுவழியாக வருவதன்று; இக்குறை அவரது சந்ததியினருக்குக் கடத்தப் பெறுவதுமன்று. அங்ஙனமே, ஒருவருக்குக் காதில் ஏற்பட்ட தீங்கினால் அல்லது நோயினால் செவிட்டுத்தன்மை உண்டாகலாம்; இத்தகைய செவிட்டுத்தன்மையும் மரபுவழியாக இறங்குவதன்று. எனினும், ஒரு சில இயல்பிகந்த உடற்கூறுகள் திட்டமாக மரபுவழியாக இறங்குகின்றன. பிளந்தஉதடு, கைகால்களில் ஆறுவிரல்கள் இருத்தல் இவை போன்ற சில பிறவிக் கோளாறுகள் குழந்தையிடம் தலைமுறைத் தலைமுறையாகத் தோன்றுகின்றன. அங்ஙனமே, கண்ணினையும் காதினையும் பற்றிய சிலவகைக் கோளாறுகள், காயம் பட்டால் நிற்காமல் குருதி வடிதல், வழிவழியாகக் குடும்பத்தில் காணப்பெறும் வேறு குறைகள்— இவை யாவும் குறைபாடுள்ள ஜீன்களால் ஏற்படுபவை. மேலும், ஒருவருடைய உடல் தளர்ச்சியும் மரபுவழியாகக் கடத்தப்பெற்று அதன் காரணமாக ஒரு தனியாள் ஒரு குறிப்பிட்ட நோய்க்கு இரையாகவும் நேரிடலாம். இவ்வாறு ஒரு குறிப்பிட்ட வகைக் குறைகளுக்கான முன் முடிவு படுத்தும் நிலை

---

83. நோய்--Ailment.
84. இடையில் நேர்ந்த—Acquired.
85. இளம்பிள்ளை வாதம்—Infantile paralysis.

பெற்றோர்களால் தம் குழவிகட்குக் கடத்தப் பெறலாம். ஆனால், அந்நிலை தம் குழவிகளிடமும் வளரும் என்பது பின்னர் ஏற்படும் சூழ்நிலைக் கூறுகளைப் பொறுத்ததாகும்.

தீப்பேற்றின் காரணமாக, சாதாரணமாக நல்ல உடல் நிலையுடனிருக்கும் ஒருவரிடமும் குறைபாடான ஜீன்கள் இருக்க ஏதுவுண்டு. தவிட்டு நிறக் கண்களையுடைய பெற்றோர்கட்கு நீல நிறக் கண்களையுடைய குழவிகள் பிறந்ததை மேலே குறிப்பிட்டோமல்லவா? இந்நிலை வேறு சிறப்பியல்புகளுக்கும் பொருந்தும். நன்னிலையிலுள்ள மக்களிடம் குறைபாடான ஜீன்கள் இருப்பதும் அவை தம்முடைய மரபுவழியினருக்கு இறங்குவதும் இனமேம்பாட்டியலின் அடிப்படைப் பிரச்சினைகளுள் ஒன்றாக இருந்துவருகின்றது. சாதாரணமாக நன்னிலையிலுள்ள ஒருவரிடம் மறைந்துள்ள குறையை அறுதியிடக்கூடிய திட்டமான முறை யாதொன்றும் இல்லை; பொதுவாக ஒரு தம்பதிகளிடம் எந்தவிதமான கடுமையான இயல்பிகந்த தன்மையும் இல்லாதிருந்து, அவர்களுடைய குடும்பத்திலும் மரபுவழியாக இறங்கும் எந்தவித நோய்களைக் காட்டக்கூடிய பதிவேடும் இல்லாதிருந்தால், அவர்கட்கு நல்ல குழவிகளே பிறக்கும் என்று கருதலாம்; அவர்கள் இருவரும் நன்னிலையிலிருந்து, அவர்களது ஒருவருடைய குடும்ப வரலாற்றில் நோய் இருப்பதாகத் தெரிந்தால், அந்நோய் சந்ததியினருக்கு இறங்குவது நோயின்வகை, அது மரபுவழியாக இறங்கும் முறை, அந்நோயால் தாக்குண்ட அண்மைக்கால உறவினர்களின் எண்ணிக்கை வேறு பல காரணங்கள் ஆகியவற்றைப் பொறுத்ததாகும்.

இருமல் நோய்[86] என்ன என்பதை நீ அறிவாய். முதலில் இந்நோய் மரபுவழியாக இறங்கும் ஒரு நோயாகக் கருதப்பெற்றது. பின்னர் இஃது ஒருவகைக் கிருமிகளால் (Tubercle bacillus) உண்டாகின்றது என்று கண்டறியப் பெற்றது. இந்நோய் பெரும்பாலும் வறுமை நிலையிலுள்ளவர்கள், சுகாதார வசதிக் குறைவுள்ள இடங்களில் வாழ்ப

86. இருமல் நோய்—Tuberclosis.

வர்கள் இவர்களிடமே அதிகமாகப் பரவுகின்றது; ஆயினும், இருமல் நோயுள்ள பெற்றேருக்குப் பிறக்கும் குழவிகளை இந்நோய் தாக்குவதற்கு அதிக வாய்ப்புண்டு. எனவே, இந்நோயாளிகள் தம்மிடம் இந்நோய் நீங்கும் வரையிலும் குழவிகளைப் பெருதிருப்பது நல்லது. இந்நோய் மரபுவழியாக இறங்கும் நோயாக இல்லாது போயினும், பொதுவாக இந்நோய் அதிகமான பேர்கள் பாதிக்கப் பெற்றிருக்கும் குடும்பங்களிலுள்ள ஒருவர் அங்ஙனமே பாதிக்கப் பெற்றிருக்கும் குடும்பங்களிலுள்ள ஒருவருடன் மணம் செய்துகொள்ளுதல் கூடாது; இவர்கட்குப் பிறக்கும் குழவிகளிடம் இந்நோய் எளிதாகப் பரவ ஏதுவுண்டு. தொடக்க நிலையில் இந்நோய் இருப்பின் அதனைச் சிகிச்சை மூலம் ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரக்கூடுமாதலின், அக் குடும்பங்களில் மணமகனையோ மணமகளையோ தேர்ந்தெடுப்பது தவருகாது.

புற்றுநோய்[87] மரபுவழியாக இறங்குவதுபற்றி இன்னும் தெளிவான கருத்து ஏற்படவில்லை. இந்நோயால் தாக்கப்படும் நிலைமை பெற்றேரிடமிருந்து பிள்ளைகட்கு இறங்குவதற்கு ஏதுவுண்டு. ஆனல், குழவிகள் அந்நோயால் தாக்குறுவர் என்று சொல்லுவதற்கில்லை. அவ்வாறு அவர்கள் தாக்குண்டாலும் தக்க சிகிச்சையினல் அதனைத் தடுத்துவிடலாம். இந்நோய் மரபுவழியாக இறங்கும் நோய் என்று இன்னும் நிலைநாட்டப் பெறவில்லை. இங்ஙனமே, பல்வேறு நோய்களை எளிதில் ஏற்கும் தன்மை மரபுவழியாக இறங்கும் தன்மையாக இருப்பினும், குழவிகள் அந்நோய்களால் பிடிக்கப்பெறுவர் என்று சொல்ல இயலாது. இந்த நிலைமையைச் சிகிச்சைமூலம் எளிதில் போக்கிவிடலாம்.

ஆணே பெண்ணே நெறிதவறிய வாழ்வினல் வெள்ளை[88], மேகநோய்[89] என்ற இரண்டு நோய்களைப் பெறுகின்றனர், இந்நோய்கள் புணர்ச்சியின் மூலம் ஆணிடமிருந்து பெண்

87. புற்றுநோய்—Cancer.
88. வெள்ளை—Gonorrhoea 89. மேகநோய்—Syphilis.

ணிற்கும், பெண்ணிடமிருந்து ஆணிற்கும் வருகின்றன. ஒவ்வொன்றையும் போக்குவதில் தனிப்பட்ட பிரச்சினைகள் உள்ளன. வெள்ளேயை மேகச்சூடு, வெட்டை என்ற பெயர்களாலும் வழங்குவர். இந்நோய் பாற்குறிகளையும் சிறுநீர் உறுப்புகளையும் பற்றித் தொல்லை தருவதாகும். இந்நோயின் கிருமிகள் குருதியினுள் புகுந்து உடலின் மற்றப் பகுதிகளைத் தாக்குதல் அரிது. இது மரபுவழியாகக் குழந்தைகட்கு இறங்கும் நோய் அன்று. ஆனால், பிறக்கும் குழவி இந்நோயினால் பீடிக்கப்பெறலாம். குழந்தை பிறக்கும் பொழுது இந்நோய் அதனைப் பற்றுகின்றது. தாயின் கருப்பை வாயிலும் யோனிக்குழலிலும் இந்நோய்க் கிருமிகள் இருந்தால், குழந்தை பிறக்கும்பொழுது இந்நோய்க் கிருமிகள் அதைப் பற்றுகின்றன. சாதாரணமாக, இந்நோய்க் கிருமிகள் குழந்தையின் கண்ணில் தங்கி அதில் வீக்கம் ஏற்பட்டுக் குருட்டுத்தன்மையையும் உண்டாக்கி விடுகின்றன. ஆயினும், மருத்துவர் தாய் கருவுயிர்த்தவுடன் குழந்தையின் கண்களைக் கிருமி போக்கும் திரவத்தினால் துடைத்துக் கண்ணைத் தூய்மையாக்கிவிடுகின்றார். கருவுயிர்க்கும்பொழுது வழக்கமாகச் செய்துவரும் இம்முறையினால் பெற்றோரிடமிருந்து இந்நோய் குழந்தையிடம் பரவுவது தடுக்கப்பெறுகின்றது.

மேக நோய் என்பது மிகவும் கொடுமையான நோயாகும். இஃது குறிப்பிட்ட பகுதியை மட்டிலும் தாக்குவதன்று. இஃது உடல் முழுவதையும் தாக்கும் கொடிய நோய். பொதுவாக இந்நோய் பிறப்புறுப்புகளில் அல்லது உடலின் வேறு பகுதிகளில் அழற்சியாகவோ புண்ணாகவோ தோன்றுகின்றது. ஆனால், விரைவில் அங்கிருந்து கிருமிகள் குருதி வட்டத்தினுள் புகுந்து உடலெங்கும் பரவுகின்றன. அவை உடலின் ஏதாவது ஒரு பகுதியில் தங்கி அங்கு அபாயகரமான விளைவுகளை உண்டாக்குதல் கூடும். இந்நோய்த் தொற்றின் தோற்றம் காணப்பட்ட பல ஆண்டுகள் கழிந்தபிறகும் இவ்விளைவுகள் நேரிடலாம். தக்க சிகிச்சை முறைகளை மேற்கொண்டு இந்நோயைப் போக்கா

விடில் இது குழந்தைக்கும் பரவும். பெரும்பாலும் இது தாயின் நஞ்சுக்கொடி மூலம் குழந்தைக்கு வரும். இந் நோயால்பிடிக்கப்பெற்ற தாய்மார்கட்கு அநேகமாகக் கருச் சிதைவு ஏற்படும்; ஏழு அல்லது பத்து கருச் சிதைவுகள் வரையிலும் கூட நேரிடலாம். இவர்கட்குக் குழந்தைகள் இறந்தும் பிறக்கும். இந்நோயினைத் தாங்கும் ஆற்றல் இளஞ்சூலுக்கு இருந்தால், குழந்தை நன்கு பிறந்துவிடும்; ஆனால், அதன் உடலில் இந்நோய் காணப்பெறும். இந் நோயும் பிறவி சார்ந்த நோயேயன்றி மரபுவழியாக வரும் நோய் அன்று.

இந் நோய்களால் பீடிக்கப்பெற்றவர்கள் இந் நோய் களைக் குணப்படுத்திக்கொள்ளாமல் திருமணம் புரிந்து கொள்ளுதல் கூடாது. இந்நோய் பிறருக்குப் பரவாது என்று மருத்துவரின் உறுதிபெற்ற பின்னரே திருமணம் புரிந்துகொள்ள வேண்டும். இந் நோய்களைப் போக்குவதற் குப் பல அரிய முறைகளும் மருந்துகளும் அண்மைக் காலத் தில் கண்டறியப் பெற்றுள்ளன. 'சல்பானிலமைடு', 'பென்சிலின்', 'டெர்ராமைசின்' போன்ற அரிய மருந்து களால் வெள்ளை நோயை ஒரு வாரத்திற்குள் குணப்படுத்தி விடலாம்; நோயாளி இந் நோயினைப் பிறருக்குத் தொற்று வதினின்றும் தவிர்க்கப்பெறலாம். மேக நோயை விரைவில் குணப்படுத்த முடியாது. பல மாதங்கள் விடாது செய்யப் பெறும் சிகிச்சையினால் இந்நோயினை முற்றிலும் போக்க லாம். இந் நோயின் அறிகுறிகள் தென்பட்டவுடன் சிகிச்சையைத் தாமதமின்றித் தொடர்ந்து செய்தால், நிரந் தரமாகவே இந்நோயினைப் போக்கிவிடலாம். சில ஆண்டு களாவது இந்நோய் நோயாளியிடம் தலைக்காட்டாது இருந்த பிறகுதான், அவர் திருமணம் புரிந்துக்கொள்ள வேண்டும். இந்நோயால் பீடிக்கப்பட்டவரை மிகக் கவனமாகக் கூர்ந்து ஆராயவேண்டும். மருத்துவர் உறுதியளித்த பின்னரே திருமணம்பற்றி நினைக்கவேண்டும்.

மேல் நாடுகளில்—குறிப்பாக அமெரிக்காவில்—மேற்கூறப்பெற்ற இரண்டு நோய்களாலும் பீடிக்கப்பெற்றவர்கள் திருமணம் செய்துகொள்ளக்கூடாது என்று சட்டத்தின்மூலம் தடுக்கப் பெறுகின்றது. திருமணம் புரிந்துகொள்ளும் ஒவ்வொருவரும் அரசினரிடம் உரிமைச்சீட்டு[90] வாங்கவேண்டும். இதை அரசினரிடமிருந்து பெறுவதற்குரிய விண்ணப்பத்துடன் தம்மிடம் 'மேகநோய்' இல்லை என்ற மருத்துவரின் சான்றிதழையும்[91] இணைக்கவேண்டும். மருத்துவரின் சான்றிதழ் விண்ணப்பம்செய்வோருக்கு ஒரு மாதத்திற்குள் செய்யப்பெற்ற குருதிச்சோதனையைப்பற்றிய அறிக்கையையும் குறிப்பிட்டுக்காட்டவேண்டும். முப்பதுநாட்களுக்கு மேற்பட்டால், மீண்டும் அவர் ஒரு குருதிச்சோதனைக்கு உட்படவேண்டும். இத்தகைய சட்டங்கள் மானிட இனம் இந்நோய்களால் பீடிக்கப்படுவதிலிருந்து காக்கப்பெறுவதற்குத் துணையாக அமைகின்றன. இன்றும் சில நாடுகளில் கருவுற்ற பெண்களும் குருதிச்சோதனைக்கு உட்படவேண்டும் என்ற சட்டமும் செய்யப்பெற்றுள்ளது. இதனால் பிறக்கப் போகும்குழவிகள் நோய்களினின்றும் காக்கப்பெறுகின்றன.

மன நோய்கள் மரபுவழியாக இறங்குகின்றனவா என்பதுபற்றி இன்னும் உறுதியான முடிவு ஏற்படவில்லை; இத்துறையில் இன்னும் கருத்து வேறுபாடுகள் உள்ளன. குழவிகள் பிறக்குங்கால் ஏற்படும் தீங்குகள், உள்ளக் கிளர்ச்சி அதிர்ச்சிகள், சுரப்பிகளில் ஏற்படும் சில கோளாறுகள் போன்றவைகளால் மனநோய்கள் உண்டாகின்றன என்று சொல்லப்பெறுகின்றது. எனினும், சில உள நோய்கள்[92] வலிப்பு[93] மந்தமதி போன்ற ஒரு சில மனக் கோளாறுகள் மரபுவழியாக இறங்கும் போக்கினைக் காட்டுவதாகப் பெரும்பாலான மருத்துவ அறிஞர்கள் கருதுகின்றனர். அண்மைக்

90. உரிமைச் சீட்டு—License.
91. சான்றிதழ்—Certificate.
92. உளநோய்—Psychosis.
93. வலிப்பு—Epilepsy.

காலத்தில் 'மூளையின் அலைகளை'[94] அளந்து வலிப்புநோய்களை ஆராயும் முறை கண்டறியப்பெற்றுள்ளது.

திருமணம் புரிந்து கொள்வோர் மரபுவழிபற்றிய கருத்துகளையும் சில முக்கிய நோய்களால் ஏற்படும் விளைவுகளையும் அறிந்துகொள்ள வேண்டும் என்று நான் கருதியதால் இவற்றை ஓரளவு சற்று விரைவாகக் கூறினேன். தங்கட்குப் பிறக்கப்போகும் குழவிகளின் நலனை எண்ணியும், நாட்டில் சிறந்த நோயற்ற குடிமக்களை உண்டாக்க வேண்டும் என்ற பொறுப்பைச் சிந்தித்தும் மணமக்கள் இச்செய்திகளைக் கட்டாயம் அறிந்துகொள்ள வேண்டும்; தோட்டத்காரன் அல்லது உழவன் நல்ல விரைகளையும் நல்ல விளைநிலத்தையும் தேர்ந்தெடுப்பதுபோல், நாமும் தேர்ந்தெடுக்க வேண்டுமல்லவா? மானிட இனம் செழித்து ஓங்குவதற்கு—அதற்கேற்ற வாய்ப்பினை நல்குவதற்கு—இக் கருத்துகள் ஓரளவு பெருந்துணை புரியும் என்று உணர்வாய் என்று எண்ணுகின்றேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

94. மூளையின் அலை—Brain wave.

# 6

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,
நலன். நலன் தெரிவிக்க.

இதுகாறும் எழுதிய ஐந்து கடிதங்களில் திருமணம் புரிந்துகொள்வோர்—மணமக்களாகப்போவோர்—கவனிக்க வேண்டிய பொருத்தங்களைப்பற்றிய சில கருத்துகளைத் தெரிவித்தேன். மேலும் சில பொதுக்கருத்துகளை இக் கடிதத்தில் கூறுவேன்.

**உறவினர்களிடையே திருமணம்:** சிலர் நெருங்கிய உறவினர்களிடையே பெண் எடுக்கின்றனர்; மாப்பிள்ளை பார்க்கின்றனர். உறவுமுறை விட்டுப்போகக்கூடாது என்றே உறவினர்களுள் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். சிலர் பணத்தையும் படிப்பையும் கருதி அந்நியரிடம் திருமண உறவு கொள்ளுகின்றனர். சிலர் சாதிவிட்டு சாதியில் மண உறவு கொண்டால் ஒட்டுவகை மாம்பழங்கள்போல் சிறந்த குழவிகளைப் பெறலாம் என்றும், இக் குழவிகள் உடல் வன்மையிலும் அறிவாற்றலிலும் சிறப்பாக வளர்வர் என்றும் தம் செயலை ஒரு கொள்கைபோல் பேசுகின்றனர். அத்தை மகன், அத்தை மகள், மாமன்மகள், மாமன் மகன், அக்காள் மகள் போன்ற நெருங்கின உறவினர்களுக்குள் சம்பந்தம் செய்துகொண்டாலும் மரபுவழிச் சட்டங்கள் ஒரு மாதிரியாகத்தான் செயல் புரிகின்றன. தாயும் தந்தையும் மிக நெருங்கிய உறவினர்களாக இருப்பின் குடும்பக் கூறுகள் தலைகாட்டும் தற்செயல் அதிகப்படுகின்றது. இத்தகைய சிறப்பியல்புகள் சிறப்பானவையாக இருந்தால் அவை குழவிகட்கு நன்மையே பயக்கும். ஆனால், இவை உடற்கூறுகளிலும் மனப்பண்புகளிலும் குறைபாடுடையனவாக இருப்பின் குழந்தைகள் வேண்டப்பெறாத கூறுகளை மரபுவழியாகப் பெற நேரிடும். சில குடும்பங்களில் நெருங்கின சம்பந்தங்

களினால் சிறந்த குழவிகள் பிறக்கின்றன; சில குடும்பங்களில் அத்தகைய சம்பந்தங்கள் குறைபாடான பண்புகளுடன் குழவிகள் தோன்றக் காரணமாகிவிடுகின்றன. எனக்குத் தெரிந்த ஒரு வழக்கறிஞரின் குடும்பத்தில் அம்மையார் பிறவிச்செவிடு; வழக்கறிஞரிடம் எந்தவிதமான குறைபாடுகளும் இல்லை. அக் குடும்பத்தில் எல்லா ஆண் பிள்ளைகளும் செவிடர்களாகவே பிறந்தனர்; பெண் குழவிகளிடம் அத்தகைய செவிட்டுத்தன்மை இல்லை. இன்னொரு குடும்பத்தில் ஆண் பிள்ளைகள் யாவரும் தாயின் முகக்குறிகளையும், பெண் பிள்ளைகள் யாவரும் தந்தையின் முகக் குறிகளையும் கொண்டுள்ளனர். நான் அறிந்த மற்றொரு குடும்பத்தில் நான்கு ஆண் பிள்ளைகளும் இரண்டு பெண் பிள்ளைகளும் செவிடர்கள். அவர்களுடைய பெற்றோர்களிடம் இக் குறைபாடே காணப்பெறவில்லை. இவர்களிருவரும் அத்தை மகன், மாமன் மகள் என்ற முறையில் உறவுடையவர்கள்; இவர்கள் மரபுவழியை நோக்கினதில் இருசாரார் வழியிலும் பலரிடம் செவிட்டுத் தன்மை இருந்ததாகத் தெரிகின்றது. ஆகவே, உறவினர்களுக்குள் செய்யப்பெறும் திருமணம் ஒவ்வொன்றையும் தனித் தனியாக ஆராய்ந்தே செய்யப்பெறுதல் வேண்டும். இயன்றவரை இத்தகைய மிக நெருங்கிய சம்பந்தம் செய்துகொள்ளாதிருத்தல் நன்று. ஆனால் இத்தகைய சம்பந்தமே கூடாது என்று சொல்லுவதற்குமில்லை.

மேற்கூறியவற்றிலிருந்து இனமேம்பாட்டியலின் அடிப்படையில் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் ஏதாவது தரப்படுத்திய[95] விதிகள் நமக்குத் துணைபுரியக் கூடுமா என்று நீ வினவலாம். சிறந்த குழவிகளைப்பெற வேண்டும் என்ற நன்னோக்கத்தில் ஒருவர் இனமேம்பாட்டியலின் அடிப்படையில் வாழ்க்கைத்துணையைத் தேர்ந்தெடுக்க விரும்பினால், அவர் உடல்வன்மையிலும் உளப்பாங்கிலும் நன்னிலையிலுள்ள ஒருவரையே தேர்ந்தெடுக்கவேண்டும்.

95. தரப்படுத்திய—Standardised.

ஆனால், ஒருசிலருக்கே இம்முறை ஒப்புக்கொள்ளத்தக்கதாக இருக்கும். காதல் உலகில் வாழ்வோருக்கும், பணத்தாசை மிக்கோருக்கும் இம்முறை ஏற்காது. இந்த விதிகளின் அடிப் படையில் மதனன் மலரம்புகளை எய்யான்; அவன் தன் விருப்பப்படியே, சுயேச்சையாகவே தன் செயலைச் செய்து வருவான்; எனினும், நாம் ஓரளவு அறிவுநிலையில் செயற்பட லாம். உடற்குறைபாடும் உளக்குறைபாடும் உள்ள குடும்பங் களில் சம்பந்தம் செய்து கொள்வதைத் தவிர்ப்பதே அறிவு டைமையாகும். தாய்வழியாகவும் தந்தைவழியாகவும் உள்ள 'ஜீன்கள்' புதிதாகப் பிறக்கப்போகும்குழந்தையிடம்ஒன்றாகக் கலக்கும்போது அவை இரண்டு வகையும் முற்றிலும் வேறு பட்ட இருப்புச்சரக்கிலிருந்து வந்தவையாகவும் முற்றிலும் வேறுபட்டுச் செல்லும் பண்புகளையுடையனவாகவும் இருப் பின், சிறந்த பலனை எதிர்ப்பார்க்கலாம். எனவே, நல்ல பண்புகளைக் கொண்டகுடும்பத்தில் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் முதலிடம் தருவதே விரும்பப்படுவது. இனமேம்பாட்டியில் இயக்கத்தின் முக்கிய நோக்கங்களுள் ஒன்று, மக்களிடம் இனமேம்பாட்டியல் மனப்பான்மையை உண்டாக்குவதாகும்.

**நல்ல மானிட இனம் :** இனமேம்பாட்டியலின் முக்கிய நோக்கம் நல்ல, உயர்ந்த, மானிடஇனத்தை உண்டுபண்ணு வதாகும். சாதாரண பசுக்களிடமிருந்தும் காங்கேயம், ஒங் கோல் பொலிகாளைகளினால்சிறந்த கன்றுகளைப்பெறுகின்றே மல்லவா? அதே முறை மானிட இனத்திற்கும் பொருந்து மன்றோ? பிரான்சிஸ் கால்ட்டன்[96] என்ற ஆங்கில அறிவியலறி ஞர்தான் இந்த இனமேம்பாட்டியல் இயக்கத்தைத் தோற்று வித்தவர். மக்களிடம் காணப்பெறும் பொரும்பாலான வேறுபாடுகள் பிறப்பிலேயே அமைந்தவை என்றும், நல்ல குழவிகளைப் பிறப்பித்து மானிட இனத்தையே உயர்வுடைய தாகச் செய்ய முடியும் என்றும் அவர் வற்புறுத்தினர். இன மேம்பாட்டியலறிஞர்களின் கருத்துப்படி சிலர் உடல்

---

96. பிரான்சிஸ் கால்ட்டன்—Francis Galton.

வன்மையிலும் உளவளத்திலும் உயர்வுடையவர்களாக உள்ளனர். மற்றவர்கள் தாழ்வுடையவர்களாக இருக்கின்றனர். உயர்ந்த வகையைச் சார்ந்தகுழுவினர் தம்முடைய உயர்ந்த தரநிலைகளினாலும்[97] முன்நோக்கினாலும்[98] தம்முடைய சந்ததியினரின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொள்ளுகின்றனர்; தாழ்ந்தவகையைச் சார்ந்த குழுவினர் மிக வேகமான அளவில் இனப்பெருக்கம் செய்கின்றனர். உயர்ந்த வகையினர் பல்வேறு சமூகச் சலுகைகளாலும் பிற உதவிகளாலும் அதிகமாக இனப்பெருக்கம் செய்யத் தூண்டப்பெறல் வேண்டும் என்றும், தாழ்ந்தவகையினருக்கு இனமேம்பாட்டியல்பற்றிய கல்வியை அளித்து இனப்பெருக்கத்தைக் குறைக்குமாறு அறிவுறுத்த வேண்டும் என்றும் இனமேம்பாட்டியலறிஞர்கள் கூறுகின்றனர்.

**உயிரியல் அடிப்படை:** மேற்கூறியவற்றிலிருந்து ஓர் உண்மை உனக்குப் புலனாகலாம். இனமேம்பாட்டியலறிஞர்கள் உயிரியல் அடிப்படையில் மக்களைப் பாகுபாடு செய்யும் வரை அவர்களுடைய முடிவுகள் சரியாக இருக்கலாம்; இருக்கும். ஆனால், அவர்கள் பிறப்பினாலும் சாதியினாலும் உயர்ந்தவர்கள் என்றும், தாழ்ந்தவர்கள் என்றும், முற்போக்குச் சமூகத்தினர் என்றும், பிற்போக்குச் சமூகத்தினர் என்றும் பாகுபாடு செய்யத் துணிந்தால், அவர்களுடைய முறைகள் கண்டனத்துக்குள்ளாக நேரிடும். இன்றையநடைமுறைக்கு அது முற்றிலும் பொருந்தாமலும் போய்விடும். இன்றைய சமூகத்தில் பெரும்பாலும் அத்தகைய வேறுபாடுகள் பொருளாதாரச் சமூக அடிப்படையிலேயே அமைந்திருப்பது கண்கூடு. இன்று உயர்ந்த பதவியிலுள்ளவர்கள் யாவரும் தம்முடைய இயல்பாக அமைந்த திறன்களினால் அப்பதவிகளை அடைந்தனரா, அல்லது சாதகமான சூழ்நிலைக்கூறுகளின் காரணமாக (எ-டு. நல்ல கல்வி, நல்ல வாய்ப்புகள், சிறந்த உறவுகள் அல்லது தொடர்புகள் முதலியன) அப்பதவிகளை பெற்றனரா என்பதை உறுதியாக

97. தரநிலைகள்—Standards. 98. முன்நோக்கு-Foresight.

அறுதியிட்டுச் சொல்ல இயலாது. இன்று பிற்போக்குள்ள சமூகத்தினரும் தொடக்கத்திலிருந்தே சரியான பொருளாதாரநிலை, சமூகநிலை, சுற்றுப்புறச் சூழ்நிலை முதலியவை அமைந்த காரணத்தால் மிக உயர்ந்த பதவிகளில் அமர்ந்து மிகத் திறமையாகவும் பணியாற்றி வருவதைக் காணலாம். இவர்களுள் சிலர் முற்போக்குச் சமூகத்தினரைவிடவும் சிறப்புடன் திகழ்வதையும் பார்க்கலாம். எனவே, இக்காலத்தில் இனமேம்பாட்டியலின் அடிப்படையில் செயற்படுவதைவிட எல்லோருக்குமே கல்வி வாய்ப்பு, ஏனைய வாய்ப்புகளை நல்கினால் நிறைந்த பலனை எதிர்பார்க்கலாம் என்று கருதியே அரசினரும் எல்லோருக்கும் இயன்றவரை சமமானவாய்ப்புகளை நல்குவதில் அதிகமாக அக்கறை காட்டிவருகின்றனர்.

திருமணப் பொருத்தத்தைப்பற்றிய ஆராய்ச்சியில் நீ பல செய்திகளைத் தெரிந்து கொண்டாய். இக்கடிதங்களை உன் வாழ்க்கைத் துணைவியாகவருபவளுக்கும் காட்டி அவளையும் படிக்கச் செய்க. அவளும் படித்த பெண்தான் என்றும் நீ எழுதியிருந்தாய். அடுத்து எழுதும் கடிதங்களில் உயிரியல் அடிப்படையில் திருமணத்தைப்பற்றிச் சில கருத்துகளைத் தெரிவிப்பேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்

இயல்—2

# அறிவியலடிப்படையில் திருமணம்

'அறிவியலடிப்படையில் திருமணம்' என்ற இப்பகுதி ஆண், பெண் இனப்பெருக்க மண்டலங்களையும், அவற்றின் செயல்களையும் ஓரளவு தெளிவாக விளக்குகின்றது. மானிட உடலில் இனப்பெருக்க உறுப்புகளடங்கிய மண்டலத்திற்கும் ஏனைய உறுப்புத் தொகுதிகட்கும் உள்ள வேற்றுமை வெளிப்படை. மானிட உயிரியிடம்[1] நரம்பு மண்டலத்தின் இணக்கத்தால் செயற்படும் உணவு மண்டலம் குருதியோட்ட மண்டலம், சுவாசிக்கும் மண்டலம், பிற மண்டலங்கள் ஆகியவற்றுடன் கூடிய மிகச் சிக்கலான உறுப்புகளடங்கிய தொகுதிகள் தனியாளைக் காப்பாற்றுவதில் பணியாற்றுகின்றன; ஆனால், பிறப்புறுப்புகள் அடங்கிய இனப்பெருக்க மண்டலம் இனப்பெருக்கத்தை வளர்ப்பதில் மட்டிலுந்தான் பணியாற்றுகின்றது.

ஆண் பிறப்புறுப்புகள் அடங்கிய தொகுதிக்கும் பெண் பிறப்புறுப்புகள் அடங்கிய தொகுதிக்கும் நெருங்கிய ஒற்றுமை நயம்[2] காணப் பெறுகின்றது. இந்த ஒற்றுமை நயத்தின் முக்கியத்துவத்தை விளக்கும் முறையில், அவை செயற்படும் அடிப்படையில், பிறப்புறுப்புகள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

---

1. மானிட உயிரி—Human organism.
2. ஒற்றுமை நயம்—Analogy.

1. உயிரணுக்களை[3] உற்பத்தி செய்யும் காமச் சுரப்பிக்கள்[4] ஆணிடம் இவை விரைகள் என்றும், பெண்ணிடம் இவை சூற்பைகள் என்றும் வழங்கப்பெறுகின்றன. பொதுவாக இவற்றை இன கோளங்கள்[5] என்றும் வழங்குவர்.

2. இந்த உயிரணுக்களை உரிய இடங்களுக்கு அனுப்பிக் கருவுறுதலைச் சாத்தியப்படச் செய்யும் தூம்புகள்:[6] ஆணிடம் விந்தேறு குழல், எபிடிடைமிஸ், விந்து பாய்ச்சும் தூம்பு, சிறுநீர்ப் புறவழி ஆகியவையும், பெண்ணிடம் கருக் குழலும் இங்ஙனம் செயலைப் புரிகின்றன.

3. கருவுறுதலுக்காக விந்தணுக்களை முட்டையிடம் சேர்க்கும் இணைக்கும் உறுப்புகள்: ஆணிடம் ஆண்குறியும் பெண்ணிடம் யோனிக் குழலும் இங்ஙனம் சேர்க்கும் பணியைப் புரிகின்றன; கருப்பை கருவுற்ற முட்டையைத் தன்னிடம் இருத்திக் குழந்தையாக வளரும்வரை அதனைப் பாதுகாக்கின்றது.

இம் முறைப்படி ஆண் பிறப்புறுப்புகள் செயற்படுவதையும் அவற்றுடன் தொடர்புள்ள பிற செய்திகளையும், 'ஆண் உறுப்புகள்' என்ற தலைப்பின்கீழ் மூன்று கடிதங்களிலும் (7-9) பெண் பிறப்புறுப்புகள் செயற்படுவதையும் அவற்றுடன் தொடர்புள்ள செய்திகளையும் 'பெண் உறுப்புகள்' என்ற தலைப்பின்கீழ் ஐந்து கடிதங்களிலும் (10-14) இப்பகுதி ஓரளவு தெளிவாக விளக்குகின்றது.

---

3. உயிரணுக்கள்—Germinal cells.
4. காமச் சுரப்பிகள்—Sex glands.
5. இன கோளங்கள்—Gonads.
6. தூம்புகள்—Ducts.

## ஆண் உறுப்புக்கள்

# 7

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனேயாகுக

சென்ற கடிதத்தில் உயிரியல் அடிப்படையில் திருமணத்தைப்பற்றிச் சிலகருத்துகளைத் தெரிவிப்பதாகக் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? மானிட இனப்பெருக்க மண்டலத்தைப்பற்றிய கருத்துகளே இவ்வாராய்ச்சியாகும். அறிவியல் பாடத்தை விருப்பப் பாடமாக எடுத்துப் பட்டப் படிப்புவரைப் படிக்கும் மாணுக்கர்கட்கும் மானிட இனப் பெருக்க மண்டலத்தைப்பற்றிய கருத்துகளை அறிந்து கொள்ளும் வாய்ப்பில்லை; பாடத்திட்டத்தில் அப்பகுதி சேர்க்கப் பெறவும் இல்லை; பட்டப் படிப்புவரைப் படிக்கும் ஏனைய மாணுக்கர்கட்கும் மானிட உடலைப்பற்றிய சரியான கருத்துகளைப்பெற வாய்ப்பில்லை. பிற்குறிப்பிட்ட மாணுக்கர்களுள் நீ ஒருவன் என்பதை நான் அறிவேன். ஆகவே, நீ "மானிட உடல்"[7] என்ற தலைப்பில் என்னுல் எழுதப்பெற்றுள்ள நூலினை நன்ருகப் படித்து அதன் அமைப்பினைத் தெளிவாக அறிந்து கொள்வாயாக; உன் துணைவியையும் படிக்குமாறு தூண்டுவாயாக.

திருமணம் புரிந்து கொள்ளப்போகும் ஒவ்வொரு நம்பியும் நங்கையும் ஆண்—பெண் பிறப்புறுகளின் அமைப்பினையும், அவை செயற்படும் முறையினையும், இனப்பெருக்கத்தின் இயல்பினையும் சரியாகப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

---

7. மானிட உடல் (புதுமைப் பதிப்பகம், காரைக்குடி: சென்னை-17.)

எல்லா உறுப்புகளிலும் சிறந்தது பாலுறுப்பு ஆகும் என்பது உயிரியல் உண்மையாகும். எல்லா உறுப்புகட்கும் அஃது உயிர் போன்றதாதலின் அதனைப் பண்டையோர் 'உயிர்நிலை' என்று பெயர் சூட்டி அதன் நுட்பத்தைப் புலப் படுத்தினர். இந்த உயிர் நிலையின் நுட்பங்களைச் செவ்வனே ஆய்ந்து அதன் இயல்புகளை எவரும் உணரும் முறையில் அறிவுறுத்தியுள்ளனர் உயிரியல் அறிஞர்கள். திருமணத் திற்கு முன்னர் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் இவற்றை நன்கு உணர வேண்டியது மிகவும் இன்றியமையாதது.

**இனப்பெருக்கத்தில் ஆணின் பங்கு:** ஆணின் பால் - உயிரணுக்களாகிய[8] விந்தணுக்களும், பெண்ணின் பால் உயிரணுக்களாகிய முட்டைகளும் ஒன்றுக இணைவதே இனப் பெருக்கத்தின் அடிப்படையாகும். எனவே, இனப்பெருக்கத் தைப் பொறுத்தமட்டிலும் பாலுறுப்புகளின்[9] முதல்நிலைச் செயல் அந்தந்தப் பால் – உயிரணுக்களை உண்டாக்குவதே யாகும். எனினும், ஆணின் பங்கு இந்த உயிரணுக்களை உண்டாக்குவதுடன் நின்று போவதில்லை; அவ் உயிரணுக் களைப் பெண் உயிரணுக்களுடன் சேரக்கூடிய மிக நல்ல வாய்ப்புகள் தரக்கூடிய இடத்தில் கொண்டு செலுத்தும் பொறுப்பும் அவனிடம் இயற்கையில் அமைந்து கிடக்கின் றது. கீழ்நிலை உயிர்களுள் ஒரு சிலவற்றில் இப்பொறுப்பு அமையவில்லை. எடுத்துக்காட்டாக, சில கடல்வாழ்பிராணி களின் ஆணினமும் பெண்ணினமும் தாம் இனப்பெருக்கத் திற்கு ஆயத்தமாக இருக்கும்பொழுது தம்முடைய பால் உயிரணுக்களைக் கடல்நீரில் விட்டுவிடுகின்றன. இங்கு இரண்டு பாலினத்திற்கும் நேர்த் தொடர்பு இல்லை; விந்தணுக்களும் முட்டைகளும் சந்திக்கும் வாய்ப்பினைத் தற்செயலே அறுதியிடுகின்றது. எனினும், மேல் நிலை உயி ரினங்கள் அனைத்திற்குமே ஆணின் பால் – உயிரணுக்கள் பெண்ணின் உடலருகிலோ உடலினுள்ளோ கொண்டு

8. பால்-உயிரணுக்கள்—Sex cells.
9. பாலுறுப்பு—Sex organ.

செலுத்துவதற்கேற்றவாறு பிரத்தியேகமாக உறுப்புகள் அமைந்துள்ளன. இதனால் அவை முட்டையணுக்களுடன் இணைவது முற்றிலும் உறுதியாகின்றது. மானிட இனத்தில் இந்த உயிரணுக்கள் பெண்ணின் பிறப்புறுப்புகளின் வழியில் உட்புறத்தில் முட்டையைச் சந்திக்கின்றன. எனவே ஆணின் பிறப்புறுப்புகளை[10] ஆராயுங்கால் விந்தணுக்களை உண்டாக்கும் உறுப்புகளையும், அவ்வணுக்களைப் பெண்ணிடம் கொண்டு சேர்க்க உதவும் உறுப்புகளையும் வேறுபடுத்தி அறிந்துகொள்ள வேண்டும்.

**ஆணின் இனப்பெருக்க மண்டலம் :** இங்குள்ள படத்தைக் கூர்ந்து நோக்கி (படம்-6) ஆண் இனப்பெருக்க மண்டலத்தின் பொறிநுட்பத்தைத்[11] தெளிவாக அறிந்துகொள்வாயாக. இடுப்பிற்குக் கீழ் அதாவது இடுப்பெலும்புக் குழியினுள்[12] வயிற்றின் கீழ்ப்பகுதியில் அமைந்து கிடக்கும் உறுப்புகளின் பக்கவாட்டுத் தோற்றத்தைப் படம் காட்டுகின்றது. வெளிப்புறமாகவுள்ள பிறப்புறுப்புகளையும் இந்தப் படத்தில் காணலாம்.

படத்தின் வலப்பக்கத்தில் முதுகு எலும்புகள் கூராகச் சுருங்கிக் கீழாக வருவதைக் கவனித்திடுக. அந்த எலும்புக்கு அடுத்தது குடல்களின் அடிப்பகுதி; மலக்குடல் என்பது. அது மலவாய்[13] மூலம் வெளித் தொடர்பு கொண்டுள்ளது; மலக்குடலுக்கு முன்னால் சிறுநீர்ப்பை அமைந்துள்ளது; சிறுநீரகங்களில்[14] (படத்தில் இப்பகுதி காட்டப்பெறவில்லை) சிறுநீர் உண்டாகின்றது, அவை வயிற்றின்மேற்பகுதியில் பக்கத்திற்கு ஒன்றாக உள்ளன. ஒவ்வொரு நீரகமும் சிறுநீர்ப்பையுடன் சிறு நீர்க்குழல்[15] எனப்படும் ஒரு மெல்லிய

---

10. பிறப்புறுப்புகள்—Genital Organs.
11. பொறிநுட்பம்—Mechanism.
12. இடுப்பெலும்புக்குழி—Pelvis.
13. மலவாய்—Anus.
14. சிறுநீரகம்—Kidney.
15. சிறுநீர்க்குழல்—Ureter

குழல்மூலம் சேர்ந்துள்ளது. சிறுநீரகங்களில் சிறுநீர் தொடர்ந்தாற்போல் உற்பத்தியாகிக் கொண்டே இருக்கின்றது. அது சிறிது நேரத்திற்கு ஒரு தடவை சில துளிகளாக சிறுநீர்ப்பையில் சேர்கின்றது. அச்சிறுநீர்ப் புறவழி




படம்—6: ஆண் பிறப்புறுப்புகளின் அமைப்பு
(பக்கவாட்டுத் தோற்றம்)

1. முன்தோல்; 2. சிறுநீர்ப் புறவழி; 3. ஆணுறுப்பு; 4. விந்தேறுகுழல்; 5. இடுப்பெலும்பு; 6. சிறுநீர்ப்பை; 7. முதுகெலும்புத் தொடர்; 8. விந்துப் பைகள்; 9. புராஸ்டேட் சுரப்பி; 10. மலக்குடல்; 11. எருவாய்; 12. எபிடிடைமிஸ்; 13. விரைகள்; 14. விரைப் பை.

யாக[16] வெளிப்படும்வரை அப்பையில்தங்குகின்றது; அஃதாவது, அப்பை ஒரு நீர்த்தேக்கம் போல் செயற்படுகின்றது.

16. சிறுநீர்ப் புறவழி—Urethra.

இந்தப் பையின் கீழும் இந்தப் பைக்கும் மலக்குடலுக்கும் இடையிலும் உள்ள பல உறுப்புகள்தாம் இனப்பெருக்க மண்டலத்தின் ஒரு பகுதியாகும். சிறுநீர் மண்டலத்திற்கும் பிறப்புறுப்புகளுக்கும் பிரத்தியேகமான தொடர்பு மனிதனிடம் அமைந்துள்ளது. உடலுறுப்பியல் முறையில் சிறுநீர் உறுப்புத் தொகுதியும் பிறப்புறுப்புத் தொகுதியும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. பெண்ணுடன் இணைக்கும் உறுப்பாகிய[17] ஆண்குறி[18] யின் பெரும்பகுதி நெடுகவும் அமைந்திருக்கும். சிறுநீர்ப்புறவழி சிறுநீர்மண்டலத்தின் புறவாயிலாகும்; அது சிறுநீரை வெளிப்படுத்துவதுடன் புணர்ச்சியின் பொழுது உண்டாக்கும் விந்துவையும் வெளியிற் கொண்டு வருவதற்குத் துணையாக இருக்கின்றது. இந்த இரண்டு மண்டலங்களுடன் நெருங்கிய தொடர்புடைய வேறு உறுப்புகளும் உள்ளன. அவை புராஸ்டேட் சுரப்பி[19], விந்துப் பை[20] என்பவை. இவற்றைப் பின்னர் விளக்குவேன்.

விந்துப் பாய்மம்: புணர்ச்சியின் பொழுது வெளிப்படும் விந்து என்பது என்ன, அஃது எப்பொருள்களால் ஆனது, அப் பொருள்கள் எங்கெங்கிருந்து வருகின்றன என்பதை அறிந்துகொள்ள அவாவுடையவனாக இருப்பாய் என்றுகருதுகிறேன். அதை முதலில் நன்கு தெரிந்துகொள்ளவும் வேண்டும். விந்துவிலுள்ள முக்கிய பகுதி விந்தணுக்களே; ஆனால் விந்துவின் பெரும் பகுதி புராஸ்டேட் சுரப்பி, விந்துப் பைகள் ஆகிய இரண்டிடங்களிலிருந்தும் உண்டாகும் சுரப்பு நீர்களேயாகும்[21]. புணர்ச்சியில் விந்து வெளியாகுங்கால் இந்தச் சுரப்பு நீர்கள் ஒருங்கு சேர்ந்து விந்துவாக வெளியேறுகின்றன.

---

17. இணைக்கும் உறுப்பு—Copulative organ.
18. ஆண்குறி—Penis.
19. புராஸ்டேட் சுரப்பி—Prostate gland.
20. விந்துப் பை—Seminal vesicle.
21. சுரப்பு நீர்—Secretion.

விரைகள்: விந்தணுக்கள் விரைகளில்[22] உண்டாகின்றன. மனிதனிடம் வலப்புறம் ஒன்றும், இடப் புறம் ஒன்றுமாக இரண்டு விரைகள் உள்ளன. இவை வழுவழுப்பான, வெண்மைநிறமுள்ள, முட்டைவடிவமான இரப்பர்போன்ற உறுப்புகளாகும். அவை கிட்டத்தட்ட சிறிய கோழி முட்டையின் பருமன் இருக்கும். அவை விரைப் பையில் அமைந்துள்ளன. இந்த விரைப் பையில்[23] இரண்டு விரை




படம்—7: விரைப்பைகளில் விரைகளின் இருப்பைக் காட்டுதல்.

1. விரைப்பைகள். 2. விரைகள். 3. விந்து நரம்பு. 4. ஆணுறுப்பு.

களும் விந்து நரம்பு[24] எனப்படும் ஒருவித நரம்பில் ஆண்குறிக்குப் பின்புறமாகத் தொங்கிய நிலையிலுள்ளன. இதனை படம் (படம்-7)விளக்குகின்றது. விந்தேறு குழலும்[25] அஃதுடன் சேர்ந்திணைந்துள்ள அமைப்புகளும் குருதிக்குழல்கள், ஊனீர் குழல்கள்[26] நரம்புகள் முதலியன) சேர்ந்தமைந்த தொகுதியே விந்து நரம்பு என்று வழங்கப் பெறுகின்றதை

22. விரை—Teste.
23. விரைப் பை—Scrotum. 24. விந்து நரம்பு—Spermatic cord. 25. விந்தேறு குழல்—Vas deferens.
26. ஊனீர்க் குழாய்—Lymphatic vessel.

அறிக: ஒவ்வொரு விரையும் கிட்டத்தட்ட 1½–2 அங்குல நீளமுள்ளதாகவும், ஓர் அங்குல கனமுள்ளதாகவும் உள்ளது; அதன் எடையும் கிட்டத்தட்ட ½–1 அவுன்சு இருக்கும்; இந்த அளவுகள் மனிதருக்கு மனிதர் வேறுபடும். இடப்புற விரை வலப்புற விரையைவிடச் சற்றுப் பெரிதாக இருக்கும். சற்று அதிகக் கீழாகவும் தொங்கும். ஒவ்வொரு விரையும் எண்




படம்—8 விரையும் அதனுடன் அமைந்த குழலும்
1. விரை; 2. எபிடிடைமிஸ்; 3. விந்தேறுகுழல்.

ணற்ற மிக மிகச் சிறிய, தொடக்க நிலை காணப்பெறாத சுருண்ட நிலையிலுள்ள சிறு குழல்களாலானது. இதைப்படம் (படம்–8) விளக்குகின்றது. படத்தில் ஒரு விரைவும் அதனோடமைந்த குழலுமே காட்டப்பெற்றுள்ளது. இந்தக் குழல்களில்தான் விந்தணுக்கள் உண்டாகின்றன. வலைப் பின்னல் போல் அமைந்து சுருண்டு கிடக்கும் குழல்களை இரண்டு

விரைகளிலிருந்தும் எடுத்து அளந்தால் அவை 5200 அடிக்கு மேல் நீளம் உள்ளவையாம்! கிட்டத்தட்ட ஒரு மைல் நீளம்!

விரைகளில் விந்தணுக்கள் ஏதாவது ஒரு குறிப்பிட்ட பருவத்தில் உண்டாகின்றனவா, அல்லது தொடர்ந்து உற்பத்தியாகிக்கொண்டே இருக்கின்றனவா என்ற ஐயம் உன்பால் எழலாம். கீழ்நிலை உயிர்ப் பிராணிகளிடம் விந்தணுக்கள் ஒரு குறிப்பிட்ட பருவகாலத்தில்தான்—ஆண்டில் ஒரு சில மாதங்களே—உற்பத்தியாகின்றன. ஏனைய மாதங்களில் இனப்பெருக்கத்தைப்பொறுத்தமட்டிலும் விரைகள்செயற்படுவதில்லை. எனினும், பெரும்பாலான உயிரினப் பிராணிகளிடம் ஆண்டு முழுவதும் விந்தணுக்கள் உற்பத்தியாகிக் கொண்டேயுள்ளன. மனிதன் இந்த இனத்தைச் சேர்ந்தவனாதலின், அவனிடம் சதா இந்த உயிரணுக்கள் உற்பத்தியாகின்றன. இதனால்தான் மனிதன் கலவியை ஒரு கலையாக வளர்த்துவிட்டானா என்று கருத வேண்டியுள்ளது! அது கிடக்க.

இந்த விரைகள் விந்தணுக்களை யுண்டாக்குவதுடன், வேறு ஒரு பிரத்தியேகமான 'ஹார்மோன்'[27] என்ற சுரப்பு நீரினையும் உண்டாக்குகின்றது. இது விந்துவினின்றும் வேறானது. இந்த நீர் குருதியினுள் நேராகக் கலக்கின்றது; இவ்வாறு கலப்பதனால் தனியாளிடம்[28] இது குறிப்பிடத்தக்க உடல், உள சிறப்பியல்புகளை விளைவிக்கின்றது. விந்தணுக்களும் ஹார்மோன்களும் விரைகளில் உண்டானபோதிலும் அவை அவற்றின் வெவ்வேறு பகுதிகளில் உண்டாகின்றன. இரண்டு பொருள்களும் தன்மையிலும் செயலிலும் முற்றிலும் வேறுபட்டவை.

விரைப்பைகள்: சிலசமயம் விரைப்பை பெரிதாகவும் சில சமயம் சிறிதாகவும் காணப்படுகின்றதல்லவா? உண்மையில் விரைகள் எப்பொழுதும் அளவில் பெரிதானவை அல்ல.

---

27. ஹார்மோன்—Hormone
28. தனியாள்—Individual

விரைப்பையே விரியவும் சுருங்கவும் செய்கின்றது. வெப்பமான காலங்களில், அல்லது வெந்நீர்க் குளியலுக்குப் பிறகு, விரைப்பை நீண்டு கீழாக இறங்குகிற நிலையில் விரைகளைக் காணலாம். குளிர் காலங்களில், விரைப் பையின் தசைகள் சுருங்கி விரைப் பைகள் உடலின் அருகே மேல் நோக்கிக் கொணரப்படுகின்றன. இக் காரணங்களால்தாம் விரைகள் சில சமயம் பெரியனவாகவும் சில சமயம் சிறியனவாகவும் இருப்பனபோல் காணப்பெறுகின்றன; விரைகளைச் சரியான வெப்ப நிலையில் வைத்திருக்க வேண்டியே இந்தப் பொறியமைப்பு செயற்படுகின்றது. விரைகள் வெப்பத்தையும் குளிரையும் மிக நுட்பமாக உணரக்கூடியனவாதலின், அவை சுற்றுப்புற மாற்றங்களுக்கேற்பப் பாதுகாக்கப் பெறல் வேண்டும்; இப் பாதுகாப்பை இயற்கை செய்கின்றது. விரைப்பையின் வெப்பநிலை நம்முடைய உடலின் உள்வெப்ப நிலையைவிட சில சுழிகள்[29] குறைவாகவேவுள்ளன. விரைகள் சரிவரச் செயற்படுவதற்கு இந்த வெப்பநிலை மிகவும் இன்றியமையாதது. ஒருவித முயல்களின் விரைப்பைகளின்வெளிப்புறத்தில் பதினைந்து நிமிடநேரம் வெப்பத்தினைக் காட்டுவதனால் விரைகள் விந்தணுக்களை உண்டாக்கும் செயலுக்குத் தீங்குநேரிடுகின்றது என்றும், இதுமலட்டுத்தன்மையையே[30] உண்டாக்கக் கூடுமென்றும் மெய்ப்பிக்கப்பெற்றுள்ளது.

சில சமயம் ஒரு சில குழவிகளிடம் ஒரு விரை அல்லது இரண்டு விரைகளும் காணப்பெறுதிருக்கலாம். இந்நிலை ஐந்நூறில் ஒருவருக்கு நிகழலாம். இளஞ்சூல் நிலையில் குழந்தையின் விரைகள் அதன் வயிற்றுக் குழியில் உள்ளன; ஆனால், குழந்தை பிறப்பதற்கு முன்னர் அவை தொடைகளுக்கிடையிலுள்ள ஒரு குழலின் மூலம் இறங்கி விரைப் பையில் தங்குகின்றன. சிலரிடம் ஒன்று அல்லது இரண்டு விரைகளும் கீழிறங்கத் தவறுகின்றன; அவை வயிற்றில்

---

29. சுழிகள்—Degrees
30. மலட்டுத் தன்மை—Sterility

தங்கலாம்; அல்லது தொடைகளுக்கிடையிலும் தங்கிவிட லாம். இந்நிலையை 'இறங்கா விரைகள்'[31] என்று வழங்குவர். இளமைப் பருவத்தில் உடலின் அதிக வளர்ச்சியின் காரண மாக விரைகள் தாமாகவே கீழிறங்கி விடும்; சில சமயம் அறுவை முறைகளைக் கையாண்டு அவற்றைக் கீழிறக்கவும் நேரிடலாம். அடித்தலைச் சுரப்பி நீர்தான் இவ் விரைகள் கீழிறங்குவதற்குக்காரணம் என்று அண்மைக்கால ஆராய்ச்சி யால் கண்டறியப் பெற்றுள்ளது; ஆகவே, ஒரு குழவியின் இளமைப் பருவத்திலேயே இந்தச் சுரப்பிநீரைக் குழந்தை யிடம் செலுத்தி விரைகளைக் கீழிறங்கச் செய்தல் இன்று சாத்தியமாகின்றது.

குமரப் பருவத்திற்குப் பின்னரும்—அஃதாவது விரகறி யும் பருவத்திலும்[32]—விரைகள் கீழிறங்கா நிலையிலிருப்பின் அவை ஊட்டமின்றி மரித்து விந்தணுக்கள் உண்டாகும் திற னின்றிப் போகலாம். எனவே, இரு புறமும் விரைகள் இறங்கா நிலையில் ஒருவர் மலட்டுத் தன்மை யுடையவராகப் போதற்கு ஏதுவுண்டு. எனினும், விரையினுள் சுரப்பு நீர் உண்டாவது பாதிக்கப்பெறுவதில்லை. ஆகவே, இச் சுரப்பு நீரால் கட்டுப்படுத்தப் பெறும் ஒருவருடைய உடல், உளச் சிறப்புயல்புகளின் வளர்ச்சி பாதிக்கப்பெறுது சாதாரண நிலையிலேயே உள்ளது; விரைகள் இறங்கா நிலையிலுள்ள ஆண்கள் உடல்நிலையிலும் புணர்ச்சித் திறனிலும் சாதாரண நிலையிலிருக்கின்றனர்; ஆனல் அவர்களின் விந்துவில் விந்த ணுக்களே இரா. ஆயினும், இனப்பெருக்கச் செயலுக்கு ஒரு விரை இறங்கியிருந்தாலும் போதுமானது. எனவே, ஒரு விரை இறங்கா நிலையிலுள்ள ஒருவரது இனப் பெருக்கத் திறன் எவ்விதத்திலும் பாதிக்கப் பெறுவதில்லை.

விந்தணுக்கள் வரும் வழி : விரைகளிலுண்டாகும் விந் தணுக்கள் ஆண் குறியை நோக்கி வரும் வழியைப்பற்றியும்

---

31. இறங்கா விரைகள்—Uudescended testes
32. விரகறியும் பருவம்—Puberty

நீ அறியவேண்டும். ஆண் உறுப்புக்களை விளக்கும் படத்தைப் (படம்-9) பார்த்தால் இவ்வழி உனக்குத் தெளிவாகப் புலனு




படம்—9: ஆணின் காமச் சுரப்பிகள் யாவும் தொடர்புற்றுள்ள நிலையினைக் காட்டுவது.

கும். விரையின்று ஆண்குறிவரையிலும் இவ்வழி மிக நீண்டு வளைந்து செல்வதைக் காண்பாயாக. விரைகள் எண்ணற்ற மிக நுண்ணிய சுருண்ட குழல்களாலானவை என்று மேலேகூறி

னேன் அல்லவா? இந்தச் சிறு குழல்கள் படிப்படியாக ஒருங் கிணைந்து விரைகளின் ஒரு பக்கமாகக் கிளம்பி வருகின்றன. இவ்வாறு பல சிறு குழல்கள் ஒன்று சேர்ந்து இணைந்த உறுப்பே 'எபிடிடைமிஸ்'[33] என்பது. இந்த உறுப்பில்தான் விந்தணுக்கள் முழு வளர்ச்சியைப் பெறுகின்றன. இந்த உறுப்பு விரைகளையொட்டி நீளவாக்கில் இருப்பதுடன் அவற் றுடன் நெருங்கி ஒட்டிக் கொண்டுமுள்ளது. இந்த உறுப்பு வளைந்து சுருண்ட குழல்களாலானது. இது கிட்டத் தட்ட இரண்டுஅங்குல நீளமும் கால்அங்குல அகலமுமுடைய தாக இருப்பினும், இதனுள் அமைந்துள்ள குழல் மிக நீண்ட தாகும். இவ்வுறுப்பினைப் பிரித்து அதன் குழலை நீட்டினுல் அது கிட்டத்தட்ட 20 அடிவரை இருக்கும்! இதுவும்மானிட உடலின் ஒரு வியத்தகு அமைப்பாகும். இக் குழலின் குறுக் களவு $\frac{1}{60}$ அங்குலம்தான் உள்ளது; அஃதாவது கிட்டத் தட்ட 'கதர்' நூல் அளவுதான் கனமாக இருக்கும். எபிடி டைமிஸின் கீழ்நுனி 'விந்தேறு குழல்' எனப்படும் சற்று ஒரு பெரிய குழலுடன் இணைகின்றது. இதைப் படம் 9-இல் கண்டு அறிக.

விந்தேறு குழல் விரைப் பையில் மேல்நோக்கி வளைந்து செல்வதைக் கவனி. இஃது ஒரு குழல்மூலம் தொடைகளுக் கிடையில் சென்று வயிற்றின் கீழ்ப் பகுதியினுள் நுழைகின் றது. இங்கு இது மறுபடியும் கீழ் நோக்கித் திரும்பி இறுதி யாக சிறு நீர்ப் புறவழியின் பின் புறத்தில் திறக்கின்றது. இது புராஸ்டேட் சுரப்பியைத் துளைத்துக்கொண்டு செல்வ தற்கு முன்பு அஃது ஒரு பையாக விரிந்திருப்பதைப் படம் 9-இல் காண்பாயாக. இதில் விந்தின் ஒரு பகுதி தேக்கத்தில் தங்குவதுபோல் நிறுத்தி வைக்கப்பெறுகின்றது. இக் குழ லின் நீளம் கிட்டத்தட்ட 16 அங்குலம்; குறுக்களவு கிட்டத் தட்ட $\frac{1}{8}$ அங்குலம். விந்தேறு குழல் சற்றுத்தடித்திருத்தலின் அது விரைப் பையிலிருந்து தொடைகளுக்கிடையில் செல்லு வதை விரல்களால் தொட்டு அறியலாம். எனவே, இந்த மிக

33. எபிடிடைமிஸ்—Epididymis

நீண்ட வழியாக விந்தணுக்கள் பிரயாணம்செய்து வெளிவர வேண்டும் என்பதை அறிவாயாக. இந்த நீண்ட வழியில்—எபிடிடைமிஸிலோ அல்லதுவிந்தேறுகுழலிலோ—யாதேனும் தடைஏற்பட்டுக்குழல் அடைத்துக்கொள்ளுமாகில்விந்தணுக்கள் அந்தக் குறிப்பிட்ட பக்கத்தில் வெளி வரமுடியா. இரண்டு பக்கங்களிலும் உள்ள விந்தேறு குழல்களில் இத் தடை ஏற்படின், ஆண் மலடாகி விடுவான். சாதாரணமாகத் தீங்கினுலும் அல்லது நோயினுலுமே இத்தடை நிகழ்கின்றது. வெள்ளை நோயின் காரணமாக அடிக்கடி இக்குழல்களில் வீக்கம் ஏற்பட்டுக் குழலின் துவாரமே அடைத்துக் கொள்ள நேரிடும். இந்த நிலையிலும் புணர்ச்சியின்போது விந்து வெளிப்படுகின்றது. இது புராஸ்டேட் சுரப்பியிலும் விந்துப் பைகளினின்றும் வெளி வருகின்றது. இந்த இரண்டு உறுப்புகளும் விந்தேறு குழல்களில் ஏற்படும் அடைப்பினுல் பாதிக்கப் பெறுவதில்லை.

விந்துப் பைகள்: விந்துப் பைகள் என்பவை சிறு நீர்ப் பையின்பின்புறத்தின் அடிப்பக்கத்தில்—பக்கத்திற்கொன்ருக அமைந்துள்ள பழங்காலத் துருத்திகள் போன்ற உறுப்புகளாகும். அவை ஒரு பிரத்தியேகமான தூம்பினுல்[34] விந்தேறு குழலுடன் இணைகின்றன. இதனைப் படம்–9இல் கண்டு அறிக. இவை பசை போன்ற சற்று மஞ்சள் நிறமுள்ள சுரப்பு நீரினை உண்டாக்குகின்றன. இந்த நீர் விந்தணுக்களுடன் சேர்ந்து விந்துப் பாய்மத்தைச்[35] சற்றுக் கெட்டியாக்கி அதன் அளவினையும் அதிகரிக்கச் செய்கின்றது. இந் நீரில் 'ஃபிரக்டோஸ்'[36] என்ற பிரத்தியேகமான சருக்கரை அடங்கியுள்ளது; இச்சருக்கரை விந்தணுக்களின் ஊட்டத்திற்கு வேண்டிய ஆற்றலை அளிக்கின்றது.

புராஸ்டேட் சுரப்பி: புராஸ்டேட் சுரப்பி என்பது சிறு நீர்ப்பையின் அடிப்பக்கத்தில் மலக் குடலுக்கு முன்புறமாகச் சிறுநீர் புறவழியைச் சுற்றிலும் அமைந்துள்ள ஓர்

---

34. தூம்பு—Duct.
35. விந்துப் பாய்மம்—Seminal fluid.
36. பிரக்டோஸ்—Fructose.

உறுப்பு என்பது படம்-6 ஐயும் படம்-9 ஐயும் உற்று நோக்கிஞல் அறியலாகும். இந்தச் சுரப்பியின் மேலிருந்து கீழ்வரை சிறுநீர்ப் புறவழி துளைத்துச் செல்லுகின்றது. இப்பகுதியில்தான் விந்துவை வெளியேற்றும் தூம்புகள்[37] அமைந்துள்ளன. விந்து வெளிப்படுங்கால் உடன் தோன்றுகின்ற இன்ப உணர்ச்சி இப்பகுதியில்தான் உள்ளது என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப் பெற்றுள்ள ஓர் உண்மையாகும். புணர்ச்சியின்பொழுது உச்ச நிலை உணர்ச்சியுடன்[38] விந்து வெளிப்படும் நிலையில் இச் சுரப்பி சுருங்கி மெல்லியதான பால் போன்ற சுரப்பு நீரைப் பாய்ச்சுகின்றது. இச்சுரப்பு நீர் தொடர்ச்சியாகவுள்ள மிக நுண்ணிய சிறு குழல்கள் மூலம் மிகச் சிறு துளிகளாக அனுப்பப் பெறுகின்றன. இச் சுரப்பு நீரின் பயன் இன்னும் தெளிவாக அறியப்பெறவில்லை. விரையினின்று வெளிப்பட்டவுடன் விரைவாக அசைந்துசெல்லும் ஆற்றலைப் பெறுத விந்தணுக்கள் இந்த நீருடன் சேர்ந்த பிறகே அந்த ஆற்றலை அடைகின்றன. வெளிப்படும் பசை போன்ற விந்து சற்று நீர்போலாக்குவதற்கும் இந்நீர் துணை புரிவதுடன் விந்துப் பாய்மத்திற்குப் பிரத்தியேகமான ஒரு மணத்தையும் நல்குகின்றது. இந்நீர் காரத் தன்மையுடையது.

**விந்துப் பாய்மம்:** எனவே, புணர்ச்சியில் வெளிப்படும் விந்துவானது பல சுரப்பிகளினின்றும் வெளிப்படும் சுரப்பு நீர்களின் தொகுதியாகும். இந்தச் சுரப்பு நீர்த் தொகுதியில் தான் விந்தணுக்கள் கலந்து வெளிப்படுகின்றன. இவ்வாறு வெளிப்படுங்கால் சிறுநீர்ப் புறவழியின் குமிழின் அருகிலுள்ள கௌபர் சுரப்பியின்[39] நீரும் இத்துடன் கலக்கின்றது. இவ்வாறு விந்து வெளிப்படுவதில் பங்கு கொள்ளும் பொறி நுட்பம் மிகவும் சிக்கலானது. புணர்ச்சியின்பொழுது ஏற்படும்

37. வெளியேற்றும் தூம்புகள்—Ejaculatory ducts.
38. உச்சநிலை உணர்ச்சி—Orgasm.
39. கௌபர் சுரப்பி—Cowper's Gland.

உச்சநிலை உணர்ச்சிகிளர்ந்தெழுங்கால், தானாக நடைபெறும் செயல்முறையும் அதிகரிக்கின்றது. அந்த நிலையிலிருந்து நடைபெறும் செயல்கள் யாவும் முயற்சியின்றியே[40] நடைபெறுகின்றன. சுரப்பிகளும் விந்துத் தூம்புகளும் சுருங்கிப் பாய்மங்களைப் 'புராஸ்டேட் சிறுநீர்ப்புறவழியை' நோக்கித் தள்ளுகின்றன; உடனே சிறுநீர்ப் புறவழியும் தொடர்ந்தாற் போல் தாள இயக்கம் போன்ற சுருக்கங்களால் விந்துவை வெளிப்படுத்துகின்றது. இச்செயல் நடைபெறுங்கால் சிறுநீர்ப் பையின் அடிப்புறத்திலுள்ளமடக்குத்தசை இறுக்கமாக மூடப் பெறுகின்றது. புணர்ச்சித் துடிப்பு ஓரளவு ஏற்பட்ட நிலையில்—உச்சநிலை யுணர்ச்சியும் விந்து வெளிப்படுதலும் நிகழ்வதற்கு நீண்ட நேரத்திற்கு முன்பிருந்தே—சிறுநீர்க் கழிப்பது சிரமமாக இருப்பதிலிருந்து இதை நன்கு அறியலாம்.

இவ்விடத்தில் இன்னொரு முக்கிய செய்தியையும் கூற விரும்புகின்றேன். புராஸ்டேட் சுரப்பிக்கு நேரிடும் கோளாறுகள் சிறுநீரடைப்பிலும் கொண்டுசெலுத்துகின்றன. சிறுநீர்ப்பையின் அடிப்பகுதியில், அதன்வாயருகில், இவ்வுறுப்பு அமைந்திருப்பதே அதற்குக் காரணமாகும். வெள்ளைநோய்த் தொற்றினைச் சரியான காலத்தில் சிகிச்சை செய்யாதுவிட்டு விட்டால் சிறுநீர்ப் புறவழியின் கீழ்ப் பகுதியைப் பாதித்திருக்கும் நோய் மேனோக்கிச்சென்றுபுராஸ்டேட்சுரப்பியையும் தாக்குகின்றது. வேறு காரணங்களாலும் இச்சுரப்பி நோயுறுகின்றது. சில சமயம் சிலருக்குநடுவயதில்—கிட்டத்தட்ட 50 வயதில்—இச்சுரப்பி பெரிதாக வளர்ந்து நீரடைப்பினை விளைவித்தல் கூடும். இந்நிலை முற்றினால் இச்சுரப்பியை அறுவைச் சிகிச்சை மூலம் அகற்ற வேண்டியும் நேரிடலாம். புராஸ்டேட் கோளாறுள்ளவர்களிடம் விந்தணுக்கள் தம் ஊட்டத்தை இழக்கும். ஆனால், அஃது அவரிடம் இனப் பெருக்க ஆற்றலைக் குறைக்காது. புராஸ்டேட் சுரப்பியை

40. முயற்சி—Volition.

அகற்றிவிட்டால் விந்துப் பாய்மமே வெளிப்படாது. ஆனால் அவரிடம் கலவி புரியும் திறன் இருந்துகொண்டுதானிருக்கும். விந்து வெளிப்படாததன் காரணமாக அந்த ஆண் மலட்டுத் தன்மையை அடைகின்றார். பெரும்பாலும் கிழப் பருவத்தினருக்கே இந்த அறுவை சிகிச்சை செய்யப்பெறுவதால், இனப்பெருக்கம்பற்றிய பிரச்சினையே இங்கு எழ இடமில்லை.

இனப்பெருக்க உறுப்புகள் அனைத்தினையும்—விந்தணுக்களை யுண்டாக்கும் உறுப்புகளையும் அவை வெளிப்படுவதற்குத் துணையாகவுள்ள சில உறுப்புகளையும்—ஒரே சமயத்தில் விளக்கவேண்டி நேரிட்டதால் கடிதம் சற்று நீண்டுவிட்டது. இவ்வாறு வெளிப்படும் விந்துவைப் பெண்ணின் முட்டையுடன் சேர்வதற்கு வாய்ப்பினைத் தரும் ஆண் குறியின் அமைப்பினையும் அதனுடன் தொடர்புள்ள சில செய்திகளையும் அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 8

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன், நலன் தெரிவிக்க

புணர்ச்சியின்பொழுது வெளிப்படும் விந்துவைப் பெண்ணின் பிறப்புறுகளில் பாய்ச்சுவதற்குத் துணையாக இருப்பது ஆண் குறியாகும்;[41] இதுவே ஆணையும் பெண்ணையும் இணைவிழைச்சின் பொழுது இணைத்து நிற்கும் இணைப்புறுப்பாகும். ஆண்குறியின் உடற்கூற்று அமைப்பினைப் படத்தில் (படம்-10) காண்க. ஆண் குறியினுள் அமைந்துள்ள சிறுநீர்ப் புறவழியின் பின்புறமாகத்தான் விந்துவின் பல்வேறு சுரப்புநீர்கள் ஒன்று சேர்கின்றன.

**ஆண் குறி:** ஆண் குறியை அடிப்பகுதி, நடுப்பகுதி, நுனிப் பகுதி என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். நடுப்பகுதி நீளமாகவும் மெல்லியதாகவும் உள்ளது. அடிப்பகுதி மிக ஆழமாக அடி வயிற்றில் புதைந்துள்ளது; இப்பகுதி




படம்-10: ஆண் உறுப்பின் அமைப்பினை விளக்குவது

இடுப்பெலும்புக் குழியினுள் அமைந்திருக்கின்றது. இங்குத்தான் சிறுநீர்ப் புறவழிக் குமிழும்[42] கௌபர் சுரப்பியும்

41. ஆண் குறி—Penis.
42. சிறுநீர்ப் புறவழிக் குமிழ்—Urethral bulb.

உள்ளன. நுனிப்பகுதி உறுதியான முகட்டைக் கொண்டுள் ளது. அது லிங்கம் அல்லது மணி[43] என வழங்கப்பெறும். அதன் நுனியில்தான் சிறுநீர்ப் புறவழியின் திறப்பு உள்ளது. இந்த ஆண் குறி முழுவதும் மிகவும்நெகிழ்வான, மெல்லிய, நீளுந்தன்மையுள்ள தோலினுல் போர்த்தப்பெற்றுள்ளது. இத்தோல் ஆண்குறியின் முகட்டை இரட்டைமடிப்பாக மூடிக்கொண்டுள்ளது. அதற்குமேலும் நீட்டிக்கொண்டுள்ள தோல் நுனித்தோல்[44] அல்லது முன்தோல்[45] என்றுவழங்கப் பெறும். இதன் அளவு மனிதருக்கு மனிதர் வேறுபடும். சிலரிடம் இது மணியை முழுவதும் மூடிக் கொண்டிருக்கும்; சிலரிடம் இது முழுவதும் மூடிக் கொண்டிருப்பதில்லை; சில ரிடம் சிறிதும் மூடாமலும் இருக்கும். இதன் நுனியில் ஏராளமான நரம்பு முடிவுகள் உள்ளன. ஆகவே, இப்பகுதி மிகவும் உணர்வுடையது. எனினும், இதனையும் ஆண்குறி யின் முகட்டையும் இணைக்கும் மடிப்புத் தோல் இன்னும் அதிகமான தொடு உணர்ச்சியைக் கொண்டது. அதிகமாக நீட்டிக் கொண்டிருக்கும் முன்தோலின் ஒரு பகுதியை அறுத்து நீக்குவதே 'சுன்னத்து'[46] என்று வழங்கப்பெறு கின்றது. யூதர்களிடமும்இஸ்லாமியர்களிடமும் இப்பழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. முன் தோலுக்கும் மணிக்கும் இடையிலுள்ள இடத்தில் துர்நாற்றமுள்ள அழுக்கும் சுரப்பு நீர்களும் தங்காதிருப்பதற்கும் ஆண்குறி விறைத்த நிலையில் மணியை எளிதாகக் கீழே தள்ளுவதற்குமே இச் சடங்கு செய்யப்பெறுகின்றது. ஆண்குறி முழுவதிலும், குறிப்பாக அதன் முகட்டில், எண்ணற்ற நரம்பு முடிவுகள் உள்ளன. ஆகவே, ஆண்குறி முழுவதும் நுட்பமான தொடு புலனைக் கொண்டுள்ளது. மிக நுட்பமான தொடு புலன் உணர்வினைக் கொண்ட ஆண் குறியின் முகட்டிலுள்ள நரம்பு முடிவுகள்

43. லிங்கம் அல்லது மணி—Glans.
44. நுனித்தோல்—Prepuce.
45. முன்தோல்—Foreskin.
46. சுன்னத்து—Circumcision.

சுன்னத்துச் சடங்கினால் நாளடைவில் தம் நுட்பமான உணர்வினை இழக்கின்றன. இதனால் முகட்டில் துடிப்பு உண்டாதல் சற்றுச் சிரமமாகின்றது. இதன் காரணமாகவே சுன்னத்து செய்யப்பெற்ற மனிதன் அதிக நேரம் கலவி புரிகின்றான்; அவனுக்கு 'உச்சநிலை உணர்ச்சி'[47] ஏற்படுவதற்குக் கால தாமதம் உண்டாகின்றது! ஆண் குறியிலுள்ள நுனித்தோல் மிகவும் நீளமாக இருந்தாலும், அல்லது முகட்டை நெகிழ விடாமல் இறுக்கமாக இருந்தாலும் 'சுன்னத்து' செய்து கொள்வது நல்லது. சாதாரணமாக எல்லோருக்குமே இது வேண்டுவதில்லை என்பதே என் கருத்தாகும்.

ஆண்குறியின் வளையாத விறைத்த தன்மை புணர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது. அந்நிலையில்தான் இனப் பெருக்கத்திற்குச் சாதகமான நிலையை உண்டாக்குகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு யோனிக் குழலினுள்[48] விந்து ஆழமாகப் பாய்ச்சப்பெறுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு விந்தணுக்கள் கருப்பையினுள் நுழைவதற்குச் சாதகமான வாய்ப்புகள் ஏற்படுகின்றன. தவிரவும், ஆண்குறி விறைத்த நிலையில் யோனிக் குழலிலும் யோனி லிங்கத்திலும்[49] உராய்வதால் பெண் பிறப்புறுப்புகளில் துடிப்பினை எழுப்புகின்றது. பெண் குறியிலும்[50], யோனிக் குழலிலும், கருப்பையிலும் எழும் தாள இயக்கம்போன்ற அஃசவுகள் விந்து கருப்பையினுள் உட்புகும் வழியைச் சாதகமாக்குகின்றன.

விறைத்தல்: ஆண் குறி விறைக்கும் நிலையை அடைவதற்கு அதன் அமைப்பே சாதகமாகவுள்ளது. ஆண் குறி கடற் பஞ்சுபோன்று மெத்தென இருப்பதை யாவரும் உணர்வர். ஆண்குறியின் எல்லாப் பகுதிகளிலும் எண்ணற்ற சிறிய குகை போன்ற இடைவெளிகள் உள்ளன. இந்த

47. உச்சநிலை உணர்ச்சி—Orgasm.
48. யோனிக் குழல்—Vagina.
49. யோனிலிங்கம்—Clitoris.
50. பெண் குறி—Vulva.

இடங்கள் காலியாகவும் அவற்றின் சுவர்கள் ஒட்டிய நிலையி லும் இருக்கும்போது ஆண்குறி விரைகளின் முற்புறத்தில் தொங்கிய நிலையில்[51]—தூங்கிய நிலையில்—இருக்கும். இப் பொழுது அந்த இடங்களில் சிறிய அளவில்தான் குருதி இருக் கும். எனினும், ஆண் குறியில் புணர்ச்சித் துடிப்பு ஏற்படுங் கால் இந்த இடங்களில் குருதி விரைவாகப் பாய்ந்து நன்முக நிரம்புகின்றது. ஆண்குறியிலுள்ள குருதிக் குழல்கள்—பாய்குழல்களும் வடி குழல்களும்—ஒரே சமயத்தில் உட்புற மாகவும், வெளிப்புறமாகவும் குருதியை விடுவதற்கேற்ற வாறு அமைந்துள்ளன. இஃதுடன் குறியில் ஏராளமான நீளுந்தன்மையுள்ள இழையம்[52] இருப்பதால், அஃது ஆண் குறியின் அளவுகளில் மாற்றம் அடைவதற்குத் துணையாக உள்ளது. ஆண் குறியெங்கும் பரவி நிற்கும் நரம்புப் பொறிநுட்பத்திஞல் இச்செயல்கள் நடைபெறுகின்றன. இவ்வாறு ஆண் குறி புணர்ச்சித் துடிப்புடன் இருக்கும் பொழுது அது பருமனிலும் திசையிலும் மாற்றம் அடைகின் றது; அது விறைத்து, உறுதியாகவும், பருத்தும், எழுந்த நிலையிலும் இருக்கின்றது. புணர்ச்சித் துடிப்புக் காலம் முடி யும்வரை இந்நிலையிலேயே இருக்கும். இப்பொழுது குறியின் முகட்டிலுள்ள முன்தோல் பின்னேக்கி நகர்ந்து மணியின் முழுப் பகுதியையோ அல்லது ஒரு பகுதியையோ வெளிக் காட்டுகின்றது. துடிப்பு அடங்கியதும் அது பழைய தொங் கிய நிலையை அடைந்து விடுகின்றது.

சாதாரணமாகத் தூங்கிய நிலையில் ஆண் குறி சுமார் $3\frac{3}{4}$ அங்குல நீளமும் அதன் நடுப்பகுதி சுமார் $3\frac{1}{4}$ அங்குல சுற்றளவும் இருக்கும். அது விறைத்த நிலையில் சுமார் 6 அங்குல நீளமும், $4\frac{1}{4}$ அங்குல சுற்றளவும் இருக்கும். இந்த அளவுகள் மனிதருக்கு மனிதர் மாறுபடும். ஒரு மனிதரு டைய உடலமைப்பிற்கும், ஆண் குறியின் அளவுகட்கும் யாதொரு தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை. ஒருவ

---

51. தொங்கிய நிலை—Flaccid.
52. இழையம்—Tissue.

டைய ஆண் குறியின் அளவிற்கும் அவருடைய கலவிபுரியும் திறனுக்கும் சிறிதும் பொருத்தம் இல்லை என்று மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். நடைமுறையிலும் நாம் இவ்வுண்மையை அறியலாம். சிறிய ஆண் குறியைக்கொண்டு திறமையாகக் கலவி புரிவோர்களும் உளர்; சராசரி அளவைவிடப் பெரிதாகவுள்ள குறியினையுடையோர் அத்திறனில் குறைந்தும் காணப்படுகின்றனர்.

சாதாரணமாக ஆண்குறி விறைத்து நிற்பதில் எந்தக் கூறுகளின் செல்வாக்கு பங்குபெறுகின்றது என்பதை அறிய நீ ஆவலுடையவனாக இருப்பாய் என்று கருதுகின்றேன். விரைகள் ஒருவித ஹார்மோனைச் சுரப்பதாக ஏற்கெனவே அறிந்திருக்கின்றாயல்லவா? இந்த நீர் நேராகக் குருதியில் கலக்கின்றது. இந்தக் குருதி மூளையை அடைந்ததும், மூளையில் காம உணர்ச்சியை எழுப்புகின்றது; அஃதாவது அது மூளையைத் தூண்டி மீட்டறிமையங்களைக்[53] கிளர்ந்தெழச் செய்கின்றது. இந்த இடங்களில்தான் கனவில் கண்ட கலவிச் செயல்கள், கலவி புரிய எண்ணிய நினைவுகள், கலவி புரிந்த முன்னைய அநுபவங்கள் பதிவாகியுள்ளன மூளையில் இத்தகைய காமச் சார்புடைய எண்ணங்கள் நிரம்பியதும், அங்குள்ள துடிப்பு நடு நரம்பு மண்டலத்தின்[54] ஒரு பகுதியாகிய முகுளத்தின்[55] மூலமும், நரம்புகள் மூலமும் கடத்தப்பெறுகின்றன. முதுகு நடு நரம்பில் இதற்கெனவே 'பட்ஜின்மையம்'[56] என்ற ஓர் இடம் உள்ளது. இஃது தூண்டப்பெற்றதும் தானாக விறைத்தல் நிகழ்கின்றது. இந்த மையத்திற்கும் ஆண்குறிக்கும் ஓர் இணைப்பு உள்ளது.

மூளையில் புணர்ச்சி அவாவினை எழுப்புவதற்கு வேறு புறநிலையான காரணங்களும் உள்ளன. இக்காரணங்கள்

---

53. மீட்டறி மையங்கள்—Centres of recollection;
54. நடு நரம்பு மண்டலம்—Central nervous system.
57. முகுளம்—Medulla.
56. பட்ஜின் மையம்—'Budge's centre.

பார்வை, மணம், கேள்வி, வேறு புலன்கள் அல்லது நினைவு டன் தொடர்புடையவை. காதல்கொண்ட பெண்ணேயோ, கவர்ச்சியையுடைய பெண்ணேயோ காண்டல், காம உணர்ச்சியை எழுப்பவல்ல இசையினைக் கேட்டல், பெண்ணின்மீது தடவப்பெற்றுள்ள மணப் பொருள்களின் மணத்தை முகர்தல் போன்ற செயல்கள் இவ்விளைவினை உண்டாக்கலாம்; இவையும் இவைபோன்ற ஆயிரக்கணக்கான கூறுகளும் விரைச் சுரப்பிகளின் தலையீடின்றியே கலவித்துடிப்பினைக் கிளர்ந்தெழச் செய்யக்கூடியவை. மூளையின் காம விகாரம் கலவித்துடிப்பாக மாற்றப்பெற்று இனப்பெருக்க உறுப்புகளை அடைந்ததும் விறைத்தலை நிகழ்விக்கின்றது.

மேற்கூறியவற்றால் விரைகளின் செயலாலோ, கற்பனையின் காரணமாகவோ விறைத்தல் நிகழ்கின்றது என்பது தெளிவாகின்றது; எனினும், முதலாவதில் விளைவு உடனே நிகழ்கின்றது; இரண்டாவதில் காமச் சுரப்பிகள்[57] சரியாகச் செயற்பட்டால்தான் விளைவு ஏற்படக்கூடும். சிறுநீர்ப்பையை நிரம்பியிருத்தல், குடல் நிரம்பியிருத்தல்போன்ற காரணங்களும் விறைத்தலை நிகழ்விக்கும் வேறு கூறுகளாகும். அதிகாலையில் படுக்கையை விட்டெழுந்ததும் காணப்பெறும் விறைத்தல் காம உணர்ச்சியைப் பற்றியதன்று. சிறுநீர்ப்பை நிரம்பியிருப்பதாலும், மலக்குடல் புராஸ்டேட் சுரப்பியை அமுக்குவதாலும் இது நிகழ்கின்றது. எனினும், இந்த விறைத்தலும் எண்ணங்களின் தொடர்பினால் உண்மையான விறைத்தலில் கொண்டுசெலுத்துவதை நாம் அநுபவத்தால் அறியலாம்.

ஆண்குறி விறைக்கும்பொழுது சிலசமயம் ஒருசில திரவத் துளிகள் குறியின் நுனியில் காணப்பெறலாம். இப் பாய்மம் விந்துவின் ஒரு பகுதியன்று. ஆண்குறியினுள் நெடுகவரும் சிறுநீர்ப்புறவழி சிறுநீர் வருவதற்கும், விந்து வெளிப்படுவதற்கும் பயன்படுகின்றது என்பதை நீ நினைவு கூர்வாயாக; பொதுவாக, சிறுநீர் அமிலத்தன்மையுடையது என்பதை நீ

57. காமச் சுரப்பிகள்—Sex glands.

அறிவாய். அமிலங்கள் விந்தணுக்களுக்குத் தீங்கு விளைவிப்பவை. இந்த விளைவினை மாற்றுவதற்காகக் கலவித் துடிப்பின் பொழுது சிறுநீர்ப் புறவழியிலுள்ள ஒருசில சுரப்பிகள் காரத் தன்மையுள்ள சுரப்பு நீரை வெளிப்படுத்தும். இது சிறுநீர்ப் புறவழியிலிருக்கக்கூடிய அமிலங்களை நடுநிலையாக்கிவிடும். இதனால் விந்துப் பாய்மம் வெளிப்படுங்கால் அது யாதொரு தீங்கையும் அடைவதில்லை; இந்தச்சுரப்புநீர் குறியின்வாயிலில் பிசுபிசுப்பான தன்மையுடன் காணப்பெறும். கால்வாயின் வழியாக விந்துப் பாய்வதற்கு இத்திரவம் வழுக்கிடு பொருளாக[58] உதவுகின்றது என்று ஒருசிலர் கருதுகின்றனர். சாதாரணமாக இந்தத் திரவத்தில் விந்தணுக்கள் இருப்பதில்லை. சில சந்தர்ப்பங்களில் புணர்ச்சித் துடிப்பு ஏற்படுங்கால் விந்து பாய்வதற்கு முன்னரே மிகச் சிறிய அளவு விந்து கசிவதுண்டு; இந்த விந்துவில் மிகச் சிலரிடமே விந்தணுக்கள் காணப்பெறும் என்று மருத்துவர்கள் கூறுகின்றனர்.

விந்து வெளியேற்றத்தில்[59] இன்னொரு முக்கிய செய்தியை நீ நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். விந்துவிலுள்ள பல்வேறு சுரப்பு நீர்களும் தொடர்ந்து உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. ஆனால், இச் சுரப்பு நீர்கள் ஒன்றுசேர்வது விந்துவெளியேற்றத்தின்பொழுதே நிகழ்கின்றது. இச்சமயத்தில் பிறப்புறுப்புக் குழலின் தசைச் சுருக்கங்கள் எபிடிடைமிசையும் விந்தேறு குழலையும் நெருக்கிவிந்துப் பைகளின் சுரப்பு நீர்களுடன் விந்தணுக்களை சிறுநீர்ப்புறவழிக்குக் கொண்டுவருகின்றன. அதே சமயத்தில், முன்னைய கடிதத்தில் குறிப்பிட்டதுபோல், புராஸ்டேட் சுரப்பியும் தன்னுடைய சுருக்கங்களால் சிறுநீர்க் கால்வாயில் விந்துப் பாய்மம் நுழையும் இடத்திலுள்ள எண்ணற்ற சிறு திறப்புகளின் மூலம் தன்னிடமுள்ள சுரப்பும் நீரையும் வெளித் தள்ளுகின்றது.

---

58. வழுக்கிடு பொருள்—Lubricant.

59. விந்து வெளியேற்றம்—Ejaculation.

விந்துவும் சிறுநீரும் ஒரே வழியில் வரக்கூடியனவாக இருப்பினும் அவை ஒன்றோடொன்று கலப்பதில்லை. விந்து வெளிப்படுங்கால் சிறுநீர்ப் பையின் அடிப்புறத்திலுள்ள வாயில் தானாகக் கெட்டியாக மூடிக்கொள்ளும் என்பதை ஏற்கெனவே கூறியுள்ளேன்.

இனி, விந்தணுக்களின் தன்மை, ஹார்மோன்களைப் பற்றிய சில செய்திகள் ஆகியவற்றை அடுத்த கடிதத்தில் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 9

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்: நலனே விழைகின்றேன்.

முன்னர் எழுதிய கடிதங்களில் குறிப்பிட்ட கருத்துகள் தெளிவாக விளங்கியிருக்கும் எனக் கருதுகின்றேன். ஆண்மகன் புணர்ச்சியின்பொழுது ஒரு தடவை வெளியாக்கும் விந்துவில் கிட்டத்தட்ட 400 அல்லது 500 மில்லியன்[60] விந்தணுக்களை வெளிப்படுத்துகின்றான் என்று கணக்கிடப் பெற்றுள்ளது. இது மனிதருக்கு மனிதர் வேறுபடுவதுடன் புணர்ச்சிக்குப் புணர்ச்சியும் வேறுபடும். நாட்கணக்கில்—வாரக்கணக்கில்—கலவி புரியாத ஆண்மகன் முதல் தடவையாக மேற்கொள்ளும் கலவியின்பொழுது வெளியாக்கும் விந்துவில் இந்த எண்ணிக்கை மிக அதிகமாகவே இருக்கும். இவன் அடிக்கடி புணரும் பழக்கமுடையவனாக இருந்தால் ஒவ்வொரு தடவையும் வெளிப்படும் விந்துவில் இந்த எண்ணிக்கை சற்றுக் குறைந்து காணப்பெறும். ஒருவன் ஒரு நாள் இரவு இரு தடவை புணர்ந்தால் முதல் புணர்ச்சியில் வெளிப்படும் இந்த விந்தணுக்களின் எண்ணிக்கை இரண்டாவது புணர்ச்சியில் வெளிப்படும் விந்தணுக்களின் எண்ணிக்கையைவிடச் சற்று அதிகமாகவே இருக்கும். அடிக்கடி தொடர்ந்தாற்போல் விந்து வெளிப்படுத்தப்பெற்றால் இந்த எண்ணிக்கைகுறைந்துகொண்டேபோகும். விந்தணுக்களின் வன்மையும் குறையும். அடிக்கடி புணர்வதால் விந்தணுக்கள் நல்ல முதிர்ச்சியையும் திறனையும் அடைய முடியாது தடுக்கப் பெறுகின்றன. என்னே இந்த இயற்கையின் போக்கு!

விந்தணுக்களின் தன்மை: விந்து வெளியேறினவுடன் அது பசை போன்றிருக்கும். ஆனால், மூன்றிலிருந்துபதினைந்து

---

60. மில்லியன்—பத்து லட்சம்;

நிமிடங்களுக்குள் அது நீர் நிலைக்கு வந்துவிடுகின்றது: புதி தாக வெளிப்படுத்தப்பெற்ற பசை போன்ற விந்துவில் இந்த விந்தணுக்கள் அசையா நிலையிலிருக்கும்; ஆனால், அது நீர் நிலைக்கு வந்தவுடன் இந்த அணுக்கள் விரைவாக அசைந்து செல்லக்கூடும். ஒரு விந்தணுவின் நீளம் 1/600 அங்குலம் என்று கணக்கிடப் பெற்றுள்ளது. ஒரு சாதாரண நுண் பெருக்கியிலும் அதனைக் காணலாம். ஒரு துளி விந்துப் பாய்மத்தில் அவை அசைவதைக் காண்பதற்கு மிக ஆர்வமாக இருக்கும். அவை அவ்வாறு அசைந்துசெல் வதைப் படத்தில் (படம்—11) காண்க. புதிதாக எடுக்கப் பெற்ற பாய்மத்தில் அவை ஒவ்வொரு துளியிலும் கூட்டங் களாக அசைவதைக் காணலாம். படத்தில் ஓர் ஒற்றை விந்தணுவும் சற்றுப் பெரிய அளவில் காட்டப் பெற்றிருப்ப தையும் உற்று நோக்குக. ஒரு விந்தணு எட்டு நிமிடங்களில் ஓர் அங்குல தூரம் அசைந்து செல்லக் கூடுமாம்.




படம்—11: உயிருள்ள விந்தணுக்களின் தோற்றம்; ஓர் ஒற்றை விந்தணு தனியாக—பெரிய அளவில்—காட்டப்பெற்றிருத்தல்.

படத்தில் காட்டப்பெற்றுள்ள விந்தணுவை உற்று நோக்கினால் அது நீள நிலையிலுள்ள தலைப்பிரட்டைபோல்[61]

---

61. தலைப்பிரட்டை—Tadpole.

காணப்படுவது தெரியவரும். அஃது ஒருமுட்டைவடிவமான தலையையும் ஒரு சிறிய நடுப் பகுதியையும் ஒரு நீண்ட மெல்லிய வாலையும் கொண்டுள்ளது. தலைப் பகுதியிலும் நடுப் பகுதியிலும்தான் முன்னர்க் குறிப்பிட்ட நிறக்கோள்களும் ஜீன்களும் அடங்கியுள்ளன. இவையே மரபுவழிப் பண்புகளைத் தாங்கிக்கொண்டுள்ளன என்பதை நீ நன்கு அறிவாய். இந்த இரண்டு பகுதிகள்தாம் இனப் பெருக்கத்திலும் பங்கு பெறுகின்றன. உண்மையில் அசையும் பொறி நுட்பம் நடுப்பகுதியிலிருந்தபோதிலும், வால் பகுதிதான் இப் பக்கமும் அப்பக்கமுமாக அடித்துக்கொண்டு உயிரணுவின் இயக்கத்திற்குக் காரணமாகின்றது. சிறிது நேரத்தில் இயக்கத்தின் வேகம் குறைந்துகொண்டே சென்று கடைசியில் நின்றே போகின்றது. விந்தணுவும் அசையா நிலையிலிருந்து மரித்து விடுகின்றது.

விந்தணுக்களின் ஆயுட்காலம்: வெளியேற்றப்பெற்ற விந்தணுக்கள் எவ்வளவு காலம் உயிரோடிருத்தல்கூடும் என்பதை அறிந்துகொள்ள விழைவாய் என்று கருதுகின்றேன். பெண்ணின் இனப் பெருக்க உறுப்புகளில் இவற்றின் ஆயுட் காலத்தைப்பற்றிப் பின்னர் விளக்குவேன். உடலுக்கு வெளியில் அவற்றின் வாழ்வு அவை வைக்கப்பெற்றுள்ள வெப்ப நிலையைப் பொறுத்தது. சாதாரண அறையின் வெப்ப நிலையில் அவை 48 மணி நேரமும் அதற்கு மேலும் உயிர் வாழலாம். வெதுவெதுப்பான வெப்பநிலையில் அவற்றின் இயக்கம் விரைவாக்கப்பெற்று அவை ஆற்றலை இழப்பதால் அவற்றின் ஆயுளும் குறுகிவிடுகின்றது. எனினும், அவை சீதள அலமாரியில் வைக்கப்பெற்றால், அவை பல நாட்கள் உயிரோடிருக்கும். குளிர்ந்தநிலை அவற்றின் இயக்கத்தைத் தற்காலிகமாக நிறுத்திவிடும்; மீண்டும் அவை வெப்பச் சூழ்நிலைக்கு வருங்கால் இயக்கத்தைத் தொடங்கும். திடீரென்று உறை நிலைக்குக் கொண்டு வந்தால் அவற்றை மாதக் கணக்கில்—ஏன் ஆண்டுக் கணக்கில்கூட—இயங்கா நிலையில் வைத்திருத்தலும் கூடும்.

விந்தணுக்கள் எப்பொழுதும் தாமாக இயங்கிக்கொண்டு தமக்குச் சாதகமான இடத்தை நோக்கியே அசையும்தன்மையைப் பெற்றிருப்பது வியப்பினும் வியப்பாகும்; விந்துப் பாய்மத்திலும், யோனிக் குழலிலும், கருப் பையிலுமுள்ள சளி போன்ற அவை நகர்வதைக் கவனித்தால் அவை கருப் பையை நோக்கி நகர்வது புலனாகும். யோனிக் குழலிலும் கருப் பையிலுமுள்ள திரவத்தை நுண் பெருக்கியின் மூலம் சோதித்தால் இவ்வுண்மை தெளியப்படும்; இதனைப் படத்தில் (படம்—12) காண்க. யோனிக் குழலில் சுரக்கும்



படம்—12: விந்தணுக்கள் கருப்பையால் கவரப்பெறுவதைக் காட்டுவது.

அமிலம் (லாக்டிக அமிலம்) அவற்றிற்குத் தீங்கு புரியுமாதலின், அவை இங்ஙனம் நகருகின்றன. ஒரு விந்தணு ஒரு முட்டையினுள் சென்று தங்குவதே கருவுறுதல் ஆகும் என்பதை நீ நன்கு அறிவாய்; விரைவாக நகர்ந்து செல்லும் விந்தணுக்களே தம்மைவிடச் சற்றுப் பெரிதாகவுள்ள முட்

டையை அடைகின்றன. இவற்றுள் மிக வன்மையான விந்தணுதான் தன் தலையினால் முட்டையைத் துளைத்து வாலறுபட்டு முட்டையினுள் தங்குகின்றது. கண்ணுக்குப் புலனாகா நுண்ணணு உலகங்களிலும் ஆணே பெண்ணை நாடிச் செல்லுவதும், அதுவே அதிகமாக இயங்குவதும் நம்மை வியப்படையச் செய்கின்றன. காதல் உலகிலும் கலவி புரியும் செயலிலும் ஆண்கள்தாமே அதிகமாக இயங்குகின்றனர்? பெண் தானே அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவருடன் இணைகின்றாள்? முட்டையிலும் தேர்ந்தெடுக்குந் திறன் இயற்கையிலேயே அமைந்து கிடக்கின்றது. போட்டி போட்டுக் கொண்டு தன்னை நோக்கி வரும் விந்தணுக்கள் தன்னுள் நுழைவதற்கேற்ற சாதகமான வாய்ப்புடன் முட்டையின் சிறு அறைகளாலமைந்த மென்றோல்[62] விரிந்த நிலையிலுள்ளது. ஒரு வன்மையான விந்தணு உள் நுழைந்ததும், வேறு அணுக்களுக்கு இடங் கொடாது முட்டை தன் மென்றோலைச் சுருக்கிக் கொள்ளுகின்றது. ஆண்டவன் படைப்பின் விந்தையை எண்ணி எண்ணி மகிழ்வாயாக. பண்டையோர் திருமணத்தில் 'சுயம்வரம்' என்ற ஏற்பாட்டை அமைத்த முறையை எண்ணுக. அருச்சுனன் ஒருவன்தானே மச்சக் குறியை வீழ்த்தி திரௌபதியை அடையமுடிந்தது? இன்றும் ஒருவருக்கு மணம் பேசி உறுதியான பிறகு அந்த வீட்டில் வேறு யாரும் பெண்பேச நுழைவதில்லையல்லவா?

**பிரம்மச்சரியம்:** ஒருவர் புணர்ச்சியில் ஈடுபடாமலேயே விந்துவினைக் காப்பாற்றினால் ஏதாவது நன்மையுண்டா என்று நீ கேட்கலாம். இதுபற்றி நம் முன்னோர்கள் ஏராளமான கருத்துகளைத் தெரிவித்திருக்கின்றனர். 'பிரம்மச்சரியம் காத்தல்' என்பது நம் நாட்டு அறிஞர்கள் கண்ட முறை. புத்தர், சங்கரர் போன்ற ஞானச் செல்வர்கள் இம் முறைக்கு எடுத்துக்காட்டுக்களாவார்கள். பிரம்மச்சரியங் காத்த காங்கேயன் — வீட்டுமன் — பேராற்றலுடன் திகழ்ந்ததைப்

---

62. சிறு அறைகளாலமைந்த மென்றோல்—Cellular membrane.

பாரதம் எடுத்துரைக்கின்றது. நம் நாட்டுத் தந்தை காந்தியடிகளின் Self Restraint versus Self Indulgence என்ற நூலைப் படிக்க. பிரம்மச்சரியங் காத்து உண்மையான சமய வாழ்வில் ஈடுபட்டுள்ள மகான்களின் முகத்தில்—அவர்கள் கண்களில்—பேரொளி வீசுவதையும் கருத்துகளில் அறிவுச் சுடர் நிழலிடுவதையும் காணலாம். தமிழ் நாட்டில் இராமகிருஷ்ண தபோவன[63] முனிவர் சித்பவாநந்தரின் வாழ்க்கை நமக்கு வழி காட்டக் கூடியது; அவர் வெளியிடும் 'தருமச் சக்கரம்' இதழ்களில் வெளிவரும் கருத்துகள் உன் போன்ற இளைஞர்கட்கு நிறைந்த பலனைத் தரும். வங்கம் அளித்த இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் வாழ்க்கையையும் தமிழ்நாட்டு வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகளின் வாழ்க்கையையும் அந்த இரு முனிவரின் பல கருத்துகளையும் இளைஞர்கள் அறிந்து கொண்டால் அவர்கள் வாழ்க்கை செம்மையுற அமைய வழி தோன்றும். நவீன மருத்துவமும் காண முடியாத பல உண்மைகளைப் பிரம்மச்சரியம் காத்தலால் அறியலாம்.

புணர்ச்சியே ஏற்படாமலிருந்தால் விந்தேறு குழலிலும் விந்துப் பைகளிலுமுள்ள விந்தணுக்கள் படிப்படியாக மரித்து சிதைந்து வெளியேறுகின்றன. சில பிராணிகள் புணர்ச்சியினின்றும் பிரித்து வைக்கப்பெற்றிருக்குங்கால் இவ்வாறு மரித்துச் சிதைந்து அழிந்த விந்தணுக்கள் விந்துக்குழல்களின் மூலமும் சிறுநீர்ப்புறவழியின் மூலமும் வெளிப்படுவதைக் காணலாம். நீண்ட நாட்கள் கழித்து முதல் தடவையாகப் புணர்ச்சியில் வெளிப்படும் விந்துவில் இயக்கம் குறைந்த விந்தணுக்களே காணப்படுகின்றன என்றும், சிறிது காலமே இடையிட்ட புணர்ச்சியால் வெளிப்படும் விந்துவில் இயக்கம் மிக்க விந்தணுக்கள் காணப்படுகின்றன என்றும் மெய்ப்பிக்கப்பெற்றுள்ளது. இதிலிருந்து குழல்களில் நீண்ட காலம்

---

63 இவ்வனம் திருச்சி—ஈரோட்டுப் புகைவண்டிப் பாதையிலுள்ள திருப்பராய்த்துறையில் உள்ளது.

விந்தணுக்கள் தங்கினால் அவை தம்முடைய ஊட்டத்தை இழக்கின்றன என்று தெரிகின்றது.

ஹார்மோன்கள்: இனி, ஹார்மோன்களைப்பற்றிச் சில கருத்துகளைத் தெரிவிக்க விரும்புகின்றேன். நம்முடைய உடலில் சில சுரப்பிகளில் உண்டாகிக் குருதியின் மூலம் உடலிலுள்ள வெவ்வேறு உறுப்புகளுக்குக் கொண்டுபோகப் பெற்று அவற்றின் செயல்களில் மாற்றங்களை உண்டாக்கும் வேதியியற்பொருள்களே[64] 'ஹார்மோன்கள்' என்ற பெயரால் குறிக்கப்பெறுகின்றன: நம்முடைய உடலில் ஹார்மோன்களை உண்டாக்கும் பல சுரப்பிகள் உடலின் பல்வேறு பகுதிகளில் அமைந்துள்ளன. மூளையின் அடிப்பகுதியில் அமைந்துள்ள அடித்தலைச்சுரப்பி,[65] கழுத்துப்பகுதியில் உள்ள புரிசைச்சுரப்பி (கேடயச் சுரப்பி)[66], சிறுநீரகங்களின்மீது கிரீடம்போல் அமைந்துள்ள மாங்காய்ச் சுரப்பிகள்[67], இனகோளங்கள்[68] (ஆண்களிடம் உள்ள விரைகள், பெண்களிடம் உள்ள சூற்பைகள்[69]), ஆகியவை மிகவும் முக்கியமானவை. பெரும்பாலான ஹார்மோன்கள் பாலுணர்ச்சியிலும் இனப்பெருக்கத்திலும் முக்கிய பங்கு கொள்ளுகின்றன. இந்தக் கடிதங்களில் பல இடங்களில் இவற்றின் இன்றியமையாமையையும் செயல்களையும்பற்றிக் குறிப்பிடுவேன். நம் உடலிலுள்ள பல்வேறு உறுப்புகளையும், இழையங்களையும் தொடக்குவதிலும் தூண்டுவதிலும் இந்த ஹார்மோன்கள் பெரும்பங்கு பெறுகின்றன. ஒவ்வொரு ஹார்மோனுக்கும் நம் உடலின் பொறிநுட்பத்தில் தனிப்பட்ட பங்கு உண்டு என்று உடலியலறிஞர்கள் கூறுகின்றனர். எனினும், இந்த எல்லாச் சுரப்பிகளும் ஒன்றுக்கொன்று இன்றியமையாத

64. வேதியியற் பொருள்கள்—Chemical substances
65. அடித்தலைச் சுரப்பி—Pituitary gland
66. புரிசைச்சுரப்பி—Thyroid gland
67. மாங்காய்ச்சுரப்பி—Adrenal gland
68. இனகோளங்கள்—Gonads
69. சூற்பைகள்—Ovaries

செயலையும் புரிகின்றன; ஏதாவது ஒன்று சரியாகச் செயற் படாவிடினும், ஏனையவை சரியாக இயங்காமல் பாதிக்கப் பெறும்.

பாலறிகுறிகள்: ஆணிடம் காமச்சுரப்பிகளில் உண்டா கும் ஹார்மோன்கள் இடைநிலைப் பாலறி சிறப்பியல்புகளை உண்டாக்குவதே அவற்றின் தனிப்பட்ட செயல் ஆகும். இந்தச் சிறப்பியல்புகளே பெண்ணிடமிருந்து ஆணைப் பிரித் தறியத் துணைசெய்கின்றன. அமைப்பிலும் செயலிலும் ஒரு பாலிடம் காணப்பெறாத ஒரு சில சிறப்பியல்புகளால்தான் இருபாலாரையும் பிரித்தறிய முடிகின்றது. பிறப்புறுப்புகளே முதல்நிலைச்சிறப்பியல்புகளைக்காட்டுபவைகள். ஒரு குழந்தை பிறந்தவுடன் அதன் பிறப்புறுப்புகளைக்கொண்டே அஃது ஆணு அல்லது பெண்ணு என்று சொல்லுகின்றோம். அக் குழந்தை வளர வளர, மேலும் பிரித்தறிவதற்கு வேறு சிறப் பியல்புகளும் தலைக்காட்டுகின்றன. விரகறிபருவத்தில்[70] பையனின் முகத்தில் மீசையும் தாடியும் அரும்புகின்றன; அவனுடைய குரல்வளை[71] பெரிதாகிக் குரலும் தடிக்கின்றது; உடலின் கட்டமைப்பும் சிறப்பாக ஆணென்று வேறுபடுத் திக் காட்டுகின்றது. சிறுமி படிப்படியாக உருண்டை வடிவத் தைப் பெறுகின்றாள்; கொங்கைகள் பருக்கின்றன; இடுப்பு விரிவடைகின்றது; அக்குளிலும் பெண்குறியிலும் உரோமங் கள் முளைக்கின்றன. இவைதாம் இடைநிலைப் பாலறிகுறி களாகும். இவை பல பிராணி இனங்களிடமும் காணப்பெறு கின்றன. சேவலுக்குக் கொண்டையும்[72] குதிமுட்களும்[73] தோன்றுகின்றன; கலைமானுக்கும் செம்மறியாட்டிற்கும் கொம்புகள் முளைக்கின்றன. பல பறவையினங்களின் இறகுத் தொகுதிகள் பாலுக்கேற்றவாறு மாற்றம் அடைகின்றன. இவை யாவும் இடைநிலைப் பாலறிகுறிகளே.

---

70. விரகறி பருவம்—Puberty
71. குரல்வளை—Larynx
72. கொண்டை—Comb
73. குதிமுட்கள்—Spurs

விரையடித்தல்: பிராணிகள் பிறந்தவுடன் அவற்றின் விரைகளை நீக்கி விட்டால் அவற்றிடம் இந்த இடைநிலைப் பாலறிகுறிகள் தோன்று எடுத்துக்காட்டாக விரையடிக்கப் பெற்ற[74] சேவலிடம் கொண்டையும் தாடிகளும்[75] தோன்று; அஃது அதிகாலையில் கூவுவதில்லை; அதனிடம் சண்டையிடும் தன்மை இருப்பதில்லை; அதுபெட்டைக்கோழியையும் நாடுவதில்லை. கலைமானிடமும் செம்மறியாட்டிடமும் இவ் விரையடித்தலாகிய இச் செயல் கொம்புகள் முளைப்பதைத் தடுக்கின்றது: காளை[76] எருது[77] இவற்றினிடையே உள்ள வேறுபாடுகளை நீ அறிந்திருப்பாய். இவை, யாவும் விரையடித்தலாலேயே நிகழ்பவை. இத்தகைய செயல் பண்டிருந்தே குதிரைகள், காளைகள், நாய்கள், பூனைகள், ஏனைய வீட்டு விலங்குகளிடம் செய்யப்பெற்று வருகின்றன: விரையடிக்கப் பெற்ற பிராணிகள் மிகவும் அடங்கியும், எளிதில் கட்டுப் படக்கூடியவையாகவும் இருப்பதைக் கவனிப்பாயாக. அவை கொழுப்புடன் புணர்ச்சித் துடிப்பின்றியும் காணப்பெறுகின்றன.

ஒரு பையன் விரகறிபருவம் எய்துவதற்கு முன்னர் அவனுடைய விரைகளை நீக்கிவிட்டால் அச்செயல் அவனது பிற்கால வளர்ச்சி, தோற்றம், ஆளுமை முதலியவற்றைப் பாதிக்கின்றது: இத்தகைய அறுவைச்செயல் பலவேறு காரணங்களுக்காகச் செய்யப்பெறுகின்றது. கீழ்நாடுகளில் அரண்மனையின் அந்தப்புரத்தில்சேவகம்செய்வதற்காக ஆண்களிடம் இம்முறைகையாளப்பெறுகின்றது: ஒருகாலத்தில்இத்தாலிநாட்டில் மாதாக்கோவிலில் பாடகர்குழு அமைப்பதற்காகச்செய்யப்பெற்றது. இடைக்காலத்தில்[78] மயிர்வினைஞர்களின் வீடு

---

74. விரையடி—Castrate
75. தாடிகள்—Wattles
76. காளை—Bull
77. எருது—Ox
78. இடைக்காலம்—Middle Ages.

களில் இச்செயல் குறைந்த கட்டணத்தில் செய்யப்பெறும் என்ற விளம்பரப் பலகைகள் தொங்குமாம்! இரஷ்யாவில் ஒரு சமூகத்தினரிடம் இச்செயல் சமயச் சடங்குகளின் ஒரு பகுதியாக இருந்துவந்ததாகக் கூறப்பெறுகின்றது. பொது வாக இனகோளங்களை இழந்த ஒரு பையனிடம் இடைநிலைப் பாலறிகுறிகள் தோன்றுவதில்லை; அவன் ஒரு அலியாகவே காணப்பெறுவான். முகத்தில் தாடியின்றி, மெல்லிய குரலுடன், கொழுத்தஉடலுடன்அவன் காணப்பெறுவான். அவனது பிறப்புறுப்புகள் வளர்ச்சியின்றி இருக்கும்; புணர்ச் சித் துடிப்புகளும் அவனிடம் முழுநிலையில் எழும்புவதில்லை; பாண்டவர்களின் ஓராண்டுக் கரந்துறைவாழ்க்கையில் அர்ச் சுனன் பேடியாக விராடன் அரண்மனையில் பணிசெய்ததை இவ்விடத்தில் நினைவு கூர்க. விரகறி பருவத்திற்குப் பின்னர் விரைகளை நீக்கினால், தோன்றிய இடைநிலைப்பாலறி குறிகள் முழுவதும் மறைவதில்லை. ஆனால், வளர்ச்சியில் மாற்றம், கொழுப்பு பெருகுதல், மனநிலை, உள்ளக் கிளர்ச்சி நிலையில் மாற்றங்கள் ஆகிய பல்வேறுமாற்றங்கள் தலைக்காட் டத்தான் செய்யும். நீண்ட காலத்திற்குப் புணர்ச்சிவிருப்ப மும், புணர்ச்சித்திறனும் அப்படியே இருக்கும். ஆனால், சிலரிடம் அவை அதிக அளவில் குறையலாம்; அல்லது, முற்றிலுமே மறைந்துவிடலாம்.

சுரப்பிகளை இடம் பெயர்த்து நடுதல்: இவ்விடத்தில் இன் னொரு வியப்பிற்குரிய செய்தியைத் தெரிவிக்க விரும்புகின் றேன் ஒரு பிராணியின் உடலினின்றும் ஒரு சுரப்பியை நீக்கி அதனைப் பிறிதொரு பிராணியின் உடலில் பதியவைத்தலில் அறிவியலறிஞர்கள் வெற்றி கண்டுள்ளனர்; இப்பிராணிகள் ஒரே இனத்தைச் சார்ந்தவைகளாகவும் இருக்கலாம்; வெவ் வேறு இனத்தைச் சார்ந்தவைகளாகவும் இருக்கலாம். இத் தகைய சோதனைகள் சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியில் சோதனைக்காகச் செய்யப்பெற்றன. அண்மைக்காலத்தில் இவை பெரிய அளவுகளில்மேற்கொள்ளப்பெற்றும் வருகின்

றன. இத்துறையில் பேராசிரியர் ஸ்டீனக்[79] என்பவரின் சோதனைகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை. வியன்னுநகரைச் சேர்ந்த இந்த அறிஞர் ஆண், பெண்பிராணிகளை 'விரையடித்தார்'; இப்பிராணிகள் அலித்தன்மையை அடைந்தன. பிறகு இந்தப் பிராணிகளுள் ஆணிடம் பெண்ணின் சுரப்பிகளையும் பெண்ணிடம் ஆணின் சுரப்பிகளையும் பெயர்த்து வைத்தார். இவைகளிடம் முறையே பெண்ணின் சிறப்பியல்புகளும் ஆணின் சிறப்பியல்புகளும் தோன்றின. இச்சோதனைகளை அவர் எலிகள், ஒருவகை முயல்கள், சில பறவைகள் ஆகியவற்றிடம் செய்து வெற்றி கண்டார்.

மேற்குறிப்பிட்ட சோதனைகள் மனிதனிடம் இதுகாறும் செய்யப்பெற்றதாகத்தெரியவில்லை. பிராணிகளைப்போலவே மனிதன் இத்தகைய சோதனைகட்கு எங்ஙனம் உட்படுவான்? ஆனால் 1914-இல் லிட்ஸ்டன்[80] என்ற ஓர் அமெரிக்க மருத்துவர் தற்கொலை புரிந்துகொண்ட ஒருவருடைய விரையைத் தன்னுடைய விரைப்பையில் புதைத்துவிளைவுகளைக்கவனித்ததில், அவர் தன்னுடைய உடல் நலத்தில் மேம்பாடு கண்டதாகவும், ஆற்றலை அதிகமாக்கியதாகவும் கூறியுள்ளார். வேறு ஆய்வாளர்களும் இத்தகைய சோதனைகளை மேற்கொண்டுள்ளனர். வொரானொஃப்[81] என்பார்குரங்கின்விரைகளை நட்டுச் சிறப்பான விளைவுகளை வெளியிட்டுள்ளார். ஆனல், இவ்விளைவுகள் எந்த அளவு புதியனவாக நடப்பெற்ற சுரப்பிகளின் சுரப்பு நீர்களால் ஏற்பட்டவை, எந்த அளவு தனியாளின் மனத்தூண்டலால் ஏற்பட்டவை என்பது இன்னும் வாதத்திற்குரியதாகவே உள்ளது.

**இயற்கையன்னையின் சோதனைகள்:** இத்தகைய சோதனைகளைச் சில சமயம் இயற்கையன்னையே நடத்திமகிழ்கின்முள்! சில சமயம் ஆண் பெண்ணுகவும் பெண் ஆணுகவும் மாறிய

---

79. பேராசிரியர் ஸ்டீனக்—Prof. Steinach
80. லிட்ஸ்டன்—Lydston
81. வொரானொஃப்—Voronoff.

'வியத்தகு செய்திகள்' செய்தித்தாள்களில் வெளிவந்ததைத் நீ படித்திருப்பாய் என்று கருதுகின்றேன். பெண்ணிடம் தாடி வளர்கின்றது; ஆண்குரல் தோன்றுகின்றது; கொங்கைகள் சுருங்கி மறைகின்றன; பிறப்புறுப்புகளும் மாறுகின்றன; இதற்குமாருக ஆணிடமும் மாற்றங்கள் நிகழ்கின்றன. இத்தகைய மாற்றங்கள் சிறுநீரகத்திற்கு மேலுள்ள சுரப்பிகள்[82] அளவுக்குமீறிச் செயற்படுவதனுலும் வேறு காரணங்களாலும் நிகழ்கின்றன என்று சொல்லப்பெறுகின்றன. பெண் ஆணுக மாறும் ஆளிடம் ஆண் விரைகளைப்போன்ற அமைப்புகள் பெண்ணின் சூற்பைகளில் வளர்ந்து இருப்பதாகக் கண்டறியப்பெற்றது. அங்ஙனமே, ஆண் பெண்ணுகமாறும் ஆளிடம சூற்பைகளைப் போன்ற அமைப்புக்கள் அவன்விரைகளில் காணப்பெற்றன. இந்த வகையிலும் புதிய வளர்ச்சியினை நீக்கிவிட்டால், ஆட்கள் சாதாரண நிலையினை அடைகின்றனர். பாரதத்தில் வரும் திரௌபதியின் சகோதரனுன சிகண்டி பெண்ணுகப் பிறந்து ஆணுக மாறிய விந்தையை ஈண்டு நினைவு கூர்க. சில முனிவர்களின் பிறப்பு விலங்குகளின் மூலம் ஏற்பட்டதாக மணிமேகலை என்ற நூலால் அறிகின்றேம். இயற்கையின் விநோதத்தை இலக்கியங்கள் இங்ஙனம் தெரிவிக்கின்றன;

**விரைச் சாரங்கள்:** காமச் சுரப்பு நீர்கள்[83]—ஹார்மோன்கள்—திரும்பவும் இளமையையளிக்கும் சோதனைகளில்—காயகற்பம் முறைகளில்—முக்கியமான பங்கினைப் பெறுகின்றன. ஒரு குறிப்பிட்ட வயதெல்லைக்குப் பிறகு கருவினைச் சார்ந்த சுரப்பிகளின்[84] செயல் குன்றிவிடுகின்றது என்பதை நாம் அறிவோம். பெண்களிடம் இந்நிலை ஐம்பது வயது நெருங்கும்போது தோன்றுகின்றது; ஆண்களிடம் இன்னும் சில ஆண்டுகட்குப்பின்னரே தோன்று

---

82. சிறுநீரகத்திற்கு மேலுள்ளசுரப்பிகள்—Suprarenal glands.
83. காமச்சுரப்பு நீர்கள்—Sex hormones.
84. கருவினைச் சார்ந்த சுரப்பிகள்—Germinal glands.

கின்றது; காமச்சுரப்பு நீர்கள் இன்மையால்தான் ஒருவர் கிழவராகின்றார் என்று ஒருகாலத்தில் கருதப் பெற்றது; பிரௌன்செக்குவார்ட்[85] என்னும் ஃபிரெஞ்சு மருத்துவர் 1889-இல் தம்முடைய எழுபத்தொன்றாவது வயதில் நாயின் விரைகளினின்றும் எடுக்கப்பெற்ற சாரத்தைத் தன் உடலில் குத்திப் புகுத்திக்கொண்டு அதன் விளைவுகளைக் கவனித்துத் தன்னுடைய பொது உடல்நலம், தசையாற்றல், மனச் செயல்கள் ஆகியவற்றில் வியத்தகு மாற்றங்கள் ஏற்பட்டன என்று கூறியுள்ளார். பேராசிரியர் ஸ்டீனக் என்பார் விந்து செல்லும் தூம்பினைக் கட்டி விந்தணுக்களை உற்பத்தி செய்யும் விரைப் பகுதிகளைச் சுருங்கி மறையக்கூடுமாறும், ஹார்மோன்களை உற்பத்தி செய்யும் பகுதிகளை மாற்றும் நன்முறையில் இயங்குமாறும் செய்தார். இவரும் வொரனாஃப் என்பாரும் மானிடக் குரங்கின் சுரப்பிகளை மனிதனிடம் நட்டுச் சோதனைகள் செய்தனர். ஆனால், முன்னர்த் தயாரிக்கப்பெற்ற விரைச்சாரங்களால் நல்விளைவுகள் ஏற்பட்டன என்பதற்குக் கிடைத்துள்ள சான்றுகள் போதா.

அண்மைக் காலத்தில் மிகத் தூய்மையானதும் மிக அடர்வுள்ளதுமான[86] ஆண் ஹார்மோன் உண்டாக்கப் பெற்றுள்ளது. இது விரைகள், ஆணின் சிறுநீர், வேறு மூலங்கள் மூலம் எடுக்கப்பெற்றது. இன்னும் அண்மைக் காலத்தில் செயற்கை முறையில வேதியியற் பொருள்களிலிருந்து ஆண் ஹார்மோன் பிரித்தெடுக்கப்பெற்றுள்ளது; டெஸ்டாஸ்டெரோன்[87] எனப்படும் இந்த ஹார்மோன் உடலினுள் வாயின் மூலமும் குத்திப்புகுத்தல் மூலமும் செலுத்தப் பெறுகின்றது. விரைகள் நீக்கப்பெற்ற ஆண் பிராணிகளிடம் உடன்நிலைப் பாலறி குறிகளை உண்டாக்கு கின்றது. பெண் பிராணிகளிடம் ஆணிடம் உள்ளவை

85. பிரௌன்-செக்குவார்ட்—Brown Sequard.
86. அடர்வுள்ள—Concentrate.
87. டெஸ்டாஸ்டெரோன்—Testosterone.

போன்ற மாறுபாடுகளை விளைவிக்கின்றது. எடுத்துக் காட்டாக, இந்து ஒரு பெட்டைக் கோழியிடம் புகுத்தப் பெற்றால், அதற்குக் கொண்டை வளர்கின்றது; அது சேவலைப் போல் கூவவும் செய்கின்றது. எனவே, இதற்கு ஆணாக்கும் தன்மை உண்டு என்று தெரிகின்றது.

புணர்ச்சிக் குறைபாடுகள் உள்ளவர்களிடம் இதனைச் செலுத்தி நல்ல விளைவுகளைக் கண்டிருக்கின்றனர். இது கிழவர்கட்கு ஒரு நல்ல பொதுத் தூண்டுகோலாக இருக்கவும், குறைந்து போகும் புணர்ச்சித் திறனைத் திரும்பப் பெறுவதற்கும் இதனைப் பரிந்துரை செய்கின்றனர். எனினும், கிழவனாகும் தன்மை பிறப்புறுப்பு மண்டலத்தை மட்டிலும் சார்ந்ததன்று; அஃது உயிரி முழுவதையும் பொறுத்துள்ளது. ஆண்களும் பெண்களும் பல்வேறுபட்ட உடல், உள்ளக் கிளர்ச்சிச் செல்வாக்குட்பட்டவர்களாதலின், இவ்வினைகள் யாவும் இந்த ஹார்மோனால் மட்டிலும் ஏற்பட்டன என்று சொல்லுவதற்கில்லை.

இனி, அடுத்துவரும் கடிதங்களில் பெண் இனப்பெருக்க மண்டலத்தைப்பற்றிய செய்திகளைத் தெரிவிப்பேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

## பெண் உறுப்புகள்

# 10

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன். சென்ற கடிதத்தில் பெண் இனப்பெருக்க மண்டலத்தைப்பற்றி எழுதுவதாகக் கூறியிருந்தேன் அல்லவா? அது குறித்து சில கருத்துகளை இந்தக் கடிதத்திலும் அடுத்து எழுதும் சில கடிதங்களிலும் தெரிவிப்பேன்.

இனப்பெருக்கத்தில் பெண்ணின் பங்கு: இனப் பெருக்கச் செயலில் பெண்ணின் பங்கு ஆணின் பங்கைவிட மிகமிகச் சிக்கலானது. குழந்தை பெறுவதில் விந்தணுக்களை உற்பத்தி செய்வதும் அவற்றைப் பெண்ணினிடம் சேர்ப்பதுமான செயலுடன் ஆணின் பங்கு முற்றுப் பெறுகின்றது என்பதை நீ நன்கு அறிவாய்; முன்னர் எழுதிய கடிதங்களில் இவற்றைக் கூறியுள்ளேன். உடற்கூறுபற்றிய செயல்களைப் பொறுத்தமட்டிலும் விந்தணுக்களைச் செலுத்துவடன் ஆணின் பங்கு நிறைவுபெறுகின்றது. பெண்ணினிடமும் இப் பால் அணுக்களை[88]—முட்டைகளை—உண்டாக்கும் செயல் இருக்கத்தான் செய்கின்றது. இத்துடன் அவளது உடலினுள் கரு அல்லது இளஞ்சூல் வளர்ச்சியின் பல்வேறுபடிகள் நடைபெறுகின்றன. அவளுடைய உடலினுள்தான் ஆண் அணுக்களும் பெண் அணுக்களும் சந்தித்து ஒன்று சேர்கின்றன! அவளுடைய உடலினுள்தான் கருவுற்ற முட்டை தங்கி முதிர்ந்த வடிவைப் பெறுகின்றது. குழந்தை பிறந்த பிறகும் அவளுடைய உடலினுள் சுரக்கும் தாய்ப்பாலைக் கொண்டு தான் அவள் குழந்தையின் தொடக்க வாழ்வில் அதனை

---

88. பால் அணுக்கள்—Sex cells.

ஊட்டம் கொடுத்து வளர்க்கின்றாள். எனவே, குழந்தைப் பெற்றலில் எல்லாச் செயல்களும் பெண்ணின் உடலினுள்ளேயே நடைபெறுகின்றன என்பதை நீ அறிவாயாக. ஆகவே, அவளுடைய இனப்பெருக்க உறுப்புகளும் அவற்றின் செயல்களும் மிக விரிந்த நிலையில் உள்ளன; ஆண் உறுப்புகளை விடவும் அவற்றின் செயல்களை விடவும் பரந்து பட்டு மிகவும் சிக்கலான நிலையில் உள்ளன; உண்மையில் அவை உயிரியலின் அடிப்படையான பொதுச் செயலில் மிகப் பெரும் பங்கினைப் பெறுகின்றன என்பதை உணர்வாயாக.

ஆணிடம் பெரும்பாலும் பாலுறுப்புகள்[89] அவனுடைய உடலின்புறத்தே அமைந்துள்ளன என்பதை நீ அறிவாய். முதலாவதாக அவை விந்தணுக்களையும் விந்துப் பாய்மத்தையும் உண்டாக்குகின்றன என்பதும், இரண்டாவதாக அவை விந்துப் பாய்மத்தைப் பெண்ணிடம் கொண்டு செலுத்தும் வழிகளையும் உறுப்புகளையும் கொண்டுள்ளன என்பதும் உனக்குத் தெரியும். இங்ஙனமே, பெண்ணிடமும் முதலாவதாகப் பாலணுக்களை (முட்டைகளை) உண்டாகும் சுரப்பிகள் உள்ளன; இரண்டாவதாக இந்த முட்டையணுக்கள் செல்லுவதற்கும் விந்தணுக்களை ஏற்பதற்கும் ஏற்ற குழல்களும் வழியமைப்புகளும் உள்ளன; இவற்றுடன் மேலும் இளஞ்சூலின் வளர்ச்சியிலும் ஊட்டத்திலும் பங்கு பெறும் உறுப்புகளும் இருக்கின்றன. இந்த அமைப்புகள் யாவும் பெண்ணுடலின் உட்புறத்திலேயே அமைந்து கிடக்கின்றன; ஆகவே, அவை உட்புறப் பாலுறுப்புகள் என வழங்கப் பெறுகின்றன. பெண்ணுடலின் வெளிப்புறமாகக் காணப்பெறும் பிறப்புறுப்புகள் இனப்பருக்கத்தில் நேரான பங்கினைப் பெறுவதில்லையாதலின் அவற்றைப் பற்றிப் பின்னர்த் தெரிவிப்பேன்.

---

89. பாலுறுப்புகள்—Sex organs.

பெண் இனப் பெருக்க மண்டலம்: இங்குக் காட்டப்பெற்றுள்ள படம் (படம்—13) பெண் இனப்பெருக்க மண்டலத்தைத் தெளிவாக விளக்குகின்றது. இஃது இடுப்பெலும்புக் குழியின் [90] பக்கவாட்டுத் தோற்றத்தை உணர்த்துகின்றது.




படம்—13: பெண் பிறப்புறுப்புகளின் அமைப்பு (பக்கவாட்டுத் தோற்றம்)

1. கன்னிச் சவ்வு. 2. சிறுநீர்ப் புறவழி: 3. யோனிக் குழல், 4. இடுபெலும்புக் கட்டு (பியூபிஸ்) 5. சிறுநீர்ப்பை. 6. கருப்பை, 7. கருக்குழல். 8. சூற்பை, 9. முதுகெலும்புத் தொடர். 10. மலக்குடல்; 11. எருவாய்.

இது முதுகெலும்புக் கீழ்ப் பகுதிக்கும் வயிற்றுச் சுவருக்கும் இடையிலுள்ள பல்வேறு உறுப்புகள் அமைந்திருப்பதைக் காட்டுகின்றது. முதுகெலும்பிற்கருகில் மலக்குடல் இருப்பதையும், வயிற்றுச் சுவரின் அருகில் சிறுநீர்ப்பை இருப்பதை

90. இடுப்பெலும்புக்குழி—Pelvis.

யும் படத்தில் காண்க. இவ்வாறே ஆண் உறுப்புகள் அமைந்திருப்பதை ஈண்டு நினைவுகூர்க. ஐயம் இருப்பின் முன்னர்க் காட்டிய படத்தை நோக்கி அறிக. சிறுநீர்ப் பைக்கும் மலக்குடலுக்கும் இடையே கால்வாய் போன்ற ஒருவழி இருப்பதை நோக்குக. இதுதான் யோனிக்குழல்[91] என்பது. இந்த யோனிக்குழலினுள் மேலிருந்து முந்திரிப்பழம் போன்று ஓர் உறுப்பு நீட்டிக்கொண்டிருப்பதைக் கவனிக்க. இது தான் கருப்பை[92]. கருப்பையின் மேற்பாகத்திலிருந்து கொம்புகள் போன்று இரு பக்கங்களிலும் காணப்பெறும் குழல்கள் தாம் கருக்குழல்களாகும்[93]. அக்குழல்களின் வெளிப்புற இறுதியில் பக்கத்திற்கொன்றாகப் பலாக்கொட்டை போன்று காணப்பெறும் உறுப்புகள்தாம் சூற்பைகள்[94] என்பவை. இவை ஒவ்வொன்றையும் பற்றிச் சிறிது கூறுவேன்.

யோனிக்குழல்: இது தசையாலான மிருதுவான குழல். இது கருப்பையையும் புறத்தே காணப்பெறும் யோனி என்ற பெண் உறுப்பையும் இணைக்கின்றது. கலவியின்பொழுது இஃது ஆண் உறுப்பையும் விந்துவையும் வாங்கும் பகுதியாகும்; மாதவிடாயின்பொழுது கருப்பையிலிருந்து ஊறும் திரவங்களையும் வேறு திரவங்களையும் வெளியேற்றுவதும் இப்பகுதியே. புதிதாகப் பிறக்கும் குழந்தை இப்பகுதியின் மூலமே வெளிவருகின்றது. எனவே, இது 'பிறப்பு வழியின்' ஒரு பகுதியாகின்றது. சாதாரணமாக யோனிக்குழல் சற்றேக்குறைய மூன்று அல்லது மூன்றரை அங்குல நீளமுள்ளது. இந்த அளவு ஆளுக்கு ஆள் வேறுபடுவதுடன் பெண்ணின் கலவி வாழ்க்கையையும் அவளது பிரசவ வரலாற்றையும் பொறுத்தது; மணமாகாத பெண்ணுக்கு மிக ஆழமான யோனிக்குழலும் மணமாகிப் பல ஆண்டுகளான

91. யோனிக்குழல்—Vagina.
92. கருப்பை—Uterus or Womb.
93. கருக்குழல்—Fallopian tube.
94. சூற்பை—Ovary.

பெண்ணுக்கு ஆழமற்ற யோனிக்குழலும் இருப்பதாக அநுபவம்மிக்க மருத்துவர்கள் கூறுகின்றனர்; பெரும்பாலும் குழலின் ஆழமும் அகலமும் பெண் கருவுறுதலாலும் கருவுயிர்த்தலாலுமே மாற்றம் அடைகின்றன. கலவியினால் மட்டிலும் இந்த அளவுகளில் மிகக்குறைந்த மாற்றமே ஏற்படுகின்றது. பெரும்பாலும் உடற்கூற்றின் மாறுபாடுகள், உள்ளக்கிளர்ச்சிகளால் ஏற்படும் தசையிறுக்கங்கள், பெண்ணின் கலவியநுபவம் ஆகியவையும் இந்த மாற்றத்திற்குக் காரணமாகின்றன என்று சொல்லுகின்றனர். சாதாரணமாக விறைத்து நிற்கும்பொழுது ஆறு அங்குலமுள்ள ஆண்குறி (லிங்கம்) எவ்வாறு மூன்று அல்லது மூன்றரை அங்குல நீளமுள்ள யோனிக்குழலில் பொருந்தும் என்ற ஐயம் உன்பால் இயல்பாகவே எழலாம். இதைப்பற்றி இணைவிழைச்சின் பொறிநுட்பத்தைப்பற்றிக் கூறும்பொழுது விளக்குவேன்; கலவியின்பொழுது ஆண்குறி செல்லும்வழி யோனிக் குழல் மட்டிலும் அன்று; அவ்வழியில் பிறப்புறுப்புகளின் ஒரு குறிப்பிட்ட பகுதியும் அடங்குகின்றது. அது யோனிக் குழலின் வெளிப்புறமாகவுள்ள புனல்போன்ற பகுதியாகும்; இப்பகுதி சுமார் ஒன்றரை அங்குல நீளமுள்ளது. மேலும் பிறப்புறுப்புகளைச் சுற்றிலுமுள்ள இழையங்களும் யோனி குழலின் சுவர்களும் விரிந்து சுருங்கும் தன்மையனவாதலின் யோனிக்குழல் மூன்று அங்குல நீளமே இருப்பினும், பெண்ணின் இணைவிழைச்சுவழி சாதாரணமாக ஐந்து அல்லது ஐந்தரை அங்குல நீளமாக அமைகின்றது; இதனால் ஆண்குறியும் அவ்வழியில் நன்கு பொருந்துகின்றது என்பதை அறிவாயாக.

வெளியே காணப்பெறும் பெண்ணுறுப்பில் யோனிக் குழல் வந்து முடியும் இடம் 'யோனிவாய்'[96] எனப்பெறும்; மணமாகாத பெண்களுக்கு யோனிவாயோடு ஒரு மெல்லிய

95. இழையங்கள்—Tissues.
96. யோனிவாய்—Vaginal orifice.

தோல் போர்த்திக் கொண்டிருக்கும். இது 'கன்னிச் சவ்வு'[97] அல்லது 'கன்னித்தோல்' என்று வழங்கப்பெறும். இக்கன்னிச் சவ்வின் அளவும் ஆளுக்கு ஆள் மாறுபடுகின்றது. சிலரிடம் இது பிறைச்சந்திர வடிவிலும், சிலரிடம் வட்டவடிவில் சல்லடைபோல் பல துளைகளைக் கொண்டும், சிலரிடம் ஒரே ஒரு வாயிலைக் கொண்டு வட்டவடிவிலும் அமைந்திருக்கும். சாதாரணமாக இஃதுஒருமெல்லியசவ்வுபோன்றே இருக்கும். முதல் இணைவிழைச்சின்பொழுது இது கிழிந்துவிடுகின்றது; சில சமயம் ஒரு சிலரிடம் இது கிட்டத்தட்ட 2/3 அங்குல கனத்திலும் இருக்கும். இத்தகைய அமைப்புள்ளவர்கள் முதல் இணைவிழைச்சிற்கு முன்னரே அறுவை சிகிச்சை முறையை மேற்கொள்ள வேண்டும்.

யோனிக்குழலின் சுவர் மூன்றடுக்குகளால்[98] ஆனது; இவற்றுள் மேற்பரப்பிலுள்ள அடுக்கு சளிச்சவ்வினால் மூடப் பெற்றுள்ளது. இந்தச் சவ்வில் சளியைச் சுரக்கும் சுரப்பிகள் இல்லை; ஆனால் இச்சவ்வு பல மடிப்புகளால் அமைந்திருப்பதால், மேற்பரப்பு வளைந்து நெளிந்திருப்பதுபோல் காணப் பெறுகின்றது. இதனால் ஏற்படும் முகடுகள் சொர சொரப்பான பரப்பைத் தருகின்றன. இத்தகைய பரப்பு இணைவிழைச்சில் உச்சநிலை உணர்ச்சியைத் தருவதற்கும் துணை செய்கின்றது. மடிப்புகள் யோனிக்குழல் விரிவதற்கும் துணையாக உள்ளது. யோனிச் சுவரின் நடு அடுக்கு தசையினாலானது; இதில் உள்ள குருதிக்குழல்கள் புணர்ச்சியின் பொழுது உப்பி யோனிக்குழலுக்கு ஒருவித விறைப்பினைத் தருகின்றது. நெருங்கியிருக்கும் குருதிக்குழல்கள், யோனிக் குழல் ஆண்குறியுடன் நன்கு பொருந்தி அதை ஓரளவு இறுகப் பற்றுவதற்குத் துணையாகவுள்ளன. இதனால் ஆண் குறியின் உணர்ச்சி தரும் நரம்பின் முடிவுகளும் யோனிக் குழலின் அத்தகைய நரம்பின் முடிவுகளும் ஒன்றாகநெருங்கி இணைவதற்கு வாய்ப்பாக அமைகின்றது. சாதாரணமாக

97. கன்னிச்சவ்வு—Hymen.
98. அடுக்கு—Layer.

யோனிக் குழலின் சுவர்கள் ஒன்றோடொன்று ஒட்டியேஇருக்கும். குழலினுள் ஒரு பொருளை நுழைக்கும்பொழுதுதான் அவை விரிந்து கொடுக்கும். அஃதாவது, இயல்பான நிலையில் யோனிக்குழல் காற்றில்லாத பலூன்போல் இருக்கும்.

யோனிவாயின் அளவும்பெரும்பாலும்வேறுபடுகின்றது. கன்னிச்சவ்வு விரியும்முன்னர் அதன் அளவு அரை அங்குலமே உள்ளது. மணமான பெண்ணிடம் அதன் அளவு ஒன்றரை முதல் இரண்டு அங்குலம்வரையிலும்இருக்கும். இந்த அளவு பெண்ணின் கலவி அநுபவம், குழவிப்பிறப்பின் எண்ணிக்கை ஆகியவற்றைப் பொறுத்திருக்கும். யோனிவாயினைச்சுற்றியுள்ள இழையங்களும் மிகவும் நீண்டு சுருங்கும் தன்மையன. அவை கிட்டத்தட்ட நான்கு அங்குலம் வரையிலும் விரியக் கூடியவை குழந்தையின் தலைவெளிவருவதற்கு இதுமிகவும் துணையாகவுள்ளது. பிரசவம் முடிந்ததும் இந்த வாய் பழைய நிலையினையே அடைந்துவிடும்.

கருப்பை: இவ்வுறுப்பு பட்டையான முந்திரிப்பழத்தைப் போன்ற வடிவத்தைக் கொண்டது. இது மிகவும் உறுதியான தசைகளாலான ஓர் உறுப்பு. இது கருத்தரிப்பதற்கு முன்பு சுமார் மூன்று அங்குல நீளமும், இரண்டு அங்குல அகலமும், ஓர் அங்குல கனமும் உள்ளது. எடையில் ஏறக்குறைய ஒன்றரை அவுன்சு கொண்டது. கருப்பக்காலத்துக் கருப்பை சுமார் பன்னிரண்டு அங்குல நீளமும், ஒன்பது அங்குல அகலமும், எட்டு அங்குல கனமும் உடைய பையாக விரிந்துகொள்கின்றது. எடையும் முப்பது அவுன்சாகப் பெருகிவிடுகின்றது.

கருப்பையை உடம்பு, கழுத்து என்ற இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். மிகவும் அகன்ற பகுதியாகிய உடம்பு மேற்புறமும், குறுகிய பாகமாகிய கழுத்து கீழ்ப்புறமும் உள்ளன. கழுத்துப்பகுதி யோனிக்குழலினுள் நீட்டிக்கொண்டிருக்கின்றது. இப்பகுதியின் அடிப்புறத்தின் நடுவில் கருப்பையின் வெளிப்புறவாய் அமைந்துள்ளது. இது மிகவும்

சிறிய துவாரம்: இத்துவாரத்தில் உட்புறமாக ஒன்றும், வெளிப்புறமாக ஒன்றுமாக இரண்டு வழுவழுப்பானமூடிகள் உள்ளன. கன்னிப்பெண்ணிடம் இவை நெருங்கி இணைந் திருக்கும். மாதவிடாயின்பொழுது இந்த மூடிகள் சற்றுப் பிரிந்து நிற்கும்; அப்பொழுது சற்றுப் பெரிய வட்டமான துவாரம் காணப்பெறும். பிரசவித்த பெண்ணிடம் கருப் பையின் வாயின் விளிம்பு மேடுபள்ளமான மடிப்புகளைக் கொண்டிருக்கும். உடம்புப்பகுதியில் பக்கத்திற்கொன்றாக இரு கருக்குழல்களின் வால்கள் வந்துமுடிகின்றன. கருப்பை யின் அமைப்பைப்படத்தில்காண்க (படம்-14). கருப்பையின்




படம்–14: கருப்பையும் அதனுடன் தொடர்புள்ள உள்ளுறுப்புகளும்.

1. கருப்பைக்குழி; 2. கருப்பைச்சுவர்; 3. கருப்பையின் கழுத்து (செர்விக்ஸ்) 4. கருப்பையின் வாய்.

சுவர்கள் மிக நெருங்கி அமைந்துள்ளது. சுவர்களை வெளிப் புறமாக இழுத்துப் பிடிக்கும் பொழுதுதான் கருப்பையின் உள்ளே முக்கோண வடிவமான பைபோன்ற இடம் உண்டா கின்றது. கருப்பையின் உட்புறம் உள்ள பிரத்தியேகமான சவ்வில் மிக அதிகமான குருதியோட்டம் உள்ளது. இச் சவ்வு

ஒவ்வொரு மாதமும் அமைப்பில் மிகச் சிக்கலான மாறுதல்களை அடைகின்றன. இதுவே மாதவிடாய் எனப்படும். இதனைப் பின்னர் விளக்குவேன்.

கருப்பை, இருபுறங்களிலும் கயிறுபோன்ற தசை நார்களால் கட்டப்பெற்று இடுப்பெலும்புக் கூட்டினுள் தலை கீழாகத் தொங்கிக் கொண்டுள்ளது. இந்த அமைப்பு கருப்பை இப்படியும் அப்படியும் புறண்டுகொள்ளாதபடி காக்கின்றது. சாதாரணமாகக் கருப்பை இயற்கையிலேயே சாய்ந்த நிலையில் அமைந்துள்ளது. கருப்பகாலத்தில் இப்பை எளிதாக விரிந்து மேல் நோக்கி எழும்பி வளர்கின்றது: வயிற்றின் உட்புறம் முழுவதும் போர்த்தப்பெற்றிருக்கும் வபை[99] என்னும் மெல்லியதோல் கருப்பையின் மேற்பாகத்தை மூடிக் கொண்டிருக்கின்றது.

கருப்பையின் சுவர்களிலும் மூன்றடுக்குகள் உள்ளன. கருப்பையின் உற்புறத்தில் மேற்புறமாக இருப்பது சளிச் சவ்வு. இது கூழ்போன்ற ஒருவித பொருளைச் சுரக்கின்றது. இப்பொருள் கருப்பையின் புறவாயை நோக்கிப் பாய்ந்து வந்து அதை ஒரு மூடிபோல் அடைத்துக் கொள்கின்றது. சாதாரணமாக இந்த மூடியில் சதா கசிவு ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும். இந்தக்கசிவின் கெட்டித்தன்மை மாதவிடாய் வட்டத்தையொட்டி மாறுபடுகின்றது: மாதவிடாயை அடுத்து இக்கசிவு ஒட்டுத்தன்மையுடன் உள்ளது; ஆனால், இதன் அளவு குறைந்திருக்கும். முட்டை பக்குவம் அடையும் காலத்தில் இதன் அளவு அதிகமாக இருக்கும்; இப்பொழுது இது பளிங்குபோன்று தெளிவாகவும், நீர்போன்றும், ஒட்டுந்தன்மையுடையதாகவும் இருக்கும். இந்த நிலையில்தான் அது விந்தணுக்கள் முட்டையை நோக்கி நீந்திச் செல்வதற்கு ஏற்றதாக இருக்கிறது. மாதவிடாய் வட்டத் திறுதியில் மூடி மிகவும் தடித்து, இறுகி ஒளி புகாநிலையை அடைந்து விடுகின்றது. கருப்பையில் சளிச் சவ்விற்கு அடுத்

---

99. வபை—Peritonium;

துக் கீழிருப்பது தடித்த தசையடுக்காகும். இதன் நார்கள் மிகவும் அதிகமாக நீண்டு சுருங்கும் தன்மையுடையவை. இதன் காரணமாகவே கருப்பைகருப்பகாலத்தில்பன்மடங்கு நீள முடிகின்றது. கருப்பைச் சுவரின்மேலுள்ள அடுக்கு மிகவும் மெல்லியது; வழுவழுப்பானது.இந்தச் சவ்விலிருந்து தான் தசைநார்கள் கிளம்பி அடிவயிற்றில் தொடங்கும் கருப்பையைப் புறளாதபடி தாங்கி நிற்கின்றன.

கருப்பையைத் தாங்கி நிற்கும் பந்தகங்கள்[100] தளர்ச்சியுற்ருல், கருப்பை புறண்டு விடும்; அல்லது வளைந்துவிடும். கருப்பை பின்புறமாக வளைந்தால், அது மலக்குடலை அமுக்கி மலச்சிக்கலை உண்டாக்கும். இந்த நிலையில் இஃது இடுப்பெலும்பின் நரம்புகளை அமுக்கிஞல், அது முதுகு வலியாகத் தலைக்காட்டும். அடிக்கடி இந்நோயால் பெண்கள் சிரமப்படுவதை நீ அறிவாயாக. ஆனுல், இதற்குமாருன நிலையே மிகவும் அடிக்கடி நிகழ்கின்றது. கடுமையான மலச்சிக்கலின் காரணமாக மலக்குடல் பெரிதாக வீங்கி சதாகருப்பையை அமுக்குவதால், பந்தகங்கள் தளர்ந்து கருப்பை முன்புறமாக நீட்டிக் கொள்ளுகின்றது. கருப்பையும் சிறுநீர்ப்பையும் ஒன்ருேடொன்று செய்து கொள்ளும் செயல்தான் மிகவும் கவனித்தற்குரியது. சாதாரணமாகப் பெண்கள் சிறுநீர் கழித்தலில் கவனக் குறைவாகவுள்ளனர். பலமணிநேரம் சிறுநீர் கழிக்காமலுமிருக்கின்றனர். இதஞல் சிறுநீர்ப்பை நிரம்பிக் கருப்பையை அதிகமாக அமுக்குகின்றது இதஞலும் பந்தகங்கள் தளர்ந்து கருப்பையும் வளைந்து விடுகின்றது. பெற்ருேர்கள் தமது பெண் பிள்ளைகளிடம் சிறு வயதிலிருந்தே இப்பழக்கம் ஏற்படாதவாறு பயிற்சியளிக்க வேண்டும். காலை, நண்பகல், இரவு ஆகிய வேளைகளில் நன்ருகச் சிறுநீர் கழிக்கும் பழக்கத்தைப் பெற்ருல், பிற்காலத்தில் அவர்களிடம் பிறப்புறும்பு, சிறுநீர்பற்றிய கோளாறுகளை ஏற்படா.

---

100. பந்தகம்—Ligament.

**கருக் குழல்கள்**[101]: படம்—14ஐ உற்று நோக்கினால், கருப்பையின் மேற்பாகத்தில் பக்கத்திற்கொன்றாக கொம்புகள் போன்று இரண்டு குழல்கள் இருப்பதைக் காண்பாய். இந்தக் குழல்களின் தன்மையையும் செயலையும் முதன் முதலில் விவரித்துக் கூறியவர் ஃபெலோப்பியஸ்[102] என்ற உடற் கூற்றியல் அறிஞர்[103]. ஆகவே, அவர் பெயரால் அவை ஃபெலோப்பியன் குழல்கள்' என்று வழங்கப் பெறுகின்றன. இவை முறையே ஒவ்வொன்றும் கிட்டத் தட்ட ஐந்து அங்குல நீளம் உள்ளவை; சிறிய நாண்டுகுழல் அளவு உள்ளவை. கருக்குழலின் சுவர்களும் மூன்றடுக்குகளால் ஆனவை. குழலின் உட்புறத்தின் மேற் பரப்பிலிருப்பது சளிச் சவ்வு; இச் சவ்வின் மீது பிசிர்[104] போன்ற உணர்வுப் பகுதி அமைந்து அதற்கு மயிர்ப் பட்டு போன்ற தோற்றத்தை அளிக்கின்றது. இதனை நுண் பெருக்கியின் மூலம் காணலாம். இதன் அடியிலிருப்பது தசையா லான இழையம்; இதற்கு மேற்புறமாக இருக்கும் மெல்லிய மேலுறையே இடுப்புப் பகுதியின் சவ்வினுடன் இணைக்கப் பெற்றுள்ளது. இவற்றின் முடிவுப் பகுதியில் இவை சற்றுப் பருத்துக் குஞ்சம் போன்ற பிரிவுகள் காணப்பெறுகின்றன. சூற்பையில் முட்டை பக்குவமாகியிருக்கும்பொழுது இக் குஞ்சப் பகுதி சூற்பையின் அருகே நெருங்குகின்றது. சூற் பையில் உற்பத்தியாகும் பெண் கரு அணுவை (முட்டையை) இந்தக் குஞ்சப் பகுதியும் கருக்குழலில் உற்பத்தியாகும் ஒரு திரவமும் கவர்கின்றன. இப் பெண் கரு அணு கருப்பையை நோக்கிக் கருக்குழலின் பிசிர்போன்ற உறுப்புகளின் உதவி யால் நகர்ந்து வருங்கால் புணர்ச்சியால் வெளியேற்றப்படும் விந்தணுக்களைச் சந்தித்து அவற்றுள் ஒன்றால் கருவுறுகின் றது. கருவுற்ற அணு கருப்பையில் வந்து தங்குகின்றது.

---

101. கருக்குழல்கள்—Fallodian tubes or Oviducts.
102. ஃபெலோப்பியஸ்—Fallopius.
103. உடற்கூற்றியலறிஞர்—Anatomist.
104. பிசிர்—Cilia.

சூற்பையிலிருந்து வந்த முட்டை கருப்பையை வந்தடைய எட்டு நாட்களாகின்றன.

சில சமயம் கருவுற்ற முட்டையின் பயணம் தடைப்பட்டு அது கருக்குழலின் சளிச்சவ்வில் புதைந்துவிடுகின்றது. இது கருக்குழல் கருப்பத்தில்[105] முடிகின்றது. கருவுற்ற முட்டை இளஞ்சூலாக வளருங்கால் அது கருக்குழலை உடைத்து குருதிப் பெருக்கினை விளைவித்துப் பெண்ணை மரணத்திற்குள்ளாகிவிடும். தக்க அறுவைச் சிகிச்சையால் இதனைத் தடுக்க வேண்டும். வெள்ளைபோன்ற நோயினால் கருக்குழல் புண்ணாகி விட்டால், கருக்குழலின் மெல்லிய துவாரம் அடைபட்டுவிடும். அதனால் கரு அணு உள்ளே வர முடியாமல் போகின்றது. வெள்ளை நோயினால் பீடிக்கப் பெற்ற பெண்களில் சிலர் மலடாகிவிடுவதற்கு இதுவே காரணமாகும்.

சூற்பைகள்: கருக்குழலின் அருகே கருப்பைக்கு இருபுறமும் பக்கத்திற்கொன்றாகக் காணப்பெறுபவையே சூற்பைகளாகும். இவை கிட்டத்தட்ட உரிக்காத வாதுமைக் கொட்டை வடிவத்தைக் கொண்டவை. ஒவ்வொன்றும் ஒன்றரை அங்குல நீளமும், ஓரங்குல அகலமும், அரை அங்குல கனமும் உள்ளவை. ஆணின் விரைகளைப் போலவே இவையும் சில ஹார்மோன்களை உண்டாக்குகின்றன. இந்த ஹார்மோன்கள் பெண்ணின் உடற்செயல்களில் பெரும்பங்கு கொள்ளுகின்றன. ஒரு பெண்ணிடம் கருப்பை, சூற்பைகள், கருக்குழல்கள் முதலியன அமைந்திருப்பதைப் படத்தில் (படம்—15) காண்க. கிராஃபியன் ஃபாலிகிளும் முட்டையும் வளர்ச்சியுறும் நிலையும், பக்குவப்பட்ட முட்டையும், ஃபாலிகிள் வெடித்து முட்டை கருக்குழலுக்குள் புகும் நிலையும் படத்தில் காட்டப் பெற்றுள்ளன.

சூற்பைகள் என்பவை ஆணின் விரைகளைப்போன்று பெண்ணிடம் அமைந்த உறுப்புகளாகும். இனப்பெருக்க

---

105. கருக்குழல் கருப்பம்—Extrapregnancy or Etopic pregnancy.

உறுப்பமைப்பில் இவையே முக்கியமானவை. சூற்பைகள் செயற்படுவதை அறியாமல் இனப்பெருக்கம், கருவுறுதல்,




படம்—15: பெண்ணிடம் முட்டை பக்குவமடைதலை விளக்குவது,

மாதவிடாய் முதலியசெயல்கள்பற்றித்தெளிவான அறிவைப் பெறுதல் இயலாது. குழந்தை கருவில் வளருங்கால் இனப் பெருக்க அணுக்கள் தனியே பிரிந்து இந்தச் சூற்பைகளில்

வந்து தங்குகின்றன. பெண் இளமைப் பருவம் எய்தும் பொழுது இவை நன்கு முதிர்ந்து இனப்பெருக்கத்திற்குக் காத்து நிற்கின்றன. இந்த அணுக்களே பெண் கரு அணுக்கள்[106] (முட்டைகள்) என்று வழங்கப்பெறுகின்றன. ஒவ்வொரு சூற்பையிலும் குழந்தை பிறக்கும்பொழுது 30,000 கரு அணுக்கள் உள்ளன. பெண் 'பெரியவளாகி' அவளது உறுப்புகள் யாவும் வளம்பெற்றுத் தாயாக ஆவதற்குத் தகுதி பெற்றதும் இருபத்தெட்டு நாட்களுக்கு ஒரு முறை சூற்பைகளிலுள்ள கரு அணுக்களில் ஒன்று மெல்ல வளர்ந்து மேல்தோல் அருகில் வந்து தங்கிக்கொள்கின்றது. கருவுறுதலுக்கேற்றவாறு அது முதிர்ச்சியடைந்ததும் மாதவிடாய் ஆன சில நாட்களுக்குப் பிறகு சூற்பையின் தோலைப்பிளந்து கொண்டு வெளியே வந்து கருக்குழலின் குஞ்சம் போன்ற பகுதியால் கவரப்பெற்று கருப்பையை அடைகின்றது. ஒரு பெண்ணின் சூற்பையிலுள்ள பல்லாயிரக்கணக்கான கரு அணுக்களில் ஒரு சில நூறு அணுக்களே (400 அணுக்கள்) முழு வளர்ச்சியுற்றுப் பெண் கரு முட்டைகளாகின்றன. ஒரு பெண்ணின் இனப்பெருக்க வாழ்வு கிட்டத்தட்ட முப்பதுயாண்டுகளே யாதலாலும், அவள் யாண்டொன்றுக்குப் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று முட்டைகளையே வெளிப்படுத்தக்கூடுமாதலாலும் அவள் தன் வாழ்நாளில் வெளிப்படுத்தக்கூடிய முதிர்ச்சியடைந்த முட்டைகளின் எண்ணிக்கை நானூறுக்குமேல் போவதில்லை என்பதை அறிவாயாக.

இதுகாறும் கூறியவற்றால் பெண் இனப்பெருக்க உறுப்புகளில் பெண்ணின் உடலினுள் இருக்கும் உறுப்புகளை மட்டிலும் தெரிந்துகொண்டாய். இனி சூற்பைகளில் முட்டை பக்குவமாதல், பெண் முட்டையின் தன்மை, அது கருவுறும் முறை முதலியவைபற்றிய செய்திகளை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

106. பெண் கரு அணுக்கள்—Ova.

# 11

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனேயாகுக.

முட்டை பக்குவமாதல்: ஒரு பெண்ணின் சூற்பைகளில் பல்லாயிரக்கணக்கான கரு அணுக்கள் இருந்தும் ஒரு சில நூறு அணுக்களே வளர்ச்சியுற்றுப் பெண் கரு முட்டைகளாகின்றன என்று குறிப்பிட்டேன் அல்லவா? ஒரு பெண் பருவம் அடைந்த நாள் தொட்டு[107] கரு அணுக்கள் முதிர்ச்சியடைதல் தொடர்ந்து நடைபெறுகின்றது. ஒரு குறிப்பிட்டபருவ காலம் இடையிட்டு இடையிட்டுப் பழைய அணுக்கள் முதிர்ந்து வளரத் தொடங்குகின்றன; இருபத்தெட்டு நாட்களுக்கு ஒரு முறை இந்த அணுக்களில் பல, அளவில் பெருக்கமுற்றுத் தொடர்ந்து பல்வேறு மாறுபாடுகளை அடைகின்றன. இந்த முட்டைகளில் ஒன்று ஏனையவற்றை விட மிகப் பெரிதாகித் தன்னைச் சுற்றிலும் ஒரு சிறிய அரணை அமைத்துக்கொள்ளுகின்றது. இந்த அரணைப்பற்றி கி. பி. 1672-இல் முதன் முதலாக கிராஃப்[108] என்ற டச்சு உடற் கூற்றியலறிஞர் விளக்கியதனால் இது 'கிராஃபியன் ஃபாலிக்கிள்'[109] என்றே வழங்கப் பெறுகின்றது. இந்த அரண் ஒருவித திரவப் பையினாலானது. இந்தத் திரவத்தில் 'எஸ்ட்ரோஜன்'[110] என்ற ஒருவித ஹார்மோன் உற்பத்தியாகின்றது. இதில் ஒரு பகுதி குருதிமூலம் உடலெங்கும் பரவி உடல் வளர்ச்சியில் பெரும்பகுதியை ஆட்சிபுரிகின்றது. பெண்களுக்கு இயற்கையாகவே உள்ள மெல்லிய குரல், செழுமையான உடற்கட்டு, உருண்ட கொங்கைகள், வழு

---

107. பூப்பு, பருவமடைதல்—Puberty.
108. கிராப்—Graaf.
109. கிராஃபியன் ஃபாலிக்கிள்—Graafian follicle
110. எஸ்ட்ரோஜன்—Estrogen.

வழுப்பான முகம் போன்ற மென்மையின் அறிகுறிகள் யாவும் இந்த ஹார்மோனின் ஆற்றலால் ஆட்சி செய்யப் பெறுகின்றன. இவை போதிய அளவில் குருதியில் பரவா விடில், பெண்கள் முகத்தில் உரோமம் முளைக்கும்; குரல் தடிக்கும். அவர்களிடம் ஆணியல்பு மேலோங்கிவிடும். இந்த ஹார்மோன் கருப்ப காலத்தில் சிறு நீரிலும் நஞ்சுக் கொடியிலும் காணப்பெறுகின்றது. முற்றிலும் வளர்ச்சி




படம்—16: சூற்பையில் முட்டைகளின் இருப்பைக் காட்டுதல்.

1. சூற்பையின் வெட்டுத் தோற்றம்.

2. பல முதிராத முட்டைகளையும் இரண்டு முதிர்ந்த முட்டைகளையும் காட்டும் சூற்பையின் வெட்டுத் தோற்றம்.

யுற்ற ஃபாலிக்கிள் அரை அங்குலக் குறுக்களவுடையது; அஃது அளவில் பெருகப்பெருக, படிப்படியாகச் சூற்பையின் மேற்பரப்பை அடைந்து ஒரு கொப்புளம்போல் காணப்படு கின்றது. சிறிது காலத்தில் பையின் சுவர் உடைபட்டு முதிர்ச்சியுற்ற முட்டை சூற்பையினின்று அடிவயிற்றில்[111] தள்ளப்பெறுகின்றது. இந் நிலையில் கருக் குழலின் முடி விலுள்ள புனல்போன்ற அமைப்பு இம் முட்டையை ஏற் கின்றது; முட்டை சூற்பையினின்றும் வெளித் தள்ளப் பெறும்பொழுதுதான் கருக்குழலின் புனல் அமைப்பு

---

111. அடிவயிறு—Abdomen.

விரிகின்றது. எழும்பும் பந்தை ஏற்கும் கைகள்போல் இப் புனல்பகுதி விரிந்து நிற்கின்றது. எனவே, வெடித்த ஃபாலிக் கிளினின்றும் உந்தப்பெற்ற முட்டை கருக்குழலின் புனல் போன்ற பகுதியால் ஏற்கப்பெறும்வரை ஒரு நொடியில்[112] மிகச் சிறிய காலமே அடிவயிற்றில் தங்குகின்றது! முதிர்ச்சி யடைந்த முட்டை சூற்பையினின்றும் வெளித்தள்ளப் பெறுதலையே நாம் "முட்டை பக்குவமடைதல்"[113] என்று வழங்குகின்றோம். முதிராத பல முட்டைகளும் முதிர்ச்சி யுற்ற இரண்டு முட்டைகளும் சூற்பையிலிருப்பதைப் படத் தில் காண்க (படம்16).

காார்ப்பஸ் லூட்டியம்: முட்டை பக்குவமடைதல்நிகழ்ந்த வுடன் கிராஃபியன்ஃபாலிக்கிளில் சிலமாறுதல்கள்நிகழ்கின் றன. இது காய்ந்து மஞ்சள் நிறமாகவும் கடினமாகவும் ஆகி விடுகின்றது. இந்நிலையில் இது 'கார்ப்பஸ் லூட்டியம்'[114] என்று வழங்கப்பெறும். கருக்குழலில் சென்று தங்கிய முட்டை கருவுற்றால், இந்தக் கார்ப்பஸ் லூட்டியம் என்னும் அமைப்பு நன்றாக வளர்ந்து கொண்டு போகும். இது கருப்ப காலம் முழுவதும் மறையாதிருந்து கருவுயிர்த்தபின்புதான் மறையும். இதில் ஊறும் புரோஜெஸ்டெரோன்[115] என்னும் ஹார்மோன் இனப்பெருக்கத்தில் பெரும் பங்கு கொள்ளு கின்றது. இது குருதியில் பரவி, கருப்பையை அடைந்து, அதனுடைய தசைகளுக்கு நல்ல வலுவை ஊட்டுகின்றது. இந்த ஹார்மோன் தேவைக்குக் குறைவாக உற்பத்தி செய் யப் பெற்றால் கருப்பை போதிய ஆற்றலின்றிச் சுருங்கத் தொடங்குகின்றது. இதனால் கருச்சிதைவு நிகழ்கின்றது. தற்காலத்தில் இந்த ஹார்மோனை ஊசிமூலம் குத்திப்புகுத்தி மருத்துவர்கள் கருச் சிதைவைத் தடுக்க முயல்கின்றனர்.

---

112. நொடி—Second.
113. முட்டை பக்குவமடைதல்—Ovulation.
114. கார்ப்பஸ் லூட்டியம்—Corpus luteum.
115. புரோஜெஸ்டெரோன்—Progesterone.

திங்கள்தோறும் ஒரே ஒரு முட்டைதான் வெளியேற்றப் பெறுகின்றது என்று சொன்னேன். இச் செயலை இரண்டு சூற்பைகளும் எவ்வாறு பகிர்ந்துகொள்ளுகின்றன என்று நீ கேட்கலாம். கூறுவேன்; ஒரு சமயத்தில் ஒரு சூற்பைதான் செயற்படுகின்றது என்பது இன்றைய மருத்துவ இயலாரின் துணிபு. சிறிது காலத்திற்கு முன்பு மாதத்திற்கொரு சூற்பையாக மாறி மாறி செயற்பட்டது என்று நம்பப்பெற்றது. அத்தகைய கால ஒழுங்கோ முறையோ இல்லை என்பதுதான் இன்றைய நம்பிக்கை. ஒரு சூற்பை தொடர்ந்து பல மாதங்கள் செயற்படலாம் என்றும், அதன்பிறகு அடுத்த சூற்பை செயற்படும் என்றும் நிபுணர்கள் கூறுகின்றனர். இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். ஒருசூற்பையை நீக்கிவிட்டாலும், மற்றது அந்த இழப்பை ஈடு செய்யும். அது மாதந்தோறும் ஒரு முட்டையை உற்பத்தி செய்து பெண்ணின் இனப்பெருக்கத் திறன் எவ்விதத்திலும் கெடாமல் பாதுகாக்கும்.

ஆணின் விந்தணுக்கள் கலவியின்பொழுது வெளிப்படுவதைப்போலவே பெண்ணின் முட்டைகளும் கலவியின் பொழுதுதான் வெளிப்படுகின்றனவா என்று கேட்டிருந்தாய். மானிடப் பெண்ணைப் பொறுத்தமட்டிலும் அவ்வாறில்லை; குழி முயல், பூனை போன்ற சில விலங்கினங்களில் முட்டை வெளிப்படுவதற்குக் கலவியே தூண்டுதலாக அமைகின்றது; புணர்ச்சிக்குப் பின்னரே முட்டை வெளிப்படுதல் நிகழ்கின்றது. ஆனால், மானிடப்பெண்ணிடம் கலவியிருப்பினும் இல்லாவிடினும் கரு அணுக்கள் முதிர்ந்து சூற்பைகளிலிருந்து வெளியேறுகின்றன. ஒரு முட்டை நன்கு முதிர்ந்து வெளிவரும் நிலையிலிருக்கும்பொழுது புணர்ச்சிச் செயல் 'முட்டை பக்குவமடைதலை'த் துரிதப்படுத்தலாம். ஆனால், அஃது இன்னும் வாதத்திற்கிடமாகவே உள்ளது.

**மாதவிடாயும் முட்டை பக்குவப்படுதலும்:** பெண்ணின் கரு அணு வெளிப்படுதலுக்கும் அவளிடம் காணப்பெறும் மாதவிடாய் ஒழுங்கிற்கும் யாதாவது தொடர்புள்ளதா என்

றும் வினவியிருந்தாய். உண்மையில் இந்த இரண்டு செயல்களுக்கும் உடலியலடிப்படையில் தொடர்பு இருக்கத்தான் செய்கின்றது. மாதவிடாய் ஒழுக்கின் தோற்றத்திற்குக் காரணமாகவுள்ள அமைப்பிலும் செயல்களிலும் காணப் பெறும் மாற்றங்கள் பெரும்பாலும் சூற்பைகளின் செயல்களைப் பொறுத்தே நடைபெறுகின்றன என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பெற்ற உண்மையாகும். முட்டை வெளிப்படுவதற்கு முன்னரும், வெளிப்படும்போதும், வெளிப்பட்ட பின்னரும்முதிர்ச்சியுறும்முட்டையின் ஃபாலிக்கிளில் உற்பத்தியாகும் ஹார்மோன்கள்தாம் மாதவிடாயைத் தொடக்கி வைக்கின்றன. இன்னொரு முக்கிய செய்தியும் ஈண்டு நீ அறிதற்பாலது. முட்டை வெளிப்படுதலும் மாதவிடாய் நிகழ்தலும் ஒரே சமயத்தில் நடைபெறுவதில்லை. இரண்டு மாதவிடாய்கள் நிகழும் இடைக்காலத்தின் நடுவில்தான் 'முட்டை பக்குவமடைதல்' நடைபெறுகின்றது. சூற்பையிலிருந்து முட்டை வெளிப்படுதலும் அதனை அடுத்து ஃபாலிக்கிளில் நடைபெறும் மாற்றங்களும்தான் அடுத்த மாதவிடாயைத் தொடங்கச் செய்கின்றன என்று கருதுகின்றனர்; அஃதாவது, முட்டை பக்குவமடைந்த பதினான்கு அல்லது பதினாறு நாட்களுக்குள் மாதவிடாய் நிகழ்ந்து விடுகின்றது; எனினும், சில சந்தர்ப்பங்களில் முட்டை பக்குவமடையாமலேயே மாதவிடாய் நிகழ்தலும், மாதவிடாய் நிகழாமலேயே முட்டை பக்குவமடைதலும் உண்டு என்பதையும் நீ அறிந்துகொள்ள வேண்டும். சாதாரணமாக ஒரு பெண் தன்னிடம் எப்பொழுது முட்டை பக்குவமடைதல் நிகழ்கின்றது என்பதை உணர்ந்து சொல்ல முடியாது.

முட்டையணு: இனி, பெண்ணின் கரு அணுவைப்பற்றிச் சிறிது கூறுவேன். அமைப்பிலும் வடிவத்திலும் பெண் கரு அணு ஆணின் விந்தணுவினின்றும் முற்றிலும் மாறுபட்டதாகும். பெண் கரு அணு கோள வடிவுடையது; அதற்கு நகர்ந்து செல்லும் ஆற்றலில்லை. அஃது ஓரிடத்தில் நிலையாக அசைவற்றுக் கிடக்கும். அது விந்தணுவைவிடப் பெரியது;

அதன் குறுக்குவிட்டம் 1/200 அங்குலமுள்ளது; அவ்வணு ஊனக் கண்ணுக்குப் புலனாகக் கூடியது; அப்படியிருப்பினும் அது மிகவும் சிறியதே. சாதாரணமாக அச்சிடப்பெற்றுள்ள ஒரு பக்கத்தில் காணப்பெறும் ஒரு முற்றுப்புள்ளியைவிட அது மிகவும் சிறிதாகவே உள்ளது என்று சொல்லலாம். முட்டையின் வெளிப்புறம் சளிபோன்ற சுவரால் சூழப் பெற்று, உட்புறம் மிக அதிகமான எண்ணிக்கையில் மிகச் சிறிய கொழுப்புத் துணுக்குகளால் நிரப்பப் பெற்றுள்ளது. இது மஞ்சட்கரு[116] என்று வழங்கப் பெறுகின்றது. அணு வின் நடுவில் அல்லது அதன் ஒரு புறத்தில் உட்கரு[117] இருக் கின்றது. இந்த உட்கரு தாய் வழியாக இறங்கக்கூடிய பண்புகளைத் தாங்கி நிற்கும் ஜீன்களையுடைய நிறக் கோள்களைக் கொண்டுள்ளது.

மானிட முட்டை—கோழிமுட்டை: ஒற்றுமை: முக்கிய அமைப்பில் மானிட முட்டையும் பறவையின் முட்டையும் ஒன்று போலவே உள்ளன; ஆனால், மானிட முட்டை சிறியது; கெட்டியான ஓட்டினால் மூடப்பெறவில்லை; இவையே வேற்றுமைகள். முட்டையின் உள்ளே சேமித்து வைக்கப் பெற்றுள்ள ஊட்டப் பொருள்களின் அளவே முட்டையின் அளவு வேற்றுமைக்குக் காரணம் என்பதை நீ உணர்வாயாக. பெட்டைக் கோழியின் முட்டை தாயின் வயிற்றில் தங்குவதில்லை; அது வெளியில் வந்த பிறகே அடைகாக்கப் பெறுகின்றது. தாயின் சார்பின்றியே குஞ்சு முட்டையில் வளர்வதால், முட்டை வெடித்துக் குஞ்சு வெளிவரும் வரையிலும் வளரும் இளஞ்சூலுக்கு வேண்டிய உணவுப்பொருள்களை முட்டைகொண்டிருத்தல் வேண்டும்; தவிரவும், குஞ்சைப் பாதுகாக்க ஓர் ஓடும் வேண்டும். மானிட இனத்தின் வளர்ச்சி முறையே முற்றிலும்வேறானது; முட்டை கருவுற்றதும் அது தாயின் உடலிலேயே பல

116. மஞ்சட்கரு—Yolk.
117. உட்கரு—Nucleus.

மாதங்கள் தங்குகின்றது; தாயினிடமிருந்தே அது நேராகத் தொடர்ந்து ஊட்டத்தைப் பெறுகின்றது. முட்டையில் உணவுப் பொருள்கள் சேமித்து வைக்க வேண்டிய அவசியம் இல்லையாதலின், மானிட முட்டை மிகவும் சிறிதாகவே உள்ளது. இரண்டு முட்டைகளின் வளர்ச்சியும் படத்தில் (படம்—17) காட்டப்பெற்றுள்ளது; உற்று நோக்கித் தெளிவு பெறுக.



படம்—17: மானிட முட்டை-கோழிமுட்டை இரண்டிலும் கருவின் வளர்ச்சியைக் காட்டுவது.

[12 நாட்கள் நிறைவு பெற்ற கோழிக் குஞ்சியின் இளஞ்சூல் இது. முட்டையில் எல்லா ஊட்டப் பொருள்களும் நிறைந்துள்ளன. மானிட இளஞ்சூல் உட்பட எல்லாப் பாலுண்ணிகளின் இளஞ்சூல்களும் தாயின் குருதியிலிருந்தே நஞ்சு, கொப்பூழ்க் கொடிகளின்மூலம் எல்லா ஊட்டப் பொருள்களையும் பெறுகின்றன. இங்குக் காட்டப் பெற்றுள்ளது 5 மாதங்கள் நிறைவு பெற்ற முதுசூல்.]

முட்டை கருவுறுதல்: பெண் முட்டை எவ்வாறு கருவுகின்றது என்பதைக் காண்போம். புணர்ச்சியின்பொழுது எண்ணற்ற விந்தணுக்கள் வெளிப்படுகின்றன என்பதையும், சூற்பையிலிருந்து பெண் முட்டை எவ்வாறு வெளிப்படுகின்றது என்பதையும் நீ நன்கு அறிவாய். விந்தணுக்கள்

கருப்பையை அடைந்து அதன் பின்னர் கருக் குழல்களினுள் நுழைந்து பெண் முட்டையைச் சந்தித்து அதனைச் சூழ்ந்து கொள்ளுகின்றன. இதனைப் படம் (படம்—18) விளக்கு கின்றது.

இந்த விந்தணுக்களில் மிக வன்மையான ஓர் அணு முட்டையைத் துளைத்து வாலறுபட்டு முட்டையினுள் புதைந்து கொள்ளுகின்றது. இதுவே கருவுறுதல்[118] என்பது: இதன் பிறகு முட்டை வேறு விந்தணுக்கள் தன்னுள் நுழைவதற்கு இடம் கொடுப்பதில்லை. எனவே, கருவுறுதல் கருக் குழலிலேயே நடைபெறுகின்றது.




படம்—18: முட்டையணுவை விந்தணுக்கள் சூழ்ந்து கொண்டிருப்பதைக் காட்டுவது:

கருப்பையின் செயல்: கருவுற்ற முட்டை கருப்பையை நோக்கி வருவதைக் கார்ப்பஸ் லூட்டியம் என்னும் அமைப்பு "ஹார்மோன் தந்திகளினால்" கருப்பைக்கு உணர்த்தி முட்டையை ஏற்பதற்குத் தயாராக இருக்குமாறு ஏவுகின்றது. கருப்பையும் இக்கட்டளைக்குக் கீழ்ப்படிந்து தன்னுடைய சளிச்சவ்வினைத் தளர்த்தி முட்டை தன்னுள்ளே புதைந்து கொள்வதற்குத் தன்னைத் தயாராக்குகின்றது. இந்நிலையைப் படத்தில் காண்க (படம்—19): இங்ஙனம் புதைந்துகொண்ட முட்டை சளிச்சவ்விலிருந்து ஊட்டத்தைப் பெற்று இளஞ்சூலாக வளர்கின்றது. இவ்வாறு முட்டை புதைந்து கொள்வதற்குமுன் கருப்பை அசையா

118. கருவுறுதல்—Fertilization.

திருத்தல் வேண்டும்; அசைந்தால் முட்டை புதைந்து கொள்வது தடுக்கப்பெறுகின்றது. கருப்பையின் துடிப்பு அடித்தலைச் சுரப்பியினால் ஆட்சி செய்யப் பெறுகின்றது; கார்ப்பஸ் லூட்டியம் இந்தச் செல்வாக்கினைத் தடுத்துச் சிறிது காலம் கருப்பையை அசையாதிருக்குமாறு செய்கின்றது. இந்தக் காலத்தில்தான் முட்டை கருப்பையில் புதைகின்றது.



படம்—19: கருவுற்ற முட்டையணு கருப்பையில்புதைத்து கொள்ளுவதைக் காட்டுவது.

கருவுற்ற முட்டை கருப்பையில் கிட்டத்தட்ட ஒன்பது மாதங்கள் தங்குகின்றது. இக்காலத்தில் அது குழந்தையாக வெளிவரும் வரையில் பல வியத்தகு மாற்றங்களையும் வேறுபாடுகளையும் அடைகின்றது. கருப்பை முதுசூலின்[119] வளர்ச்சிக்கும் ஊட்டத்திற்கும் ஓர் அடைகாக்கும் கருவி போல்[120] அமைகின்றது. கருப்பையாகிய கூட்டினுள்

---

119. முதுசூல்—Foetus.
120. அடைகாக்கும் கருவி—Incubator.

இளஞ்சூல் பாதுகாப்பையும் வெதுவெதுப்பையும் பெறுவதுடன் ஊட்டத்தையும் அடைகின்றது. முட்டையிலுள்ள சிறிய அளவு உணவுப்பொருள்கள் தொடக்கத்தில் முட்டையின் வளர்ச்சிக்குப் பயன்படுகின்றன. அதன் பிறகு முட்டை வேறு மூலத்திலிருந்தே உணவினைப் பெறவேண்டும். தாயின் உடலிலிருந்து இதனைப் பெறுகின்றது முட்டை புதைந்துகொண்ட இடத்திலிருந்து வளர்ந்த ஓர் உறுப்பின் மூலம் இதனைப் பெறுகின்றது. இச் செயலைப் பின்னர் விளக்குவேன். கருப்ப காலத்தின் இறுதியில் குழந்தை வெளி வருவதற்குத் தயாராக இருக்கும்பொழுது கருப்பையின் வலுவான தசைச் சுவர்கள் சுருங்கி குழந்தையைத் தாயின் உடலினின்றும் வெளியே தள்ளிவிடுகின்றது.

கருவுறாத முட்டை கருப்பையை வந்தடைந்த பிறகு சிதைந்தழிந்து உடலினுள் கவரப்பெறுகின்றது; அல்லது அடியிலுள்ள கருப்பையின் வாய்வழியாக வெளியேறுகின்றது. இவ்வாறு முட்டை வெளிவருவதைப் பெண் உணர முடியாது; அவளுக்கு அதனால் யாதொரு உணர்ச்சியும் ஏற்படுவதில்லை. இன்னும் ஓர் முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிந்துகொள்ள வேண்டும். ஒரு பெண் கருப்பமுற்றிருக்கும் ஒன்பது மாத காலத்திலும் கருவுயிர்த்த சில மாதங்கள் வரையிலும் (அதாவது குழந்தைக்குப் பாலூட்டும் காலத்தில்) புதிய முட்டைகள் முதிர்வதில்லை; மாதவிடாயும் ஏற்படுவதில்லை.

பெண்ணின் பிறப்புறுப்புகளை அறிந்துகொள்ளும் நீ அவளது வாழ்க்கையில் மாதந்தோறும் நிகழும் மாதவிடாயைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். இதனை அடுத்த கடிதத்தில் விரிவாக விளக்குவேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 12

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் பல விளைக.

மாதவிடாய்: பெண் பிறவியின் ஒரு முக்கிய கூறு ஆகிய மாதவிடாயைப்பற்றி இக்கடிதத்தில் விளக்குவேன். கருப்பையினின்று மாதந்தோறும் வெளிப்படும் குருதிக் கசிவினைத் தான் மாதவிடாய்[121] என்று வழங்குகின்றனர். மாதப்பூப்பு, மாத ருது, வீட்டுத்தூரம், வீட்டுவிலக்கு, தலைமுழுக்கு, தீட்டு முதலிய சொற்கள் யாவும் மாதவிடாயைக் குறிக்கும் ஒருபொருட் பன்மொழிகளாகும். கருப்ப காலம், தாய் குழவிக்குப் பால் கொடுக்கும் காலம் ஆகியவை தவிர ஒரு பெண்ணுக்குப் பூப்பு எய்திய காலத்தில் தொடங்கும் மாதவிடாய் சாதாரணமாக ஐம்பது வயது வரை மாதந்தோறும் முறை தவறாது வெளிப்பட்டுக்கொண்டே இருக்கும். சாதாரணமாக, பத்தொன்பது அல்லது இருபது வயதுவரை எந்த வயதிலும் ஒரு பெண் முதல் மாதவிடாயை—பூப்பை—அடையலாம். வெப்பம்மிக்க நாட்டில் வாழும் பெண்கள் சிறு வயதிலேயே பூப்படைகின்றனர். குளிர்ந்த நாட்டில் சற்று வயதாகிய பின்னரே பருவம் எய்துகின்றனர். வாழ்க்கையின் ஏற்றத்தாழ்வும் ஓரளவு மாதவிடாயைப் பாதிக்கின்றது. வறுமையிலும் உழைப்பிலும் உழலும் பெண்கள் சற்று வயதான பின்னரும், செல்வத்திலும் நாகரிக வாழ்விலும் வளரும் பெண்கள் ஒன்பது வயதிலேயும் பெரியவளாகிவிடுகின்றனர். எனவே, ஒரு பெண் பருவமடைதலில் காணப்பெறும் வயது வேறுபாடு அவள் வாழும் நாட்டின் வெப்பநிலை, அவளது

---

121. மாதவிடாய்—Menstruation.

இனம், மரபுவழி, உட்கொள்ளும் உணவு, அவளது சுரப்பி களின் நிலை, உளக் கூறுகள் முதலியவற்றைப் பொறுத்துள் ளது என்பதை அறிவாயாக. பதின்மூன்று வயதில் பூப்பெய்த வேண்டிய பெண் பதினெட்டு வயதாகியும் பருவமடைய வில்லை என்றால், அதற்காகப் பெற்றோர்கள் கவலை கொள்ள வேண்டாம். தங்களுக்குத் தெரிந்த சிகிச்சை முறைகளை யெல்லாம் மேற்கொண்டு இயற்கை நியதியைத் துரிதப் படுத்த வேண்டியதில்லை. ஏனெனில், சிலர் பத்தொன்பதா வது வயதில் கூட தாமாகவே சிறிது தாமதமாகிப் பருவ மடைகின்றனர். இருபது வயதிற்குமேலும் ஒரு பெண் பூப் பெய்தாவிட்டால், மருத்துவர் ஆலோசனையை மேற் கொள்ள வேண்டும்; தேவையான அளவு ஹார்மோன்கள் குருதியில் இல்லாமையே இதற்குக் காரணமாகும். கருப்பை வளர்ச்சி பெறுமல் குழந்தையின் கருப்பைபோல் சிறிய தாகவே இருந்துவிடுவதால் வயதாகியும் சிலரிடம் மாத விடாய் தோன்றுவதில்லை. இதனைத் தக்க ஹார்மோன் களால் குணப்படுத்தி விடலாம்.

மாதவிடாய் வட்டம்: மாதவிடாய் சாதாரணமாக இருபத்தெட்டு நாட்களுக்கு ஒருமுறை நிகழ்கிறது. ஆனல், மிகக் குறைந்த எண்ணிக்கையையுடைய பெண்களிடமே இந்த ஒழுங்குமுறை காணப்பெறுகிறது. பெரும்பாலோரி டம் இஃது இருபத்தைந்திலிருந்து முப்பத்தைந்து நாட்கள் வரை மாறுபட்டே நிகழ்கின்றது: ஆனல், ஒவ்வொருவருக் கும் இந்த 'முறை நாட்கள்' ஒரே சீராக இருத்தல் வேண்டும். அப்படியில்லாமல் முன்னும் பின்னுமாக மாதவிடாய் முறை தவறி ஏற்பட்டால் அது மாதவிடாயில் ஏற்பட்டுள்ள ஏதோ ஒரு கோளாறு என்று உணர்ந்துகொள்ளவேண்டும். சூற்பை களில் ஊறும் சில ஹார்மோன்களும், அடித்தலைச் சுரப்பி யில்[122] சுரக்கும் சில ஹார்மோன்களுமே மாதவிடாய் முறை தவருது ஏற்படக் காரணமாகின்றன. அடித்தலைச் சுரப்பி மட்டிலும் பதினறு வேறு வேறு ஹார்மோன்களை உண்

122. அடித்தலைச் சுரப்பி—Pituitary gland.

டாக்குகின்றது என்று கண்டறிந்துள்ளனர். உடலியல்பற்றிய கூறுகளும் உள்ளக்கிளர்ச்சி பற்றிய கூறுகளும் மாதவிடாய் வட்டத்தின் ஒழுங்கினைப் பாதிக்கின்றன.

மாதவிடாயின்பொழுது வெளிப்படும் குருதிக் கசிவு மூன்று நாட்களுக்காவது இருந்துகொண்டிருக்கும். சில பெண்களுக்கு ஏழு அல்லது எட்டு நாட்கள்கூட நீடித்து வெளிப்பட்டுக்கொண்டிருப்பதுண்டு. ஒரு முறை வெளிவந்த குருதிக் கசிவு நிற்காமல் பத்துப் பதினைந்து நாட்கள் வெளிப்பட்ட வண்ணமிருந்தால், தக்க மருத்துவரை நாடிச் சிகிச்சை செய்துகொள்ளவேண்டும். மாதவிடாயின்பொழுது வெளிப்படும் குருதி முதல் நாளும் கடைசி நாளும் வெளுத்த சிவப்பாகவும் இடை நாட்களில் நல்ல சிவப்பாகவும் இருக்கும். இவ்வாறு வெளிப்படும் குருதி உறைந்து கட்டிக் குருதியாவதில்லை என்பது ஈண்டு அறியத் தக்கது. இக்குருதி வெறுக்கத்தக்க துர்நாற்றத்தைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு மாதவிடாயின்பொழுதும் ஒரு பெண் கிட்டத்தட்ட மூன்றிலிருந்து எட்டு அவுன்சுவரை குருதியை இழக்கின்றாள். இதற்கு மேலும் குருதி வெளியேறினால், பெண்ணுக்குக் குருதிச் சோகை ஏற்படும். ஆகவே, தக்க சிகிச்சை மூலம் குருதி யொழுக்கினை மட்டுப்படுத்துதல் மிகவும் இன்றியமையாதது.

பூப்பின் அறிகுறிகள்: ஒரு பெண்ணுக்குப் பூப்பெய்தும் காலம் நெருங்கியதும் அவளுடைய தோற்றத்திலும் மனநிலையிலும் உடல் அமைப்பிலும் பல மாறுதல்கள் நிகழ்கின்றன. கொங்கைகள் பருத்து உருண்டு நல்ல செழுமையை அடைகின்றன. இடும்பெலும்புக்கட்டு நன்றாக வளர்ந்து உறுதியை அடைகின்றது. உடல் முழுவதும் பரவலாகக் கொழுப்பு படிந்து உடலுக்குச் செழிப்பான தோற்றத்தையும் தோலுக்கு ஒருவித மினுமினுப்பையும் கொடுக்கின்றது. பெண்குறியிலும் அக்குளிலும் உரோமம் முளைக்கத்தொடங்குகின்றது. உடல் மாறுதல்களைப்போலவே உள்ளத்திலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. சிறுமியாக இருக்கும்பொழுது இருந்த களங்கமற்றபார்வை, கபடமற்ற

தன்மை, வெகுளித்தனம் முதலியவை மறைந்து அவற்றிற்குப் பதிலாகக் கூச்சம், நாணம், காமக் குறிப்புடைய நோக்கு முதலியவை யாவும் இளமைப் பருவப் பெண்ணிடம் வந்து குடிகொண்டுவிடுகின்றன.

ஒரு பெண்ணிடம் முதன் முதலாகத் தோன்றும் மாதவிடாய் திடீரென்று நேரிடலாம். சில சமயம் அவள் பூப்பெய்துவதற்குச் சில திங்கள்கட்கு முன்னமே தலைவலி, மயக்கம், பசியின்மை போன்ற அறிகுறிகள் அடிக்கடி ஏற்பட்டுத் தொந்தரவு பண்ணிக் கொண்டிருக்கலாம். கன்னிப் பெண்களுக்குத் திங்கள்தோறும் நிகழும் மாதவிடாயின்பொழுது வயிற்று நோவு அதிகம் ஏற்படலாம். கருப்பையின் வாய் மிகவும் சிறுத்து இருப்பதனால் மாதவிடாயின்பொழுது குருதியை வெளியேற்றக் கருப்பை வேகமாகச் சுருங்கவேண்டியுள்ளது. அதனால் வயிற்றுவலி ஏற்படுகின்றது. இந்த வலியை 'ஆஸ்பரின்' போன்ற மருந்துகளை யுண்டு தணித்துக் கொள்ளலாம். வயிற்றின்மீது வெந்நீர்ப்பை வைத்துச் சூடான ஒற்றடம் போட்டுக்கொண்டாலும் வயிற்று நோவு தணியும். மலச்சிக்கல் இன்றி உடல்நலப் பழக்க வழக்கங்கள் உள்ள பெண்களிடம் பெரும்பாலும் மாதவிடாயின் பொழுது வயிற்று நோவு தலைக்காட்டுவதே இல்லை.

கருப்பையில் மாற்றங்கள்: இனி, மாதவிடாய் ஏற்படும் விதத்தை அறிவியல் அடிப்படையில் ஒருசிறிது விளக்குவேன். ஒரு பெண் சூல் கொள்ளாதபொழுது அவள் மாதந்தோறும் எண்டோமெட்ரியத்தைக் கழித்து நீக்குவதே மாதவிடாய் என்பது. கருப்பையின் உட்புறம் போர்த்துக்கொண்டிருக்கும் மெல்லிய சளிச்சவ்வே 'எண்டோமெட்ரியம்'[123] என்று வழங்கப்பெறுகின்றது. சூற்பைகளிலிருந்து முட்டையணுவொன்று சூற்பைத் தோலின்மீது ஊர்ந்து வந்து முதிர்ச்சியடைந்து பக்குவமடையத் தொடங்கும்பொழுது—அஃதா

123. எண்டோமெட்ரியம்—Endometrium.

வது மாதவிடாய் ஆன முதல் நாளிலிருந்து தொடங்கிப் பதினைந்து நாட்கள்வரை—கருப்பையின் உட்புறத்தோல் மெதுவாக உப்பித் தடித்துக் கொள்ளத் தொடங்குகின்றது. இவ்வாறு நன்றாகத் தடித்துக்கொண்ட தோலின் கீழ்ப் பரவியுள்ள குருதிக் குழல்களில் குருதியோட்டம் அதிகம் ஏற்படுகின்றது. தொடக்கத்தில் கால் அங்குலக் கனத்திற்குக் குறைவாக இருந்த இந்த எண்டோமெட்ரியம் அடுத்த முறை நிகழும் மாதவிடாய் நாளுக்குள் அரையங்குலம் அளவு நன்றாகத் தடித்துப் பஞ்சணைபோல் மிருதுவாகி விடுகின்றது. பெண்ணின் முட்டையணு கருவுற்றால் மேற்படி கருவை வரவேற்றுக் காப்பதற்காகவே கருப்பையில் இந்த மாற்றங்கள் நிகழ்கின்றன. ஒரு பெரிய அரசர் அல்லது முக்கிய விருந்தினர் ஒருவர் நம் வீட்டிற்கு வருங்கால் நாம் இரத்தினக் கம்பளம் விரித்து அவரை வரவேற்க ஏற்பாடுகள் செய்வது போன்று கருப்பையின் உள்ளே ஏற்பாடுகள் இயற்கையாகவே நடைபெறுகின்றன! கருப்பையில் இவ்வாறு வரவேற்பிற்குரிய ஆயத்தங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கும்பொழுது சூற்பையில் முதிர்ச்சியுற்றுப் பக்குவமான முட்டையணு கருக்குழலில் வந்து தயாராகத் தங்கிக்கொள்கின்றது. இந்த நிலையில் புணர்ச்சி ஏற்பட்டால் விந்தணுக்கள் நீந்தி வந்து கருக்குழலையடைகின்றன; அவற்றுள் வன்மையான விந்தணுவொன்று முட்டையணுவைத் துளைத்து அதனுடன் கலந்து அதனைக் கருவுறச் செய்கின்றது. கருவுற்ற முட்டை சில நாட்கள்தாம்—சுமார் எட்டு நாட்கள் தாம்—கருக்குழலில் தங்கியிருக்கும். அதற்குப்பிறகு அங்கே அது வளர இடம் இல்லையாதலின் அங்கிருந்து பெயர்ந்து கீழே இறங்கிக் கருப்பையை வந்தடைகின்றது. அங்ஙனம் வந்த கரு அணு கருப்பையில் தயாராக இருக்கும் பஞ்சணை போன்ற உட்புறத் தோலில் தன்னைப் பதித்துக்கொண்டு வளரத் தொடங்குகின்றது. பஞ்சணையமைப்பும் தொடர்ந்து வளர்த்து இளஞ்சூலுக்கு உற்ற இடமாக அமைந்து விடுகின்றது. இவ்வாறு முட்டை கருப்பையில் பதித்துக் கொண்டுள்ள நிலை ஏற்கெனவே படம்–19இல் விளக்கப்பெற்றுள்ளது. கருவுற்ற முட்டைகள் சில நாட்களுக்குப் பின்னர்

அடையும்நிலை படத்தின் வலப்பக்கத்தில் காட்டப் பெற்றுள்ளது.[124]

முட்டையணு கருவுறுவிடில் அதற்காக நடைபெற்ற ஏற்பாடுகள் கலையத் தொடங்குகின்றன. தடித்து வளர்ந்து கொண்டேபோன கருப்பையின் உட்புறத்தோலில் வெடிப்புகள் ஏற்பட்டு அவை கழன்று சிறு துண்டுகளாக வெளிவந்து விடுகின்றன. அவற்றுடன் அதன் அடியிலிருந்து குருதிக் குழலும் பிளந்துகொண்டு உதிரத்தை வடியவிடுகின்றன. இதுவே மாதவிடாயின் மர்மமாகும். சிதைந்த எண்டோமெட்ரியமும் குருதியும் கலந்த பொருளே மாதவிடாயின்பொழுது வெளிப்படுகின்றது. அஃதாவது, மாதவிடாய் என்பது முதிர்ந்த முட்டையணு கருவுறவில்லை என்பதற்கு ஓர் அறிகுறியாகும். மீண்டும் அடுத்த திங்கள் வரப்போவதாக எதிர்பார்க்கும் கருவுற்ற முட்டையின் நிமித்தம, கருப்பையில் ஏற்பாடுகள் நிகழத் தொடங்கும்பொழுது, எண்டோமெட்ரியம் தடிக்கத் தொடங்கியதும் இவ்வாறு வெளிப்படும் ஒழுக்கு நின்று விடுகின்றது. கருவுறுவதற்காகக் காத்திருந்த முட்டையணுவும் நலிந்து போய் மாதவிடாய் ஒழுக்குடன் வெளியேறி விடுகின்றது. ஒரு முட்டை முதிர்ச்சியுறும் ஒவ்வொரு தடவையும் சூற்பைகளில் உண்டாகும் ஈஸ்டிரின்'[125] 'புரோஜெஸ்டின்'[126] என்ற ஹார்மோன்கள் கருப்பைக்கு அனுப்பப் பெற்று அங்கு அவை அணைச்சவ்வின்மீது அமைப்பில் சில மாற்றங்களைத் தொடங்கிவைக்கின்றன.

ஒவ்வொரு தடவையும் மாதவிடாய் ஏற்படும் முன்பே சில பெண்களுக்குத் தலைவலி, களைப்பு, எரிச்சல் போன்ற அறிகுறிகள் முதல் நாளே தோன்றிவிடுகின்றன. சிலருக்கு ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்னரே முகத்தில் பருக்கள் தோன்றுகின்றன. சில பெண்களுக்கு மாதவிடாய் தொடங்

124. இந்நூல்—பக்கம்-135.
125. ஈஸ்டிரின்—Estrin (Estrogen).
126. புரோஜெஸ்டின்—Progestin (Progesterone).

கும் இரண்டு நாட்களுக்கு முன்பே கொங்கைகள் பருத்து நோவு கொடுப்பதும் உண்டு: சிலருக்குக் காய்ச்சலும் வந்து விடுகின்றது.

பூப்பில் கோளாறுகள்: முதன் முதலாகப் பூப்பெய்தும் பெண்ணிடம் அவளது உறுப்பு அமைப்பின் காரணமாகக்




**படம்–20: பூப்பெய்துவதில் நேரிடும் கோளாறுகளை விளக்குவது.**

*1.* வலியின்றிச் சாதாரணமாகப் பூப்பெய்துதல்; *2.* துவாரமில்லாத கன்னிச் சவ்வு; பூப்பொழுக்கு (குருதி) யோனிக் குழலில் தங்குதல்; *3.* மூடியுள்ள நிலையில் கன்னிச் சவ்வு; யோனிக் குழலில் குருதி தேங்கியுள்ள அபாயநிலை; *4.* தடையின் காரணமாக மாதவிடாய்க் குருதி கருப்பையில் தங்கியிருத்தல்.

குருதி சரியாக வெளிவராமல் அடைபட்டுக் கிடப்பதுண்டு. இதன் காரணங்களைப் படம் விளக்குகின்றது. (படம்—20)

முதற்படம் யாதொரு தடையோ வலியோ இன்றிப் பூப் பெய்துவதை விளக்குகின்றது. இதில் கன்னிச் சவ்வு திறந்த நிலையிலுள்ளது. ஏனைய மூன்று படங்களும் பூப்பெய்துதலில் நேரிடும் கோளாறுகளை விளக்குகின்றன இரண்டாவது படம் கன்னிச் சவ்வில் துவாரம் இல்லாததன் காரணமாகக் குருதி யோனிக்குழலில் தேங்கிக்கிடப்பதை விளக்குகின்றது. இத்தகைய பெண்களின் கன்னிச் சவ்வில் மருத்துவர் செயற்கை முறையில் ஒரு துவாரம் செய்துவிட்டால் உள்ளே அடைப்பட்டுக் கிடக்கும் குருதி வெளியேறிவிடும். அதற்குப் பிறகு முறைதோறும் குருதிக்கசிவு செவ்வனே நடைபெறும். மூன்றாவது படம் தடித்த தசையாலான கன்னிச் சவ்வின் காரணமாகக் குருதி யோனிக் குழலில் தேங்கிக் கிடப்பதைக் காட்டுகிறது. இஃது ஆபத்தினை விளைவிக்கக் கூடியது; நான்காவது படம் கருப்பையின் நுழைவாயிலில் ஏற்பட்டுள்ள தடையினால் குருதி கருப்பையில் தேங்கிக் கிடப்பதைக் காட்டுகின்றது. தக்க அறுவை சிகிச்சை மூலம் இத் தடைகளை நீக்க வேண்டும்.

**மாதவிடாய்க் கோளாறுகள்:** சில பெண்கள் மாதந்தோறும் ஏற்படும் மாதவிடாயின்பொழுது வலியினால் தொல்லைப் படுவதற்குக் காரணம் என்ன என்று வினவியிருந்தாய்; சாதாரண நிலையில் உடல் நலமுள்ள ஒரு பெண்ணிடம் யாதொரு வலியுமின்றி மாதவிடாய் நிகழும். ஆனால், சிலரிடம் பல்வேறு நிலைகளில் வலியுண்டாகும். இடுப்பெலும்புக் கட்டுப் பகுதியில் பாரமாக இருத்தல், நோயுற்ற நிலை தோன்றுதல், எரிச்சல் போன்றவற்றிலிருந்து கடுமையான அடிவயிற்றுப் பிடிப்பு, முதுகுவலி, குடல் தொந்தரவுகள், அதிகச் சோர்வு போன்ற நிலைவரை தொந்தரவுகள் நேரிடலாம். இவ்வாறு பல்வேறு நிலைகளில் பரிணமிக்கும் வலியின் காரணங்களை இன்னும் தெளிவாக அறியக்கூடவில்லை. பிறப் புறுப்புகள் சரியாக வளர்ச்சி பெறுமை, கருப்பை புறண்டிருத்தல், இடுப்பெலும்புக் கட்டுப் பகுதியில் வீங்கிய நிலைகள், சரியான அளவு ஹார்மோன்கள் உற்பத்தியாகாமை,

பொதுவான உடல் வலுக்கேடு,[127] குறிப்பிடத்தக்க மலச் சிக்கல், இன்னும் பல்வேறு கூறுகள் வலியுடன் கூடிய மாத விடாயை விளைவிக்கின்றன உள்ளக் கிளர்ச்சிகளிலேற்படும் கலைவுகளே மாதவிடாய்த் தொந்தரவுகளை உண்டாக்குகின்றன என்று உளநோய் மருத்துவர்கள்[128] கூறுகின்றனர்; ஆனால், வேகமான நாகரிக வாழ்க்கை, தவறான உணவுப் பழக்கங்கள், தேவையான தசைவளர்ச்சியின்மை, நரம்புக் கேடுண்டாகும் போக்குகள் போன்றவை ஓரளவு இத்தகைய வலியுள்ள மாதவிடாய்க்குக் காரணங்களாகலாம். இதுபற்றிய முழு விவரங்களையும், சிலரிடம் அதிகமான ஒழுக்கு ஏற்படுவதன் காரணங்களையும், முறை தவறி மாதவிடாய் ஏற்படுவதன் காரணங்களையும், பிற செய்திகளையும், சில மருத்துவ நூல்களில் கண்டு கொள்க.[129] அச் செய்திகள் முழுவதையும் இங்கு விளக்குதல் இயலாது.

சில பெண்களிடம் மாதவிடாய்தோறும் ஏற்பட்டிருந்த வலி திருமணம் புரிந்துகொண்டதும் மறைந்து போவதையும் நீ கேள்வியுற்றிருப்பாய். ஆனால், இத்தகைய நிலையில் மாற்றம் வலியேற்படுவதன் அடிப்படையான காரணத்தைப் பொறுத்தது. திருமண உறவினால் ஏற்பட்ட உடல் உள்ளக் கிளர்ச்சி மாற்றங்கள் மாதவிடாய்ச் செயலில் செல்வாக்கினைச் செலுத்தி வலியைப் போக்கலாம். பெரும்பாலும் இந் நிலை ஏற்படுவது அரிது. பெண்கள் திருமணத்திற்குப் பிறகு, ஒழுங்கான இணைவிழைச்சினை மேற்கொண்டு நல்ல உச்ச நிலை உணர்ச்சியினைப் பெறுவதால் அவர்கள் சூற்பைகளின் செயலில் மேம்பாடு ஏற்படுகின்றது. சரியான அளவு ஹார்மோன்கள் சுரந்து ஓரளவு இத்தொல்லையைப் போக்குகின்றன. ஆனால், பெரும்பாலோருக்குக் கருப்பம் உண்டாகி முதற் பிள்ளைப்பேறு ஏற்பட்டவுடன் இந்த வலி முற்றிலும்

127. வலுக்கேடு—Debility.
128. உளநோய் மருத்துவர்—Psychiatrist.
129. The Illustrated Encyclopedia of Sex (Cadillac Publishing co., Inc. New York) பக். (90-99).

நீங்கிவிடுகின்றது. பிறப்புறுப்புகளில் ஏற்படும் ஒழுங்கான மாற்றங்களும், வழியமைப்பில் ஏற்படும் மாறுபாடும், மாதவிடாய் வட்டத்தில் ஏற்படும் மாற்றமுமே இதற்குக் காரணங்களாகும்.

மாதவிடாயின் பொழுது கவனம்: மாதவிடாயின்பொழுது என்ன செய்ய வேண்டும் என்பதை ஒவ்வொரு பெண்ணும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். மாதவிடாயின் பொழுது உட்புறம் அணிந்துக்கொள்ளும் பாதுகாப்புத்துணி மிகவும் தூய்மையானதாக இருத்தல்வேண்டும். இதற்கென்று பிரத்தியேகமான முறையில் தயாரிக்கப்பெற்று விற்கப் பெறும் பஞ்சு மிகவும் நல்லது. ஆனால், ஒழுக்கு அதிகமாக வுள்ளபொழுது இஃது அவ்வளவாகப் பயன்படுவதில்லை; அழுக்குத் துணிகளை ஒரு பொழுதும் அணிதல் கூடாது. காரணம், பெண் உறுப்பின்வழியே நச்சுக் கிருமிகள் உட் சென்று 'வலிப்புநோய்'[130] போன்ற நச்சுச் சன்னியை உண்டாக்கிவிடுதல் கூடும். மாதவிடாயின்பொழுது "தீட்டுக் காரி" என்று கேவலமாக நினைத்துக் கொள்ளாமல் காலை யிலும் மாலையிலும் குளித்து உடலைத்தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். உட்புறம் அணியும் பாதுகாப்புத் துணி யையும் இரண்டு மணிக்கொரு தடவை மாற்றிப் புதிய துணியை அணிந்துகொள்ளவேண்டும். பெண் உறுப்பின்மீது குருதி கசிந்து உறைந்து காய்ந்து விடும்படி விடக்கூடாது; அவ்வப்பொழுது வெந்நீரில் கழுவித் துடைத்துத் தூய்மை யாக்கிக் கொள்ளுதல் வேண்டும். இக்காலத்தில் இளஞ் சூடான வெந்நீரில் குளிப்பது நல்லது.

மாதவிடாயின்பொழுது அளவான உடற்செயலால் தீங்கொன்றும்இல்லை: அளவுக்கு மீறிய ஒழுக்குஇருப்பினும், ஓய்விலிருப்பதே நல்லது. பள்ளி, கல்லூரிகளில் படிக்கும் பெண்கள் விளையாட்டுகளில் ஈடுபடுதல் கூடாது. இதனால் உடற் சோர்வு ஏற்படுவதுடன் இடுப்பெலும்புக்கட்டுப்பகுதி யில் அதிக நெருக்கம் ஏற்பட்டு வேறு தொந்தரவுகளும் உண்டாகும்.

130. வலிப்பு நோய்—Tetanus;

சூதக ஓய்வு: கிட்டத்தட்டப் பதின்மூன்று வயதில் தொடங்கும் மாதவிடாய் நாற்பத்தைந்து அல்லது ஐம்பது வயதில் நின்று போகின்றது. இதனைச் 'சூதக ஓய்வு'[131] என்ற பெயரால் வழங்குவர். சிலருக்கு ஐம்பது வயதுக்கு மேலும் ஒழுக்கு ஏற்படும்; சிலருக்கு முப்பத்தைந்து வயதிலேயே நின்றுவிடுவதும் உண்டு மாதவிடாய் தோன்றும் வயதிற்கும் அது நின்றுபோகும் வயதிற்கும் ஒருவித நியதியும் இல்லை. விரைவில் பெரியவளாகும் பெண்ணிடம் நீண்டகாலம் மாதவிடாய் ஏற்படலாம்; தாமதமாகப் பூப்பெய்தும் பெண்ணிடம் நாற்பது வயதிற்குள் மாதவிடாய் நின்றும் போகலாம். மாதவிடாய் வட்டம் நிற்றலுடன் குழந்தைபெறும் செயலுக்கும் ஒரு முடிவு ஏற்படுகின்றது. சூதக ஓய்வு ஒரு பெண்ணின் வாழ்க்கையில் ஒரு முக்கிய திருப்பம் ஆகும்; சூற்பைகள் செயல்படுவது குறைவதால்தான் இது நிகழ்கின்றது. மாதவிடாய் நிற்கும்பொழுதும் பெண்களிடம் குறிப்பிடத்தக்க சில அறிகுறிகள் காணப்பெறும். சிலரிடம் மயக்கம்,[132] தலைவலி, தூக்கமின்மை, படபடப்பு, வாந்தி முதலியவை நேரிடுகின்றன. சிலருக்கு அடிக்கடி உடல் வியர்க்கும்; சிலருக்கு நெஞ்சில் எரிச்சலும் வயிற்றுப்போக்கும் நேரிடுவதுண்டு; உடல் மாறுதல்களைப் போன்றே உள மாறுதல்களும் ஏற்படுகின்றன. அச்சம், சினம், துன்பம், சகிப்புத்தன்மையில் குறைவு போன்ற உணர்ச்சிகள் இந்தப் பருவத்துப் பெண்களிடம் இயல்பாகவே அதிகரித்துவிடுகின்றன. சிலருக்கு வாழ்க்கையில் உள்ள உற்சாகமே குறைந்துவிடுகின்றது; மாதவிடாய் நிற்கும் சமயத்தில் சிலருக்குச் சித்தப் பிரமைகூட ஏற்படுகின்றது! இத்தகைய கோளாறுகளைத் தற்காலத்தில் பல்வேறு ஹார்மோன்களால் குணப்படுத்துகின்றனர்.

சூதக ஓய்வு திடீரென்று ஒரே தடவையில் ஏற்படுவதில்லை. இங்ஙனம் ஏற்படுவது மிகவும் அரிது. சூதக ஓய்வு

---

131. சூதக ஓய்வு—Menopause.
132. மயக்கம்—Dizziness.

ஏற்படுவதற்குச் சிலமாதங்களுக்கு முன்பே வழக்கமாகவரும் மாதப்போக்கில் தவறுகள் ஏற்படும்; வெளிவரும் குருதி அளவில் குறையலாம்; அல்லது மாதவிடாயின் ஒழுங்கு முறை தவறி முன்னும் பின்னுமாக ஏற்படலாம். இங்ஙனம் சிலமாதங்கள்நிகழ்ந்து பிறகுதிடீரென்று நின்றுவிடுகின்றது;

சூதக ஓய்வு ஏற்பட்டதும் கருப்பை, சூற்பைகள், பெண் உறுப்பு[133] முதலியன வற்றிச் சுருங்கிவிடுகின்றன. சில பெண்கள் உருவத்தில் பருத்தும்விடுகின்றனர். ஆடவர்களைப் போன்று சிலரிடம் முகத்தில் உரோமம் முளைக்கும்; உடலில் ஏற்படும் இந்தவிதமான அறிகுறிகளை மருத்துவரிடம் காட்டி தக்க சிகிச்சையை மேற்கொள்வது நல்லது. நாற்பது வய திற்குமேற்பட்ட பெண்களிடம் சூதகஓய்வு ஏற்பட்ட பிறகு திடீரென்று பெண் உறுப்பினின்றும் குருதி கசிந்தால் அசட்டை செய்யாமல் மருத்துவரிடம் காட்டிச் சோதித்துக் கொள்ள வேண்டும். சாதாரணமாகப் புற்றுநோய் [134] நாற் பது வயதிற்குமேல்தான் அதிகம் ஏற்படுகின்றது. அது கருப் பையில் நேர்ந்தால் இவ்வாறு ஓர் அறிகுறியுடன்தான் அதிகம் ஏற்படுகின்றது அது கருப்பையில் ஏற்பட்டால் இவ் வாறு ஓர் அறிகுறியுடன்தான் தொடங்கும். இந்த அறிகுறி புற்றுநோயின் தாமதப்பட்ட அறிகுறியே; ஆகவே, ஒவ் வொரு பெண்ணும் ஆண்டுதோறும் தம்மைப் 'பெல்விக் சோதனைக்கு'[135] உட்படுத்திக்கொள்வது நல்லது; முப்பது வயதிற்கு மேற்பட்டவர்கள் இரண்டாண்டுகட்கு ஒருமுறை யாவது சோதனை செய்து கொள்ளவேண்டும். வந்தபின் காப்பதைவிட வருமுன் காப்பது நல்லதல்லவா?

வெளிப்புறமாகத் தெரியும் பிறப்புறுப்புகளைப்பற்றி அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

133. பெண் உறுப்பு—Vulva.
134. புற்று நோய்—Cancer.
135. பெல்விக் சோதனை—Pelvic examination.

# 13

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

பெண் உறுப்பு: முன்னொரு கடிதத்தில் பெண்ணிடம் உள்ளே அடங்கியிருக்கும் இனப்பெருக்க உறுப்புகளைப்பற்றி விளக்கினேன். இந்த உறுப்புகள் அனைத்தும் ஒன்றுசேர்ந்த நிலையில் 'யோனி'[136] அல்லது 'பெண் உறுப்பு' என்று பொது




படம்—21. பெண்ணின் அகப்பிறப்புறுப்புகளுக்கும் புறப்பிறப்புறுப்புகளுக்கும் உள்ள தொடர்பினைக் காட்டுவது.

1. புறத்தோற்றம்; 2. அகத்தோற்றம்.

வாக வழங்கப்பெறுகின்றது. இத்தொகுதியில் வெளி உதடுகள், உள் உதடுகள், யோனிலிங்கம், கன்னிச்சவ்வு ஆகியவை அடங்கியுள்ளன. இங்குக் காட்டியுள்ள படத்தை

136. யோனி—Vulva.

(படம்—21) உற்று நோக்கினால் இந்த உறுப்புகளின் உற வினைப்பற்றித் தெளிவாக அறிந்து கொள்வாய்; மேல்மட்ட அமைப்பு[137], பொதுத் தோற்றம், வடிவம், அமைப்பில் அடங்கியுள்ள தனியுறுப்புகளின் இருப்பிடம் ஆகிய கூறு களில் வெளிப்புறப் பிறப்புறுப்புகள் எண்ணற்ற மாறு பாடுள்ள தோற்றங்களைக் காட்டுகின்றன. வெளியுதடுகள்[138] தடித்தோ மெல்லியனவாகவோ இருக்கலாம்; உள் உதடு கள்[139] சிறியனவாகவோ நீண்ட வடிவிலோ இருக்கலாம்; யோனி லிங்கமும்[140] நீண்டதாகவோ குட்டையாகவோ, மூடியோ திறந்தோ இருக்கலாம்; கன்னிச்சவ்வே இல்லாமலு மிருக்கலாம். அல்லது அது யோனிக் குழலின் புறவாயிலை முற்றிலும் மூடிக்கொண்டுமிருக்கலாம். ஆகவே பெண் களின் யோனியின் தோற்றங்கள்[141] தனிப்பட்ட வேற்றுமை களில் விரிந்த வீச்சினைக்[142] கொண்டுள்ளன என்பதை நீ அறிவாயாக.

மான்ஸ் வெனரிஸ்: இனி, வெளிப்புறப் பிறப்புறுப்பு கள் கலவியிலும் இனப்பெருக்கச் செயலிலும் என்ன பங்கினைப் பெறுகின்றன என்பதை விளக்குவேன் வெளிப் புறப்பிறப்புறுப்புகள் உட்புற அமைப்புகளைப் பாதுகாப்ப துடன் காதல் உணர்ச்சிகட்கு[143] முக்கிய இடங்களுமா கின்றன. இடுப்பெலும்புக்கட்டுக்கு மேற்பகுதியில் அவை ஒரு மெத்தை போன்று ஒன்றாகத் திரளுகின்றன. இதை 'மான்ஸ் வெனரிஸ்'[144] என்று வழங்குவர். ஆணும் பெண்ணும் கலவிபுரியுங்கால் அவர்களின் இடுப்பெலும்புகள் ஒன்றோடொன்று மோதாதிருப்பதற்கு மெத்தை போன்ற

---

137. மேல்மட்ட அமைப்பு—Contour
138. வெளியுதடுகள்—Outer labia
139. உள் உதடுகள்—Inner labia
140. யோனிலிங்கம்—Clitoris
141. யோனியின் தோற்றங்கள்—Vulvar features
142. வீச்சு—Range
143. காதல் உணர்ச்சிகள்—Erotic sensations
144. மான்ஸ் வெனரிஸ்—Mons Veneris

இப்பகுதி துணைசெய்கின்றது என்று கிராஃப்[145] என்ற உடற் கூற்றியலறிஞர் கருதுகின்றார். இப்பகுதி குட்டையான, பண்படாத உரோமங்களால் மூடப்பெற்றுள்ளது; உடல் கூற்றியல் அடிப்படையிலும் உடலியல் அடிப்படையிலும் இந்த உரோமத்திற்கும் இனப்பெருக்க உறுப்புகளுக்கும் நெருங்கிய உறவு உண்டு. ஆண்களிடமும் பெண்களிடமும் காணப்பெறும் இடைநிலைப் பாலறிகுறிகளில்[146] இந்த உரோமமும் ஒன்று: இந்த உரோமத் தோற்றம் ஆணோ பெண்ணோ பருவமடையத் தொடங்குவதற்குரிய முதல் அறிகுறிகளுள் ஒன்றாகும்: இந்த உரோமம் இருபாலாரிடமும் அமைந்திருப்பதில் சிறப்பான வேற்றுமை காணப்பெறுகின்றது. ஆணிடம் இது கொப்பூழை[147] நோக்கிக் குவிகின்றது; இது மேல்நோக்கிய உச்சியைக் கொண்ட முக்கோணம் போன்று அமைந்துள்ளது. பெண்ணிடம் உரோமப் பகுதியின் மேல் விளிம்பு மான்ஸ் வெனரிஸுக்குமேல் ஒரு படுக்கைக் கோடுபோல் அமைந்து கீழ் நோக்கிய உச்சியைக் கொண்ட முக்கோணம்போல் அமைந்துள்ளது: இந்நிலை பாம்பின் 'படம்போல் இருப்பதால் கவிஞர்கள் அதனைப் 'பட அரவு அல்குல்' என்று குறிப்பிட்டனர் போலும்!

வெளியுதடுகள்: இவற்றைப் பெரிய உதடுகள்[148] என்றும் வழங்குவர். இவை இரண்டு நீளமான மெத்தைகள் அல்லது மடிப்புகள் போன்று அமைந்து பிற வெளிப்புறப் பிறப்புறுப்புகளைச் சுற்றி வளைத்துக்கொண்டுள்ளன. இவையும் உரோமங்களால் மூடப்பெற்று, யோனியின் உள்ளே அமைந்திருக்கும் மிக நுட்பமான பகுதிகளைப் பாதுகாக்க உதவுகின்றன. இளம் பெண்களிடம்—பிள்ளைப்பேறு ஏற்படாத மிகச் சிறிய உள் உதடுகளைக் கொண்ட பெண்

145. கிராஃப்—Graaf
146. இடைநிலைப் பாலறிகுறிகள்—secondary sex characteristics
147. கொப்பூழ்—Umbilicus or Navel
148. பெரிய உதடுகள்—Labia majora

களிடம்—வெளிப்புற உதடுகள் நடுப்பகுதியில் சந்தித்து ஏனைய அமைப்புகளையெல்லாம் மறைத்துக் கொண்டிருக்கும். இந்த உதடுகளிரண்டையும் விலக்கிப் பிடித்துக் கொண்டாலன்றி உள் அமைப்புகள் கண்ணுக்குப்புலனாகா. பெண் கருவுற்ற நிலையிலும், கருவுயிர்க்கும்பொழுதும், வயதான பெண்களிடமும் வெளியுதடுகளின் மட்ட அமைப்பில் மாற்றங்கள் நிகழ்கின்றன. இவற்றால் வெளியுதடுகள் படிப்படியாக விலகி நின்று யோனியின் ஏனைய பகுதிகளை வெளியில் தெரியச் செய்கின்றன.

உள் உதடுகள்: இவற்றைச் சிறிய உதடுகள்[149] என்றும் வழங்குவர்; பெரிய உதடுகளை விலக்கிப்பிடித்தால் இவை கண்ணுக்குப் புலனாகும்; இவை பெரிய உதடுகளுக்கு இணையாக உள்ளன; இவை யோனியின் மேற்கோடியில் தொடங்கித் தலைகீழாகவுள்ள V என்ற ஆங்கில எழுத்துப் போல் விரிந்து காணப்பெறும். அளவு, வடிவம், அமைப்பு, இருப்பு நிலை, இழை நயம்[150] ஆகிய கூறுகளில் உள் உதடுகள் மிகப் பரந்த வேற்றுமைகளைக் காட்டுகின்றன. அவை கண்ணுக்குச் சரியாகப் புலனாகாத் இரண்டு மிகச் சிறிய முகடு[151] களிலிருந்து உள்ளே புதைந்திருக்கும் எல்லாப் பகுதிகளையும் மறைக்கும் அளவுக்கு வளர்ந்த நிலையில் துருத்திக் கொண்டிருக்கும் இரண்டு இழைய மடிகள்[152] வரையிலும் வேறுபடுகின்றன; இவற்றை அகட்டிப் பிடித்துக் கொண்டால்தான் யோனிவாயிலையும்[153] பிற அமைப்புகளையும் காண முடியும். கால் அங்குலம் கூட இல்லாத அகலமுடைய உதடுகளையும் இரண்டரை அங்குல அகலமுள்ள உதடுகளையும் கண்டதாக அநுபவம் மிக்க மருத்துவர் கூறுகின்றனர். இந்த

149. சிறிய உதடுகள்—Labia minora
150. இழை நயம்—Texture
151. முகடு—Ridge
152. இழைய மடிகள்—Flaps of tissus
153. யோனிவாயில்—Vaginal orifice

இரண்டு எல்லை அளவுகளுக்கிடையில்தான் அளவிலும் வடிவத்திலும் வேறுபாடுள்ள உதடுகள் காணப்பெறு கின்றன.

உள் உதடுகளின் மேற்புறத்தில் உறுதியான தோல் போன்ற இழையம் காணப்பெறுகின்றது. ஆனால், அவற் றின் உட் பரப்பில் மிக நுட்பமான ஒருவகை இழையம் அமைந்துள்ளது. மேலும் இந்த உதடுகளில் அதிகமான குருதிக் குழல்களும், நரம்புகளும், சுருங்கி நீளும் இழையங்க ளும் அமைந்திருப்பதால் அவை தூண்டலுக்கு உணர்வுடை யனவாக உள்ளன; அளவிலும் சிறிய மாற்றங்களை அடையக் கூடியனவாகவுமுள்ளன. சரியான முறையில் கிளர்ச்சியேற் பட்டால் அவை விறைப்பாகவும் உறுதியாகவும் ஆகின்றன.

யோனி லிங்கம்: யோனியின் மேற்புறம் இரண்டு உள் உதடுகளும் சந்திக்கும் கோணம் போன்றுள்ள இடத்தில் யோனி லிங்கம் அமைந்துள்ளது. இது யோனித் துவாரத் திற்கு (தலைவாயிலுக்கு) மேல் கிட்டத்தட்ட ஓர் அங்குல உயரத்தில் அமைந்துள்ளது. இது மிகச் சிறிதாக இருப் பினும் புணர்ச்சியநுபவத்திற்கு மிகவும் முக்கியமான உறுப் பாகும். யோனி லிங்கம் அமைப்பில் கிட்டத்தட்ட ஆண் குறியை ஒத்திருக்கின்றது. ஆனால், ஆண் குறியைவிட அளவில் சிறியது; ஆண்குறியில் உள்ளது போன்ற சிறுநீர்ப் புறவழி[154] இதில் இல்லை. இது கால் அங்குல நீளம் உள்ளது. பொதுவாக இதன் நுனி பட்டாணியைப் போன்று உருண்டி ருக்கும். பெரும்பாலும் இது விறைக்குந்தன்மையுள்ள இழை யத்தாலானது; இந்த இழையத்தில் அதிகமாகப் பரவியுள்ள நரம்புகள் தொடுபுலனுக்கும் காதல் சம்பந்தமான தூண்டு தலுக்கும் மிகவும் உணர்வுடையவை. யோனி லிங்கம் ஒரு பாலுறுப்பு என்ற முக்கியத்துவத்தைச் சென்ற நூற்றாண் டில்தான் அறிந்தனர்.

ஏனைய வெளிப்புறப் பிறப்புறுப்புகளைப் போலவே யோனி லிங்கமும் அமைப்பிலும் வடிவத்திலும் மிக அதிக

---

154. சிறுநீர்ப்புற வழி—Urethra.

மான மாறுபாட்டினைக் கொண்டது: சிலரிடம் இவ்வுறுப்பு மிகச் சிறியதாக அமைந்து உள் உதடுகள் அதனை ஒரு முக்காடுபோல் முற்றிலும் மூடிக்கொண்டுள்ளன; ஆதலால் இத்தகைய அமைப்புடைய பெண் தன்னுடைய யோனிலிங்கத்தைக் காணமுடியாது. எனினும் பெரும்பாலான பெண்களிடம் இந்த உறுப்பு நன்கு வளர்ந்து எளிதில் கண்டறியக் கூடியவாறு அமைந்துள்ளது. ஒரு பெண்ணின் யோனிலிங்கத்தின் அளவு அவளுடைய உடலின் அளவுடனோ அன்றி அவளுடைய புணர்ச்சித் துடிப்பின் உரனுடனோ யாதொரு உறவும் கொண்டில்லை என்பது ஈண்டு அறியத்தக்கது.

யோனிலிங்கம்தான் ஒரு பெண்ணின் கலவியுணர்ச்சிகளின் முக்கியமான வெளிப்புறத்தில் காணப்பெறும் இடமாகும். இஃது உடல், காதலுணர்வு கொண்ட உளத்தூண்டல்[155]களுக்கு மிக எளிதில் துலங்கக்[156] கூடியது. அது பெண்குறியில் யோனித்துவாரத்திற்கு அருகில் அமைந்திருப்பதால் கலவிவிளையாட்டின்பொழுதும் கலவிபற்றிய உறவின்பொழுதும் ஒட்டி அமுங்கக்கூடியதாக உள்ளது. பெரும்பாலான பெண்களிடம் யோனிலிங்கத்தை நேர் முறையில் தூண்டித்தான் கலவித் துலங்களை எழுப்புதல் கூடும். புணர்ச்சித் துடிப்பின்பொழுது யோனி லிங்கம் உறுதியானதும் விறைப்பானதுமான நிலையினை எய்துகின்றது. ஆனால், அதன் சிறிய அளவின் காரணமாக இந்த விறைப்பு தெளிவாக இல்லை; உணரக்கூடியதாகவும் இல்லை. கலவியின்பத்திற்கே முக்கியமாகவுள்ள இதன் முக்கியத்துவத்தைப்பற்றிப் பின்னொரு சமயத்தில் விளக்குவேன்.

கன்னிச் சவ்வு: இந்த அமைப்பு யோனிக் குழலின் நுழைவாயிலில் உள்ளது. படத்தை உற்று நோக்கினால் இவ்வாயில் உள் உதடுகளின் அடிவிளிம்புகளுக்கிடையே இருப்பது தெரிய வரும். கன்னிப் பெண்ணிடம் இந்த வாயில் அரை

155. தூண்டல்—Stimulus.
156. துலங்கல்—Response.

குறையாக மூடப்பெற்றிருக்கும். பெரும்பாலான பெண்களிடம் இந்த அமைப்பு அரைவட்டமாக அல்லது பிறைச்சந்திரன் போல் யோனிக்குழலின் நுழைவாயிலின் அடிப்புறம் பாதியில் துருத்திக்கொண்டிருக்கும். மேற்புறம் பாதி திறந்தே இருக்கும்; ஆனால், கன்னிச் சவ்வின் வடிவத்தில் பல்வேறு மாறுபாடுகள் காணப்பெறுகின்றன. சில சமயம் இது யோனி வாயிலைக் கிட்டதட்ட முற்றிலும் ஒரு விதானம் போல்[157] சூழ்ந்திருக்கும்; ஆனால் அதன் நடுவில் ஏதோ ஓரிடத்தில் ஒரு சிறிய தொளை[158] இருக்கும். சாதாரணமாக இத்தொளையில் ஒரு விரல் நுனி நுழையக்கூடும். சிலரிடம் இஃது ஒரு குண்டூசி முனையளவு சிறிதாக இருக்கலாம்; அல்லது அஃது உடைபடுவதற்கு முன்னர் ஓர் அங்குலம் அல்லது அதற்குமேல் குறுக்களவு கொண்ட ஒரு சோதனைக் கருவியை நுழைக்கக்கூடிய அளவிலும் இருக்கலாம். கன்னிப் பெண்ணிடம் கன்னிச்சவ்வில் தொளை இருக்கத்தான் செய்யும். மாதவிடாய் ஒழுக்கும் ஏனைய சுரப்பு நீர்களும் வெளியேற வேண்டுமல்லவா? அதற்காகவே இத்திறப்பு அமைந்துள்ளது. இத்திறப்பேஇல்லாத ஒருசில பெண்ணிடம் பூப்புக் காலத்தில் இத்திறப்பினைச் செயற்கைமுறையில் செய்தல் வேண்டும்; அப்பொழுதுதான் உள்ளே தேங்கிக் கிடக்கும் குருதிவெளிப்படும். மாதவிடாயினை விளக்குங்கால் காட்டின படங்களை மீண்டும் ஒருமுறை உற்று நோக்கி இதனைத் தெளிவுபெறுக[159].

உயிரியல் அடிப்படையில் கன்னிச்சவ்வின் செயலைப் பற்றி இன்னும் தெளிவாக அறியக்கூடவில்லை. வேறு பிராணிகளிடம்—உயர் இனங்களிடம்கூட—இந்தச் சவ்வு காணப்பெறவில்லை. சிலவற்றிடம் வளர்ச்சியடையாத மிகச்சிறு வடிவில் காணப் பெறுகின்றது. மானிட இனப் பெண்ணிடம் மட்டிலும் இது சமூக ஒழுக்க அடையாளமாகவுள்ளது என்றே கருதலாம். முதிர்ச்சியடையாத, கிழட்டு

157. விதானம்—Diaphram
158. தொளை—Aperture
159. இந்நூல்—பக்கம்-143.

நிலையிலுள்ள, அல்லது வன்மையற்ற ஆண்கள் ஓர் இளம் பெண்ணைக் கருவுறச் செய்யாதிருக்க ஒருவிதத் தடையாக இஃது அமைந்துள்ளது என்றும், ஒரு பெண் தன் துணைவனைத் தேர்ந்தெடுக்கும் செயலில் உடற்கூற்றியலின் அடிப்படையில் அமைந்த ஆற்றலை வியக்கும் அடையாளமாக அமைந்துள்ளது என்றும் ஹேவ்லக்எல்லிஸ்[160] என்ற உளவியலறிஞர் கருதுகின்றார்; அப்படியிருப்பினும் நவீன நாகரிக மானிட வாழ்க்கையில் வலுவந்தமாக ஒரு பெண்ணைக் கருவுறச் செய்யும் சந்தர்ப்பமே இல்லாததால், கன்னிச் சவ்வு அத்தகைய உயிரியல் அடிப்படைச் செயலையே இழந்துவிட்டது என்றே கொள்ளவேண்டும்.

உடற்பயிற்சியினாலோ அல்லது தவறாகக் கையாளுவதனாலோ கன்னிச்சவ்விற்குத் தீங்கு நேரிடும் என்று சிலர் நினைப்பது தவறு. சாதாரணமாக மேற்கொள்ளும் உடற்பயிற்சிகளினாலும், சாதாரணமாகப் பிறப்புறுப்புகளைத் தூய்மை செய்வதனாலும் கிழிந்துபோகும் அளவிற்கு அஃது அவ்வளவு மெல்லியதாக இல்லை. அது கிழிய வேண்டுமாயின் அதிக ஆற்றலும் அழுக்கமும் வேண்டியிருக்கும். எனினும், யோனிக்குழலின் திறப்பினைத் தொடர்ந்து திறமையாகக் கையாண்டுப் படிப்படியாக இழுக்கலாம்; அல்லது விரியும்படி செய்யலாம். எடுத்துக்காட்டாக, மாதவிடாய் ஒழுக்கின் பாதுகாப்பிற்காக உட்புறமாக அணிந்துகொள்ளும் துணிமூடியைப் பயன்படுத்துவதால் கன்னிச்சவ்வு கிழியாமலேயே விரிகின்றது. எனவே, கவனமான பரிசோதனையால் ஒரு பெண் கன்னியா அல்லது 'அழிந்தவளா' என்று அறுதியிடுதல் இயலும். எனினும், கன்னிச்சவ்வின் திறப்பு பல்வேறு வேறுபாடுகளுடன் இருப்பதால் பெரிய அல்லது விரிந்த திறப்பு இயல்பானதா அன்றி கலவியினால் அல்லது பிற செயலால் நிகழ்ந்ததா என்று சொல்லுவது கடினம். திருமணம் நிகழ்ந்து பல மாதங்கள் கழிந்தும் சில பெண்களிடம் 'கன்னிச்சவ்வு' காணப்பட்டதாக மருத்துவர்கள் கூறுகின்ற

160. ஹேவ்லக் எல்லிஸ்—Havelock Ellis.

னர்! இவ்விடத்தில், கன்னிச்சவ்வு கிழியும்பொழுது வலி அல்லது குருதிக் கசிவு ஏற்படுகின்றதா என்ற ஐயம் இயல்பாகவே உன்னிடம் எழலாம். இவ்வாறு நிகழ்வது கன்னிச்சவ்வின் இழைநயம், கெட்டித்தன்மை[161], அதன் இருப்புநிலை[162], அது கொண்டுள்ள திறப்பின் அளவு ஆகியவற்றைப் பொறுத்தது; கன்னிச்சவ்வு தடித்தும் இருக்கலாம், மெல்லியதாகவும் இருக்கலாம்; அல்லது அது மிருதுவாகவும் இருக்கலாம், நாரியற் பொருளாகவும் இருக்கலாம்; அல்லது சுருங்கி நீளும் தன்மையுடையதாகவும் இருக்கலாம், உறுதியாகவும் இருக்கலாம். ஆகவே அஃது எளிதாக வலியோ குருதிக் கசிவோ இன்றி விரிதல்கூடும். சிலசமயம் அஃது எதற்கும் எதிர்த்து நின்று அறுவைச் சிகிச்சைக்கு உட்படவும் நேரிடலாம்.

பர்த்தோலின் சுரப்பிகள்: யோனிக் குழலின் நுழைவாயிலின் அருகில்பக்கத்திற்கொன்முக இருக்கும் இரண்டு சுரப்பிகள் பர்த்தோலின் சுரப்பிகள்[163] என்றுவழங்கப்பெறுகின்றன. அவைதெளிவான பாகுபோன்ற திரவத்தைச் சுரக்கின்றன; புணர்ச்சித் தூண்டலின்பொழுது இத்திரவத்தின் அளவு அதிகமாக இருக்கும். இச்சுரப்பிகள் தோலுக்கடியில்இருப்பதால் கண்ணுக்குப்புலனுகா; ஆனால், அவற்றின்சுரப்புநீர்கள் கன்னிச்சவ்விற்கும் சிறிய உதடுகளுக்கும் இடையில் உள்ள பள்ளத்தில் பக்கத்திற்கொன்முக உள்ள இரண்டு மிகச்சிறிய திறப்புகளின் வழியாக வெளிப்படுகின்றன. இச்சுரப்பு நீர் புணர்ச்சியின்பொழுது ஆண்குறி யோனிக்குழலில் வழுவழுப்பாக இறங்கி இயங்குவதற்கு வழுக்கிடுபொருளாக[164] உதவுகின்றது.

இவ்விடத்தில் ஒரு முக்கிய செய்தி அறியத்தக்கது. வெளிப்புறப் பிறப்புறுப்புகளைச் சுற்றிலுமிருந்து வெளி

161. கெட்டித்தன்மை—Consistency
162. இருப்புநிலை—Position
163. பர்த்தோலின் சுரப்பிகள்—Bartholin's glands
164. வழுக்கிடு பொருள்—Lubricant

யேறும்திரவம் யோனியிலிருந்தோ, யோனிக்குழலிலிருந்தோ அன்றி கருப்பையிலிருந்தோ வருதல்வேண்டும். பிறப்புறுப்புகள் நன்னிலையிலிருக்கும்பொழுது, மாதவிடாயின்பொழுதன்றி, யாதொரு ஒழுக்கும் வருதல் கூடாது. ஏனைய காலங்களில் தொடர்ந்து விடாது காணப்பெறும் ஒழுக்கு ஏதோ ஒருவித கோளாறின் அடிப்படையில் தோன்றியதாக வேண்டும். இந்த ஒழுங்கின் தன்மையை மருத்துவரிடம் சோதித்து அறிந்துகொள்ள வேண்டும்.

இக்கடிதத்தின் தொடக்கத்தில் காட்டின படத்தை மீண்டும் ஒருமுறை கூர்ந்து நோக்குக. யோனிலிங்கத்திற்கும் யோனிக்குழலின் நுழைவாயிலுக்கும் இடையில் மற்றொரு சிறிய திறப்பு[165] காணப்பெறுகின்றதல்லவா? இதுதான் சிறுநீர்ப் புறவழியின் திறப்பு ஆகும்; இதன் வழியாகத்தான் சிறுநீர்ப் பையிலிருந்து சிறுநீர் வெளிவருகின்றது. இருபாலாரிடையேயுமுள்ள சிறுநீர்ப்புறவழி வடிவத்திலும் செயலிலும் குறிப்பிடத்தக்க அளவு வேறுபாட்டுடன் அமைந்துள்ளது; ஆணிடம் இவ்வழி வளர்ந்து ஒன்பது அங்குல நீளம் உள்ளது; ஆண்குறி முழுவதிலும் இஃது ஊடுருவிச் செல்கின்றது; இது சிறுநீர் செல்லும் குழலாக உதவுவதுடன் புணர்ச்சியின் பொழுது விந்து வெளிப்படவும் வழியாக அமைகின்றது. பெண்ணிடம் இது கிட்டத்தட்ட நேராக, ஆனால் குட்டையாகவே, உள்ளது; இதன் நீளம், அவர்களிடம் ஒன்றரை அங்குலமே. அதனுடைய இருப்பு நிலையைத் தவிர அதற்கும் இனப்பெருக்க உறுப்புகளின் தொகுதிக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. எனவே, சிறுநீர்ப் பைக்கும் யோனிக்குழலுக்கும் தொடர்பே இல்லை. சிறுநீர்ப்பை தன்னிடமுள்ள சிறுநீரை நேராகப் புறத்தே வெளிப்படுத்துகின்றது. ஆகவே, சிறுநீர் யோனிக்குழலினுள் வருவதற்குச் சந்தர்ப்பமே இல்லை.

மேலும், இப்படத்தை உற்றுநோக்கின், மூன்று திறப்புகள் இருப்பது தெரியவரும்; இவை மூன்றும் ஒன்றை

---

165. திறப்பு—Orifice.

யொன்று நெருங்கியே உள்ளன. மேலே காணப்பெறுவது சிறுநீர்ப் புறவழியின் திறப்பு; இது மிகவும் சிறியது; இது வெளிப்புறப் பிறப்புறுப்புகளின் மடிப்புகளினிடையே இருப்பதால் இதனைப் பிரித்தறிதலே சிலசமயம் கடினமாகி விடுகின்றது. இதற்குச் சற்றுக் கீழே, ஒரே நேர்க்கோட்டில், யோனிக்குழலின் திறப்பு உள்ளது; அதற்கும் இரண்டு அங்குலத்திற்குக் கீழே மலவாயின் திறப்பு இருக்கின்றது இந்த மலவாய் மலக்குடலுக்கும் குடல் வழிக்கும் கொண்டு செலுத்தும்.

கொங்கைகள்: இதுகாறும் பெண்ணின் வெளிப்புறப் பிறப்புறுப்புகளை ஓரளவு விளக்கினேன். எனினும், இவற்றுடன் சேர்ந்து ஆராய வேண்டிய ஒரே ஓர் உறுப்பு உண்டு. இந்த உறுப்புதான் கொங்கைகள் அல்லது தாய்ப்பால் சுரப்பிகளாகும். இவற்றிற்கும் பிறப்புறுப்புகள் செயற்படுவதற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பெண்ணிடம் இடைநிலைப் பாலறிகுறிகளைக் காட்டுவதில் இவ்வுறுப்புகள் மிகமிக முக்கியமானவை. இவற்றின் வளர்ச்சி பெண்ணின் காமச் சுரப்பிகளில்[166] ஊறும் சுரப்பிச் சாறுகளால் பெரிதும் மாறுபடுகின்றது. சிறு வயதில் சிறுவனின் கொங்கைகளுக்கும் சிறுமியின் கொங்கைகளுக்கும் வேற்றுமையே இல்லை; பூப்பு எய்தும் காலத்தில்தான் சிறுமியின் கொங்கைகள் படிப்படியாகப் பருத்துத் திரண்டு உருண்டைவடிவத்தைப் பெறுகின்றன. புதிதாகப் பிறக்கும் குழந்தைகளுக்குப் பால் சுரப்பதே கொங்கைகளின் முதல்நிலைச் செயலாகும். எனினும், இச் செயலுடன் இவை பெண்ணிடம் காம உணர்ச்சிகட்கும் நிலைக்களனாக அமைகின்றன; அவளுடைய துலங்கல்களிலும் எதிர்வினைகளிலும் முக்கிய பங்கினையும் பெறுகின்றன. சிறப்பாக 'முலைக் கண்களிலும்' அவற்றைச் சுற்றியுள்ள கருநிற முள்ள பரப்புகளிலும் மிக நுண்ணிய தசைநார்களும் சுருங்கி நீளும் இழையமும் அமைந்துள்ளன. அவை தொடுதலாலும் காமத் தூண்டலாலும் சுருங்கி விறைத்தநிலையை அடைகின்

166. காமச் சுரப்பிகள்—Sex glands.

றன; அவை காம உணர்ச்சியில் மன நிறைவு பெறுவதிலும் பங்கு பெறுகின்றன. இந்த நுட்பத்தையும் அகப்பொருளின் சிறப்பையும் அறிந்த வள்ளுவப் பெருந்தகை, ''முலையிரண்டும், இல்லாதாள் பெண்காமுற் றற்று''[167] என்று கூறியுள்ளதை ஈண்டு எண்ணி மகிழ்க. இலக்கியமும் அறிவியலும் சில சமயம் இணைந்து கைகோத்துச் செல்வதை உணர்க.

இனி, அடுத்த கடிதத்தில் பெண்ணிடம் தோன்றும் ஒரு சில ஹார்மோன்களைப் பற்றியும் அவற்றுடன் தொடர்பு கொண்ட வேறு சில செய்திகளையும் கூறுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

167. குறள்—402

# 14

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனேயாகுக.

பெண்ணிடம் அதிகமான ஹார்மோன்கள்: இதற்கு முன்னர் எழுதிய கடிதமொன்றில் பெண்ணின் சூற்பைகளில் ஈஸ்டிரின், புரோஜெஸ்டின் என்ற இரண்டு ஹார்மோன்கள் உற்பத்தியாகின்றன என்று குறிப்பிட்டேன் அல்லவா? பெண்ணின் இனப்பெருக்கச் செயல்கள் ஆணின் இனப்பெருக்கச் செயல்களைவிட மிகவும் சிக்கலாக இருப்பதால் பெண்ணிடம் அதிகமான ஹார்மோன்களின் உற்பத்தி நடைபெறுகின்றது; சூற்பைகளில் உண்டாகும் முக்கிய ஹார்மோனாகிய ஈஸ்டிரின் பெண்ணின் ஏனைய பிறப்புறுப்புகளின் வளர்ச்சியையும் அவளிடம் இடைநிலைப்பாலறிகுறிகளை உண்டாக்குவதையும் கட்டுப்படுத்துகின்றது. ஆனால் பெண்ணிடம் மாதவிடாய், கருப்பம், பால்சுரத்தல் ஆகிய செயல்களையுண்டாக்குவதில் பங்கு கொள்ளும் சூற்பைகளில் ஊறும் வேறு ஹார்மோன்களும் உள்ளன. எனினும், இச்செயல்களில் எல்லாம் சூற்பைகள், ஏனைய சுரப்பிகள் ஆகியவற்றையே (சிறப்பாக அடித்தலைச் சுரப்பியினிடையே) குறிப்பிடத்தக்க இடைவினை நடைபெறுகின்றது. அண்மைக்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளால் அடித்தலைச் சுரப்பி தான் பாலுறுப்புகளின் தொகுதி முழுவதையும் செயற்படச் செய்கின்றது என்று கண்டறிந்துள்ளனர். இதன் முழு விவரங்களை உரிய நூல்களில் கண்டுகொள்க.[168]

ஆணிடம் "விரையடித்தலால்"[169] என்ன மாற்றங்கள் நிகழுமோ அவை போன்ற மாற்றங்களே பெண்ணின் சூற்பைகளை நீக்குவதாலும் ஏற்படுகின்றன. சூற்பைகள் நீக்கப் பெற்ற பெண் பிராணியிடம் பெண் தன்மை வளர்வதில்லை;

168. The Illustrated Encyclopaedia of Sex பக்(175-180)
169. விரையடித்தல்—Castration

முதிர்ச்சியடையாத பெண் பிராணியிடம் இந்த அறுவைச் சிகிச்சை செய்தால், பிறப்புறுப்புகள் சாதராணமாக வளர்வதில்லை. கருப்பை குழந்தையினுடையதைப் போலிருக்கின்றது; தாய்ப்பால் சுரப்பிகள் சிறியனவாகவுள்ளன; அப்பிராணியும் கிட்டத்தட்ட அலித்தன்மையைக் காட்டுகின்றது. முதிர்ந்த பிராணியிடம் சூற்பைகளின் நீக்கம் படிப்படியாகக் கருப்பை, கருக்குழல்கள், யோனிக்குழல் ஆகியவை ஊட்டமின்றி மறையத் தொடங்குகின்றன.[170] அப்பிராணியும் கொழுத்துக் காணப்படுகின்றது; சோம்பிய நிலையில் புணர்ச்சி உந்தலின்றியும் போகின்றது.

ஒரு பெண்ணிடம் இந்தச் சூற்பைகளை நீக்கினால், அதனால் ஏற்படும் விளைவுகள் அவளுடைய வயதினைப் பொறுத்துள்ளன. மிக இளமையில் நீக்கப் பெற்றால் ஏற்படும் விளைவுகளும் குறிப்பிடத் தக்கனவாக இருக்கும். பூப்பெய்துவதற்கு முன் ஒரு சிறுமியிடமிருந்து சூற்பைகளை நீக்கினால், அவளிடம் பூப்பு நடைபெறாது; அவளுடைய பிறப்புறுப்புகளும் கொங்கைகளும் வளர்ச்சியுறாமல் குழந்தையினுடையவைபோலவே இருக்கும். மேலும், அவளிடம் சாதாரணமாக ஒரு பெண்ணிடம் அமையவேண்டிய உடலியல்பற்றிய சிறப்பியல்களும் வளர்ச்சி பெறா. இந்த அறுவை சிகிச்சை பெண் பூப்பெய்திய பின்னர் செய்யப்பெற்றால், மாற்றங்களில் அதிக வேறுபாடுகள் இரா; மலட்டுத்தன்மை, மாதவிடாய் நிற்றல் பிறப்புறுப்புகளின் அளவு குறைதல், உடல் கொழுத்துப் போதல் ஆகிய ஒரு சில விளைவுகளையே நாம் காண்கின்றோம். சூதக ஓய்விற்குப் பிறகு சாதாரணமாக ஒரு பெண்ணிடம் ஏற்படும் உள்ளக்கிளர்ச்சி, மனநிலைபற்றிய எல்லாவித மாற்றங்களும் இவளிடம் ஏற்படலாம். எனினும் பூப்பெய்திய பிறகு இரண்டு சூற்பைகளையும் நீக்கி விட்டாலும் காம உணர்ச்சி—புணர்ச்சி நாட்டம்—சிறிதும் பாதிக்கப்பெறுவதில்லை; மானிடப் பெண்ணிடம் பால் துடிப்பினை விளைவிக்கும் ஹார்மோன்செயலைவிட பண்பாட்டு, உளவி

170. ஊட்டமின்றி மறைவு—Atrophy.

யற் கூறுகளே அதிமுக்கியமாக அமைகின்றன; எனவே, பூப்பெய்திய பின்னர் இரண்டு சூற்பைகளை நீக்கினாலும் ஒரு பெண் சாதாரணமாகப் புணர்ச்சி நாட்டமுள்ளவளாகவே இருப்பாள்; அவளிடம் தாம்பத்திய உறவுகளும் திருப்தியான முறையிலேயே இருக்கும்.

மேற்குறிப்பிட்ட அறுவை கிகிச்சை, சோதனைகளுக்காகப் பிராணிகளிடம் பன்முறை மேற்கொள்ளப்பெற்றது: காமக் கூறுகளின் வளர்ச்சியில் சூற்பைகளின் உறவினைத் திட்டமாக நிறுவுவதற்கு இச்சோதனைகள் துணை செய்தன; ஓர் இளம் பெண் பிராணியிடம் சூற்பைகளை நீக்கிப் பின்னர் அதனிடம் வேறொரு சூற்பையை நாட்டினால், அப்பிராணி சாதாரணமாகப் பால் வளர்ச்சியினையும் அடைகின்றது: ஒரு சில ஆண் பிராணிகளிடமிருந்து விரைகளை நீக்கி அவற்றிற்குப் பதிலாகச் சூற்பைகளை நட்டு அவற்றிடம் பெண் தன்மை வளரச் செய்தலும் சாத்தியப்படுகின்றது; இவ்வாறு பெண் தன்மை வளரச் செய்த ஒரு பன்றி அல்லது எலி பெண்ணைப்போன்ற தோற்றத்தைக் காட்டி பால் நடத்தையையும் எதிர்வினை புரிதலையும் மேற்கொள்ளுகின்றது; இத்தகைய பிராணியிடம் குறிப்பிடத்தக்க அளவு முலைக் காம்புகள் பெருத்து, பால் சுரந்து, அதன் குட்டிகளுக்கும் பாலூட்டியது மிகவும் கவனத்திற்குரிய விளைவாகும்: இப் பிராணி பெண் பிராணியைப் போலவே எதிர்வினை புரிகின்றது; கூண்டினுள் வைக்கப்பெறும் குட்டிப் பிராணிகளிடம் திட்டமான தாய்மையூக்கத்தைக் காட்டுகின்றது. அண்மையில் அடித்தலைச் சுரப்பி, சூற்பை ஆகியவற்றின் சாறுகளைச் சில ஆண்பிராணிகளிடம் குத்திப் புகுத்தி இதேமாதிரியான விளைவுகளைக் கண்டுள்ளனர். பெரும்பாலும் சில வேதியியல் தூண்டல்களின் விளைவினால்தான் தாய்மையூக்கமும் நடத்தையும் காணப்பெறுவனபோல் தோன்றுகின்றது.

ஈஸ்டிரின், புரொஜெஸ்டிரின்: புதிதாகப் பிறந்த ஆண் பெண் குழவிகளின் கொங்கைகளில் சில சமயம் பால் காணப் பெறுவது இயல்பிகந்த முறையில் பால் சுரக்கும்

கவர்ச்சிகரமான ஒரு நிகழ்ச்சியாகும். தாய்கருப்பமுற்றிருக்குங்கால் அவளுடைய குருதியில் பெண் பாலறி ஹார்மோன் (ஈஸ்டிரின்) அதிகமாகச் சுரப்பதனுல் அது முதுசூலினுலும் சுவரப்பெற்று இத்தகைய விளைவினை உண்டாக்குகின்றது என்று காரணம் கூறப்பெறுகின்றது.

சூற்பைகளை நீக்கினுல் ஏற்படும் மாறுபாடுகள்: மேற் கூறியவற்றினுல் எப்பொழுதாவது பெண்களிடம் சூற்பைகள் இடம் மாற்றி நடப்பெற்றனவா[171] என்ற ஐயம் உள் பால் இயல்பாகவே எழலாம். ஒரு பெண்ணிடமிருந்து மற்ருெரு பெண்ணுக்கு நோய் தீர்க்கும் காரணத்திற்காகவோ அல்லது காயகற்பத்தினை[172] விளைவிப்பதற்காகவோ சூற்பைகள் இடமாற்றியமைக்கப் பெற்றன. ஏதாவது ஒரு நோயின் காரணமாகவோ அல்லது இயல்பிகந்த ஒரு தன்மையின் காரணமாகவோ ஒரு பெண்ணின் சூற்பைகளை நீக்க நேர்ந்த பொழுது அறுவை மருத்துவர்கள்[173] வேருெரு பெண்ணின் சூற்பையின் ஒரு பகுதியையோ அல்லது முழு சூற்பையையோ காயடித்தல் போன்று ஏற்படும் விளைவினைத் தடுப்பதற்கு இந்த நோயாளியின் அடிவயிற்றுத் தசைகளில் புதைத்திருக்கின்றனர். வோரனேஃப்[174] என்பார் வாலில்லாப் பெண் குரங்குகளின்[175] சூற்பைகளைக் கிழப் பருவம் எய்தும் பல பெண்களிடம் அமைத்து வெற்றிகரமான காய கற்ப விளைவுகளைக் கண்டுள்ளார். எனினும் அவருடைய வேலையைப் பற்றியும் சுரப்பிகளை இடம் பெயர்த்து நடுவதனுல் இழையங்களைக் காய கற்பமாக்கலாம் என்பது பற்றியும் இன்னும் பெரிய அளவு நம்பிக்கையின்மையே[176] நிலவி வருகின்றது.

---

171. இடம் மாற்றி நடு—Transplant
172. காயகற்பம்—Rejunevation
173. அறுவை மருத்துவர்—surgeon
174. வோரனுஃப்—Voronoff
175. வாலில்லாக்குரங்கு—Chimpanzee
176. நம்பிக்கையின்மை—Scepticism.

சூற்பைகளைப் பெயர்த்து நடுதல்: இன்னும், ஒரு பெண்ணின் சூற்பைகளை நீக்கிவிட்டு இன்னொரு பெண்ணின் சூற்பைகளை அவளிடம் நட்டால் அவளால் குழந்தை பெற முடியுமா என்றும் நீ ஐயுறலாம். பெயர்த்து நடப்பெற்ற சூற்பை தொடர்ந்து ஹார்மோன்களை உண்டாக்கும் என்ற நம்பிக்கையாலும், இதனால் சூதக ஓய்வுக்குரிய அறிகுறிகள் தடுக்கப் பெறும் என்ற நம்பிக்கையாலும் இந்த அறுவை முறை சிகிச்சை மேற்கொள்ளப்பெறுகின்றது: எனினும், நடைமுறையில் இவ்வாறு புதிதாகப் பெயர்த்து நடப்பெற்ற உறுப்புகள் படிப்படியாகச் சுருங்கி தம்முடைய செயல்களையும் இழக்கின்றன. எப்படியாயினும் புதிய சூற்பை கருக்குழலுக்கு மிக அருகில் பெயர்த்து நடப்பெறுதவரை இம்முறையில் இனப்பெருக்க ஆற்றலைத் திரும்பவும் அடைதல் முடியாது. ஆனால், இத்தகைய சோதனைகள் இதுகாறும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. இதற்குப் பதிலாக இன்று அடர்வுமிக்க பெண் ஹார்மோன்கள் அதிகமாகக் கிடைப்பதால், இத்தகைய சோதனைகள் மிக அரிதாகவே மேற்கொள்ளப்பெறுகின்றன.

சூற்பைகளிலிருந்து நேராக இந்த ஹார்மோன்கள் பிரித்தெடுக்கப்பெறுகின்றனவா அல்லது வேறு முறையில் தயாரிக்கப்பெறுகின்றனவா என்று நீ வினவலாம். கூறுவேன்; முதன் முதலாக இந்த ஹார்மோன்கள் சூற்பை இழையத்தினின்றுதான் தயார் செய்யப்பெற்றன. எனினும், பின்னர் இவை பெரும்பாலும் சூலுற்ற பெண்களின் சிறுநீரினின்றே எடுக்கப்பெற்றன. சூலுற்ற நிலையில் இந்த ஹார்மோன்களின் உற்பத்தி அதிகப்பட்டு சிறுநீரில் செல்லுவதால், இவற்றை இந்த மூலத்தினின்றும் பெறலாம்.

தெளிவான வேற்றுமையுடைய இரண்டு ஹார்மோன்கள் சூற்பைகளில் உண்டாக்கப்பெறுகின்றன என்பதை ஏற்கனவே நீ அறிவாய்; முன்னர் எழுதியகடிதங்களில்இவற்றை நான் குறிப்பிட்டெழுதியுள்ளேன். ஒன்று, எஸ்ட்ரோஜென் என்பது; முட்டை முதிரும் ஃபாலிக்கிளில் இஃது உண்டாகின்றது: மற்றொன்று, புரொஜெஸ்டெரோன் என்பது,

முட்டை பக்குவமடைதல் நிகழ்ந்த பிறகு ஃபாலிக்கிளை நிறைக்கு மஞ்சட் பொருளின்[177] அணுக்களினின்றும் இது உண்டாகின்றது. இந்த ஹார்மோன்களின் பங்கினைப்பற்றி அறிய இன்று விரிவாக ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பெற றுள்ளன. இன்று அவை ஒருவரிடம் ஹார்மோன்களின் குறையைத் திருத்தவும் பாலுறவுபற்றிய செயலையும் இனப் பெருக்கச் செயலையும் தூண்டவும் பயன்படுத்தப்பெறு கின்றன. எனினும், அவற்றின் பயனும் எல்லையும் திட்ட மாக நிறுவப்பெறவேண்டுமாயின் இன்னும் அதிகமான ஆராய்ச்சிகள் தேவை.

செயற்கை முறையில் ஹார்மோன்கள்: அண்மைக் காலத் தில் பெண்ணின் பாலறி ஹார்மோன்களைப் போன்ற பண்பு களையுடைய பொருள்கள் சேர்க்கை முறையில்[178] உண்டாக் கப்பெற்றுள்ளன. அவற்றின் விளைவுகளும் இயற்கையில் கிடைக்கும் எஸ்ட்ரோஜெனின் விளைவுகளைப் போன்றே காணப்பெறுகின்றன. எனவே, அவை அதிக விலையுள்ள எஸ்ட்ரோஜென்களுக்குப் பதிலாகப் பயன்படுத்தப் பெறு கின்றன. ஏற்கெனவே சூற்பைகள் நீக்கப்பெற்ற பிராணி களிடம் இவற்றைக் குத்திப் புகுத்தினால், பாலறிகுறிகளின் வளர்ச்சியையும் பால் நடத்தையையும் பொறுத்தவரையில் அவை சூற்பைகளின் செயலைத் திரும்ப அமைக்கின்றன. அவை கருப்பை, கருக்குழல்கள், யோனிக்குழல், கொங்கை கள் ஆகியவற்றை வளரச் செய்து சாதாரணமான கலவிச் செயலையும் தோற்றுவிக்கின்றது. சூற்பைகள் படிப்படியாக ஓய்ந்து சூதக ஓய்வு தொடங்கும்பொழுது பெண்களிடம் இந்த ஹார்மோன்கள் அடிக்கடிப் பயன்படுத்தப்பெறு கின்றன. இது சூதக ஓய்விற்குரிய அறிகுறிகளுள் பலவற் றைப் போக்கி பெண்ணிடம் நன்னிலையை விளைவிக்கின்றது. இனி, அடுத்து வரும் கடிதங்களில் இனப் பெருக்கத்தைப் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

177. மஞ்சட் பொருள்—Yellow body. 178. சேர்க்கை முறையில்—Synthetically.

இயல்—3

# இனப் பெருக்கம்

'இனப்பெருக்கம்' என்ற செயல் இறைவன் படைப்பில் வியத்தகு முறையில் நடைபெறுகின்றது. பால் வேற்றுமையில்லா நிலையிலும் பாலறி முறையிலும் இனப்பெருக்கம் நடைபெற்று வருகின்றது. மானிட இனத்தில் பெண்ணிடமுள்ள ஒரு முட்டையணுவும் ஆணிடமுள்ள ஒரு விந்தணுவும் சேர்வதால் பெண் கருவுற்றுப் பிள்ளையைப் பெறுகின்றாள். கருவுறும் முறை, கரு வளரும் நிலைகள், கருப்பகாலக் கோளாறுகள், குழந்தைப்பேறு முதலியவை ஏற்படுங்கால் மேற்கொள்ளப்பெற வேண்டிய நடவடிக்கைகள், சிரமமான பிரசவங்களில் மருத்துவர் கையாளும் முறைகள், இரட்டைக் குழவிகளின் தன்மைகள், இரட்டைக் குழவிகள் கருப் பையில் இருக்கும் பல்வேறு நிலைகள் ஆகியவை போன்ற பல செய்திகள் இப்பகுதியிலுள்ள ஆறு கடிதங்களில் (15–20) ஆராயப் பெறுகின்றன:

# 15

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு.

நலன். நலன்பெறுக.

**பால் வேற்றுமையில்லா இனப்பெருக்கம்:** இனப் பெருக்கம் இறைவன் படைப்பில் எல்லா உயிர்களிடமும் நிகழ்ந்து வரும் ஓர் அற்புத நிகழ்ச்சி. பாக்டீரியா போன்ற முதிரா நிலைக்குரிய[1] ஒற்றையணு உயிர்களிடம் பாலில் வேற்றுமையே இல்லை; அவ்வுயிரிகளிடம் ஆண் என்றும் பெண் என்றும் பாகுபாடு இல்லை: எனவே, அவற்றிடம் இனப்பெருக்கச் செயலும் எளிதாக அமைகின்றது. எடுத்துக் காட்டாக ஓரணு உயிரி[2] ஓரளவு வளர்ச்சியுற்றதும். அஃது இரண்டாகப் பிரிகின்றது; அந்த இரண்டும் தாம் மீண்டும் இரண்டாகப் பிரியும் வரையிலும் வளர்ந்து முதிர்ச்சி யடைந்து கொண்டே போகின்றன. 'ஹைட்ரா'[3] என்ற புது நீர்ப் பிராணி சிறு சிறு மொட்டுக்களை[4] விடுகின்றது. அவை தாயணுவிடமிருந்து பிரிந்து முதிர்ந்த உயரிகளாக வளர்கின் றன. ஒரு தட்டைப் புழுவும்[5] பல பகுதிகளாகப் பிரிந்து ஒவ் வொரு பகுதியும் ஒவ்வொரு தனி உயிரியாக வளர்கின்றது. இம்முறையில் பெருக்கமடைவதில் எந்த விதமான பாலறிப் பொறிநுட்பமும் பங்கு பெறுவதில்லை. இவை பால்வேற் றுமையில்லா[6] முறைகளில் இனப்பெருக்கமடைவதாகப் பேசப் பெறுகின்றன:

---

1. முதிரா நிலைக்குரிய—Primitive
2. ஓரணு உயிரி—Amoeba
3. ஹைட்ரா—Hydra
4. மொட்டு—Bud
5. தட்டைப் புழு—Flatworm
6. பால் வேற்றுமையில்லா—Asexual

பாலறி முறை இனப்பெருக்கம் : எனினும், முதிரா நிலைக்குரிய பிராணிகளிடம்கூட சில பாலறிச் செயல்கள் காணப்படத்தான் செய்கின்றன. ஒற்றையணு உயிரிகள் பாலறி வேற்றுமையன்றிப் பல தலைமுறைகளில் தொடர்ந்து பெருக்கமடைந்த பிறகு அவற்றிடம் சோர்வும் முதுமைப் படுதலும் தோன்றுகின்றன. அச்சமயத்தில் சிறிது காலம் இரண்டு அணுக்கள் இணைந்து ஒன்றாகிவிடுகின்றன; சிறிது காலம் இங்ஙனம் நடைபெற்ற பிறகு மீண்டும் அவை பிரிகின்றன. இவ்வாறு இணைந்து நிகழும் செயலில்[7] இந்த இரண்டு உயிரிகளும் தம்முடைய அணுவறைப் பொருள்களை பரிமாறிக் கொள்ளுகின்றன; இச் செயல் அவற்றிடம் இளமை தரும் விளைவினை உண்டாக்கி மீண்டும் அவற்றிடம் பாலறியா முறையில் பெருக்கத்தைத் தோன்றச் செய்கின்றது. எனவே, எல்லா உயிரிகளிடமும் ஏதாவது ஒரு முறையில் பாற்செயல் ஓர் அடிப்படை நிகழ்ச்சியாக அமைந்துள்ளது என்று கருதலாம்.

மிக உயர்ந்த முறை வடிவங்களைக் கொண்ட உயிரினங்களில் பிரத்தியேகமாக அமைந்த அவற்றின் ஒரு சில பகுதிகளே இனப்பெருக்கத்தில் பங்கு கொள்ளும் வகையில் ஒரு முறை தோன்றியுள்ளது. விந்தணுக்கள், முட்டையணுக்கள் என்ற பிரத்தியேகமான உயிரணுக்கள்[8] உண்டாகி அவற்றின்சேர்க்கையால்மட்டிலும் புதியஉயிரிகள் தோன்றுகின்றன. மண்புழு, நத்தை போன்ற சில பிராணிகளிடம் இவ்விரண்டு வகை உயிரணுக்களும் ஒரேஉயிரிடம் தோன்றுகின்றன. எனினும், பெரும்பாலான இனங்களிடம்விந்தணுக்களை உண்டாக்கும் ஆண், முட்டையணுக்களை உண்டாக்கும் பெண் என்று இரண்டு தெளிவான பாலறிகுறிகளுடன் கூடிய இனங்கள் உள்ளன; இவ்வகை இனங்களில் பெற்றோர்கள் சந்தித்து அவர்களுடைய பாலறி அணுக்கள் சேர்வதனு

7. இணைந்து நிகழும் செயல்—Conjugation
8. உயிரணுக்கள்—Germ cells

லேயே இனப்பெருக்கம் சாத்தியமாகின்றது: இதுவே பாலறி முறை இனப்பெருக்கம் என்று வழங்கப் பெறுவதாகும்:

பாலறி முறை இனப்பெருக்கத்தில் குறிப்பிடத்தக்க பல நன்மைகள் விளைகின்றன. பெற்றோர்கள் தம்மை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டு செல்வதைவிடத் தாம் பாலறி யணுக்களை உண்டாக்குவது மிகவும் சிக்கனமான முறையாகும்; இதனால் உடனே பல புதிய உயிரிகளைத் தோற்றுவிக்க முடிகின்றது மேலான உயிர் வகைகளிடம் பாலறி முறை இனப்பெருக்கம் பிறப்பதற்குமுன் குழந்தை அதிக நாள் வளர்ச்சிக்கும் துலக்கத்திற்கும் இடம் தருவதுடன் பிறந்த பிறகும் அக்குழந்தையிடம் பெற்றோரின் கவனத்திற்கு வாய்ப்பினை அளிக்கின்றது. இருவேறு பெற்றோர்களிடமிருந்துவரும் உயிரணுக்கள் சேர்வதால்குழந்தை உண்டாவதாலும், ஒவ்வொரு உயிரணுவிலும் தனித் தனியான ஜீன்களும் வேறு ஆற்றல்களும் அடங்கியிருப்பதாலும் இம்முறையில் நடைபெறும் இனப்பெருக்கம் புதியவகையில் வேறுபாடுள்ள உயிரிகள் தோன்றுவதற்கும் புதிய கூர்தலற உயிரிகள் மலர்வதற்கும் வாய்ப்பினையளிக்கிறது.

ஒரு முட்டையும் ஒரு விந்தணுவும் ஒன்றாக இணைவதே பாலறி முறைஇனப்பெருக்கத்தின் அடிப்படையாகும். இந்த உண்மை கடந்த ஒரு நூற்றாண்டுக்குள்தான் அறியப்பெற்றது; உயிரியல் துறை மிக அண்மைக்கால வளர்ச்சியே என்பதற்கு இஃது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். விந்தணுக்கள் முதன் முதலாக லீவென்ஹோக்[9] என்பாரால் கி. பி. 1677-இல்தான் நுண்பெருக்கியின் மூலம் கண்டறியப் பெற்றன; பாலுண்ணிகளின்[10] முட்டையணுக்களைச் சூற்பைகளில் முதன்முதலாக வான்பேர்[11] என்பாரால் கி பி. 1827 இல் உற்று நோக்கியறியப்பெற்றன. ஆயினும், பத்தொன்ப

9. லீவென்ஹோக்—Leeuwenhoek
10. பாலுண்ணிகள்—Mammals
11. வான் பேர்—von Baer

தாம் நூற்றாண்டின் இறுதியில்தான் இவ்விரண்டு வகை அணுக்களும் இனப்பெருக்கத்தில் பெறும்பங்கு பெற்றதாக அறியப்பெற்றது. இன்னும் இதன் முழு வரலாறு நன்கு அறியப்பெறவில்லை என்பதை நீ தெரிந்துகொள்ளவேண்டும்.

பாலறி இனப்பெருக்கம் பெற்றோர்களின் உடல்களி னுள்ளோ அல்லது வெளிப்புறத்திலோ நடைபெறலாம்; பெரும்பாலான நீர்வாழ் பிராணிகளுள் ஆண்களும் பெண் களும் தம்மைச் சுற்றியுள்ள நீரில் முறையே விந்தணுக்களை யும் முட்டையணுக்களையும் வெளிப்படுத்துகின்றன; இங்கு அவை சந்தித்து ஒன்றுசேர்கின்றன. பல்வேறு அரிய பிராணி களில் இந்த இரண்டு உயிரணுக்களும் 'அடைகாக்கும் பை'[12] என வழங்கப்பெறும் ஒரு பிரத்தியேகமான பையில் சந்திக் கின்றன. இப் பை அப் பிராணியின் உடலின் வெளிப்புறத் தில் அமைந்துள்ளது. கடற் குதிரையிடத்தில் ஆணி டமே இப் பை அமைந்துள்ளது; முட்டைகள் குஞ்சு பொரிக்கும் காலம்வரை ஆணே அவற்றைச் சுமந்து செல்லு கின்றது. தந்தை அடை காப்பதற்கு இன்னொரு எடுத்துக் காட்டு ஒருவகைத் தேரை[13] ஆகும். இது தலைப்பிரட்டை கள்[14] தோன்றும் வரையில் கருவுற்ற முட்டைகளைத் தன்னு டைய கால்களைச் சுற்றிலும் கட்டப்பெற்ற நிலையில் சுமந்து செல்லும். ஆனால், இவை பிராணியின் இனப்பெருக்கத்தில் மிக அரிய புறனடைவகைகளாகும்.[15]

விந்து பாய்ச்சுதல்: நடைமுறையில் எல்லா உயிரின உயிர்வாழ் பிராணிகளிடமும் விந்தணுக்களும் முட்டை யணுக்களும் பெண்ணின் உடலினுள்ளேயே சந்திக்கின்றன. இதற்கு இரண்டுபிராணிகளின் உடல்களும் இணைதல் மிகவும் இன்றியமையாதது இந்த இணைவிழைச்சின்பொழுது ஆண் தன்னுடைய விந்துப் பாய்மத்தைப் பெண்ணின் பிறப்புறுப்

12. அடைகாக்கும் பை—Brood pouch
13. தேரை—Toad ('Obstetrical toad')
14. தலைப்பிரட்டை—Tadpole
15. அரிய புறனடைவகை—Rare exceptional type

புப் பாதையில் செலுத்துகின்றது இச்செயல் 'விந்துப் பாய்ச்சுதல்'[16] என்று வழங்கப்பெறுகின்றது. ஒரு சில பிராணி களிடம் இச்செயல் கருப்பையினுள் நிகழ்கின்றது: ஆடு, ஒரு வகை மான்[17] ஒட்டைச்சிவிங்கி[18] போன்ற பல பிராணிகள் விந்தணுக்களை நேராகக் கருப்பையினுள் செலுத்திவிடு கின்றன. இவற்றிடம் இணைக்கும் ஆணுறுப்பிலுள்ள நூல் போன்ற நீண்ட இணைப்புறுப்பு இணை விழைச்சின்பொழுது




படம்—22: பெண்ணின் பிறப்புறுப்புப் பாதையில் விந்தணுக்கள், முட்டையணு ஆகியவற்றின் இருப்பைக் காட்டுதல்.

கருப்பையினுள் நுழைந்து விந்தணுக்களை அங்கு விட்டுவிடு கின்றது. ஆயினும் ஏனைய பிராணிகள் யாவும் விந்துப் பாய் மத்தை யோனிக் குழலில்தான் செலுத்துகின்றன; அங் கிருந்து விந்தணுக்கள் பெண்ணின் பிறப்புறுப்புப் பாதை வழியாக மேல்நோக்கி ஏறிச் சென்று கருப்பையின் வழியாக

---

16. விந்துப் பாய்ச்சுதல்—Insemination
17. ஒருவகை மான்—Gazelle
18. ஒட்டைச்சிவிங்கி—Giraffe

கருக் குழல்களை அடைகின்றன. மானிட இனத்தில் இந்தச் செயல் நடைப்பெறுவதைப் படம் (படம்-22) விளக்குகின்றது. படத்தை உற்றுநோக்கி விளக்கம் பெறுவாயாக.

விந்தணுக்கள் கருப்பையில் நுழைதல்: மனிதன் இணை விழைச்சின்பொழுது வெளியாக்கும்விந்து பசைபோல் தடித்திருக்கும் என்பதையும் சில நிமிடங்களில் அது நீர் நிலையை அடைகின்றது என்பதையும் நீ அறிவாய். இவ்வாறு நீர் நிலையை அடைந்ததும் விந்தணுக்கள் விரைவாக நகர்ந்து கருப்பையை அடைகின்றன. புணர்ச்சி முடிந்து பத்து நிமிடத்திற்குள் இவை புகுவதை கருப்பையின் சுற்றுப் பகுதியைச் சோதித்து அறியலாம். விந்தணுக்கள் கருப்பையை அடைவதற்கு அவற்றின் அசைவு ஒரு முக்கியக்கூறு என்பது உனக்குத் தெரியும். விந்தணுக்கள் நிமிடமொன்றுக்கு $\frac{1}{8}$ அங்குலம் நகர்ந்து செல்லும் என்பதை நீ அறிவாய். விந்து பாயும் இடத்திலிருந்து கரும்பையின் வாய் ஒரங்குல தூரத்திற்குள்ளாகவே இருப்பதால், விந்தணுக்கள் விந்து பாய்ந்த ஒரு சில நிமிடங்களில் கருப்பையை அடைந்துவிடும். எனினும், வேறு பல கூறுகளும் இதற்குத் துணை செய்கின்றன. விந்து பாய்ச்சும்பொழுதும் அதற்குப்பின்னரும் ஆண் குறியின் அசைவுகளால் விந்து பாய்மத்தின் ஒரு பகுதி கருப்பையின் வாயினை அடையலாம்; ஒன்று அல்லது இரண்டு துளிகள் வாயிலேயே செலுத்தப்பெறவும் நேரிடலாம். மேலும், இணைவிழைச்சின்பம் உச்ச நிலையை அடையுங்கால் யோனிக்குழலின் தசை சுருங்குவதால் யோனிக் குழலும் கருப்பையும் நெருக்கமுற்று விந்தணுக்கள் கருப்பையின் கழுத்துப் பகுதியினுள் நுழைவதைத் துரிதப்படுத்தலாம்; இன்னும் இணை விழைச்சால் பெண்ணிடம் ஏற்படும் உச்ச நிலை உணர்ச்சியின்பொழுது கருப்பை ஒருவித சந்த இயக்கத்துடன் விரிந்து சுருங்கி உறிஞ்சுவதுபோன்ற செயலைப் புரிகின்றது என்றும், இதனால் விந்துப்பாய்மத்தின் ஒரு பகுதி உள்நோக்கி இழுக்கப்பெறுகின்றது என்றும் சிலர் கருதுகின்றனர். ஆயினும், இதுபற்றி நம்பகமான சோதனை முடிவுகள் இன்னும் தெளிவாக அறியப்பெறவில்லை.

யோனிக் குழலினுள் பாய்ச்சப்பெறும் விந்தணுக்கள் எல்லாப் பக்கங்களிலும் நகர்ந்து செல்லுகின்றன. ஆனால், ஓர் உயிரியல்—வேதியியற் காரணத்தின்படி அவை கருப்பையை நோக்கியே நகர்கின்றன. யோனிக்குழலில் சுரக்கும் நீர்கள் அமிலத் தன்மையுடையவை; இவை விந்தணுக்களைப் பாதிக்கக் கூடியவை. கருப்பையின் வாயினின்று வரும் நீர்கள் காரத்தன்மையுடையவை; இத் தன்மையுடைய நீர்கள் விந்தணுக்கள் வளர்வதற்கு ஏற்றவை. எனவே, விந்தணுக்கள் யோனிக் குழலின் சூழ்நிலையை வெறுத்துக் கருப்பையை நோக்கியே நகர்கின்றன. இணைவிழைச்சின்பொழுது கருப்பையின் சுரப்பு நீர்கள் அளவில் அதிகரித்து யோனிக் குழலினுள் ஒழுகும்பொழுது அவை விந்தணுக்கள் கருப்பையை நோக்கிச்செல்வதற்கு ஏற்ற வழியையும் அமைக்கின்றன. இந்த நீர்கள் விந்தணுக்களுக்கு சாதகமான ஊட்டப் பொருள்களையும் பெற்றுள்ளன என்றும் சொல்லப்பெறுகின்றது.

யோனிக் குழலினுள் பாய்ச்சப்பெறும் விந்து முழுதும் கருப்பையினுள் நுழைவதில்லை; ஒரு சிறு பகுதியே உள்ளே நுழைகின்றது. ஏனையப் பகுதி வெளியே வழிந்துவிடுகின்றது. யோனிக்குழலில் பல மணி நேரம் விந்துப் பாய்மம் ஒட்டிக் கிடக்கின்றது. இதிலுள்ள விந்தணுக்கள் நாலிலிருந்து ஆறுமணிக்குள் மரித்துவிடுகின்றன. பாய்மத்தின் ஒரு பகுதி யோனிக்குழலின் சுவர்களால் உறிஞ்சப்பெறுகின்றது என்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால் இஃது இன்னும் சரியாக ஆராயப்பெறவில்லை; இதில் இன்னும் அதிகமான கருத்து வேறுபாடு இருந்து வருகின்றது. யோனிக் குழல் விந்துப் பாய்மத்தை உறிஞ்சுவது ஒரு பெண்ணின் உடல் நிலைக்கு ஏற்றது என்றும், பெரும்பான்மையான பெண்கள் திருமணத்திற்குப் பிறகு எடையில் மிகுவதற்கு இதுவே காரணம் என்றும் சிலர் கூறுகின்றனர். ஆண்களிடமும் திருமணத்திற்குப் பிறகு இத்தகைய மாறுதலைக் காணலாம். இன்றும் சிலர் மாமனார் வீட்டு விருந்தே மாப்பிள்ளையை இந்நிலைக்குக் கொணர்ந்துள்ளது என்று கூறுவதைக் கேட்கலாம்;

திருமணத்திற்குப் பிறகு இருபாலாரிடையேயும் ஏற்படும் உடல் உள மாறுபாடுகளும் பிறப்புறுப்புகளில் அதிகமாகச் சுரக்கும் சில நீர்களுமே இம் மாறுதலை உண்டாக்குகின்றன என்றும் கருதலாம்; எனினும், விந்துப்பாய்மம் உறிஞ்சப் பெறுதலே இம் மாறுதலை விளைவிக்கின்றது என்பதை இது காறும் எவரும் திட்டவட்டமாக மெய்ப்பிக்கவில்லை.

சுருவுறுதல்: கருப்பையினுள் நுழைந்த விந்தணுக்கள் சுமார் மூன்று நாட்கள் வரை உயிரோடிருக்கின்றன. ஆனால் கருப்பையின் மேற்பகுதியில் இருக்கும் விந்தணுக்கள் எத்தனை நாட்கள் வாழும்என்று திட்டமாகக் கணக்கிடப் பெறவில்லை. ஆனால் அவை இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு மேல் கருவுறும் ஆற்றலைப் பெற்றிருப்பதில்லை என்று கருதப் பெறுகின்றது. கருப்பைதசையின் சுருக்கங்களால் விந்தணுக்




படம்–23 : கருவுறுதலைக் காட்டுதல்

[முதல் நிலை, முட்டையணுவைப் பல விந்தணுக்கள் சூழ்ந்து கொண்டிருப்பதைக் காட்டுகின்றது: இரண்டாம் நிலை, ஓர் ஒற்றை விந்தணு முட்டையணுவைத் துளைத்துச் செல்வதை விளக்குகின்றது மூன்றும் நிலை, விந்தணுவின் தலைப்பகுதி முட்டையணுவில் தங்கியிருப்பதை உணர்த்துகின்றது.]

கள் மேல் நோக்கி நகர்ந்து சென்று கருப்பையின் இரு புறங்களிலுமுள்ள கருக் குழலின் வாயில்களையடைந்து அவற்றினுள் புகுந்து அவற்றின் முடிவுப் பகுதிவரை நகர்கின்றன; குழலினுள் முட்டையணு இருப்பின், ஒருவித உயிரியல்–வேதியியல் கவர்ச்சி உண்டாகின்றது. பல விந்தணுக்கள் முட்டை

யணுவைச் சூழ்ந்து கொள்ளுகின்றன; இவற்றுள் ஒன்றுமுட்டையணுவைத் துளைத்துச் சென்று வாலறுபட்டு உள்ளே தங்குகின்றது. இதனைப் படம் (படம் 23) காட்டுகின்றது. இதுவே கருவுறுதல்[19] என்பது. இதனை முன்னர் எழுதிய கடிதங்களிலும் குறிப்பிட்டுள்ளேன். படங்களைக் கொண்டும் நன்கு விளக்கி உள்ளேன்.[20] முட்டை யணுவில் ஒன்று நுழைந்ததும் முட்டையணுவின் வெளிப்பகுதி ஒரு தடித்த சவ்வினால் சூழப்பெறுகின்றது. இதனால்வேறு விந்தணுக்கள் உள்ளே நுழைய முடிவதில்லை. குழல்களில் தங்கும் ஏனைய அணுக்கள் பிரிந்தழிந்து[21] குழல்களால் உறிஞ்சப் பெறுகின்றன.

ஒரு முட்டையணு ஒரு விந்தணுவால் கருவுறுவதற்கு இவ்வாறு எண்ணற்றவிந்தணுக்கள் உண்டாக்கப்பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன என்று நீ வினவலாம். விந்தணுக்கள் தம்முடன் 'ஹயலுரோனிடேஸ்'[22] என்று வழங்கப் பெறும் ஒருவித நுரைப்புளியத்தைக்[23] கொண்டுள்ளன என்று அண்மைக்காலத்தில் கண்டறியப்பெற்றுள்ளது. இந்தநுரைப்புளியம் விந்தணுக்கள் முட்டையணுவைஅடைவதற்குரிய வழியை ஆயத்தமாக்குகின்றது என்று கூறுகின்றனர். இதுவே, கருவுறுதல் நிகழ்வதிலும் முக்கிய பங்கினைப் பெறுகின்றதாகக்கருதுகின்றனர். விந்துப் பாய்மத்தில் விந்தணுக்களின் அதிக எண்ணிக்கைக்கேற்றவாறு அதிகமான நுரைப்புளியமும் இருக்கும். கருப்பமுறுவதற்கும் இது நல்ல வாய்ப்பளிக்கின்றது. பல்லாயிரக்கணக்கான விந்தணுக்களிருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகலாம். வேறு காரணங்களும் இருக்கலாம். அவை இன்னும் தெளிவாக அறியப்பெறவில்லை.

விந்தணு முட்டையணுவை அடைவதற்குச் சாதாரணமாக எவ்வளவு காலம் ஆகக் கூடும் என்று நீ வினவலாம்;

19. கருவுறுதல்—Fertilisation 20. இந்நூல்—பக்கம் (133-34) 21. பிரிந்தழி—disintegrate. 22. ஹயலுரோனிடேஸ்—Hyalouronidase; 23. நுரைப் புளியம்—Enzyme;

கூறுவேன்; கருப்பையின் நீளம் சுமார் மூன்று அங்குலம் என்றும், குழலின் நீளம் சுமார் ஐந்து அங்குலம் என்றும் நீ நன்கு அறிவாய். வித்தணுக்களை நுண்பெருக்கியின் மூலம் பார்க்குங்கால் அவை எவ்வளவு வேகமாக நகர்கின்றனவோ அவ்வளவு வேகமாகவே உடலினுள்ளும் நகர்ந்தால், அவை ஏழு அல்லது எட்டு நிமிடங்களுக்கு ஓர் அங்குலம் வீதம் நகர்ந்து சென்று குழலின் இறுதியை அடைவதற்குக் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் ஆகலாம். விந்தணுக்கள் நேராக நகர்ந்து சென்று வழியில் யாதொரு தடையும் இல்லாவிட்டால்தான் இந்த நேரத்திற்குள் செல்லலாம். இஃது ஒரு கொள்கைமுறை அளவேயன்றி, உண்மையளவு அன்று; மனிதர்களிடம் இதுகாறும் இந்த அளவினை யாரும் அளந்து காணவில்லை. அண்மைக் காலத்தில் பிராணிகளிடமிருந்து விந்தணுக்கள் கருப்பையின் மூலம் குழல்களையடைவது அவ்வணுக்களின் அசையும் தன்மையை மட்டிலும் பொருத்ததன்று என்றும், அஃது இவ்வுறுப்புகளிலுள்ள தசைகளின் செயல்களைப் பொறுத்ததென்றும், ஆகவே அவை குழலை அடைந்து கருவுறுதல் இன்னும் குறைந்த காலத்திலேயே நடைபெறக்கூடும் என்றும் தெரிய வருகின்றது.

இன்னொரு செய்தியும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். கருவுறுதல் குழலில்மட்டிலும்தான் நடைபெறும்; முட்டையணுவின் வாழ்நாள் நாற்பத்தெட்டு மணி வரைதான் நீடித்திருக்கும் என்றும், அது குழல் வழியாகக் கருப்பையை அடைவதற்குள் தன் ஊட்டத்தையும் ஆற்றலையும் இழந்துவிடுகின்றது என்றும், ஆகவே அஃது எவ்வாறுனும் கருப்பையில் கருவுறுவதற்கு வாய்ப்பே இல்லை என்றும் அண்மைக் கால ஆராய்ச்சி முடிவுகளால் அறிகிறோம். இவ்வாறு கருவுறுதல் நிகழ்ந்த சில நாட்களில் பெண் கருப்பமுற்றிருப்பதாகக் கருதப்பெறுகின்றாள். கருப்பக்காலச் சின்னங்களையும் பிறசெய்திகளையும் அடுத்த கடிதத்தில் தெரிவிப்பேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 16

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

கருக்குழலில் கருவுற்ற முட்டை மூன்று அல்லது நான்கு நாட்களில் கருப்பையை வந்தடைகின்றது; கருக்குழலினுள் இருக்கும்போதே அது வளர்ச்சியுறத் தொடங்குகின்றது. அணுப்பிரிவுகள் தொடர்ச்சியாக நடந்த வண்ணமிருக்கின்றன. இந்நிலையில் கருப்பை புதிதாக உண்டான இளஞ்சூலை ஏற்றுக் கொள்வதற்கு தன்னைத் தயாராக்கிக் கொண்டுள்ளது. கருப்பையின் உள்ளே இருக்கும் அணைச் சவ்வு புதிய இழையங்களால் தடித்து அதிகமான குருதியோட்ட நிலைகளைப் பெறுகின்றது. இந்நிலையை மாதவிடாயைப்பற்றிக் கூறும்போது விளக்கியுள்ளேன்.[24] கருப்பையில் நுழைந்த மூன்று அல்லது நான்கு நாட்களில் முட்டை சிறிது வளர்ந்த நிலையில் புதிதாக உண்டான அணைச் சவ்வில் தன்னை ஆழப் புதைத்துக் கொள்ளுகின்றது; மிகச் சிக்கலான செயலின்மூலம் ஏதாவது ஓரிடத்தில் தன்னை நன்கு பொருத்திக்கொள்ளுகின்றது; இந்த இடத்தில் அது கருப்ப காலம் முழுவதும் தங்கி வளர்கின்றது.

முதற் சூல்நிலை: கண்ணுக்குப் புலனாகாத மிகச் சிறிய இரண்டு உயிரணுக்களின் சேர்க்கையால் கருவுற்ற முட்டை குழந்தை உருவம் அடைவது வியப்பினும் வியப்பேயல்லவா? எனவே, இளஞ்சூல் வளர்ந்து குழந்தையாக மாறுவதன் நிலைகளையும் நீ அறிந்துகொள்ள வேண்டும்; இதனை மிகச் சுருக்கமாக விளக்குவேன். விந்தணுவும் முட்டையணுவும் சேர்ந்து ஒரே அணு நிலையில் இருந்த கரு இரண்டு அணுக்களாகப்

24. இந்நூல்-பக்கம் 141

பிளந்து கொண்டு இரண்டு தனி அணுக்களாக மாறிவிடுகின்றது. இவை இரண்டும் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டுள்ளன: இவை உருவத்திலும் தன்மையிலும் தொடக்கத்திலிருந்த ஒற்றையணுவைப்போன்றே சிறிதும் மாறுதலின்றி உள்ளன. இந்த இரண்டு உயிரணுக்களும் முறையே ஒவ்வொன்றும் இரண்டாகப் பிளந்துகொண்டு மொத்தம் நான்கு உயிர் அணுக்களாக மாறுகின்றன. இந்த நான்கு உயிரணுக்களும் உருவத்திலும் தன்மையிலும் ஒன்றைப் போலவே அமைந்துள்ளன. இந்த நான்கு உயிரணுக்களும் எட்டாகின்றன. இங்ஙனம் தொடர்ந்து இரட்டித்துக் கொண்டே உயிரணுப் பிரிவு நடைபெறுகின்றது, இவ்வாறு எண்ணிக்கையில் அதிகரித்துக்கொண்டு போகும்பொழுது—தொடக்கத்தில் பிரியும் அணுக்கள் ஏறக்குறைய ஒரே அளவாக இருப்பினும்—சில உயிரணுக்கள் உருவத்தில் பெரியன




படம்–24 ; கருவுற்ற முட்டை வளர்வதில் நான்கு நிலைகளைக் காட்டுதல்.

வாகவும்,சிலசிறியனவாகவும் அமைந்துவிடுகின்றன. ஆனல், குணத்திலும் அமைப்பின் தன்மையிலும் எல்லா அணுக்களும் ஒன்றுபோல் சிறிதும் வேற்றுமையின்றியே உள்ளன. ஒன்று இரண்டாகி, நான்காகி, எட்டாகி இவ்வாறு பல்கிப் பெருகிப் போகும் அணுக்கள் இரண்டுவார காலத்தில்

கோடிக்கணக்கானவைகளாகி ஒன்ருேடொன்று சேர்ந்து ஒரு சிறு பந்து போன்ற தோற்றத்தை அடைகின்றன. இந்த வளர்ச்சி நிலைகள் (படம்-24) காட்டப்பெற்றுள்ளன. உற்று நோக்கி உணர்ந்து கொள்க. அணுக்களால் நிரம்பிய கருவினைக் 'கருப்பந்து' என்று வழங்குவர். இந்நிலையில்தான் அது கருக்குழலிலிருந்து கருப்பையை அடைகின்றது. இதன் அளவு இப்பொழுது ஒரு குண்டூசியின் தலையளவு இருக்கும். கருவுற்றது தொடங்கி 15 நாட்கள் வரையிலும் (இரண்டு வாரம் வரையிலும்) முட்டை கருப்பையில் ஒட்டாமல் வளர்ந்து வருகின்றது. இப்பருவம் கருவின் முளைநிலை[25] அல்லது முதற்சூல் நிலை என்று வழங்கப்பெறுகின்றது.

இரண்டு வாரத்திற்குப் பிறகு கருப்பையில் கரு ஒட்டிக் கொள்ளுகின்றது. ஒட்டிக்கொள்ளும் இடத்தில்தான் நஞ்சும்[26] கொப்பூழ்க் கொடியும்[27] வளர்கின்றன. கொப்பூழ்க் கொடியின்மூலந்தான் கரு தாயினிடமிருந்து உணவூட்டம் பெறுகின்றது. இதுவே இரண்டாவது நிலை; இது பிண்ட நிலை அல்லது இளஞ்சூல் நிலை[28] எனப்பெயர் பெறும். இந்நிலையில் முளைச்சூல் உருவம் பெறுது இரண்டு திங்கள்வரை வளர்ந்து வருகின்றது. இரண்டாவது நிலையின் தொடக்கத்தில் பந்து போல் உருவம்பெற்ற கருப்பத்திலுள்ள எல்லா அணுக்களும் 'சிசு' அல்லது முதுசூல் என்ற மூன்ருவது நிலையை அடைந்து விடுவதில்லை. அவைகளில் சில அணுக்கள் மற்றவைகளினின்றும் பிரிந்து குழந்தையின் உடலையமைக்கும் பணியில் ஈடுபடுகின்றன. மிகத் தொடக்க நிலையில் மூன்று அடுக்குகளில் (புரைகளில்) உயிரணுக்கள் அமைகின்றன. அவை அமைப்பிலும் உருவத்திலும் பாகுபாடு அடைகின்றன. வெளிப்புரையிலிருந்து தோல், மயிர், நகம் முதலியவை தோன்றுகின்றன. நடுப்புரையிலிருந்து தசைகள், குருதிக் குழல்கள், எலும்புகள்முதலியவைஉண்டாகின்றன. உட்புரையிலிருந்து

---

25. முளை நிலை-Germical stage. 26. நஞ்சு-Placenta.
27. கொப்பூழ்க்கொடி-Umbilical cord. 28. இளஞ்சூல் நிலை-Embryonic stage.

உணவுக்குழல், நுரையீரல்[29] முதலியவை உண்டாகின்றன; இந்தச்செயல்கள் யாவும் மிகவும் சிக்கலானவை; கருவளர்ச்சியியல்நிபுணர்கள்[30]கூட அவற்றை முழுவதும் புரிந்துகொண்டதாக ஒப்புக் கொள்வதில்லை. இரண்டாம் திங்கள் இறுதியில் ஆதி நரம்பு மண்டலம், அரைகுறையான கண்கள், காதுகள், வளரப்போகும் எலும்புகள், தசைகள், கைகால்கள் ஆகியவை அமைகின்றன. நான்காவது வார இறுதியில் இது கால் அங்குலம் நீளம் உள்ளது. இரண்டாவது திங்கள் இடையிலும் மானிட இளஞ்சூல் ஏனைய பாலுண்ணிகளின்[31] கருவைப் போலவே உள்ளது; அதனிடம் செவுள்கள்[32] காணப் பெறுகின்றன. அது பாய்மம் நிரம்பி பையில் வாழ்கின்றது; இதுதான் 'பனிக்குடம்' என்பது. இப்பொழுது அதற்கு ஒரு வாலும் உண்டு. அஃது இரண்டாவது திங்கள் இறுதிக்குப் பிறகுதான் மறைகின்றது, எட்டாவது வார இறுதியில் அது முக்கால் அங்குல நீளம் உள்ளது; இப்பொழுதுதான் உருவ அடையாளங்கள் காணத் தொடங்குகின்றன; இதன் பிறகு குழந்தை பிறக்கும் வரையில் உள்ளது முதுசூல்நிலை[33] ஆகும்; உடலைவிடப் பெரிதான தலை, முக அடையாளங்கள், கைகால்கள் முதலியவற்றை இப்பொழுது தெளிவாகக் காணலாம். பதினாறுவது வாரத்தில் சிசு சுமார் ஆறரை அங்குல நீளமும் இரண்டு அவுன்சு எடையும் பெறுகின்றது; இப்பொழுது அது திட்டமான மனித வடிவத்தை அடைகின்றது; விரல்களும் பெரு விரல்களும் தனியாகப் பிரிந்து மிருதுவான நகங்களைப் பெறுகின்றன. இப்பொழுது புறப்பிறப்புறுப்புகளும் புலனாகின்றன. இந் நிலையில் குழந்தையின் பால் இன்னதெனக் கூறிவிடலாம். இவ்வாறு தொடர்ந்து நாற்பதாவது வாரம் வரையில் (10 மாதம் வரையில்) வளர்ச்சி நடைபெறுகின்றது. பிறக்கும் நிலையில் குழந்தை 20 அங்குல நீளமும் கிட்டத்தட்ட ஏழு

---

29. நுரையீரல் – Lungs. 30. கருவளர்ச்சியியல் நிபுணர்கள்–Embryologists.

31. பாலுண்ணி–Mammal. 32. செவுள்கள்– Gills.
33. முதுசூழ்நிலை–Foetal stage.

பவுண்டு எடையும் உள்ளது: இங்ஙனம் ஒன்பது மாதத்திற்குள் ஒற்றையணு கோடிக்கனக்கான அணுக்களைக் கொண்ட உடலாக வளர்ந்து விடுகின்றது: இந்த நிலை படத்தில் (படம்-25) நன்கு காட்டப்பெற்றுள்ளது. உற்று நோக்கித் தெளிவு பெறுக தாய் கருவுயிர்க்கும் காலத்தில்



படம் 25: பிறக்கும் முன்பு தாயின் வயிற்றில், கருப்பையில் குழந்தை தங்கியிருக்கும் நிலையினை விளக்குதல்.

குழந்தை கருப்பையில் நேராகத் தொட்டுக் கொண்டிருப்பதில்லை. தொடக்கத்திலிருந்தே பாய்மம் நிரம்பிய பையில்

குழந்தை துழாவிக்கொண்டு வளர்ந்து வருகின்றது. இந்தப் பனிக்குடத்தில்[34] உண்டாகும் நீரும் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே போகும். இந்த நீர் குழந்தையின் பாதுகாப்பாக அமைந்திருப்பதுடன், குழந்தைக்கும் யாதொரு அதிர்ச்சியும் ஏற்படா வண்ணமும் காக்கின்றது.

நஞ்சுக் கொடி: தாயின் கருப்பையில் இருக்கும் பொழுது குழந்தை எப்படி உணவு முதலியவற்றைப் பெறுகின்றது என்று நீ வினவலாம். அதுதான் ஆண்டவன் படைப்பின் வியப்பாகும்.

> கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்
> விருப்புற் றமுதளிக்கும் மெய்யன்

என்ற தனிப்பாட்டடிகளை நினைவு கூர்க. முட்டை முதன் முதலாக கருப்பையில் ஒட்டிக் கொண்ட இடத்தில் 'நஞ்சுக் கொடி'[35] என்ற பகுதி வளர்வதாக மேலே குறிப்பிட்டேன் அல்லவா? இப்பகுதியே தாயையும் சேயையும் இணைக்கும் பகுதியாகும். இங்குத்தான் தாயின் குருதியும் சேயின் குருதியும் ஒன்றோடொன்று இரண்டறக் கலக்காமல் சித்தாந்த தத்துவம்போல் மிக நெருங்கியுள்ளன. நஞ்சுக் கொடி தாயின் குருதியோட்டத்தையும் சேயின் குருதியோட்டத்தையும் பிரிக்கின்றது. ஆனால், ஒரு பக்கமிருந்து மற்றொரு பக்கம் சில பொருள்கள் இந்தச் சுவரை ஊடுருவிச் செல்லக் கூடும். ஊட்டமும் கழிவுப் பொருள்களின் நீக்கமும் பரிமாறிக் கொள்ளப் பெறுகின்றன. குழந்தை தாயினிடமிருந்து ஊட்டப் பொருள்களைப் பெறுகின்றது; கழிவுப் பொருள்களைத் தாயினிடம் அகற்றிவிடுகின்றது. ஒன்பது மாதக் கருப்பை வாழ்க்கையிலும் சேய் தாயின் குருதியிலிருந்தே உயிரியம்[36], உணவுப் பொருள் ஆகியவற்றைப் பெற்று எல்லாக் கழிவுப் பொருள்களையும் அக்குருதி வட்டத்திலேயே கழித்து விடுகின்றது. ஒரு குழந்தை பிறப்

34. பனிக்குடம்–Bag of waters
35. நஞ்சுக்கொடி–Placenta. 36. உயிரியம்–Oxygen.

பதற்கு முன்பு தாயின் கருப்பையிலுள்ள நஞ்சுக் கொடியி லிருந்து கொப்பூழ்க் கொடியின்[37] மூலம் குருதியைப் பெறு வதைப் படம் (படம்—26) விளக்குவதை உற்றுநோக்கி உளங்கொள்க. முழு வளர்ச்சி பெற்ற நஞ்சு தட்டையான முட்டை வடிவத்தில் இருக்கும். அதன் குறுக்களவு எட்டு அங்குலமும், எடை ஒரு பவுண்டிற்குமேலும் இருக்கும். குழந்தை பிறந்த பிறகு இது கருப்பையிலிருந்து அகற்றப் பெறுவதால், இது 'பின்னிலைப் பிரசவம்'[38] என்று வழங்கப் பெறுகின்றது.



படம்-26: பிறக்கும் முன்பு குழந்தை தாயின்வயிற்றில் நஞ்சுக் கொடியின் வழியாகக் குருதியிலுள்ள ஊட்டப் பொருள்களைப் பெறுவதைக் காட்டுதல்.

இளஞ்சூல் நஞ்சுக் கொடியுடன் இணைகரும உறுப்பே கொப்பூழ்க் கொடி என்பது. இந்தக் கொடியின் நீளம் இரண்டடி; கனம் ஒன்றரை அங்குலம். இது குழந்தையின் அடிவயிற்றிலிருந்து தொடங்கி நஞ்சுக்கொடியுடன் இணை

37. கொப்பூழ்க் கொடி-Umbilical cord;
38. பின்னிலைப் பிரசவம்-After birth.

யும். இதில் குருதிக் குழல்கள் உள்ளன. இக்குழல்களின் வழியாகவே குழந்தையின் குருதியோட்டம் நஞ்சுக்கொடிக்கு வருகின்றது. தாய் கருவுயிர்த்ததும், நஞ்சுக்கொடியை நறுக்கித் தாயின் இணைப்பிலிருந்து புனிற்றிளங் குழவியைப் பிரிப்பர். இவ்வாறு தாயுடன் இணைக்கப்பெற்றிருக்கும் பகுதியே பின்னர்க் குழந்தையின் கொப்பூழாகின்றது.

கருப்பையின் மாற்றம்: கருப்பையின் தன்மையைப் பற்றி முன்னர் எழுதிய கடிதமொன்றில் குறிப்பிட்டிருக்கின்றேன். கருப்ப காலத்தில் இதன் அதிக அளவிற்குக் காரணம், அதிலுள்ள தசை இழையங்களின் வளர்ச்சியே யாகும். இக்காலத்தின் இறுதியில் சுவர்கள் நீண்டு மெல்லி




படம்-27: கருப்ப காலத்தில் கருப்பையின் வளர்ச்சியைக் காட்டுதல். ஆறுவது மாதத்தில் (24வது வாரம்) கருப்பை கொப்பூழ் வரை வளர்ந்திருப்பதைக் காண்க.

தாகவும் மாறுகின்றன. கருப்ப காலத்தின் ஆறுவது மாதத்தில் தாயின் கொப்பூழ்வரைக் கருப்பை வளர்கின்றது; ஒன்பது மாதத்தில் அஃது அடிவயிற்றின்[39] முகடு வரை வளர்கின்றது. ஒவ்வொரு மாதத்திலும் கருப்பை முன்

39. அடிவயிறு–Abdomen

னேறிக்கொண்டு போவதைப் படம் (படம்–27) விளக்கு கின்றது. உற்று நோக்கி அறிக. சாதாரணமாக ஒன்று அல்லது இரண்டு தேக்கரண்டி அளவு திரவம் கொள்ளக் கூடிய கருப்பை எட்டு முதல் பத்து பிண்ட் வரை திரவம் கொள்ளக் கூடிய அளவுக்கு அது வளர்ந்து விடுகின்றது. எடையிலும் ஓரவுன்சிலிருந்து இரண்டு இராத்தல் வரை வளர்கின்றது. எனினும், கருவுயிர்த்த பிறகு கருப்பை விரைவாகச் சுருங்கி, அளவில் குறைகின்றது; சில வாரங் களில் அது தன் பழைய நிலையையே அடைந்து விடுகின்றது. ஐந்து அல்லதுஆறு வாரங்களில் கருப்பகால நிலையிலிருந்ததி லிருந்து அது 1|20 பங்குக்குக் குறைந்து விடுகின்றது.

**கருப்பகாலச் சின்னங்கள் :** ஒரு பெண் தாய்மை அடைந்து விட்டாளா இல்லையா என்பது எவ்வாறு அறுதி யிடப்பெறுகின்றது என்பதையும் நீ அறிந்து கொள்ள வேண்டும். மாதவிடாய் நின்று விடுதல் கருப்பத்தின் முக்கியமான ஒரு சின்னமாகும். இதை மட்டிலும் கொண்டு ஒரு பெண் கருப்பிணி என்று சொல்ல முடியாது; குருதிச் சோகை, மார்பில் சளி, மேக நோய், இருமல்நோய் போன்ற வற்றால் மாதவிடாய் தடைப்படுவதுண்டு. பிறவிக் கோளா றான இரு பிளவு கொண்ட கருப்பையை உடைய பெண்கள் கருப்பமுற்ற பிறகும் தீட்டாகிக் கொண்டிருப்பர்; கருப் பையின் ஒரு பகுதியில் கரு வளர்ந்து கொண்டிருக்கையில் மற்றொரு பகுதி மாத விடாயை வழக்கம்போல் வெளிப் படுத்திக்கொண்டிருக்கும். சில பெண்களிடம் 'மசக்கை'[40] தோன்றும்; கருப்பமுற்ற முதல் சில வாரங்களில் ஏற்படும் மயக்கம், தலைசுற்றல், வாந்திபோன்ற அறிகுறிகளை மொத்த மாக 'மசக்கை' என்று வழங்குவர். இந்த அறிகுறிகள் காலையில்தான் அதிகமாக இருக்கும். முதல் இரண்டு மாதங் களில் நஞ்சுக்கொடியில் உற்பத்தியாகும் ஒருவித வேதியியற் பொருள் குருதியில் பரவி, அது மூளையைப் பாதிப்பதால்

40. 'மசக்கை'—'Morning sickness'

மயக்கமும், வாந்தியும் உண்டாகின்றன. சிலருக்கு இவை முதல் நான்கு மாதம் வரை நீடிப்பதுண்டு. முதல் மூன்று மாதங்களில் அதிக உமிழ் நீர்ப் பெருக்கம், பல உணவுப் பொருள்களைத் தின்ன வேண்டும் என்ற அவா, கருப்பையின் வளர்ச்சி சிறு நீர்ப்பையை அமுக்குவதால் அடிக்கடி சிறுநீர் கழிக்க வேண்டும் என்ற உணர்ச்சி தோன்றுதல், கொங்கைகளின் பெருக்கம், நான்காவது மாதத்தில் சிசுவின் அசைவு முதலியவற்றுல் ஒரு பெண் கருப்பமுற்றியிருப்பதைத் தானுக அறிந்துகொள்ள முடிகின்றது.

மருத்துவர் சோதனைகள்: மருத்துவர் பலவிதமாக ஒரு பெண் கருப்பிணியா இல்லையா என்பதைச் சோதித்து அறிகின்ருர்; ஒரு சிலவற்றை மட்டிலும் ஈண்டு கூறுகின்றேன்: சிசு அசைவினைக்கொண்டு இதை அறுதியிடுகின்ருர்; சிசு அசையாதிருப்பின் கருப்பிணியின் வயிற்றுத் தசையை இலேசாகச் சுண்டிவிடுவார்; இவ்வாறு செய்தால் சிசு சினமடைந்துவிட்டதுபோல் வேகமாக வயிற்றிற்குள் மோதிக்கொண்டு புறளத் துவங்கும். நான்காவது மாதத்திற்குமேல் கருப்பிணியின் வயிற்றின்மீது தமது 'ஸ்டெதாஸ்கோப்' என்னும் கருவியை வைத்துக் கேட்டால், சிசுவின் இதயம் துடிப்பது தெரியும். கருவில் வளரும் குழந்தையின் இதயம் நிமிடமொன்றுக்கு 130லிருந்து 150தட வைகள் வரை துடிக்கின்றது. இது தாயின் இதயத் துடிப்புக்கு இரு மடங்காகும். சிசுவின் துடிப்பினை முதன் முதலாக 1818-இல்தான் கண்டறிந்ததாகத் தெரிகின்றது. புதிர்க்கதிர்ச்[41] சோதனையில் கருப்பையிலிருப்பது சிசுவா அல்லது கட்டியா, ஒற்றைக் குழந்தையா அல்லது இரட்டையா, குழந்தை தலைகீழாக உள்ளதா அல்லது அதன் ஆசனம் கீழாக இருக்கின்றதா, குழந்தை உயிருடன் இருக்கின்றதா அல்லது இறந்துவிட்டதா, குழந்தையின் தலை இடுப்பெலும்புக் கட்டினுள் புகுந்து வெளிவர முடியுமா, நஞ்சுக்கொடி தவருன இடத்தில் வளரத் தொடங்கியுள்ளதா—என்பன போன்ற விவரங்

41. புதிர்க் கதிர்-X-ray.

களையெல்லாம் அறிந்துகொள்ள முடிகின்றது. ஐந்தாவது மாத முடிவில்தான் புதிர்க் கதிர்ப் படத்தில் குழந்தையின் எலும்புகளின் நிழலை நன்றாகக் காணவும் முடியும்.

வேறு சில சோதனைகளாலும் ஒரு பெண் கருப்பிணியா என்பதை அறுதியிட முடிகின்றது. கருப்பிணியின் உடலில் ஏற்படும் மாறுதல்கள் அனைத்தும் அவள் உடலில் உற்பத்தியாகும் ஹார்மோன்கள் எனப்படும் ஒருவித சுரப்புநீர்களால் தான் உண்டாகின்றன. இந்த உட்புற நீர்ச்சத்து சிறு நீரிலும் வெளிப்படுகின்றது. காலையில் முதன் முதலாகக் கருப்பிணி கழிக்கும் சிறுநீரைச் சேகரித்து வடிகட்டி அஃதுடன் அளவோடு பழச்சருக்கரையின்[42] திரவத்தைச் சேர்த்து அவற்றின் சில துளிகள் கருப்பமாகாத பெண் எலிகளின் மீது ஏற்றப் பெறுகின்றன. இவ்வாறு மூன்று தினங்கள் ஏற்றிய பிறகு அவற்றின் அடிவயிற்றைக் கிழித்து சூற்பைகள் சோதிக்கப் பெறுகின்றன. கருப்பிணியின் சிறுநீராக இருப்பின் எலிகளின் சூற்பைகள் வீங்கி சிவந்து குருதிக் கசிவுகளுடன் காணப்பெறும். இது 'ஜான்டேக் சோதனை'[43] என்று வழங்கப்பெறுகின்றது. இதனை முதன் முதலாக 1928-இல் செய்தவர்கள் ஆஸ்ச் ஹீம்[44], ஜான்டெக் என்ற இரண்டு மருத்துவர்கள். இந்தச் சோதனை குழிமுயலின்[45] உடம்பிலும் செய்வதுண்டு; இச்சோதனையை 'பிட்மான் சோதனை' என்றும் வழங்குவர். இச்சோதனைகள் கவனமாகச் செய்யப் பெற்றால் ஒரு பெண் கருப்பமுற்றுள்ளாள் என்பதை ஏறக்குறைய 98 சத விகிதம் உறுதியாக அறுதியிட்டு விடலாம்.

அண்மைக் காலத்தில் மேல்நாடுகளில் சில மருத்துவ நிலையங்களில் மூன்றாவதாக ஒரு முறை மேற்கொள்ளப் பெற்று வருகின்றது. இதற்குத் தென் ஆஃபிரிக்காவிலுள்ள

---

42. பழச்சருக்கரை-Glucose
43. ஜான்டேக் சோதனை-Zoadek test
44. ஆஸ்ச்ஹீம்-Aschheim.
45. குழிமுயல்-Rabbit.

தேரைகள்[46] பயன்படுகின்றன. கருப்பிணியின் சிறுநீரில் சில வேதியியற் பொருளைச் சேர்த்து, அத்துடன் அளவோடு உப்புத் திரவத்தைக் கலந்து, அதைக் கருத்தரிக்காத பெண் தவளையின் மீது ஊசி மூலம் குத்திப் புகுத்துகின்றனர். ஊசி குத்திய பன்னிரண்டு மணி நேரத்தில் தவளை ஏராளமாக முட்டையிடத் தொடங்குகின்றது. பெண் கருப்பிணியாக இல்லாவிடில் தவளை முட்டையிடுவதில்லை; பல வாரங்கள் கழித்து இதே தவளையை மீண்டும் சோதனைக்குப் பயன் படுத்தலாம்.

இன்னொரு முறையும் மேனாட்டு மருத்துவ நிலையங்களில் கையாளப்பெறுகின்றது. அமெரிக்காவில் ஒரு வகை ஆண் தவளையின்மீது ஐயப்படும் பெண்ணின் சிறுநீரை ஏற்றிவிடு கின்றனர். இத்தவளையை ஒரு கண்ணாடிப்பேழைக்குள் வைத்து அதில் தேங்கும் தவளையின் சிறுநீரைப் பரிசோதிக் கின்றனர். அதில் தவளையின் கரு அணுக்கள் காணப்பெற் ருல் பெண் கருப்பிணி என்றும், காணப்பெருவிடில் கருப்பிணி அல்லள் என்றும் அறுதியிடுகின்றனர். மாதவிடாய் தவறிய பத்து அல்லது பதினைந்து நாட்களில் (கருத்தரித்த இரண்டு அல்லது மூன்ருவது வாரத்தில்) இம்முறைகளால் கருப்பம் என்பதை எளிதில் கண்டறிய முடிகின்றது.

போலி கருப்பம்: கருப்பகாலச் சின்னங்களைப்பற்றி விரிவாக அறிந்துகொண்ட நீ போலி கருப்பத்தைப்பற்றி யும் சிறிது தெரிந்துகொள்ள வேண்டும். போலி கருப்பம்[47] என்பது குழந்தை வேண்டுமென்று தீவிர அவாவுள்ள பெண் களிடம் காணப்பெறும் ஒருவித மாமாயம். கருப்பத்தின் எல்லா அறிகுறிகளும் ஏற்பட்டுக் கடைசியில் அவ்வளவும் "பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போவதைத்" தான் போலி கருப்பம் என்று வழங்குகின்றனர். இது பெரும் பாலும் மாதவிடாய் நிற்கும்—சூதக ஓய்வு[48] ஏற்படும்—

---

46. தேரைகள்-Toads.
47. போலி கருப்பம்-False pregnancy.
48. சூதக ஓய்வு-Menopause.

பெண்களிடமே உண்டாகின்றது: இப் பெண்களிடம் மாத விடாய் நின்று போகின்றது. 'மசக்கை' உண்டாகின்றது. கொங்கைகள் பெருக்கின்றன. வயிற்றுச் சதையின்மீது கொழுப்பு அதிகமாகச் சேர்ந்து கருப்பிணியின் வயிற்றைப் போன்று நாளடைவில் வயிறும் புடைக்கின்றது. சிசு அசைவும் தென்படுகின்றது. இது குடல்களில் ஏற்படும் வாயுத் தேக்கத்தால் உண்டாவது. இப்பெண்கள் விரைவாகத் தாயாகப் போவதாக எண்ணி சில சமயம் நம்மில் மேற்கொள்ளப்பெறும் வளைகாப்பும், சீமந்தம் போன்ற சடங்குகளையும் நடத்தி மகிழ்ச்சியடைகின்றனர். பன்னிரண்டு மாதங்களாகியும் குழந்தையே பிறக்காமற் போகும்போது தான் 'உண்மை நிலை' தெளிவாகின்றது! இத்தகைய போலி கருப்பம் இளம் பெண்களிடமும் ஏற்படுவதுண்டு. என்னுடைய நெருங்கிய உறவினர் ஒருவரின் மருமகளுக்கு இந்நிலை ஏற்பட்டது. அவர் பணக்காரராதலின் பல்வேறு கொண்டாட்டங்களை நடத்திப் பிரசவத்திற்காகவும் சிற்றூரிலிருந்து நகர்ப்புறத்திற்குக் குடியேறினார். சில வாரங்களில் உண்மை நிலை தெரியவந்தது. "கண்ணிலான் பெற்றிழந்தான் என உழலும்" நிலையே அவருக்கும் ஏற்பட்டது.

கருப்பகாலம்: கருப்ப காலம் சாதாரணமாக 280 நாட்கள் (பத்து சாந்திர மாதம், ஒன்பது காலண்டர் மாதம்) நீடிக்கின்றது. இக்காலம் ஆளுக்கு ஆள் மாறுபடுவதுமுண்டு. கருவுற்ற நாள்முதல் கருவுயிர்க்கும் நாள்வரை 266 நாட்கள் எனச் சராசரியாகவும் கணக்கிட்டுள்ளனர். ஒரு பெண்ணிடம் மாதவிடாய் காலம், கருப்பையின் வளர்ச்சி, சிசு அசையத் தொடங்கியகாலம் ஆகியவற்றைக்கொண்டு அவள் கருவுயிர்க்கும் நாளைக் கணக்கிடுகின்றனர். கடைசி மாதவிடாய் ஆனமுதல்நாள் தொடங்கி 280 நாட்கள் கழிந்த பின்னர் தான் பெண்கருவுயிர்ப்பாள் என்பது ஒரு கணக்கு. இந்த நாள் நினைவில் இல்லாதுபோயினும், முதல்குழந்தை பிறந்து மாதவிடாய்ஆகாது மறுபடியும் பெண் கருவுற்றாலும் இந்தக் கணக்கு தவறுகின்றது. இந்தக் கணிதமுறை எல்லாப் பெண்

களுக்கும் ஒத்து வருவதில்லை. கருப்பையின் வளர்ச்சியைத் தொட்டுப் பார்த்து ஒருவாறு பிரசவம் ஏற்படும் நாளை மருத்துவர்கள் கணக்கிடுகின்றனர். முதன்முதலாக சிசு சுமார் பதினெட்டாவது வாரத்தில் அசையத் தொடங்குகின்றது என்று மருத்துவர்கள் வைத்துக்கொள்ளும் கணக்கும் சரியாக வருவதில்லை. சிசு அசைவு நாளுடன் இருபத்திரெண்டு வாரங்களைக் கூட்டினால் வரும் நாளன்று கருவுயிர்ப்பை எதிர் பார்க்கலாம்என்பது இவர்கள் கணக்கு தனக்கு சிசு முதலில் எப்பொழுது அசையத் தொடங்கியது என்று பெரும்பாலான பெண்களுக்கு நினைவே இருப்பதில்லை. குழந்தை இடுப் பெலும்புக்கட்டினுள் இறங்கிவிட்டதைக்கொண்டு மருத்துவர்கள் ஒருவாறு கருவுயிர்க்கும் நாளை அறுதியிடுகின்றனர்; முதற் பிரசவத்தில், குறைந்தது இரண்டு வாரங்கட்கு முன்பே, குழந்தையின் தலை இடுப்பெலும்புக்கட்டினுள் பொருந்திக்கொண்டு விடுகின்றது. இரண்டாவது மூன்றாவது தடவையாகப் பிரசவிக்கும்பொழுது பிரசவ வேதனை தொடங்கும் சிலமணி நேரங்களுக்கு முன்புதான் தலை இடுப் பெலும்புக் கட்டினுள் பொருந்துகின்றது. இவற்றை அடிப் படையாகக்கொண்டு பிரசவ நாளை அறுதியிடலாம் என்றாலும், இந்தமுறையும் முழுவெற்றியினைஅளிப்பதில்லை. மருத்துவர், பிரசவிக்கும் நாளை ஒருவாறு குறிப்பிடலாமே அன்றி பிரசவிக்கும் நேரத்தை அவரால் அறுதியிட முடியாது. இதனை நன்கு அறிந்தே மூத்தோர்கள், 'மழைபொழியும் நேரமும் மகப்பேறு ஏற்படும் நேரமும் மகாதேவனுக்கும் தெரியாது' என்று வழங்கும் பழமொழி எல்லா உண்மைகளையும் தெளிவாக்குகின்றது.

இனி, அடுத்த கடிதத்தில் கருப்ப காலத்தில் கருப்பிணிக்கு நேரிடக்கூடிய சில அபாயகரமான கோளாறுகள் பற்றிய செய்திகளை ஓரளவு விரிவாக விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 17

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் பெறுக.

புதிதாக வாழ்க்கையில் புகுந்த மணமக்கள் கருப்பகாலத்தில் நேரிடக்கூடிய சில அபாயகரமான கோளாறுகளைப்பற்றியும் ஓரளவு அறிந்திருத்தல் இன்றியமையாதது. இவைகளைப் பற்றி ஓரளவு தெரிந்திருந்தால் இவை ஏற்பட்டவுடன் சிறிதும் தாமதமின்றி மருத்துவரை நாடி விபத்தினைத் தவிர்த்துக் கொள்ளலாம். இனி, இக் கோளாறுகளை ஒவ்வொன்ருக விளக்குவேன்.

**கருச்சிதைவு:** 'கருச்சிதைவு'[49] என்பது சாதாரணமாக சில பெண்களிடம் ஏற்படுகின்றது. கருப்பையினின்றும் குழந்தை ஏழாவது மாதத்திற்குள் வெளியேறுவதுதான் கருச்சிதைவு என்பது. தாயினிடம் மேகநோய் ஏற்பட்டிருந்தாலும், அம்மை, இன்புளுயன்ஸா, நிமோனியா போன்ற நோய்கள் கடுமையான சுரத்துடன் தாக்கினுலும், தாயின் உணவில் விட்டமின் E என்னும் சத்து குறைவாக இருந்தாலும் கருச்சிதைவு நிகழ்கின்றது. சில சமயம் குழந்தையின் நஞ்சுக்கொடியில் நோய் ஏற்படினும், அல்லது அதுதானே முறுக்கிக் கொண்டுவிட்டாலும் கருச்சிதைவு உண்டாகின்றது. தந்தையின் உடல் நலம் மேகநோய், வெள்ளை, மதுமோகம் ஆகியவற்ருல் சீர்குலைந்து இருந்து அவருடைய விந்தணுவால் கருத்தரிக்கப்பெற்று இருந்தால் அது சிதைகின்றது.

கருச்சிதைவிற்கு அறிகுறியாகப் பெண்ணின் அடிவயிற்றில் சிறிது வலி தோன்றுகிறது. சில மணி நேரத்தில்

---

49. கருச்சிதைவு—Abortion.

குருதி பெண்ணுறுப்பில் தோன்றும். குருதியின் அளவு குறைவாகவும் இருக்கலாம்; அதிகமாகவும் இருக்கலாம். குருதி கசியத் தொடங்கியதும் தாமதமின்றி மருத்துவரின் உதவியை நாடவேண்டும். கருச்சிதைவின் அறிகுறிகள் தொடங்கிய பின்பு கருப்பிணி வீட்டில் அதிகம் நடமாடாது படுக்கையில் ஒய்வாகப் படுத்திருக்கவேண்டும். ஏனைய வற்றை மருத்துவர் கவனித்துக்கொள்வார்.

குறைமாதப் பிரசவம்: ஏழாவது மாதற்குமேல் ஏற்படும் கருச்சிதைவு குறைமாதப் பிரசவம்[50] என்று வழங்கப்பெறு கின்றது. தாயின் உடலிலுள்ள மேகநோய், நல்ல ஊட்ட முள்ள உணவின்மையால் அவளது உடல் பலவீனமாயி ருத்தல், வைட்டமின் E-யின் குறைவு, குருதிச் சோகை, ஹார்மோன்கள் தாமாக இயங்குதல் போன்றவை இதற்குக் காரணங்கள் ஆகலாம். கருப்பிணியைப் பொறுத்தவரை இது சுகப் பிரசவமாகவே முடிகின்றது. குழந்தையின் வளர்ச்சி நிறைவுபெற்றிராததனால் குழந்தை எளிதாகவெளி வந்து விடுகின்றது. குழந்தையைக் காப்பாற்றுவதுதான் முக்கியப் பிரச்சினையாகின்றது. பிறக்கும்பொழுது அதன் எடை நாலரை இராத்தலுக்குக் குறையாதிருந்தால் குழந் தையைப் பிழைக்க வைத்து வளர்த்துவிடலாம். 'எட்டாம் மாதத்தில் பிறக்கும் குழந்தை தொட்டில் ஏறாது' என்று நினைப்பது தவறு. குழந்தை பிழைப்பதற்கு அது பிறந்த மாதம் முக்கியம் அன்று; பிறக்கும்பொழுதுள்ள எடையே முக்கியமாகும்.

சிறுநீரில் புரதம்: கருப்பகாலத்தில் சிறுநீரகங்களுக்குக் கோளாறுகள் ஏற்படக்கூடும். கருப்பம் என்று தெரிந்ததும் ஒரு பெண் தன் சிறுநீரைச் சோதித்துக் கொள்ளவேண்டும்; மூன்று வாரங்களுக்கொருமுறை சிறுநீர் சோதனையைச் செய்துகொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது. சிறுநீரகங்களில் ஏதாவது கோளாறு நேர்ந்திருப்பின் அவை சரியாகச் செயற்படுவதில்லை. நாடோறும் அகற்றப்பெற

50. குறைமாதப் பிரசவம்—Miscarriage.

வேண்டிய கழிவுப் பொருள்கள் குருதியிலேயே தங்கி விடுகின்றன. குருதியிலிருந்து வெளியே செல்லக்கூடாத 'ஆல்புமின்'[51] என்னும் முட்டைச் சத்து சிறுநீரில் வெளியேறத்தொடங்குகின்றது. இச்சத்து வெளியேறினால் உடனே கருப்பிணி தக்க சிகிச்சைகளை மேற்கொள்ளவேண்டும்; அன்றாடம் வெளியேறும் சிறுநீர் அறுபது அவுன்சுகள் இருக்கின்றதா எனக் கணக்கிட்டுப் பார்க்கவேண்டும். சிறுநீர் குறைவாக வெளியேறினாலும், கால்களிலும் முகத்திலும் வீக்கம்தோன்றினாலும் சிறு நீரகங்கள் கெட்டுவிட்டன என்று அறிந்து உடனே தகுந்த சிகிச்சைகளை மேற்கொள்ள வேண்டும்; இல்லாவிடில் பலவித சிக்கல்கள் தொடர்ந்து ஏற்படக்கூடும்.

**நச்சு வாந்தி :** கருப்ப காலத்தில் ஏற்படக்கூடிய அபாயமான கோளாறுகளில் இதுவும் ஒன்று. இது நான்காவது திங்களிலிருந்துதொடங்கிக் கருப்பத்தின்முடிவுவரை நீடித்திருக்கும். முதலில் இதைப் பெண்கள் 'மசக்கை' என்று எண்ணி அசட்டை செய்தல்கூடும். இது தவறு; மசக்கை என்பது இரண்டாவது வாரத்தில் தொடங்கி நான்காவது திங்களில் தானாகவே நின்றுவிடக்கூடியது. கருப்பிணி ஐந்து திங்கள் முடிந்தும் வாந்தி எடுத்துக் கொண்டிருந்தால் உடனே மருத்துவரிடம் காட்டிச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்; நச்சு வாந்தியின் காரணம் இன்னும் தெளிவாகப் புலனாகவில்லை.

உண்டவுடன் வாந்தி எடுத்தல், வயிற்றுக் குமட்டல் நிற்காது அதிகரித்துக்கொண்டே இருத்தல், வாந்தியும் விடாது ஏற்படுதல், உணவு வெளிவந்த பிறகு கோழை குருதி இவை கலந்த நீராக வெளி வருதல்—இந்த நோயின் அறிகுறிகளாகும். தாமதமின்றி நீடித்துப் படுக்கையிலிருந்து சிகிச்சை பெறுவது நல்லது. இந்த நோயால் பீடிக்கப் பெற்ற நோயாளியின் உயிரைக்காக்கும் நிமித்தம் சில

---

51. ஆல்புயுமின்—Albumen;

சமயம் செயற்கைமுறைகளில் கருச்சிதைவு செய்யவேண்டியும் நேரிடலாம்.

வலிப்பு: இந்நோய் பெரும்பாலும் முதல் கருப்பத்தின் பொழுதுதான் வருகின்றது; சிலருக்கு இரண்டாவது, மூன்றாவது பிரசவங்களின்பொழுதும் நேரிடலாம். இதனைப் பிரசவ சன்னி, குதிரை வலிப்பு, கருப்ப இசிவு என்ற பெயர்களாலும் வழங்குவர். கருத்தரித்த முதல் ஆறு திங்களுக்குள் இந்நோய் தோன்றுவதில்லை; ஏழாவது திங்களுக்குமேல் தான் இது தோன்றுகிறது. சில சமயங்களில் பிரசவவேதனை தொடங்கும்பொழுதும், பிரசவித்த பின்னரும் இந்நோய் வருவதுண்டு: இன்னும் இந்நோயின் காரணம் தெளிவாக அறியக்கூடவில்லை.

இந்நோய் ஏற்படுவதற்குமுன் சில அறிகுறிகள் தோன்றும்; சில வாரங்களுக்கு முன்னரே குருதியழுத்தம் அதிகரித்தல், சிறுநீரில் புரதம் காணப்பெறல், கால் முகங்களில் வீக்கம் காணல்—இந்நோயின் முதல் அறிகுறிகளாகும்; இவற்றுடன் தலைவலி, கண்களை இருட்டிக்கொண்டு வருதல்,மேல் வயிற்றில் குத்தல் வலி, தூக்கமின்மை போன்ற சின்னங்களும் தோன்றும். காலதாமதமின்றி மருத்துவரை நாடி அவர் செய்யும் முறைகளை அலட்சியம் இன்றிக் கருத்துடன் ஏற்றுக்கொள்ளவேண்டும்; தகுந்த சிகிச்சையினால் கருப்பிணிக்கு இறப்பு நேரிடாது பாதுகாக்கலாம். பிரசவ சன்னியில் பிறக்கும்குழவிகள் பெரும்பாலும் இறந்தேபிறக்கலாம்; குழந்தை வெளிவந்தவுடன் வலிப்பும் குறைந்துவிடும்.

கருக்குழலில் கருப்பம்:[52] இதனைக் 'கருப் பையின் வெளியே கருப்பம்'[53] என்றும் கூறுவர். சாதாரணமாக முட்டையணுவும் விந்தணுவும் கருக்குழலில் சந்தித்துக் கருவுறும் என்றும், கருவுற்ற முட்டை கருக்குழலின் வழியாகக் கருப்பையில் இறங்கி அங்கு ஓரிடத்தில் தன்னைப் புதைத்துக்

---

52. கருக்குழலில் கருப்பம்—Tubal Pregnancy;

53. கருப்பையின் வெளியே கருப்பம் — Extrauterine pregnancy

கொள்ளும் என்றும் நீ நன்கு அறிந்து கொண்டுள்ளாய்; சில சமயம்சிலரிடம் கருவுற்றமுட்டையின் பயணம் குழலின் ஓரிடத்தில் தடைப்படநேரிடலாம். கருக்குழலின் வீக்கம், கருக்குழலின்பாதை மிகச்சிறுத்து இருத்தல், அல்லது இயல்பிகந்த கருக்குழலின் அமைப்பு ஆகிய காரணங்களால் இத் தடை நேரிடலாம்; காரணம் எதுவாக இருப்பினும் தடை ஏற்பட்டால் கருவுற்ற முட்டை கருக்குழலின் உட்சுவரிலேயே தன்னைப் பதித்துக்கொண்டு வளரத் தொடங்குகின்றது. இவ்வாறு கருவளர்வதைப் படம் (படம்–28) காட்டுகின்றது; இதில் கருவின் வளர்ச்சியையும் அப்பொழுது கருப்பையின் நிலையையும் உற்று நோக்கி அறிக. படம் 29இல் சாதாரணமாகக் கருப்பையினுள் கருவளர்வது காட்டப்பெற்றுள்ளது.



படம்-28: கருக்குழலில் கருப்பத்தின் நிலையைக் காட்டுதல்;

இரண்டு படங்களையும் ஒப்பிட்டு நோக்கி இயல்பிகந்த முறையில் கரு வளர்வதை நன்கு கண்டு தெளிக.

மெல்லிய நாணற்குழல் போன்ற கருக்குழலில் கரு வளர்ந்து குழந்தையாவது என்பது குதிரைக் கொம்பு, குழலின் தசைக்கு ஓரளவு விரிந்துகொள்ளும் தன்மை இழப்பதனுல், அது கருத்தரித்து சில காலம் வரை மிதி வண்டியின் இரப்பர்க் குழலைப்போல் உப்பிக்கொண்டு உள்ளே கரு வளர

இடங்கொடுக்கின்றது. ஆனால், அதிக நாட்கள் அஃது இங்கு வளர முடியாது: நான்கு அல்லது எட்டு வாரங்களுக்குமேல் கருக்குழல் இளஞ்சூலைத் தாங்கமுடியாமல் உள்ளே வெடித்து விடும். கருக்குழல் இங்ஙனம் வெடிக்கும்பொழுது கருப்பிணிக்குத் தாங்கமுடியாத வயிற்று நோவும் மயக்கமும் ஏற்படும்: உடைந்த கருக்குழலிலிருந்து குருதி ஊற்றெடுத்து உள்ளேயேவெள்ளம்போல் ஓடிக்கொண்டிருக்கும்; வெளியே இதைக் காண முடியாது. ஆனால், முகத்தில் வியர்வை அரும்புதல், மூச்சுத்திணறுதல், தாகவிடாயால் நா வறண்டு போதல், கண்கள் இருட்டுதல், நாடி பலவீனப்படுதல். ஆகியவை இது நிகழ்ந்தமைக்கு அறிகுறிகளாகும். இஃது இறப்பிலும் கொண்டு செலுத்தும்.

எந்தக் கர்ப்பிணியும் கரு கருப்பையில் வளர்கின்றதா, அன்றி அது கருக்குழலில் வளர்கின்றதாஎன்பதைத்தானாகவே



படம்-29; சாதாரண நிலையில் முதுசூல் கருப்பையில் இருப்பதைக் காட்டுதல்.

உணர முடியாது: மருத்துவரின் சோதனையால்தான் இதனை அறிந்துகொள்ளலாம்: எனவே, ஒவ்வொரு பெண்ணும் கருப்பம் தோன்றியதும் மருத்துவரிடம் காட்டிச்சோதித்துக் கொள்வது நல்லது. மருத்துவர் இந்நிலையை அறிந்தால்

உடனே வயிற்றைக் கிழித்துக் குழல் உடையா முன்னரே அதனைச் சாமர்த்தியமாக வெட்டி எடுத்துவிடுவர்; உடைந்த நிலையிலும் அவர் உடைந்த கருக்குழலை வெட்டிஎடுத்துக் குருதிப் போக்கை நிறுத்தி தைத்து விடுவார். இழந்த குருதிக்கு ஈடாகப் புதிய குருதியைப் பாய்ச்சவும் செய்வார். இந்நிலை வந்தபின் காப்பதைவிட வருமுன் காப்பது நன்று என்பதை நீ உணர்வாயாக.

கருப்பகாலப் பின்மாதங்களில் குருதிப் போக்கு : முன் மாதங்களில் ஏற்படும் குருதிக் கசிவு கருச்சிதைவின் அறிகுறி என்பதை நீ நன்கு அறிவாய். ஏழு மாதங்களுக்கு மேல் பெண்உறுப்பினின்றும் குருதி வெளிப்பட்டால் அது மிகவும் விபத்து விளைவிக்கும் ஒரு கோளாறின் அறிகுறி என்பதை நீ




படம்—30: கருப்பையில் முன் அடைப்பு நஞ்சு அமைந்துள்ள நிலைகளைக் காட்டுதல்.

குறிப்பு: 1. கருப்பையின் வாயைச் சிறிதளவு நஞ்சு அடைத்துக்கொண்டிருத்தல்.
2. கருப்பையின் வாய் முழுவதையும் நஞ்சு அடைத்துக்கொண்டிருத்தல்.

உணரவேண்டும். இதற்குக் காரணம் என்ன? பிரசவிக்கும் முன்னரே சில சமயம் நஞ்சு கருப்பையினின்றும் இலேசாகப் பிரிந்து கொள்வதால், இந்நிலை ஏற்படுகின்றது. இங்ஙனம் நஞ்சு பிரியத் தொடங்கினால், உள்ளே குருதிக் கசிவு ஏற்படும்; இது சில சமயம் பெண் உறுப்பின் வழியாக அதிகமாகக் கொட்டுவதும் உண்டு. இந்நிலை ஏற்பட்டால் தாமதமின்றி மருத்துவரை நாடிச் சிகிச்சை பெறவேண்டும்

தாய் கருவுயிர்ப்பதற்கு முன்னதாகக் குருதி வெளிப்படுவதற்கு வேறொரு காரணமும் உண்டு. பெரும்பாலும் கருப்பையின் மேற்பகுதியில் ஒட்டிக்கொண்டு வளர வேண்டிய நஞ்சு (பார்க்க: படம்-29) சிலசமயம் படத்தில்காட்டியபடி (படம்-30) கருப்பையினது வாயின் அருகிலேயே ஒட்டிக்கொண்டு வளர்வதுண்டு; இதனை 'முன்னடைப்பு நஞ்சு'[54] என்று வழங்குவர். இதில் இரண்டு வகை உண்டு. ஒன்றில் முற்றிலும் கருப்பையின் வாயை நஞ்சு அடைத்திருக்கும்; இன்னொரு வகையில் நஞ்சு கருப்பையின் வாயைச் சிறிது மட்டும் அடைத்திருக்கும். இரண்டையும் படத்தில் காண்க; (படம்-30). பிரசவத்திற்கு முன்பு கருப்பையின் வாய் விரியத் தொடங்கும்பொழுது நஞ்சு பிய்த்துக்கொண்டு குருதி கொட்டத் தொடங்குகின்றது. கருப்பையின் வாயை இஃது அடைத்துக்கொண்டிருப்பதனால் குழந்தை எளிதாக வெளிவர முடியாது; ஆகவே, இது தாய்க்கும் சேய்க்கும் பெருத்த அபாயத்தை விளைவிக்கும்;

ஏழாவது மாதத்திற்குமேல் பெண் உறுப்பினின்றும் குருதி வெளிப்பட்டால் தாமதமின்றி மருத்துவரின் உதவியைப் பெறுதல் வேண்டும். முன்னடைப்பு நஞ்சு முற்றிலும் கருப்பையை அடைத்துக் கொண்டிருப்பின் 'சிஸேரியன் செக்ஷன்' என்ற முறையால் வயிற்றைக் கிழித்து குழந்தையை வெளியே எடுக்க முடியும். இக்கோளாறுகளைத் தேர்ச்சிமிக்க மருத்துவர்தான் கவனிக்க வேண்டும்.

இனி, அடுத்த கடிதத்தில் 'கருவுயிர்த்தல்' பற்றிய செய்திகளை ஓரளவு விரிவாகத் தெரிவிப்பேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்

---

54; முன்னடைப்பு நஞ்சு—Placenta previa

# 18

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன், நலனுகுக.

கருவுயிர்த்தல் பற்றிய சில கொள்கைகள்: முழு வளர்ச்சி பெற்ற குழந்தையை இயற்கை கருப்பையினின்றும் வெளியே தள்ளுகின்ற நிகழ்ச்சிதான் 'கருவுயிர்த்தல்' என்று வழங்கப் பெறுகின்றது. கருவுற்ற பிறகு குழந்தை பிறப்பதற்குரிய கூறுகள் பன்னெடுங்காலமாக மருத்துவர்கட்கு ஒரு புதிரான பிரச்சினையாகவே இருந்து வருகின்றன. குழந்தை நெருக்க மான இடத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு வெளி வருவதற்குத் தானுக மேற்கொள்ளும் முயற்சியே 'பிரசவ வேதனை' என்பதாகப் பழங்கால மக்கள்[55] நம்பி வந்தனர். குழந்தைப் பிரசவம் சிரமமாக இருக்கும்பொழுது அவர்கள் நல்ல நல்ல உணவு தருவதாக இன்சொல் கூறியோ அல்லது தண்டனை தருவதாக பயமுறுத்தியோ அவர்கள் குழந்தையை அழைப்பது வழக்கம். இன்றுகூடப் பிரசவம் என்பது முதுச்சூலில் ஏற்படும் மாறுதல்களின் காரணமாக நடைபெறுகின்றதா, அன்றி தாயினிடம் ஏற்படும் மாறுதல் களின் காரணமாக நிகழ்கின்றதா என்பது தெளிவாக அறி யக்கூடவில்லை. இதை விளக்குவதுபற்றிப் பல கொள்கை கள்[56] கூறப்பெற்றுள்ளன. ஆனுல் ஒன்றுகூட முற்றிலும் சரி யாக விளக்கவில்லை. பத்தாவது மாதம் நெங்கியதும் கருப் பையின் தசைகளுக்குத் தானுகஏற்படும் ஒருவிதமான தொந் தரவினுல் கருப்பை சுருங்கி விரிகின்றது என்றும், அதனுல் தான் பிரசவம் நிகழ்கின்றது என்றும் கூறுவர் ஒரு சாரார்.

---

56. பழங்கால மக்கள்—Primitive people
56. கொள்கை—Theory

வளரும் சிசு ஒரு நச்சுப் பொருளை உற்பத்தி செய்கின்றது என்றும், இது தாயின் குருதியில் ஏறிக்கொண்டே சென்று பத்தாவது மாதத்தில் உடலில் ஒருவித அதிர்ச்சியை விளைவிக்கின்றது என்றும், இந்த அதிர்ச்சியினால் பிரசவம் நடைபெறுகின்றது என்றும் மற்றொரு சாரார் கூறுவர். ஆனால் அடித்தலைச் சுரப்பியில் ஊறும் சாறுகள்—ஹார்மோன்கள்—பிரசவத்தைத் தொடக்குகின்றது என்று இன்றைய மருத்துவர்கள் கருதுகின்றனர். கருப்பகால இறுதியில் இந்த ஹார்மோன்கள் அனுப்பும் சில தூண்டல்கள் கருப்பையின் தசைகளைச் சுருங்கச் செய்கின்றன என்றும், இந்தச் சுருக்கமே பிரசவ வேதனையாகும் என்றும் அவர்கள் கூறுகின்றனர். முதலில் கருப்பை சுருங்குதல் சிறிது நேரம் மெதுவாக (feeble) நிகழ்கின்றது; அஃதாவது அரைமணிக்கொருமுறை சுருங்குகின்றது. ஆனால், படிப்படியாக இவ்வேதனை அளவில் அதிரிக்ககின்றது; அடுத்தடுத்துச் சுருங்கும் காலஇடையீடும் குறுகுகின்றது. அனிச்சை முறையில் இயங்கு தசைகளால் நிகழும் கருப்பையின்சுருக்கங்களுக்கு அடிவயிற்றின் இயக்கு தசைகளால் நேரிடும் சுருக்கங்கள் துணைசெய்கின்றன. படிப்படியாகக் கருப்பையின் வாய் விரிந்து இறுதியாக ஒரே முயற்சியில் குழந்தை யோனிக்குழலின் வழியாக வெளியே தள்ளப் பெறுகின்றது.

பிரசவ வேதனையின் கால அளவு குழந்தையின் பருமன், தாயின் இடுப்பெலும்புக்கட்டின் அளவுகள், கருப்பைத் தசையின் சுருங்கும் ஆற்றல், தாயின் பொதுவான உடல் நிலை முதலிய பல்வேறு கூறுகளைப் பொறுத்தது. பிரசவம் நடைபெறுவதை மூன்று நிலைகளாகப் பிரித்துக் கூறலாம்.

முதல் நிலை: கருப்பை சுருங்கத் தொடங்கியதிலிருந்து கருப்பையின் வாய் நன்றாக விரிந்து குழந்தையை வெளித் தள்ளுவதற்கு ஏற்ற நிலையை அடையும் வரையிலும் உள்ள நிலையே 'முதல் நிலை' எனப்படும். தொடக்கத்தில் வலி அரைமணிக்கொரு தடவை வந்து கொண்டிருக்கும். நேரம் ஆக ஆக வலி பதினைந்து நிமிடத்திற்கொரு முறை, ஐந்து

நிமிடத்திற்கொரு முறை என்று அடுத்தடுத்து ஏற்படுகின்றது: தொடக்கத்தில் இடுப்பின் பின்பகுதியில் இரண்டு ஆசனங்களும் சேரும் இடத்தில் அதிக வலி ஏற்படும். இப்பொழுது இனிமா கொடுத்துக் குடலைச்சுத்தம் செய்யவேண்டும். வலி தொடங்கிச் சிறிது நேரம் சென்றதும் கருப்பிணி இந்த வலி முன் வயிறு, பின் இடுப்புமுதலிய எல்லாப் பாகத்திலும் சமமாகப் பரவியுள்ளதை உணர்வாள்.

பிரசவ வேதனை அதிகமானதும் சிலருக்கு வயிற்றுக் குமட்டலும் வாந்தியும் வருவதுண்டு. சிலருக்கு அடிக்கடிச் சிறுநீர் கழிக்கவேண்டும் என்ற உணர்ச்சி ஏற்படுகின்றது. ஒவ்வொரு வலியின்பொழுதும் கருப்பையின் வாய் மிருதுவாகி நன்றாக விரிந்துகொள்ளும் தன்மையை அடைகின்றது. பிரசவ வேதனை தொடங்கிய சில மணி நேரத்தில் கருப்பையின் வாயை அடைத்துக்கொண்டிருக்கும் சளிபோன்ற பொருள் கழன்று சிறிது குருதியுடன் வெளியே வருகின்றது. இதை மருத்துவர்கள் "ஷோ"[57] என்பர். வீட்டிலுள்ள மூத்தோர் இதைத் தீட்டு கண்டுவிட்டதாகச் கூறுவர். இவ்வாறு வெளிப்படும் குருதி கொஞ்சமாகவே இருக்கும். அங்ஙனமின்றி பெண்ணுறுப்பினின்றும் குருதி குபு குபுவெனப் பாய்ந்து வந்தால் முன்னடைப்பு நஞ்சுபோன்ற கோளாறுகள் ஏற்பட்டிருப்பதாக உணரவேண்டும்.

அதிகமாகிக் கொண்டிருக்கும் வலியினால் கருப்பை இரண்டு பாகமாகி விடுகின்றது. கீழ்ப்பாகம் மெலிந்தும் மேற்பாகம் தடித்ததும் மாறிக் கொள்ளுகின்றது. தடித்த மேற்பகுதி குழந்தையை உந்திக் கீழ்நோக்கித்தள்ளுகின்றது. கருப்பையின் தசைகள் சுருங்கும்பொழுது கருப்பைக்குள் ஒரு பெரிய அழுத்தம் ஏற்படுகின்றது. இந்த அழுத்தம் குழந்தையை நாலாபக்கமும் அமுக்கி வெளியே தள்ளுகின்றது. கருப்பையின் அழுத்தத்தின் ஆற்றல் ஒரு பெரிய பயில்வானின் பிடிப்பின் உறுதியைவிட நான்கு மடங்கு மிக்கது

---

57. ஷோ—Show.

என்று துணிந்து கூறலாம். ஒரு பிரசவம் வலியின் பலம் சுமார் முப்பது பவுண்டு எடையுள்ள அழுத்தம் என்றும், சில சமயம் இது நூறு பவுண்டு எடை அளவுக்கு வேகமாக மாறுகின்றது என்றும் ஆய்வாளர்கள் கூறுவர். பிரசவ வேதனையில் சுருங்கி விரியும் கருப்பை ஒரு குட்டி யானையின் பலத்தையுடையது என்று கூறலாம். ஒவ்வொரு வலியின் பொழுதும் மேற்பாகத்தினின்றும் தள்ளப்பெறும் குழந்தை கருப்பையின் கீழ்ப்பாகத்திற்கு நகர்ந்து வருகின்றது. அப்பொழுது கருப்பையின் கழுத்தும் ஒவ்வொரு நோவின் பொழுதும் மிருதுவாகி அகன்று கீழ்நோக்கி வந்துகொண்




படம்—31: பிரசவத்தின் முதல் நிலை: பனிக்குடம் உடைதல்.

டிருக்கும் குழந்தைக்கு வழி விடுகின்றது. இந்நிலையில் கருப்பையின் வாயும் விரிந்து கொண்டே போகின்றது. இவ்வாறு ஒவ்வொரு சமயமும் சிறிது சிறிதாக அகன்றுகொண்டே சென்று வாயின் அகலமும் யோனிக்குழலின் அகலமும் ஒரே அளவாகி இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. பனிக்குடத்தில் தேங்கியுள்ள நீர் பலமாக அமுக்குவதனாலும், கருப்பை வேகமாகச் சுருங்கிவிரிவதாலும், உதயபாகம் அமுக்குவதாலும் கருப்பையின் வாய் நன்கு அகன்றுகொள்கின்றது. வாய் முற்றிலும் விரிந்ததும் பனிக்குடம் உடைந்து உள்ளி

ருக்கும் நீர் வெளியேறுகின்றது. பனிக்குடம் உடைந்து குழந்தை வெளிவரும் நிலைவரையுள்ள மூன்று நிலைகளில் இம் முதல்நிலை படத்தில் (படம். 31) விளக்கப்பெற்றுள்ளது; உற்றுநோக்கி உளங்கொள்க, இத்தனைச் செயல்களும் நடைபெறுவதற்கு முதற் பிரசவத்தில் பதினறு மணி நேரமும், அடுத்து நிகழும் பிரசவத்தில் ஆறு மணி நேரமும் ஆகின்றன.

சில சமயம் பனிக்குடம் பிரசவ வேதனை தொடங்கிய வுடனேயோ அல்லது பிரசவ வேதனை தொடங்கும் முன்னரோ உடைந்து விடுவதுண்டு. இப்பொழுது பனிக்குட நீர் முழுவதும் வெளியேறி விடுவதால், அடுத்து நிகழும் குழந்தைப் பிரசவம், 'உலர்ந்த பிள்ளைப்பேறு'[58] என வழங்கப்பெறுகின்றது. பனிக்குடத்தின் விரியச் செய்யும் இந்நிலையில் ஆற்றல் இல்லாது போவதால் பிரசவம் ஒரு சிறிது சிரமமாகப் போவதுடன் பிரசவகாலமும் நீடிக்கின்றது.

இரண்டாம் நிலை: இந்நிலையில் குழந்தை கருப்பையிலிருந்து யோனிக்குழல் வழியாக வெளியே தள்ளப்பெறுகின்றது. இந்நிலையில் சாதரணமாகத் தலை முதலிலும், ஏனைய உடலுறுப்புகள் அடுத்தும் வெளி வருகின்றன. இப்பொழுது பிரசவ வேதனை மிகவும் அதிகமாகவும் கடுமையாகவும் இருக்கும். குழந்தையை வெளியேற்றும் முயற்சியில் வயிற்றுத் தசைகளும், நுரையீரல்களின்[59] அடியில் காணப்பெறும் விதானமும்[60] கருப்பையுடன் ஒத்து ஒவ்வொரு வலியின் பொழுதும் சுருங்கி விரிகின்றன. இப்பொழுது கருப்பிணிக்கு முக்கினல் ஆறுதலாக இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்படும். அதனல் கருப்பிணி முக்குவாள். கருப்பையினின்றும் நன்ருக விரிந்துகொண்டுள்ள அதன் வாயின் வழியாக யோனிக்குழலில் குழந்தை ஒவ்வொரும் நோவின்பொழுதும் சிறிது சிறிதாக இறங்கிக்

58. 'உலர்ந்த பிள்ளைப்பேறு'—'Dry labour'.
59. நுரையீரல்கள்—Lungs.
60. விதானம்—Diaphram.

கொண்டு வரும். அதற்கேற்றவாறு யோனிக் குழலும் அகன்று விரிந்து கொடுக்கும்.

கீழே இறங்கி வரும்குழந்தையின் தலையைச் சுற்றியுள்ள பிறப்புறுப்புகளின் தசைகள் நெகிழ்ந்து இடங் கொடுக்கின்றன. இச்சமயம் வலி மேலும் வேகமாகவும் கடுமையாகவும் தொடர்ச்சியாகவும் உண்டாகும். கீழே இறங்கி வருங்கால் குழந்தையின் உதய பாகம் நன்றாக அமுக்குவதனால் இரண்டு தொடைகள், ஆசனவாய்[61] பெண் உறுப்பு இவைகளுக்கு இடையேயுள்ள பக்கம் உப்பிக் கொண்டு கிழிந்து விடும்போல் தோற்றமளிக்கும். குழந்தை யோனி வாயை அடைந்ததும் கருவுயிர்க்கும் பெண்ணுக்கு மலங்கழிக்க வேண்டுவது போன்ற ஓர் உணர்ச்சி ஏற்படும்; குழந்தையின் உதய பாகம் மலக்குடலை அமுக்குவதனால் இந்த உணர்ச்சி தோன்றுகின்றது. யோனியின் வாயினின்றும் குழந்தையின் தலை வெளிப்பட்டதும். கருப்பிணி நோவு தாங்க முடியாது சில சமயம் வாய்விட்டுக் கூச்சலிடுவதும் உண்டு. முதலில் குழந்தையின் முகம் தாயின் ஆசனத்தை நோக்கியும் தலையின் பின்பாகம் மேல் நோக்கியும் இருக்கும். கழுத்து வரை வெளி வந்ததும் குழந்தை தானாகவே இடப்புறமோ வலப்புறமோ தலையைச் சிறிதளவு திருப்பிக் கொள்ளும். இதைத்தான் மூத்தோர்கள் 'தலை திரும்புகின்றது' என்பர். குழந்தையின் தலை வெளியே வருங்கால் அதனுடைய மூக்கு, வாய் இவற்றினின்றும் கோழை சிறிதளவு கசிவதுண்டு. தலை வந்து திரும்பியதும் தோள்கள், உடல், ஆசனம், கால்கள் என ஒவ்வொரு உறுப்பும் வேகமாக வெளியே நழுவித் தாமாகவே வந்துவிடுகின்றன. இச்செயல் நடைபெற முதற்பிரசவத்தில் இரண்டு மணி நேரமும் அடுத்தடுத்து நிகழும் பிரசவங்களில் அரை மணி நேரமும ஆகலாம். குழந்தை முற்றிலும் வெளிவந்த பிறகும் அது தாயுடன் கொப்பூழ்க் கொடிமூலம் ஒட்டிக் கொண்டிருக்கும்; இக்கொடி தாயின் நஞ்சுக் கொடியுடன்

---

61. ஆசனவாய்–Aenus.

கருப்பையில் ஒட்டிக்கொண்டிருக்கும்; கொப்பூழ்க் கொடியில் குருதியோட்டம் நின்றதும் அதை நறுக்கித் தாயினிடமிருந்து சேய் பிரிக்கப்பெறும்.

மூன்றும் நிலை: நஞ்சுக் கொடியும் குழந்தையைச் சுற்றிக் கொண்டிருந்த சவ்வும் வெளி வருவது இந்நிலையில் தான். குழந்தை வெளி வந்ததும் கருப்பிணி சிரமம் தணிந்து பெருமூச்சு விடுவாள். சில சமயம் சிலருக்குக் களைப்பு மிகுதியால் தூக்கம் வருவதுமுண்டு. குழந்தை வெளி வந்ததும் கருப்பையின் உயரம் கொப்பூழுக்குச் சிறிது மேல் வரை இருக்கும்; சுமார் பதினைந்து நிமிடங்களுக்குப் பிறகு கருப்பை மீண்டும் மெல்லச் சுருங்கி விரியத் தொடங்குகின்றது. இப்பொழுது சுமார் அரை மணி நேரம் ஏற்படும் வலி முன்னதைப் போன்று அவ்வளவு கடுமையாக




படம். 32. பிரசவம் ஆனபின்பு கருப்பையின் உயரத்தைக் காட்டுதல்.

இராது; அஃதுடன் சிறிது அளவு குருதியும் வெளிப்படுகின்றது. கருப்பையில் ஒட்டிக் கொண்டிருக்கும் நஞ்சு மெல்லப் பிரிந்து கருப்பை சுருங்கி விரிவதானுல் அது கீழே தள்ளப்பெற்று வெளியே வந்து விழுகின்றது. அஃதுடன் குருதியும் சிறிதளவு வெளியே கொட்டுகின்றது; ஆனால் விரைவில் குருதி ஒழுக்கு நின்று போகின்

றது; இது பின்னிலைப் பிரசவம்[62] என வழங்கப்பெறும்; கருப்பை நஞ்சை வெளிப்படுத்திய பிறகு மிகவும் கடின மாகிச் சிறுத்துச் சுருங்கி விடுகின்றது; பிரசவம் ஆனவுடன் சுமார் இரண்டு பவுண்டு எடையுள்ள கருப்பை ஆறுவது. வார இறுதியில் இரண்டு அவுன்சாகக் குறைந்துவிடுகின்றது பிரசவித்த பிறகு உள்ள கருப்பையின் நிலை படத்தில் காட்டப்பெற்றுள்ளது (படம்—32). இது நாடோறும் சிறிது சிறிதாகச் சுருங்கிச் சென்று முதல்வாரத்தின் இறுதியில் ஒரு பவுண்டு எடையுடையதாக மாறிவிடுகின்றது. அப்பொழுது 'பியூபிஸ்' என்ற இடுப்பெலும்பிற்குமேல் இரண்டு அங்குல உயரத்தில் அது கைக்குத் தட்டுப்படும். பிரசவம் ஆன பத்தாவதுநாள் அடிவயிற்றில் மிகவும் இலேசாகச்சிறிதளவு கைக்குத் தென்படும்; அதற்குப்பிறகு அது நன்றாகச் சுருங்கி அடிவயிற்றுக்குள் இறங்கிக்கொண்டு விடுவதால் வயிற்றின் மீது கைவைத்துப் பார்த்து அதனை உணரமுடிவதில்லை. ஒரு பெரிய குழந்தையைத் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டிருந்த கருப்பை பிரசவம் முடிந்தவுடன் ஒருகை முட்டியின் பரிமாணத்திற்குக் கல்போன்று கடினமாகச் சிறுத்துவிடுவது வியப்பினும் வியப்பன்றோ? ஒரு குழந்தை வெளிப்படுதற்குக் கருப்பை சுமார் 135 தடவைகள் சுருங்கி விரிவதாக சில மருத்துவர்கள் கணக்கிட்டுள்ளனர்.

பலவகைப் பிரசவங்கள்: இவ்விடத்தில் இன்னும் சில செய்திகளையும் நீ அறிந்து கொள்ள வேண்டும். தொண்ணூற்றாறு சத விகிதப் பிரசவங்களில் தலை உதயமே[63] நிகழ்கின்றது; கருப்பையில் சாதாரணமாகக் குழந்தையின் தலை கீழாகத்தானிருக்கும் (பார்க்க: படம்—25)[64]; கால்களும் கைகளும் வளைந்தோ மடிந்தோ இருக்கும். தலை கீழ்நிலையில் இருப்பதால் அதுவே பிறப்பின்பொழுது முதலில் வருவது இயல்பாகும். தலை வட்டமாகவும் உறுதியாகவும் இருப்ப

62. 'பின்னிலைப் பிரசவம்'—Afterbirth.
63. தலை உதயம்-Head Presentation.
64. இந்நூல்—பக்கம் 182

தால், அது கருப்பையின் வாயினை விரியச்செய்யவும் துணை செய்கின்றது. எனினும், சில சமயம் குழந்தை வேறுநிலையிலும் இருந்து முதலில் முகம், கை, அல்லது கால், ஆசனம் என்ற முறையில் உதயம்ஆவதுமுண்டு. இத்தகைய பிரசவங்கள் 'அடிப்புறப் பிரசவங்கள்'[65] என வழங்கப்பெறுகின்றன; இவைபற்றிய விவரங்களை அடுத்த கடிதத்தில் விரிவாக விளக்குவேன். சில சமயம் குழந்தை கருப்ப காலத்தில் பெரும்பான்மையான பகுதியில் அடிப்புறப் பிரசவ நிலையிலேயே இருந்து பிரசவகாலம் நெருங்குகின்றபொழுது தன் நிலையை மாற்றிக்கொண்டு தலை முதலில் வெளிவரும் நிலையை அடைவதுமுண்டு.

புதிதாகப் பிறந்த குழந்தை 'குவா, குவா' என்று கத்துவது இயல்பு; பாதுகாப்புடன் இளஞ்சூடாகவுள்ள தாயின் கருப்பையில் தங்கியிருந்தகுழந்தை சற்றுக்குளிர்ந்த புறவுலகச் சூழ்நிலைக்கு வருங்கால் அதன்வாழ்க்கையில் ஏராளமான மாற்றங்கள் ஏற்படுவது இயல்பு. பிறந்தவுடன் தாயினிடமிருந்து வந்த குருதியோட்டம் இல்லாது போகின்றது; இதனால் உணவையும் உயிரியத்தையும்[66] தாயினிடமிருந்து பெறமுடிவதில்லை: 'அழுதபிள்ளை பால் குடிக்கும்' என்பது பழமொழியன்றோ? அழுதால்தான் குழந்தை பிழைக்கும் என்பது இதன் பொருள். பிரசவத்தை விசாரிக்க வருகின்றவர்கள், 'குழந்தை அழுகின்றதா?' என்று கேட்பதை இன்றுங் காண்கின்றோம். அழுவதால் குழந்தையின் நுரையீரல்களில் சுவாசம் ஏற்படுகின்றது. இதனால் குழந்தை காற்றிலிருந்து நேராக உயிரியத்தை அடைகின்றது. நுரையீரல்கள் செயற்படவே, ஏனைய உறுப்புகளும் செயற்படத் தொடங்குகின்றன.

பிரசவ வேதனையின்றிப் பிறத்தல்: பிரசவ வேதனையின்றிக் குழந்தை பிறப்பதுதான் இயல்பு. இயல்பாக நடைபெற

---

65. அடிப்புறப் பிரசவங்கள்–Breech deliveries
66, உயிரியம்-Oxygen

வேண்டிய ஒரு நியதிக்கு மக்கள் சிரமப்பட வேண்டியதில்லை. உண்மையில் பழங்கால மக்களும் இன்று விவசாய மக்கள் இனத்தைச் சேர்ந்த பெண்களும், பிரசவத்தைச் சிரமம் என்று கருதுவதில்லை. உறையிலிருந்து கத்தியை உருவுவது போன்று குழந்தை எளிதாக அவர்கட்குப் பிறக்கின்றது! இவர்கள் பிரசவம் ஆன மறுநாளே வேலைக்கும் போய் வருகின்றனர். நெல்லை மாவட்டத்தில் எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவரின் மனைவி நல்ல உழைப்பாளி. இஸ்லாம் சமயத்தினர். நல்ல உடற்கட்டையுடையவர். நிறை கருப்பகாலத்தில் அவள் ஒரு நாள் ஒரு சிறு உறைக்கிணற்றில் கிணற்றின் இரு புறங்களிலும் கால்களை அகட்டி வைத்துக்கொண்டு நீர் இறைத்துக்கொண்டிருக்கும்பொழுது கால் சறுக்கியதால் தவறிக் கிணற்றில் விழுந்து விட்டார். கிணற்றில் மார்பு அளவு நீர் இருந்தது. அம்மையார் கிணற்றில் விழுந்தவுடன் பிரசவம் நடந்துவிட்டது. தாய் குழந்தையைப் பாதுகாப்புடன் கையில் ஏந்திக் கொண்டு விட்டார். அண்மையிலிருந்தோர் தாயையும் சேயையும் கிணற்றிலிருந்து அகற்றினர். தாயும் சேயும் நன்னிலையில் இருந்தனர். இப்பொழுது (1961) அக்குழந்தைக்கு இரண்டாண்டுகூட நிறைவுபெறவில்லை.

பழங்காலத்துப் பெண்களிடமும் இன்றைய விவசாய இனத்துப் பெண்களிடமும் எளிதாகப் பிரசவம் நடைபெறுவதற்குப் பல காரணங்கள் இருந்தன. இப்பெண்களின் திறந்த உடலில் கதிரவன் ஒளி நன்கு படுகின்றது; உண்ணும் உணவில் இன்றியமையாத வைட்டமின்கள் உள்ளன; அவர்களுடைய எலும்புக் கூடும் இடுப்பெலும்புக் கட்டும் நன்கு வளர்ந்திருக்கின்றன. அன்றியும், அவர்களுடைய கடினமான உழைப்பும் அவர்கள் பெறும் குழந்தையின் அளவைச் சிறியதாக்குகின்றது; இதனால் பிரசவமும் எளிதாகின்றது. அவர்களுடைய திருமணமும் பெரும்பாலும் உறவினர்களுக்குள்ளேயே நடைபெற்றுவருகின்றது. இதனால் உயரம், எடை தோற்றம் ஆகியகூறுகளில் ஆணுக்கும்பெண்ணுக்கும் அதிக வேற்றுமை இருப்பதில்லை. மேலும், பழங்காலத்தில் பெண்

கள் தங்கள் உடலழகைப் பற்றி அதிகம் அக்கறை கொள்ளாது நல்ல உணவுஉண்டனர்; காற்ருேட்டமான வீடுகளில் வசித்தனர். சோம்பலின்றி வீட்டு வேலைகள் அனைத்தையும் தாமே செய்து உடலை நன்னிலையில் வைத்துக் கொண்டிருந்தனர்: மேலும் திருமணமும் தக்க பருவத்தில் நடைபெற்றதால், குழந்தை பிறக்க உகந்த பருவத்திலேயே தாய்மையை அடைந்து சுகப்பிரசவத்திற்கு உள்ளாயினர். தவிர, இவர்கள் மனேபாவனையும் நல்ல நிலையில் இருந்தது: அவர்கள் பிரசவத்தைத் தூங்குவது, சாப்பிடுவது போன்ற இயற்கை நிகழ்ச்சியாக எண்ணி அதனை இன்பத்துடன் வரவேற்றனர்.

நாகரிகத்தின் விளைவுகள்: இன்றைய வாழ்வில் எத்தனையோ காரணங்களால் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்கின்றன. தற்காலத்தில் படிப்பு, செல்வம், வாழ்க்கை நிலை, காதல் என்ற பலவற்ருல் திருமணம் பெரிதும் பாதிக்கப் பெற்றுள்ளது. உறவினன் என்ற காரணத்திற்காக படிப்பில்லாத தாய்மாமன்மகனுக்கோ அத்தைமகனுக்கோ தமது செல்வியைத் திருமணம் செய்துகொடுக்கப் பெற்ருேர்கள் விரும்புவதில்லை. காதல் என்ற உணர்ச்சியால் வலிமையாக ஈர்க்கப்பெறும் இளம் உள்ளங்கள் சாதி, சமயம், இனம் போன்ற வேற்றுமைகளைப் பாராது திருமணம் புரிந்து கொள்ளுகின்றனர் இதனுல் சில சமயம் உயரமும் பருமனுமான ஓர்ஆடவருக்கு மிகவும்மெல்லிய தோற்றமுடைய ஒரு பெண் வாழ்க்கைப்படநேரிடுகின்றது. தந்தையைப்போன்று குழந்தை அமைந்து விட்டால் தாய் சிரமப்பிரசவத்திற்கு உள்ளாகுகின்ருள். மேலும், இக்காலத்துப்பெண்களோ நல்ல உணவு உண்பதில்லை; நல்ல அறைகளில் வசிப்பதுமில்லை. வீட்டுவேலைகளைச் செய்வதே இல்லை. இவர்கள் இயற்கைக்கு விரோதமாக ஆடையணிகளையும் அணிகின்றனர். இவை யாவும் பிரசவத்தில் பங்குகொள்ளும் தசைகளின் வளர்ச்சிக்குப் பாதகமாகவே அமைகின்றன. இதனுல் இவர்களிடம் பெரும்பாலும் 'சுகப்பிரசவம்' என்பது முயற் கொம்பாக்கின்றது.

**மருந்துகளின் தீங்குகள் :** பிரசவ வேதனையையே உணராமல் குழந்தையைப் பெற்றுவிட ஏதாவது வழி இல்லையா? அதற்கு மருந்துகள் இல்லையா? என்று நாகரிக மங்கையர் நினைப்பது இயல்பு. இவற்றைக் காண மருத்துவர்கள் பல காலமாகப் பாடுபட்டு வருகின்றனர். இதுகாறும் பிரசவ வேதனை சிறிதுகூடத் தெரியாமல் பிரசவிக்க ஒரு வழியையோ மருந்தையோ அவர்களால் அறியக்கூடவில்லை. பிரசவவேதனையைத் தாங்கமுடியாது கதறும் பெண்களுக்கு அவர்களை அதிகம் அலறவிட்டால் களைத்துவிடுவார்கள் என்று கருதி மருத்துவர்கள் சிலவித மயக்க மருந்துகளைக் கொடுக்கின்றனர். இவை நோவைத் தணிப்பதுபோல் பாவனை செய்து கருப்பிணியை நல்ல தூக்கத்தில் ஆழ்த்துகின்றன. எனினும், பிரசவ நோவை முற்றிலும்குறைக்க அநுபவம்மிக்க மருத்துவர் விருப்புவதில்லை. அவர் உடலுக்கு நேரிடும் சில தொந்தரவுகளை மட்டுப்படுத்துவாரேயன்றி, பிரசவ வேதனையை முற்றிலும் குறைக்கமாட்டார். பிரசவ வேதனை இருந்தால் தான் குழந்தை வெளிவர இயலும்.

பெரும்பாலான மருந்துகள் பிரசவ வேதனையைக் குறைத்துப் பிரசவ நேரத்தை அதிகரிக்கின்றன. மேலும், இவை தாயின் உடல்வழியாகக் குருதியில் பரவிச் சேயையும் பாதிக்கின்றன. தாயின் வேதனையைத் தணிக்க அளிக்கும் மருந்தின் அளவு சேய்க்கு மிகவும் அதிகமானதால்சிலசமயம் சேய் அதனைத் தாங்கமுடியாது மரித்தும் போகின்றது. தாய் மயக்க மருந்துகளை உண்ட பிறகு பிறக்கும் குழந்தைகள் மூச்சுமுட்டலினால் நீலநிறமாகப் பிறக்கின்றன; சிலகுழந்தைகள் சுவாசிக்காது அசைவற்றுக் கிடக்கின்றன. அவைகளை விழிக்கச் செய்து சுவாசிக்கச் செய்வதற்குள் மருத்துவர்படும் பாடு பெரும்பாடாகிவிடுகின்றது மயக்க மருந்துகள் கருப்பையின் சுருங்கும் தன்மையையும் பெரிய அளவில்பாதிக்கின்றன. அதனால் குழந்தை பிறந்து நஞ்சு வெளிப்பட்டதும் சட்டெனச் சுருங்கிக் கடினமாகவேண்டிய கருப்பை சுருங்காது தொள தொளவென்று பைபோன்று தளர்ச்சியாக இருக்கும். இதனால் உள்ளிருந்து குருதி பெருவாரியாகச்

கொட்டிக் கருவுயிர்த்த தாய்க்குப் பேராபத்தை விளைவிக்க லாம்; இதனால்தான் மருத்துவர்கள் மருந்துகளைப் பயன் படுத்துவதில் தயங்குகின்றனர்.

இனி, அடுத்த கடிதத்தில் பிரசவத்தில் நேரிடக்கூடிய சில கோளாறுகளையும் அவை நீக்கப்பெறும் முறைகளையும் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 19

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

சில பெண்களுக்குப் பிரசவம் மிகவும் சிரமமாக முடிகின்றது. கருப்பை, பிரசவப் பகுதி, குழந்தை இவை மூன்றில் ஏதேனும் ஒன்றில் கோளாறு ஏற்பட்டால் பிரசவம் மிகவும் சிரமமானதாக முடிகின்றது. இவை ஒவ்வொன்றுலும் ஏற்படும் சிரமப் பிரசவத்தை ஈண்டு விளக்குவேன்.

கருப்பைக் கோளாறு: பிரசவம் எளிதானதாக அமைய வேண்டுமாயின் கருப்பை நன்கு விரிந்து சுருங்கவேண்டும்; பிரசவ வேதனை தொடங்கி இடைவிடாது ஏற்பட்டால் குழந்தை குறிப்பிட்ட நேரத்தில் வெளிவந்து விடுகின்றது; அப்படியின்றிக் கருப்பை நன்முகச் சுருங்கி விரியாமல் இடக்குச் செய்தால் பிரசவம் காலதாமதமாகி தாய்க்கும் சேய்க்கும் பலவிதமான தொந்தரவுகள் ஏற்படுகின்றன. கருப்ப காலத்தில் நல்ல ஊட்டமுள்ள உணவை உட்கொண்டு உடல்நலத்தைப் பாதுகாவாது அசட்டை செய்யும் இளம் பெண்கள் சிரமப் பிரசவத்திற்கு உள்ளாகின்றனர்; தேவையான சத்துப்பொருள்கள் கருப்ப காலத்தில் அளிக்கப் பெறுததால் கருப்பைத் தசைகள் நன்முக விரிந்து சுருங்கும் வன்மையற்றுக் குழந்தையை வேகமாகக் கீழே தள்ள முடியாத நிலையிலுள்ளன. கருப்ப காலத்தில் மாதுளம்பழம் மிகவும் நல்ல ஊட்டத்தைக் கொடுக்கும். பழம் இல்லாத காலத்தில் 'மாதுளங்க இரஸாயனம்' என்ற ஆயுர்வேத டாணிக்கைப் பயன்படுத்தலாம். இது கருப்பைத் தசைகளுக்கு நல்ல ஊட்டத்தைக் கொடுத்து வலுவுடையனவாக்குகின்றது.

பிரசவவேதனை தொடங்கியதும் வலி அடுத்தடுத்துவராது அதிகக்காலதாமதம் ஏற்பட்டாலும், அங்ஙனம்வரும் வலியின் உறைப்பு குறைந்தாலும் தாயும் சேயும் சிரமப்பிரசவத்திற்கு உள்ளாகின்றனர். முதன் முதலாக முப்பது வயதிற்கு மேல் தாய்மையடைகின்ற பெண்களின் கருப்பை இருபது வயதுப் பெண்களின் கருப்பையைப்போன்று மிகவும் வலிமையாக விரிந்து சுருங்குவதில்லை. ஆகவே, குழந்தை பிறக்க உகந்த வயதைத் தாண்டிவிட்ட பெண்கள் பலருக்கு இதனால் சிரமப்பிரசவம் உண்டாக வழியாகின்றது. கருப்பையால் பிரசவம் தாமதம் ஆவது இருவகையால் நேரிடலாம்; கருப்பை தொடக்கத்திலிருந்து நன்ருகச் சுருங்காது வலுவற்று வேலை செய்து பிரசவத்தைக் காலதாமதம் செய்யலாம்; அல்லது, தொடக்கத்தில் நல்ல உறைப்பான வலியைக் கொடுத்து உற்சாகத்துடன் செயற்பட்ட கருப்பை சில மணி நேரத்தில் சோர்ந்துபோய் நன்ருகச் சுருங்கிவிரியத் தாமதம் செய்து இடக்குப் பண்ணலாம்! தொடக்கத்திலிருந்தே வன்மையின்றிச் செயற்படும் கருப்பையை ஊக்குவிக்க மருத்துவர்கள் 'பிட்யூட்டரி' போன்ற மருந்துகளைப் பயன்படுத்துவர். இரண்டாவது வகையான பலவீனத்தை நிவர்த்திப்பதற்குக் கருப்பிணியைச் சில மருந்துகளால் உறங்க வைப்பர். அரை மணி நேரமாவது நன்ருகத் தூங்கிக் களைப்பு நீங்கி விழித்துக்கொண்டதும் கருப்பை மிகவும் பலமாக வேலை செய்யத்தொடங்கும்.

பிரசவ பாகத்தின் கோளாறு: பிரசவம் சிரமமாவதற்குப் பிரசவ பாகத்தில் ஏற்படும் கோளாறுகளும் காரணவாக அமைகின்றன. இடுப்பெலும்புக் கட்டு குறுகியிருந்தாலும், கருப்பையின் வாய் விரிந்து கொடுப்பதில் இடக்குச் செய்தாலும், யோனிக் குழலைச் சுற்றியுள்ள தசைகள் தளர்ந்து இடம் விடாவிட்டாலும் பிரசவம் சிரமமாகின்றது.

இவ்விடத்தில் இடுப்பெலும்புக் கட்டினைப்பற்றிச்[67] சிறிது நீ அறிந்து கொண்டாதல் வேண்டும். கருப்பையில்

67. இடுப்பெலும்புக் கட்டு-Pelvis

வளரும் குழந்தையைத் தனது உட்புறத்தில் மிகுந்த பத்திர மாக வைத்துப் பாதுகாக்கும் பொறுப்பு இடுப்பெலும்புக் கட்டினுடையது. இந்தக் கட்டிற்குள் தசைகள், நரம்புகள், குருதிக் குழல்கள் முதலியன பரவிக்கொண்டு கருப்பைக்கு அதிர்ச்சி ஏற்படாதவாறு பஞ்சணைபோல் தாங்கி உதவு கின்றன. இடுப்பெலும்புக்கட்டு பின் இடுப்பெலும்பு,[68] பக்க இடுப்பெலும்பு,[69] முன் இடுப்பெலும்பு[70] என்ற மூன்று எலும்புகளாலும், பின் பக்கத்தில் திரிகம்,[71] உள் வால் (குத) எலும்பு[72] என்ற முதுகெலும்பின் முடிவுப் பகுதிகளாலும் ஆக்கப்பெற்ற அகன்ற வாயையுடைய கட்டை போன்ற ஓர் உறுப்பாகும். குழந்தையின் தலை இந்த இடுப்பெலும்புக் கோட்டைக்குள்ளிருந்து வெளிப் படவே இயற்கையில் இடுப்பெலும்புக் கட்டு அகன்ற வாயினையுடையதாயிருக்கின்றது. அகன்ற வாயுடைய இடுப் பெலுப்புக் கட்டினையுடைய பெண்கள் எளிதாகக் கரு வுயுர்க்கின்றனர். குறுகிய வாயினையுடைய இடுப்பெலும்புக் கட்டினைக் கொண்ட பெண்கள் பிரசவத்தில் மிக்க தொந் தரவுகளை அடைகின்றனர். இடுப்பெலும்புக்கட்டு இயற்கை யாக அன்றிச் செயற்கையாலும் குறுகிவிடக் கூடும். சிறு வயதில் ஊட்டமுள்ள உணவு இல்லாவிட்டால் ரிக்கெட்ஸ்[73] என்னும் நோய் ஏற்பட்டுப் பெண்ணின் இடுப்பெலும்புக் கட்டு மிகவும் சிறுத்துக் கொண்டு விடுவதால் சிரமப் பிரச வம் ஏற்படுகின்றது.

இடுப்பெலும்புக் கட்டினை அகன்ற வாயுடையது, குறு கிய வாயுடையது, நோயால் சிறுத்துப் போனது, சிறிது குறுகியது என்று நான்கு வகையாகப் பிரித்துக் கூறுவர் மருத்துவர்கள். முதல்வகைக் கட்டினையுடைய பெண்கள்

---

68. பின் இடுப்பெலும்பு-Ilium.
69. பக்க இடுப்பெலும்பு-Ischium.
70. முன் இடுப்பெலும்பு-Pubis.
71. திரிகம்-Sacrum.
72. உள் வால் (குத) எலும்பு-Coccyx.
73. ரிக்கெட்ஸ்-Rickets.

எளிதில் கருவுயிர்க்கின்றனர். இரண்டாவது வகைக் கட்டி னையுடையவர்களிடம் பிரசவம் சிரமமாகின்றது. மூன்றா வது வகையினைக் கொண்டவர்கள் இயற்கைவழியாகப் பிரச விக்கவே முடிவதில்லை. இவர்களிடம் சிசேரியன் எனப்படும் அறுவை முறை வழியேதான் பெரும்பாலும் குழந்தையை எடுக்க முடிகின்றது. நான்காவது வகையினைக் கொண்ட பெண்கள் சுகமாகக் கருவுயிர்ப்பது உள்ளிருக்கும் குழந்தை யின் தலை வளர்ச்சியை பொறுத்தது. சிறிய தலையாக இருப் பின் குழந்தை சிறிது குறுகியுள்ள வாய்வழியே வெளிவர லாம். தலை பெரிதாக இருந்தால் பிரசவம் சிரமமாகி




படம்—33: இடப்புறப் பகுதி (1) குழந்தை இடுப்பெலும் புக்கட்டினுள் எளிதாக வெளிவருவதையும், வலப்புறப் பகுதி (2) அங்ஙனம் வெளிவர இயலாததையும் விளக்குதல்.

விடுகின்றது. படத்தில் (படம்-33) குழந்தை இடுப்பெலும் புக் கட்டினுள் எளிதாக வெளிவருவதையும், வர முடியா திருப்பதையும் காண்க.

இடுப்பெலும்புக் கட்டு அகன்ற வாயினையுடையதாக இருப்பினும், பிரசவத்தின்பொழுது நல்ல வலி ஏற்படினும், குழந்தை சிறியதாக இருப்பினும் சில பெண்கள் சிரமப் பிர சவத்திற்கு உள்ளாகின்றனர். இதற்குக் கருப்பையின் வாய், யோனிக்குழல் இவற்றின் தசைகள்சரியாக விரிந்துகொள்ளா

மையே காரணம் ஆகும் எவ்வளவு பிரசவ வேதனை ஏற்பட்டாலும் சிலருடைய கருப்பையின் வாய் விரித்துக்கொள்வதே இல்லை. இவர்கள் சாதாரணமாகப் பிரசவிக்க முடிவதே இல்லை. சில பெண்களுக்கு யோனிக்குழலைச் சுற்றி



படம்-34: தலை உதயத்தில் குழந்தை கருப்பையில் இருக்கும் நான்கு நிலைகளைக் காட்டுதல்.

யுள்ள தசைகள் மிகவும் உறுதியாகஉள்ளன. இவை தளர்ந்து இடங்கொடாமையால் குழந்தை வெளிவரமுடியாது தாமதமாகின்றது. முப்பது வயதிற்குமேல் தாய்மையடைகின்ற

பெண்களுக்கும், நாட்டியம், சர்க்கஸ் போன்ற தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்களுக்கும் யோனிக்குழலைச் சுற்றியுள்ள தசைகள் மிகவும் உறுதியாகிவிடுகின்றன; இவை பிரசவத்தின்போது தளர்ந்து கொடுப்பதில் இடக்குச் செய்து இப் பெண்களைச் சிரமமான பிரசவத்திற்கும் உள்ளாக்குகின்றன.

குழந்தையிடம் கோளாறு: சிரமமான பிரசவத்திற்குக் குழந்தையும் ஒரு காரணமாக இருக்கலாம். பெரும்பாலும் குழந்தை தலைகீழாகவும் ஆசனம் மேலாகவும் உள்ள ஒரு நிலையில்தான் கருப்பையில் தங்கியிருக்கும் என்பதை ஏற்கெனவே அறிந்து கொண்டிருக்கிறாய். இந்த நிலை படத்தில் (படம்–34) காட்டியுள்ளவாறு முதுகு இப்புறமாகவும் அப்புறமாகவும் சிறிது மாறுபட்டு நான்கு விதமாக இருக்கலாம். பிரசவத்தின் பொழுதும் இதே நிலையிலிருந்துதான் கருப்பையினின்று வெளிப்படுகின்றது. முதலில் வெளிப்படுவது தலையாதலின் இந்த நிலை 'தலை உதயம்' என்று வழங்கப் பெறுகின்றது. பெரும்பாலும் இவ்வகைப் பிரசவம் எளிதாகவே அமைந்து விடுகின்றது.

சில சமயம் குழந்தை கருப்பையில் வேறு விதமாகவும் காணப்பெறுவதுண்டு. தலை மேலாகவும் ஆசனம் கீழாகவும் குழந்தை கருப்பையில் தங்கியிருந்தால்(படம்–35) பிரசவத்தில் முதலில் வெளிப்படுவது ஆசனமாக இருக்கும். இஃது 'ஆசன உதயம்' என வழங்கப்பெறும். இம்மாதிரி குழந்தை இருப்பதற்குக் காரணம் ஒன்றும் கூறமுடியாது; இம்முறையில் முதலில் ஆசனம், கால்கள், உடல், கைகள், கடைசியாகத் தலை என்று உறுப்புகள்முறையே வெளிப்படுகின்றன. இம்முறையில் பிரசவம் எப்பொழுதுமே சுகமானதாக முடிவதில்லை. குழந்தை மிகவும் பெரியதாக வளர்ந்திருந்தாலும் இடுப்பெலும்புக் கட்டு சிறிது குறுகியிருந்தாலும் முதல் பிரசவத்தில் ஆசன உதயப் பிரசவம் சிரமமாகி விடுகின்றது. இதில் தாயைவிட சேய்க்குத்தான் ஆபத்து அதிகம்; குழந்தை வெளிப்படுங்கால் முதலில் கால்களும் உடலும் வெளிப்படுகின்றன. வெளிப்புறத்துக் காற்று 'சில்' என்று குழந்தையின் உடலில் தாக்கியதும் குழந்தை உள்ளே சுவா

சிப்பின் கருப்பையிலுள்ள பனிநீர் மூக்கு, வாய் வழியாக சுவாசக் குழலுக்குள் சென்று குழந்தைக்கு மூச்சுத்திணறலை உண்டாக்கி இறப்பையும் விளைவித்து விடுகின்றது. சில சமயம் கழுத்துவரை பிரசவம் எளிதாக ஏற்பட்டுத் தலை வெளிவராது உள்ளேசிக்கிக்கொள்வதுமுண்டு. நீண்டநேரம் தலை வெளிவராது உள்ளேயே தங்கிவிட்டால் கருப்பையின் வாய் அழுத்தமாகக் குழந்தையின் கழுத்தின்மீது சுருங்கி விடுகின்றது. இறுக்கமான கயிற்றால் கழுத்திலே தூக்குப் போட்டதுபோல் குழந்தைக்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டு அஃது இறக்கவும் நேரிடுகின்றது. தொடக்கத்திலேயே இந்



படம்-35: ஆசன உதயத்தை விளக்குதல்.

நிலையைப் புதிர்க் கதிர்மூலம் சோதித்து இடுப்பெலும்புக் கட்டின் அமைப்பையும் கவனித்திருந்தால் பிரசவ வேதனை எடுக்கும் முன்பே 'சிசேரியன்' அறுவை முறைமூலம் குழந்தையை உயிருடன் வெளிப்படுத்தித் தாயையும் சேயையும் காப்பாற்றி விடலாம்.

முதல் பிரசவம் சாதாரணமாக நடந்து அடுத்த பிரசவத்தின்பொழுது குழந்தை ஆசன உதய நிலையில் இருப்பின்,

பிரசவத்தை மருத்துவர் துணையுடன் நிகழ்த்திஞல் பிரசவம் சுகமாகவே முடியும்; தமது இடக்கையின் இரு விரல்களைப் பிரசவ வழியே நுழைத்துக் குழந்தையின் மோவாயைப் பற்றி வலக்கையால் குழந்தையின் கால்களைக் கெட்டியாகப் பிடித்து மேலுக்கு வளைத்து வெளியே இழுத்து எடுத்துவிடுவார் பிரசவ மருத்துவர்: சில சமயம் 'ஆயுதப் பிரசவம்'[74] நிகழ்த்த வேண்டியும் நேரிடலாம்;



படம்–36: கை உதயத்தைக் காட்டுதல்:

குழந்தை கருப்பையில் குறுக்காகப் படுத்துக்கொண்டிருந்தால் (படம்–36) முதலில் உதயமாகும் பாகம் குழந்தை உள்ளே படுத்திருக்கும் நிலையைப்பொறுத்து வலக்கையாகவோ இடக்கையாகவோ இருக்கும் இதை உடனே

74. ஆயுதப் பிரசவம்-Instrumental delivery

நிவர்த்தி செய்யாவிடில் தாய்க்கும் சேய்க்கும் மிகவும் அபாயத்தை விளைவிக்கும். உடனே மருத்துவரின் உதவியை நாடவேண்டும். தாமதம் செய்தால் மருத்துவர் வந்தும் பயனில்லாது போய்விடும் குறுக்காகப் படுத்துக்கொண்டிருக்கும் குழந்தையை வெளியேற்ற மிகவும் பலமாகச் சுருங்கி விரியும் கருப்பை நீண்ட நேரம் சென்றதும் மிகவும் சோர்ந்து உள்ளே கிழிந்து விடுகின்றது. கருப்பையின் தசை அறுந்துபோயின் கட்டுக்கடங்காத குருதியோட்டம் ஏற்பட்டுத் தாயும் சேயும் மரித்துவிடுவர். இவ்வகைப் பிரசவத்தை நிகழ்த்த இரு மருத்துவரின் துணைவேண்டும். ஒருவர் கருப்பிணிக்கு மயக்கம் கொடுப்பார்; மற்றொருவர் பிரசவத்தை நடத்துவார்.

கருப்பிணி நல்ல மயக்கத்தில் ஆழ்ந்து அவளிடம் உணர்வு மறைந்ததும் மருத்துவர் தமது வலக்கையைப் பிரசவ பாகத்தில் நுழைத்துக் குறுக்காகப்படுத்துக்கிடக்கும் குழந்தையை மெல்லத் திருப்பி ஒரு காலை முதலில் வெளிக்கொணர்வார். பிறகு இன்னொரு காலையும் வெளிக்கொணர்ந்து ஆசன உதயத்தில் நடத்துவதுபோல் கால்கள், ஆசனம், வயிறு, நெஞ்சு, கைகள், பிறகு தலை என்று குழந்தையின் பாகங்களை முறையே வெளிப்படுத்திப் பிரசவத்தை வெற்றியுடன் முடிப்பார்.

சிசேரியன் செக்ஷன்: இனி, மேலே குறிப்பிட்ட 'சிஸேரியன்' அறுவை முறை என்பது என்ன என்பதைச் சிறிது விளக்குவேன். வயிற்றின்வழியாகக் குழந்தையை எடுத்தலே 'சிசேரியன்' அறுவை முறை என்று வழங்கப் பெறுகின்றது. 'சிசேரியன் செக்ஷன்' என்று இந்த முறைக்குப் பெயர் ஏற்பட்டதற்குப் பலவிதமான கதைகள் வழங்குகின்றன. ஜூலியஸ் சீஸர்[17] என்பவர் தாயின் வயிற்றின் வழியே கிழித்தெடுக்கப்பெற்ற பிள்ளையென்றும், அதனால் தான் இம்முறைக்கு இப்பெயர் ஏற்பட்டது என்றும் ஒருகதை

17. ஜூலியஸ் சீஸர் - Julius Caesar

வழங்கி வருகின்றது. கி. மு. 715-இல் உரோமாபுரி நகரில் ஏற்படுத்தப்பட்ட சட்டத்தின்படி ஒரு பெண் தன் கருப்ப காலத்தின் இறுதிவாரங்களில் இறக்க நேரிடின் அக்குழந்தையை இம்முறைபடி பிரித்தெடுக்க வேண்டும். பிற்காலத்தில் உரோமானியச் சட்டங்கள் 'சீஸரின் சட்டங்கள்' என வழங்கின. இதிலிருந்து 'சீஸரின் செக்ஷன்' என்ற பெயர் தோன்றியிருக்க வேண்டும் என்பது மற்றொரு கதை உண்மையில் இந்தப் பெயர் எப்பொழுது யாரால் எதற்காகக் கொடுக்கப்பட்டது, இம்முறை முதன் முதலாக எப்பொழுது எந்த நாட்டில் யாரால் கையாளப்பட்டது என்ற விவரங்கள் இன்னும் தெளிவாக அறியக்கூடவில்லை.

பழங்காலத்தில் செய்யப்பெற்ற இந்தச்சிகிச்சைமுறையில் தாய்க்கும் சேய்க்கும் இறப்பு நிகழ்வதற்குப் பல காரணங்கள் இருந்தன. இன்று இம்முறை மிகவும் முன்னேறி நகர்ப்புற மருத்துவ நிலையங்களில் அன்றாட நிகழ்ச்சியாக வெற்றியுடன் மேற்கொள்ளப்பெற்று வருகின்றது. குழந்தை இடுப்பெலும்புக் கட்டின் வழியே வெளிவர முடியாது என்று மருத்துவர் தீர்மானித்தாலும், ஆசன உதயத்தில் குழந்தை பெரிதாக இருந்து இடுப்பெலும்பு குறுகலாக இருந்தாலும், முன்னடைப்பு நஞ்சு கருப்பையின் வாயை முழுவதும் மூடியிருந்தாலும் தாயையும் சேயையும் காப்பாற்றுவான் வேண்டி மருத்துவர்கள் 'சிஸேரியன் அறுவை' செய்கின்றனர். கருப்பிணிக்கு மயக்கம் கொடுத்த பின்பு மருத்துவர் கொப்பூழின்கீழ் வயிற்றின்மீது இடுப்பெலும்புக் கட்டின் முன்பாகம் வரை ஆறு அங்குலம் கிழித்து, கருப்பையையும் கைபுகும் அளவிற்குக் கிழித்து, பனிக் குடத்தை உடைத்து குழந்தையை எடுத்து விடுகின்றார். பிறகு முறைப்படித் தையல் போட்டுவிடுகின்றார். இதனை நடத்துவதற்கு மூன்று மருத்துவர்களின் துணைவேண்டும்; செய்து முடிப்பதற்கு நாற்பது நிமிடங்களுக்குமேல் ஆகும். இம்முறைப்படிப் பிரசவம் ஆன பெண் பதினைந்து நாட்கள் படுக்கையில் இருக்க வேண்டும். இன்று குறுகிய இடுப்பெலும்புக்

கட்டிஜீனயுடைய பெண்களை மூன்றுவது கருப்பத்திற்குப் பிறகு கருக்குழல்களைக் கட்டித் தைத்துச் செயற்கையாக மலடியாக்கி விடுகின்றனர்.

ஆயுதப் பிரசவம்: இனி, 'ஆயுதப் பிரசவம்'[76] என்பது என்ன என்று சிறிது விளக்குவேன். சிரமமான பிரசவத்தில் ஆயுதத்தைப் பயன்படுத்திப் பிரசவத்தை நடத்தும் முறையே ஆயுதப் பிரசவம் என்பது இம்முறையில் கையாளப்பெறும் ஆயுதத்திற்கு 'ஃபார்செப்ஸ்'[77] என்று பெயர். Forceps என்ற ஆங்கிலச்சொல் இலத்தீன் மொழியிலிருந்து வந்தது; இதற்கு இரண்டு நாக்குகள் என்பது பொருள். இந்தக் கருவி இரு பெரும் தேக்கரண்டிகள் கைப்பிடியால் இணைக்கப் பெற்றவை போன்று செய்யப் பெற்றுள்ளது. தற்காலத்தில் மருத்துவ நிலையங்களில் பயன் படும் கருவி குழந்தையின் தலை நன்கு பொருந்துமாறு உள் வளைவுள்ள இரண்டு தகட்டினுல் ஆனது. இவற்றுல் தாய்க் கும் சேய்க்கும் எந்தவித விபத்தும் நேரிடாது. பிரசவத்தின் முதல் நிலையில் இக்கருவியைப் பயன்படுத்த முடியாது. இரண்டாவது நிலையின்பொழுதுதான் இது கையாளப் பெறுகின்றது. குழந்தையின் தலை நன்முகக் கீழிறங்கி பனிக் குடம் உடைந்து கருப்பையின் வாய் முழுதும் விரிந்து தலை யோனிக்குழலில் இறங்கும்நிலையில் நல்ல வலி இல்லாத தனுல் குழந்தை பிறக்கத் தாமதம் ஏற்பட்டால் மருத்துவர் கள் இக் கருவியைப் பயன்படுத்துவர். கருப்பையின் வாய் நன்முக விரிந்துகொள்ளாவிடினும், பனிக்குடம் உடையா விடினும் இக் கருவியைப் பயன்படுத்த முடியாது.

மருத்துவசாலையில் இக்கருவி நடைமுறைக்கு வந்தது ஒரு கவர்ச்சியுடைய வரலாறு ஆகும். இதனைக் கண்டு பிடித்த பெருமை சேம்பர்லீன்[78] என்னும் குடும்பத்தைச் சாரும். கி. பி. 1569-ஆம் ஆண்டு வில்லியம் சேம்பர்லீன் என்பவர் சமயவெறிக் கிளர்ச்சியிலிருந்து தப்பித்துக்

76. ஆயுதப் பிரசவம்—Instrumental delivery.
77. ஃபார்செப்ஸ்—Forceps.
78. சேம்பர்லீன்—Chamberlens

கொண்டு ஃபிரான்ஸிலிருந்து இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தார். இவருடைய மக்கள் மூத்த பீட்டர். இளைய பீட்டர் என்ற இருவரும் நாவித மருத்துவர்களாக இருந்தனர். கி. பி. 1600-ஆம் யாண்டு இது கண்டறியப்பெற்றிருக்கவேண்டும் என்று ஊகிக்கப்பெறுகின்றது. கி.பி. 1600லிருந்து 1726 வரை சேம்பர்லீன்கள் இக்கருவியின் பயனை மறைவாகவே வைத்துக் கொண்டிருந்தனர். கி. பி. 670-ஆம் யாண்டு இந்தக் குடும்பத்தில் பிறந்த ஹூ என்பவர் கடன்தொல்லை காரணமாக ஹாலந்துசென்று அங்கு மறைந்துகொண்டார். அங்கிருந்த மருத்துவர் ஒருவருக்கு ஃபார்செப்ஸ் கருவியைப் பயன்படுத்தும் இரகசியத்தை விற்றுக் கொஞ்சம் பொருள் திரட்டிக்கொண்டு மீண்டும் இங்கிலாந்து வந்து சேர்ந்தார். அவர் முழு விவரத்தையும் கூறுது ஏமாற்றிவிட்டதாகச் சொல்லப்பெறுகின்றது. சேம்பர்லின் தலைமுறை மருத்துவர்கள் மறைத்து வைத்திருந்த இரகசியம் எப்படியோ மெதுவாக வெளிவந்து கி. பி 1726-ஆம் யாண்டு ஏப்பிரல் மாதம் முதல் முதலாக இங்கிலாந்தில் 'வில்லியம் கிப்போர்ட்' என்ற மருத்துவர் ஒருவர் இக்கருவியைக் கையாண்டு ஒரு சிரமப் பிரசவத்தை வெற்றியடைச் செய்தார். இவர் இந்தக் கருவியின் பெருமையை மருத்துவர்கள் அனைவருக்கும் வெளியிட்டார்; விளக்கியுரைத்தார். 1773-ஆம் யாண்டு எட்மண்ட் சாப்மேன் என்பார் இக்கருவியைப் பயன்படுத்தும் முறை, அதன் பயன்கள் முதலியவற்றைக் குறித்து ஓர் ஆராய்ச்சி நூலினை வெளியிட்டார். அதன் பிறகு இம்முறை உலகெங்கும் பரவியது. இன்று நாடோறும் ஆயிரக்கணக்கான தாய்மாரும் சேய்களும் இக் கருவியினால் இறப்பிலிருந்து காப்பாற்றப்பெறுகின்றனர்; பழங்காலத்தில் ஒரு பெண் கருவுயிர்க்குங்கால் இயல்பிகந்த ஒரு சிக்கல் ஏற்பட்டால் தாயும் சேயும் மரிப்பதைத் தவிர வேறு வழியே இல்லை. எண்ணற்ற பெண்கள் தொற்றுநோய்களாலும் கவனமற்ற சுகாதாரத்தாலும் மாய்ந்தனர். நவீன நாகரிகப் பெண்கள் பலருக்குச் சிரமப் பிரசவம் ஏற்படினும் பிரசவ மருத்துவத்தின் வியத்தகு வளர்ச்சியாலும் யுக்தி முறைகளா

லும் தாயும் சேயும் இறவாது காக்கப்பெறுகின்றனர். இன்று இவர்களின் இறப்பு விகிதமும் அதிகமாகக் குறைந்துள்ளது என்றே சொல்லவேண்டும்.

ஓய்வு: இனி, கருவுயிர்த்த பெண்ணின் ஓய்வைப்பற்றிச் சிறிது கூறுவேன். கருப்பம் ஒரு பெண்ணின் இனப்பெருக்க உறுப்புகளை மட்டிலுமேயன்றி அவளது முழு உடலையும் பாதிக்கின்றது. பிரசவவேதனை பிரசவ வழியிலுள்ள இழை யங்களையெல்லாம்மிகவும் பாதிக்கின்றது. கருப்பையின்வாய், யோனிக்குழல், யோனி ஆகியவை மிக அதிகமாக விரிந்து குழந்தையை வெளியேற்றுகின்றன. இம்மாற்றங்கள் யாவும் தற்காலிகமாக நடைபெறுபவையே. இவற்றின் சுருக்கமும் பழுது நீங்கலும் மிக விரைவாக நடைபெறுகின்றன. ஆறி லிருந்து எட்டு வாரங்களுக்குள் இவை தம் பழைய நிலைக்குத் திரும்பிவிடுகின்றன. சில சமயம் சிரமப் பிரசவங்களால் பிறப்பு வழியின் தசை உடனே சுருங்க முடியாதநிலை ஏற்பட் டால் அறுவைமுறை சிகிச்சை மேற்கொள்ளப்பெறுகின்றது.

பிரசவித்த பெண் உடனே எழுந்து உட்காருவது தவறு. சுமார் இரண்டு மணி நேரமாவது அவள் அசையாது ஒரேநிலை யில் படுத்திருக்கவேண்டும். பலவீனமான கருப்பை கவிழ்ந்து கொள்ளாதிருக்கவே படுத்திருப்பது அவசியமாகின்றது; முதுகு வலித்தால் ஒருவர் உதவியுடன் மறுபக்கம் திருப்பிப் படுத்துக்கொள்ளலாம். மலங் கழித்தல், சிறுநீர் கழித்தல் போன்றவற்றை ஒருவர் உதவியால் படுத்தபடியே செய்து முடித்துக்கொள்ளவேண்டும். பிரசவித்த மூன்றும் நாள் எனிமா கொடுத்துக் குடல் சுத்தமானபிறகு எழுந்து உட்கார லாம். நான்காவது, ஐந்தாவது நாட்கள் அறைக்குள்ளேயே எழுந்து நடமாடவேண்டும். இது கருப்பை வேகமாகச் சுருங்குவதற்குத் துணை செய்யும் என்று மருத்துவர்கள் கருது கின்றனர். பழங்காலத்துப் பெண்கள் பிரசவித்த சில மணி நேரந்திற்குள் தம் அலுவல்களில் இறங்கினர் என்று கருதி நவீன நாரியர் அம் முறையை மேற்கொண்டு பலவித சிக்கல்

களுக்கு இடம் கொடாதிருத்தல்வேண்டும். அவர்களின் உடல் நிலை வேறு; இவர்களின் உடல்நிலை வேறு.

**பால் சுரத்தல்:** கருவுயிர்த்த தாயின் கொங்கைகளில் எப்பொழுது பால் சுரக்கின்றது என்பதுபற்றிச் சிறிது கூறுவேன். கருப்பகாலத்தின் தொடக்கத்திலேயே கொங்கைகள் பருக்கின்றன; மூன்றுவது மாதத்திலேயே கொங்கைகளில் சற்று மஞ்சல் நிறமுள்ள "கொலஸ்ட்ரம"[79] எனப்படும் ஒரு மெல்லிய பாய்மம் சுரக்கின்றது. இது கருவுயிர்த்த மூன்றுவது அல்லது நான்காவது நாள்வரை நீடிக்கும். இப்பொழுது கொங்கைகள் திடீரென்று மீண்டும் பருத்து உறுதியடையும். இந்தப் பாய்மமும் தாய்ப்பாலாக மாறும். கொலஸ்ட்ரத்தைக்




படம்—37: கொங்கையின் ஒரு வெட்டுத் தோற்றத்தில் பால் சுரப்பிகளையும் அவற்றின் தூம்புகள் முலைக்கண்ணில் ஒருங்கு சேர்வதையும் காட்டுவது:

குழந்தை உட்கொண்டால் அது மலச்சிக்கலின்றி நன்ருக மலம் கழிக்கும். குழந்தை மார்புக் காம்புகளைச் சுவைத்தால் கருப்பை சட்டென்று சுருங்கும்.

அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சிகளினுல் அடித்தலைச் சுரப்பிகளிலும் சூற்பைகளிலும் சுரக்கும்

---

79. கொலஸ்ட்ரம்—Colostrum

ஹார்மோன்களால் பால் சுரத்தல் கட்டுப்படுத்தப்பெறுகின்றது என்று அறியப்பெற்றுள்ளது. நஞ்சுக்கொடி இந்த ஹார்மோன்களின் செல்வாக்கைக் குறைக்கின்றது; பிரசவத்திற்குப் பிறகு நஞ்சுக்கொடி வெளிப்பட்டதும் கொங்கைகள் பால் சுரக்கின்றன. பால் சுரப்பி படத்தில் (படம்-37) காட்டப்பெற்றுள்ளது. இதில் பதினைந்திலிருந்து இருபதுவரை மெல்லிய கால்வாய்கள் உள்ளன. இவை தோலின் அடியில் அமைந்து முலைக்காம்பில் ஒன்று சேர்கின்றன; இக் கால்வாய்களின் முடிவுகள் காம்பைச் சுற்றிலுமுள்ள வட்டமான கருநிறப் பகுதியில் உள்ளன; ஒரு பெண் பூப்பெய்தும் காலத்தில் தசை இழையங்கள் இந்தக் கால்வாய்களின் இடையே திரண்டு கொங்கைகள் அரைக் கோள வடிவில் எழும்பி உருண்டு திரள்கின்றன. ஆனால், இவை கருப்பக் காலத்தில்தான் முழு வளர்ச்சி எய்துகின்றன. இப்பொழுதுதான் பாலும் சுரக்கின்றது. இவ்விடத்தில் ஒன்று நினைவிலிருத்தப்பெறுதல் வேண்டும். கொங்கைகளின் பருமனுக்கேற்றவாறு பால் அதிகமாக இருக்கும் என்று கருதுதல் தவறு. மூன்று நிலைகள் படத்தில் காட்டப்பெற்றுள்ளன. முதல் நிலையில் பால் சுரப்பிகள் நன்னிலையில் உள்ளன. இரண்டாவது நிலையில் பால் சுரப்பிகளுக்கிடையே சற்று அதிகமாகக் கொழுப்பு திரண்டுள்ளது. மூன்றுவது நிலையில் ஏராளமான கொழுப்பு திரண்டு கொங்கைகளின் தோற்றம் பெரிதாக உள்ளது; அன்றியும், இதில் பால் சுரப்பிகளும் குறைவாகவே உள்ளன. இதில் குறைந்த அளவே பால் சுரக்கும். கருவுயிர்த்த பெண்ணிடம் சுமார் எட்டு அல்லது ஒன்பது மாதங்கள் பால் சுரக்கின்றது. புனிற்றிளங்குழவிக்குத் தாய்ப்பாலே சிறந்த உணவு என்று திட்டமாக முடிவு காணப்பெற்றுள்ளது. தாய்ப்பால் மட்டிலும் பருகும் குழவிகளிடையே குடல் தொந்தரவுகள் போன்றவை தோன்றுவதே இல்லை. இக் குழந்தைகள் உள்ளக்கிளர்ச்சிகளிலும் சமநிலை எய்தியுள்ளனர். எட்டு அல்லது ஒன்பது மாதங்கள்வரை குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்கலாம். அதற்குமேல் கொடுப்பது தாயின் உடல்நிலையைப் பாதிக்கும்.

மாதவிடாய்த் தோற்றம்: இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நீ அறிந்துகொள்ளவேண்டும் பிரசவித்த பின்பு மாதவிடாய் சில பெண்களிடம் விரைவாகவும் சிலரிடம் தாமதமாகவும் ஏற்படலாம். குழந்தைக்குப் பால் கொடுக்காது செயற்கை முறையில்வளர்த்தால் தாயினிடம்விரைவில் மாதவிடாய் தோன்றலாம். பிரசவம் ஆன இரண்டாவது மாதத்திலிருந்து பதினெட்டாவது மாதத்திற்குள் எப்பொழுது வேண்டுமாயினும் தாயிடம் மாதவிடாய் ஏற்படும்; அஃது அந்தக் குடும்பத்தின் உடல் தன்மையைப் பொறுத்தது. குழந்தை பிறந்து மூன்று மாதங்கள் ஆவதற்கு முன்பு இணைவிழைச்சு கூடாது. இதனால்தான் பிறந்தகத்திலிருந்து கருவுயிர்த்த பெண்ணைக் குழந்தையுடன் மூன்று அல்லது ஐந்து மாதங் கழித்துப் புக்ககத்திற்கு அனுப்பும் வழக்கம் நிலவுகின்றது போலும்!

அடுத்த கடிதத்தில் இனப்பெருக்கத்தில் வேறு சில செய்திகளைக் கூறுவேன்.

இங்ஙனம்,
திருவேங்கடத்தான்.

# 20

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்; நலன் ஆகுக.

என்னுடைய கடிதங்களை நன்கு படித்துச் செய்திகளைச் செவ்வனே உளங்கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்கின்றேன். ஒன்றுக்கு மேற்பட்ட குழவிகளின் பிறப்பைப்பற்றிச் சில வினாக்கள் விடுத்திருந்தாய்; அவற்றை இக் கடிதத்தில் விளக்குவேன்;

ஒன்றுக்கு மேற்பட்ட குழவிகள் : ஒரு பிரசவத்தின் பொழுது ஒன்றுக்கு மேற்பட்ட குழவிகள் வெளிப்படுவது அதிசயமான சம்பவம் அன்று. ஒரு சமயம் ஒருவருக்கு ஏழு குழந்தைகள் பிறந்ததாகச் செய்தி வெளிவந்துள்ளது. மருத்துவ வரலாற்றில் ஆறு குழவிகள் பிறந்ததாக அறுவர் வரலாறுகள் காணப்பெறுகின்றன. நாற்பத்தேழு பேருக்கு ஐந்து குழந்தைகள் பிறந்திருப்பதாக நம்பகமான தகவல்கள் கிடைத்துள்ளன. இவர்களுள் மூவருடைய குழவிகளே உயிரோடு வாழ்ந்தன. 1934–இல் கனடாவில் ஒருவருக்கு ஒரே சமயத்தில் பிறந்த மூன்று பெண் குழவிகளும், 1943–இல் தென் அமெரிக்காவைச் சார்ந்த பிரேஸில் நாட்டில் ஒரே சமயத்தில் தோன்றிய இரண்டு ஆண்களும் மூன்று பெண்களும், 1944–இல் துருக்கி நாட்டில் ஒருவருக்கு ஒரே சமயத்தில் பிறந்த ஐந்து ஆண்களும், உயிரோடிருப்பதாக அறிகின்றோம். நான்கு பிள்ளைகளும், மூன்று பிள்ளைகளும் அடிக்கடிப் பிறப்பதைக் காண்கிறோம். அடிக்கடித் தோன்றும் பல் பிறவிகளில் அபூர்வமான ஒரு கணிதத் தொடர்பும் இருப்பதாகத் தெரிகின்றது. 88 ஒற்றைப் பிறவிக்கு ஓர் இரட்டைப் பிறவி வீதமும், 88 × 88க்கு, அஃதாவது கிட்டத்தட்ட 7,744 ஒற்றைப் பிறவிக்கு ஒரு மூன்றுபிறவி வீதமும்

88×88×88க்கு, அஃதாவது கிட்டத் தட்ட 681,472 ஒற்றைப் பிறவிக்கு ஒரு நான்கு பிறவி வீதமும் இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கணக்கிட்டுள்ளனர். மிக அபூர்வமாக பல்லாயிரம் பிரசவங்களில் ஒருபிரசவத்தில் ஐந்து குழந்தைகள் பிறக்கின்றன.

இரட்டைக் குழவிகள்: சில இனங்களிலும் சில நாடுகளிலும் இரட்டைக் குழவிகள் அதிகமாகப் பிறக்கின்றன. பல்வேறு தட்பவெப்ப நாடுகளில் இவ்வகைப் பிறப்பின் விகிதம் வேறுபடுகின்றது என்றும் கவனித்துக் குறித்து வைத்துள்ளனர் ஆய்வாளர்கள்: எடுத்துக்காட்டாக, தென் ஐரோப்பியப் பகுதிகளிலிருப்பதைவிட ஸ்காண்டிநேவிய நாடுகளில் (வட ஐரோப்பியப் பகுதிகளில்) இந்த விகிதம் அதிகம் உள்ளது: அமெரிக்காவில் வெள்ளையர்களில் எண்பத்தெட்




படம்—38: ஒரே முட்டையில் இரட்டைக் குழவிகள் (ஒட்டுப்பிறவிகள்) தோன்றுவதை விளக்குதல்.

டுப் பிரசவங்களுக்கு ஒரு பிரசவத்தில் இரட்டையரும், நீக்ரோ இனத்தாரில் எழுபது பிரசவங்களுக்கு ஒரு பிரசவத்தில் இரட்டையரும் பிறப்பதாகக் கணக்கிட்டுக் கூறியுள்ளனர். எல்லா நாடுகளையும்விட இரஷ்யாவிலும் அயர்லாந்திலும் இரட்டைக் குழவிகள் பிறக்கும் எண்ணிக்கை மிகவும் அதிகம் உள்ளது என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.



படம்—39: ஒரு முட்டையில் உற்பத்தியான இரட்டைக் குழவிகள் கருப்பையில் இருக்கும் நிலையினைக் காட்டுதல்.

ஒன்றுக்கும் மேற்பட்டுப் பிறக்கும் குழவிகளில் ஆண் குழவிகளின் எண்ணிக்கையைவிடப் பெண் குழவிகளின் எண்ணிக்கையே அதிகம் இருப்பதாகவும் அவர்கள் கூறுகின்றனர்.

இரட்டைக் குழவிகள் பிறப்பது இரண்டு விதமாக நிகழலாம். ஒரு வகையில் ஒரு பெண்ணின் முட்டையணுவுடன்

ஒரு விந்தணு கலந்து ஏற்பட்ட முட்டை இரு பகுதியாகப் பிளந்துகொண்டு இரண்டு குழந்தைகளாக வளரலாம். இது படத்தில்(படம்–38)காட்டப்பெற்றுள்ளது. பெரும்பாலும் இரண்டு குழந்தைகள் தனித்தனியாகவே பிறக்கும்; சில சமயம் இரு குழவிகளும் அவர்களின்உடல்களில் யாதாவது ஒரு பகுதியில் (முதுகு, தொடை, மார்பு, புயம் முதலியவை)ஒட்டிக்கொண்டும் பிறப்பதுண்டு. தனித்தனியாகப் பிறப்பவைகள் சாதாரண இரட்டைகள்[80]என்றும்,ஒட்டிக்கொண்டு பிறப்பவைகள் சயாமிஸ்இரட்டைகள்[81] என்றும் வழங்கப்பெறுகின்றன. இவ்வாறு பிறக்கும் இரட்டைகள் ஒரே பாலினத்தைச் சேர்ந்தவைகளாகவே இருக்கும். இவை இரண்டிற்கும் கொப்பூழ்க்கொடி இரண்டாக இருப்பினும் ஒரே நஞ்சுக் கொடியிலிருந்துதான் குருதி பாய்ந்து கொண்டிருக்கும். இக்குழந்தைகள் கருவில் வளர்வதைப் படத்தில் (படம்–39) காண்க. இக் குழந்தைகள் பார்வைக்கும் ஒரே அச்சில் வார்க்கப்பெற்றவைபோன்று சாயலில் வேற்றுமையின்றிக் காணப்பெறும். இவைகளின் உடற்கூறுகளும் உளப் பண்புகளும் கூட ஒரேவிதமாகவே இருக்கும். இவை ஒரு கரு இரட்டையர்[82] என வழங்கப் பெறும்.

இன்னொருவகைஇரட்டைப் பிறவியில்இரண்டுமுட்டையணுக்கள் இரண்டுவிந்தணுக்களுடன் கலந்து இரண்டுகருவணுக்களாக உருப்பெற்று வளர்ந்து இரண்டு குழந்தைகளாக பிறக்கின்றன. இந்த இரண்டு முட்டைகளும் ஒரே சூற்பையினின்றும் வளரலாம்; அல்லது சூற்பைக்கு ஒன்றாக இரண்டு சூற்பைகளினிறும் வரலாம். இந்த இரண்டு முறையிலும் கரு உருவாவதைப்படம்(படம்–40)விளக்குகின்றது. உற்றுநோக்கித் தெளிவு பெறுக. இவ்வாறு உருவாகும் குழவிகள் ஒரே கருப்பையில் தங்கினாலும் இவைகளுக்கு இரண்டு தனி நஞ்சுகள் காணப்பெறும். இவை தனித் தனியான கருவிலிருந்து உற்பத்தியானதால் சாயலில் ஒன்றைப்போல் ஒன்று இருப்ப

---

80. சாதராண இரட்டைகள்—Normal twins.
81. சயாமிஸ் இரட்டைகள்—Siamese twins.
82. ஒரு கரு இரட்டையர்—Identical twins.




**படம்—40:** இரண்டு முறைகளில் இரண்டு முட்டைகளில் இரட்டைக் குழவிகள் உற்பத்தியாவதைக் காட்டுதல்.

படத்தின் மேற்பகுதி ஒரே சூற்பையினின்றும் இரண்டு முட்டைகள் தோன்றிக் கருவுறுவதையும், கீழ்ப்பகுதி இரண்டு சூற்பைகளின்றும் ஒவ்வொரு முட்டையாக இரண்டு முட்டைகள் தோன்றிக் கருவுறுவதையும் விளக்குவதை அறிந்து தெளிக.

தில்லை. வெவ்வேறு முட்டைகளிலிருந்து தோன்றுவதால் இவற்றுள் ஒன்று ஆணாகவும் ஒன்று பெண்ணாகவும் இருக்கலாம். இவற்றின் உடற்கூறுகளும், உளக்கூறுகளும், மீப்பண்புகளும் வேறுபட்டிருக்கும். இவைகளை இருகரு இரட்டையர்[83] என்று வழங்குவர். இரண்டு தனி முட்டைகளில் தோன்றி இரட்டைகள் கருப்பையில் இருக்கும் நிலையைப் படத்தில் (படம்—41) கண்டு தெளிக.



படம்—41: இரண்டு தனி முட்டைகளில் தோன்றி இரட்டைக் குழவிகள் கருப்பையில் இருக்கும் நிலையினை விளக்குவது.

சில சமயம் இரண்டுக்கு மேற்பட்ட முட்டையணுக்கள் ஒரே மாதத்தில் முதிர்ச்சியடைந்து ஒரே சமயத்தில் கருவுறலாம். இவ்வாறு முதிர்ச்சியடையும் முட்டையணுக்களும் ஒரு சூற்பையிலிருந்தோ இருசூற்பைகளிலுமிருந்தோ

83. இரு கரு இரட்டையர்— Fraternal twins

வெளி வரலாம்; இவை மூன்று குழவிகள், நான்கு குழவிகள், ஐந்து குழவிகள் என உருவாகித் தாய்பிரசவிக்கலாம். ஐந்து குழவிகள் ஒரு தாயின் உடலில் எவ்வாறுபொருந்தியிருக்கும் என்பதைப் படத்தில் (படம்-42) விளக்கியுள்ளேன். உற்றுநோக்கி அறிக.

**கருப்பையில் இரட்டைக் குழவிகளின் நிலைகள்:** இரட்டைக் குழவிகள் கருப்பையில் பலவிதமாக இருக்கும் நிலைகளைப் (படம்-43) விளக்குகின்றது; நூறு பிரசவங்களில் முப்பத்தெட்டு பிரசவங்களின் இரட்டைகள் இரண்டும்



**படம்—42:** ஐந்து குழவிகள் ஒரே நஞ்சுக்கொடியில் ஐந்து தனித்தனி கொப்பூழ்க் கொடிகளின் மூலம் இணைந்திருப்பதைக் காட்டுதல்.

தலையைக் கீழ் வைத்துக்கொண்ட நிலையில் இருக்கலாம் என்றும், நூற்றுக்கு நாற்பதுபிரசவங்களில் இரட்டைகளில் ஒன்று தலை கீழாகவும் மற்றொன்று தலை மேலாகவும் உள்ள நிலையில் இருக்கலாம் என்றும், நூற்றுக்கு ஒன்பது பிரசவங்களில் இரண்டும் தலையை மேலாகவும் ஆசனத்தைக் கீழாகவும் வைத்துக்கொண்ட நிலையில் இருக்கலாம் என்றும், நூற்

றுக்கு ஆறு பிரசவங்களில் ஒன்று கருப்பையில் குறுக்காக வும் மற்றென்று அதன் கழுத்தைத் தழுவியபடி தலையைக் கீழாகவும் ஆசனத்தை மேலாகவும் வைத்துக்கொண்ட நிலையில் இருக்கலாம் என்றும், நூற்றுக்கு ஐந்து பிரசவங்




படம்—43: இரட்டைக் குழவிகள் கருப்பையில் இருக்கும் பலவித நிலைகளை விளக்குதல்.

கள் ஒரு குழந்தை குறுக்காகவும் மற்றென்று ஆசன உதய நிலையிலும் அமைந்திருக்கலாம் என்றும், நூற்றுக்கு ஒரு

பிரசவசத்தில் இரண்டும் குறுக்காகக் கருப்பையில் படுத்துக் கிடக்கலாம் என்றும் மருத்துவ ஆய்வாளர்கள் கண்டுள் ளனர்.

மேற்கூறிய ஆறு நிலைகளிலும் முதல் மூன்று நிலைகளிலு முள்ள பிரசவம் எளிதாக அமைந்துவிடும்: அடுத்து மூன்று நிலைகளிலுமுள்ள பிரசவத்தின்பொழுதுபிரசவம் சிரமமாகி விடக் கூடும்; பொதுவாக இரட்டைக் குழந்தைகள் என்று தெரிந்ததும் மருத்துவர் உதவியுடன் பிரசவத்தை நடத்து வது நலம்: பிரசவம் தாமதப்பட்டால் அவர் சந்தர்ப்பத் திற்கேற்படி குழந்தையைத் திருப்பி எடுத்தோ ஆயுதத்தைக் கையாண்டோ பிரசவத்தைத் துரிதமாக நடத்தி விடுவார்.

சாதாரணமாகத் தனியாகப் பிறக்கும் குழந்தைகளை விட இரட்டைக் குழவிகள் சிறியனவாக இருப்பதனால் பிரச வம் எளிதாக நடைபெற்று விடுகின்றது எடையிலும் இரு குழவிகள் வேறுபடுகின்றன. ஒன்று மிகவும் சிறியதாகவும் மற்றொன்று எடையில் அதிகமாகவும் இருக்கலாம். ஆனால், இரு குழவிகளின் மொத்த எடை சாதாரணமாக ஒற்றை யாகப் பிறக்கும் ஒரு குழந்தையின் எடையைவிட அதிக மாகவே உள்ளது.

சில குடும்பங்களில் பலருக்கு இரட்டைக் குழவிகள் பிறக்கின்றன. இது மரபு வழியாக இறங்கும் தன்மை என்ப தற்கு அதிகச் சான்றுகள் உள்ளன. மேலும் சில பெண் களிடம் ஒவ்வொரு கருப்பதிலும் பல குழந்தைகள் பிறக் கின்றன. எடுத்துக்காட்டாக, ஒரு பெண் உறவு முறையி லில்லாத மூன்று ஆடவர்களை ஒருவர் பின் ஒருவராக மணந்தாள். ஒருவரிடம் இரட்டைப் பிள்ளைகளும், மற் றொருவரிடம் மூன்றுபிள்ளைகளும், இன்னொருவரிடம் நான்கு பிள்ளைகளும் பிறந்தன; பதினைந்து கருப்பங்களில் அவள் நாற்பத்திரண்டு பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள். இந்தப் பெண்ணிடம் அமைந்த குழந்தைப் பேற்றின் வளம் அவளு டைய கணவன்மாரைப் பொறுத்தது என்பது வெளிப் படை. மற்றும் ஓர் எடுத்துக்காட்டு; ஓர் இரஷ்ய உழவன்

ஒருவர் பின் ஒருவராக இரண்டு பெண்ணை மணந்தான். ஒருத்திக்கு இரட்டைக் குழவிகளும், மற்றொருத்திக்கு மூன்று பிள்ளைகளுமாகப் பிறந்தனர்; மொத்தத்தில் அவன் எண்பத்தேழு குழவிகட்குத் தந்தையாக இருந்தான். இவன் பிள்ளைப்பேற்றில் நம் நாட்டுப் புராணக் குசேலரையும் தோற்கடித்துவிட்டான்! இதனால் ஆண்களிடம் பல்பிறவியையுண்டாக்கும் பண்பு உள்ளது என்பது தெளிவாகின்றது. மரபு வழிக் கூறினைத் தவிர, முப்பத்தைந்து வயதிலிருந்து நாற்பது வயதுவரை உள்ள பெண்களிடமே பெரும்பாலும் இரட்டைக் குழவிகள் அதிகமாகப் பிறக்கின்றன என்றும், அதுவும் தென்புல நாடுகளைவிட வடபுல நாடுகளில்தாம் இப்பிறவிகள் அதிகம் தோன்றுகின்றன என்றும் அறிகின்றோம்.

**இரட்டைக் குழவிகளின் இருப்பை அறிதல்:** இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும் கருப்ப காலத் தொடக்கத்தில் இரட்டைக் குழவிகளின் இருப்பை அறுதியிடுதல் முடியாது: கருப்பகாலத்தின் பின் மாதங்களில், வயிறு அதிகமாகப் பருத்திருக்கும்பொழுது, இரண்டு உடல்களின் சாயல்கள் வயிற்றின்மீது தென்படலாம்; இதனால் ஒன்றுக்கு மேற்பட்ட இளஞ்சூல்கள் வயிற்றிலிருக்க வேண்டும் என்பதை அறுதியிட முடிகின்றது: சோதனையின் மூலம் இரண்டு இதயங்களின் துடிப்பையும் அறியலாம்: ஓரிடத்தில் நிமிடத்திற்கு 120 தடவைகள் வீதமும், பிறிதோரிடத்தில் நிமிடத்திற்கு 140 தடவைகள் வீதமும் மருத்துவர் கேட்பதிலிருந்து இரண்டு இளஞ்சூல்கள் இருப்பது உறுதியாகின்றது. புதிர்க்கதிர்களின் மூலமாகவும் இதனை அறுதியிடலாம்.

**குழந்தையின் பாலை அறுதியிடல்:** பிறக்கும் முன்பு ஒரு குழந்தையின் பாலை அறுதியிட முடியுமா என்று வினவியிருந்தாய்; சாதாரண மக்கள் பலவிதமாகக் கூறினாலும் மருத்துவமுறைப்படி இதுகாறும் யாதொரு முறையும் கண்டறியப் பெற்றதாகத் தெரியவில்லை. பெண்ணிடமுள்ள இளஞ்

சூலின் துடிப்பு நிமிடத்திற்கு 125க்குக் கீழ் இருந்தால் ஆண் என்றும், அது 145க்கு மேலிருந்தால் அது பெண் என்றும் ஒரு விதமாகக் கூறுகின்றனர். இளஞ்சூலின் துடிப்புகளே பல்வேறு நிலைகளில் இருப்பதால், இந்த முறை நம்பத்தக்க தாக இல்லை. இக்காலத்தில் இத்துறையில் பல ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. கருப்பகாலத்தின் முதல் மூன்று மாதங்களில் கருச்சிதைவு ஏற்பட்டால், சிதைவடைந்த கருவினை மேம்போக்காகப் பார்த்து அஃது ஆணு அல்லது பெண்ணு என்று சொல்ல முடிவதில்லை; மூன்றுவது மாதத் திற்குப் பின்னர்தான் புறப்பிறப்புறுப்புகள் தெளிவாக அமைகின்றன; இப்பொழுதுதான் அக்குழந்தையின் பாலினை அறுதியிட முடிகின்றது.

முன்னொரு கடிதத்தில் பிறக்கப்போகும் குழந்தை ஆணு அல்லது பெண்ணு என்று அறுதியிடும் ஆற்றல் தந்தை யிடமே அமைந்துள்ளது என்று கூறினேன் அல்லவா? அதை ஈண்டு நினைவு கூர்க. ஓர் ஆணிடம் உள்ள விந்தணுக் களில் ஆணை உண்டாக்கும் விந்தணுக்களும் பெண்ணை உண்டாக்கும் விந்தணுக்களும் சம எண்ணிக்கையில் உற் பத்தியாகின்றன. பெண்ணிடம் உண்டாகும் முட்டை யணுக்கள் யாவும் ஒரே தன்மையுடையவை. அம் முட்டை ஆணினை உண்டாக்கும் விந்தணுவுடன் சேர நேர்ந்தால் ஆண் குழவியும் பெண்ணினை உண்டாக்கும் விந்தணுவுடன் சேர்ந்தால் பெண் குழவியும் பிறக்கின்றன. ஒரு காலத்தில் குழந்தை ஆணு அல்லது பெண்ணு என்பதை அறுதியிடும் தன்மை முட்டையினிடமே அமைந்து கிடந்தது என்று நம்பி வந்தனர். வலப்பக்கமுள்ள சூற்பையின் முட்டை யணுக்கள் ஆண் குழவிகளை உண்டாக்கும் என்றும், இடப் பக்கமுள்ள சூற்பையின் முட்டையணுக்கள் பெண் குழவி களைப் பிறப்பிக்கும் என்றும் கருதினர். இந்தக் கொள்கை தவறு என்பது மெய்ப்பிக்கப் பெற்றுவிட்டது. ஒருபக்க சூற்பையை அகற்றப்பெற்ற பெண்களிடம் ஆண் குழவி களும் பெண் குழவிகளும் பிறந்துள்ளன; *ஃபிட்ரிட்ஜ் வில்லி

யம்ஸ்[84] என்ற பிரசவ மருத்துவர் சிஸேரியன் அறுவை சிகிச்சைகளை நடத்தியபொழுதெல்லாம் சூற்பைகளை நன்கு உற்று நோக்கி முட்டை வரும் சூற்பையின் பக்கத்திற்கும் குழந்தையின் பாலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்று முடிவு கூறியுள்ளார். கருப்பகாலத்திலும் குழந்தையின்பாலினை அறுதியிடக் கூடிய யாதொரு கூறும் இல்லை என்பதையும் நீ அறிதல் வேண்டும். முட்டையும் விந்தணுவும் சேரும் பொழுதே இஃது அறுதியிடப்பெற்று விடுகின்றது.

பிறக்கும் குழவிகளின் பாலினைக் கட்டுப்படுத்தக்கூடிய முறைகளைப் பன்னெடுங் காலமாக ஆராய்ந்து வருகின்றனர். சுமார் 150 யாண்டுகட்கு முன்னர் ட்ரெலின்கோர்ட்[85] என்ற அறிவியலறிஞர் குழந்தையின் பாலினை அறுதியிடும் காரணங்களையும் அவற்றினைக் கட்டுப்படுத்தும் முறைகளையும் பற்றிய 262 கருதுகோள்களை[86] ஒன்று திரட்டி ஒவ்வொன்றாக அவை தவறு என்பதை மெய்பித்துத் தானே ஒரு கொள்கையை நிறுவினர். நாளடைவில் அதுவும் தவறு என்று மெய்ப்பிக்கப் பெற்றுவிட்டது. சுமார் இருபது யாண்டுகட்கு முன்னர் கார நிலையிலுள்ள ஊடுபொருள்[87] ஆண் உற்பத்திக்குத் துணை செய்கின்றதாகவும், அமில நிலையிலுள்ள ஊடு பொருள் பெண் உற்பத்திக்குத் துணை செய்கின்றதாகவும் கருதினர். ஆகவே, அவர் ஆண் குழந்தை வேண்டுவோருக்கு இணைவிழைச்சுக்குச் சற்று முன்னதாக சோடியம் பைகார்பனேட்டுக் கரைசலை யோனிக் குழலில் பயன்படுத்த வேண்டும் என்றும், பெண் குழவியை நாடுவோர் லாக்டிக அமிலக் கரைசலைப் பயன்படுத்த வேண்டும் என்றும் சிபாரிசு செய்தார். இது வரையிலும் அக்கொள்கையில் உண்மையிருப்பதாக உறுதி செய்யப்பெறவில்லை.

---

84. விட்ரிட்ஜ் வில்லியம்ஸ்–Whitridge Wllliams.
85. ட்ரெலின் கோர்ட்–Drelincourt.
86. கருதுகோள்–Hypothesis.
87. ஊடு பொருள்-Medium.

அண்மைக்காலத்தில் இத்துறையில் பல 'ஆய்வாளர்கள் உழைக்கின்றனர்; அவர்கள் பிராணிகளிடம் இத்துறையில் வெற்றி கண்டு விட்டதாகக் கூறுகின்றனர். அவர்கள் வித்துப் பாய்மத்திலுள்ள ஆணினை உண்டாக்கும் அணுக்களையும் பெண்ணினை உண்டாக்கும் அணுக்களையும் தனித்தனியாகப் பிரித்துத் தமக்கு வேண்டிய பாலுக்கு ஏற்ப அவ்வணுக்களைச் செயற்கை முறையில் பெண்ணிடம் பாய்ச்சுகின்றனர்; இம் முறை சாத்தியப்படக் கூடியதாக இருந்தாலும், அது மானிட இனத்திற்கு நடைமுறைக் கொவ்வாதது; மானிட இனத்திற்குப் பொருந்தக்கூடிய ஒரு முறை இன்னும் எதிர்காலத்தின் தொட்டிலில்தான் உள்ளது. இவ்வாறு இனப்பெருக்கத்தைப்பற்றிய பல பிரச்சினைகள் உள்ளன. அவை யாவற்றையும் உன்னோடு ஆராய வேண்டும்; அடுத்து வரும் கடிதங்களில் அவற்றைத் தெரிவிப்பேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

காதலுக்கு வழிவைத்துக் கருப்பாதை சாத்த
கதவொன்று கண்டறிவோம் இதிலென்ன குற்றம்
சாதலுக்கோ பிள்ளை தவிப்பதற்கோ பிள்ளை
சந்தான முறைநன்று தவிர்க்குமுறை தீதோ

—பாரதிதாசன்

நாம் கருத்தடைக்கு ஆதரவு தருவது அதனால் ஏற்படும் பயனை உத்தேசித்து மட்டுமல்ல; நாம் விலங்குகளல்ல, மனிதர்கள் என்பதைக் கருதியே.

—ஜார்ஜ் பெர்னாட்ஷா

இயல்—4

# குடும்பக் கட்டுப்பாடு

'குடும்பக் கட்டுப்பாடு' என்பது மணமக்கள் குழந்தைகளி தமக்கு வேண்டாம் என்று கருதுங்கால் எச்சரிக்கையான முறைகளைக் கையாண்டு கலவி புரிவதும், குழந்தைப்பேறு வேண்டும் என்று கருதுங்கால் அம்முறைகளைக் கைவிடுவது மான ஒரு திட்டம் ஆகும். ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் கருத்தரியாப் பருவமும் கருத்தரிக்கும் பருவமும் உள்ளன. இவை உடலியல் அமைப்பில் அமைந்துள்ளன; குழந்தைப்பேற்றினை விரும்பாதவர்களுக்குக் கருத்தரியாப் பருவமே 'கூடு பருவம்' ஆகும். இப்பருவத்தை உறுதிப் படுத்தி அக்காலத்தில் மட்டிலும் கூடுவது இயற்கைக் கருத் தடை முறையாகும். இன்று பல செயற்கைக் கருத்தடை முறைகள் மேற்கொள்ளப்பெறுகின்றன. அவை 'ஆண் முறைகள்' எனவும், 'பெண் முறைகள்' எனவும் பிரித்துப் பேசப்பெறுகின்றன. ஒவ்வொரு பிரிவிலும் 'பொறிநுட்பக் கருத்தடை முறைகள்', 'வேதியியல் கருத்தடை முறைகள்' என்ற இருவகை முறைகள் உள்ளன. இன்று அறுவை முறை மூலமும் கருத்தடை செய்யப்பெறுகின்றது. செயற்கை முறைகளைவிட உயிரியல் முறைகளில்தான் நன்மையுண்டு. எதிர்காலத்தில் ஆய்வு நிலையிலுள்ள இந்த உயிரியல் முறை கள்தாம் பெருஞ் செல்வாக்குப் பெறுதல் கூடும். இவை பற்றிய செய்திகளும் இவற்றுடன் தொடர்புள்ள செய்தி களும் இப்பகுதியிலுள்ள ஐந்து கடிதங்களில் (21—25) விளக் கம் பெறுகின்றன.

# 21

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

குடும்பக் கட்டுப்பாடு—விளக்கம்: இனப்பெருக்கத்தின் ஒருமுக்கியகூறு 'குடும்பக்கட்டுப்பாடு' என்பது. அஃதாவது, தம்பதிகள் குழந்தைகள் வேண்டாம் என்று கருதுங்கால் எச்சரிக்கையான முறைகளைக் கையாண்டு கலவி புரிவதும், குழந்தைகள் வேண்டும் என்று கருதுங்கால் இம் முறைகளைக் கைவிடுவதுமான முறையே குடும்பக் கட்டுப்பாடு[1] ஆகும். ஒரு வகையில் குடும்பக் கட்டுப்பாடு என்பது கருத்தடையாகும். ஆனால், அது முற்றிலும் கருத்தடையாகாது; அது தாம்பத்திய உறவினை அறவே புறக்கணிக்கும் திட்டமுமன்று. இத்தகைய ஒரு திட்டத்தை நம்முடைய அரசினர் மேற்கொண்டுள்ளனர்; மக்களிடையே அது பரவுவதற்குப் பிரசாரமும் செய்து வருகின்றனர். இத்தகைய திட்டத்தை ஒவ்வொரு மணமக்களும் அறிந்துகொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது. இதுபற்றிய சில கருத்துகளை இக் கடிதத்திலும் இதனை அடுத்து எழுதும் சில கடிதங்களிலும் தெரிவிக்க விரும்புகின்றேன்.

குடும்பக் கட்டுப்பாட்டின் இன்றியமையாமை: ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும் பெற்றோர் முக்கியமான ஒரு பெரிய பொறுப்பினை வகிக்கின்றனர் என்பதை நீ உணர வேண்டும். அந்தக் குழந்தை அகால மரணமடையாமல் அதற்குத் தக்க உண்டியும் பிறவும் அளித்து அதன் உடல் நலத்தைப் பாதுகாகக்கவும் அதற்கு வாழ்க்கையில் நல்ல

1. குடும்பக் கட்டுப்பாடு—Family planning

ஒரு தொடக்கத்தைக் கொடுக்கவும் ஒவ்வொரு பெற்றோரும் கடமைப்பட்டுள்ளனர்: தன் மனைவியின் உடல் நிலையையும், வலிவையும் பாதுகாக்கும் பொறுப்பும் ஒவ்வொரு கணவனுக்கும் உண்டு: ஒரு பெண் இதயநோய், சிறுநீரக நோய், இருமல் நோய், நீரிழிவு நோய் ஆகிய நோய்களால் பாதிக்கப்பெற்றிருந்தாலும், சிஸேரியன் அறுவை சிகிச்சை முறையை இரண்டு தடவை பெற்றிருந்தாலும் மருத்துவ காரணமாகக் கருத்தடை மிகவும் இன்றியமையாதது. அவள் நல்ல உடல் நிலையுடனிருந்தாலும் தன்னுடைய எதிர்கால உடல் நலத்தைப் பாதுகாப்பதற்காக இரண்டு குழந்தைப்பேற்றிற்கு இடையிலுள்ள கால அளவினை எங்ஙனம் ஏற்ற அளவு அதிகப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதை அறிதல் வேண்டும்; இன்றைய வாழ்க்கை முறையில் ஒரு பெண் தன் இனப்பெருக்கத் திறன் இருக்கும் அளவுக்குக் குழந்தைகளைப் பெற்ற வண்ணமிருந்து தன்னுடைய உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்வதென்பது இயலாததொன்று இந்நிலை தாயின் உடல் நலத்தையும் சேய்களின் உடல் நலத்தையும் பெரிதும் பாதிக்கின்றது. ஒரு குழந்தை பிறந்த பின்னர் குறைந்த அளவு மூன்று யாண்டுகட்குப் பின்னரே கருத்தரித்தல் நன்று. நோய்வாய்ப்பெற்ற பெண்களுக்கு இந்த இடைவெளி இன்னும் அதிகமாக இருத்தல் வேண்டும்: மேலும் பெற்றோர்களில் யாரேனும் ஒருவரிடம் உடல் கோளாறோ, உளக்கோளாறோ இருக்கும்பொழுது கருத்தடை செய்துகொள்வது நன்று. எனவே, ஒவ்வொரு மணமக்களும் தம்முடைய நலனுக்காகவும் தம்முடைய வழிவழி வருவோரின் நலனுக்காகவும் அறிவியலடிப்படையிலமைந்த கருத்தடை முறைகளை நன்கு தெரிந்திருத்தல் இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது.

நாகரிகத்தின் அருஞ் செயல்: இயற்கை விசைகளைக் கட்டுப்படுத்தித் தக்க முறையில் கையாளுவதனாலேயே நாகரிகத்தின் அருஞ்செயல்கள் அனைத்தும் அமைந்துள்ளன. நீராவியின் விசையைக் கட்டுப்படுத்தி மனிதன் பெரிய பொறிகளை இயக்குகின்றான்; புகைவண்டி, கப்பல் பயணங்

கள் இதனால்தான் நடைபெற்று வருகின்றன. மின்னணுக் களைக் கட்டுப்படுத்தி வானொலி, தொலைபேசி, தொலைக் காட்சி முதலிய அற்புத அமைப்புகளை அவன் கண்டறிந் தான். உணர்ச்சிநீக்க முறைகளைக்[2] கையாண்டு பல வியத் தகு அறுவை சிகிச்சைகளையும், சிக்கலான பிரசவத்தையும் எளிதாக்கும் முறைகளையும் கண்டான். அங்ஙனமே, கருத் தடை முறையும் மானிட நலத்தின் பொருட்டு மனிதன் மேற்கொள்ளும் செயல்களுள் ஒன்று என்பதை அறிவாயாக. புறநானூறு போன்ற பண்டைய நூல்களிலும், பிற்காலத்தி லெழுந்த நீதி நூல்களிலும் கருச்சிதைவு செய்தல் பாவம் என்று கூறப்பெற்றிருக்கின்றதேயன்றி கருத்தடையைப் பற்றி யாதும் குறிப்பிடவில்லை. கத்தோலிக்கக் கிறித்தவ மாதாக் கோவிலும் இன்று கருத்தடையால் தவறு இல்லை என்று ஒப்புக்கொண்டுள்ளது.

பண்டிருந்தே வந்த முறை: தவிர குடும்பத்தின் அள வினைக் கட்டுப்படுத்துவது இன்று ஏற்பட்ட புதிய முறை என்று சொல்லுவதற்கில்லை. நினைப்பிற்கெட்டாத நெடுங் காலத்திலிருந்தே மனிதன் தனக்குப் பிறக்கும் குழந்தை களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தியே வந்துள்ளான்; குடும்பத்தின் அளவினைக் கட்டுப்படுத்தாவிடில் அது மன் னிக்க முடியாத குற்றமாகவும் சில பழங்காலச் சமுகத்தினர் கருதி வந்ததாகவும் தெரிகின்றது; குழந்தைகளின் எண் ணிக்கையைக் குறைத்தற்பொருட்டு இவர்கள் மேற் கொண்ட முறைகள் மிகவும் கொடுமையானவை; அபாயகர மானவை. தேவையற்ற குழவிகளைக் கொன்றனர். அதன் பின்னர்க் கருச்சிதைவு செய்யும் முறைகளை மேற்கொண்ட னர். இன்றும் சிற்றூர்களில்கூட சில பெண்கள் அநாகரிக முறையால் இதனை மேற்கொண்டு உயிரிழக்கின்றனர். இம் முறையை மேற்கொண்டு பல குழவிகளைப் பரிதவிக்க விட் டுப்போன தாய்மார்களின் சோகக்கதைகள் எண்ணற்றவை. மனிதனுடைய அறிவு வளரவளர இனப்பெருக்கச் செயல்

2. உணர்ச்சி நீக்க முறை—Anesthesia

களை அவன் நன்கு புரிந்துகொண்டபிறகு. அவன் சிசுக்கொலை செய்ய வேண்டியதில்லை; கருச்சிதைவு செய்து பெண்ணின் உடல் நலத்தையும் குலைக்க வேண்டியதில்லை; அறிவியலடிப்படையில் அமைந்த கருத்தடைமுறைகளைக் கையாண்டு குடும்பத்தின் அளவினைக் கட்டுப்படுத்திக் கொள்ளலாம்.

எண்ணிக்கைக் குறைப்பு: கருத்தடை முறைகளைப்பற்றிய கருத்துகள் மக்களிடையே நன்கு பரவி வேரூன்றி விட்டால் சிலர் தாய் தந்தையராகு பொறுப்பினையேம் தட்டிக் கழித்துவிடுவர் என்று சிலர் கருதுகின்றனர்: சாதாரணமாக மணம் புரிந்துகொண்ட அனைவருமே குழந்தைப் பேற்றை விரும்புவர்.

> மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
> நன்கலம நன்மக்கட் பேறு.[3]

என்ற பொய்யாமொழியின் உண்மையினை எண்ணி ஆராய்க. மேலும். குழந்தைச் செல்வத்தின் சிறப்பைக் கவிஞர்கள் பல படக் கூறியிருத்தலைக் கற்றோர் அனைவருமே நன்கு அறிவர்: கருத்தடை முறைகளால் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைப்பரேயன்றிக் குழந்தைகளே இல்லாது செய்ய எவரும் ஒருப்படார். நம்முடைய தேர்ந்தெடுத்த திட்டத்தால் குழந்தைகள் பிறக்கவேண்டும்; குழந்தைகளைத்தற் செயலாகப் பிறக்க விடுதல் கூடாது. திட்டமிட்டுப் பிறக்கும் குழவிகளை 'அறிவறிந்த நன்மக்களாகச்' செய்யவேண்டும்; அவர்களே பாதுகாப்புடனுள்ள குழவிகள். அவர்களே உடல், உள்ள, மீப்பண்பு வளர்ச்சியினைத் தக்க முறையில் பெறுவர். மனிதனிடம் கலவி புரியும் செயல் இனப்பெருக்கத்திற்கென்று மட்டிலும் அமைவதில்லை. விலங்கு வாழ்க்கையில் அது கருவுறுதலுக்கு முற்செயலாக அமைகின்றது ஆனால், மானிட வாழ்க்கையில் அஃது இருவரும்—கணவனும் மனைவியும்—உடல் உள்ள உறவு கொள்வதற்கும் அடிப்படையாக உதவுகின்றது. இத்தகைய உறவிற்கு அடிக்கடி மனைவி கருப்பம்

3 குறள்—60

உறுதல் தடையாகின்றது. கருத்தடை முறை அதனைத் தடுத்து இவ்வுறவு வளர்வதற்குத் துணை செய்கின்றது:

இயற்கைக் கட்டுப்பாடு: சிலர் குழந்தை பால் குடித்துக் கொண்டிருந்தால் தாயிடம் கருப்பம் ஏற்படாது என்று எண்ணுகின்றனர். கருப்ப காலத்தில் மாதவிடாயும் முட்டைப் பக்குவமடைதலும் நின்று போகின்றன. இவை மீண்டும் ஏற்பட்டால் அக்காலத்தில் கருவுறுதல் சாத்தியப்படலாம். குழந்தை பிறந்த சில மாதங்களில் (இரண்டிலிருந்து ஆறு மாதங்களுக்குள்) ஒரு பெண்ணிடம் மாதவிடாய் வட்டங்கள் மீண்டும் தோன்றுகின்றன. இவ்வாறு மாதவிடாய் தோன்றுங் காலத்தில் முட்டைபக்குவப்படுதலும் சேர்ந்து தோன்றலாம்; அல்லது தோன்றாமலும் போகலாம். சிலர் மாதவிடாய் தோன்றுவதற்கு முன்னரும் கருவுறுகின்றனர். பலர் குழந்தை பால் குடிக்கும் காலத்திலேயே கருவுறுகின்றனர். எனவே, குழந்தை பால் குடித்தல் காலம் பெண் கருவுறாத காலம் என்று கொள்வதற்கு மருத்துவச் சான்று ஒன்றும் இல்லை: பழங்காலத்திலிருந்ததுபோல் குழந்தை பால் குடிக்கும் காலத்தில் கணவன் இணைவிழைச்சு புரிதல் கூடாது என்ற இயற்கைக் கட்டுப்பாடு இருந்தால் பெண் கருவுறுவதற்கு வாய்ப்பே இல்லை.

மேற்கூறிய முறை சிறந்த கருத்தடை முறையே. ஆனால், அஃது இன்றைய சமுதாய வாழ்க்கைக்குப் பொருந்தாது: அது கணவனின் பரத்தமை வாழ்க்கைக்கு வழி செய்வதாகும். பழந்தமிழ் இலக்கியங்களில் மனைவியின் மாதவிடாய் காலத்திலும், மனைவி ஈன்றணிமைக் காலத்திலும் கணவன் பரத்தமை வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பான் என்ற செய்தியைக் காணலாம். பிற்காலஇலக்கிய நூலாசிரியர்கள் இம்மாதிரி ஒரு மரபினைக்கொண்டு நூல்களை இயற்றினர் என்று இதனைக்கொள்ளவேண்டுமேயன்றி, பழந்தமிழ் மக்கள் கண்ட தலைவனிடம இத்தகைய பழக்கம் இருந்ததாகக் கொள்வதற்கில்லை. அப்படியிருப்பினும் அது மனைவியின் படைத்துமொழி கிளவியாகும் என்பது உணரத்தக்கது

அது கிடக்க. ஒரே வீட்டில் கணவனும் மனைவியும் உடலுறவு கொள்ளாமல் பல நாட்களிருப்பது — திருநீலகண்டநாயனாரின் வாழ்க்கையைப் போன்ற வாழ்க்கை நடத்துவது—இயலாத காரியம். சிறந்த மன அடக்கம் உள்ளவர்களே இம்முறையை மேற்கொள்ளுதல் கூடும்; காம உந்தல் குறைந்தவர்களுக்கும் இம்முறை சாத்தியப்படலமா; ஆனால் நீண்ட நாட்கள் கணவனும் மனைவியும் உடலுறவு கொள்ளாதிருத்தல் உடலியலடிப்படையிலும் உளவியலடிப்படையிலும் விருப்பத் தக்கதுமன்று. அவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்த உடலுறவு மிகவும் இன்றியமையாதது. கருத்தடை முறைகளை மேற்கொண்டால்தான் இத்தகைய உறவினை நன் முறையில் அமைத்துக்கொண்டு தேவையற்ற பிள்ளைப் பேற்றினைத் தவிர்க்கலாம்.

நாட்டு முன்னேற்றம்: குழந்தைகட்குப் பெற்றோர்செய்ய வேண்டிய கடமைகளை மேலே கூறினேன். நம் நாட்டிலுள்ள ஒவ்வொரு பெற்றோரும் தம் கடமைகளையுணர்ந்து குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை மேற்கொண்டால் நாடு முன்னேற்றமடையும் என்பது அரசினரின் கருத்து அவர்கள் தரும் புள்ளிவிவரங்களைக் கவனித்தால் திட்டமிட்ட குடும்பத்தின் அவசியம் நன்கு புலனாகும். நம் நாட்டில் பிறப்பு விகிதம் அதிகமாகவும் இறப்புவிகிதம்குறைந்தும் காணப்படுகின்றன. இரண்டு விகிதத்திற்கும் இடையேயுள்ள எண்ணிக்கையின் அளவும் பல்கிப் பெருக்கிக்கொண்டே போவதால் மக்கள் தொகையிலும் அதிகப் பெருக்கம் காணப்படுகின்றது. இப்பெருக்கத்தால் ஏற்படும் விளைவுகள் வெளிப்படை; நம் நாட்டில் ஒவ்வோர் ஆண்டும் சுமார் 150இலட்சம் குழந்தைகள் பிறக்கின்றன. இவற்றில் ஏற்கெனவே மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட குழந்தைகளைப் பெற்றவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் 60இலட்சம். இதேசமயத்தில் எல்லா வயதையும் சேர்ந்தவர்கள் சுமார் 100இலட்சம் பேர்கள் ஒவ்வோராண்டும் இறக்கின்றனர்: அவர்களுள்

---

4. திட்டமிட்ட குடும்பம்—Planned family

ஐந்து வயதுகூட நிறையப் பெருத சிறு குழவிகளின் அகால மரணத்தின் எண்ணிக்கை 40 இலட்சம். மூன்று அல்லது அதற்குமேற்பட்ட குழந்தைகளையுடைய தம்பதிகள் அதற்கு மேற்பட்டுக் குழந்தைகளைப் பெருமல் இருக்கத் தடுப்பு நடவடிக்கை எடுக்கப்பெறின் அரசினரின் குறிக்கோள் நிறைவுபெறும். இதனல் ஆண்டொன்றுக்கு 150இலட்ச மாக இருக்கும் பிறப்பு விகிதத்தைச் சுமார் 90இலட்சத்திற் குக் குறைத்துவிடலாம். குழந்தைகள், சிசுக்களின் அகால மரணத்தையும் 40 இலட்சத்திலிருந்து 24 இலட்சத்திற்கும் குறைவாக (20இலட்சத்திற்கும்கூட) இருக்குமாறு செய்து விடலாம். பிறப்பையும் இறப்பையும் குறைத்து ஓரளவிற் குக் கட்டுப்படுத்திவிட்டால் நம் நாட்டின் மக்கள் தொகை யும் ஓரளவு நிலையாகிவிடும்; அரசினர் மேற்கொண்டுள்ள ஐந்தாண்டுத் திட்டங்களும் வெற்றியுடன் செயற்படும். இதற்கு ஒவ்வொரு தம்பதிகளும் நாட்டின் சேவையில் தம் கடமையை உணர்ந்து பொறுப்புடன் பணியாற்றவேண்டும். இதற்குக் 'குடும்பக் கட்டுப்பாட்டு முறை' பெரிதும் துணை செய்யும்.

மேல் நாடுகளில் முன்னேற்றம்: இன்று இங்கிலாந்து பிரான்சு, மேற்குஐரோப்பா, வட அமெரிக்கா, ஓஷியானியா போன்ற முன்னேற்றமுள்ள நாடுகளில் 'சம்பிரதாயக் குடும் கள்'[5] குறைவாகவும் 'திட்டமிட்ட குடும்பங்கள்' அதிகமாக வும் உள்ளன. இந்தியா, ஆசியா, ஆஃபிரிக்கா, தென்அமெ ரிக்கா போன்ற அதிக முன்னேற்றமடையாத நாடுகளில் திட்டமிட்ட குடும்பங்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு; சரியான புள்ளி விவரங்கள் கிடைப்பின் திட்டமிட்ட குடும் பங்கள் நிறைந்த ஒருசமுதாயத்திற்கும், சம்பிரதாயக் குடும் பங்கள் நிறைந்த ஒரு சமுதாயத்திற்கும் இடையேயுள்ள பல குறிப்பிடத்தக்க வேற்றுமைகளைக் கண்டு கொள்ளலாம்.

நம் நாட்டு மக்களைக் காட்டிலும் ஆங்கிலேயர் அதிக வருவாயும் பொருள் வசதியும் உயர்ந்த வாழ்க்கைத் தரமும்

5. சம்பிரதாயக் குடும்பங்கள்—Traditional family.

உடையவர்கள். வேலையில்லாத் திண்டாட்டமும் அவர்களி டம் இல்லை. மக்களுக்குத் துணை செய்வதற்கு அரசினர் செலவில் இயங்கும் பல சமூக சேவைத் திட்டங்களும் ஆங்கு உள்ளன. இவ்வளவு வசதியான சூழ்நிலை இருந்த போதிலும் அந்நாட்டு மக்களில் மூன்றில் இரண்டு பகுதியி னர் இரண்டு அல்லது மூன்று குழந்தைகளுக்குமேல் பெற்று வளர்க்கப் பண வசதி போதாது என்று கருதித் தங்கள் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கான குடும் பக் கட்டுப்பாட்டு முறைகளை மேற்கொண்டு 'திட்டமிட்ட குடும்பங்களாக' வாழ்கின்றனர். இந்நிலை நம்நாட்டில் இல் லாத காரணத்தால் அவர்களைவிட நாம் இம்முறையை அதி முக்கியமாகக் கடைப்பிடிக்கவேண்டும். ஆனால், நம்நாட்டு மக்கள் இன்னும் 'சம்பிரதாயக் குடும்ப வாழ்க்கை' முறை யையே அதிகமாகக் கடைப்பிடித்து வாழ்கின்றனர். தம் மக்கட்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் ஆற்ற வேண் டிய பொறுப்பையும் நம்மைவிட அவர்கள் அதிகமாக உணர் வதே இதற்குக் காரணம் ஆகும். இத்தகைய பொறுப்பினை நாமும் உணர வேண்டுமல்லவா? கல்வியறிவுடையோர் பாமர மக்களுக்கும் இதனை உணர்த்த வேண்டு மன்றோ? எனவே, திட்டமிட்ட குடும்ப முறை—குடும்பக் கட்டுப் பாட்டு முறை—ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு உயிர் நாடியாக—அடிப்படைக் கல்லாக—இருப்பதை நீ உணர் வாயாக.

இனி, அடுத்து எழுதும் கடிதங்களில் அறிவியலப்படை யில் அமைந்த குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளையும் அவற்றை மேற்கொள்ளும் வழிகளையும் பிற செய்திகளையும் ஓரளவு விரிவாக விளக்குவேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்

# 22

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்; நலனேயாகுக.

சந்த இயக்க முறை: கருத்தடை முறைகளில் மிகவும் இயற்கையானதும் யாதொரு தீங்கு பயக்காததுமான முறை 'சந்த இயக்க முறை'[6] என்பதாகும். ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் கருத்தரி நாட்களும் கருத்தரியா நாட்களும் ஒருவகைத் தாள இலயம்போல் மாறிமாறி வருவதை இன்று ஆய்வுகள் மூலம் அறுதியிட்டுள்ளனர், குழந்தை வேண்டுமாயின் கருத்தரி நாட்களில் கூடுவதும், வேண்டாமென்றால் கருத்தரியா நாட்களில் மட்டிலும் கூடுவதும் இம் முறையின் தத்துமாகும்.

மாதவிடாய் வட்டத்தில் கருத்தரியா நாட்களும் உள்ளன என்ற கருத்து மிகப் பழைமையானது. இரண்டாயிரம் யாண்டுகட்கு முன்னரே நம்நாட்டு மருத்துவர்கள். இதனைக் கூறியுள்ளனர்; தொல்காப்பியத்தின் கற்பியல் நூற்பா. ஒன்றும் நேரல் முறையில் கருத்தரிப்புபற்றிக் குறிப்பிடுவதாகக் கருதலாம். மாதவிடாய்காலத்திலும் அதற்குப்பின்னர் ஒருவார காலத்திலும் புணர்ச்சி கூடாது என்று வரையறுக்கும் மோசைச் சட்டங்களிலிருந்து (Mosaic aws) ஒரு குறிப்பிட்ட நாட்களில்தான் கருத்தரிப்பு ஏற்படுகின்றது என்ற கருத்தினைப் பண்டையோர் அறிந்திருக்கவேண்டும் என்று கருதலாம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் உரோம் என்ற நகரிலிருந்த சோரனஸ்[8] என்றயவன மருத்துவர் கருவுறு

---

6. சந்த இயக்க முறை–Rhythm method.
7. தொல்–பொருள் கற்பு-46 (இளம்)
8. சோரனஸ்–Soranus

தலை விரும்பாத மகளிர் ஒரு மாதத்தில் ஒரு குறிப்பிட்ட நாட்களில்தான் கலவி புரிதல் வேண்டும் என்று அறிவுரை வழங்கியதாக நாம் அறிகின்றோம். அண்மைக் காலத்தில் கேப்பெல்மான்[9] என்பார் 1883இல் தாம் வெளியிட்ட நூலொன்றில் கருத்தரியா நாட்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்: கருவுறுதலை விரும்பாத மகளிர் அந்நாட்களைக் கூடு பருவமாகக்[10] கொள்ளலாம் என்பது அவரது கருத்தாகும். ஆயின், அவர் குறிப்பிட்ட நாட்கள் தவறானவை என்று இன்று மெய்ப்பிக்கப்பெற்றுள்ளது.

கூடுபருவம்: கடந்த ஐம்பது யாண்டுகளாக மேற்கொள்ளப்பெற்ற ஆய்வுகளால் 'கூடுபருவம்' பற்றிய திட்டமான கருத்துகள் கண்டறியப்பெற்றுள்ளன. ஆஸ்திரிய நாட்டைச் சார்ந்த பேராசிரியர் நாஸ்[11] என்பாரும், ஜப்பானியப் பேராசிரியர் ஒஜிஞோ[12] என்பாரும் இத்துறையில் பல உண்மைகளைக் கண்டறிந்துள்ளனர்: அவர்கள் மேற்கொண்ட ஆய்வுகளின் பயனாக ஒருபெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் கருத்தரி நாட்களும்[13] கருத்தரியா நாட்களும்[14] கண்டறியப் பெற்றதுடன் இந்த மாதவிடாய் வட்டத்தில் கருத்தரியா நிலையிலுள்ள ஒரு கூடு பருவமும் நிலைநாட்டப்பெற்றுள்ளது, இங்குக் குறிப்பிட்ட ஆய்வுகள் யாவும் அறிவியலடிப்படையில் அமைந்தவை.

கூடுபருவம் விளக்கம்: இன்று எல்லோரும் அடிக்கடிப் பேசிவரும் 'கூடுபருவம்'[15] என்பதைப்பற்றிச் சிறிது நன்கு விளக்குகின்றேன். ஒரு பெண்ணிடம் கருத்தரியாப் பருவம்

---

9. கேப்பெல்மான்–Capellmann
10. கூடுபருவம்-Safe period
11. நாஸ்-Knaus
12. ஒஜிஞோ–Ogino
13. கருத்தரி நாட்கள்–Fertile days
14. கருத்தரியா நாட்கள்- Sterile days
15. கூடுபருவம்-Safe period

உள்ளது என்பது பல்வேறு உடற்கூறுபற்றிய பல்வேறு சங்கற்பங்களைப்[16] பொறுத்தது. ஒரு பெண்ணிடம் திங்கள் தோறும் ஒரே ஒரு முட்டை[17] வெளிப்படுகின்றது என்பதும் அந்த முட்டை தன்னுடைய உயிர்ச் சக்தியை—அஃதாவது தன்னுடைய கருவுறுந் தன்மையை—மிகக் குறுகிய கால அளவே கொண்டுள்ளது என்பதும், இந்தக் கால அளவு 48 மணி நேரத்திற்கு மேற்படுவதில்லை என்பதும் இன்று பொது வாக அறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பெற்ற உண்மை களாகும். எனவே முட்டை வெளிப்பட்டவுடன், அன்றி வெளிப்பட்ட சில மணி நேரத்திற்குள் அது கருவுறுவிடில், ஒரு மாதம் கழித்து மீண்டும் ஒரு முட்டை பக்குவம் அடை யும் வரை அப்பெண் சூல்கொள்ளல் என்பது இயலாத செயலாகும்

அங்ஙனமே, புணர்ச்சியின் பொழுது ஆண் வெளிப்படுத் தும் விந்தணுக்களும்[18] நீண்டகாலம் உயிரோடிருப்பதில்லை அவையும் கருப்பை அல்லது கருக்குழல்களுள்[19] நுழைந்த 48 மணி நேரத்திற்குமேல் கருவுறுந் தன்மையை இழந்து விடுகின்றன. ஆகவே, முட்டை பக்குவம் அடையும் காலத் தில்தான் சூல் கொள்ளல் சாத்தியப்படும் என்பதும், இக் காலத்தில் மேற்கொள்ளப்பெறும் இணைவிழைச்சே[20] கருப் பத்திற்குப் பயனுடையதாகும் என்பதும் கொள்கையளவில் உண்மையாகின்றன. முட்டை பக்குவமடையாத ஏனைய நாட்களில் மேற்கொள்ளப்பெறும் கலவியால் கருப்பம் ஏற் படுவதில்லை. பெண்ணின் பிறப்புறுப்புப் பாதையில் முட்டை யில்லாதிருப்பதும், அடுத்த முட்டை வரும் வரையில் விந்த ணுக்கள் உயிரோடு இருக்க முடியாமையுமே இதற்குக் கார

---

16. சங்கற்பங்கள்-Assumptions
17. முட்டை-Ovum
18. விந்தணுக்கள்-Sperms
19. கருக்குழல்-Fallopian tube
20. இணைவிழைச்சு-Coitus

ணங்களாகும். இத்தகைய கருத்துகளின் அடிப்படையி லேயே கூடுபருவம் என்பது ஒரு மாதவிடாய் வட்டத்தில் இருப்பதாக அறுதியிடப்பெறுகின்றது. எனவே கூடுபரு வத்தை அறுதியிட வேண்டுமாயின், ஒரு மாதவிடாய் வட் டத்தில் சூற்பையிலிருந்து[22] முட்டை வெளிவரும் நாளைத் தீர்மானிக்க வேண்டும் என்கிறது.

முட்டைப் பக்குவப்படும் காலம்: ஒரு பெண் தன்னிடம் எப்பொழுது சூற்பையினின்றும் முட்டை வெளியாகின்றது என்பதைத் தானேயறிந்து சொல்லுதல் அரிது; இயலாது. சிலர் முட்டை பக்குவம் அடையுங்காலத்தில் தம்முடைய அடிவயிற்றில் வலி ஏற்படுகின்றது என்றும், அல்லது சிறிய அளவில் முதுகுவலி உண்டாகின்றது என்றும் கூறுகின்றனர்; இப்பொழுது யோனிக் குழலில்[23] குருதியொழுக்கு ஏற் படலாம்; அல்லது குருதி தென்படலாம். இச்சமயத்தில் கொங்கை[24]களில் இறுக்கமும் ஏற்படலாம். இந்த அறிகுறி கள் ஒரு மாதவிடாய் வட்டத்தில்[25] ஒரு குறிப்பிட்ட நாளில் ஏற்படுமாயின் அது முட்டை பக்குவப்பட்டதற்கு அல்லது பக்குவப்படுவதற்கு உள்ளவை என்று கருதலாம். ஆனால், மிகச் சிறுபாலோரிடமே இச் செயல்கள் நடை பெறுகின்றன. பெரும்பாலோர் இத்தகைய அறிகுறிகளை அறிவதே இல்லை.

பெரும்பாலும் மாதவிடாய் வட்டங்கள் ஓர் ஒழுங்கான முறையில் நடைபெறுவதில்லை. பெண்ணுக்குப் பெண் இவ் வட்டத்தின் கால அளவு மாறுபடும். ஒரே பெண்ணிடம் கூட 'தூரம்' ஏற்படும் நாள் ஒழுங்காக வருவதில்லை. ஒரு குழந்தை பிறந்த பின்னரும், நோய்க்குப் பின்னரும், தூரம் வழக்கம்போல் ஓர் ஒழுங்கில் ஏற்படாது. சாதாரணமாக

21. சூற்பை-Ovary
22. முட்டை மக்குவமடைதல்-Ovulation
23. யோனிக் குழல்-Vagina
24. கொங்கை-Breast
25. மாதவிடாய் வட்டம்-Menstrual cycle

ஒரு மாதவிடாய் வட்டத்தின் சராசரி காலம் 28 நாட்களாகும்; ஆயினும், இக் கால அளவு சில சமயம் அதிகமாகவும், சில சமயம் குறைவாகவும் உள்ளது. சாதாரணமாக ஒரு நீண்ட மாதவிடாய் வட்டத்திற்கும் ஒரு குறுகிய மாதவிடாய் வட்டத்திற்கும் உள்ள கால வேறுபாடு ஆறிலிருந்து எட்டு நாட்களுக்கு மேற்படுவதில்லை ஒரு பெண்ணிடம் அடுத்த மாதவிடாய் வட்டம் தொடங்குவதற்கு 14 அல்லது 16நாட்களுக்கு முன்னர் சூற்பையிலிருந்து முட்டை விடுவிக்கப் பெறுகின்றது என்பது இன்று கண்டறியப் பெற்றுள்ள உண்மையாகும். எனவே, ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தின் கால அளவையும் அதன் வேறுபாடுகளையும்[26] அறியக் கூடுமாயின் அவற்றின் அடிப்படையில் முட்டை பக்குவமடையும் நாளை அறுதியிட முடியும்.

சில எடுத்துக் காட்டுக்கள்: மேற்கூறியவற்றைச் சில எடுத்துக்காட்டுகளால் விளக்குவேன்; ஒரு பெண் 30 நாட்களுக்கு ஒரு முறை மிக ஒழுங்காக மாதவிடாய் ஆகின்றாள் என்று கொள்வோம். அவள் மாதவிடாய் ஆகும் நாட்களும் அவளிடம் முட்டை பக்குவப்படும் நாட்களும் அடுத்தபக்கத்திலுள்ள விளக்கப்படத்தில் (படம்-44) காட்டப்பெற்றுள்ளன. முதற் பத்தியில் மாதவிடாய் தொடங்கும் நாட்கள் காட்டப்பெற்றுள்ளன. 30 நாட்கள் மாதவிடாய் வட்டக் கால மாதலின், முப்பதாவது பத்தியில் பெருக்கற் குறி (×) இடப்பெற்றிருக்கின்றது: இதைக் கணக்கிடுங்கால் முதல் மாதவிடாய் தோன்றும் நாளிலிருந்து அடுத்த மாதவிடாய் தோன்றும் நாள்வரைக் கணக்கிடவேண்டும். முதல் மாதவிடாய் தோன்றும் நாளைக் கணக்கிற்கு எடுத்துக் கொண்டு, அடுத்த மாதவிடாய் தோன்றும் முதல் நாளை விட்டுவிட வேண்டும். படத்தில் கண்டபடி ஒரு பெண்ணின் மாதவிடாய் மே மாதம் முதல் தேதியில் தொடங்குகின்றது; அடுத்த மாதவிடாய் மே 30இல் தொடங்குகின்றது. ஒரு பெண்ணிடம் இக்கால வரையறை ஓராண்டிற்குச் சரியாக

26. வேறுபாடுகள்-Variations

| மாதவிடாய் வட்டத்தின் முதல் நாள் | மாதவிடாய் வட்டத்தைத் தொடரும் நாட்கள் | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
| மே 1 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| மே 31 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| ஜூன் 30 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| ஜூலை 30 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| ஆகஸ் 29 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| செப்டம் 28 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| அக்டோ 28 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| நவம்பர் 27 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| திசம்பர் 27 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| சனவரி 26 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| பிப்ரவரி 25 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| மார்ச்சு 27 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| ஏப்ரல் 26 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |

**படம்-44 :** முட்டை பக்குவமடைதலைக் குறிக்கும் ஆண்டுக் குறிப்பேடு; இது 30 நாட்களைக் கொண்ட சாதாரண மாதவிடாய் வட்டத்தைக் குறிப்பிடுவது; இதில் X மாதவிடாய் வட்டத்தின் இறுதி நாளையும், O முட்டை பக்குவமடையும் நாளையும் குறிக்கின்றன.

இருக்குமாயின் அவளிடம் முட்டை வெளிப்படும் நாளும் ஒழுங்காக இருக்கும். இத்தகைய ஒழுங்கான மாதவிடாய் வட்டம் "எளிதான மாதவிடாய் வட்டம்"[27] என்று வழங்கப் பெறுகின்றது. இவ்வகை வட்டம், 27, 28, 29, 31, 32 முதலிய நாட்களாகவும் இருப்பதுண்டு. ஒரு மாதவிடாய்க்கும் அடுத்து நிகழும் மாதவிடாய்களுக்கும் இடைபட்ட நாட்கள் ஒரே எண்ணிக்கையில் இருப்பதுதான் 'எளிய மாதவிடாய் வட்டம்' ஆகும் என்பதை ஈண்டு நீ மனத்தில் இருத்துவாயாக.

முட்டை பக்குவப்படும் நாட்களும் வட்டக் குறியால்(○) படத்தில் காட்டப்பெற்றுள்ளன: ஓராண்டுக் காலம் ஆராய்ந்து நாம் ஒரு பெண்ணினுடைய மாதவிடாய் வட்டம் 'எளிதான வட்டமாக' இருப்பதை அறிந்துகொண்டால், அவளிடம் முட்டை பக்குவப்படுங் காலத்தையும் எளிதில் கணக்கிட்டுக் கொள்ள முடியும். சூற்பையின் மேற்புறத்தில் உருண்டையான முட்டையணு[28] வளர்ந்து முதிர்ச்சியுறுங்கால் அது சவ்வு போன்ற உறையை உண்டாக்கும் என்றும், இந்த உறை வெடித்து முட்டை விடுபட்டதும் இந்த உறையில் மஞ்சள் நிறப் பொருள் (கார்ப்பஸ் லூட்டியம்) உண்டாகும் என்றும் முன்னர்க் குறிப்பிட்டுள்ளேன்.[29] இந்த மஞ்சள் நிறப் பொருள் சரியாக 14 நாட்கள்—மாதவிடாய் வட்டத்தின் கால அளவு எப்படியிருந்தாலும்—கருப்பையை ஆட்சி புரிகின்றது. எளிதான மாதவிடாய் வட்டத்தைக் கொண்ட ஒரு பெண்ணின் அடுத்த மாதவிடாய் எந்த நாளில் தொடங்கும் என்பதைக் கணக்கிடக் கூடுமாதலால், அந்நாளிலிருந்து 14 நாட்கள் பின்னோக்கிக் கணக்கிட்டு மஞ்சட் பொருளின் செல்வாக்கு எந்த நாளில் தொடங்குகின்றது என்பதை நிலை நாட்டுதல் கூடும் மஞ்சட்

27. எளிதான மாதவிடாய் வட்டம்—Simple menstrual cycle
28. முட்டையணு—Egg cell
29. இந்நூல்—பக்கம் 129

பொருள் உண்டாகும் 42 மணி நேரத்திற்கு முன்னர் முட்டை விடுபடுதல் நடைபெறுகின்றதாதலின், அந்தப் பெண்ணிடம் அடுத்த மாதவிடாய் தொடங்குவதற்கு 15 நாட்களுக்கு முன்னர் முட்டை பக்குவப்படுகின்றது என்று உறுதியாகக் கூறமுடிகின்றது.

257-ஆம் பக்கத்திலுள்ள விளக்கப் படத்தில் அவளுடைய மாதவிடாய் வட்டம் மே மாதம் முதல் நாள் தொடங்கி 30-ஆம் நாள் முடிவு பெறுகின்றது. நாம் மே 30 ஆம் நாளிலிருந்து பதினைந்து நாட்கள் பின்னோக்கிக் கணக்கிட்டால், அவளிடம் மே மாதம் 16 ஆம் நாள் முட்டைப் பக்குவப்படுதல் நடைபெறுகின்றது என்பதை அறிந்து கொள்ளுகின்றோம். அவளுடைய அடுத்த மாதவிடாய் வட்டம் ஜுன் 29-ஆம் நாள் முடிவு பெறுகின்றது என்பதையும், நாம் முன்னதாகவே அறுதியிட்டு விடலாம். இந்த நாளிலிருந்து (மாதவிடாய் வட்டத்தின் இறுதி நாளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்) 15 நாட்களைக் கழித்து அவளிடம் அடுத்த முறை முட்டை பக்குவப்படுதல் ஜுன் 15-ஆம் நாளில் நடைபெறுகின்றது என்பதையும் நாம் அறுதியிட்டு விடலாம். எளிதான மாதவிடாய் வட்டத்தையுடைய பெண்ணிடம் முட்டை பக்குவப்படும் நாட்கள் பதிவுருவது பத்தியில் வட்டக் குறியால் (O) காட்டப் பெற்றிருப்பதைப் படத்தில் காண்க. மேற்காட்டிய விளக்கப்படத்திலுள்ளது போன்ற முறையை ஒரு தனிக் குறிப்பேட்டிலோ அல்லது தனித்தனித் தாளிலோ மேற் கொள்ளலாம். இம்முறை பேராசிரியர் நாஸ் என்பார் காட்டியதாகும்.

மாதவிடாய் வட்டம் குறுகியதாகவோ அல்லது நீண்டதாகவோ இருப்பின், முட்டை பக்குவமடையும் நாளும் முன்னதாகவோ அல்லது தாமதப்பட்டோ வரும். எடுத்துக் காட்டாக, ஒரு பெண் 24 நாட்களுக்கு ஒரு முறை தூரமானால், அவளிடம் மாதவிடாய் தொடங்கிய 9-வது நாள் முட்டை பக்குவமடையும்; அவள் 32 நாட்களுக்கு ஒரு முறை தூரமானால், அவளிடம் மாதவிடாய் தொடங்கிய

17-நாள் முட்டை பக்குவமடையும். எனவே, மாதவிடாய் தொடங்கும் நாளுக்கும் முட்டை பக்குவப்படும் நாளுக்கும் அடுத்து நிகழும் மாதவிடாய் தொடக்க நாளுக்கும் இடைப்பட்ட நாட்களின் எண்ணிக்கை மாறுபடும் என்பதும், ஆனால் முட்டை பக்குவப்படும் நாளுக்கும் அடுத்து நிகழும் மாதவிடாய் தொடக்க நாளுக்கும் இடைப்பட்ட நாட்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட மாறாத நிலையிலிருக்கும் என்பதும் தெளிவாகின்றன.

மேற்கண்டவாறு எளிதான மாதவிடாய் வட்டத்தைக் கொண்ட பெண்ணிடம் முட்டை பக்குவப்படும் நாட்களை அறுதியிடல் எளிது: ஆனால், இரட்டை மாதவிடாய் வட்டங்களிலும் பல்-மாதவிடாய் வட்டங்களிலும் பெண்களிடம் முட்டை பக்குவப்படும் நாட்களை அறுதியிடல் மிகவும் சிக்கலானது; மும்மடியான மாதவிடாய் வட்டங்களைக் கொண்ட பெண்ணின் மாதவிடாய் நாட்கள் விளக்கப்படத்தில் (படம்-45) காட்டப் பெற்றுள்ளன; இந்தப் பெண் மார்ச்சு முதல் நாள் மாதவிடாய் ஆனாள்; இவளது அடுத்த மாதவிடாய் மார்ச்சு 28-இல் தொடங்கியது. இப்பொழுது அவளது மாதவிடாய் வட்டம் 27 நாட்கள் ஆகும். இதிலிருந்து 15 நாட்களைக் கழித்துப் பார்த்தால் அவளிடம் மார்ச்சு 13-இல் முட்டை பக்குவமாயிற்று என்று தெரிகின்றது. மூன்றாவது முறை இப்பெண் ஏப்ரல் 29-ல் தூரமானாள். இந்த வட்டம் 32 நாட்கள் ஆகும். இதிலிருந்து 15 நாட்களைக் கழித்தால், அவளிடம் ஏப்ரல் 14-இல் முட்டை விடுபட்டிருக்க வேண்டும் என்று ஏற்படுகின்றது. நான்காவது தூரம் இவளிடம் மே 29-இல் தொடங்கியது. இந்த வட்டம் 30 நாட்கள் ஆகும்: இதிலிருந்து 15 நாட்களைக் கழிக்கவே, அவளிடம் மே 14-இல் முட்டை பக்குவப்பட்டது என்று தெரிகின்றது: இவளிடம் சில சமயம் 27 நாட்கள் வட்டமும், சில சமயம் 30 நாட்கள் வட்டமும், சில சமயம் 32 நாட்கள் வட்டமும் ஏற்படுவதால், இவளது நடைமுறையிலுள்ள வட்டம் எத்தனை நாட்கள் என்பதை அறுதியிடல் முடியாது. இவளது மாத

| மாதவிடாய் வட்டத்தின் முதல் நாள் | மாதவிடாய் வட்டத்தைத் தொடரும் நாட்கள் | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
| மார்ச்சு 1 | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | | | | |
| மார்ச்சு 28 | | | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | |
| எப்ரல் 29 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| மே 29 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| சூன் 28 | | | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | |
| சூலை 30 | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | | | | |
| ஆகஸ்டு 26 | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | | | | |
| செப்டம் 22 | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | | | | |
| அக்டோ 19 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| நவம்பர் 18 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| திசம்பர் 18 | | | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | |
| சனவரி 19 | | | | | | | | | | | | | | | O | | | | | | | | | | | | | | X | | | | | | |
| பிப்ரவரி 18 | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |

**படம்-45 :** முட்டை பக்குவமடைதலைக் குறிக்கும் ஆண்டுக் குறிப்பேடு. இது மும்மடியான மாதவிடாய் வட்டத்தைக் குறிப்பிடுவது; இதிலும் X மாதவிடாய் வட்டத்தின் இறுதி நாளையும், O முட்டை பக்குவமடையும் நாளையும் குறிக்கின்றன.

விடாய் வட்டம் முடியும் நாட்களும், முட்டை பக்குவப் படும் நாட்களும் படத்தில் காட்டப்பெற்றுள்ளன. இவற்றால் இப்பெண்ணிடம் முட்டை பக்குவப்படும் நாளை அறுதியிடல் இயலாது என்பது தெரிகின்றது.

கூடு பருவத்தை அறுதியிடும் முறை: இனி, கூடுபருவத்தை அறுதியிடும் முறையை விளக்குவேன். முதற்படத்தில் குறிப்பிடப்பெற்ற பெண் 30 நாட்கள் வட்டத்தையுடையவள். அவளிடம் முதல் மாதவிடாயின் தொடக்க நாளிலிருந்து 14, 15, 16வது ஆகிய மூன்று நாட்களில் என்றாவது ஒரு நாள் பக்குவமடையலாம். வித்தணுக்களும் முட்டையணுவும் உயிரோடிருக்கும் காலத்திற்காக இரண்டு பக்கங்களிலும் 3 நாட்கள் கூட்டப் பெறுகின்றன. இப்பொழுது அவளது கருத்தரி நாட்கள் 11-வது நாளுக்கும் 19-வது நாளுக்கும் இடைப்பட்ட நாட்களாகும். இந்த நாட்களில் எப்பொழுதும் அவள் கருத்தரிக்கலாம். மாதவிடாய் தொடங்கின நாளிலிருந்து 11 நாட்கள் முடியும் வரையிலும், மீண்டும் 20-வது நாள் தொடங்கி அடுத்த மாதவிடாய் தொடங்கும்வரையிலும் அவள் கருத்தரியாள். இந்த நாட்களே 'கூடு பருவம்' ஆகும்.

ஒழுங்கின்றி மாதவிடாய் ஆகும் பெண்களிடம் முட்டை பக்குவப்படும் நாட்களை அறுதியிட முடியாது என்றாலும், அவர்களுடைய கூடுபருவத்தை ஒருவாறு உறுதிப்படுத்தலாம். ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டம் 7 நாட்களிலிருந்து 32 நாட்கள் வரை மாறுபடுவதாகக் கொள்வோம். இவளிடம் 12-வது நாளுக்கும் 19-வது நாளுக்கும் இடைப்பட்ட நாட்களில் என்றாவது ஒரு நாள் முட்டை பக்குவம் அடையும். இந்த நாட்களின் இரு பக்கத்திலும் 3 நாட்களைக் கூட்டவே, அவளுடைய கருத்தரி நாட்கள் 9-வதிலிருந்து 22-வது நாள்வரை நீடிக்கும். இவளுடைய கூடுபருவம் முதலாம் நாளிலிருந்து எட்டாம் நாள் முடிய உள்ள நாட்களும் 23-வது நாளிலிருந்து அடுத்தமாதவிடாய் தொடங்கும் நாள்வரை உள்ள நாட்களும் ஆகும். எடுத்துக் காட்டாக, அவள் ஆகஸ்டு முதல் நாள் மாதவிடாய்

ஆகின்றுள் எனக் கொண்டால், அவள் ஆகஸ்டு 1லிருந்து 8 முடியும்வரையிலும் சாதாரணமாகக் கருத்தரியாள்; 9 லிருந்து 22முடிய உள்ள நாட்களில் கருத்தரிப்பாள்; மீண் டும் 23லிருந்து அடுத்த மாதவிடாய் தொடங்கும் வரையில் நிச்சயமாகக் கருத்தரியாள். இதனை விளக்கப்படத்தில் (படம்–46) காண்க.

வெப்பநிலை அறிமுறை: முட்டை பக்குவப்படுவதைச் சரியாக அறுதியிடுவதில் கடந்த இருபது யாண்டுகட்குள் மற்ருெரு குறை கண்டறியப் பெற்றுள்ளது. அது 'வெப்ப நிலை அறிமுறை[30] என்று வழங்கப்பெறும். ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் அவளுடைய உடல் வெப்பம் மாறிக்கொண்டு வருவதாகப் பல அறிஞர்கள் கூறியுள்ளனர். காலையில் துயிலெழுந்தவுடன் இந்த வெப்ப நிலைகளை அறிந்து குறித்துக் கொண்டால், இந்த வேறுபாடுகளைக் காணலாம். பெரும்பாலும் ஆசனவாயில் இந்த வெப்ப நிலைகளை அளந்து காணல் சிறந்தது. மாதவிடாய் வட்டத்தின் தொடக்கத் தில் இரண்டு வாரங்களுக்கு இந்த வெப்பநிலை 97–98°F இருக்கும்; 98°Fக்கு மேல் இது உயர்வது அரிது. இந்தக் காலத்தின் எல்லையில் வெப்பநிலை ·2° வரை குறைந்திருந்து அதன்பிறகு திடீரென்ருே அல்லது படிப்படியாகவோ 1°F வரை உயருகின்றது. அதன்பிறகு வெப்பநிலை 98—99°F வரை நிலையாக இருக்கின்றது; அடுத்த தூரம் வரை இந் நிலையேநீடித்திருக்கும். வெப்பநிலை தாழ்ந்து உயர்வதுசாதா ரணமாக அடுத்த தூரம் தொடங்குவதற்குப் 14 நாட்கள் முன்னதாக நடைபெறுகின்றது என்றும், இக்காலம் முட்டை பக்குவப்படுதலுடன் பொருந்துவதற்குத் தக்க சான்றுகள் உள்ளன என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்; இம்முறையினுல் முட்டை பக்குவமடைதலை அறுதியிடல் மிகவும் சிறந்தது என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

மாதவிடாய் வட்டத்தில் மூன்று பகுதிகள்: கருத்தரி நாட் களைக் கணக்கிடும் அடிப்படையில் மாதவிடாய் வட்டத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கின்றனர். அவை: முட்டை பக்

30. வெப்பநிலை அறிமுறை–Temperature method.

| மாதவிடாய் வட்டத்தின் முதல் நாள் | மாதவிடாய் வட்டத்தைத் தொடரும் நாட்கள் | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
| | | | | | | | | | | | | $O_S$ | | | | $O_L$ | | | | | | | | | | $X_S$ | | | | | $X_L$ | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |

படம்-46: முட்டை பக்குவமடைதலைக் குறிக்கும் ஆண்டுக் குறிப்பேடு. இது 27 நாட்களுக்குக் குறையாமலும் 32 நாட்களுக்கு மேற்படாமலும் உள்ள ஒரு கலவை மாதவிடாய் வட்டத்தைக் (mixed cycle) காட்டுவது. இதில் $O_S$ குறு வட்டத்தில் முட்டை பக்குவப்படும் நாளையும், $O_L$ நெடுவட்டத்தில் முட்டை பக்குவப்படும் நாளையும் $X_S$ குறு வட்டத்தின் இறுதி நாளையும், $X_L$ நெடுவட்டத்தின் இறுதி நாளையும், [redacted] முட்டை பக்குவமடையா நாட்களையும் குறிப்பிடுகின்றன.

குவமடைவதற்கு முன்னுள்ள கருத்தரியா நாட்கள், முட்டை பக்குமடையும் காலத்தைச் சுற்றியுள்ள கருத்தரி நாட்கள், முட்டை பக்குவமடைந்த பிறகு உள்ள கருத்தரியா நாட்கள் என்பவை. எவ்வளவு நாட்கள் விந்தணுக்கள் உயிருடன் பெண் பிறப்புறுப்புப் பாதையில் தங்கியிருக்கும் என்பதைச் சரியாக அறுதியிட முடியாததாதலின், முற்பகுதி அவ்வளவு நம்பத் தகுந்ததன்று. மூன்றுவது பகுதியில் கருவுறத்தக்க முட்டை உயிருடன் இருப்பது சாத்தியமாகாததாதலின், இப்பகுதி மிகவும் நம்பத் தகுந்ததாகும்.

நடைமுறையில் நாம் மாதவிடாய் வட்டத்தை மூன்று சமப் பகுதிகளாகப் பிரித்து முதற்பகுதியை ஓரளவு நம்பகமான கருத்தரியாக் காலம் என்றும், இரண்டாம் பகுதியை கருத்தரி காலம் என்றும், மூன்றும் பகுதியை முற்றிலும் நம்பகமான கருத்தரியாக் காலம் என்றும் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, ஒரு பெண் 30 நாட்களுக்கொரு முறை தூரமானல் முதல் 10 நாட்கள் அவள் கருத்தரியாள்; அடுத்த 10 நாட்கள் அவள் கருத்தரிப்பாள்; இறுதி 10 நாட்கள் அவள் நிச்சயம் கருத்தரியாள்.

முற்றிலும் இம்முறையையே நம்பி மேற்கொள்ளும் மகளிரிடம் இம்முறை தவறுதலும் உண்டு. பெரும்பாலும் எடுகோள்களைச்[31] சேகரிப்பதில் செய்யும்தவறுதல்களும், அவற்றைக்கொண்டு கணக்கிடுவதில் நேரிடும் தவறுதல்களுமே இதற்குக் காரணங்களாகும். எனினும், சிலரிடம் உடல்நிலையும் உள்ளக் கிளர்ச்சி நிலையும் எதிர்பாராத வண்ணம் மாதவிடாய் வட்டத்தின் கால அளவையும் முட்டை பக்குவமாகும் நாளையும் மாற்றிவிடுவதால் தவறுதல் நேரிடுகின்றது. இதனுல்தான் சில பெண்கள் இம்முறையை மேலதிக முறையாக[32] அல்லது மாற்று முறையாகக்[33] கொள்ளுகின்

31. எடுகோள்—Data
32. மேலதிக முறை—Additional method
33. மாற்றுமுறை-Alternate method

றனரேயன்றி இதையே முற்றும் முடிந்த முறையாகக் கொள்ளுவதில்லை. கருத்தரித்தாலும் கவலையில்லை என்று எண்ணுபவர்கள் இம்முறையை மேற்கொள்ளலாம். மேல் நாடுகளில் கருத்தரி நாட்களில் கருத்தடைக்கருவிகளையும்[34] கருத்தரியா நாட்களில் இம்முறையையும் மேற்கொள்ளுகின்றனர் பெரும்பாலானவர்கள் கருத்தரியா நாட்களில் பாதுகாப்பின்றிக் கலவி புரிதலையே[35] விரும்புகின்றனர். இன்று உயிரியல், சமூக வியல் அடிப்படையில் மானிடக் கருத்தரிப்பு பற்றிய ஆராய்ச்சி மிக உற்சாகத்துடன் மேற்கொள்ளப் பெற்று வருகின்றது. வருங்காலத்தில் மானிட இனப் பெருக்க வட்டத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றங்கள் ஏற்படும் என்பதற்கு ஐயமில்லை.

கருத்தடைக் கருவிகளைப் பயன்படுத்திக் கருத்தடை செய்யும் முறைகளை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

34. கருத்தடைக் கருவிகள்-Contraceptives
35. கலவி-Coitus

# 23

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,
நலன். நலன் தெரிவிக்க.

கருத்தடைக் கருவிகளைப் பயன்படுத்திக் கருத்தடை செய்யும் முறைகள் 'ஆண் முறைகள்' (கணவனால் மேற் கொள்ளப்பெறுபவை), 'பெண் முறைகள்' (மனைவியால் மேற்கொள்ளப்பெறுபவை) என இருவகைப்படும். கருத் தடைக் கருவிகளைக் கையாளுவதற்கு முன்னர் மருத்துவ ரைக் கலந்து ஆலோசித்து அவர் கூறுகின்றபடி செய்ய வேண்டும்.

ஆண் முறைகள்: ஆண்களுக்குரிய முறைகள் இரண்டு உள்ளன. அவற்றை இக் கடிதத்தில் விளக்குவேன். கலவி யின் பொழுது விந்துப் பாய்மம் யோனிக் குழலின் வாயி லாகக் கருப்பையினுள் நுழையாது தடுப்பதே இந்த முறை களின் தத்துவமாகும். கணவன் இணைவிழைச்சு புரியும் பொழுது விந்து வெளிப்படுவதற்கு முன்னர் ஆணுறுப்பைப் பெண்ணின் யோனிக் குழலினின்றும் எடுத்து விடுவதே முதல் முறையாகும். இதனால் விந்துப் பாய்மம் பெண்ணின் பிறப் புறுப்புகளுக்கு வெளியில் சிந்திவிடப்பெறுகின்றது. இம் முறையை வெற்றிகரமாகக் கையாண்டால் ஆணின் விந் தணு பெண்ணின் முட்டையணுவினைச் சந்திக்கும் வாய்ப்பு தவிர்க்கப் பெறுகின்றது. இன்று உலகில் முற்போக்கடைந் துள்ள எல்லா நாடுகளிலும் இம்முறை மேற்கொள்ளப் பெறுவதாகச் சமூக வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். இந்தமுறை பழங்காலந் தொட்டே வழக்கிலிருந்து வரும் ஒரு முறை என்று மானிட இனவரலாற்று அறிஞர்கள் செப்புகின் றனர். இங்கிலாந்தில் இம்முறை 'கணவன் கவனமுறை'[36]

---

36. கணவன் கவன முறை-Husband careful method

என்று பேச்சு வழக்கில் இருந்து வருகின்றது: சுற்றறிந்தோர் இதனை 'இடையீட்டு இணைவிழைச்சு'[37] என்று வழங்குவர்.

மேற்குறிப்பிட்ட முறை வரவாற்றுச் சிறப்புடையது: விவிலிய நூலில் 'ஓனன்'[38] என்பவனுடைய வரலாற்றைக் குறிப்பிடுமிடத்து இம்முறை கூறப்பெறுகின்றது. ஆனால் மானிட இனம் தோன்றி இணைவிழைச்சிற்கும் கருவுறலுக்கும் உள்ள தொடர்பை அறிந்த பழங்காலத்தே—விவிலிய காலத்திற்கு[39] முன்னருள்ள நெடுங்காலத்திற்கு முன்பே—இம்முறை வழக்கிலிருந்திருக்க வேண்டுமென்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

எபிரேயச் சட்டத்தின்படி[40] அல்லது வழக்காற்றின்படி மணமான ஆண் சந்ததியின்றி இறந்துவிட்டால், அவனுடைய மணமாகாத சகோதரன் (அப்படி ஒருவன் இருந்தால்) தன்னுடைய அண்ணனின் மனைவியாகிய கைம்பெண்ணை மணந்துகொள்ளவேண்டும்; இந்த ஏற்பாட்டில் அவர்கட்கு முதலில் பிறக்கும் ஆண்குழந்தைக்கு இறந்த சகோதரனின் பெயரிடவேண்டும். 'ஓனன்' என்ற ஒருவனுக்கு இந்த நிலை ஏற்பட்டது; தன்னுடைய அண்ணன் எப்படியோ கொல்லப் பெற்றான்; கைம் பெண்ணை மணப்பது அவனது கடமையாயிற்று. எனினும், யாதோ ஒரு காரணத்தினால் அவன் தன் அண்ணன் பெயரில் குழந்தைகளைப் பிறப்பிக்க விரும்பவில்லை. ஆகவே, மேற்குறிப்பிட்ட இம்முறையைக் கையாண்டான். இதனால் இக் கொள்கை 'ஓனன் கொள்கை'[41] என்று வழங்கப்பெறுகின்றது. இவ்விடத்தில் நம் நாட்டுப் பாரதக் கதையை நினைவு கூர்வாயாக. சந்தனுவின் மக்கள் விசித்திர வீரியனும் சித்திராங்கதனும் சந்ததியின்றி இறந்தனராக, அவர்களுடைய மனைவியராகிய அம்

37. இடையீட்டு இணைவிழைச்சு—Coitus interruptus
38. ஓனன்—Onan
39. விவிலியம்—Bible
40. எபிரேயச் சட்டம்—Hebrew law
41. ஓனன் கொள்கை—Onanism

பிகையும் அம்பாலிகையும் வேத வியாசரால் கருப்பம் உற்ற செய்தியையும், அவ்வாறு தோன்றிய திருதராட்டிரன், பாண்டு ஆகியோரின் பிள்ளைகளே கௌரவர்கள், பாண்டவர்கள் ஆவர் என்பதையும் ஈண்டு சிந்திப்பாயாக; இவ் வரலாறுகள் யாவும் மக்கள் நாகரிகமடையா நிலையைக் காட்டுகின்றது. இவ்வரலாறுகளைத் தொல்காப்பிய காலத்துக் காதல் வாழ்க்கையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் தமிழினத்தின் தொன்மையும் நாகரிகத்தின் பழமையும் நன்கு புலனாகும். அது கிடக்க.

இம்முறை எளிதாகவும், எவ்வித முன்னேற்பாடுகள் இல்லாமலும், கருத்தடைக் கருவிகளின் தொல்லை இல்லாமலும் எங்கும் எப்பொழுதும் மேற்கொள்ளக் கூடியதாக இருப்பதால் இதைப் பலர் விரும்புகின்றனர். இதைப் பெரும்பான்மையான மருத்துவ நிபுணர்கள் நன்மை தரும் முறையாக ஒப்புக்கொள்வதில்லை; பலவிதத்தில் தீங்கு பயக்கும் முறையாகவே இதனைக் கருதுகின்றனர். இக் காலத்தில் நரம்புக் கோளாறுகளால் பாதிக்கப் பெற்ற நோயாளர்களின் 75 சதவிகிதம் இம் முறையைக் கையாளுவதனாலேயே ஏற்படுகின்றது என்று, நரம்புக் கோளாறுகள் பற்றிய நிபுணராகிய சிக்மண்ட் பிராய்ட்[42] என்ற அறிஞர் கருதுகின்றார். இம்முறை சிறிதளவேனும் திருப்தி தரும் முறையன்று என்பதற்கு மூன்று காரணங்கள் தரப்பெறுகின்றன இதனால் உடலியல்பற்றிய கோளாறுகளும் உளவியல்பற்றிய நோய்களும் ஏற்படுகின்றன என்றும், தவிரவும் இம்முறை அவ்வளவு நம்பிக்கை வைக்கத் தகுந்தது அன்று என்றும் கருதுகின்றனர். இக் கருத்துகளை ஒவ்வொன்றாகச் சிறிது விளக்குவேன்.

இம்முறையினால் கலவியின்பமே இல்லாது போகின்றது. பயந்துகொண்டு கள்ளப் புணர்ச்சி செய்வோரின் நிலையிலிருக்கும் இம்முறை கலவியின்பத்தின் உச்ச நிலை உணர்வுக்குத்

42. சிக்மண்ட் ஃபிராய்ட்-Sigmond Freud

தடையாகவுள்ளது. விந்து கருப்பையின் வாயிலைத் தாக்கும் பொழுதும், விந்து வெளியேறுங்கால் ஆண்குறி யோனிக் குழலில் விட்டுவிட்டுத் துடிப்பதாலும் பெண்ணின் இன்ப வுணர்ச்சி கிளர்ந்தெழுகின்றது. அந்நிலையில் ஆணும் "பேரின்பத்தை" அடைகின்றான். இந்த இன்ப உணர்ச்சி யின் எல்லையைக் காண்பதற்கு இம்முறை தடையாகவுள்ளது. தவிரவும், இன்பத்தின் கொடுமுடியை எதிர்நோக்கியிருக்கும் பெண் அக் கொடுமுடியைக் காண்பதற்குமுன் ஆண் குறி இழுக்கப்பெற்று விடுமே என்ற கவலையால் பீடிக்கப்பெறு கின்றாள். ஆணும் இன்பத்தையே மறந்து விந்து வெளிப் படும் சமயத்தில் ஆண் குறியை இழுத்துவிட வேண்டும் என்ற எண்ணத்தால் நிரம்பப்பெற்றுள்ளான். இவ்வாறு இரு பாலாரிடையேயும் நேரிடும் ஓர் அழுக்கம், கவலை போன்ற உணர்ச்சிகள் அவர்களிடம் பல்வேறு மனக் கோளாறுகளையும் நரம்பு நோய்களையும் உண்டாக்குகின்றன என்பது உளவியல் மருத்துவர்களின் துணிபாகும்.

இம்முறையை மேற்கொள்ளும் பெண் முற்றிலும் பல வீனம்[43] அடைகின்றாள். பெண் அடிக்கடி திருப்தியற்ற முறையில் கலவி புரிவதால் இடுப்பெலும்புக் கட்டினுள் தொடர்ந்தாற்போல் குருதியோட்டத்தால் உப்புதல் ஏற் பட்டு உடல் நலக் கேடும் உள்ளக் கிளர்ச்சி நலக்கேடும் உண்டாகின்றன. ஆணுக்கும் இன்பவுணர்ச்சி பலியாவது டன், விந்து வெளிப்படும் நிலையில் ஆண் குறியைச் சட் டென்று இழுப்பதால் அவனிடம் உடலதிர்ச்சி ஏற்படுகின் றது. இதனால் அவனுடைய முதுகுத்தண்டிலுள்ள 'ஆண்குறி விறைக்கும் மையம்'[44] பாதிக்கப்பெற்று அவனுடைய ஆண் மையும் குறைந்து போகின்றது. தவிரவும், புராஸ்டேட் சுரப்பியில் வீக்கமும் பெருக்கமும் ஏற்பட்டு 'புராஸ்டாட்டி டிஸ்'[43] என்ற நோய் உண்டாகின்றது. இம்முறையைக்

43. முற்றிலும் பலவீனம்-Impotence
44. ஆண்குறி விறைக்கும் மையம்-Erection centre
45. புராஸ்டாட்டிடிஸ்—Prostatis

கைவிடுபவர்களிடம் இந்நோய் குறைவதினின்றும் இது தெளிவாகின்றது.

எப்பொழுது விந்து வெளிப்படும் என்பதைப் பெரும் பாலும் மிகச் சரியாக உணர முடிவதில்லை; தவிரவும், ஆண் குறியை இழுப்பதற்கு முன்னர் வெளிப்படும் திரவக் கசிவின் ஒன்றிரண்டு துளி பாய்மத்தில் உள்ள விந்தணுக்களாலும் பெண் கருவுறுதல் கூடும். முதற்கலவியில் பெண்ணுக்குத் திருப்தி ஏற்படவில்லையே என்று கருதும் ஆண் இரண்டா வது கலவி புரியும்பொழுது முதற்கலவியினால் ஆண் குறியின் சிறு நீர்ப்புற வழியிலோ அன்றி எபிடிடைமிஸிலோ ஒட்டிக் கொண்டிருக்கும் ஒன்றிரண்டு விந்தணுக்கள் விந்து வெளிப் படுவதற்குமுன் ஏற்படும் திரவக் கசிவில் வெளிப்பட்டும் பெண் கருவுறலாம். இதனால் இம்முறை முற்றிலும் நம்பத் தகுந்ததன்று.

விந்து பாய்ச்சா இணைவிழைச்சு: மேற்குறிப்பிட்ட இடையீட்டு இணைவிழைச்சினைப் போன்றே மற்றொரு முறை உள்ளது. இதனை 'விந்து பாய்ச்சா, இணைவிழைச்சு'[46] என்று வழங்குகின்றனர். இதில் ஆண் நெடுநேரம் இடை நிறுத்த மின்றிக் கலவி புரிந்தாலும் விந்தினை வெளிப்படுத்தாது அடக்குகின்றான். இவ்வாறு அடக்குவதற்கு உடற்கட்டுப் பாடும் உள்ளக் கிளர்ச்சிக் கட்டுப்பாடும் பெரிதும் வேண்டும். இத்தகைய பயிற்சியினையுடைய ஆண்கள் இன்றும் இருப்ப தாகக் கூறுகின்றனர். இம்முறையினால் யாதொரு தீங்கும் நேரிடுமா நேரிடாதா என்பதை இன்னும் மருத்துவ உலகம் உறுதிப்படுத்தவில்லை.

ஆணுறையை[47] அணிதல்: ஆண் முறைகளில் இரண் டாவது முறை ஆணுறுப்பில் உறையை அணிந்து கொள்வ தாகும். இதனால் விந்தணுக்கள் பெண்ணின் யோனிக் குழலி னுள் நுழையாமல் தடை செய்யப்பெறுகின்றன. இந்த

---

46. விந்து பாய்ச்சா இணைவிழைச்சு-Coitus reservatsu
47. ஆணுறை-Sheath or condom

உறையை இணைவிழைச்சுக்கு முன்னர் அணிந்து கொள்ள வேண்டும். இணைவிழைச்சின்பொழுது வெளிப்படும் விந்து பெண்ணின் கருப்பையினுள் செல்லாமல் இந்த உறையினுள்ளே தங்கிவிடும் இதனால் கருப்பம் உறல் தடை செய்யப் பெறுவதுடன், நோய் தொற்றுதலும் தவிர்க்கப் பெறுகின்றது.

நடைமுறையில் இரண்டு விதமான உறைகள் உபயோகத்திலிருந்து வருகின்றன: முதல் வகை 'மீன்தோல் உறை'[48] என்பது; இது பிரத்தியேகமான பிராணி இழையத்தாலானது. மற்றொரு வகை இரப்பர் உறையாகும். இஃது இயற்கை இரப்பராலோ அன்றி செயற்கை இரப்பராலோ செய்யப்பெற்றது. முதல் வகையைப் பயன்படுத்துவதற்கு முன்னர் நனைத்துப் பதப்படுத்த வேண்டும்; இது நடைமுறையில் எளிதானதன்று; விரும்பத் தக்கதுமன்று. தவிரவும் இதன் விலையும் அதிகம்; இரப்பர் வகையைவிட இஃது எவ்வாற்றானும் பிரத்தியேகமான நன்மை தருவதும் அன்று. இரப்பர் உறையிலும் இரண்டு வகை உண்டு. ஒரு வகை மெல்லியதாகவும், விரிந்து சுருங்கக் கூடியதாகவும் வீளிம்பில் வளையக் கூறியதாகவும் இருக்கும். இன்னொன்று, சற்றுத் தடித்து இருக்கும். இதனைத் 'தடித்தஉறை'[49] என்று வழங்குவர். மெல்லிய உறை சற்று விலை மலிவு; ஆனால் தடித்த உறையைப்போல் இதனை அடிக்கடிப் பயன்படுத்த முடியாது. தடித்த உறையின் விலையும் சற்று அதிகம்; அஃது எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைப்பதுமில்லை; பொதுவாக இரப்பர் உறைகளின் விலை மீன்தோல் உறைகளைவிட மிகவும் குறைவாக இருப்பதால் இவை எங்கனும் பெருவழக்காக உள்ளன. இம்முறையில் தோல்வியுறக் கூடிய சில குறைபாடுகள் இருப்பினும், அக்குறைபாடுகள் எளிதில் தவிர்க்கக் கூடியனவாதலாலும், இம்முறையை ஒரு மருத்துவர் உதவியின்றி எவரும் எளிதில் கற்றுக்கொள்ளக் கூடியதாகை

48. 'மீன்தோல்' உறை–Fishskin sheath
49. தடித்த உறை-Thick sheath

யாலும் இம்முறை அதிகமாகக் கையாளப்பெற்று வருகின்றது:

பயன்படுத்தும்முன் கவனம்: இம்முறையில் உறையைப் பயன்படுத்துவதற்கு முன்னர் அதனை நன்கு சோதித்து அதில் சிறு துளைகள் இல்லையென உறுதி செய்துகொள்ள வேண்டும். பழுதான உறைகளில் சிறு துவாரங்கள் இருத்தல் கூடும். ஆகவே உறைகளைப் பயன்படுத்துவதற்கு முன்னர் இரப்பர்க் குமிழ்களைப்போல்[50] ஊதி நல்ல ஒளிக்கு முன்னர் வைத்துப் பார்த்தால் துளைகள் இருப்பதும் இல்லாததும் தெரிந்துவிடும். இவ்வுறையைப் பயன்படுத்தியபிறகு அது தானாக நழுவி அதிலுள்ள விந்து பெண்ணுப்பில் சிந்த நேரிடலாம். ஆகவே ஆணுறுப்பைப் பெண்ணுறுப்பிலிருந்து எடுக்கும்பொழுது உறையை நன்கு கையினால் பிடித்துக் கொண்டு எடுக்க வேண்டும். சில சமயம் பயன்படுத்தும் பொழுது உறை கிழிந்துபோகவும் நேரிடலாம். இவ்வாறு நேரிடாமலிருப்பதற்குக் கருவுறுதலைத் தடுக்கும் மருந்து வகைகளில் ஒன்றான பாகுப் பொருளை[51] வழுக்கிடு பொருளாகப்[52] பயன்படுத்திக் கொள்ளலாம். இந்தப் பொருளை உறையின் உட்புறமும் வெளிப்புறமும் நன்கு தடவிப் பயன் படுத்தினால் இஃது அதிகப் பாதுகாப்பு தருவதுடன் கிழியாமலும் அசௌகரியம் இல்லாமலும் இருக்கின்றது; பயன் படுத்துங்கால் இது கிழிந்துவிட்டால் புணர்ச்சிக்குப் பின்னர் பெண்ணின் பிறப்புறுப்பு வழியை நன்றாக "டூஷ்" செய்து[53]

---

50. இரப்பர்க் குமிழ்கள்-Baloons

51. பாகுப் பொருள்-Jelly

52 வழுக்கீடு பொருள்-Lubricant

53. douche-என்றால் நீர்த்தாரை போன்ற அமைப்பினால் பெண்ணுறுப்பின் உட்புறத்தில் நீர் வேகமாகப் பாயும்படி செய்து அதனைக் கழுவுதல். இதற்குத் தூய்மையான நீர் அல்லது மருந்து கலந்த நீர் பயன்படுத்தப்பெறும்.

கொள்ள வேண்டும். பயன்படுத்திய பிறகு உறையையும் சோப்புத் தண்ணீரில் நன்கு கழுவி உலர வைத்துப் பவுடர் தடவிக் கைப்படாத இடத்தில் வைக்கவேண்டும். உறையைக் கெடுத்துவிடக் கூடிய எண்ணெய், 'கிரீஸ்' போன்ற பசைகள் அதன் மீது படாமல் பாதுகாக்கவும் வேண்டும். எவ்வளவு பாதுகாப்பு எடுத்துக் கொண்டாலும் ஓர் உறையை மூன்று அல்லது நான்கு தடவைகளுக்குமேல் பயன்படுத்த முடியாது.

குறைகள்: பெரும்பாலோர் இம்முறையைக் கையாண்டாலும் இதில் குறைகள் இல்லாமல் இல்லை. இந்த உறையை அணிந்து கொண்டு இணைவிழைச்சு புரியுங்கால் சில பெண்கள் எரிச்சலை[54] உணர்கின்றனர். இதைத் தக்க முறையில் வழுக்கிடு பொருளைப் பயன்படுத்தித் தவிர்த்துக் கொள்ளலாம். இம்முறையில் இன்னொரு முக்கிய குறையுமுண்டு. ஆண்குறி விறைத்த நிலையில்தான் இவ்வுறையை அணிந்து கொள்ள முடியும். இதனால் இணைவிழைச்சு சிறிது நேரம் தடைப்படுகின்றது. சிலரிடம் இஃது அவர்கள் மனநிலையைப் பாதித்து இணைவிழைச்சுத் திறனையும் இணைவிழைச்சுத் துலங்கலையும்[55] கெடுத்து விடுவதாகச் சொல்லுகின்றனர். ஆண்தன்மை[56] குறைவாகவுள்ளவர்கட்கு இஃது பெருஞ் சங்கடமாக இருக்கும் என்பதை எடுத்துரைக்க வேண்டியதில்லை. தவிரவும், உறையை அணிந்து கொள்வதால் ஆண்குறியும் பெண்குறியும் நேரான தொடர்பு கொள்வதில்லை. இதனால் இருபாலரும் குறிகள் மோதுவதால் ஏற்படும் ஊற்றின்பத்தை இழக்க நேடுகின்றது.

பொதுவாக மேற்கூறிய ஆண் முறைகளில் இரண்டு குறைகள் இருப்பது தெரியவரும். இடையீட்டு இணைவிழைச்சும் உறையைப் பயன்படுத்திப் புணரும் முறையும் விந்துப் பாய்மம் பெண் உறுப்புப் பாதையில் பாய்வதைத்

---

54. எரிச்சல்-Irritation
55. துலங்கல்-Response
56. ஆண் தன்மை-Potency

தடுக்கின்றன. இந்தப் பாய்மத்தைப் பெண்ணின் யோனி வாய் உறிஞ்சுவதால் பெண்ணுக்கு ஏற்படக் கூடிய உடல் பற்றிய நன்மை இம்முறைகளைக் கையாளுவதால் பெண்ணுக்கு இல்லாமல் போகின்றது; இஃது ஒரு குறை. இரண்டாவதாக, ஒரு பெண் கருத்தரியாப் பாதுகாப்பைப் பெற வேண்டுமாயின் இம்முறையில் அவள் ஆண்களை நம்பியே இருக்க வேண்டும். ஆண்கள் அசட்டையாகவோ அல்லது கவனக் குறைவாகவோ இருந்து விட்டால், அவளுக்கு இப்பாது காப்பு இல்லாது போய்விடும். பெரும் பாலும் குடும்பப் பொறுப்பில் பெண்களே அதிகக் கவனம் செலுத்துவார்களாதலின், குடும்பக் கட்டுப்பாட்டு முறை களிலும் பெண்களே பொறுப்பு ஏற்கக் கூடிய முறைகளைக் கையாளுவது நன்று. இனி, 'பெண் முறைகளை'ப் பற்றி அடுத்த கடிதத்தில் சற்றுவிரிவாக எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 24

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

பெண் முறைகளின் நோக்கம்: விந்துப் பாய்மம் யோனி வாயிலினுள் நுழையாமல் தவிர்ப்பதே 'ஆண் முறைகளின்' நோக்கம் ஆகும் என்பதை நீ நன்கு அறிவாய். ஆனால், துடிப்புடன் கூடிய விந்தணுக்களை யோனிக் குழலில் செலுத்தி விடுவதனால் மட்டிலும் ஒரு பெண் கருப்பம் உறுவதற்குப் போதுமானதன்று என்பதும் உனக்குத் தெரியும்; விந்தணுக்கள் கருப்பையினுள் சென்று, அங்கிருந்து கருக் குழல்களை அடைந்து அங்கு அவை முட்டையினைச் சந்திக்க வேண்டும் என்று முன்னரே விளக்கியுள்ளேன் அல்லவா? விந்தணுக்கள் யோனிக் குழலிலிருந்து கருப்பையினுள் நுழையாமல் தவிர்ப்பதே 'பெண் முறைகளின்' நோக்கம் ஆகும் என்பதை ஈண்டுக் குறிப்பிட வேண்டும். வேதியியல் முறைகள், பொறி நுட்ப முறைகள் எனப் பெண் முறைகள் இருவகைப்படும். ஆனால், இந்த முறைகள் இரண்டும் இணைந்த நிலையிலே நடைமுறையில் கையாளப் பெறுகின்றன.

'டூஷ்' முறை: இன்று எங்கனும் பெரு வழக்கிலிருக்கும் முறை "டூஷ்" முறை என்ற வேதியியல் முறையாகும். புணர்ச்சிக்குப் பின்னர் பெண்ணின் யோனிக் குழலிலிருக்கும் விந்துப் பாய்மத்தை அகற்றுவதே இம்முறையின் தத்துவமாகும். கருப்பையினுள் நுழைவதற்கு முன்னர் எல்லா விந்தணுக்களையும் "டூஷ்" முறையினால் நீக்கிவிட்டால் அல்லது அழித்துவிட்டால் கருப்பம் ஏற்படாது. "டூஷ்" செய்யும் நீருடன் புரைமுறி[57] மருந்துகளைக் கலந்து விட்டால் இம் முறை இன்னும் நன்கு பாதுகாப்பளிக்கும்; இதனால் விந்தணுக்கள் அழிக்கப்பெறுகின்றன. ஆனால் சாதாரணமாக, சோப்பு நீரே போதும் என்று அநுபவமிக்க

---

57. புரைமுறி—Antiseptics

மருத்துவர்கள் கருதுகின்றனர். விளம்பரம் செய்யப்பெறும் வணிகப் பொருள்கள் சில சமயம் தீங்கு பயக்கலாம் என்பது அவர்களின் கருத்தாகும்.

புணர்ச்சிக்குப் பிறகு எவ்வளவு நேரத்திற்குள் "டூஷ்" செய்து கொள்ள வேண்டும் என்று நீ வினவலாம். விந்தணுக்கள் எட்டு நிமிடங்களில் ஓர் அங்குல தூரம் நகர்ந்து செல்லுகின்றன என்று ஏற்கெனவே குறிப்பிட்டிருப்பதை நினைவு கூர்வாயாக. புணர்ச்சியின் பொழுது விந்தணுக்கள் கருப்பையினுள் நுழையாவிடினும் ஒரு சில நிமிட நேரத்தில் அவை நுழைதல் கூடும். 'ஆகவே' புணர்ச்சி முற்றுப் பெற்ற ஐந்து நிமிட நேரத்திற்குள் "டூஷ்" செய்துகொள்ள வேண்டும். படுத்த நிலையிலும் உட்கார்ந்த நிலையிலும் இம் முறையை மேற் கொள்ளலாம் என்றாலும், உட்கார்ந்த நிலையிலேயே செய்து கொள்ளுதல் மிகவும் நன்று. நீருள்ள பையைச் சற்று உயரத்தில் (நாம் நிற்கும் அளவு உயரத்தில்) வைத்து விட்டால் அது தேவையான அளவு நீர் அமுக்கத்தைத் தருகின்றது. குழலின் மூக்கை[58] யோனிக்குழலினுள் சுமார் மூன்று அங்குல ஆழத்திற்குச் செருகிக்கொண்டு நீரைச் செலுத்த வேண்டும். நீர் பெண் உறுப்பினுள் பாய்ந்து கொண்டிருக்கும் பொழுது பெண், யோனியின் வெளிப்புறச் சுவர்களைச் சுருக்கிக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும்; பெண் உறுப்பின் உதடுகளைத் தன்னுடைய விரல்களால் அமுக்கியும் தளர்த்தியும் பிசைந்து கொண்டேயிருந்தால், யோனிக்குழல் நன்றாக விரிந்து நீர் நன்றாகப் பாய்ந்து வெளியேறும்; உட்புறமும் நன்றாகக் கழுவப் பெறும்.

"டூஷ்" செய்வதற்கென இரண்டு வகையான கருவியமைப்புகள் கிடைக்கின்றன. மேற்குறிப்பிட்ட இரப்பர்ப் பையையும் குழாய் மூக்கையும் கொண்ட அமைப்பு ஒன்று; மற்றொன்று, பீச்சாங்குழல் அமைப்பினைக் கொண்ட இரப்பர்க் குமிழாகும். இரண்டிலும் பயன்படுத்தப் பெறும்

58. குழலின் மூக்கு—Nozzle

கருவியமைப்புகள் நீளத்திலும், கனத்திலும் வடிவ அமைப்பிலும் பலவகையாக உள்ளன. ஆனால், மேற்குறிப்பிட்ட இரப்பர்ப்பை—குழாய் மூக்கு அமைப்பினைக் கொண்ட கருவியே—எங்கனும் பெரு வழக்காக உள்ளது. இதனால் யாதொரு தீங்கும் நேரிடுவதில்லை:

''டூஷ்'' முறையினை மட்டிலும் கையாண்டு கருவுறுதலைத் தடுக்க முடியும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. இதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. ஆண் குறியினின்றும் விந்து வெளியேறினதும், விந்தணுக்கள் கருப்பையினுள் நுழைவதற்கு வாய்ப்பு உள்ளது. புணர்ச்சி முற்றுப் பெற்றதும், கருப்பையில் ஒருவித உறிஞ்சுதல்[59] ஏற்பட்டு அதனால் சிறிதளவு விந்து உள்ளே நுழைகின்றது என்று சிலர் கருதுகின்றனர்: ஆனால், அஃது இன்னும் மெய்ப்பிக்கப் பெறவில்லை. ''டூஷ்'' முறை யோனிக் குழலிலுள்ள விந்துவை அகற்றுமேயன்றி, கருப்பை வாயினுள்[60] புகுந்த விந்தணுக்களை ஒன்றும் செய்ய முடியாது. மேலும் யோனிக் குழலின் சுவர்களும் வழுவழுப்பாக இல்லை; அவை எண்ணற்ற மடிப்புகளாக அமைந்துள்ளன: ஆகவே, யோனிக் குழலை நன்கு விரித்துச் செவ்வையாகக் கழுவாத வரை ஒரு சில விந்தணுக்கள் இந்த மடிப்புகளினுள் தங்கி ''டூஷ்'' திரவத்தினால் பாதிக்கப்பெறுமல் இருக்கஏதுவுண்டு: சில பெண்மணிகள் அதிக நேரம் திருப்தியாக ''டூஷ்'' செய்து கொண்டாலும் இம்முறையினால் ஏற்படும் தோல்வியின் சதவிகிதம் அதிகமாகவே உள்ளது. எனவே, இம்முறையை முற்றிலும் நம்பத் தகுந்த முறையாகக் கொள்வதற்கில்லை.

இம்முறையை மேற்கொள்ளத் கூடாதென்பதற்கு இன்னொரு காரணமும் உள்ளது: புணர்ச்சி முடிந்தவுடன் டூஷ் செய்துகொள்ள வேண்டியிருப்பது மிகவும் விரும்பத் தக்கதன்று. புணர்ச்சிக்குப் பின்னர் சிறிது ஓய்வும் உடலை நெகிழ

---

59: உறிஞ்சுதல்--Suction

60: கருப்பை வாய்—Cervix

விட்டு இளைப்பாறுதலும் மிகவும் இன்றியமையாதவை: உடனே டூஷ் செய்துகொள்ள வேண்டிய இன்றியமையாமை இந்த ஓய்வினைக் குலைக்கின்றது. ஆகவே, "டூஷ்" முறை ஏனைய முறைகளுக்கு ஒரு துணைமுறையாகவோ, அன்றி தேவையானபொழுது அவசர முறையாகவோதான் பயன் படுத்தப்பெறுகின்றது.

கருத்தடை மருந்துகளைப் பயன்படுத்தும் முறை: வேதியி யல் முறைகளில் மற்றொருமுறை கருத்தடை மருந்து வகை களைப்[61] பயன்படுத்துவதாகும். இந்த மருந்து வகைகளிலும் புணர்ச்சிக்கு முன்னர் பெண்ணின் யோனிக் குழலினுள் வைக்கக் கூடிய மருந்தே மிகவும் நம்பத் தகுந்தது. இதற் கெனத் தயாரிக்கப்பெறும் மருந்து உருளை வடிவ மருந் தடைப்புகளாகவும்[62] மாத்திரைகளாகவும் பவுடர்களாக வும், பாகுப் பொருளாகவும் பசையாகவும்[63] கிடைக்கின் றன. இந்த மருந்துகள் யாவும் ஒரு குறிப்பிட்ட வேதியியற் கூட்டுப் பொருள்கள்[64] அடங்கிய பல்வேறு அடிப்படைப் பொருள்களாலானவை. யோனிக் குழலில் இவை கரைந்து யோனிக் குழலின் சுவர்கள் முழுவதும் கருக்குழலின் வாயி லும் பரவி ஒருவித படலமாக அமைந்து விந்தணுக்கள் உள் நுழையாமல் தடை செய்கின்றன. மேலும், வேதியியற் பொருள்கள் விந்தணுக்களின் இயக்கத்தைத் தடுத்து அவற் றைச் செயற்படாது செய்கின்றன. இனி, இப்பொருள் களைப்பற்றிச் சில சொற்கள் கூறுவேன்.

ஒன்று அல்லது ஒன்றுக்குமேற்பட்ட வேதியியற் கூட்டுப் பொருள்கள் கோக்கோ வெண்ணெய்[65] ஊன் பசைபோன்ற ஏதாவது ஓர் அடிப்படைப் பொருளினுள் வைக்கப்பெற்று

---

61. கருத்தடை மருந்துவகைகள் Contraceptiues
62. உருளை வடிவ மருந்தடைப்புகள்-Suppositories
63. பசை-Cream
64. வேதியியற்கூட்டுப் பொருள்கள்-Chemical compounds
65. கொக்கோ வெண்ணெய்-Cocoa butter

உருளை வடிவமான மருந்தடைப்புகள் செய்யப்பெறுகின்றன. இந்த அடிப்படைப் பொருள்கள் சாதாரண வெப்ப நிலையில் திடப் பொருள்களாகவும், உடலின் வெப்பநிலையில் உருகக் கூடியனவாகவும் உள்ளன. இந்த மருந்தடைப்பினை யோனிக் குழலில் செருகிக் கொண்டால் அது கரைந்து தன்னுடைய வேதியியற் கூட்டுப் பொருள்களை விடுவிக்கும். அடிப்படைப் பொருள் உருகியதும் அஃது எண்ணெய் அல்லது ஊன்பசை[66] போன்ற படலத்தைக் கருப்பையின் வாயில் உண்டாக்கி விந்தணுக்கள் உட்புகாதவாறு ஒருவித அரணாக அமைகின்றன. அப்பொழுது விடுவிக்கப்பெறும் வேதியியற் கூட்டுப் பொருள்கள் விந்தணுக்களை அசையா நிலைக்கு உட்படுத்துகின்றன. எனவே, இந்த மருந்தடைப்பு திறனுடையதாக அமைய வேண்டுமாயின் அஃது உடனே கரைதல் வேண்டும். ஆனால், நடைமுறையில் அஃது அங்ஙனம் கரைவதில்லை. சில சமயம் செருகி அரைமணி நேரம் ஆனபிறகு கூட மருந்தடைப்புகள் உருகாது அப்படியே இருக்கின்றன. அவை உருகினாலும், அவை கருப்பையின் வாயிலை மூடிக்கொள்வதில்லை. புணர்ச்சி முடிவுற்ற மிக விரைவில் விந்தணுக்கள் கருப்பையினுள் நுழைந்ததாகக் காணப்பெறுவதால் இம்மருந்தடைப்புகளால் பயன் இல்லை என்பது வெளிப்படையாகப் புலனாகின்றது. எனவே, இவ்வகை மருந்துகள் நம்பத் தகுந்தனவாக இல்லை. மேலும், அவை உருகும் பொழுது அதிகமான வழுவழுப்புத் தன்மையை உண்டாக்குவதால் அவற்றைப் பெரும்பாலோர் வெறுத்தொதுக்குகின்றனர். அமெரிக்கா போன்ற நாடுகளிலும் பல்வேறு வகைப் பொருள்களை வணிகர்கள் விளம்பரம் செய்து விற்கின்றனர். எதிர்காலத்தில் நல்ல முறையில் இவ்வகை மருந்துகள் அமையலாம்.

மாத்திரைகளிலும் பவுடர்களிலும் குறைகள் இல்லாமல் இல்லை. மாத்திரைகள் கரைந்து ஒருவித வாயுவை விடுவிப்பதோடன்றி, யோனிக்குழலினுள் ஒருவித நுரையையும்

---

66. ஊன்பசை—Gelatin

உண்டாக்குகின்றன. இந்நுரை வேதியியல் கருத்தடைக் கருவி போலவும் பொறி நுட்பக் கருத்தடைக் கருவி போல வும் அமைகின்றது. மாத்திரைகள் கரைவதற்குச் சிறிதளவு ஈரம் தேவை; சாதாரணமாக யோனிக் குழலிலுள்ள ஈரம் இதற்குப் போதாது. ஆதலால், செருகப்பட்ட மாத்திரை அரைமணி நேரம் கழிந்தபிறகும் கரையாதிருக்கின்றது. இதனால் இது புணர்ச்சிக்கு ஐந்து நிமிடங்களுக்கு முன்னர் நீரில் நனைத்துச் செருகப் பெறுகின்றது சில சமயம் இம் மாத்திரை கரைந்து நுரையினை உண்டாக்கினாலும் அது விரைவில் காய்ந்து விடுகின்றது; அதனால் யாதொரு பயனு மின்றிப் போகின்றது. பவுடர்களும் சில சமயம் கரையத் தவறுகின்றன; தவிரவும், அவை விரைவில் யோனிக்குழலின் சுவர்களில் ஒட்டிக் காய்ந்து அசௌகர்யத்தை உண்டாக்கு கின்றன.

வேதியியற் கருத்தடைப் பொருள்களில் பாகுப் பொருளும் பசைப் பொருளும் சிறந்தவை. அவை ஏற்கெனவே அரை திடப் பொருளாகவோ பாகு நிலையிலோ, அல்லது பசை நிலையிலோ இருப்பதால், உருக வேண்டிய அவசியமோ கரையவேண்டிய நிலையோ அவற்றிற்கு இல்லை. தவிரவும், அவை யோனிக் குழலிலும் கருப்பையின் வாயிலிலும் எளிதாகப் பரவுகின்றன. பெரும் பாலும் அவை பிரத்தியேகமான மூக்கினைக் கொண்ட எளி தில் நசுங்கக் கூடிய குழல்களில் அடைக்கப்பெற்றிருக்கும்; மூக்கினை யோனிக்குழலில் செருகிக் குழலை அழுத்தினால், அல்லது குழலின் அடியிலுள்ள சாவியைத் திருகினால் பாகுப் பொருளின் ஒரு பகுதி யோனிக் குழலில் செலுத்தப்பெறும். ஒரு குறிப்பிட்ட அளவு பாகுப்பொருளை யோனிக் குழலி னுள் செலுத்தக்கூடிய பிரத்தியேகமான குழல்களும் (Applicators) உள்ளன. இன்று தயாரிக்கப்பெறும் பாகுப்பொரு ளோ அல்லது பசைப் பொருளோ முற்றிலும் நம்பக் கூடிய தாக இல்லை. ஆயினும், நாள்தோறும் மிகச் சிறந்த பொருள் களை உற்பத்தி செய்துகொண்டேயுள்ளனர். மேலும் பாகுப் பொருள்கள் சிலசமயம் அதிகமாக வழுக்கிடு நிலையை உண்

டாக்குவதாலும் யோனிக் குழலினின்றும் ஒழுகுவதாலும் அவைகவினுடன் பயன்படுத்துவதற்குத் தடையாகஉள்ளன!

அண்மையில் 'நுரைப் பவுடர்'[67] என்ற ஒருவகை வேதியியல் கருத்தடைப் பொருள் தயாரிக்கப்பெற்றுள்ளது. இந்தப் பவுடர் சிறிதளவு கடற்பஞ்சுடன் சேர்த்துப் பயன்படுத்தப் பெறுகின்றது. இந்தப் பவுடரில் உள்ள நுரை தரும் பொருள் ஈரத்திலும் உராய்விலும் நுரையினைத்தருகின்றது. முதலில் கடற்பஞ்சு ஈரமாக்கப்பெற்று அதில் சிறிதளவு பவுடர் தூவப்பெறுகின்றது; பிறகு அது விரல்களால் நல்ல நுரை வரும் வரை நன்கு பிசையப்பெறுகின்றது. இந்நிலையில் அது யோனிக்குழலினுள் செருகப்பெறுகின்றது இந்த நுரை விந்தணுக்களின் இயக்கத்தைத் தடுக்கும் வேதியியல் அரணாகவும் பொறி நுட்ப அரணாகவும் அமைகின்றது. இம்முறை மிகவும் எளிதாகக் கையாளப் பெறலாம்; செலவும் குறைவு: ஆனால், இது முற்றிலும் நம்பத் தகுந்த முறை என்பது இன்னும் உறுதிப்படுத்தப்பெறவில்லை. சிலருக்கு இஃது இழையங்களில் எரிச்சலை விளைவிக்கின்றதாகச் சொல்லப் பெறுகின்றது.

பொதுவாக வேதியியல் கருத்தடை மருந்துகள் தீங்கினை விளைவிப்பதில்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட மருந்து மிகத் தீவிரமாக இருந்தாலும், சில பெண்களுக்கு இவை ஒத்துக் கொள்ளாதிருக்கும்பொழுதும், இவை இழையங்கட்கு எரிச்சலைவிளைவிக்கின்றன. ஆகவே, கருத்தடை மருந்துகளாகப் பயன்படுத்தப்பெறும் வேதியியற் பொருள்கள் அதிக அடர்வுள்ளனவாக[68] இருத்தல் ஆகாது. பொதுவாக இன்று தயாரிக்கப்பெற்று விற்கப்பெறும் மருந்துகள் யாவும் நம்பத் தகுந்தவை என்றும், ஏற்கக்கூடியவை என்றும் சொல்வதற்கில்லை; எதிர்காலத்தில் இவை மிகவும்மேம்பாடு அடையலாம் என்ற நம்பிக்கை இருந்து வருகின்றது.

67. நுரைப்பவுடர்-Foam powder
68. அடர்வு—Concentration

பொறிநுட்பக் கருத்தடை முறைகள்: இனி, பொறிநுட்பக்[69] கருத்தடை முறைகளைப்பற்றிச் சிறிது கூறுவேன். பொறிநுட்ப அமைப்புக் கருவிகளைக்கொண்டு விந்தணுக்கள் யோனிக் குழலினின்றும் கருப்பையின் வாயினை அடையாமல் தடுப்பதே இம் முறைகளின் நோக்கமாகும். இந்த அமைப்புக் கருவிகள் கருப்பையின் நுழைவாயிலை மூடிக்கொண்டு பொறிநுட்ப அரணாக அமைகின்றன. அவை பல்வேறு பொருள்களால் பல்வேறு வகை வடிவங்களிலும் அளவுகளிலும் செய்யப் பெறுகின்றன.

பெண்ணுறையை அணிதல்: ஆண் உறை எந்த நோக்கத்திற்காக ஆண்களால் பயன்படுத்தப் பெறுகின்றதோ அதே நோக்கத்திற்காகவே பெண்கள் பயன்படுத்துவதற்கென்று தயாரிக்கப் பெற்ற உறையே ''பெண் உறை''[70] எனப்படும். இந்த உறை மெதுவான இரப்பரால் செய்யப் பெற்றது; விளிம்பைச் சுற்றிலும் வளையக்கூடிய சுருள் கம்பியைக் கொண்டது; அரைக்கோள வடிவினையுடையது. இந்த உறையின் குறுக்களவு இரண்டு அங்குலத்திலிருந்து நான்கு அங்குலம் வரையிலும் வீச்சினைக் கொண்டது. இருபதிற்கு மேற்பட்ட அளவு உறைகள் வழக்கிலுள்ளன. பிறப்புறுப்புச் சோதனை செய்யாது ஒரு பெண்ணுக்கு எந்த அளவு உறை பொருந்தும் என்று சொல்லுவது இயலாது. இடுப்பெலும்புக் கட்டமைப்பில் பெண்ணுக்குப் பெண் அதிக மாறுபாடுகள் இருப்பதால் ஒருவருக்குப் பொருந்தும் உறை இன்னொருவருக்குப் பொருந்தும் என்று கூறமுடியாது. ஒருவர் கண்ணுக்குப் பொருந்தக்கூடி மூக்குக் கண்ணாடி இன்னொருவருக்குப் பொருந்தாதல்லவா? அது போலவே இதுவும்.

பெண் உறை பெண்ணின் யோனிக்குழலின் குறுக்கே வைப்பதற்கேற்றவாறு செய்யப்பெற்றுள்ளது கருப்பையின் வாய்க்கும் யோனிக்குழலின் வெளிப்பகுதிக்கும் இடையே இக் கருவியின் இரப்பர் திரைபோல் அமைந்திருப்பதால்

---

69. பொறிநுட்ப—Mechanical
70. பெண் உறை—Diaphragm

புணர்ச்சியின் பொழுது வெளிப்பகுதியில் சிந்தும் விந்துப் பாய்மம் கருப்பையினுள் செல்லாமல் தடை செய்யப்பெறு கின்றது. இதனால் விந்தணு முட்டையணுவை அணுக இய லாததால் கருவுறல் தவிர்க்கப்பெறுகின்றது. பெரும்பாலும் இவ்வுறை கருத்தடைப் பசையுடன்தான் பயன்படுத்தப் பெறும். இதனால் வழுவழுப்புத் தன்மை ஏற்படுவதுடன் கருத்தடை முறையும் உறுதியாக அமைந்து விடுகின்றது.

மருத்துவர் சோதனை செய்து உறையைத் தேர்ந்தெடுத்த பின்னர், உறையை அணிந்துகொள்வதையும், அகற்றுவதை யும் ஒரு பெண் எளிதாகக் கற்றுக்கொள்ளலாம். உறையை அணிவதற்கு முன்னர் அரை தேக்கரண்டி அளவு கருத் தடைப் பாருப்பொருளை அல்லது பசையை எடுத்து உறை யின் உட்புறம், வெளிப்புறம், விளிம்பு ஆகிய எல்லாப் பாகங்களிலும் நன்கு தடவவேண்டும் இவ்வாறு செய்வ தால் உறையைச் செருகுவது எளிதாக இருப்பதுடன் வேதி யியல் முறையில் பாதுகாப்பும் ஏற்படுகின்றது. அதன் பிறகு உறை யோனிக் குழலினுள் செருகப்பெறுகின்றது. இவ் வாறு செய்வதில் விரல்களையே பயன்படுத்திக் கொள்ளலாம்; அல்லது பிரத்தியோகமாகச் செய்யப்பெற்ற செருகு கருவி யினை[71] வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். உறையைச் சரியாக அணிந்துகொண்ட பின்னர் அது யோனிக் குழலின் குறுக்கே ஓர் இரப்பர்த் திரைபோல் பொருந்திக் கருப்பை யின் வாயினையும் அதிலுள்ள துளையினையும் நன்றாக மூடிக் கொண்டுள்ளதா என்பதை விரலால் தொட்டுப் பார்த்து அறிந்துகொள்ளலாம்.

சாதாரணமாக உறையைப் படுக்கப்போவதற்கு முன்ன தாகவோ, அன்றி புணர்ச்சிக்குச் சற்று முன்னதாகவோ அணிந்துகொள்ளலாம்; புணர்ச்சிக்குப்பின்னர் உறை எவ்வ ளவு நேரம் அப்படியே இருக்கலாம் என்பது உறையை அணிந்துகொண்டிருக்கும் பெண்ணின் செளகரியத்தைப்

---

71. செருகு கருவி—Inserter

பொருத்தது. அவள் விரும்பினால் உறையை உடனே அகற்றி விடலாம்; அல்லது அடுத்த நாள் காலைவரை எடுக்காதும் விட்டுவிடலாம். இணைவிழைச்சிற்குப் பிறகு உடனே உறையை எடுக்க நேரிட்டால் உறையை எடுப்பதற்கு முன்னரும், அதனை அகற்றிய பின்னரும். "டூஷ்" செய்து யோனிக் குழலை விந்துப் பாய்மமின்றி நன்கு கழுவிக் கொள்ள வேண்டும். இதற்கு இளஞ் சூடான நீர் அல்லது சோப்புக் கலந்த நீர் போதுமானது. புணர்ச்சிக்குப் பின்னர் 8 மணி நேரம் உறை உள்ளேயே இருந்தால் நலம்; அதற்குப் பின்னர் அகற்றினால் "டூஷ்" செய்துகொள்ள வேண்டிய இன்றியமையாமை இல்லை. ஆனால், 24 மணிக்கு மேல் எக்காரணத்தைக் கொண்டும் உறையை அகற்றாமல் வைத்திருத்தல் ஆகாது. உறையை அணிந்து கொள்ளும் முறையினையும் அதனை அகற்றும் முறையினையும் பயிற்சி பெற்ற மருத்துவரை அண்மி நன்கு அறிந்துகொள்ள வேண்டும்.

உறையை அகற்றிய பின்னர் சோப்பு கரைந்த வெது வெதுப்பான நீரைக்கொண்டு உறையினை நன்கு கழுவி உலர வைக்கவேண்டும். பிறகு அதில் மணமுள்ள பவுடரைத் தடவிப் பெட்டிக்குள் பாதுகாப்பாக வைக்க வேண்டும். உறையைப் பயன்படுத்துவதற்கு முன்னர் ஒவ்வொரு தடவையும் அது பழுதுபட்டதா, அன்றா என்பதைப் பகலவன் ஒளியில் வைத்துக் காணல் வேண்டும். எண்ணெய் வாஸலைன் போன்ற களிம்புகள் உறையின் மீது படுதல் கூடாது. தக்க முறையில் உறைபாதுகாக்கப் பெற்றால் அதனை ஆறு தினங்களிலிருந்து இரண்டாண்டுகள் வரை நன்குப் பயன்படுத்தலாம்.

உறையை அணியக் கற்றுக்கொண்ட ஒரு வாரத்திற்குப் பின்னர் மருத்துவர் மீண்டும் பெண் சரியாக உறையை அணிந்து கொள்ளுகின்றாளா என்பதைச் சரி பார்க்கவேண்டும். அதன் பிறகு ஆண்டுக்கொரு முறை அவளைப் பார்த்தால் போதுமானது. குழந்தைப் பேற்றிற்குப் பிறகோ அல்லது பிறப்புறுப்பில் ஏற்பட்ட அறுவை சிகிச்சைக்குப் பின்னரோ பெண் மீண்டும் ஒரு முறை மருத்துவரின்

சோதனைக்கு உட்பட்டுப் புதிய உறையை அணிந்துகொள்ள வேண்டும்.

இன்று வழக்கிலுள்ள முறைகளில் இது மிகவும் நம்பத் தகுந்தது; திருப்தியளிக்கக் கூடியது. உறை கருப்பையின் வாயிலில் ஒரு திரைபோல் அமைந்து விந்துப் பாய்மம் உள்ளே நுழையாமற் பாதுகாப்பு அளிப்பதுடன், ஆண் குறியும் யோனிக் குழலின் சுவர்களும் நேர்த் தொடர்பு கொண்டு ஊற்றின்பம் குலையாதிருக்கும் வாய்ப்பினையும் நல்குகின்றது. சரியான அளவுள்ள உறையினை மட்டிலும் தேர்ந்தெடுத்துத் தக்க முறையில் அணிந்து கொண்டு விட்டால் பெண் குறியில் உறை இருப்பதுபற்றிய நினைவுகூட இருவருக்கும் இல்லாது போகும். மேலும், புணர்ச்சிக்கு நீண்ட நேரத்திற்கு முன்னரே இதனை அணிந்து கொள்ளக் கூடுமாதலின் அடுத்து வரும் இணைவிழைச்சின் செயலுக்கு எவ்வாற்றானும் இஃது இடைஞ்சலாக இருப்பதில்லை.

கருவாய்க் குல்லாய்களை அணிதல்: பெண் உறையைப் பயன்படுத்த விரும்பாதவர்கட்குச் சில சமயம் கருவாய்க் குல்லாய்கள்[72] சிபாரிசு செய்யப்பெறுகின்றன. இந்தக் குல்லாய் அது நேராகக் கருப்பையின் கழுத்திற்கு மேற்புறமாகப் பொருந்துமாறு அமைக்கப் பெறுகின்றது; குல்லாயும் அதன் மீது மிகச் செளகரியமாகப் பொருந்துகின்றது; சாதாரணமாக இக் குல்லாய்கள் இரப்பரினால்தான் செய்யப் பெறுகின்றன. மருத்துவர் சரியான குல்லாயைத் தேர்ந்தெடுத்த பிறகு அதனைச் செருகுவதற்கும் அகற்றுவதற்கும் உரிய வழிகளைப் பெண்ணுக்குக் கற்றுக் கொடுக்கின்றார். பெண் உறையைப் போலவே தேவையானபோது இதனைப் பெண் செருகிக் கொள்ளுகின்றாள்; மறுநாள் காலைவரை அதனை அப்படியே இருக்கவிட்டும் வைக்கின்றாள்.

அண்மைக் காலத்தில் உலோகம் அல்லது பிளாஸ்டிக்கினால் செய்யப்பெற்ற கருவாய்க் குல்லாய்கள் எங்கணும் பெருவழக்கிலிருந்து வருகின்றன; இவ்வகைக் குல்லாய்கள் போருக்கு முன்னர் ஐரோப்பாவில் செல்வாக்குடனிருந்தன.

---

72. கருவாய்க் குல்லாய்கள்—Cervical caps

செருமனி, ஆஸ்திரியா, இரஷ்யா போன்ற நாடுகளிலுள்ள மருத்துவ நிலையங்களில் இவை மிகவும் சிபாரிசு செய்யப் பெற்றன. இவற்றால் ஒரே ஒரு நன்மையுண்டு. இவ்வகைக் குல்லாயை ஒரு முறை அணிந்துகொண்ட பெண் பல நாட்கள் வரை—மாதவிடாய் வட்டக்காலம் முழுவதிலும்—அதனை எடுக்காது விட்டு வைக்கலாம். எனினும், அவை ஒரு சிலருக்கே பொருத்தமானவை; இவ்வகைக் குல்லாயை அணிந்து கொண்ட பெண்ணையும் அடிக்கடிச் சோதித்து எரிச்சல் ஏதாவது உள்ளதா என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

மேற்கூறிய முறைகளேயன்றி மேலும் சில முறைகள் உள்ளன. அவற்றை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 25

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே யாகுக.

உயிரியல் முறைகள்: கருத்தடை முறைகளில் சில 'உயிரியல் முறைகள்'[73] உள்ளன; அவை யாவும் இன்னும் சோதனை நிலையிலேயே உள்ளன. எதிர்காலத்தில் கருத்தடை முறைகளின் முன்னேற்றம் இத்துறையில்தான் அமையும் என்று மருத்துவ அறிஞர்கள் கருதுகின்றனர் உயிரியல் முறைகளில் ஒன்று "கூடுபருவ" முறையாகும். இதனைப் பற்றி முன்னர் விளக்கியுள்ளேன்.[74] மற்றொரு முறை காமச் சுரப்பிகளை[75] வெப்பத்திற்கோ அல்லது புதிர்க் கதிர்களுக்கோ உட்படுத்துவதாகும்; இது விந்தணுக்கள் அல்லது முட்டையணு உற்பத்தியைப் பாதிக்கின்றது. எடுத்துக்காட்டாக, ஆணின் விரைகள் வெப்பநிலை மாற்றங்கட்கு மிகவும் உணர்வுடையவை; அவற்றின்மீது வெப்பம் படுமாறு செய்யப்பெற்றால் விந்தணுக்களின் உற்பத்திச் செயல் மிகவும் குறிப்பிடத்தக்க முறையில் குறைந்து போகின்றது. பிராணிகளைப் பொறுத்தவரை விரைப்பையின்மீது வெந்நீர், சூடான காற்று அல்லது மின்விளக்கு ஆகியன படுமாறு செய்தால் அவற்றிடம் பல வாரங்கள் வரை விந்தணுக்கள் உற்பத்தித் தடைப்படுகின்றது. இம்முறை சோதனைக்காகச் சில மனிதர்களிடம் செய்யப்பெற்றுள்ளது. மேலும், சில ஆராய்ச்சிகட்குப் பிறகு இம்முறை ஒரு தகுதியான கருத்தடைமுறையாக வளர்தல் கூடும்.

காமச் சுரப்பிகளைப் புதிர்க்கதிர்கட்கு உட்படுத்துதல்: ஆணின் விரைகளையும் பெண்ணின் சூற்பைகளையும் புதிர்க்

73. உயிரியல் முறைகள்—Biological methods

74. இந்நூல்—பக்கம்(253-255)

75. காமச் சுரப்பிகள்—Sex glands

கதிர்கள் படுமாறு செய்தால் அவை முறையே விந்தணுக் களை உற்பத்தி செய்யும் திறனையும் முட்டையணுவை உற் பத்தி செய்யும் திறனையும் இழக்கின்றன. புதிர்க் கதிர்களின் அளவு, அவைப் படச் செய்யும் கால அளவு ஆகியவற்றைப் பொறுத்து இத்திறன் தற்காலிகமாகவோ, அன்றி நிரந்தர மாகவோ இல்லாதுபோய்விடும். ஆயினும், புதிர்க் கதிர்களைக் கருத்தடைக்குப் பயன்படுத்துவதில் குறிப்பிடத்தக்க விபத் துகள் உள்ளன இக்கதிர்கள் மிகக் கடுமையாகத் தாக்கி ஆணையோ அன்றிப் பெண்ணையோ நிரந்தர மலடாக்கிவிடு தல் கூடும்; அல்லது சிறிது காலத்திற்குப் பிறகு உண்டாகும் விந்தணுக்களும் முட்டையணுக்களும் சில குறைபாடுகளு டன் உற்பத்தி செய்யப்பெற்று எதிர்கால மரபு வழியினரின் வளர்ச்சியில் ஒரு சில நிரந்தரமான குறைகளையும் விளைவிக் கலாம்.

ஆண் விந்தணுக்களைப் பெண்ணின் இழையங்களில் குத் திப் புகுத்துவதன் மூலம் தற்காலிகமாகக் கருவுறாத நிலையை உண்டாக்குவதாகக் கண்டுள்ளனர். இரஷ்யாவிலும் தென் அமெரிக்க நாடுகளிலும் இம் முறையை மானிடப் பெண் களிடம் கையாண்டுள்ளனர். இதில் பல ஆராய்ச்சிகள் நடை பெற்று வருகின்றன. இம் முறை நம்பகமானது என்று உறு திப்படுத்துவதுடன் பெண்ணிற்கோ அல்லது அவளது எதிர் காலச் சந்ததியினருக்கோ யாதொரு தீங்கும் பயவாதிருக் கின்றதா என்பதையும் அறுதியிடல் வேண்டும். எதிர்காலத் தில் ஒரு சிறு ஊசி மூலமோ அல்லது ஒரு சில மாத்திரைகளை உண்ணுதலாலோ ஒரு பெண்ணை ஒரு குறிப்பிட்ட கால அளவு கருத்தரியாமல் செய்விக்க முடியும் என்பது சாத்தியப் படாமற் போகாது.

மேற்கூறியவற்றில் ஒரு சரியான கருத்தடை முறையைப் பற்றிச் சிந்திக்க முடிகின்றது. கருத்தடைமுறையினால் மனை விக்கோ அல்லது கணவனுக்கோ அல்லது அவர்களது குழந்தைகட்கோ யாதொரு தீங்கும் நேரிடக்கூடாது; அந்த முறை நம்பக்கூடியதாக இருத்தல்வேண்டும்; அது தக்க பாது

காப்பினையும் அளித்தல் வேண்டும். அம்முறை தனியாளின் தேவைகளனைத்தையும் திருப்தி செய்யவேண்டும்; எனவே கையாளப்பெறும் முறை எளிதாகவும், எவரும் கையாளக் கூடியதாகவும், அதிகச் செலவின்றியும், அருவருப்பின்றியும் இருத்தல் வேண்டும் என்றுகின்றது. இத்தகைய ஒருமுறையின் இன்றியமையாமையைப் பற்றி சிக்மண்ட் ஃபிராய்ட் என்ற உளவியலறிஞர் 1898–ஆம் ஆண்டிலேயே தன்னுடைய கட்டுரையொன்றில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய முறையொன்றினைக் கண்டறியும் அறிவியலுலகத்திற்கு எண்ணற்ற ஆண்களும் பெண்களும் கடமைப்பட்டிருப்பர் என்று அவர் கூறுகின்றார்.

அண்மைக்காலம் வரை இத்துறையில் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பெறவில்லை. சமூகம் இதை விரும்பாததாலும், சட்ட மூலம் அதிகக் கட்டுப்பாடு இருந்ததாலும் அறிவியலறிஞர்கள் இத்துறையில் கவனம் செலுத்தவில்லை; கடந்த முப்பதாண்டுகளாகத்தான் இத்துறையில் ஆய்வுகள் நடைபெற்றுவருகின்றன. எதிர்காலத்தில் தகுந்த உயிரியல் துறையொன்று கண்டறியப் பெறலாம் என்ற நம்பிக்கை இருக்கத்தான் செய்கின்றது.

அறுவை மருத்துவ முறை: தற்காலத்தில் புணர்ச்சிக்கும் புணரும் திறனுக்கும் யாதொரு தடையுமின்றி அறுவை மருத்துவ முறை மூலம் அல்லது புதிர்க்கதிர்கள்மூலம் ஒரு பெண்ணையோ ஆணையோ நிரந்தரமாக இனப்பெருக்கமின்றிச் செய்துவிடலாம்; ஆண்களிடம் விரைகளிலிருந்து விந்தணுக்கள் வெளிப்படும் பாதையிலும், பெண்களிடம் சூற்பைகளிலிருந்து முட்டையணு வரும்பாதையிலும் செயற்கை முறையில் ஒரு தடையை உண்டாக்குவதே இந்த அறுவை மருத்துவ முறையின் நோக்கமாகும்; ஆணிடம் விந்தேறு குழல்[78] அடைக்கப்பெறுகின்றது. விரைகளில் உற்பத்தியாகும் விந்தணுக்கள் விரைகளிலிருந்து இரு தொடைக்கும் இடையிலுள்ள பகுதிவழியாகச்சென்று பிறகு பின்புறமாகத்

78. விந்தேறு குழல்—Vas deferens

திரும்பிச் சிறுநீர்த் தாரையில் வந்து சேரும் விந்தேறு குழல் வழியாகச் செல்லுகின்றன என்பதை நீ நன்கு அறிவாய். இக்குழலை வெட்டினாலும் அல்லது கட்டிவிட்டாலும் விந்தணுக்கள் வெளியேற முடியாது. இந்த அறுவை முறை 'வாசெக்டமி'[79] என்று வழங்கப்பெறுகின்றது. விந்துப் பாய்மத்தின் பெரும்பகுதி விந்துப் பைகளிலிருந்தும் புராஸ்டேட் சுரப்பியிலிருந்தும் வருவதால், இந்த அறுவை முறைக்குப் பிறகும் புணர்ச்சியினால் வெளிப்படும் விந்துப் பாய்மம் சாதாரணமாக அளவிலும் முறையிலும் வழக்கம்போலவே வெளிப்படும். ஆனால், விந்துப் பாய்மத்தில் விந்தணுக்கள் இரா இந்த அறுவை மருத்துவ முறையை எளிதாகச் செய்து விடலாம். விரைப் பைகளிலும் தொடைகளினிடையிலும் இந்த விந்தேறு குழல் தோலின் மேற்பரப்பின் அருகிலிருப்பதால் இஃது எளிதாகின்றது. மயக்கமருந்தின்றி உணர்வு நீக்க முறையைக் கையாண்டு இது செய்யப்பெறுகின்றது. இது செய்யப்பெற்ற பிறகு ஒரு சில நாட்கள் ஓய்வு போதுமானது. இந்த முறையில் காமச் சுரப்பிகளுக்கு யாதொரு தீங்கும் நேரிடுவதில்லை.

பெண்களிடம் செய்யப்பெறும் இச் சிகிச்சை "சால்பின் ஜெக்டமி"[80] என்று வழங்கப்பெறுகின்றது. இதனையும் சிறிது விளக்குவேன். சூற்பைகளிலிருந்து கருப்பைக்கு வரும் கருக் குழல்களை நீ அறிவாயன்றோ? இக் குழல்களை வெட்டி விட்டால், அல்லது கட்டிவிட்டால், சூற்பைகளிலிருந்து முட்டையணு கருப்பைக்குள் வருதல் இயலாது; அங்ஙனமே, கருப்பையிலிருந்து கருக்குழலினுள் பாயும் விந்தணுக்களும் முட்டையை அணுக முடியாது. இத்தகைய அறுவை முறையைச் செய்வதற்குப் பெண்ணின் அடிவயிற்றைக் கிழித்துத் திறக்கவேண்டும்; பெண்ணும் மருத்துவமனையில் ஒன்று அல்லது இரண்டு வாரங்கள் ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்

79. வாசெக்டமி—Vasectomy

80. சால்பின் ஜெக்டமி—Salpingectomy

டும். ஆகவே, ஆண்களை மலடாக்குவதைவிடப் பெண்களை மலடாக்குவது சற்றுக் கடினமானது.

புதிர்க்கதிர்களைக் காமச் சுரப்பிகளின்மீது தாக்கும்படி செய்தும் மலடாக்கும் செயலை முற்றுவிக்கலாம். எனினும், இம்முறையை எச்சரிக்கையுடனேயே கையாளுதல் வேண்டும். இதன் விளைவுகள் நம்பத்தகாதவையாக இருப்பதுடன் பெண்களிடம் இது மிக்க இளமையிலேயே சூதக ஒய்வினையும்[81] உண்டாக்கி விடுகின்றது. எனவே, இம் முறை இன்று சூதக ஒய்வினை நெருங்கும் பெண்களுக்கு மட்டிலுமே கொள்ளப் பெறுகின்றது. வயிற்றைக் கிழிக்காமலேயே கருக் குழல்களை அடைக்கும் முறை இன்று கண்டறியப் பெற்றுள்ளது. ஒரு பிரத்தியேகமான கருவி யோனிக்குழல் வழியாகக் கருப்பையினுள் செருகப்பெற்று முதலில் ஒரு கருக்குழலையும் பிறகு மற்றொரு கருக் குழலையும் தொடுமாறு செய்யப்பெறுகின்றது. மின்னோட்டத்தைக் கொண்டு இந்தக் குழல்களின் வாயில்கள் அடைக்கப்பெறுகின்றன இந்த முறை இன்னும் நன்கு வளர்ச்சி பெறவில்லை.

எதிர்காலத்தில் திரும்பவும் குழந்தை வேண்டும் என்று கருதுகின்றவர்களிடம் வெட்டப்பெற்றகுழல்களைத் திரும்பவும் இணைக்கும் செயல் மீண்டும் அறுவை முறைமூலம் மேற்கொள்ளப்பெற்றது. பெரும்பாலோரிடம் இது வெற்றியளிக்கவில்லை. ஒரு தடவை குழல்களை வெட்டிவிட்டால் தனியாள் நிரந்தரமாகவே மலடாகி விடுகின்றார் என்றே கொள்ளவேண்டும்; எனவே, நிரந்தரமான மலடு வேண்டும் என்று கருதுகின்றவர்களே அறுவை மருத்துவ முறையை மேற்கொள்ளுதல் வேண்டும்.

ஹேவலக் எல்லிஸ்[82] என்ற அறிஞர் மூன்று காரணங்களுக்காக மலடாக்கும் முறையை ஆதரித்தார்: ஒரு குடும்பத்தில் தேவையான அளவு குழந்தைகள் ஏற்பட்ட பிறகும், இனி குழந்தை பிறந்தால் மனைவியின் உடல் நிலை மிகவும்

81: சூதக ஒய்வு—Menopause
82: ஹேவலக் எல்லிஸ்—Havelock Ellis

கேடுறும் என்ற நிலை இருக்கும்பொழுதும், குழந்தைகளிருப்பதே விரும்பத்தக்கது அல்ல என்ற நிலை ஏற்படும்பொழுதும் ஆணோ பெண்ணோ இந்த முறையை மேற்கொண்டு மலடாக்கிக்கொள்ள வேண்டும் என்று அவர் கருதுகின்றார்; எனவே, மருத்துவக் காரணம் பற்றியும், இனமேம்பாட்டியல்[83] காரணம் பற்றியும், சமூகவியல் காரணம்பற்றியும், அவர் கருத்தடையை ஆதரிக்கின்றார் என்று தெரிகின்றது; இதை மேலும் சிறிது விளக்குவேன்.

எடுத்துக்காட்டாக ஒரு பெண் ஏற்கனவே இரண்டு முறை 'செசேரியன் அறுவை முறையில்' குழந்தை பெற்றிருக்கின்றாள் என்று கொள்வோம்; இனி, மூன்றாவது முறை இம் முறையில் குழந்தை பெறுவதை அவள் விரும்பாள். இந்நிலையில் அவள் குழல்களை வெட்டும் முறையில் மலடாக்கிக் கொள்ளலாம். ஒரு குடும்பத்தில் இந் நிலை ஏற்படுங்கால் ஆணே தன்னை இம்முறைக்கு உட்படுத்திக் கொள்ளுகின்றான். சிலசமயம் குழந்தைப்பேறு ஏம்படுங்கால் சிலருக்கு சிறுநீரகங்கள் பாதிக்கப் பெறலாம்; அல்லது முள்ளந்தண்டுக் கொடியில் கோளாறு ஏற்படலாம். இத்தகைய பெண்களும் தம்மை மலடாக்கிக்கொள்வது நல்லது. இது மருத்துவக் காரணம்பற்றி மலடாக்கிக்கொள்வதாகும்.

ஒரு குடும்பத்தில் ஆணோ பெண்ணோ மரபுவழி நோய்களால் பீடிக்கப்பெற்றிருக்கலாம். அவர்கள் தம்முடைய மரபுவழியினருக்கும் இந்நோய் பரவாதிருக்க விரும்பித் தம்மில் யாரோ ஒருவரை மலடாக்கிக்கொள்ள விரும்பலாம்; ஒரு பெண்ணின் மரபு வழியில் பல தலைமுறைகளில் வலிப்பு நோய்[84] மரபு வழியாக இறங்கி வரலாம்; அல்லது பலரிடம் அரைப் பைத்தியம் நேரிட்டு வருவதைக் காணலாம். இந் நிலையில் கணவனோ மனைவியோ தம்மில் ஒருவரை மலடாக்

---

83. இனமேற்பாட்டியல்—Eugenics

84. வலிப்பு நோய்—Epilepsy

இக் கொள்வது நன்று இதனைத்தாமாகவே விரும்பிச்செய்து கொள்ளவேண்டுமேயன்றி சட்டத்தின் மூலம் கட்டாயப் படுத்துவது விரும்பத்தக்கதன்று; கடியத்தக்கது. எனவே, ஒரு குடும்பத்தில் உடற்குறைகளோ உளக்குறைகளோ மரபு வழியாக இறங்கி வருவது உறுதியாகத் தெரிந்தால் அறுவை மருத்துவமுறை மூலம் மலடாக்கிக் கொள்வதை மேற் கொள்ளலாம். இஃது இனமேம்பாட்டியல்பற்றிய காரணம் ஆகும். அமெரிக்காவின் இக் காரணம்பற்றிச் சட்டமே இயற்றப்பெற்றுள்ளது. இங்கு மலடாக்கிக் கொள்வது கட்டாயம் என்றிருந்தாலும், நோயாளியின் விருப்பத் தையோ, அல்லது அவர் தன்னுடைய எண்ணத்தைத் தெரி விக்க இயலாத நிலையில் அவருடைய நெருங்கிய உறவினரின் அல்லது சட்டப்படியுள்ள பாதுகாப்பாளரின் இசைவு பெற்றே இம் முறையை மேற்கொள்வது நடைமுறையில் இருந்து வருகின்றது. செருமனியில் நாஜி ஆட்சியில் இது கட்டாயமாக இருந்தது. பொதுமக்களாட்சி நிலவும் நாடு களில் சட்டப்படித் தடுப்பது பொதுமக்கள் விருப்பத்திற்கு விரோதமானது; அவர்களது விருப்பத்தை அவமானப் படுத்துவதுமானது.

ஒரு குடும்பத்தில் தேவையான அளவு குழவிகள் பிறந்த பிறகு, இனி குழந்தைகள் பிறந்தால் அவர்கட்கு எல்லா முறைகளிலும் பாதுகாப்பு அளிப்பதற்குப் பொருளாதார நிலை போதுமானதன்று என்பதை உணர்ந்தால், கணவனோ மனைவியோ தம்மை மலடாக்கிக்கொள்ளலாம். இது சமூக இயல்பற்றிய காரணம் ஆகும். ஒருவர் மலடாக்கிக்கொள் வதற்கு இக் காரணம் போதுமானதன்று. இது தம்முடைய பொறுப்பைத் தட்டிக் கழிப்பதாகும். மானிட வாழ்க்கை மிகச் சிக்கலானது. வாழ்க்கையில் எதிர்காலத்தில் நேரிடப் போவதனைத்தையும் முன்னரே ஒருவராலும் அறுதியிட முடி யாது. மலடாக்கிக் கொள்வதென்பது மீண்டும் குழந்தை பெறும் நிலையை அடையமுடியாத ஒரு வழியாகும். எனவே, இம் முறையை மேற்கொள்வதற்கு முன்னர் எச்சரிக்கை யுடன் இருத்தல் வேண்டும்.

எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவது என்பது இழுக்கு.[85]

என்ற பொய்யாமொழி இதற்குப் பெருந்துணையாக—வழி காட்டியாக—அமையும். இதுகாறும் கூறியவற்றால் குடும்பக் கட்டுப்பாடுபற்றிய தேவையான செய்திகளை அறிந்து கொண்டிருப்பாய் என்று கருதுகின்றேன். இனி அடுத்து வரும் ஒரு சில கடிதங்களில் மானிட இனத்தில் வாழையடி வாழையாக வரும் 'மக்கட்பேறு' பற்றிக் கூறுவேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

85. குறள்—467

ஓடி வருகை யிலே—கண்ணம்மா
உள்ளங் குளிரு தடீ!
ஆடித் திரிதல் கண்டால்—உன்னைப்போய்
ஆவி தழுவு தடீ!

இன்பக் கதைக ளெல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வ துண்டோ?
அன்பு தருவ திலே—உனைநேர்
ஆகுமோர் தெய்வ முண்டோ?

—பாரதியார் கண்ணம்மா-என் குழந்தை

இயல்—5

# மக்கட் பேறு

மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.[1]

என்றார் வள்ளுவப் பெருந்தகை. இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாகச் சிறக்க வேண்டுமாயின் கணவனுக்கு நல்ல மனைவி துணைவியாக வாய்க்கவேண்டும். தம்பதிகட்கு உரிய காலத்தில் மக்கட்பேறு ஏற்படவேண்டும். தாய்—தந்தை—குழந்தை இம் மூன்றுஞ் சேர்ந்த ஒன்று சோமாஸ் கந்த மூர்த்தம் என்பது. உலகில் இம் மூன்றும் நிலைபெறல் இயற்கை என்பதை அறிவுறுத்தவே பண்டையோர் கடவுளை இம் மூர்த்தமாகவும் கொண்டு வழிபட்டனர். 'அம்மையே அப்பா ஒப்பிலா மணியே அன்பினில் விளைந்த ஆரமுதே' என்ற மணிவாசகரின் வாக்கில் தாய் தந்தையரின் அன்பினின்று பிறக்கும் 'ஆரமுதம்' குழந்தை என்பது எண்ணி ஓர்தற்பாலது. ஒரு தம்பதிகட்குக் குழந்தைப்பேறு ஏற்படாதிருப்பது இரு பாலாரிடையேயும் உள்ள குறையைப் பொறுத்தது. பெண்ணின் உடற்கூறு முதலியவை சரியாக இருந்து ஆணிடமுள்ள மலடு காரணமாகக் குழந்தைப்பேறு ஏற்படாதிருக்கலாம். அங்ஙனமே, ஆணின் உடற்கூறு முதலியவை செவ்வையாக இருந்து பெண்ணிடமுள்ள உடற் குறைகளாலும் பிறவற்றாலும் பிள்ளைப்பேறு ஏற்படாதிருக்கலாம், இங்ஙனம் இரு பாலாரிடையேயுள்ள தடைகளை நீக்கினால் அத் தம்பதிகட்குக் குழந்தைகள் பிறக்கும். இத்தடைகளைப்பற்றிய விளக்கங்கள், அவற்றை நீக்குவதுபற்றிய முறைகள், செயற்கையாக விந்து பாய்ச்சிக் கருவுறச் செய்தல், காலமல்லாக் காலத்தில் குழந்தை பிறந்து விடுதல், அதனைத் தடுத்தல், கருச்சிதைவு செய்தல், அதனால் ஏற்படும்விளைவுகள் போன்ற செய்திகளும் அவற்றோடு தொடர்புள்ள பிற தகவல்களும் இப்பகுதியிலுள்ள நான்கு கடிதங்களில் (26—29) ஆராயப் பெறுகின்றன.

---

1. குறள்—60

# 26

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

பாரதியாரின் 'கண்ணன்—என் குழந்தை' என்ற பாடலைப் படித்திருப்பாய் என்று நினைக்கின்றேன். தற்காலக் கவிதைகளில் குழந்தைப்பேற்றின் அருமையை அற்புதமாகச் சித்திரிக்கும் பாடல்களை அங்குக் காணலாம்.

சொல்லு மழலையிலே—கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே—எனது
மூர்க்கந் தவிர்த்திடுவாய்.[2]

என்ற பாடலைப் போன்ற அற்புதப் பாடல்கள் நம் உள்ளத்தைக் குழைவிக்கின்றன. இங்ஙனம் பிள்ளைப்பேற்றைப் பற்றி அன்றும் இன்றும் என்றும் மக்கள் பேசி வருவதை எல்லோரும் அறிவர்.

இந்த உலகில் சிலரிடம் குழந்தைச் செல்வம் அதிகமாக இருக்கின்றது; சிலரிடம் இச்செல்வம் அறவே இருப்பதில்லை; சிலருக்கு ஒன்றிரண்டு குழந்தைகளே உள்ளன. குடும்பக் கட்டுப்பாடு போன்ற யாதொரு திட்டமுமின்றி இங்ஙனம் பலரிடம் இருப்பதை நாம் கண் கூடாகக் காணலாம். ஒவ்வொரு மணமக்களும் இத்தகைய 'பிள்ளைப் பேறு' ஏற்படுவதுபற்றிய பல கருத்துகளை அறிந்து கொள்ளுதல் மிகவும் இன்றியமையாதது. இனப் பெருக்கத்தைப்பற்றி விளக்குங்கால் கருவுறல், பிரசவம் ஆகியவைபற்றிய கருத்துகளை மட்டிலும் கூறினேன். இக்கடிதத்திலும் இதனை அடுத்து எழுதும் ஒன்றிரண்டு கடிதங்களிலும் பிள்ளைப் பேறு ஏற்படுவதுபற்றிய ஒரு சில ஆழ்ந்த கருத்துகளைக் கூறுவேன்.

2. பாரதியார்—கண்ணன்—என் குழந்தை.

கருத்தரிப்பிற்குரிய காரணங்கள்: ஒரு தனியாளிடம் கருத்தரிப்பு[3] ஏற்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன: சில காரணங்கள் மரபுவழிபற்றியவை; சில சூழ்நிலைபற்றியவை. டார்வின்[4] என்ற உயிரியல் அறிஞர்[5] வீட்டில் வளரும் மிருகங்கள் அதிகமாகக் குட்டிகளை ஈனுவதையும் அதே வகை மிருகங்கள் காட்டில் வாழுங்கால் அதிகமாகக் குட்டிகளை ஈனுதலையும் எடுத்துக் காட்டியுள்ளார். வீட்டில் வளரும் மிருகங்கள் அதிகமான உணவு பெறுவதையும் அதையும் ஒழுங்காகப் பெறுவதையும் இந்நிலைக்கு அவர் காரணமாகக் கூறுகின்றார். காட்டில் வாழும் துட்ட விலங்குகள் கூட்டில் அடைப்பட்டுக் கிடக்கும்பொழுது அவை தொடர்ந்து பாலுறவு கொண்டாலும் அதிகமாக இனப்பெருக்கம் செய்ய முடிவதில்லை என்பதை நாம் கண் கூடாகக் காண்கின்றோம். உணவில் போதுமான விட்டமின்களும், வேறு சில இன்றியமையாத கூறுகளும் இல்லாமை காரணமாகவே சில மிருகங்களிடம் கருத்தரிப்பு குறைவாக இருப்பதையும் அல்லது அறவே இல்லாது போவதையும் அறிவியலறிஞர்கள் மெய்ப்பித்துள்ளனர். மனிதர்களிடமும் உணவும் உடற் சுகாதாரமும் இனப் பெருக்கத்தில் பெருஞ் செல்வாக்கு பெற்றிருப்பதாகக் கருதப்பெறுகின்றது. குறிப்பாகப் பெண்களிடம் வயதும் குழந்தைப் பேற்றுக்கு ஒரு முக்கியக் கூறாக அமைந்திருப்பதையும், இது குழந்தை பெறும் திறனில் ஒரு முக்கிய செல்வாக்குப் பெறுவதையும் அனுபவத்தில் அறியலாம்.

சாதாரணமாக ஒரு பெண் பூப்பு[6] எய்தியதிலிருந்து சூதக ஓய்வு[7] பெறும்வரை குழந்தைப் பேறு அடைவாள்

3. கருத்தரிப்பு—Fertility
4. டார்வின்—Darwin
5. உயிரியல் அறிஞர்—Biologist
6. பூப்பு—Marurity
7. சூதக ஓய்வு—Menopause

என்பது பொதுவாக எல்லோரும் அறிந்த செய்தி; ஒரு பெண் பூப்பெய்தியதிலிருந்து அவள் கருத்தரிக்கும் ஆற்றலை யும் அடைகின்றாள் என்பது பொதுக் கருத்தாக இருப் பினும், பூப்பின் தொடக்கம் குழந்தைப் பேற்றினுக்கும் அறிகுறியாகும் என்று சொல்லுவதற்கில்லை; பூப்பு எய்திய பிறகு சில காலம் வரையிலும் முட்டை பக்குவமடைதல் தொடங்காமலிருத்தலும் கூடும். பூப்பின் தொடக்கத்திற் கும் கருவுற்று இனப் பெருக்கம் செய்யும் பருவத்திற்கும் இடையிலுள்ள காலம் 'குமரப் பருவ மலடு'[8] என்று வழங்கப் பெறும். இப்பருவம் சில மாதங்களிலிருந்து ஈராண்டுகள் வரையிலும் நீடிக்கும். இக்காலத்தில் கருத்தரித்தல் முடி யாது என்பது அல்ல; இது பெரும்பாலும் நேரிடாது என் பதே கருத்து.

சாதாரணமாகப் பெண்கள் பன்னிரண்டு வயதிலிருந்து பதினைந்து வயதிற்குள் உள்ள காலத்தில் குழந்தைப் பேற் றினை அடைகின்றனர். பத்து, ஒன்பது, ஆறு வயதிலும் மகளிர் குழந்தைப் பேற்றினை அடைந்ததாக மருத்துவ இலக்கியத்தில் கூறப்பெற்றுள்ளது. 1939-ஆம் யாண்டில் தென் அமெரிக்காவைச் சேர்ந்த 'பெரு' என்ற நாட்டில் ஐந்தரையாண்டு நிரம்பிய ஓர் இந்தியப் பெண் செசேரியன் அறுவை முறை மூலம் ஒரு குழந்தையைப் பெற்றாள் என்று அறிவிக்கப் பெற்றுள்ளது! இவை யாவும் அரிதான செயலே யன்றி, அன்றாடச் செயலன்று; கன்னிப் பெண்ணாக (மிகச் சிறிய பெண்ணாக) இருந்த காலத்திலேயே குந்தி சூரியன் அருளால் ஒரு பிள்ளையைப் பெற்றாள் என்பதும், இச்செய லைப் பலரும் அறியாதிருக்க அப்பிள்ளையைப் பேழையில் வைத்து ஆற்றில் விட்டாள் என்பதும், அப்பிள்ளையே பின் னர் அங்கர் கோனாகிய கர்ணன் என்பதும் பாரதக் கதை நமக்கு எடுத்துரைக்கின்றது;

ஒரு பெண் சூதக ஓய்வை எய்தியதும் கருத்தரிக்கும் செயல் அவளிடம் நின்று போகின்றது. சூதக ஓய்வு அடை யும் காலம் பெண்ணுக்குப் பெண் மாறுகின்றது. அங்ஙனமே,

8. குமரப் பருவ மலடு-Adolescent sterility.

கருத்தரிக்கும் செயல் நிற்றலும் அவளிடம் மாறுகின்றது. சாதாரணமாக ஒரு பெண் நாற்பத்தைந்தாவது வயதில் கருத்தரிக்கும் திறனை இழக்கின்றாள்; எனினும் ஐம்பது அகவை நிறைந்த ஒரு சிலரும் அறுபது வயது நிரம்பிய பெண்களில் ஒரு சிலரும் கருவுற்றுக் கருவுயிர்த்த செய்திகளை நாம் அறியாமல் இல்லை. இவையெல்லாம் அரிதாக நடைபெறுபவை. ஆயினும், பொதுவாக ஒரு பெண் பதினைந்து வயதிலிருந்து நாற்பத்தைந்து வயதுவரை— சுமார் முப்பதாண்டுக் காலம் பிள்ளைப் பேற்றினை அடைகின்றாள் என்பதே நாம் அறிய வேண்டிய செய்தியாகும்.

அமெரிக்க நாட்டில் இருபதிற்கும் முப்பத்து ஒன்பதிற்கும் இடையிலுள்ள வயதுப் பெண்களுக்குப் பிறக்கும் குழவிகள் 87 சத விகிதம் என்றும், ஏனைய 13 சத விகிதக் குழவிகள் இருபதிற்குக் கீழும் முப்பத்தொன்பதற்கு மேலும் வயது உள்ள பெண்களுக்குப் பிறக்கின்றன என்றும் புள்ளி விவரங்களால் அறிகின்றோம். இத்தகைய புள்ளி விவர ஆராய்ச்சி நம் நாட்டிற்கும் வேண்டப் பெறுவதாகும். இன்று பொதுவாகப் பூப்பெய்தியதிலிருந்து தொடங்கும் குழந்தை பெறும் திறன் இருபதிலிருந்து முப்பது வயது வரை உள்ள பெண்களிடமே படிப்படியாக அதிகரித்து உச்ச நிலையை அடைகின்றது என்றும், அதன் பின்னர் அத் திறன் முதலில் மெதுவாகவும் பின்னர் விரைவாகவும் குறைகின்றது என்றும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பெற்ற செய்தி என்பதை அநுபவத்தில் நன்கு காணலாம். சூதக ஒய்வு தொடங்கியதும் இத்திறனும் விரைவாகக் குறைந்து இறுதியில் அறவே இல்லாது போகின்றது. ஒரு சிலர் பிள்ளைப்பேறே இல்லாதிருந்து சூதக ஒய்வு அடையும் காலத்தில் கருவுறுகின்றனர். இங்ஙனம் அத்திபூத்த மாதிரி ஒரு சிலர், கருவுறுவதற்குக் காரணம் இன்னும் மருத்துவ உலகம் கண்டறியாத புதிராகவே உள்ளது.

சூதக ஓய்வு நடைபெறும் முறைகள்: இவ்விடத்தில் சூதக ஓய்வு நடைபெறும் முறைகளைப் பற்றிச் சிறிது

கூறுதல் பொருந்தும். சூதக ஒய்வினை "வாழ்க்கையின் மாற்றம்"[9] என்று வழங்குகின்றனர். இப்பருவத்தில் ஒரு பெண் தன் இனப்பெருக்கத் திறனை இழக்கின்றாள். அவளுடைய சூற்பைகள் முட்டையை முதிரச் செய்யும் திறனை இழக்கின்றன; கருவுறலும் அவளிடம் நின்று போகின்றது. பூப்படையும் காலத்தில் அவளுடைய உயிரி முழுவதும் படிப்படியாகப் பால் முதிர்ச்சிக்கு எங்ஙனம் தயாரா கின்றதோ, அங்ஙனமே சூதக ஒய்வின் இறப்பியல்புகளைக் குறிப்பிடும் மாற்றங்களும் படிப்படியாகவே நடைபெறு கின்றன. இப்பொழுது உடல் நிலைத்திருப்ப மாறு பாட்டின்[10] அறிகுறிகளும்தொடர்ந்து உண்டாகின்றன பூப் படையும் பருவத்தில் சூற்பைகளின் செயல் மாதவிடாயில் சென்று முடிவதைப் போலவே, "வாழ்க்கையின் மாற்றப்" பருவத்திலும் மிகவும் வெளிப்படையாகவுள்ள செயல் மாதவிடாய் நிற்றலில் போய் முடிகின்றது. இந்தத் திருப்ப நிலைக்காலம் பெண்ணுக்குப் பெண் அதிகமாக மாறுபடுகின் றது. சிலரிடம் சூதக ஒய்வு திடீரெனத் தோன்றுகின்றது; சிலரிடம் இது படிப்படியாக நடைபெறுபவர்களிடம் நான்கு வாரங்களுக்கொரு முறை ஒழுங்காக நிகழும் மாதவிடாய் ஒழுங்கின் தீவிரம் படிப்படியாகக் குறைந்து கடைசியில் நின்றுவிடுகின்றது; வேறு சிலரிடம் மாதவிடாய் ஒழுக்கின் காலமும் தீவிரமும் சிறிது சிறிதாகக் குறைவதுடன், இரண்டு மாதவிடாய்களுக்கு இடைப்பட்ட காலம் நீண்டு இறுதியில் மாதவிடாய் நின்று சூதக ஒய்வு நடைபெறுகின் றது. இன்னும் சிலரிடம் இம் மாதவிடாய் ஒழுக்கு நீண்ட காலத்திற்கோ அல்லது குறுகிய காலத்திற்கோ (9 மாதத்திலிருந்து 12 மாதம்வரை) நிற்பதாகத் தோன்றி, திரும்பவும் ஒழுங்கான கால இடையீட்டுடன் ஏற்பட்டு, இறுதியாக முற்றிலும் நின்று போகின்றது. இத்தகைய பெண்களிடம் இவ்வாறு தோன்றுவது நோயின் நிலை என்றும், இவர்கள் மருத்துவச் சோதனைக்குக் காலந் தாழ்த்

9. வாழ்க்கையின் மாற்றம்-Change of life.

10. உடல்நிலைத் திருப்ப மாறுபாடு-Climacteric.

தாது உட்பட வேண்டும் என்றும் அநுபவத்தால் அறியக் கிடக்கின்றது

சூதக ஒய்வுக் காலத்தில்—"வாழ்க்கையின் மாற்றப்" பருவத்தில்—பெரும்பாலும் கருத்தரிப்பு ஏற்படுவதில்லை என்றாலும், அது சாத்தியமில்லை என்று சொல்ல முடியாது. ஆகவே, பெரும்பாலான பெண்கள் இப்பருவத்தில் தம்மிடம் மாதவிடாய் ஒழுங்கற்ற முறையில் ஏற்பட்டால், மாதவிடாய் ஒழுக்கு நிற்றல் சூதக ஓய்வு மாற்றங்களா, அன்றிக் கருவுற்றதன் அறிகுறியா என்பதை அறிந்து கொள்வதில் கவலை கொள்ளுகின்றனர். அடிக்கடி நேரிடும் இத்தகைய ஐயங்களைத் தவிர்க்கவேண்டுமாயின், சூதக ஒய்வு நன்றாக ஏற்படும் வரையில் இம்மாற்றம் நிகழுங்கால் கருத்தடை முறைகளை மேற்கொள்வது நன்று. ஓராண்டுவரை மாதவிடாய் இல்லாது நிற்கும் வரையில் ஒரு பெண் தனக்குக் குழந்தைப்பேறு ஏற்படாது என்று கருதுதல் கூடாது.

ஆணின் கருவுறச்செய்யும் திறன் : இனி, ஆணின் கருவுறச்செய்யும் திறனைப்பற்றியும்[11] சிறிது விளக்குவேன்: ஒவ்வொரு சிறுவனும் தான் விரகறியும் பருவத்தை[12] எய்துங்கால் முதலில் கருவுறச் செய்யும் ஆற்றலைப் பெறுகின்றான். சாதாரணமாக இப்பருவம் பதின்மூன்று வயதிலிருந்து பதினாறு வயதிற்குள்ள காலமாகும். இந்தக் காலத்தில்தான் விந்தணுக்கள் விரைகளில் உண்டாகத் தொடங்குகின்றன; இப்பொழுது இவனிடம் வெளிப்படக்கூடிய விந்து கருப்பத்தை உண்டாக்குதல் கூடும்; எனினும், பெண்ணைவிட இவனிடம் கருவுறச் செய்யும் திறன் மிக அதிகமான காலம் வரை நீடிக்கின்றது. அறுபது அல்லது எழுபது வயதுவரை ஆண்கள் தந்தையர்களாவதை நாம் அடிக்கடிக் காணாமல் இல்லை. மருத்துவ இலக்கியத்தில் 97 வயது நிறைந்த ஒருவர் தந்தையான செய்தி காணப்பெறுகின்றது. ஆயினும், ஆண்

11. கருவுறச் செய்யும் திறன்-Fertility.

12. விரகறியும் பருவம்-Puberty.

களின் கருவுறச் செய்யும் திறன் வாழ்க்கையின் நடுப்பகுதிக்குமேல் குறைந்துகொண்டு போகின்றது.

கருத்தடை முறைகளைக் கையாளாவிடில் முதல் இணைவிழைச்சிலேயே கருவுறல் நடைபெறுதல் வேண்டும். ஆனால், சிலரிடம் நன்றாகப் பாலுறவு ஏற்பட்ட பல மாதங்கள் கழிந்த பின்னரும் கருப்பச் சின்னமே தோன்றுவதில்லை; இன்னும் சிலரிடம் பல யாண்டுகட்குப் பின்னரும் குழந்தைப் பேறு ஏற்படுவதில்லை. ஆகவே, எவர் ஒருவரும் எப்பொழுது திருமணம் குழந்தைப் பேறின்றிக் கழிந்தது என்பதை உறுதியாக அறுதியிடுதல் இயலாது. திருமணம் முடிந்து மூன்றாண்டுகள் நிறைவு பெறும்வரை அங்ஙனம் கருதுதல் கூடாது என்பது சிலருடைய கருத்து. எனினும், அங்ஙனம் மூன்றாண்டுவரை மருத்துவச் சோதனையின்றிக் காலந் தாழ்த்துதல் அறிவுடைமை அன்று. ஓராண்டு முடிவதற்குள் குழந்தைப் பேறு ஏற்படாவிட்டால் உடனே கணவனும் மனைவியும் விரிவான மருத்துவச் சோதனைக்கு உட்படுவது நல்லது. ஆறு திங்கள் கழிந்த பின்னரே ஒரு சில சோதனைகளை மேற்கொள்வது அறிவுடைமையாகும். அறிவியல் நன்கு வளர்ச்சி பெற்ற இக்காலத்தில் எதனையும் உடனுக்குடன் ஆராய்ந்து முடிவுகாண முயல்வது மிகவும் விரும்பத்தக்கது.

குழந்தைப் பேறு ஏற்படாததற்குக் காரணம்: ஒரு தம்பதிகட்குக் குழந்தைப்பேறு ஏற்படாததற்குக் காரணம் என்னவாக இருத்தல்கூடும் என்பதை நீ அறிந்துகொள்ள விரும்புவாய் என்று கருதுகின்றேன்; இவ்விடத்தில் இனப்பெருக்கச் செயலின் முக்கியமான படிகளைப்பற்றிச் சுருக்கமாகக் கூறுவது முற்றிலும் பொருந்தும்.

முதலாவதாக: கருப்பம் ஏற்படுவதற்குப் பெண்ணின் பிறப்பு வழியில் கருப்பையின் வாயிலருகில் அல்லது கருப்பை வாயிலில் தேவையான அளவு நல்ல விந்தணுக்கள் செலுத்தப் பெறுதல் வேண்டும்; இரண்டாவதாக: கருப்பையின் வாயில், கருப்பை, கருக்குழல்கள் இவற்றிலுள்ள வழிகள் விந்தணுக்கள் ஏறிச் செல்வதற்கேற்றவாறு சரியாக

யாதொரு தடையுமின்றி இருத்தல் வேண்டும். மூன்றாவதாக, முட்டையும் விந்தணுக்களும் சந்திக்கும் இடமாகிய கருக் குழலில் நல்ல முட்டை இருக்க வேண்டும் மேலும், கருப் பையின் அணைச்சவ்வும் கருவுற்ற முட்டை தன்னைப் பதித் துக்கொண்டு வளர்வதற்கேற்றவாறு பக்குவப் பெற்றிருத் தல் வேண்டும். இந்த முக்கியமான நிலைமைகள் ஆணிடமோ அன்றிப் பெண்ணிடமோ ஏற்படுவதில் ஏதாவது தடையோ குறையோ இருக்குமாயின் கருத்தரிப்பதில் தடை ஏற்படு கின்றது.

இருபாலாருடைய குறை: மேற்கூறியவற்றால் குழந்தைப் பேறு ஏற்படாதிருத்தலுக்கு இருபாலாரிடமும் குறையோ தடையோ இருத்தல்கூடும் என்பது பெறப்படுகின்றதன்றோ? உண்மை அங்ஙனமிருக்க, மக்கட்பேறு இல்லாத ஆண்மகன் தன்னுடைய செல்வச் செருக்கினாலோ அல்லது பன்னெடுங் காலமாக சமூகத்தில் தவறாக வழங்கிவரும் வழக்காற்றி னாலோ முதல் மனைவியை ஒதுக்கிவைத்துவிட்டு இரண்டாவ தாக இன்னொருத்தியை மணப்புரிந்து கொள்ளுதல் எவ்வ ளவு கொடுமை என்பதை நீ உணர்வாயாக. இரண்டாவது மணம் புரிந்து கொண்ட பின்னர் அவர்கட்கு மக்கட்பேறு ஏற்படுகின்றதே என்று இரண்டாவது மண முறையை ஆத ரிக்கும் சிலர் வாதிக்கலாம். மக்கட்பேறு இல்லாமலும் போகின்றதே என்று அதற்கு நாம் மறுமாற்றம் உரைத்து அவர்கள் வாயை அடக்குதல் முடியும். மேலும் பெண்ணிற்கும் மறுமணம் புரிந்துகொள்ள உரிமையிருப்பின், அவளும் இரண்டாவது கணவன்மூலம் குழந்தைகளைப்பெறு வதற்கு வாய்ப்பு இருக்குமல்லவா? இங்ஙனம் உரிமையுள்ள சில சமூகங்களில் இத்தகைய வாய்ப்பினைப் பெறும் பெண் குழந்தைப்பேறு அடைவதை நாம் காண்கின்றோமன்றோ என்றும் வாதிக்கலாம். எனவே, கருத்தரித்தல் என்பது முழு மையான பண்பு[13] அன்று. ஒரு பெண்ணோ ஆணோ முற்றி லும் கருத்தரிக்கும் இயல்புடையவர்கள் என்றோ அல்லது

13. முழுமையான பண்பு-Absolute uality

முற்றிலும் மலடு என்றோ அறுதியிடல் முடியாது. கருத்தரிக்கும் பண்பு இருவரிடமும் குறைவாக இருப்பின், அவர்கட்குக் குழந்தைப்பேறு இல்லாது போகின்றது. இந்த இருவரும் கருத்தரிக்கும் பண்பு அதிகமுள்ள வாழ்க்கைத் துணையை இரண்டாவது தடவையாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டால், இருபாலாருக்கும் குழந்தைப்பேறு உண்டாகலாம்.

கருத்தரித்தல் கணவன்-மனைவி ஆகிய இருபாலாரையும் பொறுத்தது என்பது அண்மைக்கால ஆராய்ச்சியின் முடிவாகும். பழங்காலத்தில்—ஏன்? இன்றும்கூட—குழந்தைப் பேறில்லாக் குறையைப் பெண்ணுக்கே ஏற்றிக் கூறப்பெற்றது. குழந்தைப்பேறின்மை ஒரு குறையாகக் கருதப்பெற்றதுடன், பெண்ணே அதற்குக் காரணம் என்று குற்றமும் சாட்டப்பெற்று வந்தாள். சில நாடுகளில் மலடு மணமுறிவிற்கு ஒரு காரணமாகவும் அமைகின்றது; மக்கட் பேறில்லாப்பெண் ஏளனத்திற்கும் வெறுப்பிற்கும் இலக்காகிவருகின்றாள். அண்மைக் காலத்தில் ஏற்பட்ட ஆராய்ச்சியின் முடிவு இப்போக்கினைச் சிறிது மாற்றியுள்ளது; எனினும், கல்வியறிவு மக்களிடையே நன்கு ஏற்படாதவரை எந்த முடிவுகளும் பரந்த நிலையில் நற்பயன்களை விளைவிக்கா.

தல யாத்திரை: நம் நாட்டில் சில தம்பதிகள் இக் குறையைத் தமது தவக்குறை எனக் கருதித் தல யாத்திரை செய்து இக்குறையை நிவர்த்தி செய்துகொள்ள முயல்கின்றனர். தமிழ் நாட்டில் குழந்தைப் பேறில்லாத் தம்பதிகள் இராமேச்சுவரம் போய் வருவது இன்றும் பெரு வழக்காக இருந்து வருகின்றது. நம்பிக்கையும் பக்தியும் உள்ள ஒரு சிலருக்கு இத்தகைய தல யாத்திரைகளால் குழந்தைப்பேறு ஏற்பட்டு வருவதால் இப்பழக்கம் அறுபடாமல் வாழையடி வாழையாய் நடைபெற்று வருகின்றது. தசரதன் மிகவும் பக்தியுடன் முறைப்படி 'புத்திர காமேட்டி' என்ற யாகத்தைச் செய்ததால் பரந்தாமனே வந்து குழந்தையாகப் பிறந்தான் என்ற காப்பியவரலாறு மக்களிடையே இந்த நம்பிக்கையைத் தூண்டா விளக்குபோல் சுடர்விட்டு ஒளிரச்செய்

கின்றது! வாழ்க்கை யநுபவமும் தத்துவ விசாரணையும் ஏற்பட ஏற்பட இத்துறைகளில் உனக்குத் தெளிவு பிறக்கும். குழந்தைப்பேறில்லாததற்குக் காரணமாகவுள்ள மலட்டுத் தன்மையைப் பற்றி அடுத்துவரும் கடிதத்தில் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 27

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு

நலன். நலன் விழைகின்றேன்.

இக் கடிதத்தில் ஆண் மலடுக்கும் பெண் மலடுக்கும் உரிய காரணங்களை விளக்குவேன். மலடு[14] என்ற சொல்லை மேற்கொள்வதைவிட கருத்தரியாப் பண்பு[15] என்ற சொல்லைக் கையாளுவது சிறந்தது. மலடு என்ற சொல் நிரந்தரமாகக் குழந்தையே பெற முடியாத நிலையை உணர்த்தும், ஆனால், பல 'வறண்ட' தம்பதிகளையும் நவீன மருத்துவ முறைகளை மேற்கொண்டு கருத்தரிக்கச் செய்யக் கூடுமாதலின், இந்நிலையிலுள்ள தம்பதிகளின் குறையினைக் 'கருத்தரியாப் பண்பு' என்று குறிப்பிடுவதே சாலப் பொருத்தமாகும்.

ஆண் மலடு : இனப்பெருக்கத்தில் நல்ல வளமுள்ள விந்தணுக்களைப் பெண்ணின் கருப்பையின் வாயினருகில் கொண்டு செலுத்துவதே ஆணின் செயலாகும். ஒரு கணவன் இங்ஙனம் தன்னுடைய விந்துப் பாய்மத்தைத் தன் மனைவியின் பிறப்புறுப்புப் பாதையில் செலுத்த முடியாத நிலையிலிருந்தாலும், அவனுடைய விந்தணுக்கள் அளவிலும் தன்மையிலும் குறையுள்ளதாக இருப்பினும் அவனுடைய துணைவி கருத்தரிக்க இயலாது. இங்ஙனம் விந்துவை யோனிக் குழலில் கொண்டு செலுத்த முடியா நிலைக்குக் காரணம் அணுறுப்பின் பிறவி சார்ந்த தோற்றக் கேடாக[16] இருக்கலாம்; அல்லது தேவையான அளவு பாலுறவு கொள்ளும்

14. மலடு—Sterility
15. கருத்தரியாப் பண்பு—Infertility
16. பிறவிசார்ந்த தோற்றக்கேடு—Congenital malfor-mation

திறன் அல்லது ஆண்மை[17] இல்லாக் குறையாகவும் இருக்கலாம். பாலுறவுகொள்ளும் திறன் இல்லாமையைப் பின்னர் விளக்குவேன். ஆனால், அதனைக் கருத்தரியா நிலைப்பிரச்சினையைப் பற்றி ஆராயுமிடத்துக் குறிப்பிட விரும்புகின்றேன். கணவனின் ஆண்குறியின் விறைப்பு பெண்குறியினுள் நுழைப்பதற்குப் போதுமானதாக இராவிடினும், அல்லது நுழைப்பதற்கு முன்னர் விந்துவை அவன் வெளிப்படுத்தி விட்டாலும் கருப்பமே பெரும்பாலும் ஏற்படாது.

தம்பதிகள் இருவர் மருத்துவர் ஒருவரிடம் வந்தனர். மூன் றாண்டுகட்கு முன்னர் அவர்கட்குத் திருமணம் நடைபெற்றது. அவர்கள் யாதொரு கருத்தடை முறைகளையும் மேற்கொள்ளாதிருந்தும், மனைவிக்குக் கருப்பம் ஏற்படவில்லை. மருத்துவர் அப் பெண்ணை நன்கு சோதித்ததில் அவளிடம் ஒரு பொழுதும் ஆண்குறி முற்றிலும் நுழைந்ததாகத் தெரியவில்லை. அவளது கணவரின் ஆண்குறியில் சரியான விறைப்பு இல்லாமையால் அது முற்றிலும் நுழைவதற்கு முன்னர் விந்துவை அவர் வெளிப்படுத்தி வந்ததாகவும் தெரிந்தது. இந்த ஒரு குறையைத் தவிர அவரிடம் வேறு ஒரு குறையும் இல்லை. இக்குறையின் காரணமாகவே அவருடைய மனைவி கருப்பமுறவில்லை. அவரிடமுள்ள இக்குறை நிவர்த்தி செய்யப்பெற்றதும், அவருடைய மனைவி விரைவில் கருப்ப முற்றாள். இத்தகைய ஆண்களைக் காண்பது அரிது. பெரும்பாலும் 'ஆண் மலடு' என்பது விந்துப் பாய்மத்தின் அளவு போதாதிருப்பதேயாகும். விந்தணுக்கள் ஆணின் விரைகளில் உண்டாகின்றன என்பதையும், அவை மிகச் சிக்கலான அமைப்பினைக்கொண்ட எபிடிடைமிஸ், விந்தேறு குழல் போன்றவற்றிலுள்ள பல்வேறு தூம்புகளின் வழியாகச் சென்று இறுதியில் விந்துவாக வெளியேற்றப் பெறுகின்றன என்பதையும் ஈண்டு நினைவு கூர்வாயாக. ஒவ்வொரு தடவையும் வெளியாகும் விந்துப் பாய்மம் ஒரு தேக்கரண்டி அளவு இருக்கும்; அளந்து கண்டால் இது நான்கு கன சென்டிமீட்டர் அளவு இருக்கும். இந்தப்

17. ஆண்மை—Potency

பாய்மம் பெரும்பாலும் புராஸ்டேட் சுரப்பியினின்றும் விந்துப் பைகளிலிருந்தும்[18] வெளிவந்த சாறுகளேயாகும். இந்தப் பாய்மத்தில் ஒரு கனசென்டி மீட்டருக்கு 50 மில்லியனிலிருந்து 100 மில்லியன்[19] வரையிலும் விந்தணுக்கள் உள்ளன. அஃதாவது, ஒரு தடவை வெளியாகும் விந்துப் பாய்மத்தில் இருநூற்றிலிருந்து நானூறு மில்லியன்வரை விந்தணுக்கள் இருக்கும் என்பது தெளிவாகின்றது. சாதாரணமாக நன்னிலையிலுள்ள விந்தணுக்கள் 24 மணி நேரத்திலிருந்து 72 மணி நேரம் வரை உயிரோடிருப்பது அவற்றின் சிறப்பியல்பாகும். ஒரு கன சென்டி மீட்டருக்கு நாற்பது மில்லியனுக்குக் குறைவாக விந்தணுக்களின் எண்ணிக்கை இருப்பினும், அவை உயிரோடிருக்கும் கால அளவு குறைவாக இருப்பினும், அல்லது விந்தணுக்களிலும் பல இயல்பிகந்த வடிவமுடையவையாக இருப்பினும் அவ்வறிகுறிகள் யாவும் குறைந்த அளவு கருத்தரிக்கும் ஆற்றலைக் காட்டுகின்றன என்று கொள்ளவேண்டும்.

விந்துப் பாய்ம ஆராய்ச்சி : இன்று விந்துப் பாய்மத்தை ஆராய்வதற்குப் பல முறைகள் கண்டறியப்பெற்றுள்ளன. இவை விந்தணுக்களின் அளவையும் தன்மையையும் மிகச் சரியாக அறுதியிடுகின்றன. ஒரு தடவை வெளியாகும் விந்துப் பாய்மத்திலுள்ள விந்தணுக்களைக் கணக்கிடுவதும், அவற்றின் உயிர்ச் சக்தியை ஆராய்வதும், அவற்றின் வடிவத்தையும் அமைப்பையும் சோதிப்பதும் இன்று சாத்தியப்படுகின்றது. ஒரு சிறந்த நுண் பெருக்கியின்மூலம் பார்க்கும்பொழுது நாம் காணும் விந்தணுக்களின் அசைவுகளும் வடிவங்களும் விந்துணுப்பகுப்பாராய்ச்சிக்குத் துணையாக இருக்கும்பொருட்டுப் ஒளிப்படமாக எடுக்கப்பெற்றுள்ளன. சிலருடைய விந்துப் பாய்மத்தில் விந்தணுக்களே இருப்பதில்லை. இந் நிலையை 'அஸூஸ்பெர்மியா'[20] என்று

---

18. விந்துப் பைகள்—Seminal vesicles
19. மில்லியன் என்பது பத்து இலட்சம்.
20. அஸூஸ் பெர்மியா—Azoospermia







படம் 47: படம் 48:

**படம்—47:** சாதாரணமாகப் புணரும் இயல்புடன் உள்ள ஆணுறுப்பின் நிலையினை விளக்குவது.

இங்கு விந்துப் பாய்மத்தில் விந்தணுக்கள் கருவுறச் செய்வதற்கேற்ற அளவு நன்னிலையிலுள்ளன என்பதைப் படத்தின் மேல் வட்டப்பகுதி தெரிவிக்கின்றது.

**படம்—48:** பிள்ளைப்பேறு ஏற்படா ஆண்மையின்மையினை விளக்குவது.

இங்கு விந்துப் பாய்மத்தில் விந்தணுக்கள் இல்லாமையைப் படத்தின் மேல் வட்டப்பகுதி உணர்த்துகின்றது. வெள்ளை நோயினால் எபிடிடைமிஸில் ஏற்பட்ட வீக்கத்தின் காரணமாக விந்து பாயும் தூம்பு அடைபட்டுக் கிடப்பதைப் படத்தின் கீழ்வட்டப் பகுதி விளக்குகின்றது.

வழங்குவர். விரைகள் விந்தணுக்களை உற்பத்தி செய்யாத பொழுதும் விந்தேறும் தூம்புகளில் ஏதாவது தடைகளி ருந்து விந்தணுக்கள் செல்வதைத் தடுத்தாலும் இந்நிலை ஏற்படுகின்றது. படம்-48 ஓர் ஆணிடம் விந்தணுக்கள் உற் பத்தியில்லாமையையும் "வெள்ளை" நோயின் காரணமாக எபிடிடைமிஸில் ஏற்பட்ட வீக்கத்தால்[21] அது மூடிக் கொண்ட நிலையையும் காட்டுகின்றது. இப்படத்தை மேற் கூறிய இரண்டு குறைகளும் இல்லா நிலையை விளக்கும் படம் 47-டன் ஒப்பிட்டுத் தெளிவு பெறுக. சிலரிடம் பிறவியிலேயே ஏற்பட்ட அமைப்பாலும், அடிபட்ட காயத் தாலும், வேறு தொற்று நோய்கள் பாதித்தமையாலும் விந்து பாயும் தூம்புகளில் அடைப்புகள் ஏற்படலாம்.

விந்தணுக்கள் உற்பத்தி இல்லாமைக்குக் காரணங்கள்: ஓர் ஆணிடம் விந்தணுக்கள் உற்பத்தி இல்லாமைக்குப் பல காரணங்கள் உள்ளன. பிறவியிலேயே சிலரிடம் விரைகள் இறங்கா நிலையிலிருத்தல், அடித்தலைச் சுரப்பிகள் அல்லது புரிசைச் சுரப்பிகளில் நேரிடும் தொந்தரவுகளால் விரைகள் பாதிக்கப்பெறல், உணவிலுள்ள குறைகள், விரைகளின் மேல் புதிர்க்கதிர்கள் படுதல், பிறப்புறுப்புக்களில் ஏற்படும் தொற்று நோய்கள், பொதுவாக ஒழுங்கு முறையாக வரும் நோய்கள் – ஆகியவற்றுள் ஏதாவ தொன்று விந்தணுக்களின் உற்பத்தியைக் கடுமையாகப் பாதிக்கின்றது பொதுவாக வரும் தொற்றுநோய்களுள் புட்டாலம்மை[22] என்ற நோய் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. இந்நோய் விரகறியும் பருவத்தில் அல்லது அதற்குப் பிறகு ஏற்பட்டால், அது சில சமயம் சிக்கலாகி ஆண் விரைகளில் வீக்கத்தை உண்டுபண்ணுகின்றது. இந்த வீக்கம் விரைகளில் அவை செயற்படாநிலை[23]யையோ, அல்லது விந்தணுக்கள் உற்பத்தித் தடையையோ உண்டாக்க

21. வீக்கம்—Inflammation
22. புட்டாலம்மை—Mumps
23. செயற்படா நிலை—Atrophy

லாம். மருத்துவமனைக்கு வந்த நோயாளியின் விந்துப் பாய்மத்தை மருத்துவர் ஒருவர் சோதிக்க நேர்ந்தது. அதில் விந்தணுக்களே இல்லை. அவருக்குத் திருமணம் நடைபெற்று எட்டாண்டுகள் ஆகின்றன; அவருக்கு நாலரையாண்டுகள் நிரம்பிய குழந்தையொன்றும் இருக்கின்றது. இந்தக் குழந்தைக்குப் பிறகு மூன்றாண்டுகளில் அவருக்குப் புட்டாலம்மை நோய் ஏற்பட்டது. இந்நோய் மிகவும் சிக்கலாகி அவருடைய இரண்டு விரைகளிலும் வீக்கம் கண்டது; அதன் பிறகு இரண்டு விரைகளும் விந்தணுக்களை உற்பத்தி செய்யும் திறனை இழந்தன. இத்தகைய நோயினாலோ அல்லது வேறு காரணத்தாலோ ஒரு விரை பாதிக்கப்பெறுவிட்டாலும், அதிலிருந்து கருவுறுவதற்குப் போதுமான விந்தணுக்கள் உண்டாகும். ஒற்றை விரையினால் தந்தையரான எத்தனையோ ஆண்கள் உள்ளனர் என்பதை மருத்துவ அறிஞர்கள் ஆராய்ந்து கூறியுள்ளனர்.

டெஸ்டிகுலர் பயோப்ஸி: மேற்கூறப்பெற்ற இரண்டு குறைகளையும் 'டெஸ்டிகுலர் பயோப்ஸி'[24] என்ற ஒரு சிறிய அறுவை முறைச் சிகிச்சையினால் கண்டறியலாம். மிகச் சிறிய அளவு விரையின் இழையத்தைப் பெயர்த்தெடுத்து நுண் பெருக்கியில் வைத்துச் சோதிக்கப்பெறுகின்றது. இச் சோதனையால் விரைகள் விந்தணுக்களை உற்பத்தி செய்யவில்லை என்பதை அறிந்தால், இதற்குக் கழுவாய் காண்பது மிகவும் அரிது. இன்றுவரை இதற்குக் கழுவாயே கண்டறியப் பெறவில்லை. ஆயினும், இத்துறையில் நுட்பமான ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. இதே சோதனை விந்தணுக்களின் உற்பத்தி நன்முறையிலுள்ளது என்று காட்டினால், விந்து பாயும் தூம்புகளில் அடைப்பு இருத்தல் வேண்டும் என்பது உறுதியாகின்றது. இக் குறையை அறுவை மருத்துவ முறையால் சரிப்படுத்தித் தூம்பின் வழியிலுள்ள தடையை நீக்கிவிடலாம். முதலில் குழந்தைப்பேறே இல்லாத தம்பதிகளுள் கணவருக்கு இச்

24. டெஸ்டிகுலர் பயோப்ஸி–Testicular biopsy

சோதனையினால் விந்தணுக்கள் நன்னிலையிலிருப்பது தெரிந்தது. இவருடைய விரைகளைச் சுற்றிச் சிறிது தடித்த நிலை காணப்பெற்றது. அறுவை சிகிச்சை முறையால் தூம்பின் அடைப்பு சரிப்படுத்தப்பெற்றது: இச்சிகிச்சை செய்யப் பெற்ற ஒரு சில மாதங்களில் அவருடைய மனைவி கருவுற்று ஒரு நல்ல குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

அஸூஸ் பெர்மியாவுக்குக் காரணங்கள் : இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிதற்பாலது. 'அஸூஸ் பெர்மியா' என்ற நோய் குழந்தைப்பேறில்லாத் தம்பதிகளில் நூற்றுக்கு எட்டு அல்லது பத்து கணவன்மார்களிடமே காணப்பெறுகின்றது. பெரும்பாலோரிடம் கருத்தரியாத நிலை 'அஸூஸ்பெர்மியா' என்ற குறையினால் அன்று. ஆனால், அது விந்தணுக்களின் எண்ணிக்கையில் குறை, அவற்றின் உயிர்ச் சக்தியில் குறை, அவற்றின் தன்மையில் குறை ஆகிய குறைகளினாலேயே இந்நிலை காணப்பெறுகின்றது. சுரப்பிகளில் தொந்தரவுகள், ஊட்டக் குலைவுகள், விட்டமின் குறைகள், பொதுவான அல்லது குறிப்பிட்ட இடங்களில் தொற்றுக்கள் ஆகிய பல்வேறு காரணங்களால் இக்குறைகள் நேரிடலாம். சுருங்கக் கூறின், உடலியல் முறையில் உடல் செயற்படுவதற்குரிய எந்த நிலை குறைந்தாலும் இவ்விளைவு ஏற்படலாம். ஓர் ஆணிடம் ஏற்படும் விந்தணுக்களின் உற்பத்தி மிகச்சிக்கலான, நுட்பமான செயலாகும்: இஃது உடலில் ஏற்படும் குலைவுகளால் உடனே பாதிக்கப்பெறுகின்றது. உடல் நலத்துடனுள்ள ஆண்களிடம்கூட குறையுள்ள விந்துப் பாய்மம் உள்ளது; மிக விரிந்த நிலையில் மேற்கொள்ளப்பெறும் ஆராய்ச்சிலும் இக்குறையின் காரணம் தெளிவாக அறியப்பெறவில்லை விந்தணுக்களின் குறைவிற்கோ அல்லது அவற்றின் உற்பத்தியின்மைக்கும் மலட்டுத் தன்மைக்குமோ கொண்டு செலுத்தக்கூடிய பல கூறுகள் இன்னும் மருத்துவ உலகம் அறியாப் புதிர்களாகவே உள்ளன.

விந்துக் குறை நீக்கம் : விந்துவில் உள்ள குறைகளையும் ஓரளவு நீக்கலாம். ஆனால், அது குறைகளின் காரணத்தைப்

பொறுத்தது. இக்குறை குறைவான ஊட்டம் காரண மாகவோ, அன்றிச் சுரப்பிகளிலுள்ள தொந்தரவுகளாலோ, அன்றி ஏதாவது தொற்றுக்களின் காரணமாகவோ நேரிட்டிருப்பின், தக்க விட்டமின் சத்துக்களாலும், பொருத்தமான ஹார்மோன்களாலும், வேறு மருந்து கொடுத்தலாலும் பெரிய நன்மையை எதிர்பார்க்கலாம். ஆனால், விரைகள் செயற்படுவது கடுமையாகப் பாதிக்கப்பெற்றிருந்தால் அதற்கு இன்றுவரை கழுவாய் யாதொன்றும் கண்டறியப் பெறவில்லை. இத்துறையில் ஏற்பட்ட ஆராய்ச்சியறிவு போதுமானதாக இல்லையாதலின், மேற்கொள்ளப்பெறும் சிகிச்சையும் மனநிறைவு கொள்ளக்கூடியதாக இல்லை. சில சமயம் தம்பதிகளின் வாழ்க்கைக் கோலத்தில் ஏற்படும் மாற்றங்களால், யாதொரு பிரத்தியேகமான சிகிச்சையுமின்றி விந்துவில் குறிப்பிடத்தக்க அளவு மேம்பாடு ஏற்பட்டுவிடுகின்றது. மருத்துவச் சோதனைகளால் இவ்வுண்மை அறியக் கிடக்கின்றது. குழந்தைப்பேறில்லா ஒரு சிலதம்பதிகள் ஒரு சில மாதங்கள் தலயாத்திரையை மேற்கொள்ளுங்கால் அவர்களின் வாழ்க்கையில் ஏற்படும் மாற்றங்கள்தாம் அவர்கட்குக் குழந்தைப்பேற்றினை விளைவிக்கின்றனவோ என்று அறிவியல் அடிப்படையில் ஊகிக்கவும் இடமுள்ளதல்லவா? பண்டையோர் சமய அடிப்படையிலும் பிறஅடிப்படைகளிலும் அமைத்த பல திட்டங்களையும் முறைகளையும் எண்ணுந்தோறும் பல அறிவியலுண்மைகள் புலனாகின்றன; நம் உள்ளத்திலும் ஓரளவு தெளிவு பிறக்கின்றது.

பெண் மலடு : இனி, பெண் மலடுபற்றி ஒரு சில செய்திகளைக் கூற விரும்புகின்றேன். முட்டை பக்குவமடைதலில் தவறுதல், பிறப்புறுப்புப்பாதையில், குறிப்பாகக் கருப்பையின் வாயிலும் கருக்குழல்களிலும் தடையிருத்தல், கருப்பை இடம் பெயர்ந்திருத்தல், கருப்பையிலும் அதன் அணைச்சவ்விலும் ஏற்படும் வளர்ச்சியில் நேரிடும் தொந்தரவுகள்— ஆகியவை பெண் மலடு ஏற்படுவதற்கு முக்கியகூறுகளாகும். இறுதியில் குறிப்பிட்ட காரணம் கருவுற்ற முட்டை தன்னைப் பதித்துக் கொண்டு வளர்வதற்குத் தடையாக

உள்ளது: ஆணின் விந்தணுக்களை ஆராய்வதைப்போல் பெண்ணின் முட்டைகளின் உயிர்ச் சக்தியையோ அல்லது அவற்றின் தன்மையையோ ஆராய்வதற்கு யாதொரு திட்டமான முறையும் இல்லை: நேரடியாக ஆராய்வதற்கு முட்டைகள் நமக்குக் கிட்டுவதில்லை; பெண்ணின் பொது நிலையையும் அவளுடைய இனப்பெருக்க மண்டலத்தையும் ஆராய்ந்து நேரல் முறையில்தான் முட்டைகளின் நிலைமையை அறுதியிடல் வேண்டும்.

ஒரு பெண்ணிடம் மாதந்தோறும் ஒரு முட்டை முதிர்ச்சியடைந்து வெளியிடப்பெறுகின்றது என்பதை நீ நன்கு அறிவாய். எனினும், சில சமயம் முட்டையணு முதிர்ச்சியடைவதில் தவறலாம்; அல்லது அப்படி முதிர்ச்சியடைந்தாலும் அது சூற்பையிலிருந்து கழன்று விடுபடுவதில்லை. ஒரு பெண்ணிடம் முட்டை எப்பொழுது முதிர்கின்றது, முதிர்ந்த முட்டை எப்பொழுது வெளி வருகின்றது என்பதைத் தீர்மானிக்கவும் பல முறைகள் உள்ளன: அவற்றையும் உனக்கு விளக்குவேன்.

முட்டை முதிரும் காலத்தை அறுதியிடல்: கருத்தரியாப் பருவத்தைப் பற்றிக்[25] கூறும்பொழுது நாடோறும் வெப்ப நிலையைப் பதிந்து காணும் முறையின் சிறப்பைக் குறிப்பிட்டேன் அல்லவா? அதனை ஈண்டு நினைவு கூர்வாயாக. இவ்வாறு பல மாதங்கள் அன்றாட வெப்ப நிலைகளை அளந்து குறிக்கும் விளக்கப்படத்திலிருந்து[26] ஒரு பெண்ணிடம் முட்டை பக்குவமடைகின்றதா, அஃது எப்பொழுது நடைபெறுகின்றது என்பது போன்ற செய்திகளைக் கிட்டத்தட்டச் சரியாக அறுதியிடலாம். குழந்தைப் பேறில்லாத் தம்பதிகள் இந்தப் பதிவேட்டினைக்[27] கொண்டு தம்முடைய உச்சநிலைக் கருத்தரி நாட்களை அறுதியிட்டுக்கொள்ளலாம்.

---

25. கருத்தரியாப் பருவம்—Safe period
26. விளக்கப்படம்—Chart
27. பதிவேடு—Record

இன்று இந்த அன்றாடச் வெப்பநிலைப்பதிவேடுகள் மலட்டு நிலையை ஆராய்வதற்கு விரிவாகப் பயன்படுகின்றன. அறை மலட்டு நிலையின் காரணத்தை அறியவும் அதற்கு ஏற்ற சிகிச்சை செய்வதற்கும் பெரிதும் துணையாகவுள்ளன.

முட்டை பக்குவப்படும் காலத்தைக் கருப்பையின் வாயி லிருந்து கசியும் 'கருவாய்ச் சளி'[28] எனப்படும் சுரப்பு நீரின் தோற்றத்தாலும் அறுதியிடலாம். முட்டை விடுவிக்கப் பெறும் காலத்தையொட்டி இந்தச் சுரப்புநீர் மிக அதிக மாகவும் நீர்போல் மெல்லியதாகவும் இருக்கும். இதனை நுண்பெருக்கியால் சோதித்தால் ஏராளமான பெண் ஹார் மோனின் படிகங்கள்[29] இருப்பது தெரியவரும். இப் படிகங் கள் முட்டை முதிர்ச்சியடைவதைக் குறிப்பிடுகின்றன.

முட்டை முதிர்ச்சியடைவதை அறுதியிடுவதற்கு 'யோனிக்குழல் பூசு முறை'[30] என வழங்கப்பெறும் ஒருமுறை யும் பயன்படுகின்றது. பிரத்தியேகமாகச் செய்யப்பெற்ற ஒருவகைப் பீச்சாங்குழலைக்[31] கொண்டு யோனிக்குழலில்வடி யும் நீர் நாள்தோறும் எடுக்கப்பெற்று ஒரு கண்ணாடி நழுவத் தில்[32] வைக்கப்பெறுகின்றது. இந்த நழுவத்தை ஒரு நுண் பெருக்கியின் கீழ் வைத்துச் சோதித்து முட்டை முதிர்ச்சி யடைந்ததையும் அஃது என்று அடைந்தது என்பதையும் மிகச் சரியாகச் சொல்லிவிட முடியும்.

கடந்த சில யாண்டுகட்குள் கண்டறியப்பெற்ற ஒரு பிரத்தியேகமான சிறு நீர்ச் சோதனையாலும் முட்டை பக்குவமடைதலை அறுதியிடலாம். ஒரு பெண்ணின் சிறு நீரில் சிறிதளவு நாடோறும் எடுக்கப்பெற்று அதனைக் கொண்டு பருவமடையாத வெள்ளெலியின்மீது குத்திப் புகுத்தப் பெறுகின்றது. சிறு நீரைக் குத்திப் புகுத்திய

28. கருவாய்ச் சளி-Cervical mucus
29. படிகங்கள்-Crystals
30. யோனிக்குழல் பூசுமுறை-Vaginal smear method
31. பீச்சாங்குழல்-Syringe
32. நழுவம்-Slide

இரண்டு மணி நேரம் கழித்து அந்த எலியைக் கொன்று அதன் சூற்பைகள் சோதிக்கப் பெறுகின்றன. முட்டை பக்குவமடைந்திருந்தால் பெண்ணின் சிறு நீரில் காணப் பெறும் ஒருசில ஹார்மோன்கள் எலியின் சூற்பைகளில் ஒரு வித நெருக்கத்தை[33] விளைவித்து அவற்றை இளஞ் சிவப்பு[34] நிறமாகவோ, அல்லது செந்நிறமாகவோ தோற்றமளிக்கச் செய்கின்றன. முட்டை பக்குவமடைந்திராவிடில் சூற்பை கள் வழக்கம்போல் மங்கலான நிறத்தைக் கொண்டவை யாகவே உள்ளன.

பெண்ணின் கருப்பையின் அணைச் சவ்வினின்றும் ஒரு சிறு துண்டு இழையத்தை எடுத்து அதனை ஒரு நுண் பெருக்கி யால் சோதித்து முட்டை பக்குவமடைதல் அறுதியிடப் பெறுகின்றது: இம்முறை 'எண்டோமெட்ரிய பயோப்ஸி'[35] என வழங்கப்பெறும். சாதாரணமாக இச்சோதனை மாத விடாய் ஏற்படுவதற்குச் சற்று முன்னர், அல்லது அது ஏற்பட்ட முதல் நாள், செய்யப்பெறுகின்றது. முட்டை பக்குவமடைதல் நடைபெற்றதும் கருவுற்ற முட்டையை ஏற்பதற்காகக் கருப்பையின் அணைச் சவ்வு பிரத்தியேக மான மாற்றங்களை அடைகின்றது. இந்த மாற்றங்கள் நடைபெறவில்லை என்பது தெரிந்தால், அந்த மாதத்தில் சூற்பையில் முட்டை பக்குவமடையவில்லை என்பதற்கு அது உய்த்தறியக்கூடிய சான்றாகும்.

இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நீ நினைவு கூர் தல் வேண்டும். முட்டை பக்குவமடையாமலேயே மாத விடாய் நிகழ்தல் கூடும் என்று ஏற்கெனவே கூறியுள்ளேன். இவ்வித மாதவிடாய் வட்டங்கள் 'முட்டை பக்குவமடையா வட்டங்கள்'[36] என்று வழங்கப்பெறும். அவை குமரப் பரு

33. நெருக்கம்-Congestion 34. இளஞ்சிவப்பு-Pink
35. எண்டோமெட்ரிய பயோப்ஸி-Endometrial biopsy
36. முட்டை பக்குவமடையா வட்டங்கள்-'Anovulatory cycles'

வத்திலும் சூதகஒய்வு நடைபெறும் பருவத்திலும் அடிக்கடி நிகழலாம். எனினும், அவை ஒரு பெண்ணின் சுறுசுறுப்பான இனப்பெருக்கப் பருவத்திலும் அடிக்கடி நிகழ்ந்து குறைந்த அளவு கருத்தரிப்பினை விளைவித்தல் கூடும்.

பிறப்புறுப்புகளில் தடைகள்: ஒரு பெண்ணின் முட்டை நன்முறையில் பக்குவப்பட்டாலும் யோனிக்குழலில் செலுத்தப்பெறும் ஆணின்விந்தணுக்கள் மேனோக்கிச் சென்று முட்டையைச் சந்திப்பதற்குப் பெண்ணின் பிறப்புறுப்புகளில் பல தடைகள் இருந்து அவளை மலடியாக்குகின்றன. இத் தடைகள் யோனிக் குழல், கருப்பையின் வாய், கருக்குழல்கள் ஆகியவற்றில் எங்காவது இருக்கலாம். ஆகவே, கருத்தரியா நிலையிலுள்ள பெண்களிடம் இப்பாதைகள் சரியாகவுள்ளனவா என்பதனையும் அறுதியிடுதல் வேண்டும்.

யோனிக் குழலின் நுழைவாயிலைச் சுற்றியுள்ள தசைகள் இறுகியிருப்பதால் ஆண்குறியை நுழைக்க முடிவதில்லை; இதனால் விந்துவை யோனிக் குழலினுள் செலுத்த முடிவதில்லை. இந்நிலையைப் பிறிதொரு சமயம் ஆராய்வேன்; ஆயின், இதுவும் பெண்ணின் கருத்தரியாநிலைக்கு ஒருகாரணமாகும் என்பதை உணர்த்துவதற்காகவே இதனை ஈண்டுக் கூறினேன். திருமணம் நடைபெற்ற நான்காண்டுகட்குப் பின்னர் ஒரு தம்பதிகள் மருத்துவமனைக்கு வந்தனர். மனைவி நான்காண்டுகளில் ஒரு தடவைக்கூடக் கருத்தரிக்கவில்லை; அவளைச் சோதித்ததில் இக்காலத்தில் ஒரு தடவைக்கூட அவளிடம் முழுமையான இணைவிழைச்சு நடைபெறவில்லை என்பது தெரிந்தது: எப்படியெனில், அவளிடம் கன்னிச் சவ்வு அப்படியே கிழியாமல் இருந்தது; இவர்களில் கணவனுடைய ஆண்மையில்[37] யாதொரு குறையும் இல்லை. மனைவியிடம் ஏற்பட்ட அச்சத்தின் விளைவாக அவளது யோனிக் குழலின் நுழைவாயிலைச்சுற்றிலுமுள்ள தசைகளில்

37 ஆண்மை—Potency

அனிச்சை வலிப்பு[38] ஏற்பட்டு ஆண் குறியை நுழைப்பது சாத்தியப்படுவதே இல்லை. மருத்துவமனையில் சிகிச்சையின் மூலம் இத்தடை நீக்கப்பெற்றதும் ஆண் குறியை நுழைப் பது எளிதாயிற்று. இரண்டு திங்களில் அவருடைய மனைவி யும் கருவுற்றாள்.

கருப்பையின் வாயிலுள்ள தடையும் யோனிக் குழலில் செலுத்தப்பெற்ற விந்தணுக்கள் கருப்பையினுள் நுழை வதற்கு இடையூறாக இருத்தல் கூடும். இத்திறப்பு யாதாவது ஒரு தொற்றின் காரணமாகத் தடித்த உறுதியான சுரப்பி நீரால் நிரம்பியிருந்தால் அது விந்தணுக்கள் செல்வதற்கு ஓர் அரணாக அமைந்து விடுகின்றது. விந்தணுக்கள் இந்தத் தடித்த சளியில் சிக்கிக்கொண்டு மேல் நோக்கி நகர முடிவ தில்லை. இந்தத் தொற்று நீக்கப்பெற்றால் பெண் கருத்தரித் தல் கூடும். இத்தகைய குறையினையுடைய பல பெண்கள் பல ஆண்டுகள் கருத்தரியாமலுள்ளனர் என்பதற்கும் இத்தடை நீக்கப்பெற்றதும் கருத்தரிப்பு பெரும்பாலும் உடனே நிகழ்ந்து விடுகின்றது என்பதற்கும் மருத்துவமனைச் சான்றுகள் உள்ளன. கருவாயிலின் அடைப்பிற்குத் தொற் றினைத் தவிர வேறு நிலைமைகளும் உள்ளன. ஆகவே, ஒவ் வொரு பெண்ணையும் தனித்தனியாக நன்கு சோதித்து உண்மை நிலையை அறிய வேண்டும்.

கருப்பையினுள் விந்தணுக்கள் நுழைந்தனவா என்பதை "இணை விழைச்சுக்குப்பின் சோதனை[39]" என்ற சோதனை மூலம் அறுதியிடலாம். இச்சோதனை இன்று 'ஹுஹ்னர் சோதனை'[40] என்று வழங்கப் பெறுகின்றது. கணவனுடன் இணைவிழைச்சு புரிந்த பல மணி நேரங்கழித்து அவளுடைய யோனிக்குழலிலிருந்தும் கருப்பையின் வாயிலிருந்தும் வரும் சுரப்பு நீர்களில் ஒரு பகுதியை அகற்றி நுண் பெருக்கியின்

38. அனிச்சை வலிப்பு–Reflex spasm
39. இணைவிழைச்சுக்குப்பின் சோதனை–Post-coital test
40. ஹுஹ்னர் சோதனை–Huhner test.

மூலம் ஆராயப்பெறுகின்றது. இச்சோதனை மூலம் விந்தணுக்களின் இருப்பும் அவற்றின் உயிர்ச் சக்தியும் அறுதியிடப்பெறுகின்றன. இது மாதவிடாய் வட்டத்தின் நடுப்பகுதியில்—கருத்தரி நிலை உச்ச நிலையில் இருக்கும் நாளன்று—மேற்கொள்ளப் பெறுகின்றது. இச்சோதனை மூலம் விந்தணுக்கள் கருப்பையின் வாயிலில் நுழைந்தனவா என்பதையும், அவை யோனிக் குழலிலும் கருப்பையிலும் எவ்வளவு நேரம் இயக்க நிலையிலுள்ளன என்பதையும் அறுதியிடலாம்.

கருக்குழல்களினுள் விந்தணுக்கள் நுழைந்தனவா என்பதை அறுதியிடுவதற்கு யாதொரு சோதனையும்கண்டறியப் பெறவில்லை. அடிவயிற்றைக் கிழிக்காமல் நேர்முறையில் குழல்களைச் சோதிப்பதற்கும், அவற்றினுள் கருவிகளை நுழைத்து ஆராய்வதற்கும் யாதொரு வழியும் இல்லை. எனினும், சில பிரத்தியேகமான முறைகளால் குழல்கள் திறந்துள்ளனவா, அன்றி மூடப்பெற்றுள்ளனவா என்பதை அறுதியிட முடிகின்றது. இச்சோதனை வருமாறு: கரியமில வாயு ஒரு குறிப்பிட்ட அளவு அழுக்க நிலையில் கருப்பையினுள் செலுத்தப்பெறுகின்றது. கருப்பையின் அறை நிரம்பியதும் வாயு, குழல்களின் வழியாகப் போக முயல்கின்றது. குழல்கள் திறந்த நிலையிலிருப்பின், வாயு அவற்றைக் கடந்து அடிவயிற்றுக்கு வருகின்றது. குழல்கள் மூடப்பெற்றிருந்தால் வாயு தடையேற்பட்டிருக்கும் இடத்திற்கு அப்பால் கடந்து செல்ல முடிவதில்லை. உள்ளே செலுத்தப் பெறுவதற்கேற்ற வாயுவின் அழுக்க நிலையிலிருந்தும், அடிவயிற்றில் துடிப்பறி கருவியை[41] வைத்துக் கேட்கும்பொழுது வாயுவின் குமிழிடும் ஒலிகளிலிருந்தும், பெண் உட்காரும் பொழுது வாயு மேலெழுந்து விதானத்தில் எரிச்சலை விளைவிப்பதால் அவளுக்கேற்படும் புயவலியிலிருந்தும், வாயுவைச் செலுத்திய பிறகு மேற்கொள்ளப் பெறும் புதிர்க்கதிர்ச் சோதனையாலும் கருக்குழல்கள் திறந்த நிலையிலுள்ளனவா என்பதை அறியலாம். வாயுவைச் செலுத்துவதற்குத் தேவைப்படும் பல்வேறு அழுக்க நிலைகளிலிருந்து குழல்களி

41. துடிப்பறி கருவி—Stethoscope

லேற்பட்டுள்ள தடைகளின் பல்வேறு அளவு நிலைகளை அறிந்துகொள்ளலாம். இந்தச் சோதனை கடந்த ஐம்பது ஆண்டுகட்கு முன்னரே டாக்டர் ஐ.சி. ரூபின்[42] என்ற அறிஞரால் விவரிக்கப்பெற்றது. கரியமில வாயுவிற்குப் பதிலாக ஒளிபுகாத் திரவம்[43] ஒன்றினைக் கருப்பையினுள்ளும் குழல்களினுள்ளும் பாயும்படிச் செய்து புதிர்க்கதிர்ப் படங்கள் எடுக்கப்பெறுகின்றன. இம்முறையினால் கருக்குழல்களின் நிலையினை இன்னும் விரிவாக அறிந்துகொள்ளலாம். இச் சோதனைகள் குறைகளையறியப் பயன்படுவதுடன், அடைபட்டிருக்கும் குழல்களைத் திறப்பதற்கும் துணை செய்கின்றன. ஒரே கல்லில் இரு மாங்காய்களை வீழ்த்துவது போல் இவை கருத்தரியா நிலையின் காரணத்தை அறியவும், அந்நிலைக்குச் சிகிச்சையாகவும் பயன்படுகின்றன.

கருக்குழல்களில் ஏற்படும் ஏதாவதொரு வீக்கம் அவற்றில் அடைப்பினை விளைவித்து விடுகின்றது. வெள்ளை நோய், கருச்சிதைவு அல்லது கருவுயிர்ப்பு ஏற்பட்ட பிறகு நேரிடும் தொற்றுகள், இருமல் நோய் போன்றவை கருக்குழல்கள் வீங்குவதற்குக் காரணங்களாகும். பிறவியிலேயே உள்ள அமைப்புக் குறையும், பிறப்பு வழிகளில் ஏற்படும் உட்புற, வெளிப்புற வளர்ச்சிகளும், கவலையாலும் உள்ளக்கிளர்ச்சிக் குலைவாலும் ஏற்படும் தசைவலிப்பும்[44] இவ்வீக்கத்திற்கு வேறு காரணங்களாகும். கருக்குழல்கள் வீங்கிய நிலையைப் படத்தில் (படம் 49) காண்க. நன்னிலையிலுள்ள கருப்பை, கருக்குழல்கள், சூற்பைகள் ஆகியவற்றை விளக்கும் படத்துடன் (படம்-50)இப்படத்தை ஒப்பிட்டுத் தெளிவுபெறுக.

சில இயல்பு கடந்த நிலைகள் : குழந்தைப் பேறில்லாத தம்பதிகளிடம் உள்ள உடலியல்பற்றிய இயல்புகடந்த நிலைகளை விரிவான குறையறி ஆராய்ச்சிகளாலும் அறுதியிட

---

42. டாக்டர் ஐ. சி. ரூபின்—Dr. I.C. Rubin
43. ஒளிபுகாத் திரவம்—Opa ue li uid
44. தசை வலிப்பு—Muscular spasm

முடிவதில்லை. சிலரிடம் நோய்க் குறிபற்றிய கூறுகள்[45] உள்ளன. இக் கூறுகளை ஆராயும் முறைகள் இன்னும் கண்டறியப்பெறவில்லை. மற்றவர்களிடம் கருத்தரியா நிலை




படம்—49: இரண்டு கருக்குழல்களிலும் வீக்கம் ஏற்பட்டிருப்பதைக் காட்டுவது.

உளக்கோளாறுகளால் ஏற்பட்டுள்ளது. அச்சம், கவலை போன்ற உள்ளக்கிளர்ச்சி பற்றிய கூறுகள் இனப் பெருக்கச்




படம்—50: நன்னிலையிலுள்ள கருப்பை, சூற்பைகள், கருக்குழல்கள் ஆகியவற்றைக் காட்டுவது.

செயல்களும் உட்பட உடற்செயல்களைப் பாதிக்கின்றன என்பதை மருத்துவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். இக்

45. நோய்க்குறிபற்றிய கூறுகள்-Pathological factors

கூறுகள் முட்டைடப் பக்குவமடைடதலைப் பாதிக்கலாம்; அவை கருக்குழல்களிலோ அல்லது பிறப்புறுப்புப் பாதைகளிலோ வலிப்புகளை[46] விளைவிக்கலாம்; அல்லது கருவுற்ற முட்டை கருப்பையின் சுவர்களில் பதித்துக்கொள்வதிலும் அவற்றின் தலையீடு[47] இருக்கலாம். சிலருக்குத் தத்துப் பிள்ளை எடுத்த பிறகு குழந்தைப்பேறு ஏற்பட்டு விடுகின்றது! ஒரு தம்பதி கட்கு இருபதாண்டுகளாகக் குழந்தையில்லாதிருந்து ஒரு பெண் குழவி பிறந்தது. அதன் பிறகு அவர்கட்குக் குழந் தைப்பேறே ஏற்படவில்லை. அவர்கள் பெரிய செல்வந்தர் கள். தங்கட்கு ஆண் குழந்தை பிறக்கவில்லையே என்று அவர்கள் ஒரே கவலையில் மூழ்கி இருந்தனர். செல்வத்தின் மீதுள்ள ஆசையால் பலர் அவர்கள் வீட்டுப் பெண்ணை (வயது 18) மணந்துகொள்ள அரும்பாடுபட்டனர். இறுதி யில் செல்வாக்குள்ள ஒருவர் அப் பெண்ணைத் தம் மகனுக்கு மணம் புரிவித்துக் கொண்டார். நல்ல இடத்தில் பெண் ணுக்கு மாப்பிள்ளை கிடைத்தது என்ற மகிழ்ச்சி ஆண் குழந்தை இல்லையே என்ற அவர்களிடமிருந்த கவலையை மறக்கச் செய்தது. ஒரு சில யாண்டுகளில் இத் தம்பதிகட்கு ஆண் குழந்தை பிறந்தது! இத்தகையவர்களிடம் கருத்தரியா நிலை உள்ளக் கிளர்ச்சிக் கோளாறுகளால் ஏற்பட்டிருத்தல் கூடும்; குழந்தை இல்லையே என்ற கவலையே கருத்தரியா நிலைக்கு ஒரு காரணமாகவும் அமையலாம்.

சில பெண்களிடம் மருத்துவர் கருப்பையை மாற்றி வைத்தார் என்பது போன்ற செய்தியை நீ கேட்டிருப்பாய் என்று கருதுகிறேன். பெண்கள் கருத்தரியா நிலையிலிருப் பதற்கு அவர்கள் கருப்பை இருக்கவேண்டிய நிலையை விட்டு இடம் பெயர்ந்திருந்தாலும் மலட்டு நிலைக்கு ஒரு காரணமாகும். சிலரிடம் கருப்பை முன்னோக்கித் துருத்திக் கொண்டும், சிலரிடம் பின்னோக்கித் துருத்திக்கொண்டும் இருக்கும். இன்னும் சிலரிடம் அது மடிந்தும் கிடக்கும்;

46. வலிப்பு—Spasm
47. தலையீடு—Interference

இந்நிலையில் அது கருப்பையிலுள்ள வழியை அடைத்து விந்தணுக்கள் கருக்குழலை நோக்கிச் செல்வதைத் தடுக்கின்றது. மருத்துவர் இந்தத் தவறான நிலையை எளிதில் சரிப்படுத்திக் கருப்பையை நன்னிலையில் பெயர்த்து வைத்துத் தடையை நீக்கிவிடுவார்.

கருத்தரியா நிலையிலுள்ள சிலரிடம் கருவுறல் ஏற்பட்டாலும் கருவுற்ற முட்டை சரியாகக் கருப்பையில் பதித்துக் கொள்வதில் தவறுகின்றது. இதனாலும் பெண்களிடம் கருப்பம் ஏற்படாமற் போகின்றது; கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமற் போய்விடுகின்றது! ஒரு சில ஹார்மோன்களின் குறைவினாலோ, அல்லது கருப்பையின் அணைச்சவ்வு தன்னைச் சரியாக ஆயத்தம் செய்துகொள்வதற்குத் தடையாகவுள்ள பிற காரணங்களாலோ இவ்வாறு தவறுதல் நேரிடலாம். இவற்றைக் குணப்படுத்துவதற்குத் தற்காலத்தில் பல நல்ல முறைகளும் மருந்துகளும் கண்டறியப்பெற்றுள்ளன.

பல செய்திகளை விரிவாக விளக்கியதால் இக் கடிதம் சிறிது நீண்டது. செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் முறைகளையும் அவற்றோடு தொடர்புள்ள வேறு சில செய்திகளையும் அடுத்து எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 28

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன், நலனேயாகுக.

எரித்ரோபிளாஸ்டாஸிஸ் : முன்னொரு கடிதத்தில் Rh-கூறு என்பதைப்பற்றிக் குறிப்பிட்டது உனக்குநினைவு இருத்தல் கூடும். வெள்ளையர்களில்[48] 85 சதவிகிதம் Rh-பாஸிட்டிவ் ஆகவும், 15 சதவிகிதம் Rh-நெகட்டிவ் ஆகவும், இருக்கின்றனர் என்றும் குறிப்பிட்டேன் அல்லவா? Rh-பாஸிட்டிவ் ஆண் Rh-நெகட்டிவ் பெண்ணை மணக்கும்பொழுது பொருந்தாநிலை ஏற்படுகின்றது. இந்நிலையில் இத் தம்பதிகட்குப் பிறக்கும் குழவி தந்தையிடமிருந்து Rh-பாஸிட்டிவ் குருதியை மரபுவழியாகப் பெறுதல்கூடும். இக்குழந்தை Rh-நெகட்டிவ் தாயிடம் கருப்பையில் வளருங்கால் இரு குருதிகளுக்கும் பொருந்தாநிலை உண்டாகின்றது. பிறக்கும் குழவியும் அழிவுடைக் குருதி நிலையுடன் பிறக்கின்றது இந் நிலையை 'எரித்ரோபிளாஸ்டாஸிஸ்'[49] என்று மருத்துவர்கள் குடுப்பிடுவர். எனினும், இந்நிலை முதல் அல்லது இரண்டாவது குழந்தைக்கு அரிதாகவே ஏற்படுகின்றது. இதற்குப் பிறகு பிறக்கும் குழவிகளிடம் இந்நிலை அதிகமாக இல்லை. இருபத்தாறு குழவிகளில் ஒரு குழவிக்கு இந்நிலை ஏற்படுகின்றது என்று இன்றைய ஆராய்ச்சிகளால் அறிகின்றோம். எனவே, இந்நிலை குழந்தையில்லா நிலைக்கு குறிப்பிடத்தக்கவாறு காரணமாக இருக்கவில்லை. மேலும், இந்நிலையைக் கொண்டு பிறக்கும் குழவிகளையும் காப்பாற்றுவதற்கு இன்று பலமுறைகள் கண்டறியப்பெற்றுள்ளன.

---

48. இத்தகைய ஓர் ஆராய்ச்சி நம்மவர்கட்கும் செய்து காண்டல் மிகவும் இன்றியமையாதது.

49. எரித்ரோ பிளாஸ்டாஸிஸ் —Erythroblostosis

நவீன முறைகளில் மக்கட்பேறு: இனி, மக்கட்பேறில்லாத் தம்பதிகட்கு எவ்வாறு நவீனமுறையில் அப்பேற்றினை அளிக்கலாம் என்பதை விளக்குவேன். இன்று இத்தகைய தம்பதிகளிடமுள்ள குறைகளை அறிந்து சிகிச்சை செய்வதில் 80 சதவிகிதம் வெற்றியளித்துள்ளது; சோதனையால் கண்டறியப்பெற்ற குறைகளைப் பொறுத்தே சிகிச்சை மேற்கொள்ளப்பெற்று வருகின்றது. உடலியல்பற்றிய குறைகள் பல்வேறு மருத்துவ—, அல்லது அறுவைமுறைகள் மூலம்நிவர்த்தி செய்யப்பெறுகின்றன. விந்தணுக்கள் அல்லது முட்டையணு உற்பத்தியில் குறையிருப்போர் பிரத்தியேகமான ஹார்மோன்களும் விட்டமின்களும் அளிக்கப்பெறுகின்றனர். பொதுவாக, தம்பதிகளின் உடல்—உள்ளக்கிளர்ச்சி—நலம் பற்றி அதிகக் கவனம் எடுத்துக்கொள்ளப்பெறுகின்றது. ஒரு சிலரிடம் செயற்கையாக விந்து பாய்ச்சல் முறையும் மேற்கொள்ளப்பெறுகின்றது.

செயற்கை முறையில் விந்து பாய்ச்சுதல்: ஆணின் விந்துப் பாய்மத்தை எடுத்து பொறிநுட்பமுறையில் பெண்ணின் பிறப்புறுப்புப் பாதையில் செலுத்தி ஒரு பெண்ணைக் கருவுறச் செய்தலே செயற்கையாக விந்துப் பாய்ச்சும் முறையாகும். இதில் இயற்கையில் பெறும் சரக்கு செயற்கை முறையில் குத்திப் புகுத்தப்பெறுகின்றது; விந்தணுக்கள் ஓர் ஆணினுடையவை; முட்டையணுவும் பெண்ணினுடையது என்பது வெளிப்படை. இவை இரண்டும் பெண்ணின் கருக்குழலில் சந்திக்கும்பொழுதுதான்—ஆய்வகச் சோதனைக் குழலில் அல்ல!—கருத்தரிப்பு ஏற்படுகின்றது. இம்முறை நீண்டகாலமாகப் பிராணிகளிடம் மேற்கொள்ளப்பெற்று வருகின்றது: கி. பி. 1784இல் இத்தாலிய அறிவியலறிஞர் ஸ்பல்லான்ஸானி[50] என்பார் பெண் நாயென்றினை இவ்வாறு கருவுறச் செய்தார் என்று அறிகின்றோம். அவர் அதே வகையைச் சேர்ந்த ஆண் நாயின் விந்துப் பாய்மத்தை எடுத்து அதனை ஒரு பீச்சாங்குழல்மூலம் பெண் நாயின் யோனிக்குழலினுள்

50. ஸ்பல்லான்ஸானி—Spallanzani

ளும் கருப்பையினுள்ளும் குத்திப் புகுத்தினர்: அறுபத்திரண்டு நாட்கள் கழிந்ததும் பெண் நாய் மூன்று குட்டிகளை ஈன்றன. அவை நிறத்திலும் வடிவத்திலும் தாயைப்போலவும் தந்தையைப்போலவும் இருந்தன அன்றிருந்து இம்முறை பல்வேறுவகைப் பிராணிகளிடம் மேற்கொள்ளப்பெறுகின்றது. சுண்டெலிகள், ஒருவகை, முயல்கள், நாய்கள், பசுக்கள், குதிரைகள்—இப்பொழுது பெண்கள்— ஆகியவைகளிடம் எண்ணற்ற தடவைகள் இம்முறை வெற்றியுடன் கையாளப் பெற்றுள்ளது.

மேற்கூறப்பெற்ற முறை வெறும் சோதனை அளவில் தான் மேற்கொள்ளப்பெறுகின்றது என்று கருதுதல் வேண்டா. உயர்ந்தவகைப் பிராணிகளைப் பிறப்பிப்பதற்காகவே இன்று பெருவழக்காக இம்முறை பயன்படுகின்றது. கிட்டத்தட்ட அறுநூறு யாண்டுகட்கு முன்னர் அரேபியக் குதிரைகளை வளர்ப்போர் இம்முறையைப் பயன்படுத்தினர் என்று சொல்லப்பெறுகின்றது. ஆனால், இந்த நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்துதான் இம்முறையின் செய்முறைப் பயன் பொதுவாக நன்கறியப் பெற்றுள்ளது. நன்கு தேர்ந்தெடுக்கப் பெற்ற ஓர் ஆண் பிராணியின் விந்துவினைக் கொண்டு ஏராளமான பெண் பிராணிகளை சினைப்படுத்தி விடலாம். கவனமாகச் சேகரிக்கப்பெற்ற விந்துப் பாய்மத்தைத் தக்க பாதுகாப்புடன் தொலைவிலுள்ள இடங்கட்கும் அனுப்பலாம். இதனால் தொலைவிலுள்ள பெண் பிராணிகளும் சினையாவதற்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. இன்று உலகெங்கும் இம்முறையைக் கையாண்டு உயர்ந்த வகை ஆடு மாடுகளும் குதிரைகளும் பிறப்பிக்கப்பெறுகின்றன. உடற்கூறுபற்றிய சங்கடத்தால் பொலிய முடியாத நிலையிலுள்ள கருத்தரியாப் பிராணிகளிடமும் இம்முறையைக் கையாண்டுப் பெண் பிராணிகளை ஈனும்படி செய்கின்றனர்.

மனிதர்களிடம் இம்முறை: *சற்றேறக்குறைய 150 ஆண்டு*கட்கு முன்னர் ஜான் ஹண்டர் என்ற ஆங்கில மருத்துவ அறிஞர் செயற்கையாக விந்துப் பாய்ச்சும் முறையை மனிதர்களிடம் கையாண்டார். எனினும் அதற்கு எழுபது யாண்டு

கட்குப் பின்னர்தான் அம்முறை பழக்கத்திற்கு வந்தது. இன்று ஒரு சிலவகைக் கருத்தரியா நிலைமைகளைச் சமாளிப்பதற்காகவே சில பெண்களிடம் இம்முறை கையாளப்பெறுகின்றது. இதில் அவளுடைய கணவனது விந்துப் பாய்மமோ வேறு ஓர் ஆடவனின் விந்துப்பாய்மமோ பயன்படுத்தப் பெறுகின்றது. கணவனிடம் ஆண்மையில்லா நிலை, பெண்ணின் யோனிவாயிலில் அல்லது கருப்பையின் வாயிலில் தடைகள் ஆகியவற்றால் விந்துப் பாய்மத்தைக் கருப்பையினுள் செலுத்த முடிகின்றதில்லை. இத்தகைய சந்தர்ப்பங்களில் பெண்ணிடம் முட்டை பக்குவப்படும் காலத்தையொட்டி கணவனின் ஒரு சில விந்துப் பாய்மத் துளிகள் ஒரு பீச்சாங்குழல் மூலம் அவளது கருப்பையின் வாயிலில் நேரடியாகச் செலுத்தப்பெறுகின்றன. கணவனின் விந்துப் பாய்மம் அளவிலும் தன்மையிலும் சரியாக இல்லாதபொழுது வேறு ஓர் ஆடவனின் விந்து பயன்படுத்தப் பெறுகின்றது.

மேல்நாடுகளில் பிறருடைய விந்துப் பாய்மத்தைப் பயன்படுத்தும் முறை இன்று சிறிது சிறிதாகப் பெருகி வருகின்றது. கணவனின் கருத்தரிவிக்கா நிலை உள்ள பொழுது, தம்பதிகளிடம் தங்கட்குக் குழந்தை வேண்டும் என்ற அவா நிறைந்திருக்கும் பொழுது அவர்கள் இரு வழிகளை மேற்கொள்ளலாம். ஒன்று: வேறொருவரின் குழந்தையை தத்துப்பிள்ளையாக எடுத்துக்கொள்வது. மற்றொன்று: செயற்கையில் விந்துப் பாய்ச்சும் முறையை மேற்கொண்டு குழந்தையைப் பெறுவது. பிற்கூறிய வழியில் பிள்ளைப்பேறு அடைதல் 'அரைத்தத்து'[51] என்று வழங்கப்பெறுகின்றது. ஒரு சிலர் இம்முறையையே விரும்புகின்றனர். ஏனெனில், இவ்வாறு பிறக்கும் குழந்தையிடம் பெற்றோர்களின் ஒருவரது பண்புகள் இறங்குகின்றன. ஆனால், தத்துப் பிள்ளையிடம் இருபாலாரின் குணங்களில் ஒருவரது பண்புகளாவது மரபுவழியாக இறங்குவதற்கு வாய்ப்பே இல்லை. மேலும், குழந்தை பெறவேண்டும், தான் பெற்ற குழந்தையைப்

51. 'அரை தத்து'—'Semi adoption'

பாலூட்டி வளர்க்கவேண்டும் என்ற மனைவியின் இயற்கைத் துடிப்புக்கு 'அரைத் தத்து' முறையினால் ஒருவித மனநிறைவு ஏற்படுவதற்கு வாய்ப்பு கிடைக்கின்றது. தன் மனைவி கருவுற்றிருக்கும்பொழுது கணவனும் பிறக்கப்போகும் குழந்தையைத் தன்னுடைய குழந்தையாகவே கருது கின்றான். பிறக்கும் குழந்தையும் கணவனுக்கும் மனைவிக் கும் பெரு மகிழ்ச்சியை அளித்துக் குடும்பத்திற்கும் ஓர் ஆதரவினைத் தருகின்றது. சில அமெரிக்கக் குடும்பங்களில் சில தம்பதிகள் இம்முறையினால் இரண்டு அல்லது மூன்று குழவிகளைப்பெற்று மகிழ்ச்சி குறையாது இருக்கின்றதாகச் சொல்லப்பெறுகின்றது. தம்பதிகளும் மருத்துவரும் நன்கு கலந்து யோசித்த பிறகே 'கொடையாளியின்' விந்துப் பாய் மத்தை எடுக்கத் துணியவேண்டும். இதற்குத் தம்பதிகள் இருவரது அவாவும் இன்றியமையாதிருப்பதுடன் அவர்கள் இருவரும் தனித்தனியே மனப்பூர்வமாக இம்முறைக்குத் தம் விருப்பத்தைத் தெரிவித்தல்வேண்டும். இம்முறையைக் கை யாளும் பொழுது தம்பதிகள் விந்துக் கொடையாளி யார் என்பதையும், அங்ஙனமே விந்துக் கொடையாளியும் யாருக்கு இஃது அளிக்கப்பெறுகின்றது என்பதையும் அறிந்துகொள்ளாதிருத்தல் பெரிதும் வேண்டற்பாலது. பின்னர் எழக்கூடிய பல்வேறு சிக்கல்களைத் தவிர்ப்பதற்கு இஃது அவசியம் மேற்கொள்ளப்பெற வேண்டியதொன்று. தேர்ந்தெடுக்கப்பெறும் கொடையாளி நல்ல குடும்பத்தி லுள்ளவராகவும், நல்ல, உடல் சுகாதாரத்துடனும் இருத் தல் வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறவேண்டியதில்லை.

மேற்கூறிய முறை ஒரே தடவையில் வெற்றியளிக்கும் என்று சொல்வதற்கில்லை. இது பெண்ணுக்குப் பெண் பெரி தும் மாறுபடும். சில சமயங்களில்—இஃது அரிதாக நடை பெறுவது—ஒரு பெண் ஒரே தடவையில் கருவுறுகின்றாள். ஆனால், பல மாதங்கள் இம்முறையைத் தொடர்ந்து கை யாளுவதனால்தான் கருப்பம் ஏற்படுகின்றது என்பது நடை முறையில் காணும் உண்மை. சிலரிடம் இம்முறை வெற்றி யளிப்பதில்லை; பெண்களே மலடாக இருந்தால் இம்முறை யால் எங்ஙனம் வெற்றி ஏற்படும்?

இம்முறையினுல் பிறக்கும் குழவிகளுக்குச் சட்டபூர்வ மான உரிமைகள் யாவும் உண்டு என்பதைச் சொல்லவேண் டியதில்லை; இத்துறையில் பல கருத்து வேறுபாடுகள் இருக் கத்தான் செய்கின்றனவாயினும், அவற்றிற்குப் பொருளே இல்லை. ஒரு கணவனும் மனைவியும் விரும்பித் தத்துப் பிள்ளை யாக எடுக்கும் குழந்தைக்கு எல்லா உரிமைகளும் எங்ஙனம் சட்டப்படி வருகின்றனவோ, அங்ஙனமே இருவரும் விரும் பிச் செயற்கையாக விந்துப் பாய்ச்சும் முறையால் பெற்ற குழந்தைக்கும் எல்லாவிதமான சட்ட உரிமைகளும் வருதல் தானே முறை? இம்முறை 'அரைத்தத்து' என்று வழங்கப் பெற்றாலும், 'முழுத் தத்து'விடம் இல்லாத பெற்றோர் களின் ஒருவரது பண்புகள் இக்குழந்தையிடம் மரபுவழியாக இறங்கியிருப்பதால் இதற்குத்தானே எல்லா உரிமைகளும் அதிகமாக வருதல் வேண்டும்? இம்முறை இப்பொழுதுதான் சிறிது சிறிதாக நடைமுறைக்கு வந்துகொண்டிருப்பதால், சட்டபூர்வமான ஆதரவுகள் இக்குழந்தைகட்கு ஏற்படுவ தற்கு யாதொருவிதமான ஏற்பாடுகளும் இன்னும் மேற் கொள்ளப் பெறவில்லை.

**நிரந்தரப் பெண் மலடுக்குக் கழுவாய் :** ஒரு பெண் நிரந் தரமாகவே மடலாக இருந்தால், இம்முறையினுல் அவளைக் கருவுறச் செய்தல் முடியாது; ஒரு பெண்ணின் முட்டையை எடுப்பதற்கும், அதனை இன்னொரு பெண்ணிடம் செயற்கை யாகப் பதிப்பதற்கும் இன்னும் யாதொரு முறையும் கண் டறியப்படவில்லை. இவ்விடத்தில் அமெரிக்க நாட்டில் நடை பெற்ற நிகழ்ச்சியொன்றினைக் கூறுவது சாலப் பொருத்த மாகும். முப்பத்தைந்து வயது நிரம்பிய நங்கையொருத்தி ஒரு கல்லூரிப் பேராசிரியரை மணந்து கொண்டாள். பத்தாண்டுகளாக அவளுக்குக் குழந்தைப்பேறு ஏற்பட வில்லை. மருத்துவச் சோதனையால் அவளிடம் நிரந்தரமான மலடு ஏற்பட்டிருக்கும் என்று அதனையும் அவள் மேற்கொண் டாள். அதன் மூலம் அவள் பிறவியிலேயே இயல்பிகழ்ந்த குறைபாடுள்ளவள் என்பதும், கருவுறுதலும் குழவி பெறு வதும் அவளால் சாத்தியப்படக் கூடியவை அல்ல என்பதும்

தெரியவந்தது. தன்னுடைய குறையினால் தன் கணவனுக்குக் குழந்தை இல்லாதிருப்பது நியாயமல்ல என்பதை உணர்ந்துவருந்தினாள்; பல மாதங்கள் தன் கணவனுடன் கலந்து ஆலோசித்துத் தன்னுடைய கணவன் விந்துவினைக் கொண்டு யாராவது ஒரு பெண்ணைக் கருவுறச் செய்வதென்று முடிவிற்கு வந்தாள். செயற்கையாக விந்தணுப் பாய்ச்சும் முறையில் கருவுற முன் வரும் பெண்ணுக்குப் பணம் கட்டணமாகத் தருவதற்கும் ஒருப்பட்டாள் இப் பெண்ணுக்குப் பிறக்கும் குழந்தையைத் தன் கணவனிடம் தந்துவிட வேண்டும் என்பதே இவள் விதித்த நிபந்தனை. இவ்வரலாறு விநோதமாக இருக்கின்றதல்லவா? மக்கட்பேறு வேண்டும் என்ற உணர்ச்சி எவ்வளவு நுட்பமானது என்பதை எண்ணத் தோன்றுகின்றதன்றோ? இதனால்தானே இந்த நுண்ணிய உணர்ச்சியைத் தரும் மக்கட்பேற்றினைப் பெரிதும் புகழ்ந்தார் வள்ளுவப் பெருந்தகை? அவரையொட்டிப் பிற்காலப் பெருங்கவிஞர்களும் அப்பேற்றினை மிகவிரிவாகப் பாராட்டியுள்ளனர். மக்டூகால்[52] என்ற உளவியலறிஞரின் கருத்துப்படி அடிப்படை இயல் பூக்கங்கள் பதினான்கினுள் மகவூக்கமும் ஒன்றல்லவா?

இவ்விடத்தில் அமெரிக்காவில் ஹார்வார்டு என்ற இடத்தில் இரு உயிரியல் அறிஞர்கள் மேற்கொண்டே ஒரு கவர்ச்சிகரமான சோதனையையும் கூற விரும்புகின்றேன். அவர்கள் ஒரு பெண் குழிமுயலிடமிருந்து பத்து முட்டையணுக்களை அகற்றி அவற்றுடன் ஓர் ஆண் குழிமுயலின் விந்துவைச் சேர்த்துக்கருவுறச் செய்தனர். அதன் பிறகு இக்கருவுற்ற முட்டைகளை இன்னொரு பெண் குழிமுயலின் கருக்குழல்களில் பதியச் செய்தனர்; இம்முட்டைகள் பெண் குழி முயலின் உடலினுள் வளர்ந்தன. முப்பத்து மூன்று நாட்கள் கழிந்த

---

52. மக்டூகால்—Mac Doughal
53. மகவூக்கம்—Parental instinct
54 ஹார்வார்டு—Harvard
55: குழி முயல்—Rabbit

தும் இப் பெண் குழிமுயல் ஏழு குட்டிகளை ஈன்றது: 'செயற்கைத் தாய்க்'குப் பிறந்த இக் குட்டிகள் யாவும் நிறத்திலும் பிற சிறப்பியல்களிலும் தம்முடைய 'உண்மைப் பெற்றோர்களை' யொத்திருந்தன. அண்மைக்காலத்தில் இத்தகைய ஒரு சோதனை வெற்றிகரமாகப் பசுக்களிடம் மேற்கொள்ளப் பெற்றது. இதுகாறும் மனிதர்களிடம் இந்த முறையில் யாதொரு சோதனையும் மேற்கொள்ளப்பெற்றதாகத் தெரியவில்லை.

உடலுக்குப் புறத்தே உயிரியை உண்டாக்குதல்: உடலுக்குப்புறத்தே முட்டையணுக்களையும் விந்தணுக்களையும் ஒன்று சேர்த்துக் கருவுறச் செய்தல் சாத்தியப்படுங்கால், ஆய்வகத்தில் ஒரு முழு வளர்ச்சி பெற்ற உயிரியை உண்டாக்குதல் கூடுமா என்று உன் மனத்தில் ஐயம் தோன்றலாம். அதனையும் தெளிவாக்குவேன். உண்டாக்குதல் முடியும்; எல்லாவிதப் பிராணிகளையும் அங்ஙனம் பிறப்பிக்கச் செய்தல் இயலாது. பெண்ணுடலுக்குப் புறத்தே கருவுறல் நிகழக்கூடிய நீர்வாழ் பிராணிகளாகிய மீன், தவளைகள், பிற உயிரினங்கள் ஆகியவற்றிடம் இவ்வாறு உயிரிகளை ஆய்வகத்தில் உண்டாக்கலாம். இவ்வினங்களின் பெண்கள் முட்டைகளை இடுகின்றன. ஆண்கள் இம்முட்டைகளின் மிக அருகில் தம்முடைய விந்தணுக்களைச் சிந்துகின்றன. இந்தஇருபாலின் உயிரணுக்களும்(Sex elements)இவற்றைச் சூழ்ந்த ஊடகத்தில்[56] சந்திக்கின்றன. இக் காரணத்தால் இவ்வகைப் பிராணிகளின் முட்டைகளையும் விந்தணுக்களையும் ஒன்று சேர்த்து ஆய்வகத்தில் அல்லது இனம் பெருக்கும் தொட்டியில்[57] பிராணிகளைப் பிறப்பிக்கச் செய்யலாம். வாணிகத்தின் நிமித்தம் ஒருவகை மீன்கள் பெரிய அளவில் இவ்வாறு உற்பத்தி செய்யப்பெறுகின்றன

மேலும் ஒருபடி முன்னேற்றம்: மேற்கூறிய முறையில் இன்று உயிரியல் அறிஞர்கள் மேலும் ஒருபடி முன்னேறியுள்ளனர். விந்தணுக்களின்றியே செயற்கை முறையில் முட்டை

56. ஊடகம்—Medium
57. இனம் பெருக்கும் தொட்டி—Breeding tank

களைக் கருவுறச்செய்து ஒருசில பிராணிகளை உண்டாக்குவது சாத்தியமாகும் என்று அவர்கள் மெய்ப்பித்திருக்கின்றனர்! ஒருசில பிராணிகளின் முட்டைகள் விந்தணுக்களின் துணையின்றியே கருவுறல்கூடும் என்பதை நீண்ட நாட்களாகவே அறிந்திருந்தனர். எடுத்துக்காட்டாக, தேனீக்களில் இராணி ஈ இருவிதமான முட்டைகளை இடுகின்றன. ஒருவகை கருவுறுபவை; மற்றொரு வகை கருவுறாதவை. இரண்டு வகை முட்டைகளும் ஈக்களாக முதிர்ந்து வளர்கின்றன; ஆனால் கருவுறாத முட்டைகள் ஆண் ஈக்களையும் (சோம்பேறி ஈக்களையும்)[58], கருவுற்ற முட்டைகள் உழைக்கும் ஈக்களையோ அல்லது இராணி ஈக்களையோ தருகின்றன. கருவுறாமல் முட்டை வளர்வதை 'பார்த்தெனோ ஜெனிஸிஸ்'[59] அல்லது 'கன்னிப் பிறவி'[60] என்ற பெயரால் வழங்குவர் உயிரியல் அறிஞர்கள். இம்முறையில் பலவகைப் பிராணிகள் இனம் பெருக்குகின்றன. எனினும், பல அறிவியலறிஞர்கள் விந்தணுக்களின் துணையால் கருவுறும் முட்டைகளையே அவற்றின் தலையீடு இன்றியே கருவுறும் செயலை வெற்றியுடன் கொண்டு செலுத்தியுள்ளனர். அவர்கள் விந்தணுக்களுக்குப் பதிலாக ஒரு சில பௌதிக-வேதியியல் தூண்டு பொருள்களைக்கொண்டு கருவுறும் செயலை முற்றுப் பெறச்செய்தனர்: ஜாக்ஸ் லோயப்[61] என்ற அமெரிக்க உயிரியலறிஞர் ஒருவகைக் கடல்வாழ் பிராணிகளின்[62] முட்டைகள் உள்ள கடல் நீரில் ஒருவித திட்டப்படித் தொடர்ச்சியாகப் பல்வேறு வேதியியற் பொருள்களைச் சேர்த்து இம்முட்டைகள் பிராணிகளாக வளர்வதைத் தூண்டமுடியும் என்பதைக் கண்டார். உப்பு, ஆல்கஹால், ஈதர், குளோரோஃபார்ம், பொட்டாசியம் சயனைடு போன்ற சாதாரண வேதியியற் பொருள்களையே அவர் கையாண்டார். அதன் பிறகு தவளை

58. சோம்பேறி ஈ-Drone.
59. பார்த்தெனோஜெனிஸிஸ்-Parthenogenesis.
60. 'கன்னிப்பிறவி'-'Virgin birth.'
61. ஜாக்ஸ் லோயப்-Jac ues Loeb.
62. Sea-urchins

யின் முட்டைகளை ஊசியினால் துளையிட்டே கருவுறத் தூண்டலாம் என்பது கண்டறியப்பெற்றது. இங்ஙனம் அவர் ஆறு தவளைகளை உண்டாக்கினார். இக் 'கன்னிப்பிறவித் தவளைகளுக்கும்' சாதாரண முறையில் விந்தணுக்களால் கருவுற்று உண்டாகும் தவளைகட்கும் யாதொரு வேறுபாடும் இல்லாதிருந்தது. ஆனால் 'கன்னிப் பிறவித் தவளைகள்' யாவும் ஆண்களாகவே இருந்தன.

மேற்கூறப்பெற்ற சோதனையால் ஓர் உண்மை பெறப்படுகின்றது. கீழ்நிலை உயிர்களிடம் உண்டாகும் முட்டைகளில் புதிய உயிர்களாக வளரும் ஆற்றல்கள் யாவும் முட்டையிலேயே அமைந்து கிடக்கின்றன; முட்டை ஒரு பந்தாகச் சுருட்டி மூடப்பெற்ற பொறிநுட்பம்போல் உள்ளது. தக்க தூண்டலால்[3] எப்பொழுது வேண்டுமாயினும் அஃது அவிழக்கூடிய நிலையில் உள்ளது. விந்தணுக்களோ அன்றி பௌதிக-வேதியியற் பொருள்களோ இத்தூண்டலை விளைவிக்கின்றன. அண்மைக் காலத்தில் பாஸ்டன் மருத்துவமனையில் ராக் என்பாரும் அவருடன் பணியாற்றிய அறிஞர்களும் மிகக் கவர்ச்சிகரமான சோதனை யொன்றினை மேற்கொண்டனர். அறுவை முறை சிகிச்சையின்பொழுது அவர்கள் மானிட முட்டைகளைப் பெற்று அவற்றை மானிட விந்தணுக்களைக்கொண்டு உடலின் புறத்தே கருவுறச் செய்தனர். இதுதான் முதன்முதலாக மானிட முட்டையில் மேற்கொள்ளப்பெற்ற சோதனை யாகும். மூன்று முட்டைகள் மட்டிலும் கருவுற்றுப் பல அணுக்களாகப் பிரியத் தொடங்கின. ஆனால், அவை அதற்குமேல் வளர்ச்சி பெறவில்லை.

பெர்னுட் ஷா எழுதிய Back to Methuselah என்ற நூலில் ஒரு பெண்ணின் உடலுக்குப் புறத்தே ஒரு குழந்தை ஒரு முட்டையினின்றும் அடைகாக்கப்பெற்ற ஒரு கற்பனை நிகழ்ச்சி யொன்றினைக் காண்கின்றோம். இதற்கு முன்னரே ஓர்ப்படியாள் குந்தி தேவிக்குக் குழந்தைகள் பிறந்துவிட்டனவே என்ற பொறாமைப்பட்ட கருவுற்றிருந்த காந்தாரிக்

3 தூண்டல்—Stimulus.

குக் கருப்பிண்டம் வெளிவந்துவிடவே, வேதவியாசர் அதனை நூறு கூறிட்டு நூறு மொந்தைகளில் வைத்து உரு வேற்றியதனுல் நூற்றுவர் பிறந்தனர் என்று பாரதக் கதை யினுல் அறிகின்ருேமன்ருே? இவை யாவும் எதிர்காலத்தில் ஆய்வகத்தில் இனப் பெருக்கம் செய்யப்பெறலாம் என்ப தற்கு அறிகுறிகளாக அமைகின்றன அல்லவா? இத்தகைய கற்பனை ஓவியங்களை அறிவியலறிஞர்களும் தீட்டியுள்ளனர். ஹால்டேன்[64] என்ற பிரிட்டிஷ் அறிவியலறிஞர் "எதிர்கால அறிவியல்" என்னும் தமது நூலில் பெரும்பாலான மானி டக் குழவிகள் ஆய்வகத்தில் பிறத்தல்கூடும் என்று சோதிடம் கூறியுள்ளார். பூப்பு எய்தும் பருவத்தில் ஒரு பெண்ணின் சூற்பை அகற்றப்பெற்று ஒரு தக்க ஊடகத்தில் வைக்கப்பெறும். திங்கள்தோறும் முதிர்ச்சியடையும் முட்டையணு விந்தணுக்களைக் கொண்டு செயற்கை முறை யில் கருவுறச் செய்யப்பெறும். இவ்வாறு கருவுற்ற முட்டை கள் ஆய்வகத்தில் ஒன்பது திங்கள் அடைகாக்கப் பெற்றுக் குழந்தைகளாக்கப்பெறும். இன மேம்பாட்டியல்படி உயர்ந்த வகை ஆண்—, பெண் பால்—, அணுக்களே தேர்ந் தெடுக்கப்பெற்று இனம் பெருக்கப்பெறும்.

மானிட விந்துவைக் கண்ணுடிக் குழல்களில் வைத்து உடனே உறையச் செய்தால் விந்தணுக்கள் நீண்ட காலத் திற்குத் தம்முடைய உயிர்ச் சக்தியை இழப்பதில்லை என் பதை ஏற்கெனவே உனக்குத் தெரிவித்துள்ளேன். எழுபது நாட்கள் வரையிலும் உறை நிலையிலேயே இருந்து அதன் பிறகு உருகுநிலைக்கு வருங்கால் பெரும்பாலான விந்தணுக் கள் இயக்கநிலையைப் பெறுகின்றன. மேம்பாடடைந்த பல யுக்தி முறைகளைக் கையாண்டு எவ்வளவு காலம் வேண்டுமா யினும் விந்தணுக்களை உறங்குநிலையில்[65] வைத்திருக்கலாம். இத்தகைய சாத்தியக் கூறுகள் மானிடக் கருத்தரிப்புபற்றிய துறையில் புதிய உயிரியல் ஆராய்ச்சிக் காட்சிகளை நமக்குத் திறந்துகாட்டத் துணையாகவுள்ளன;

64. ஹால்டேன்-Haldane.
65. உறங்கு நிலை-Dormant state.

ஏச்.ஜே. முல்லர்[66] என்ற அமெரிக்க உயிரியலறிஞர் தாம் வெளியிட்ட சிறு நூலொன்றில் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஒரு சில மனிதர்களின் விந்தணுக்களை யாதாவது ஒரு முறைப்படி அவர்கள் இறந்த பின்னரும் உயிரோடிருக்குமாறு வைத்திருக்கலாமென்றும், மானிட இனமேம்பாட்டியல் காரணமாக அவற்றைச் செயற்கையான விந்து புகுத்து முறைகளில் பயன்படுத்துதல்கூடும் என்றும் கூறியுள்ளார். இம்முறையினால் ஒருவர், தான் இயற்கை எய்திய பிறகும் எண்ணற்ற குழந்தைகட்குத் தந்தையாகலாம். இத்தகைய செயல்கட்காக எத்தகைய உயர்ந்த மனிதர்களின் விந்துவினைச் சேகரிக்கவேண்டும் என்பது ஒருதீராதபிரச்சினையாகவே இருந்து வருகின்றது. இவை யாவும் அறிவியல் மனக்கோட்டைகளே[67] யன்றி பிறிதொன்றுமல்ல. ஆனால், நாம் பழைய முறைகளிலேயே குழந்தைப்பேறு அடைவதில் திருப்தியடைவோமாக; குழந்தைப்பேறு இல்லாதவர்களும் தத்துப்பிள்ளை எடுக்கும் முறையினையே மேற்கொள்வார்களாக. தத்துப் பிள்ளை எடுத்த பிறகு ஒரு சிலருக்குக் குழந்தைகள் பிறந்திருக்கின்றன. கருவுறுவதற்குக் காரணமாக இருந்த உளவியல் பற்றிய யாதோ ஓர் உள்தடை விடுபட்டதும், மலடு நீங்கி இவர்கட்குக் குழந்தைப்பேறு ஏற்பட்டது என்பதை நீ அறிவாயாக.

இனி, கருவுற்ற இளஞ்சூல் குழந்தையாக ஆகும் வரையிலும் எவ்விதமான கோளாறுகட்கும் உட்படலாம் என்பது பற்றியும், அவற்றைத் தவிர்ப்பதெங்ஙனம் என்பது பற்றியும் அடுத்த கடிதத்தில் எழுதுவேன்.

இங்ஙனம்,
திருவேங்கடத்தான்.

66. எச். ஜே. முல்லர்-H. J. Muller.
67. அறிவியல் மனக்கோட்டைகள்-Scientific fantacie

# 29

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனுக்கு எழுதுக.

இனப்பெருக்கக் கோளாறுகள்: இனப்பெருக்கத்திற்குக் கோளாறுகளாக இருப்பவை காலத்திற்குமுன் குழந்தை பெறுதல், கருச்சிதைவு, குழந்தை இறந்து பிறத்தல் ஆகிய வையாகும். காலத்திற்கு முன் குழந்தை பிறத்தலும் கருச் சிதைவு நேரிடுதலும் (அல்லது உண்டாக்குதலும்) கருப்பம் வளராமல் முன்னதாகவே முடித்துவிடுதல் அல்லது இடை யூறு செய்தலாகும். ஆனால், இந்த இரண்டும் கலைத்துறை யில் சிறிது வேறுபாடுடையவை. கருப்பத்தின் தொடக்கக் காலத்தில் முடிவு பெறுதல் காலத்திற்குமுன் குழந்தை பெறுத லாகும்[68]; ஒரு சில மாதங்கள் கழித்து சூல் வெளிப்படுதல் 'கருச் சிதைவு'[69] ஆகும். எனினும், சாதாரண வழக்கில் காலத்திற்குமுன் குழந்தை பெறுதல் என்பது, கருப்பமுற்ற ஏழு மாதங்கட்கு முன்னர் கரு தானாக வெளிப்படுதலையே குறிக்கின்றது; கருச்சிதைவு என்பது, செயற்கை முறையில் நாமாகவே விளைவித்தலைத் தெரிவிக்கின்றது; ஏழு திங்கட் குப் பிறகு, ஆனால் ஒன்பது மாதத்திற்கு முன்னதாக, அஃதாவது குழந்தை பிழைக்கும் என்ற அளவுக்கு வளர்ச்சி பெற்ற பிறகு, கருப்பம் வெளிப்பட்டுவிட்டால் அதனைக் 'குறைமாதப் பிரசவம்'[70] என்று வழங்குகின்றனர்.

காலத்திற்குமுன் குழந்தை பெறுதல்: காலத்திற்குமுன் ஒரு பெண், குழந்தை பெறுவதற்குக் காரணங்கள் யாவை என்பதை ஒருசிறிது விளக்குவேன். இதற்குரியனவாகக் கூறப்

---

68. காலத்திற்குமுன் குழந்தை பெறுதல்—Miscarriage
69. கருச்சிதைவு—Abortion
70. குறைமாதப் பிரசவம்—Premature birth

பெறும் காரணங்கள் யாவும் மிகவும் சிக்கலானவை; இன்னும் தெளிவாக அறியப்பெறுதவை; பொதுவாக, கருவுற்ற முட்டையில் குறையிருந்து அது முழு வளர்ச்சி பெறுவதற்கேற்ற உயிர்ச்சக்தி அதனிடம் இல்லாவிட்டால் கரு காலத்திற்கு முன்னதாகவே வெளிப்பட்டு விடுகின்றது. தாயினிடமுள்ள சில குறைகள் அல்லது இயல்பிகந்த நிலைகள் இருந்து அவை காலமல்லாக் காலத்தில் கருப்பையைச் சுருங்கச்செய்தாலும் கருப்பை சூலினை வெளிப்படுத்தி விடுகின்றது; எழுபது சதவிகிதத்திற்கு மேற்பட்ட பெண்களிடம் இளஞ்சூலில்[71] உள்ள குறையின் காரணத்தாலேயே முன்னதாகவே குழந்தை பெறுதல் நிகழ்கின்றது. முட்டையிலோ அல்லது விந்தணுக்களிலோ உள்ள இயல்பிகந்த தன்மையாலோ அல்லது கருவுற்ற முட்டையின் தொடக்ககால வளர்ச்சியுடன் தொடர்புள்ள கூறுகளின் காரணமாகவோ இளஞ்சூலில் குறை ஏற்படுகின்றது. இத்தகைய சந்தர்ப்பங்களில் இளஞ்சூலின் வளர்ச்சி தொடர்ந்து நடைபெற முடிவதில்லை. ஒரு குறையான குழவி பிறப்பதற்குப் பதிலாக, காலத்திற்கு முன் இளஞ்சூல் வெளிப்பட்டு விடுகின்றது.

காலத்திற்குமுன் இளஞ்சூல் வெளிப்படுவதற்குத் தாயினிடமுள்ள சில கூறுகளும் காரணங்களாக அமைகின்றன. கருப்பையினுள்ளும் அதைச் சுற்றிலும் வளர்ச்சிகள் ஏற்படுதல், கருப்பை இடம்பெயர்தல், சுரப்பிகளில் சில தொந்தரவுகள் உண்டாதல், விட்டமின் குறைவுகள், தொற்றுக்கள் போன்றவைகள் இவ்வாறு ஏற்படுவதற்குக் காரணங்களாகும்; சிலரிடம் உள்ளக்கிளர்ச்சிக் கோளாறுகளும் இதற்குப் பொறுப்பாக அமைகின்றன; தாயினிடமும் வளரும் சிசுவினிடமும் உள்ள குருதியின் பொருந்தாநிலைகளும் கருப்பத்தின் தொடக்கக் காலத்திலேயே இளஞ்சூல் மரிப்பதற்குக் காரணங்களாகின்றன என்பதற்குச் சான்றுகள் உள்ளன; காலத்திற்குமுன் குழந்தை வெளிப்படுதல் 75 சதவிகிதம் நான்காவது மாதத்திற்கு முன்னரே நடைபெறுகின்றது.

---

71. இளஞ்சூல்—Embryo

கருப்பம் ஏற்படுவதற்கு முன்னர் கவனம் எடுத்துக் கொண்டாலும், கரு வெளிப்படும் என்ற அறிகுறிகள் தோன்றினவுடன் தக்க ஏற்பாடுகளை எடுத்துக் கொண்டாலும் இச்செயலைத் தக்க முறையில் தடுத்துவிடலாம். சூல் கொள்ளும் காலத்தில் தாயின் உடல் நன்னிலையிலிருப்பதற்கேற்ப, தொந்தரவுகளின்றிக் கருப்பக் காலம் முற்றிலும் கழியும். ஆகவே, கருப்பம் ஏற்படுவதற்கு முன்னர் உடலை நன்கு சோதித்துக்கொண்டால், இடையில் எந்தவிதமான இயல்பிகந்த கோளாறுகள் ஏற்பட்டாலும் அவற்றை எளிதில் நிவர்த்தி செய்துகொள்ளலாம். கரு வெளிப்படுவதற்கு முன்னர் யோனிக்குழலில் குருதிக் கசிவு தோன்றும்; அடிவயிற்றிலும் முதுகிலும் அதிகமான வலியுண்டாகும். படுக்கையிலிருந்து உடனே ஓய்வு எடுத்துக் கொள்ளுவதாலும் தக்க ஹார்மோன்களையும் வலி தீர்க்கும் மருந்துகளையும்[72] உட்கொள்வதாலும் கருவினை வெளிப்படாது தடுத்துவிடலாம்.

இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நீ அறிதல் வேண்டும். குருதி கசிவு தோன்றியதனாலேயே கரு வெளிப்படுவதற்குரிய அறிகுறி என்று கொள்ளவும் கூடாது; உண்மையில் கருப்பமுற்ற பெண்கள் மூன்றில் ஒரு பங்கு பேர்களிடம் கருப்பத்தின் தொடக்கக் காலத்தில் குருதிக் கசிவு அல்லது குருதியொழுக்கு நேரிடுகின்றது. இவர்களில் பெரும்பாலோர் நன்னிலையில் இருந்து நன்முறையில் குழந்தைகளைப் பெறுகின்றனர். கருப்பம் ஏற்பட்ட பின்னரும் தொடக்கத்தில் ஒரு சில பெண்களிடம் மாதவிடாய்ஒழுக்கு காணப்படுகின்றது என்று நான் முன்னர்க் கூறியதை ஈண்டு நினைவு கூர்வாயாக; ஆனால், இந்த ஒழுக்கு மிகக் குறைவாகவே இருக்கும். இத்தகைய ஒழுக்கு கருவெளிப்படுவதற்குரிய அறிகுறியாக இல்லையென்றாலும் கருப்பகாலத்தில் ஏற்படும் இதனை உடனே மருத்துவரிடம் காட்டிச் சோதித்துக் கொள்ள வேண்டுவது மிகமிக இன்றியமையாதது.

ஒரு பெண்ணிடம் ஒரு தடவை காலத்திற்கு முன்னதாக

---

72. வலி தீர்க்கும் மருந்து—Sedative

இளஞ்சூல் வெளிப்பட்டால் எதிர்காலத்தில் ஒவ்வொரு கருப்பத்தின்பொழுதும் அவளிடம் அங்ஙனம் நிகழும் என்று சொல்வதற்கில்லை. முதல் கருப்ப காலத்தில்தோன்றிய சூல் வெளிப்படுவதற்குரிய கூறுகள் ஒவ்வொரு கருப்பக் காலத்திலும் தோன்றுவதில்லை. ஒரு சில பெண்களிடம் பழக்கமாகச் சூல் வெளிப்படுவதற்குரிய அறிகுறிகள் தோன்றுகின்றன. ஆகவே, ஒரு பெண்ணிடம் இத்தகைய நிகழ்ச்சி ஒரு தடவை நிகழ்ந்தால், அவள் அடுத்த கருப்பம் ஏற்படுவதற்கு முன்னர் உடலை நன்கு சோதித்துக்கொள்ளல்வேண்டும். அன்றியும், கரு நன்கு முதிர்ச்சி பெறும் காலம் முழுவதும் அவள் தக்க மருத்துவரின் மேற்பார்வையில் இருத்தல்வேண்டும். இந்த முறையைக் கையாண்டால் சூல் வெளிப்படுவதைத் தடுக்கும் அல்லது திருத்தும் ஏற்பாடுகளைத் தக்க காலத்தில் எடுத்துக்கொள்ள வசதிகள் ஏற்படும். நல்ல உணவு கொள்ளல், பிரத்தியேகமான விட்டமின்களையும் ஹார்மோன்களையும் உட்கொள்ளல், கருப்பையின் இடப்பெயர்ச்சிகளைச் சரி செய்து கொள்ளல் போன்ற மருத்துவ முறைகளை முன் கூட்டியே மேற்கொண்டால் அடுத்து ஒரு முறை இளஞ்சூல் வெளிப்படுவது நேரிடாமல் தடுத்துவிடலாம்.

கருப்ப காலத்தில் தற்செயலாகக் கருப்பிணிக்கு ஒரு சிறிய அதிர்ச்சி ஏற்பட்டாலும், கருப்பிண்டம் வெளிப்படுவதற்குக் காரணமாகிவிடும் என்ற அச்சம் பலரிடம் இருந்து வருகின்றது. ஒரு சிறிய உடல் அதிர்ச்சி அல்லது உள்ளக் கிளர்ச்சியதிர்ச்சி ஏற்பட்டாலும் ஒரு சில பெண்கள் நுண்ணிய உணர்வுடையவர்களாதலின் அவர்களிடம் இளஞ்சூல் வெளிப்படுகின்றது என்பது உண்மைதான். ஆனால், கடுமையான உடற்பயிற்சியும் மட்டு மீறிய உழைப்பும்கூட சாதாரணமாகக் கருப்பத்தைப் பாதிக்காது என்பதை நினைவில் வைக்கவேண்டும்.

இறந்து பிறத்தல்: சிலரிடம் குழந்தை இறந்தே பிறக்கின்றது[73]. இவ்வாறு பிறத்தல் இரண்டு அல்லது மூன்று சத

73. குழந்தை இறந்து பிறத்தல்—Still birth

விதமே உள்ளது. இவ்வாறு பிறத்தலுக்குரிய காரணங்கள் இன்னும் தெளிவாக அறியப்பெறவில்லை. எனினும், இது நேரிடாதிருப்பதற்கும் அதனைத் தடுப்பதற்கும் உரிய முறைகளை இன்று மருத்துவ அறிஞர்கள் ஆராய்ந்து வருகின்றனர்.

கருச் சிதைவு: இனி, கருச்சிதைவுபற்றிய ஒரு சில கருத்துகளைக் கூறுவேன். தாயின் உயிரைக் காப்பாற்றுவதற்காகவே சிலரிடம் இதனை நாமாகவே மேற்கொள்ளுகின்றோம். சில சமயம் ஏற்கெனவே பெண்களிடமுள்ள இதய நோய், சிறு நீரக நோய், நுரையீரல் நோய் போன்ற ஆபத்தான நோய்களின் காரணமாகக் கருப்பம் சிக்கலான நிலைமைகளை விளைவிக்கலாம்: இம் மாதிரியான சந்தர்ப்பங்களில் மருத்துவரின் துணைக்கொண்டு கருச்சிதைவு செய்தல் மிகவும் அவசியமாகின்றது: இக் காரணம்பற்றி மேற்கொள்ளப்பெறும் கருச்சிதைவு "நோய் தீர்க்கும்[74] காரணம் பற்றிய" தாகும். சட்டப்படி அவசியமான மருத்துவ முறையின் காரணமாக நாம் இதனை மேற்கொள்ளலாம். இவ்வாறு செய்வதை ஒருவரும் குற்றமாகக் கருதமாட்டார்கள்;

நடைமுறையிலுள்ள கருச் சிதைவுகள்: எனினும், இன்று பெரும்பான்மையான கருச்சிதைவுகள் வேறு காரணங்களுக்காகவே மேற்கொள்ளப்பெறுகின்றன: இனமேம்பாட்டியலின் அடிப்படையிலும், சமூகவியலின் அடிப்படையிலும், பொருளாதார அடிப்படையிலும் இன்று ஒரு பெண் கருச்சிதைவினை மேற்கொள்ளலாம். எடுத்துக்காட்டாக திருமணம் ஆகாத ஒரு பெண் கருவுற்றால், தனக்குக் குழந்தைப் பேறு ஏற்பட்டால் அது துடைக்க முடியாத பழியாக அமைந்து தனக்கும் தன்னுடைய குழந்தைக்கும் கேடு பயக்கும் என்று கருதலாம்! ஏற்கெனவே பல குழவிகளைப் பெற்றெடுத்த தாய் மேலும் ஒரு பிள்ளை பெறுவதற்கு அச்சப்படலாம்; அல்லது விரும்பாதிருக்கலாம்; கணவனைத் துறந்த பெண்ணும், கணவனை இழந்த கைம்பெண்ணும் தனக்கு ஏற்பட்ட கருப்பத்தை எப்படியும் அழிக்கவே கருதுவார்கள்

74. நோய் தீர்க்கும்—Therapeutic

என்பது வெளிப்படை. எனவே, பொருளாதார நெருக்கடி' வேலையில்லாத் திண்டாட்டம், திருமணம் ஆவதில் ஏற்படும் சங்கடங்கள், கணவனைத் துறந்தநிலை போன்ற எண்ணற்ற குடும்பப் பிரச்சினைகள் ஒரு பெண்ணைக் கருச்சிதைப்பதில் கொண்டு செலுத்துகின்றன என்பதை அறிவாயாக: இவ்வாறு செய்யப்பெறும் கருத்தடைகள் யாவும் சட்டப் படிக் குற்றமாகும்: பண்டைப் புறநானூறும்,

> ஆன்முலை யறுத்த அறனில் லோர்க்கும்
> மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
> குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்
> வழுவாய் மருங்கிற் கழுவாயும் உள[75]

என்று கூறியுள்ளதை ஈண்டு நினைவு கூர்க. இக்குற்றத்திற் குத் தண்டனை கிடைத்தாலும், அதனால் ஏற்படும் பாவத்திற் குக் 'கழுவாயே' இல்லை என்று கவிஞன் கூறியிருப்பதிலிருந்து இது மக்களால் எவ்வளவு கொடுமையாகக் கருதப்பெற் றிருத்தல் வேண்டும் என்பது சிந்திக்கத் தக்கது. திருமண மாகாத குந்தி கர்ணனைப் பெற்றெடுத்ததாலன்றோ அக் குழந்தையைப் பேழையில் வைத்து ஆற்றில் விட்டாள்?

இன்று கருவினைக் குலைப்பதற்கென்றே பலவித மருந்துச் சரக்குகளை மக்கள் உட்கொள்ளுகின்றனர்: இம்மருந்துச் சரக்குகள் யாவும் மாதவிடாய்த் தொந்தரவுகட்கென்று விற்கப்பெறுபவை. தாமதித்து ஏற்படும் மாதவிடாயைக் கருப்பம் என்று கொள்வதற்கில்லை. திடீரென்று வெப்பநிலை மாற்றத்திற்கு உட்படல், உடற்குறைகள், வலுக்கேடு,[76] கலப்புணவு இல்லாக்குறை, சுரப்பிகள் செயற்படுவதில் குலைவுகள், உள்ளக் கிளர்ச்சி அழுத்தம், மனக்கவலை போன்றவைகளால் மாதவிடாய் பல நாட்கள் அல்லது பல வாரங்கள் தடைப்பட்டு நிகழலாம். சில சமயம் மாத விடாய்த் தடைக்குரிய காரணங்களை நீக்குவதற்காகவும், மாதவிடாய் வட்டத்தை ஒழுங்கு படுத்துவதற்காகவும்

75. புறம்-34
76. வலுக்கேடு–Debility.

மருந்துச் சரக்குகளையும் சுரப்பிச்சாரங்களையும் மருத்துவர்கள் உண்ணுமாறு தருகின்றனர். கருப்பத்தின் காரணமாக மாதவிடாய் தடைப்பட்டிருந்தால் இவற்றால் யாதொரு பயனும் இல்லை. உண்மையாகவே ஒரு பெண் கருப்பம் உற்றிருந்தால் கருச் சிதைவிற்கென்றே விற்கப்பெறும் மாத்திரைகள் போன்ற மருந்துகளால் யாதொரு பயனும் இல்லை; இளஞ்சூல் ஏற்கனவே கருப்பையில் நன்கு பதித்துக் கொண்டு விட்டபிறகு ஒன்றும் செய்வதற்கில்லை.

கருச்சிதைவு என்பது அறுவை முறைச் செயலாகும். அதனை விளைவிக்க வேண்டுமாயின் கைதேர்ந்த மருத்துவரின் துணைகொண்டு கருப்பையினின்றும் இளஞ்சூலை அகற்ற வேண்டும்: கருப்பையின் அடிப்பகுதியின் நுனிப் பாகம் அகட்டப்பெற்றுக் கருவுற்ற முட்டைகளையும் அதனைச் சூழ்ந்துள்ள இழையங்களையும் 'குயூரெட்டே'[77] எனப்படும் ஒரு வகை அறுவைமுறைக் கருவியினால் அகற்றுகின்றனர். இந்த அறுவை முறையும் 'குயூரெட்டேஜ்'[78] என்று வழங்கப் பெறுகின்றது: இது மிகவும் வலியினைத் தரும் செயலாதலின் இதில் உணர்வு நீக்க முறையும் மேற்கொள்ளப்பெறுகின்றது: தென் அமெரிக்காவில் ஒருவித மருந்துச் சரக்கினை அடிவயிற்றின் மூலமாகவும் கருப்பையின் மூலமாகவும் நேரடியாகப் பனிக்குடத்தினுள் குத்திப் புகுத்தி கருத்தடை செய்கின்றனர். இந்த மருந்து இளஞ்சூலைக் கொன்று விடுகின்றதென்றும், மருந்து செலுத்திய சிறிது நேரத்திற்குள் கருப்பிண்டம் வெளிப்படுகின்றதென்றும் கூறுகின்றனர்: இதனால் தாய்க்கு ஏற்படும் பின் விளைவுகளைப் பற்றி இதுகாறும் திட்டமாக ஆராய்ச்சிகள் மூலம் அறியப்பெறவில்லை.

கருச் சிதைவினால் ஏற்படும் விளைவுகள் மிகவும் கொடுமையானவை; பெருந் தீங்கு பயப்பவை. தாயின் உயிருக்கே உலைவைக்கக் கூடியவை. அமெரிக்காவில் மட்டிலும்

77. குயூரெட்டே-Curette
78. குயூரெட்டேஜ்-Curettage

ஆண்டுதோறும் 1000 பெண்கள் கருச்சிதைவு செய்வதனால் இறக்கின்றனர் என்று சொல்லப்பெறுகின்றது. இதைவிட அதிக எண்ணிக்கையைக் கொண்டவர் தீராத நோயுடனிருக்கின்றனர். இத்தகைய முறையினை மேற்கொண்டவர்களில் பெரும்பாலோர் மலடாகப் போகின்றனர். பெரும்பாலும் இம்முறையினை மறைமுகமாகக் கையாளுவதனாலும், சுகாதார வசதியின்றிப் பயிற்சி பெறாதவர்கள் இதனை மேற்கொள்ளுவதனாலும் இத்தகைய இறப்பும் தீராத நோயும் விளைவுகளாகின்றன. பயிற்சி பெற்ற மருத்துவர்களைக் கொண்டு இதனைச் செய்தால் ஓரளவு விபத்துகளைத் தடுக்கலாம்; என்ற போதிலும் கருச்சிதைவு செய்வதென்பது ஒரு சிறிய செயலன்று. அது தாயின் உடலுக்கும் உள்ளத்திற்கும் பேரதிர்ச்சியைத் தரக் கூடியதாகும்.

கருச்சிதைவு செய்தல் என்பது இன்று நேற்றுவந்தசெயலன்று. நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாகவே இது நடைபெற்று வரும் செயலாதலின் நீதி நூல்களிலும் காவியங்களிலும் இது குறிப்பிடப்பெறுகின்றது. மக்கள் தொகையைக் குறைப்பதற்காக கருச்சிதைவுடன் சிசுக் கொலையையும்[79] செய்யப்பெற்று வந்ததாகக் குறிப்புகள் காணப்பெறுகின்றன. ஆனால், நாகரிகம் மிக்க தற்காலத்தில் இஃது எங்ஙனும் பெரு வழக்காக இருந்து வருகின்றது. நம் நாட்டில் கற்றவர்களும் கல்லாதவர்களும் இதனை மேற்கொண்டதால் தாய் இறந்து கணவனையும் பல குழந்தைகளையும் பரிதவிக்க விட்டுப்போன சோகக் கதைகள் பலப்பல. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மட்டிலும் ஐந்து அல்லது ஆறு கருப்பிணிகளில்ஒருவர் இம்முறையை மேற்கொள்வதாகவும் பெரும்பாலும் இது நகர்ப்புறங்களிலேயே இருந்து வருகின்றது என்றும் புள்ளி விவரங்களால் அறிகின்றோம். இதனால் பெண்ணுக்கு ஏற்படும் பெருந்தீங்குடன் இதனால் விளையும் உயிரியல் பொருளாதாரநட்டத்தைக் கணக்கிட்டால் இஃது

---

79. சிசுக் கொலை-Infanticide.

ஒரு பெரிய ஆபத்தான சமூக மருத்துவப் பிரச்சினையாக உள்ளது என்பது தெரிய வரும்.

கருச்சிதைவுக்கு சட்டப்பூர்வமான அங்கீகாரம்: சில நாடுகளில் கருச்சிதைவு செய்தல் சட்டபூர்வமாக அங்கீகாரம் ஆகியுள்ளது. இரஷ்யாவில் சோவியத் ஆட்சி ஏற்பட்ட சிறிது காலத்திற்குள்ளேயே—1920இல்—இது சட்டப்படி அங்கீகாரம் ஆயிற்று. அக்காலத்திலிருந்த சமூக பொருளாதார நிலைமைகளின் காரணமாகக் கருத்தடையில் இறங்கிய பெரும்பான்மையான பெண்களின்சுகாதாரத்தைக் காக்கும் பொருட்டு இதனை ஒரு பொதுச் சுகாதாரத் திட்டமாகவே மேற்கொள்ளப் பட்டதாகக் கூறினர். பெண்ணின் உடல் நலத்தைப் பேணுவதற்காகவே தலைமறைவில் செய்யப் பெற்ற இச்செயலைப் பயப்படாமல் எவரும் மேற்கொள்ளலாம் என்று சோவியத் ஆட்சியினர் சட்டம் இயற்றினர். இதற்காகப் பிரத்தியேகமாக அரசினர் மருத்துவமனைகள் நிறுவப்பெற்றுக் கருச்சிதைவினைச் செய்வதற்கென்றே கைதேர்ந்த மருத்துவர்கள் நியமிக்கப்பெற்றனர். அறுவை முறையை மேற்கொண்ட பிறகு ஒருபெண் மூன்று நாள் கட்டாயம் மருத்துவமனையில் தங்க வேண்டும் என்ற நிபந்தனை இருந்தது. எனினும், மூன்று மாதத்திற்கு மேற்பட்ட கருப்பத்தையும், ஒரு பெண்ணுக்கு முதன் முதலாக ஏற்பட்ட கருப்பத்தையும் சிதைப்பதற்கு இச்சட்டம் இடங்கொடுக்கவில்லை.

சோவியத் சட்டத்தினால் கருச்சிதைவு காரணமாக இறந்த பெண்டிரின் எண்ணிக்கை குறைந்தது என்பது உண்மையே. எனினும், தக்க மருத்துவக் கண்காணிப்பில் செய்யப்பெறும் கருச்சிதைவுகளும் பெண்ணின் உடல் நலத்தைப் பாதிக்காது விடுவதில்லை என்பது சிறிது காலத்திற்குப் பின்னர் அறியப்பெற்றது. இதனால் சில பெண்களுக்குப் பல்வேறு விதமான உடற் குறைகள் நேரிட்டன. இதனால் சுகாதாரத் துறையினர் கருச்சிதைவு செய்வதால் ஏற்படக் கூடிய பல்வேறு தீங்குகளையும் விபத்துகளையும்பற்றி மக்களிடையே பிரசாரம் செய்யத் தொடங்கினர். இவர்கள் கருச்

சிதைவு செய்வதைவிட கருத்தடை செய்வது சிறந்தது என்ற கருத்தையும் பரப்பினர். இறுதியாக சோவியத் அரசு 1936 இல் மருத்துவக்காரணம்பற்றியும், கருச்சிதைவால் ஏற்படும் சிக்கல்பற்றியும், மக்கள் பெருக்கம் வேண்டும் என்ற காரணம்பற்றியும் கருச்சிதைவு செய்தல் குற்றம் என்பதாகச் சட்டம் இயற்றியது. இன்று அந்நாட்டில் கருப்பிணியின் உயிருக்கோ அல்லது உடல் நலத்திற்கோ ஆபத்து ஏற்படும் என்று உறுதிப்பட்டாலொழிய கருச்சிதைவினை ஒருவரும் மேற்கொள்ளலாகாது என்ற நிலைமை இருந்து வருகின்றது.

ஸ்காண்டிநேவிய நாடுகள் கருச்சிதைவுப் பிரச்சினையை முன்னேற்றமுள்ள சமூக, மருத்துவ முறைகளில் அணுகித் தீர்க்க முயன்று வருகின்றன. எடுத்துக்காட்டாக, ஸ்வீடன் நாட்டில் பல்வேறு ஆலோசனைக் கழகங்கள்[80] நிறுவப் பெற்றுள்ளன. ஒவ்வொரு கழகத்திலும் ஒரு மருத்துவரும் ஒரு சமூகத் தொண்டரும் இருந்துகொண்டு கருத்தடைக்காக வரும் பெண்களைக் கவனிக்கின்றனர். அங்கு வரும் ஒவ்வொரு பெண்ணைத் தனித்தனியாகக் கவனித்து அவளுடைய சொந்தப் பிரச்சினையையும் குடும்பப்பிரச்சினைகளையும் பொருத்தப்பாடுறச் செய்து கருப்பத்தைச் சிதைக்காதிருக்கவே துணை செய்கின்றனர். தேவையானவர்கட்கு உடனே பொருளாதார உதவியும் செய்யப்பெறுகின்றது. அதே சமயத்தில் கருச்சிதைவுசெய்வதால் நேரிடும் கேடுகளையும் ஆபத்துக்களையும் எடுத்துக் காட்டிக் கருத்தடை செய்யாதிருக்க ஏற்பாடுகளைச் செய்து வருகின்றனர். ஒரு சிலபெண்கள் கட்டாயம் கருச்சிதைவு செய்தேயாக வேண்டும் என்று உறுதியுடனிருந்தால் அவர்களைப் பிரத்தியேகமான ஒரு மருத்துவக் கழகத்தின் முடிவுக்கு அனுப்புகின்றனர். சில சமூக நிலைமைகளாலும் வேறு காரணங்களாலும் கருச்சிதைவு சிலரிடம் அனுமதிக்கப்பெறுகின்றது. ஒவ்வொருவருடைய நிலைமைகளையும் தனித்தனியே ஆராய்ந்து சட்டப்படி

---

80. ஆலோசனைக் கழகங்கள்—Consultation councils.

கருச்சிதைவினை அனுமதிக்கவும் அல்லது அதனை மறுக்கவும் அக்கழகங்கள் அதிகாரம் பெற்றுள்ளன.

கருச்சிதைவுப்பிரச்சினை மருத்துவக் காரணம் பற்றி மட்டிலும் மேற்கொள்ளக்கூடிய தொன்றன்று. அது சமூக, ஒழுக்க, நீதிபற்றிய, சமயம்பற்றிய பல்வேறு கருத்துகளுடன் பிணைந்துள்ளது. ஆகவே, கருச்சிதைவினைக் குறித்துச் சமூக, அறநிலைபற்றிய கருத்துகள் யாவும் மக்களிடம் நன்கு உணர்த்தப்பெறல் வேண்டும். தற்காலத்திலுள்ள தடையுத்தரவுகள் யாவும் நடைமுறையில் சிறிதளவும் பயன்படுவதில்லை.

எனவே, கருச்சிதைவினைக் கீழ்க்கண்ட முறைகளால் பெண்களிடம் நிகழாமல் தடுக்க வேண்டியது மிகவும் இன்றியமையாதது.

(1) போதுமான அளவு சமூக, பொருளாதார, மருத்துவ மானியங்களை வழங்கித் திட்டமிட்ட கருப்பங்களை மட்டிலும் மேற்கொள்ளப் பிரசாரம் செய்ய வேண்டும்.

(2) ஸ்வீடன் நாட்டிலுள்ள முறை போன்ற ஒரு முறையை நம் நாட்டிலும் ஏற்படுத்தி மக்களிடையே கருச்சிதைவினால் நேரிடும் கொடுமைகளையும் ஆபத்துகளையும் நன்கு எடுத்துரைக்க வேண்டும். மருத்துவக் காரணம் அல்லாத சமூக, இனமேம்பாட்டியல்பற்றிய காரணங்களுக்காகவும் கருச்சிதைவு செய்துகொள்வதற்கு வசதியளித்து அதனைத் தக்க மருத்துவக் கண்காணிப்பில் நிகழுமாறு செய்தல் வேண்டும்.

(3) கருச்சிதைவினைத் தக்க முறையில்கட்டுப்படுத்தவேண்டுமாயின், கருத்தடை முறைகள் மக்களிடையே நன்கு பரவ வழிவகைகளை வகுத்து அவற்றைச் செயற்படுத்த வேண்டும். உண்மையாகவே நாட்டு நலங்கருதும் தொண்டர்களால்தான் இவற்றை வெற்றியுடன் கொண்டு செலுத்த இயலும்.

இன்று பல முறைகளில், இவற்றை அரசாங்கம் செய்து வருகின்றது. இதனால் நாட்டுப்புறங்களிலும் ஒழுக்கக் கேடான செயல்கள் விரைவாகப் பரவிவிடுமோ என்ற அச்சமும் அறிஞர்கள் மனத்தில் எழாமல் இல்லை. 'உணவுப் பங்கீடு' என்ற முறையை மக்கள் நன்மைக்காகவே அரசினர் வகுத்தனர். நடைமுறையில் மக்களும் வணிகர்களும் அரசாங்க ஊழியர்களும் அத்திட்டத்தை நன்முறையில் நடக்க முடியாது குலைத்தனர். இறுதியில் அஃது ஒரு பேயாக மாறியதனால் அதனை அடியோடு ஒழிக்க வேண்டியதாயிற்று. அங்ஙனமே, குடும்பக்கட்டுப்பாட்டு முறைகளையும் கருத்தடை முறைகளையும் மக்களிடையே நன்முறையில் பயன்படச் செய்வது செயலாற்றுவோரின் கடமை; தவறான முறைகளில் – குறிப்பாக ஒழுக்கக் கேடான செயல்கட்குப் பயன்படுத்தாதிருப்பது மக்களின் பொறுப்பு. நாட்டு நலனே மக்கட் பொறுப்பாக—குறிக்கோளாக—அமைதல் வேண்டும். மணமான ஒவ்வொரு தம்பதிகளும் இத்துறையில் ஒத்துழைக்க வேண்டும்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

பாயும்ஒளி நீயெனக்குப் பார்க்கும்விழி நானுனக்கு;
தோயும்மது நீயெனக்குத் தும்பியடி நானுனக்கு;
வீணையடி நீயெனக்கு, மேவும் விரல் நானுனக்கு;
பூணும்வடம் நீயெனக்குப் புதுவயிரம் நானுனக்கு;
வானமழை நீயெனக்கு வண்ணமயில் நானுனக்கு:
பானமடி நீயெனக்குப் பாண்டமடி நானுனக்கு;
வெண்ணிலவு நீ யெனக்கு, மேவுகடல் நானுனக்கு;
பண்ணுசுதி நீயெனக்குப் பாட்டினிமை நானுனக்கு;
வீசுகமழ் நீ யெனக்கு, விரியுமலர் நானுனக்கு;
பேசுபொருள் நீயெனக்குப் பேணுமொழி நானுனக்கு;
தாரணியில் வானுலகில் சார்ந்திருக்கும் இன்பமெல்லாம்
ஒருருவமாய்ச் சமைத்தாய்! உள்ளமுதே! கண்ணம்மா!

—பாரதியார் கண்ணம்மா—என் காதலி-6.

இயல்—6

# திருமணக் கலை

மணமக்களிடையே நல்லுறவு ஏற்படுவதற்கு மன நிறைவுள்ள பாலுறவு மிகவும் இன்றியமையாதது. பண்டைக் காலத்தில் காதலும் இணைவிழைச்சும் தவறுனவைகளாகக் கருதப்பெறவில்லை. பண்டைக்கால சங்க இலக்கியங்களும் பிற்கால பக்தி இலக்கியங்களும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். பழங்காலத்தில் பாலுறவு பற்றிய விவரமான செய்திகள் மூத்தோர்கள் மூலம் இளைஞர்கட்கு அறிவிக்கப்பெற்றன. புணர்ச்சி நடைபெறுங்கால் ஆணுறுப்பிலும் பெண்ணுறுப்பிலும் பல்வேறு மாற்றங்கள் நடைபெறுகின்றன. முதற் புணர்ச்சியில் கணவனும் மனைவியும் கவனிக்கவேண்டிய பல செய்திகள் உள்ளன. பெண்ணின்பாலுள்ள கன்னிச் சவ்வினைக் கிழிப்பதில் விழிப்பு வேண்டும்; பழங்காலத்தில் இஃது ஒரு விழாவில் செய்யப் பெற்று வந்தது. 'மலரினும் மெல்லியது காமம்'[1] என்பது வள்ளுவர் வாக்காதலின், தம்பதிகளின் பால் இணக்கம் நுட்பமாக அமைதல் வேண்டும். ஆணிடமும் பெண்ணிடமும் ஒரே அளவு பால் விருப்பங்கள் அமைந்து கிடப்பினும், புணர்ச்சியை ஒழுங்காக மேற்கொண்ட பிறகே அவை பெண்ணிடம் முழு வளர்ச்சி பெறுகின்றன. இணைவிழைச்சிற்கு முன்னர்த் தம்பதிகள் மேற்கொள்ள வேண்டிய பல செயல்கள் உள்ளன. தம்பதிகளின் உடலில் பால்வேட்கையைக் கிளர்ந்தெழச் செய்யக்கூடிய இடங்கள் உள்ளன. தம்பதிகள் அவற்றை அறிந்து பயன்படுத்துதல் அவர்தம் பால்வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாதது. கலவி இன்பம் சரியாக அமையவேண்டுமாயின் இருவர்பாலும் உச்ச

---

1. குறள்–1289

நிலை உணர்ச்சி ஒரே காலத்தில் ஏற்படவேண்டும். இந்நிலை ஏற்படுங்கால் இருவரிடமும் பல மாற்றங்கள் நிகழ்கின்றன. பல காரணங்களால் இருவரிடமும் ஒரே காலத்தில் இவ்வுச்சநிலை உணர்ச்சி ஏற்படுவதில்லை. இது சரியாக ஏற்படுவதற்கும், காதலர்களிடையே இயல்பாகவும், பிறவிக் கோளாறுகளாலும், பால் குறிகளின் அமைப்புக் காரணமாகவும் உள்ள குறைகளை நிவர்த்தி செய்வதற்கும் காம நூலார் பல புணர்ச்சி நிலைகளைக் கண்டறிந்துள்ளனர். இந்நிலைகள் யாவும், அறிவியலடிப்படையில் அமைந்தவையே. இச்செய்திகளும், இவற்றுடன் தொடர்புள்ள பிற செய்திகளும் இப்பகுதியில் ஐந்து கடிதங்களில் (30—34) ஆராயப் பெறுகின்றன.

# 30

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

இதுகாறும் எழுதிய கடிதங்களில் பெரும்பாலும் உயிரியல் அடிப்படையிலும் இனப்பெருக்க அடிப்படையிலும் திருமணத்தில் பாலுறவுபற்றியே குறிப்பிட்டு ஆராய்ந்தேன். இக்கடிதத்திலும் இதனைத் தொடர்ந்து எழுதும் ஒரு சில கடிதங்களிலும் திருமணத்தில் பாலுறவுபற்றிய ஒரு சில கருத்துகளைத் தெரிவிப்பேன். பாலுறவில் உடலியல், உளவியல், உள்ளக்கிளர்ச்சிபற்றிய கூறுகள் எங்ஙனம் பங்கு பெறுகின்றன என்பதை விளக்குவேன். அண்மைக் காலத்தில் திருமணத்தில் பாலுறவு பெரும் பங்கு பெறுகின்றது என்பதை நன்கு அறிந்துள்ளனர். கணவன் மனைவியரிடம் நல்லுறவு—மகிழ்ச்சியான உறவு—ஏற்படுத்துவதற்கு மனநிறைவுள்ள பாலுறவு பெரிதும் இன்றியமையாதது என்று கண்டுள்ளனர். இணக்கமும் விசைத்திறமும் வாய்ந்தபால் பொருத்தப்பாடு தானாகவே இன்றியமையாத முறையில் அமைந்துவிடும் என்று சொல்வதற்கில்லை. பாலுறவுபற்றிய இயல்பும் பொறிநுட்பமும் குறித்த நுண்கருத்துகளை நன்கு அறிந்து கொண்டால்தான் இப்பொருத்தப்பாடு நன்கு அமையும் என்றும், கலவியின்[2] ஒரு சில கலை நுட்பங்களையாவது தம்பதிகள் நன்கு அறிந்து கொள்ள வேண்டும் என்றும் பாலுறவுக் கலை ஆய்வாளர்கள்[3] கண்டறிந்துள்ளனர்.

பாலுறவின் பங்கு : இன்று புலனின்பத்திற்கு அதிக முக்கியத்துவம் தரப்பெறுகின்றது. திருமணத்திற்குப்

---

2. கலவி—Coitus.

3. பாலுறவுக்கலை ஆய்வாளர்கள்—Sexualogists,

பாலுறவுதான் மிக முக்கியமானது என்று பலர் பேசியும் எழுதியும் வருகின்றனர். இவர்கள் தொல்காப்பியர் போன்ற அநுபவம் மிக்க பண்டைப் பெரியோர்கள் குறிப்பிட்ட ஏனைய பொருத்தங்களை நன்கு சிந்தித்துப் பார்க்கின்றார்கள் இல்லை. தொல்காப்பியர் கூறியுள்ள பத்துவகைப் பொருத் தங்களை ஏற்கனவே குறிப்பிட்டதை ஈண்டு நினைவு கூர்வா யாக. பால் கவர்ச்சியால் மட்டிலும் ஒரு திருமணம் வெற்றி யாக முடியும் என்று சொல்வதற்கில்லை. புலன்களை[4] அடிப் படையாகவுடைய இன்பம் மாறக்கூடியது. அதனை மட்டிலும் அடிப்படையாகக் கொண்ட திருமணம் புலனுணர்ச்சி குன்றி யதும் தவறிப் போதல் கூடும். இதனை நன்குணர்ந்துதான் 'பெயர் தெரியாத' நற்றிணைப் புலவர் ஒருவர் தோழியின் 'ஓம்படைக் கிளவி'யாக,

> அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
> பொன்னேர் மேனி மணியில் தாழ்ந்த
> நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
> நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர![5]

என்று கூறியுள்ளார்; உண்மையான காதல் பயிர் செழித்து வளர்வதற்கு அன்பு அடிப்படையானது; ஏனைய கூறுகளும் இன்றியமையாதவை: திருமணத்தின் விளைவு வெற்றியாக வேண்டுமாயின் சாதகமான கூறுகள் மிக வேண்டும்; பாதக மான கூறுகள் இல்லாது அமைதலும் வேண்டும்.

தம்பதிகளின் ஏனைய கூறுகள்: திருமணத்தின் பயன் இன்பமானதாக அமைதல் வேண்டுமாயின், தம்பதிகளிடம் ஒன்றுபடுத்தும் அன்பும் காதலும் இருத்தல் வேண்டும். இரு வருடைய குடும்பப் பாங்கு, இருவருடைய கவர்ச்சிகள், மனப்பான்மைகள், எண்ணப் போக்குகள், பொருளாதார நிலைகள் ஆகியவை யாவும் சரியாக இருப்பதுடன் இருவரு டைய சொந்த, குடும்ப, சமூக உறவு முறைகளும் மனநிறை வுள்ளனவாக அமைதல் வேண்டும். இவ்வளவும் சரியாக இருந்து பாற்கவர்ச்சி இல்லாவிட்டாலும், அல்லது பாலுறவு

4. புலன்கள்—Senses 5 நற்றிணை—11

வாழ்க்கை திருப்தியாக இராவிடினும், திருமணம் வெற்றி யளிக்காது. இத்துறையில் மேனுடுகளில் செய்யப்பெற்ற ஆராய்ச்சிகளாலும், நம் நாட்டில் நாம் அநுபவத்தில் காணும் உண்மைகளாலும் பாலுறவுக்கூறு பெரும் பங்கு பெறுகின்றது என்பதையறியலாம். இந்த உறவில் இணக்க மின்மையோ, அல்லது மனநிறைவின்மையோ, இருப்பின் அது மணமுறிவில் கொண்டு செலுத்துவதையும் காண லாம்.

திருமணம் தெய்வீக உறவு: பண்டைக் காலத்தில் காத லும் இணைவிழைச்சும் தவறுனவைகளாகக் கருதப்பெற வில்லை. காதல் ஒரு கலையாகவே வளர்க்கப்பெற்றிருப்ப தைத் தொல்காப்பியம் போன்ற இலக்கணத்திலும் காண லாம். சங்க இலக்கியங்கள் காதலைப் போற்றி வளர்க்கும் விளைநிலமாக இருந்து வருகின்றன. நாயன்மாரர்களும் ஆழ் வார்களும் காதல் உணர்ச்சியை 'நாயக-நாயகி' பாவ மாகக்கொண்டு இறைவனை அடையும் வழியாகக் கண்டுள்ள னர். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் "திருப்பாவை யும்" வாதவூரடிகளின் 'திருவெம்பாவையும்' இதற்கு எடுத்துக் காட்டுக்களாகும். ஆனல், பிற்காலத்தில் ஒருசிலஅறியாதார் பெண்களை இழித்துப் பேசியும், இணைவிழைச்சினைத் தவறு என்று கூறியும் பெருந்தவறுகளை இழைத்துவிட்டனர். 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்து வோம்'[6] என்று புதுமைக்கவி பாரதியாரும், 'மங்கையராகப் பிறப்பதற்கு, மாதவம் செய்திட வேண்டுமம்மா'[7] என்று கவிமணியும் பாடிப் பண்டைய பெருமையை மீண்டும் நிலை நாட்டமுயன்றுள்ளனர். திரு. வி. க. அவர்கள் எழுதிய "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை" என்ற நூல் இத்துறையில் செய்துள்ள பணி மிகப் பெரியது. சமயம் நேரிடுங்கால் அதனைப் படித்தும் பயன் பெறுக. 'திருமணம்' என்பது ஒரு 'தெய்வீக உறவு' என்பதையும், இந்த ஏற்பாட் டில் இம்மைக்குவேண்டிய நலன்களனைத்தையும், மறுமைக்கு

6. பாரதியார்—கவிதைகள் (36-விடுதலை)
7. கவிமணி—மலரும் மாலையும்.

வேண்டிய வழியமைப்புகளனைத்தையும் இணைத்துவைத்த பண்டையோரின் ஆழ்ந்த அறிவினை எண்ணி எண்ணி நாம் மகிழவேண்டும்.

**மேனாட்டாரின் நூல்கள்:** திருமணத்தைப்பற்றியும் பாலுறவுபற்றியும் ஹேவ்லக் எல்லிஸ்[8], மார்க்கரெட் சாங்கர் மேரி ஸ்டோப்ஸ்[10], டிக்கின் சன்[11], கின்சே[12] போன்றவர்கள் அறிவியல் அடிப்படையில் எழுதியுள்ள நூல்கள் நம்மிடம் ஒருவித புதிய மனப்பான்மையை உண்டாக்கிவருகின்றன. இந்நூல்களைப் படித்த ஒரு சிலர் அவற்றின் உண்மைக் கருத்துகளை யறியாது, நம்முடைய பண்டைப் பெருமையையும் பண்பாட்டையும் மதியாது, கோணலான அறிவுபெற்று தத்தமக்குத் தோன்றியவாறு பிதற்றியும் எழுதியும் வருகின்றனர். இன்று பெண்ணின் பெருமை போற்றப்பெறுகின்றது. இக்காலத்தில் தோன்றும் இலக்கியங்களிலும் கவிதைகளிலும் இக்கருத்து நிழலிடுகின்றது: பழங்காலத்தில் பெரும்பாலும் பெற்றோர்களே மணமகனைத் தேடியறியும் ஏற்பாடு மாறி, இன்று அவர்கள் தம் பெண்ணையும் தாம் ஏற்பாடு செய்யும் மணமகன் அவளுக்குப்பிடித்துள்ளவனா என்று வினவுகின்றனர்! ஒருசில பெண்கள் தாமாகவே துணைவனைத் தேடிக்கொள்கின்றனர். மக்களாட்சிமுறையும்கல்விப் பெருக்கமும் மக்களின் மனப்போக்கையே மாற்றிவருகின்றன. தவிரவும் சமூக, அரசியல், பண்பாட்டுத்துறைகளில் விரைவாக ஏற்பட்டு வரும் மாற்றங்களும், இவற்றின் விளைவாக உண்டாகும் புதிய சமூக மதிப்பீடுகளும் திருமணத்தைப்பற்றியும் பாலுறவுபற்றியும் உள்ள பழங்கருத்துகளைப் புதிய கோணத்தில் நோக்கும் மனப்பான்மையை ஏற்படுத்தி வருகின்றன.

---

8. ஹேவ்லக் எல்லிஸ்—Havelock Ellis
9. மார்க்கரெட் சாங்கர்—Marrgaret Sanger
10. மேரி ஸ்டோப்ஸ்—Marie Stopes.
11. டிக்கின்சன்—Dickinson
12. கின்சே—Kinse

**நம் நாட்டு நூல்கள்:** இவ்விடத்தில் இன்னொரு செய்தியும் நோக்கத் தக்கது. பழங்காலத்தில் எல்லா நாடுகளிலேயும் மூத்தோர்கள் பாலுறவுபற்றிய யுக்தி முறைகளை[13] இளைஞர்கட்கு உறைத்ததாக அறிகின்றோம். பூப்பு நிகழ்ச்சியைக் கொண்டாடும் விழாவில் இதுவும் ஒரு பகுதியாக அமைந்திருந்தது. பாமரர்களிடையே இத்தகைய பழக்கம் நடைபெற்று வந்ததைப் போலவே, கற்றவர்கட்கென நூல்கள் எழுதப்பெற்று அவையும் பெரு வழக்கிலிருந்தன என்பதையும் அறிகின்றோம்: 'கொக்கோக சாத்திரம்', வாத்ஸ்யாயனருடைய 'காமசூத்திரம்' போன்ற நூல்கள் கற்றோர்க்குக் காமக் கலையை நன்கு உணர்த்துவதற்கென்றே எழுந்த நூல்களாகும். இன்று இத்தகைய நூல்களின் இன்றியமையாமை நன்கு உணரப்பெற்று வருகின்றது. இன்று அறிவியலடிப்படையில் நூல்கள் தோன்றி வருகின்றன. கலவித்துறையில் பல நூல்கள் கயவர்களாலும் எழுதப் பெற்றுள்ளன; எழுதப்பட்டும் வருகின்றன. அவற்றைக் கையாலும் தொடுதல் ஆகாது. நன்மக்களால் எழுதப் பெற்ற நூல்களே வாழ்விற்குத் துணை செய்யும். அவற்றை மட்டிலும் தேர்ந்தெடுத்துப் படிப்பாயாக.

**பாற்கல்வியின் அவசியம்:** இயல்பூக்க அடிப்படையில் அமைந்த இந்த உணர்ச்சிக்கு இத்தகைய ஆர்ப்பாட்டமான பாற்கல்வி இன்றியமையாததா என்று நீ வினவலாம். நீ வினவுவது சரியே. மானிட வாழ்க்கை ஏனைய பிராணிகளின் வாழ்க்கையைப்போல் இயல்பூக்கங்களின் அடிப்படையில் மட்டிலும் அமையவில்லை. மனிதன் தன்னுடைய அநுபவத்திஞல் மட்டிலும் வாழவில்லை; தன்னுடைய மூதாதையரின் அநுபவமும் அவனது வாழ்க்கைக்குத் துணையாக அமைகின்றது. இங்ஙனம் மூதாதையரின் அநுபவத்தைப் பெறும் முறையே கல்வி என்பது. கல்வியைப் பெறுவதற்கென்றே மனிதனுடைய குழவிப் பருவமும் நீண்டு கிடக்கின்றது. ஏனைய பிராணிகளின் குழவிப் பருவம் இங்ஙனம் நீண்டிருக்க

---

13. யுக்தி முறைகள்—T c ns

வில்லை என்பதை எண்ணிப் பார்ப்பாயாக. எனவே, ஏனைய கல்வியைப் போலவே பாற்கல்வியும்[14] மனிதனுக்கு மிகவும் இன்றியமையாது வேண்டப்படுவதாகும். தவிர, மனிதனுடைய சமூகப் பாலுறவும், தனிப்பட்ட பால் நடத்தையும் இயல்பூக்கவின்[15] அடிப்படையில் அமைந்திருக்கவில்லை. நாகரிக உலகில் அங்ஙனம் அமைந்திருக்கவும் முடியாது. பொதுவாக நோக்குமிடத்து, ஒரு குறிப்பிட்ட தூண்டுதலுக்கேற்ப[16] ஒரு திட்டமான முறையில் நடந்துகொள்ளும் இயல்பான மனப் போக்கே[17] இயல்பூக்கம் என்பதாகும். எனினும், நாகரிகமுள்ள மானிட வாழ்க்கையில் பாலுறவு பற்றிய தூண்டுதலுக்கு மனிதன் துலங்க முடியாது. நினைப்பிற்கெட்டாத நெடுங்காலத்திற்கு முன்னரே இவ்வாறு துலங்குவது நின்று போயிற்று. குழவிப் பருவத்திலிருந்தே அன்னையின் வாயினின்றும் பிறக்கும் எச்சரிக்கையும் தடையுத்தரவுகளும், சமூகக் கட்டுப்பாடுகளும் நம்முடைய காதலூக்கத்தை மட்டுப்படுத்தி இயல்பான பால் நடத்தையையே மாற்றிவிடுகின்றன. திருமணம் ஆனபிறகும் இத்தகைய உள்தடைகளைக்[18] களைந்தெறிய முடிவதில்லை. மூத்தோர், பெற்றோர் இவர்களின் முன்னர் மணமக்கள் தாராளமாகப் பேசுவதற்குக்கூடக் கூச்சப்படுகின்றனர். ஆகவே, திருமணம் நிறைவேறிய பின்னர்க்கூட சமூகக் கட்டுப்பாடும் பழக்கவழக்கங்களும் மணமக்களின் விருப்பப்படி பாலுறவு கொள்வதற்குத் தடைகளாக உள்ளன. பாலுறவு நன்முறையில் வெற்றி பெறுவதற்கும் விழிப்பானதும் அறிவுடையதுமான முயற்சியும் தேவைப்படுகின்றது.

மேலும், ஆண்களிடமும் பெண்களிடம் தோன்றும் பாலுந்தல் மட்டிலும் அவர்கள் திருப்திகரமான இணை

14. பாற்கல்வி—— Sex education
15. இயல்பூக்கம்—Instinct
16. தூண்டல்—Stimulus
17. மனப்போக்கு—Tendency
18. உள்தடை—Inhibitio

விழைச்சு புரிவதற்குப் போதுமானதன்று என்பது குறிப்பிடத்தக்க ஓர் உயிரியல் உண்மையாகும். முற்றிலும் முன்னதாகக் கற்றலின்றி ஒரு செயலில் ஒரு குறிப்பிட்ட முறையில் கொண்டு செலுத்தக்கூடிய திறனே ஓர் இயல்பூக்கமாகும் என்பதை நாம் அறிவோம். எனினும், மானிட இனத்தில் மட்டிலும் பாலுறவு கொள்ளும் யுக்திமுறை ஒரு கற்றறிந்த செயலாகவே அமைந்துள்ளது. ஓரளவு இணைவிழைச்சின் பொறிநுட்பம்பற்றிய சிறிதளவு முன்னறிவும் புரிந்துகொள்ளும் தன்மையும் இல்லையெனின், தம்பதிகள் பாலுறவு கொள்வதில் பல சங்கடங்கள் ஏற்படக்கூடும் என்று நாம் நிச்சயம் எதிர்பார்க்கலாம்.

இவ்விடத்தில் ஓர் உயிரியல் உண்மை அறியத்தக்கதாகும். பெரும்பாலான பாலுண்ணிகளிடம்[19] இணைவிழைச்சு புரியும் செயல் இயல்பூக்கத்தின் அடிப்படையில் அமைந்ததாகும்; போலச்செய்தலின்[20] அடிப்படையிலோ, அல்லது கற்றலின் அடிப்படையிலோ, அன்றி அநுபவத்தின் அடிப்படையிலோ அஃது அமைந்திருக்கவில்லை. தனிப்பட்ட பிராணிகள் தனியான இடத்தில் முதிர்ச்சியடையும் பருவம் வரையிலும் வளர்க்கப்பட்டிருந்தாலும், இணையும் பிராணியை தக்க உடலியல் நிலையில் கொண்டுவந்து விட்டதும் அவை உடனே இணைவிழைச்சு புரிகின்றன. இதற்கு மாறாக உயர் உயிரினங்களிடத்தில்[21] (எ-டு. குரங்குகள், வாலில்லாக் குரங்குகள், மனிதர்கள்) பல தடவைகள் முயன்று கற்று அநுபவம் ஏற்பட்ட பின்னர்தான் முற்றுப்பெற்ற இணைவிழைச்சு ஏற்படுகின்றது. அஃது அவர்களிடத்தில் இயல்பூக்கத்தின் அடிப்படையிலமைந்த நடத்தைக் கோலமன்று[22]. அஃது இளமையிலிருந்து பெரும் பயிற்சி மூலமும் கிட்டத்தட்டத் தொடர்ந்து பெறும் உறவின் மூல

---

19. பாலுண்ணிகள்—Mammals
20. போலச் செய்தல்—Imitation
21. உயர் உயிரினங்கள்—Primates
22. நடத்தைக் கோலம்—Behaviour pattern

மும் இருவரிடமும் உண்டாகும் ஒருவித சிக்கலான பொருத்தப்பாடாகும்[23] எனவே, போதுமான அளவு இணையும் நடத்தை ஆண்களிடமும் பெண்களிடமும் இயல்பூக்கத்தின் அடிப்படையில் ஏற்படுவதில்லை என்பது பெறப்படுகின்றது. தக்கவாறு திருப்திகரமான பாலுறவு வாழ்க்கை வளர வேண்டுமாயின் பாலுறவுபற்றிய யுக்திமுறையை[24] மக்கள் கற்றே ஆகவேண்டும்.

பாலுறவு பற்றிய யுக்தி முறை: பாலுறவுபற்றிய யுக்தி முறையாவது யாது என்பது பற்றியும் விளக்குவேன். திருப்தியான முறையில் திறமையாகக் கலவி புரிவதே பாலுறவு பற்றிய யுக்தி முறையாகும். இதனைத் தம்பதிகள் வெற்றியுடன் கொண்டுசெலுத்தவேண்டுமாயின் அவர்கள் முதலாவதாகப் பாலுறவில் பங்குபெறும் உடற்கூற்றில், உடலியல் பற்றிய செயல்களின் பொறிநுட்பத்தை[25] நன்கு புரிந்து கொண்டிருத்தல் வேண்டும்; இரண்டாவதாக, அவர்கள் காதலின்பக் கலை நுட்பத்தை நன்கு அறிந்திருத்தல் வேண்டும்; அஃதாவது, இருவருக்கும் திருப்தியாகவுள்ள முறையில் எங்ஙனம் பாலுறவு கொள்வது என்பது நன்கு தெரிந்திருத்தல் வேண்டும்.

உடலியல் அடிப்படையில் நோக்கினால், கலவி புரிவதில் ஆண் பிறப்புறுப்புகளும் பெண் பிறப்புறுப்புகளும் ஒன்று சேர்கின்றன என்பது தெரிகின்றது. ஆகவே, பாலுறுப்புகளின் அமைப்பையும் செயலையும்பற்றியும், முறையாக ஒன்று பிறிதொன்றுடன் கொள்ளும் தொடர்புகள்பற்றியும், பால் தூண்டலும் பால் துடிப்பும் ஏற்படுங்கால் நேரிடும் மாற்றங்கள்பற்றியும், உறுப்புகள் திருப்தியான முறையில் தொடர்புற அமைவதற்குத் தம்பதிகள் மேற்கொள்ள வேண்டிய நிலைகள்பற்றியும்[26] ஆணும் பெண்ணும் ஓரளவாவது

23. பொருத்தப்பாடு—Adjustment
24. யுத்திமுறை—Technique
25. பொறிநுட்பம்—Mechanism
26. நிலைகள்—Postures

அறிந்திருத்தல் வேண்டும்; அஃதாவது, நடைமுறையி லுள்ள பாலுறவின் பொறிநுட்பத்தை நன்கு அறிந்திருத் தல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது. இதிலிருந்து, மருத்துவரைப் போல் உடலின் ஒவ்வொரு பகுதிகளையும் கூறு கூறுகப் பிரித்து அறிந்திருத்தல் வேண்டுமென்பதில்லை. பாலுறுப்புகளின் அமைப்புபற்றிய அறிவினை ஓரளவு பெற் றிருந்தால் மன நிறைவுள்ள கலவியைத் தம்பதிகள் முற்று விக்க முடியும் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை: பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எழுதியுள்ள "மானிட உடல்" என்ற நூலைப் படித்தால் இவ்வறிவினை நீ நன்கு பெறுவாய்.

உளவியல் முறையிலும் உள்ளக்கிளர்ச்சி முறையிலும் நோக்கிஞல், தம்பதிகள் பால் துடிப்பின் இயல்புபற்றிச் சிறி தளவு அறிந்திருத்தல் வேண்டும் என்பது புலனுகின்றது. பால் துடிப்பினை எழுப்பக்கூடிய தூண்டல்கள்பற்றியும், ஆணிடமும் பெண்ணிடமும் தோன்றும் பால் துலங்கல்கள், எதிர் வினைகள் ஆகியவற்றின் வேறுபாடுகள்பற்றியும், பாலு றவிற்காகத் தம்பதிகள் ஒருவரையொருவர் அணுகும் மென்மை,[27] சூழ்ச்சி வகை[28], நுட்பமான போக்கு ஆகிய வற்றின் முக்கியத்துவம்பற்றியும் ஒவ்வொரு தம்பதிகளும் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். இத்தகைய நுட்பம் அறி யாதவர்கள் மிருக உணர்ச்சியுடன் புணர்ச்சியை விரைவாக முடித்துவிட்டுச் சோர்வடைந்து தூங்கிவிடுவர். அகத்துறை பற்றியெழுந்த சங்க இலக்கியப் பயிற்சியும் அகப்பொருள் இலக்கண அறிவும் இத்தகைய நுட்பங்களை அறிவதற்குப் பெருந்துணை புரியும். பொதுவாக வள்ளுவரின் இன்பத்துப் பாலும், சிறப்பாகப் புலவி, புலவி நுணுக்கம் போன்ற இயல்களும் உளவியல் காணுத நுட்பங்களையெல்லாம் நன்கு எடுத்து இயம்புகின்றன. ஒவ்வொரு தம்பதிகளும் அகத் துறைபற்றிய சங்க இலக்கியங்களையும், தொல்காப்பியப்

27. மென்மை—Delicacy
28. சூழ்ச்சி வகை—Finesse

பொருளதிகாரத்தையும், வள்ளுவரின் இன்பப்பாலையும் படித்துப் பல நுட்பங்களை உளங்கொள்ளல் வேண்டும். தொல்காப்பியம் உனக்குப் புரியவில்லையாயின், "தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை[29] என்ற நூலையாவது படித்துப் பயன் பெறுவாயாக.

இனி, இனவிழைச்சின் இயல்புபற்றியும் அதனோடு தொடர்புள்ள வேறு சில செய்திகளையும் அடுத்த கடிதத்தில் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

29. சுப்புரெட்டியார், ந: தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை. (பழநியப்பா பிரதர்ஸ், திருச்சி-2)

# 31

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

இணைவிழைச்சு: இந்த உலகில் புலன்களின் அடிப் படையில் அநுபவிக்கக்கூடிய இன்பங்களில் தலை சிறந்தது முதலாவதாக நிற்பது—இணைவிழைச்சு[30] ஆகும். இஃது அநுபவிக் குந்தோறும் புதிய புதிய உணர்ச்சிகளைத் தருவது. இதனால்தான் வள்ளுவப் பெருந்தகையும் தலைவன் கூற்றாக,

அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு[31]

என்று கூறியுள்ளார். "அறிவிற்கெல்லையின்மையான் மேன் மேல் அறிய அறிய முன்னை அறிவு அறியாமையாய் முடியு மாறு போலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடிந்ததெனத் தன் ஆராமை கூறியவாறு" என்று பரிமேலழகரின் உரைப் பகுதியும் இவ்விடத்தில் எண்ணி எண்ணிமகிழத்தக்கதாகும். இத்தகைய இன்பத்தை நல்கும் இணைவிழைச்சின் இயல்பை யும், செய்முறையையும் அதன் பொறிநுட்பத்தையும் ஒவ் வொரு மணமக்களும் நன்கு அறிந்துகொள்ள வேண்டுவது மிக மிக இன்றியமையாதது. இவைபற்றிய கருத்துகளை இக் கடிதத்தில் கூறுவேன்.

உடல் முழுவதையும் ஆட்டிவைக்கும் விசை: புணர்ச்சித் துடிப்பும் புணர்ச்சியும் நடைபெறுங்கால் நம் உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியும் செயற்படுகின்றது. நரம்பின் பொறி

30. இணைவிழைச்சு—Coitus

31. குறள்—1110

நுட்பம், சுரப்பி மண்டலம், தசைகளின் தொகுதிகள், பிரத்தியேகமான புலன்கள் (சிறப்பாகத்தொடுபுலன், காட்சிப் புலன், நாற்றப் புலன்)—இவை யாவும் கலவியில்பெரும் பங்கு பெறுகின்றன. கலவியின்பொழுது உண்டாகும் பெளதிக மாற்றங்கள் உண்மையில் எங்கும் பரவி உயிரி முழுவதையும் ஆட்டி வைக்கின்றன. புணர்ச்சித் துடிப்புடன் பொலிவதற்குத் தயாராக நிற்கும் ஆனேற்றின் தோற்றத்தைக் கண்டால் இவ்வுண்மை தெளிவாகும். தலைவியைக் கண்டது முதல் அவளையடைய வேண்டும் என்ற நோக்கத்தைத் தெரிவிக்கும் தலைவனது கூற்றாக வந்துள்ள அகத்துறைப் பாடல்களைப் படிக்குங்கால் இவ்வுண்மையை மேலும் தெளியலாம்:

இணைவிழைச்சின்பொழுது உடலின்நிலை: ஆணுறுப்பைப் பெண்ணின் யோனிக்குழலில் செருகுவதும், அதனைத் தொடர்ந்து உச்சநிலை உணர்ச்சியை அடையும்வரை ஒருவரையொருவர் இணைக்கும் அசைவுகளும் அடங்கிய செயல்களே இணைவிழைச்சின் உடல்பற்றிய இயக்கமாகும். சாதாரண நிலையில் ஆணுறுப்பு[32] மென்மையாகவும் தொங்கும் நிலையிலும்[33] உள்ளது; ஆனால் புணர்ச்சித் துடிப்புடனிருக்கும் பொழுது அஃது உறுதியாகவும், விறைப்பாகவும், திண்மையாகவும் உள்ளது; இதனால் அது யோனிக்குழலைத் துளைத்துக்கொண்டு உட்புகுகின்றது பால் துடிப்பு கிளர்ந்தெழுந்ததும் பெண்ணின் பிறப்புறுப்புகளும் சில மாற்றங்களை அடைகின்றன. யோனிக்குழலின் சுவர்கள் நெருக்கத்தை அடைகின்றன; யோனிக்குழலின் வாய் நெகிழ்ந்து மலரும் நிலையிலுள்ள முகை இதழ்கள்போல்—சிறிதளவு உதடுகளைப் பிதுக்கிக்கொண்டு நிற்கின்றன; யோனிலிங்கமும் சிறிய உதடுகளும் விறைத்துச் சிறிதளவுநிமிர்ந்தும் நிற்கின்றன: அதே சமயத்தில் பெண் குறியிலுள்ள[34] சுரப்பி

32. ஆணுறுப்பு—Penis
33. தொங்கும்நிலை—Flaccid state
34. பெண்குறி—Vulva

களும் வழு வழுப்பான பாய்மத்தைச் சுரந்து வெளிப்புறமாகக் காணப்பெறும் பிறப்புறுப்புகளின் மேற்பரப்புகளை நனைத்து ஆண்குறி நன்கு எளிதாக நுழைவதற்குத் துணை செய்கின்றன; இந்த மாற்றங்களைத் தொடர்ந்து புணர்ச்சித் தூண்டலின் பொதுவான உடல், உள்ளக் கிளர்ச்சிபற்றிய மாற்றங்களும் வெளிப்படையாகப் புலனாகின்றன. வலுவானதும் விரைவானதுமான நாடித்துடிப்பு[35], வேகமாக மூச்சு விடுதல், விரிந்த பாவைகள்[36], சிவந்த முகம், அதிகப்படியான தசைச் செயல்கள், நரம்புக் கிளர்ச்சி—போன்றவை அவற்றுட் சில. இணைவிழைச்சின் இயக்கங்கள் உச்சநிலையை அடைந்துவிடுதலைப் பெறும்வரை காதல் உணர்வுகளையும் மிகுந்து வரும் மன நெருக்கடியையும்[37] அவை மிக அதிகமாக உயர்த்திக் கொண்டே போகின்றன. இறுதியாக நாம் இன்பத்தின் கொடுமுடியை அடைந்து ஆயாசமாக இளைப்பாறுகின்றோம்.

**கன்னிச்சவ்வு கிழிதல்:** முதற் புணர்ச்சிஅல்லது அதனைத் தொடர்ந்து நிகழும் சில புணர்ச்சிகட்கும் அடுத்து நிகழும் புணர்ச்சிகட்கும் சிறிது மாறுபாடு உண்டு. முதல் தடவையாக அதனைத் தொடர்ந்து நிகழும் சில புணர்ச்சிகளில் கன்னிச் சவ்வு[38] துளைக்கப் பெறுகின்றது. இந்தக் கன்னிச் சவ்வு அகன்று விரியும்பொழுது அல்லது கிழியும்பொழுது சிறிதளவு வலியும் உண்டாகலாம். இந்தச் சவ்வின் அமைப்பின் தன்மையையும் நிலையையும் பொறுத்து வலி அல்லது நலக்குறையின்[39] அளவு இருக்கும் என்பது உணரத்தக்கது. கன்னிச் சவ்வு மெல்லியதாகவும் நீளுந்தன்மை யுடையதாகவும் இருந்தால், அது சிறிது நலக்குறைவுடன் நன்கு அகன்று நீண்டு கொடுக்கும், அல்லது கிழிந்துவிடும்; அஃது உறுதி

---

35. நாடித்துடிப்பு—Pulse
36. பாவை—Pupil (eye)
37. மனநெருக்கடி—Tension
38. கன்னிச்சவ்வு—Hymen
39. நலக்குறை—Discomfort

பாகவும் தடித்தும் இருந்தால், அஃது ஆண்குறி நுழைவதற்குத் தடையாக இருப்பதுடன் அது நுழையும்பொழுது தாங்க முடியாத வலியையும் நல்கும். எனினும், இந்த வலியையும் பொறுக்கும் அளவிற்குக் குறைத்தல்கூடும். இதற்குக் கணவன் பொறுமையாகவும் மன ஒற்றுமையுடனும் மனைவியை அணுகவேண்டும்; மனைவியும் இதற்கு ஒத்துழைத்து நெகிழ்ந்து கொடுக்கவேண்டும்.

முதற் புணர்ச்சியிலேயே இந்தக் கன்னிச் சவ்வு கிழிந்து விடுமா, அல்லது பல புணர்ச்சிகட்குப் பின்னர்தான் கிழியுமா என்று நீ வினவலாம். கூறுவேன்; இதற்கு முன்னர்க் கன்னிச்சவ்வு வேறு முறையில் விரித்திருக்கப் பெறாவிட்டால், ஆண்குறி முற்றிலும் நுழையும்பொழுது அது கிழிகின்றது. யோனிக்குழலின் நுழைவாயிலைக் கன்னிச்சவ்வு அரைகுறையாக மூடிக்கொண்டுள்ளது; ஆண்குறி யோனிக் குழலினுள் நுழையவேண்டுமாயின் அது கன்னிச் சவ்வினைக் கடந்துதான் செல்லவேண்டும். விறைத்த நிலையிலுள்ள ஆண்குறியின் குறுக்களவு ஒன்றரை அங்குலம் இருக்கும்; ஆனால், கன்னிச்சவ்வு வழியாகவுள்ள யோனிக் குழலின் திறப்பு கிட்டத்தட்ட ஓர் அங்குலந்தானிருக்கும்; முதலில் ஆண்குறியின் அழுக்கம் கன்னிச்சவ்வினை நீளச்செய்து விடுகின்றது. இவ்வாறு அகன்ற நிலையிலும் அஃது உள்ளே புகுவதற்கு இடம் போதாவிட்டால், தொடர்ந்து தரப்படும் அழுக்கம் அந்தச் சவ்வினை ஒன்று அல்லது பல இடங்களில் கிழித்துவிடுகின்றது. இதுதான் 'கன்னிச் சவ்வு கிழிதல்'[40] என்று வழங்கப் பெறுகின்றது. இவ்வாறு கிழியுங்கால் சிறிதளவு குருதிப் பெருக்கும் ஏற்படலாம்; இதற்கு எந்தவிதச் சிகிச்சையும் தேவையில்லை. சாதாரணமாக இந்தக் குருதிப் பெருக்கு சிறிது நேரத்தில் நின்றுவிடும்; எனினும், அடுத்து நிகழும் ஒன்றிரண்டு புணர்ச்சிகளின்பொழுதும் குருதிப் பெருக்கு சிறிது தோன்றலாம். இதனை அவ்வளவாகப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

---

40. கன்னிச் சவ்வு கிழிதல்—Defloration.

கலவிக்குமுன் கணவனின் செயல்கள்: புணர்ச்சியைமுற்றிலும் கொண்டுசெலுத்துவதற்கு முன்னர் கணவன் மனைவியைப் படிப்படியாகத் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமுள்ளவளாகச் செய்வதற்குக் குறைந்தது பத்து நாட்களாவது எடுத்துக்கொள்ளவேண்டும் என்று வாத்ஸ்யாயனர் தனது 'காம சூத்திரத்தில்' கூறுவது தற்காலத் தம்பதிகட்குப் பொருந்தாது. தற்காலத் தம்பதிகள் பெரும்பாலும் முன்னதாகவே காதலூடாட்டத்திற்கு[41] உட்பட்டு விடுவதால் இதற்கு இவ்வளவுகாலம் எடுத்துக்கொள்ளத்தேவை இல்லை. முடிந்தால் திருமணம் முடிந்து ஒருசில நாட்களுக்குள்ளேயே புணர்ச்சியை முற்றிலும் நிறைவுடையதாக்கி விடுவது மிகவும் நன்று. ஆண் குறியை நுழைப்பது மிகவும் வலியைத் தருவதாக இருந்தாலும், அல்லது மனைவியிடமும் ஐயுறவும் அச்சமும் அதிகமாக இருந்தாலும் முதற் புணர்ச்சியிலேயே ஆண் குறியை முற்றிலும் நுழைக்க முயல வேண்டியதில்லை. அடுத்துத் தொடர்ந்தாற்போல் நிகழும் பல புணர்ச்சிகளின் பொழுது படிப்படியாகவும் மென்மையாகவும் கன்னிச்சவ்வினை விரியச் செய்தால் பெண்ணின் நலக்குறைவு இல்லாது போவதுடன் அவளுடைய மனக்கவலையும் குறைதல் கூடும். எனினும், பொதுவாக முதல் அநுபவங்களே நலக்குறையினை விளைவிக்குமாயின், புணர்ச்சியை முற்றுப்பெறக் கொண்டு செலுத்துவதைப் பல நாட்களுக்குத் தள்ளிப்போடுதல் கூடாது; இதனை ஒத்திப்போடும் காலம் அதிக நீளமாக இருப்பதற்கேற்ப மனைவியிடம் கவலைபுணர்ச்சியும் அதிகரிக்கும்; கணவனிடமும் மனமுறிவு அதிகப்படும். யாதாவது ஒன்று அல்லது பிறிதொரு காரணத்திற்காகப் புணர்ச்சி நிறைவு பெறுவது தவிர்க்கப்பெற்றால், அஃது உடற்குறைவிற்கோ அல்லது உள்ளக்கிளர்ச்சிபற்றிய சங்கடத்திற்கோ அடையாளமாகக் கருதப்பெறும்; இந்நிலை ஏற்பட்டால் உடனே மருத்துவரின் யோசனையை மேற்கொள்வது நன்று; அஃது அறிவுடைமையுமாகும்.

---

41. காதலூடாட்டம்—Courtship

முதல் நாள் புணர்ச்சி: முதல்நாள் புணர்ச்சியும் அஃது எங்ஙனம் மேற்கொள்ளப்பெற்றது என்பதும் ஒருபெண்ணின் எதிர்காலப் பால்வாழ்க்கையைப் பொறுத்தவையாகும். மிகச் சிறிய உள்ளக்குலேவும் உடற்குலேவும் ஒரு பெண்ணிடம் மறக்கமுடியாத விளேவுகளே உண்டாக்கி, உளவியல்பற்றிய போக்கு உள்ளவர்களிடம் பாலுணர்ச்சியே இல்லாதுசெய்து விடுதல் கூடும். இத்தகையோர் அடுத்துப் பாலுறவு கொள் வதையே வெறுப்பர். எது எப்படியிருப்பினும் முதற் புணர்ச்சி ஒரு பெண்ணுக்கு இன்பமாக இருப்பது அரிது என்பது வெளிப்படை. அதற்குக் காரணம் வலியும் குருதிப் பெருக்கும் உண்டாவதேயாகும். எனவே, முதல் நாள் புணர்ச்சியில் ஏதாவது தடையும் நலக்குறையும் இருக்கு மென்று கருதி கணவன் மனேவியைச் சற்று எச்சரிக்கை யாகவேஅணுகவேண்டும். படிப்படியாக அநுபவமும் அன்னி யோன்யமும் ஏற்பட ஏற்பட, இருபாலாருக்கும் திருப்தி யளிக்கத்தக்க முறையில் பாலுறவினே ஏற்படுத்திவிடலாம்.

திருமணத்தின்தொடக்கத்தில்பெரும்பாலான பெண்கள் பாலுறவிற்கு இடங்கொடுப்பதற்குச் சங்கடப்படுவர்; புணர்ச்சிக்கே இடங்கொடுக்காமலும் மறுப்பர்; இது நாணத் தின் காரணமாகவோ, அன்றி இளமையில் பெற்ற பயிற்சி, வளர்ப்பு ஆகியவற்றின் காரணமாகவோ, அல்லது நடை பெறக்கூடிய நலக்குறைவுகளேப் பலவாறு மிகைப்படுத்திய அச்சத்தின் காரணமாகவோ நேரிடலாம். திருமணத்திற்கு முன்னர் காதலூடாட்டம் நேரிட்டிருந்தால் அது பெண்ணி டம் நம்பிக்கையுணர்ச்சியை வளர்த்து அவள் பாலுறவு கொள்வதற்கு மேற்கொள்ளும்தடையைக் குறைத்தல்கூடும். எனினும், சிலசமயங்களில்மனேவிகணவன்மீது அன்புகொண் டிருந்தபோதிலும், அல்லது புணர்ச்சித் தழுவலுக்குத் தக அவள் துலங்குவதற்கு விரும்பினபோதிலும் திருமணம் ஆன பல நாட்கள்வரையிலும் இத்தடை மாருது நீடிக்கலாம்; உண்மையில் அவள் தன் கணவன்மீது ஆழ்ந்த கவர்ச்சியுடை யவளாக இருக்கலாம்; அவளிடமும் ஆழ்ந்த வன்மையான பாலுந்தல் இருக்கலாம்; எனினும், அவள் பாலுறவினின்

றும் தன்னை நனவிலி நிலையில் தவிர்த்துக்கொள்வதைத் தடுக்க முடியாதிருக்கலாம்: ஆதலால் ஆண்மகனும் பெண் மகளும் இத்தகைய நிலையொன்று இருப்பதாக எண்ணி—அப்படியொரு நிலை ஏற்பட்டால்—அதனைத் தேவையான அறிவுடனும் பொறுமையுடனும் சமாளித்துக்கொள்ளல் வேண்டும். இதற்குத் தன்னுடை பமுழுமையான நெகிழ்வும் சுறுசுறுப்பான ஒத்துழைப்பும் இன்றியமையாது இருந்தால் தான் முழுமையான பாலுறவினைப் பெறுதல் முடியும் என்பதைச் சிறப்பாகப் பெண் உணர்தல் வேண்டும்.

பழங்காலத்தில் கன்னிச் சவ்வினை நீக்கின முறை: இத்தகைய சங்கடங்களை முன்னதாக எதிர்பார்த்துதான் உலகத்தில் பல்வேறு பகுதிகளிலும் இருந்த பழங்கால மக்கள் திருமணத்திற்கு முன்னதாகவே இக் கன்னிச்சவ்வினைச் செயற்கை முறையில் நீக்குவதையோ அன்றிச் சிதைப்பதையோ வழக்கமாகக் கொண்டிருந்தனர்: மானிட இன வரலாற்றியல்[42] பற்றிய நூல்களில் இத்தகைய பழக்கங்கள் மிகுதியாகக் கூறப்பெற்றிருப்பதைக் காணலாம். பெரும்பாலோரிடம் இந்தச் சவ்வு பூப்படைந்த காலத்திலோ அன்றித் திருமணத்திற்கு முன்னதாகவோ மரபுச் சடங்குபோல் நிகழும் விழாவொன்றில் செயற்கை முறையாக விரியச் செய்யப்பெறுகின்றது; அல்லது நீக்கப்பெறுகின்றது. சில ஆஸ்திரேலியப் பழங்குடிமக்களிடம் திருமணத்திற்கு முன்னர் ஒரு முதியவளைக்கொண்டு மணமகளின் இந்தச் சவ்வு துளையிடும்செயல் நிகழ்த்தப்பெறும் வழக்கம் இருந்துவருகின்றது. ஓர் ஆஃபிரிக்கப் பழங்குடி மக்களிடம் கன்னிச் சவ்வினைக் கிழித்து விடுவது திருமணத்தின் முன்னேற்பாட்டிற்குரிய முறையாயமைந்த சடங்காக நிகழ்த்தப்பெற்று வருகின்றது. மலாய்த் தீவுகளில் வாழும் ஒரு சில பழங்குடியைச் சார்ந்த மக்களிடம் கன்னிச்சவ்வினைக்கிழிக்கும் செயல் மணமகளின் தந்தையினாலோ, அல்லது அக்குடும்பத்திலுள்ள வேறோர் ஆண் மகனாலோ நிகழ்த்தப்பெறுகின்றது; குழவிப் பருவத்

42. மானிட இன வரலாற்றியல்-Anthropology.

தில் முதுமகள் ஒருத்தியால் கன்னிச்சவ்வு துளையிடப்பெறுத சிறுமிகளின் சவ்வினைத் துளையிடுவதையே தொழிலாகக் கொண்ட மனிதர்கள் ஃபிலிப்பைன் தீவுகளில் வாழ்ந்ததாக அறியக்கிடக்கின்றது. ஒரு சில எஸ்கிமோ வகுப்பாரிடம் கன்னிச் சவ்வினைக் கிழிக்கும் சடங்கு குலகுருவால் நிகழ்த் தப்பெறுகின்றது. சீன, ஜப்பான் நாடுகளில் சில பகுதிகளில் வாழும் சிலர் குழவிகளின் பிறப்புறுப்புகளை தாய் மாரோ அல்லது தாதியரோ பலமாகக் கழுவுவதால் இந்தச் சவ்வு வேண்டுமென்று செய்யாத முறையிலேயே அழிக்கப் பெறுகின்றது. இந்த நாடுகளில் வாழும் பல மருத்துவர்கள் இத்தகைய ஒரு சவ்வு பெண்களிடம் இருப்பதையே அறி யார் என்று சொல்லப்பெறுகின்றது. இந்த எடுத்துக்காட்டு களினுல் கன்னிச் சவ்வினை நீக்குதல் கணவனின் பொறுப் பன்று என்பது அறியலாகும். கன்னிச்சவ்வினை நீக்குதல் ஒரு சடங்கின் ஒரு பகுதியாக நிகழ்ந்துவந்ததிலிருந்து கடவுளுக் குக் கன்னிமையைத்[43] தியாகம் செய்யும் கருத்தினை அறிதல் எளிதாகும். இதை இவ்வாறு தியாகம் என்றுகொள்வதுடன் மணப்படுக்கையில் கணவன் கன்னிச் சவ்வினைக் கிழித்தலை வெற்றிகரமாகச் செய்யாததால் நேரிடக்கூடிய தீய விளை வினைப் பழங்குடி மக்கள் நன்கு அறிந்திருந்தனர் என்றும், அதனுல்தான் அவர்கள் கணவனல்லாத மூன்றுவது மனிதர் ஒருவரால் அவ்வாறு நீக்கும் செயலை மேற்கொண்டனர் என் றும் கொள்வது மிகவும் பொருத்தமாகும். சமூக, உள்ளக் கிளர்ச்சி பற்றிய, உணர்ச்சிக்கலைக்கோட்பாடுபற்றிய குறிப் பினைக் கன்னித்தன்மைக்கு ஏற்றியதெல்லாம் மானிடப் பண் பாட்டு வளர்ச்சியில் நாளாவட்டத்தில் ஏற்பட்டதாகும்.

மேற்கூறியவற்றிலிருந்து திருமணத்திற்கு முன்னர் கன் னிச் சவ்வின் நிலையைப் பரிசோதித்து அதற்குத் தக முன் னேற்பாட்டுடன் கன்னிச் சவ்வினைச் செயற்கை முறையில் விரித்துக்கொண்டால் தம்பதிகளிடம் விரைவில் பாலு றவுப் பொருத்தபாடு ஏற்படுவதற்குத் துணையாக இருக்கும்

43. கன்னிமை–Virginity

என்பது பெறப்படும். அதிலும் முக்கியமாக, தடித்த உறுதியான கன்னிச் சவ்வினையுடையவர்கள் இதனை அவசியம் செய்து கொள்ளுதல் வேண்டும். மருத்துவமனையில் உணர்வு நீக்க மருந்தினால் இதனை மிகஎளிதாகச்செய்துகொள்ளலாம். அங்குப் பெரும்பாலும் அதனை வெட்ட வேண்டிய அவசியமே இராது. குருதிபொழுக்கு அதிகமாக ஏற்படாத முறையில் செய்து கொள்ளலாம்; இந்த முறையில் பெண்ணுக்கு யாதொரு தீங்கும் ஏற்படுவதில்லை. ஆயினும், இவ்வாறு செய்து கொள்வது தம்பதிகளின் மனப்பான்மையையும், பரம்பரைப் பழக்கத்திற்கு அவர்கள் மதிப்பு தருவதையும் பொறுத்தது. தம்பதிகள் நல்ல நம்பிக்கையுடனும் நல்ல மனப்பான்மையுடனும் அவசரமின்றி ஒருவரையொருவர் அணுகினால், பல தடைகளைத் தடுத்துக் கொள்ளலாம்.

தலைமகனின் பொறுமை: ஒரு பெண் தலைநாட் புணர்ச்சியின் இன்பத்தைப் பெற்றாலும் பெறலாம்; பெறாமலும் போகலாம். பெரும்பாலான பெண்கள் தொடக்கத்திலிருந்தே நல்ல பாலுறவு ஏற்படுத்த் திருப்தியான முறையில் இன்பத்தை அடைகின்றனர். எனினும், ஓரளவு அதிகமான எண்ணிக்கையுள்ள பெண்கள் பாலுறவுகள் நன்கு ஏற்படும் சில நாட்கள் வரையில் பாலுறவுத்தழுவலுக்கேற்றவாறு நன்கு துலங்க முடிவதில்லை; நன்கு இன்பத்தையும் அடைய முடிவதில்லை. காதலாடாட்டத்தின்பொழுது ஏற்படும் அன்னியோன்ய உறவினால் ஒரு பெண் அதிக இன்பத்தைப் பெற்றிருக்கலாம்; பாலுறவினால் இன்னும் அதிகமான இன்பத்தைப் பெறலாம் என்று அவள் எதிர்பார்த்தலும் கூடும். ஆனால் வலியினாலோ, அச்சத்தினாலோ, உள் தடைகளினாலோ[44] அல்லது யோனிக் குழலில் யாதொரு எதிர்வினையும் ஏற்படாத காரணத்தினாலோ பாலுறவு அவளுக்குச் சிறிதும் இன்பத்தை அளிப்பதில்லை; அந்த உறவு, நலக் குறைவினையும் தருதல் கூடும்; அதனால் அவள் பெரும் ஏமாற்றத்தையும் அடையலாம். இதனால் அவள் மனம்

44. உள் தடை—Inhibition.

உடைந்து போக வேண்டிய அவசியம் இல்லை. தான் எதிர் பார்த்த அளவு முதல் உறவு இன்பத்தையளிக்காவிடினும், சில நாட்களில், அல்லது சில வாரங்களில் நல்ல பொருத்தப் பாடு அமைந்துவிடும் என்ற நம்பிக்கையுடன் அவள் கண வனுடன் தொடர்ந்து உறவு கொள்ளல் வேண்டும். இரு வரும் உண்மையான குறைகளை நன்கு அறிந்து அதற்கேற்பப் பொறுமையாகவும் எச்சரிக்கையாகவும் நடந்து கொண் டால் எல்லாம் சரியாக அமைந்துவிடும்.

இணைவிழைச்சின் நுட்பம்: இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நீ அறிந்து கொள்ளல் வேண்டும்; பாலுறவு என்பது உடலாலும் உள்ளத்தாலும் ஏற்படும் ஓர் அநுபவ மாகும். அதில் புலனின்பமும் மன உணர்ச்சியும் கலந்து கிடக்கின்றன. எனவே, இணைவிழைச்சு எல்லையற்ற இன்பத் தையளித்தல் வேண்டும் என்று தம்பதிகள் கருதினால், அவர்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்; ஒருவருடைய எதிர்வினைகளை[45] இன்னொருவர் தெரிந்து கொள்ள வேண்டும்; தம்முடைய பாலுறவுத் தேவைகளை நன்கு பொருந்துமாறு இணைத்துக் கொள்ளலும் வேண்டும். அஃதாவது தம்முடைய உறவுகளில் 'போகக் கலையை'[46] நன்கு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். உடற் பண்பு, உள்ளக் கிளர்ச்சிப்பண்பு, கவின்கலைப்பண்பு[47] ஆகிய மூன்றையும் பாலுறவில் இணக்கமாக இணைத்துக் கொண்டு பொருத்தப்பாடடைவதே 'போகக்கலை' என்பது; இணை விழைச்சு என்பதை ஒரு கடமையாகவோ, அல்லது திரு மணத்தின் வழக்கமான செயலாகவோ கருதுதல்கூடாது. கணவனும் மனைவியுமாகிய இருவரும் தமக்கு இன்பத்தை அளிக்கும் முறையில் முயன்று பெறும் அநுபவமே இணை விழைச்சு ஆகும். இதனை நன்கு உணர்ந்த இறையனார் களவியல் ஆசிரியர்,

45. எதிர்வினை-Reaction
46. 'போகக்கலை'–'Art of sex.'
47. கவின் கலைப்பண்பு-Aesthetic -uality

'தாமே அவனே தமியர் காண
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்'[48]

என்று நூற்பாவும் செய்துள்ளார். இதற்கு உரையாசிரியர் தரும் உரையை நன்கு படித்து உணர்ந்தால் 'இணைவிழைச்சின்' உண்மைக் கருத்து தெளிவாகும்.

ஒருவருடைய தேவைகளையும் பிறவற்றையும் இன்னொருவர் நன்கு புரிந்து கொண்டு மேற்கொள்ளும் இணைவிழைச்சே பேரின்பத்தை அளிக்கும். பெரும்பாலும் கணவன் தன்னுடைய மனைவியின் விருப்பங்களும் துலங்கல்களும் தன்னுடையவற்றினும் வேறுபடக்கூடும் என்பதையும், அவை நல்ல முறையில் வெளிப்பட வேண்டுமாயின், தான் மிக நுட்பமாகவும் மென்மையாகவும் அவளை அணுக வேண்டும் என்பதையும் அறிவதில்லை. அங்ஙனமே, மனைவியும் கணவனுடைய துலங்கல்களையோ அன்றித் தேவைகளையே அறியாவிடில், அவளும் பாலுறவுத் தழுவலில் ஒத்துழைத்து நன்முறையில் பங்கு பெறுதல் இயலாது. திருவள்ளுவரின் காமத்துப்பாலை இருவரும் நன்கு படித்து உளங் கொண்டால் அவர் கூறியுள்ள 'மலரினும் மெல்லியது காமம்'[49] என்பதன் உண்மைக் கருத்து நன்கு புலனாகும். 'காதலர், கருத்தொருமித்தாதரவு பட்டதே இன்பம்' என்ற பொன்மொழியையும் எண்ணி ஓர்க.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

48. இறையனார் களவியல்—நூற்பா—2.
49. குறள்-1289.

# 32

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் அறிய அவா.

பசியும் பாலுறவும் : நன்ருக முதிர்ச்சி பெற்ற ஒருவரின் பாலுறவு வேட்கையைப்[50] பசி வேட்கையுடன் ஒப்பிட்டுப் பேசலாம்; ஆனல், இரண்டிற்கும் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. பசி வேட்கையில் முதன் முதலாக உண்ணப்பெறும் முதற் கவள உணவு மிக்க இன்பத்தை நல்கும்; கடைசிக் கவள உணவு உண்ணும் பொழுது இந்த இன்பம் குறைந்து கொண்டே வந்து இறுதியில் இல்லையாய் விடுகின்றது. பாலுறவு வேட்கையில் இதற்கு நேர்மாருன செயல் நிகழ்கின்றது. புணர்ச்சி வேட்கையால் தூண்டப்பெறும் முதற் செயல்கள் குறைவதில்லை; ஆனல், அதற்கு மாருகப் புணர்ச்சித் துடிப்பினைத் தீவிரமாக்குகின்றன; புணர்ச்சியின் இறுதிச் செயல்கள்தாம் நமக்கு முழு மனநிறைவினைத் தருகின்றன;

மகளிரின் பாலுக்கமும் தாய்மையூக்கமும் : மகளிர் பாலுள்ள பாலூக்கத்தைப்பற்றி[51] அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. ஒரு சிலர் பாலூக்கம் என்பது ஒரு சமயம் இணைவிழைச்சுத் துடிப்பும் பிறிதொரு சமயம் இனப்பெருக்கத் துடிப்பும் கலந்து பருவந் தோறும் எழும் ஓர் இயல்பூக்கம் என்று கருதுகின்றனர்; வேறு சிலர் முதலாவதை மட்டிலுமே கொள்ளுகின்றனர். இந்த இருசாராரும் தாய்மைத் துடிப்பினைப் பெண்ணின் பாலூக்கத்தின் ஒரு பகுதியாகக் கொள்வதில்: உண்மையாக நோக்கினல் தாய்மை யூக்கம் என்பது ஒரு குறிப்பிட்ட எல்லைவரை பெண்ணின் பாலூக்கத்தின் ஒரு பகுதி

---

50. பாலுறவு வேட்கை-Sexual desire.
51. பாலூக்கம்-Sex instin

யாகும் என்பது தெரியவரும். தனியாக இனப்பெருக்க ஊக்கம் என்றுஒன்று இருப்பதாகப் பேசுவதுஉயிரியல் உண்மைக்குப் புறம்பானது. இனப்பெருக்கத்திற்காக மட்டிலும் ஒரு பெண்ணின் பால்வேட்கை தூண்டப் பெறுவதில்லை; இணைவிழைச்சினால் பெறும் மனநிறைவுக்காகவே அது மேற்கொள்ளப் பெறுகின்றது; அதனால் இனப் பெருக்கமும் உண்டாகலாம்; அல்லது உண்டாகின்றது. உண்மையாக இனப்பெருக்கத்திற்காக மட்டிலும் இணைவிழைச்சு மேற்கொள்ளப் பெற்றால், இனப்பெருக்கத்திற்குப் பிறகு பால் விருப்பம் தணிந்து போக வேண்டுமென்றோ? அங்ஙனம் தணிந்து போகவில்லையே: ஆயினும், உண்மையில் கருப்ப காலத் தொடக்க மாதங்களில் இதற்கு நேர்மாறான நிலை இருப்பதைக் காணலாம்: எனினும், எதிர்காலத்தில் ஏற்படப் போகும் தாய்மை நிலை பெண்ணின் பால்வாழ்க்கையில் ஓரளவு பங்கு பெறத்தான் செய்கின்றது; அஃது ஒரு குறிப்பிட்ட முறையில் அவளுடைய பாலுந்தலின்[52] இயல்பையும் உறைப்பையும் பாதிக்கத்தான் செய்கின்றது.

**பெண்ணின் காம உணர்ச்சி:** இனி, ஆண் பெண் பாலூக்கத்தைப் பற்றிய ஒரு முக்கியமான கருத்தினை ஆராய்வோம். பெண்ணின் காம உணர்ச்சியைப் பற்றி நீண்ட நாட்களாகக் கருத்து மாறுபாடு இருந்து வருகின்றது. நீண்ட காலமாகவே பால்விருப்பம் என்பது ஆணின் முதல் நிலை அல்லது முழுமையான பண்பு என்றும், பெண்ணிற்கு இந்த உணர்ச்சியே இல்லையென்றும் மிகத் தீவிரமாகக் கருதப் பெற்று வந்தது. காமக்கலையின் கைதேர்ந்த நிபுணரான ஆக்டான்[53] என்ற ஆங்கில மருத்துவர் கிட்டத்தட்ட நூறாண்டுகட்கு முன்னர், "பெரும்பாலான பெண்கள் காம உணர்ச்சியால் தொல்லைப் படாதிருப்பது உலகத்தின் நற்

நா

52. பாலுந்தல்-Libido.

53. ஆக்டான்—Acton.

காலமே'' என்று எழுதிப் போந்தார்; புணர்ச்சி விருப்பமுள்ள பெண்ணின் மேல் "இழிந்த அவதூறு" ஏற்றிச் செல்லப் பெற்று வந்தது. கம்பராமாயணத்தில் சூர்ப்பணகையின் படைப்பினை எண்ணிப் பார்ப்பாயாக. ஆக்டனைப் போலவே அக்காலத்து ஏனைய எழுத்தாளர்களும் அத்தகைய ஒரு கருத்தினையே கொண்டிருந்தனர். பால் துடிப்புபற்றிய தெளிவான அறிவினையுடைய இன்றைய அறிஞர்கள் அங்ஙனம் கருதுவதற்கு அடிப்படையே இல்லை என்கின்றனர். பால் விருப்பக்குறைவுடைமை, அல்லது அதுவே இல்லாமை ஆண்களைவிடப் பெண்களிடம் அதிகம் காணப்பெறுகிறதென்பது உண்மையே. ஆனால், இதிலிருந்து பெண்களிடம் இயல்பாகவே காம உந்தல்[5] இல்லையென்று கொள்வதற்கில்லை. தொடக்க நிலையில் பெறும் பயிற்சியும் சமூகக் கட்டுப்பாடுகளும் பண்பாடும் பெண்களிடம் சாதாரணமான பால்விருப்பத்தை வெளிவிடாமல் அடக்கி வைத்து விடுகின்றன; ஆகையால் அவ்விருப்பம் பிற்கால வாழ்க்கையிலும் வெளிப்படையாகத் தலைக்காட்டுவதில்லை. என்றபோதிலும், ஒரு பெண்ணின் பால்விருப்பங்களும் ஆணின் பால் விருப்பங்களைப் போலவே மிகவும் தீவிரமானவையே என்பதை நாம் உணர்தல் வேண்டும். ஹேவ்லக் எல்லிஸ் என்ற காமநூல் நிபுணர் பெண்ணின் பாலூக்கமும் தீவிரமானதே என்றும், ஆனால் அவள், ஒழுங்கான புணர்ச்சியை மேற்கொண்ட பிறகே அந்த இயல்பூக்கம் அவளிடம் முழுவளர்ச்சியை அடைகின்றது என்றும் கூறுகின்றார்.

இருபாலாரின் உணர்ச்சிகளின் வேற்றுமைகள்: இனி, ஆணிடமும் பெண்ணிடமும் வெளிப்படும் காம உணர்ச்சியின் தன்மைகளைப்பற்றிச் சிறிது கூறுவேன். கிட்டத்தட்ட உயிரினங்கள் எல்லாவற்றிலுமே ஆணிடம்தான் இவ்வுணர்ச்சி தீவிரமாகவும் ஆக்கிரமிப்புடனும் வெளியாகின்றது; பெண் அதனை ஏற்கும் நிலையில் வாளா இருக்கின்றது. இத்தகைய வேற்றுமை பாலனுக்களிடமே காணப் பெறுவதை

5. காம உந்தல்—Erotic urge.

முன்னரே எடுத்துக்காட்டியுள்ளேன்.[55] இந்தப் பால் அணுக்களிடம் காணப்படும் வேற்றுமைதான் ஆண்-பெண்ணிடம் வெளிப்படும் பாலுணர்ச்சியின் வேற்றுமைக்குக் காரணமாக இருக்குமோ என்றுகூட எண்ண வேண்டியுள்ளது. இந்த வேற்றுமை மூன்று நிலையில் வெளிப்படுகின்றது.

முதலாவது: ஆணின் பால் துடிப்பு எடுப்பாக—முனைப்பாகக்—காணப்படுகின்றது; அஃது எளிதில் எழுப்பிவிடப் பெறக்கூடியதாகவும் உள்ளது. அன்றியும், ஆணின் காம இச்சைகள் பால் உறவின் நிறைவேற்றத்தில் கொண்டு செலுத்தக் கூடியனவாக உள்ளன. ஆனால், பெண் முனைப்பற்றவளாக—செயலுக்கு ஆளாக—இருக்கின்றாள்; அவளுடைய விருப்பங்களும் மெதுவாக எழுப்பப்பெறக் கூடியனவாக உள்ளன. அவைமெதுவாக முதலில்உடலுறவும் காதலூடாட்டமும் கொள்ளக்கூடிய நிலையில்தான் வெளிப்படுகின்றன. ஓரளவு அவளிடம் காமக் கிளர்ச்சி ஏற்பட்ட பிறகுதான் அவள் புணர்ச்சிநிறைவேற்றத் தயாராகின்றாள். ஆணைவிடப் பெண்ணிடமே உள்ளக் கிளர்ச்சியும் மேலீடான உணர்ச்சியும்[56] பால் எதிர்வினைகளிலும் பால் துலங்கல்களிலும் மிகவும் குறிப்பிடத்தக்க பங்கினைப் பெறுகின்றன.

இரண்டாவது: பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் பாலூர்தலின் தீவிரத்தில் தெளிவான சந்தஇயக்கம் காணப்பெறுகின்றது. இது மாதவிடாய் வட்டக் காலத்தில் ஓர் ஒழுங்கான முறையில் அதிகரித்தும் குறைந்தும் வருகின்றது. ஆணிடம் இருப்பதுபோலத் தானகக் கிளம்பும் உணர்ச்சி பெண்ணிடம் காணப்பெறுவதில்லை. அது மாதவிடாய் வட்டத்தில் தோன்றும் ஹார்மோன்களின் அளவுடன் தொடர்பு கொண்டுள்ளது. மாதவிடாய் தொடங்கும் சில நாட்களுக்கு முன்னரும், மாதவிடாய்வட்டத்தின் நடுப்பகுதியிலும்—முட்டையணு முதிர்ந்து வெளிப்படும் பருவத்திலும்—பெண்ணிடம் புணர்ச்சி விருப்பம் அதிகமாகத் தோன்றுகின்றது.

---

55. இந்நூல்—பக்கம் 103

56. மேலீடான உணர்ச்சி—Sentiment.

இஃது இனப் பெருக்கத்திற்கு இயற்கையாகவே அமைந்து கிடக்கும் சாதகமான நிலை போலும்.

மூன்றாவது: புணர்ச்சியில் உச்சநிலை எய்தும் கால அளவிலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் முக்கிய மாறுபாடு காணப் பெறுகின்றது. புணர்ச்சி வட்டக் காலம் ஆணிடம் மிகக் குறைவானது; தன்னைத் திட்டமான முறையில் அடக்கிக் கொள்ளாவிடில், அவனது உணர்ச்சி விரைவில் எழுப்பிவிடப் பெறக்கூடியதாக இருப்பதைப்போலவே, அவனது உணர்ச்சியின் உச்சநிலையை அடையும் காலமும் குறுகியுள்ளது. பெண்ணிடம் உணர்ச்சி கிளர்ந்தெழுவதற்கு அதிகக் காலம் வேண்டியிருப்பதைப்போலவே, அவளது உணர்ச்சியின் உச்ச நிலையை அடையும் காலமும் நீண்டுள்ளது. அவளது பால் எதிர்வினைகளும் ஆணினுடையவற்றைவிட அதிகமாகச் சிதறியும் அதிகமாக மாறக்கூடியனவாகவும் உள்ளன.

மேற்கூறிய மூன்றுநிலைகளிலுள்ள வேற்றுமையின் கால வேறுபாட்டுக் கூறில் மட்டிலும் பொருத்தப்பாடடையச் செய்யும் முறையை விளக்குவேன். இதைச் செய்துவிட்டால் பாலுறவில் இருபாலாரிடையேயும் நல்ல பொருத்தப்பாடு ஏற்பட்டுவிடும். ஒருவரையொருவர் புரிந்து கொள்ளும் மனப்போக்கு, இருவரிடையேயுள்ளஒத்துணர்ச்சி, உண்மையான முயற்சி, மனமறிந்த கட்டுப்பாடு ஆகியவற்றினால் தேவையான அளவு பொருத்தப்பாட்டினை எய்துவிக்கலாம். பாலுறவு இருபாலாரிடையேயும் மனநிறைவு அளிக்கக் கூடிய அநுபவமாக மாறவேண்டுமாயின், பெண்ணின் காமத் துடிப்புகளைக் கிளர்ந்தெழச் செய்து புணர்ச்சியை அவள் விரும்புமாறு செய்தல் வேண்டும்.

பெண்ணைப் புணர்ச்சிக்குஆயத்தப்படுத்தும் ஆணின் செயல்கள்: ஒரு பெண் புணர்ச்சிக்குத் தயாராவதற்குப் பல செயல்கள் முன்னதாக நடைபெற வேண்டியுள்ளன. இணை பயிலுதல் (காதலுாடாட்டம்)[57], ஆண் பெண்ணை விரும்பி நாடுதல், தழுவி முத்தமிடல், வேறு காதல் விளையாட்டு

57. இணைபயிலுதல்—Courtship

கள் போன்ற செயல்கள் நடைபெறுதல் வேண்டும். மெய் தொட்டுப் பயிற்றல், பொய் பாராட்டல், புகழ்தல் போன்ற[58] அகத்துறைகளைவிளக்கும் பாடல்களில்விவரிக்கப் பெறும் செயல்களை நுணுகி அறிக. மேற்கூறியவற்றிலிருந்து உடல்பற்றிய தூண்டல்மட்டிலும் போதும் என்பது நம் கருத்தன்று. ஆனல், கணவன் மேற்கொள்ளும் மனப் பான்மை, அணுகும் முறை போன்ற பீடிகையே கலவிக்கு மனைவியை ஆயத்தம் செய்கின்றன; அவளும் கணவனை ஏற்ப தற்குத் தன்னைத்தயாராக்கிக் கொள்ளுகின்றாள்: இத்தகைய முதல்நிலைக் காதலூடாட்டமும் களியாட்டமும் ஓர் உயி ரியல் அடிப்படைத் தேவையாகவே அமைந்து கிடப்பதாகத் தோன்றுகின்றது. ஓரளவு ஆண் பெண்ணை விரும்பி நாடு வதும், காதல் விளையாட்டும் கலவிக்கு முன்னதாக நடை பெறுவதைப் பல்வேறு பிராணிவகைகளிடையேயும் காண லாம். பெண் மயிலுக்கு முன்னர் ஆண் மயில் தோகையை விரித்துக்கொண்டு ஆடுகின்றது. சேவல் பெட்டைக் கோழி யைச் சுற்றிச் சுற்றி வருகின்றது. ஆவைச் சுற்றி ஆனேறு அலைகின்றது. புணர்ச்சிக்கு முன்னர் நாய்களிடையே இணை பயிலுதலைக் காணலாம். பெண் ஆணை ஏற்று இடங் கொடாதவரை பிராணிகளிடையே கலவி நடைபெறல் முடி யாது. இதனுல் ஆண் பெண் தன்னை ஏற்றுக்கொள்ளும் வரை பலவிதமாகத்தொடர்ந்து சென்று பெண்ணை வெற்றி கொள்ள வேண்டியுள்ளது. மேலான உயிர்களிடம் மட்டி லுமே(எ—டு. வாலில்லாக் குரங்குகள், மனிதர்கள்) பெண் ணிடம் விருப்பம் இராவிடினும் கலவி நடைபெறுகின்றது. எனவே, முழுமையான பொருத்தப்பாடும் மனநிறைவான பாலுறவு வாழ்க்கையும் ஏற்பட வேண்டுமாயின், புணர்ச்சி

---

58. மெய் தொட்டுப் பயிறல்—தலைவன் தலைவியின் மெய் யினைத் தீண்டி நெருங்குதல் (வண்டோச்சி மருங்கணைதல் போல), பொய் பாராட்டல்—தலைமகன் தலைமகள் மாட்டு உள்ளதும் இல்லதும் கூட்டிக் கொண்டாடுதல். புகழ்தல்—தலைவியின் நலத்தைப் பாராட்டல்

இருவரும் விரும்பக்கூடிய செயலாக அமைதல் வேண்டும். அஃதாவது, புணர்ச்சிக்கு முன்னர்க் கணவன் மனைவியைப் பல் வேறு முறைகளில் ஆயத்தம் செய்து அவளைப் புணர்ச்சிக்கு விரும்பித் தயாராகும்படி செய்தல் வேண்டும்.

புணர்ச்சிக்கு முன்னர் ஆணின் பீடிகை: இனி, புணர்ச் சிக்கு முன்னர் கணவன் மேற்கொள்ளவேண்டிய பீடிகை யைப் பற்றிச் சிறிது கூறுவேன்: பாலுறவில் உளக் கூறு களும் உள்ளக் கிளர்ச்சிபற்றிய கூறுகளும் நெருங்கி இணைந் துள்ளன; பாலுறவுப் பீடிகையில் இந்த இரண்டையும் நாம் கருதுதல்வேண்டும். உள்ளக் கிளர்ச்சிக்கூறுகளில் ஆண் பெண்ணை நாடி விரும்புவது பண்பாட்டின் அடிப்படை. தனிப்பட்டவர்களின் மேம்பட்ட உணர்ச்சி நிலை, தம்பதி களின் மனப்பாங்கு,[59] மனநிலை,[60] அந்தந்த அமயத்திலுள்ள சூழ்நிலைகள் ஆகியவற்றைப் பொறுத்தது. பல்வேறு வித மாக அணுகுவது சாத்தியப்படக் கூடியது. ஒரு சமயம் ஒருவர் மேற்கொள்ளும் முறை மிக உயர்ந்த அளவு தூண்ட லாக அமையலாம்; இதே முறை பிறிதொரு சமயம் அவ ருக்கோ அல்லது பிறிதொருவருக்கோ வெறுத்தொதுக்கத் தக்கதாகவும் போய்விடலாம். சில சமயம் ஒரு சொல், ஒரு சைகை, ஒரு நிகழ்ச்சியைச்சுட்டுதல், ஒருமணம்—இவற்றுள் ஏதாவதொன்று தொடர்ந்து நடத்தும் காம விளையாட்டினை விட ஆற்றல் வாய்ந்தது.

கண்ணொடு கண்இணை நோக்கொக்கின் வாய்சொற்கள்
என்ன பயனும் இல.[61]

என்ற வள்ளுவர் குறிப்பிடும் சைகையை எண்ணி மகிழ்க. ஆகவே, நடைமுறையில் மேற்கொள்ள வேண்டிய நடத்தை இவ்வாறுதான் அமைதல் வேண்டும், அல்லது ஒரு குறிப் பிட்ட விதிகளைத்தான் தழுவவேண்டும் என்று கூறுவதுசாத்தி யப்படக்கூடியதன்று; அதுவிரும்பத் தக்கதுமன்று. மானிடத்

---

59. மனப்பங்கு—Temperament
60. மனநிலை—Mood
61. குறள்—1100

தொடர்புகளில் மிகவும் அந்தரங்கமான இத்துறைகளில் தனிப்பட்டோரிடம் தானுகஎழும்உணர்ச்சி, அவர்களுடைய திறமை, ஒருவர் பிறிதொருவரைப் புரிந்துகொள்ளும் நிலை, இருக்கும் சூழ்நிலைக்கேற்ப நடந்துகொள்ளும் திறன் ஆகியவற்றிற்கே அனைத்தையும் விட்டுவிடல் வேண்டும்.

பெண்ணின் உணர்வு எல்லைகள்: நுண்ணிய உணர்வுடைய அணுகும் முறையே உயர்ந்த அளவு காம இச்சையை எழுப்புவதற்குப் போதுமானது. எனினும், பெரும்பாலோரிடம் புணர்ச்சிக்கு முன்னதாக நேரடியான உடல் தூண்டலையும் பயன்படுத்துதல் நல்லதாகும். பெரும்பாலும் இது தொடுதல், தழுவுதல், முத்தமிடுதல் ஆகியவற்றில் முடியக் கூடியது. ஓர் ஆணிடம் காம இச்சையை எழுப்பவல்ல பரப்புகள் ஒரு குறிப்பிட்ட பகுதி அல்லது பகுதிகளில் இருப்பதுபோலன்றி, பெண்ணிடம் அத்தகைய இடங்கள் விரிந்து சிதறிக் கிடக்கின்றன. சாதகமான சூழ்நிலையில் உடலில் எந்த இடத்தைத் தொட்டாலும், காம உணர்ச்சி கிளர்ந்தெழுதல் கூடும். காம இச்சை என்பது உயர் நிலையிலுள்ளதொரு புலன் அநுபவம் என்று ஓர் அறிஞர் கூறியுள்ளார். இதழ்கள், கழுத்து, காது மடல்கள், கொங்கைகள்—குறிப்பாக முலைக் கண்கள்—ஆகிய பகுதிகள் சிறப்பான உணர்வு எல்லைகளைக் கொண்டவை; வாத்ஸ்யாயனர் என்ற காம நூல் அறிஞர் நெற்றி, கொங்கைகள், இதழ்கள் ஆகியவற்றைத் தொடுபுலக் 'கலை இடங்களாகக்'[62] குறிப்பிட்டுப் பேசுவர்.

> கல்லாதான் சொற்கா முறுதல் முலைஇரண்டும்
> இல்லாதாள் பெண்காமுற் றற்று.[63]

என்ற குறளால் முலையிரண்டும் இல்லாத பெண்களிடம் காம உணர்ச்சி அதிகம் இராது என்ற குறிப்பை அறிகின்றோமன்றோ? மேலும், இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன்,

62. கலை இடங்கள் (கலாஸ்தானங்கள்)—Art spots.
63. குறள்—402

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்[64].

என்று தன் நயப்புணர்த்தும் வாயிலாக இதழ் அமுதத்தின் சிறப்பினைக் குறிப்பிடுகின்றான். மேற்குறிப்பிட்ட இடங்களைத் தழுவலாலோ முட்டமிடலாலோ தீவிரமான காம இச்சைகளை எழுப்பிவிடுதல் கூடும். இதனால்தான் தகாத முறையில் காம இச்சையுடன் வந்த சூர்ப்பணகையை இலக்குவன்,

'மூக்கும் காதும்வெம் முரண்முலைக் கண்களும் முறையாற்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான்.[65]

என்று எண்ண வேண்டியுள்ளது. தகாத முறையில் சூர்ப்பணகை தன்னிடம் கொண்ட இச்சையை வேருடன் களையும் அறிகுறியாகவே இலக்குவன் இம்முறையை மேற்கொண்டான் போலும்! திருமணம் முடிந்த தொடக்கக் காலத்தில் ஒரு பெண்ணின் பிறப்புறுப்பினைத் தொடுதலைவிட பொதுவாக உடலைத் தொடுவதனாலேயே அதிக பால்துலங்கலை வெளியிடுதல் கூடும். இயல்பாகவுள்ள கூச்சமும் நாணமும் படிப்படியாகக் களைந்தெறியப்பெற்றவுடன் பிறப்புறுப்புப் பகுதியை நேரடியாகத் தொடுவதால் பால்தூண்டல் ஏற்படுகின்றது. பெண் குறியின் பரப்பு முழுவதும் காம இச்சையை எளிதில் எழுப்பவல்லதாகவுள்ளது. பெண் குறியின் சிறிய உதடுகளில் அல்லது யோனிக் குழலின் வாயிலில் செய்யும் மெதுவான கீறல், குறிப்பாக யோனி லிங்கத்தைத் தொடுதல் எளிதில் துலங்கும் பெண்ணிடம் பெருந்தூண்டலை விளைவிக்கும். இந்த உறுப்புகளிலும் முலைக் கண்களிலும் விறைக்கும் இழையங்கள் நிறைந்துள்ளவை யாதலின், காமக் கிளர்ச்சியின்பொழுது அவை விறைப்பையும் உறுதியையும் அடைகின்றன. எனினும், இவற்றைத் தொடுவதில் பிரத்தியேகமான கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும்; இந்தப் பகுதிகளை மென்மையாகவும் நுட்பமாகவும் தொடுதல் வேண்டும். குறிப்பாகப் பெண் குறியில் சிறிது ஈரம்

64. குறள்—1123
65. சூர்ப்பணகைப்—94

இருக்கும் பொழுதே அங்ஙனம் தொடுவதால் பயன் உண்டு. பரப்பு ஈரமற்று இருக்கும்பொழுது தகுதிக்கு மிஞ்சிய அழுக்கமும் மட்டுமிஞ்சிய கையாளலும் வெறுப்பான எதிர் வினைகளைத் தருதல்கூடும். ஆனால், நுட்பமான தூண்டல் விரைவாக உடல் முழுவதையும் துலங்கச் செய்து புணர்ச் சிக்கு ஆயத்தமான நிலைமையை உண்டாக்கிவிடும்.

மேற்கூறிய முறைகளை ஒவ்வொரு புணர்ச்சியின்பொழு தும் மேற்கொள்ள வேண்டுமா என்று நீ வினவலாம். கூறு வேன்: பெண்ணின் காம உணர்ச்சியையும் அவளது மகிழ்ச்சி யையும் அதிகரிக்கச் செய்து அவளைப் புணர்நிலைக்குக் கொண்டுவர வேண்டும் என்று விரும்பும்பொழுதெல்லாம் இவற்றுள் யாதேனும் ஒன்றை மேற்கொள்ளலாம். சில சமயம் தானாக அவளுக்கே புணர்ச்சி விருப்பம் இருக்கும் பொழுது இத்தூண்டலே தேவையில்லை; வேறு சில சமயங் களில் இத்தூண்டல் அதிகமாகவும் தேவைப்படலாம். புணர்ச்சிக்குமுன் மேற்கொள்ளப்பெறும் காதலூடாட்டத் தின் தன்மை, அளவு, முறை, கால அளவு ஆகியவை யாவும் மனைவியின் வேகமாக அல்லது மெதுவாக எதிர்வினைகள் புரி வதையும், விந்துவினைப் பாய்ச்சுவதற்குமுன் கணவன் ஆண் குறியை விறைத்த நிலையில் வைத்துக்கொள்ள முடிகின்ற கால நீட்டத்தையும் பொறுத்திருக்கின்றன. அவை யாவும் தனிப்பட்டோரின் நிலை, நுண்ணறிவு, கூர்ந்துணரும் திறன் ஆகியவைபற்றி அமையும். எனினும், மனைவி கணவனுக்குத் தன்னுடைய உடலின் உணர்வுடைய பகுதிகளையும், தனக்கு வேண்டிய தூண்டலின் வகை, அளவு, காலம் முதலியவற் றையும் தெளிவாக எடுத்துக் கூறுவதில் தயக்கம் கூடாது.

காமக்கலை நூல்களிலுள்ள வருணனைகளின் உட்கருத்து : சில நூல்களில் காமக்கலையைப்பற்றி மிக விவரமாக வருணிக்கப்பெற்றுள்ளது. அவற்றில் காம இச்சையை எழுப்பும் மணம், பல்வேறுவகைத் தூண்டல்கள், காம இச்சையை உண்டாக்கும் முத்தம், நாக்கில் முத்தமிடல், காமத்தால் கடித்தல், பெண்குறி முத்தம்போன்ற பல்வேறு

முறைகளில் உடலைக் கையாளும் விதங்கள் வருணிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். இவை யாவும் மனைவி பால் நடத்தையின்பால் கொண்டுள்ள உள்தடைகளையும்[66] அச்சத்தையும் களைந்தெறிவதற்கும், இவற்றுள் எந்தவகை விளையாட்டிலும் இயல்பிகந்த செயல் ஒன்றுமில்லை என்று காட்டுவதற்கும் பெரிதும் பயன்படுகின்றன என்பதே என் கருத்தாகும். பாலுறவில் காணப்பெறும் வேறுபாடுகளுடன் அணுகும் முறை உயிரினங்களில் மனிதன் எந்த இனத்தைச் சேர்ந்தவனோ அந்த இனத்தின் நடத்தைக் கோலத்தின் ஒரு பகுதியாகும் என்பது சில அறிஞர்களின் கருத்தாகும். எனினும், காமக்கலையில் புத்தக விதிகளைப் பின்பற்றிக் கலவி புரிவதென்பது இயலாத செயலாகும்; அது விரும்பத்தக்கதுமன்று. ஒவ்வொருவரும் தன்னுடைய யுக்தியையும் திறமையையும் பயன்படுத்தி ஒரு முறையை வகுத்துக்கொள்வதே அறிவுடைமையாகும்; அதுவே பாலுறவினைப் பயன்படச் செய்யும் முறையுமாகும்.

**இணைவிழைச்சில் மனைவியின் அசட்டை கூடாது :** சிலர் புத்தகங்களில் படிக்கும் புணர்ச்சி முறைகளையெல்லாம் பள்ளியறையில் நடைமுறையில் கையாள முயலுகின்றனர்! இதனால் தாம்பத்திய உறவு செயற்கை முறையில் அமைந்து இருவருமே அதனை நன்கு அநுபவிக்க முடியாமல் போகின்றது. கலவிப் பொருத்தப்பாடு அமைவதில் தனிப்பட்டோரின் கற்பனையும் கலவிபுரியும் விருப்பமுமே முக்கியமாக வெளிப்படுதல் வேண்டும். தம்பதிகள் மிக நெருங்கி இணைந்து கலவி புரியுங்கால், மனைவி அசையாது வாளா இருக்கவேண்டியதில்லை; அங்ஙனம் இருக்கவும் கூடாது. பெரும்பாலும் பெண்கள் தாம் புணர்ச்சியை விரும்பினாலும் கணவன்மார் தம்மைக் கலவிக்கு இணங்கச் செய்வதையே விரும்புகின்றனர் என்பது வெளிப்படை. இதனால்தான் கவிஞர் செயங்கொண்டார் பெண்களின் இந்த மனநிலையைக் காட்டுவதற்கு,

66. உள்தடை—Inhibition

''விடுமின் எங்கள்துகில் விடுமின் என்றுமுனி
வெகுளி மென்குதலை துகிலுனைப்
பிடிமின் என்றபொருள் விளைய நின்றருள்செய்
பெடைநலீர்கடைகள் திறமினோ[67]

என்று வருணித்தார் போலும்! தன் ஆடையைப் பற்றும் கணவனை நோக்கி 'விடுமின்' என்று மனைவி சொல்லுவதில் 'பிடிமின்' என்ற பொருள் அடங்கியிருப்பதாகக் கவிஞர் காட்டும் சொல்லோவியம் எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியது. ஆனால், புணர்ச்சியின்பொழுது அவள் முற்றிலும் வாளா கிடப்பது விரும்பத்தக்கதன்று. அஃது 'இருட்டறையில், ஏதில் பிணந்தழீஇ யற்று'[68] என்று வள்ளுவப் பெருந்தகை வரைவின் மகளிர்க்குக் கூறியது மனைவிக்கும் பொருந்துவதாக முடியும். இங்ஙனம் மனைவி பாலுறவில் அசட்டையாக இருப்பது, அல்லது அசட்டையாக இருப்பதுபோல் பாவிப்பது, உண்மை அன்புடன் உள்ள கணவனின் விருப்பங்களையும் கெடுத்துவிடும். இங்ஙனம் இருப்பது தாம்பத்திய உறவினைக் குலைப்பதுடன் சில சமயம் அது மண முறிவிலும் கொண்டு செலுத்திவிடும் என்பதை ஒவ்வொரு மணமகளும் நினைவில் இருத்தல் வேண்டும். இது பற்றிய செய்திகளைப் பின்னர் ஆராய்வேன். பால்வாழ்க்கையின் தொடக்கத்தில் பெரும்பான்[illegible]ளிர் இயல்பாகவே தன்னம்பிக்கையின்றியும் நாணமிழந்தும் இருப்பதுண்டு; இச்சமயத்தில் கணவன்மார்தாம் தொடங்கும் பொறுப்பையெல்லாம் மேற்கொள்ளல் வேண்டும். அன்னியோன்யம் ஏற்பட்ட பிறகு மனைவியும் காதலூடாட்டத்தில் பெரும்பங்கு—முக்கிய பங்கு—கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. சில சமயம் மனைவியே இணைவிழைச்சினைத் தொடங்கவும் செய்யலாம். ஆண் மேற்கொள்ளும் காம இச்சை விளையாட்டுகளையெல்லாம் பெண்ணும் மேற்

67. கலிங்கத்—கடை திறப்பு—தாழிசை 5
68. குறள்—913

கொள்வது இயல்பிகந்த செயலன்று; அஃது அவளுக்கு அவமதிப்பைத் தருவதுமன்று. கணவன் மனைவியைத் தூண்டுவதால் அவளுடைய உணர்ச்சி கிளர்ந்தெழுவதுடன், தன்னுடைய விருப்பமும் கிளர்ந்தெழுந்து அதிகரிப்பது போலவே, பெண்ணும் கலவியில் தீவிரப் பங்கு கொள்வதால் தன்னுடைய காம இச்சைகள் கிளர்ந்தெழுவதுடன் அவை தன் கணவனுக்குப் பேரின்பத்தைத் தருவதற்கும் காரணமாகின்றன. இவ்வுண்மை ஒவ்வொரு பெண்ணும் உளங்கொள்ளல் வேண்டும்.

மனைவியின் ஆயத்த நிலை: தம்பதிகளிடையே கள்ளமற்ற தன்மையும் உள்தடைகளின்மையும் இருக்குமாயின், அவர்கள் ஒருவர் மற்றவரின் கிளர்ந்தெழுந்த உள்ளக் கிளர்ச்சியினை நன்கு உணர்தல் கூடும். மனைவி தான் கலவிக்கு ஆயத்தமாக இருப்பதைப் பல்வேறு முறைகளில்புலப்படுத்துகின்றாள். கணவனும் அவற்றையறிந்து அவற்றிற்குத் தக நடந்து கொள்ளுகின்றான். மனைவியிடம் கலவியுணர்ச்சி எழும்பொழுது பெண் குறியைச் சுற்றிலும் சளிபோன்ற வழுவழுப்பான திரவம் சுரக்கின்றது. இது பர்த்தோலின் சுரப்பிகளினின்றும் வருகின்றது என்பதை நீ அறிவாய். புறத்தே தெரியும் பிறப்புறுப்புகள் இத்திரவத்தால் நன்கு நனையும் வரை கணவன் தன்னுடைய குறியை மனைவியின் யோனிக்குழலில் நுழைத்தல் கூடாது. இந்தச் சுரப்பு நீர் பெண் குறிப் பகுதி முழுவதையும் யோனிக்குழல் வாயிலையும் நன்கு நனைத்து ஆண் குறி நுழைவதற்கு வழுக்கிடு பொருளாக அமைகின்றது; பாலுணர்ச்சியும் அதிகரிக்கச் செய்கின்றது. திருமணம் முடிந்து தாம்பத்திய வாழ்க்கை தொடங்கும் ஆரம்ப நிலையில் உடல் இறுக்கங்களும் உள்ளக்கிளர்ச்சிக் கவலைகளும் ஏனைய கட்டுப்பாடுகளும் இந்தப் பர்த்தோலின் சுரப்பிகள் செயற்படாது உள்தடைகளை விளைவித்தல் கூடும்; இதனால் உடனே ஈரம் தோன்றுவதில்லை. இந்நிலை ஏற்பட்டால், செயற்கை முறையாக யாதாவது ஒரு வழுக்கிடு பொருளைப் பயன்படுத்துவது நன்று. பொறுமையும் அன்னியோன்யமும் இருந்தால் இஃது

இல்லாமலேயே புணர்ச்சி இலகுவாகி இருவரும் உச்சநிலை உணர்ச்சியை எளிதில் அடைவர்.

இனி, உச்சநிலை உணர்ச்சியைப்பற்றி அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 33

அன்பார்ந்த செந்தில் வேலனுக்கு,

நலன். நலன் வேண்டுவல்.

சிருங்காரம்: காதல் உணர்ச்சி இலக்கியங்களில் பல் வேறு விதமாகப் போற்றப்பெற்றுள்ளது. ஒன்பது சுவை களில் (நவரசஸங்களில்) சிருங்காரம்தான் (உவகைச் சுவை தான்) அதிகமாக இலக்கியங்களில் காணப்பெறுகின்றது. வடமொழி வாணர்கள் சிருங்காரத்தையே முதல் சுவை யாகக் குறிப்பிட்டுள்ளனர். கவிஞர்கள் இச்சுவையைக் கையாண்ட விதத்தையும், பொதுவாக நமது இலக்கியங் களை இச்சுவை ஆட்கொண்டிருக்கும் நிலையையும் நோக்கியே இதனை 'ரஸங்களின் மன்னன்' என்று அறிஞர்கள் வழங்கும் படியும் நேர்ந்தது! மாணிக்கவாசகர் போன்ற ஞானச் செல்வர்களும் சிற்றின்பத்தின் மூலம் பேரின்பத்திற்கு வழி காட்டியுள்ளனர். கலவியின்பத்தைச் செவிலியின் கூற்றாக இவ்வாறு கூறுவர் அப்பெருமான்:

ஆனந்த வெள்ளத் தழுந்துமோர்
ஆருயிர் ஈருருக்கொண்(டு)
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத்
தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழ
லோன்அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதுமுற்
றாதுஇவ் வணிநலமே.[69]

என்ற பாடலைப் படித்தின்புறுக. காதலனும் காதலியும் கலவியின்பத்தில் அழுந்தியிருக்கும் நிலை பேரின்ப வெள்ளத் தில் அழுந்தியிருக்கின்ற ஓர் உயிர் அப்பேரின்பத்தை

69. திருக்கோவையார்—307.

ஒருடம்பால் அநுபவிப்பதில் அமைதிகொண்டு விருப்பம் நிறைவுறுமல் இரண்டு உடம்புகளால் அநுபவிப்பதை ஒக்கும் என்கின்றார் கவிஞர். அன்றியும், தில்லையில் எழுந்தருளியிருக்கும் ஒலிக்கும் கழலையுடைய அம்பலத்தானது அருளைப்பெற்றவர் அடையும் உலப்பிலா இன்பம்போல, அவர்கள் ஆழ்ந்துள்ள இன்ப வெள்ளமும் ஒரு காலத்திலும் குறையாது என்றும் கூறுகின்றார். இங்ஙனம் அருட் செல்வர்களையும் ஈர்க்கவல்ல புணர்ச்சியின் உச்சநிலையைச் சிறிது விளக்குவேன்.

உச்ச நிலை உணர்ச்சி: காதல் உணர்ச்சியை விளைவிக்கும் தூண்டல் கிட்டத்தட்ட உடலின் எல்லாப் பகுதிகளிலும் தொடர்ந்தாற்போல் பல்வேறு மாற்றங்களை விளைவிக்கின்றது. ஓர் ஆடவனே அல்லது மகளோ காதல் உணர்ச்சியால் கிளர்ந்தெழுங்கால், இதயம் வேகமாகத் துடிக்கின்றது. குருதியமுக்கம் அதிகரிக்கின்றது; உடலின் பல்வேறு உறுப்புகளில் — சிறப்பாகப் பிறப்புறுப்புகளில் அஃதாவது, ஆணுறுப்பு, யோனிலிங்கம், சிறிய உதடுகள், யோனிக்குழலின் சுவர்கள், 'முலைக்கண்கள்' ஆகிய பகுதிகளில்—குருதியோட்டம் அதிகமாக நிகழ்கின்றது. அதே சமயத்தில் உடல் முழுவதையும் பாதிக்கும் நரம்பு அழுத்தமும்[70] நேரிடுகின்றது. காதல் தூண்டலால் ஏற்படும் புணர்ச்சி தொடர்ந்து நடைபெறுங்கால் உணர்ச்சி உச்ச நிலையை அடையும்வரை இந்த மாற்றங்கள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன; ஒரு சமயத்தில் அவை திடீரென்று விடுபடுகின்றன. இவ்வாறு விடுபடும் தருணமே "உச்சநிலை உணர்ச்சி" என்று வழங்கப் பெறுகின்றது. இப்பொழுது படிப்படியாகப் புற உலக நினைவே இல்லாது மறையத் தொடங்குகின்றது. தீவிரமான கிளர்ச்சியின் காரணமாக மூளையின் செயலே நீங்கிவிடுகின்றது. இந்த உச்சநிலை உணர்ச்சியின் பொழுது பிறப்புறுப்புகளைச் சுற்றிலுமுள்ள தசைகள் திடீரென்று சுருங்குவதால்தான் இது நேரிடுகின்றது.

70. நரம்பு அழுத்தம்—Nervous tension.

ஆணிடம் நேரிடும் மாற்றங்கள்: இந்த உணர்ச்சி ஏற்படுங்கால் ஆணிடம் நேரிடும் மாற்றங்களை விளக்குவேன். உணர்ச்சி ஏற்படுங்கால் ஆண் குறியினின்றும் விந்துப் பாய்மம் வெளிப்படுகின்றது. விந்தேறு குழல், விந்துப் பைகள், புராஸ்டேட் சுரப்பி ஆகியவை மிக வன்மையாகச் சுருங்கித் தம்மிடமுள்ள பொருள்களைச் சிறுநீர்த் தாரையின் வழியாக வெளியேற்றுகின்றன: இக்கால்வாயில்தான் பல்வேறு சுரப்பு நீர்களும் ஒன்று சேர்ந்து விந்துப் பாய்மமாகின்றன. உணர்ச்சியின் பொழுது இந்தப் பாய்மம் ஆண் குறியின் வழியாக எண்ணற்ற துளிகளாக வெளிப்படுகின்றது. தசைகள் விரிந்து சுருங்கும் எண்ணிக்கைகளும் அவற்றின் உறைப்பும் மனிதருக்கு மனிதர் வேறுபடுகின்றன; ஒருவரிடமே பல்வேறு சமயங்களில் பல்வேறு விதமாக உள்ளன. சாதாரணமாக சராசரியாகப் பத்து முதல் இருபது தடவைகள் வரை சுருங்குகின்றன. இவ்வாறு சுருங்குவதால் வெளிப்படும் விந்துப் பாய்மமும் ஒரு தேக்கரண்டி அளவு உள்ளது:

உச்சநிலை உணர்ச்சி ஏற்படுங்கால் ஆணின் உடலில் ஏற்படும் மாறுபாடுகளை விளக்குவேன் ஆண் குறி விறைத்தலில் ஏற்படும் மாற்றங்களை முன்னரே விளக்கினேன் அல்லவா? அவற்றை ஈண்டு நினைவு கூர்வாயாக.[71] காதலி தொடுவதனல் (எ-டு அணைதல், முத்தமிடல்) தூண்டப்பெறும் கிளர்ச்சிகள் தோலின் முடிவு நரம்புகளினுல் ஒரு சில நரம்புச் சுவடுகள் மூலம் மூளைக்கு அனுப்பப்பெறுகின்றன; மூளை அவற்றை மகிழ்ச்சிதரும் உணர்வுகளாக உணர்கின்றன. (படம் 51) இந்த உணர்வுகளின் மறிவினை[72]களின் காரணமாக மூளையில் காதல் பிம்பங்கள்[73] எழுகின்றன; இதனுல் சில தசையடுக்குகள் அல்லது தசைத் தொகுதிகள் செயற்

71. இந்நூல்–பக்கம் (93—98),
72. மறிவினை—Reflex.
73. காதல் பிம்பங்கள்—Erotic images.

பட்டு அவை திரும்பவும் கணவனிடம் மனைவியைத் தொடும் செயல்களை (எ-டு அணைதல், முத்தமிடல்) உண்டாக்கு




படம். 51: விறைத்தலையும் விந்து பாய்தலையும் விளக்குவது, இதிலுள்ள மனிதனின் உட்படம் உடம்பினுள் விறைக்கும் மையத்தையும் விறைக்கும் நரம்புகளையும் காட்டுகின்றது.

கின்றன. வேறு எல்லாக் கிளர்ச்சிகளின் பொழுதும் (எ-டு அரிப்பெடுத்தல்[74]) தூண்டப் பெறும் மறிவினை (எ-டு.

74. அரிப்பெடுத்தல்—Itching.

சொறிதல்[75] அல்லது கீறல்) கிளர்ச்சியினையே அகற்றத் துணை செய்கின்றது. ஆனால், காதல்பற்றிய கிளர்ச்சிகட்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு; ஒரு சிறிது நேரம் கிளர்ச்சியும் மறிவினையும் ஒன்றையொன்று வலுப்படுத்தித் தீவிரமாக்கு கின்றன. இறுதி மறிவினையாகிய உச்சநிலை உணர்ச்சி தம்பதிகளின் மூளையில் ஏற்பட்டதும், கிளர்ச்சியின் வன்மை நின்று போகின்றது. அதன் பிறகு இருபாலாரிடமும் ஒரு மகிழ்ச்சியான அமைதி, நிறைவுபெற்ற மனநிலை ஏற்படு கின்றது.

**பெண்ணிடம் உண்டாகும் மாற்றங்கள்:** இனி, பெண் ணிடம் உச்சநிலை உணர்ச்சி ஏற்படுங்கால் உண்டாகும் மாற்றங்களை விளக்குவேன். பெண்களிடமும் இந்த உணர்ச்சி படிப்படியாகச் சேர்ந்த இறுக்கத்தை விடுவித் தலையே குறிக்கின்றது. இச்சமயம் இதயத் துடிப்புகள், நாடித் துடிப்புகள், பிறப்புறுப்புகளைச் சுற்றிலுமுள்ள பரப்பும் அடிவயிற்றின் கீழ்ப்பாகமும் சுருங்குதல் போன்ற செயல்கள் நடைபெறுகின்றன இச்சுருக்கங்கள் சந்த இயக்கம் போலவும் தன்னியல்பாகவும் நடைபெறுகின்றன; தவிரவும், அவை பெண்ணுறுப்பினைச்[76] சுற்றிலும் உள்ள பகுதிகள், யோனிக்குழல், யோனிலிங்கம் ஆகிய இடங்களி லேயே தீவிரமாக நடைபெறுகின்றன. சில சமயங்களில் உடலிலுள்ள பிற தசைகளிடையேயும் பரவுகின்றன; உச்ச நிலை உணர்ச்சி ஏற்படுங்கால் இப்பகுதிகளில் பொதுவாக வலிப்பு போன்ற அசைவுகளும் தென்படுவதுண்டு. சில பகுதிகளிலுள்ள துடிப்புகள் மிக வன்மையாகவும் தெளி வாகவும் இருப்பதால், சாதாரணமாக இவை நடைபெறு வதைப் பெண்ணும் அறிகின்றாள் எனினும், இச்சுருக்கங் கள் வலுவற்றும் நிலையற்றும் இருப்பதால், அவை

---

75. சொறிதல்—Scratching.

76. பெண்ணுறுப்பு—Vulva.

ஏதோ நடைபெறுவதுபோல் பெண் அறிகின்றாள்; பெண்ணிடம் இந்த உச்சநிலை உணர்ச்சி ஆணைவிட மெதுவாகவும் படிப்படியாகவும் அடங்குகின்றது. ஆகவே, இவ்வுணர்ச்சி காலம் அவளிடம் நீடித்து நிற்கின்றது.

**உணர்ச்சி ஏற்படும் படிகள்:** பெண்ணிடம் இவ்வுணர்ச்சி ஏற்படும் படிகளையும் சிறிது விளக்குகின்றேன். முதலில் பாலுந்தலுக்குச் செலுத்தவல்ல எண்ணம் மனத்தில் தோன்றுகின்றது; இந்த எண்ணப் பதிவுகள் பாலுறப்புத் தொகுதிகளுக்கு[77] அனுப்பப்பெறுகின்றன. இந்த உறுப்புகள் குருதியால் நிரம்புகின்றன. இதனால் யோனிலிங்கம் விறைத்துத் தொடுபுலனுக்கும் உராய்தலுக்கும் மிகவும் உணர்வுடையதாகின்றது. பாலுறவுக்குப் பீடிகையாயுள்ள செயல்கள் முடிவுற்றதும், விநாடிதோறும் உறுப்புக் கிளர்ச்சியும் பொதுக் கிளர்ச்சியும் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. பர்த்தோலின் சுரப்பிகள் தன்னுடைய வழுக்கிடு பாய்மத்தைச் சுரந்து யோனிக்குழலில் ஆணுறுப்பு நுழைவதற்கு வசதியாக்குகின்றன. அதே சமயத்தில் யோனிக்குழலின் வாயும் ஆணுறுப்பு நுழைவதற்குத் தடையாக இல்லாதிருக்கும் பொருட்டு விரிந்து கொடுக்கின்றது. விறைத்து நிற்கும் யோனிலிங்கம் ஒவ்வொரு தடவையும் தான் ஆணுறுப்பினைத் தொடுவதை உச்சநிலை உணர்ச்சிகளாகமாற்றுகின்றது. ஆணுறுப்பு உள்ளே நுழைந்ததும் யோனிக்குழலின் தசைகள் சுருங்குவதனால் அதன் நுழைவாயில் இறுக்கமடையலாம். யோனிலிங்கத்தில் தீவிரமாகவுள்ள உச்சநிலை உணர்ச்சி யோனிக்குழல் வாயில், யோனிக்குழலின் உடல் ஆகியவற்றில் பரவலாம். ஆணுறுப்பு கருப்பையைத் தொடுவதாக இருந்தால் கருப்பையின் கழுத்திலும் இந்த உணர்ச்சி பரவுகின்றது. கிளர்ச்சியின் தீவிரத்திற்கேற்பச் சுரப்பிகளின் செயலும் வேகமாக்கப்பெறுகின்றது. ஒரு குறிப்பிட்ட நிலையில் புறவுலக நினைவே மறையத் தொடங்குகின்றது; மூளை

---

77. பாலுறுப்புத் தொகுதி—Sexual apparatus

வேலையே கிளர்ச்சியின் தீவிரத்தின் காரணமாக நீங்கிவிடுகின்றது; இப்பொழுதுதான் உச்சநிலை உணர்ச்சி ஏற்படுகின்றது. இச்சமயத்தில் பெண் பிறப்புறுப்பின் எல்லாச் சுரப்பிகளினுடையவும் தசைகளினுடையவுமான பலமான சுருக்கங்கள் நிகழ்கின்றன. கருப்பையின் அணைச்சவ்விலும் அதன் நுழைவாயிலிலும் சளிபோன்ற சுரப்புநீரின் அளவு விரைவாக அதிகமாகி விந்தணுக்கள் எளிதாக செல்வதற்கேற்ற சூழ்நிலை ஏற்படுகின்றது. பெண்ணிடம் உச்சநிலை உணர்ச்சி ஏற்படுங்கால் ஆணும் விந்துவை வெளிப்படுத்தினால், இது புணர்ச்சியின் முழுநிறைவும் ஏற்படக் காரணமாய் விடுகின்றது; உச்சநிலை உணர்ச்சிக்குப் பிறகு அமைதியும் ஓய்வும் ஏற்படுகின்றன. பெண்ணும் சிறிது நேரம் முழு மன நிறைவு பெற்றவளாக வாளா இருக்கின்றாள். ஈண்டு காட்டப்பெற்றுள்ள பெண்குறியின் படத்தினை (படம்-52) உற்றுநோக்கி மேலே கூறப்பெற்ற செயல்களை உளங்கொள்க.

மேற்கூறிய படிகளில் ஒரு பெண்ணிடம் உச்சநிலை உணர்ச்சி ஏற்படினும், இதில் ஏற்படும் எண்ணற்ற மாறுபாடுகள் கலந்த நிலையும் சாதாரணமானதாகவே கருதப் பெறுகின்றது. சில பெண்களிடம் சிறிது கிளர்ச்சி ஏற்பட்டாலும், சுரப்பிச்செயல் மிகத் தீவிரமாக நடைபெறுகின்றது; சிலரிடம் இச்செயலே ஏற்படுவதில்லை. மேலும், ஒருசில பெண்கள் ஒரே உச்சநிலை உணர்ச்சியை அடைகின்றனர்; மற்றவர்கள் ஒரு சிறிது நேரத்திற்குள் பல உச்சநிலை உணர்ச்சிகளை விரும்புகின்றனர்; அவற்றை அடையவும் செய்கின்றனர்.

ஒரு பெண்ணிடம் உச்சநிலை உணர்ச்சி மிகத் தீவிரமாக ஏற்படுங்கால்—இதில் பல்வேறு நிலைகள் உள்ளன—அவளது பிறப்புறுப்பகுதியில் ஒரே சமயத்தில் நான்கு தசை இயக்கங்கள் மூலமாக அது தெளிவாகவெளிப்படுகின்றது. அச்சமயத்தில் யோனிவாயிலிலும் யோனிலிங்கத்தின் அருகிலுள்ள சில தசைகளிலும், சிறுநீர்ப்புற வழியின் திறப்பிலும் மலவாயிலிலுள்ள சுருங்கும் தசைகளிலும், கருப்பையின் வாயிலிலுள்ள தசைகளிலும் தாளஇயக்கத்திற்கொத்த சுருக்கங்கள்

ஏற்படுகின்றன. இத்தசைகள் யாவும் திரும்பத் திரும்ப விரிந்து சுருங்கின்றன; தாள இயக்க அசைவுகள் சில சமயம் வேகமாகவும் சில சமயம் மெதுவாகவும் உள்ளன. விந்து




படம்—52: பெண்ணின் பிறப்புறுகளையும் அவற்றிலுள்ள சுரப்பிகள் செயற்பட்டுள்ள நிலைமையினையும் விளக்குவது.

வெளிப்படுங்கால் ஆண் குறியிலுள்ள தசைகளிலும் ஆணின் மலவாயிலிலுள்ள சுருங்கும் தசையிலும் உள்ள அசைவுகளைப்

போன்றே இந்த இயக்க அசைவுகளும் தாமாக ஏற்படக் கூடியவையாகும். ஒரு குறிப்பிட்ட உச்சநிலை உணர்ச்சியின் பொழுது இந்தநான்கு இயக்கஅசைவுகளும் ஒரே காலத்தில் ஏற்படுகின்றன. அவை மிக வன்மையாக உள்ளனவாதலின், அவற்றைத் தெளிவாக உணரலாம். மேலும், இச்சமயத்தில் ஆணைப்போலவே பெண்ணும் பெருமூச்சு விடுகின்றாள். தனக்குள் சேசரித்து வைத்திருந்த அனைத்தும் வெளிப்பட்டன போன்ற உணர்ச்சியையும் பெறுகின்றாள்.

ஆணிடம் விந்துப் பாய்மம் வெளிப்படுவதைப்போலவே பெண்ணிடமும் யாதாவது வெளிப்படுகின்றதா என்று நீ வினவலாம். கூறுவேன்; புணர்ச்சியால் பெண், பாலணுக்களை வெளிப்படுத்தியதாக இதுகாறும் அறிவியல் கண்டறியவில்லை. யோனிக்குழலில் சுரக்கும் வழுக்கிடு பொருளைத் தவிர வேறு ஒன்றும் சுரப்பதாக அறுதியிடப் பெறவில்லை. உச்சநிலை உணர்ச்சியின்பொழுது கருப்பையிலிருந்து ஒரு குறிப்பிட்ட அளவு திரவம் யோனிக்குழலில் வெளியேற்றப் பெறுகின்றது என்று ஒரு சிலர் கருதுகின்றனர். அங்ஙனம் வெளிப்படுவதாக இருப்பினும், அது விந்துப் பாய்மத்துடன் ஒப்பிடக்கூடியதன்று; அங்ஙனம் நிகழ்வதை ஆணோ பெண்ணோ அறிந்ததாகத் தெரியவில்லை.

தம்பதிகளிடம் பாலின்ப அளவுகள்: உச்சநிலை உணர்ச்சியின் பொழுது உள்ளக்கிளர்ச்சி உணர்ச்சிகளும் காதலுணர்ச்சிகளும் தனிப்பட்டோரின் நடத்தையும் ஆணிடமும் பெண்ணிடமும் பல்வேறுவிதமான வேறுபாடுகளுடன் கூடியவை. அவை பெரும்பாலும் அவர்களுடைய கூருணர்வையும்[78] உள்ளக் கிளர்ச்சித் துலங்களின் உறைப்பையும் பொறுத்தவை. ஒரு சிலரிடம் பாலின்பம் சிறிதளவு இருக்கலாம்; மற்றையோரிடம் அஃது உடல், உள்ள மகிழ்ச்சியின் கொடுமுடியையும் எட்டலாம். இந்த இரண்டுவித எல்லைக்குட்பட்டவர்கள் எண்ணற்றவர்களாவர். தம்பதிகளின் உடலமைப்பின் வேறுபாடுகளையும், அவர்களது மனப்பான்மை

78. கூருணர்வு—Sensitivity.

கலையும் பொறுத்தே இந்த மகிழ்ச்சியின் அளவும் மாறுபடு கின்றது என்று கருதலாம். மேலும் இருவரிடையேயும் உச்ச நிலை உணர்ச்சி ஒரே காலத்தில் ஏற்படுங்கால் பெண் தனது பாலுறுப்புகளில் ஏற்படும் சுருக்கங்கள் போன்றவற்றை உணர முடிவதில்லை; ஆணும் பெண்ணுறுப்புகளில் நடை பெறுவனவற்றை உணர முடிகின்றதில்லை. எனினும், உச்ச நிலை உணர்ச்சியுடன் ஏற்படும் திடீரென இறுக்கம் தளர்தல், ஓய்வு ஏற்படல், முடிவுற்ற உணர்ச்சி போன்றவற்றை இரு வருமே உணர முடிகின்றது.

பெண்களிடம் பால்துலங்களின் அளவுகள்: பெண்களின் பால்துலங்களின் அளவுகளிலும் அவர்களிடம் ஏற்படும் மன நிறைவு பெறும் உற்சநிலை உணர்ச்சியின் அளவிலும் மிக அதிகமான வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. திருமணம் முடிந்த தொடக்கக்காலத்தில் ஒருபெண்ணின் காம இச்சை கள் உறங்கிய நிலையிலிருக்கலாம். ஆகவே அப்பொழுது அவளிடம் புணர்ச்சிக்குரிய காதல் சார்ந்த துலங்கலை ஏற் படாமலுமிருக்கலாம். இச் சமயத்தில் இருபாலாரிடையே யும் உச்சநிலை உணர்ச்சி ஒரே காலத்தில் ஏற்படவேண்டும் என்று கவலைப்பட வேண்டியதில்லை கணவனிடம் பொறு மையும் ஒத்துணர்ச்சியுடன் புரிந்துகொள்ளும் மனப்பான் மையும் இருப்பின், விரைவில் அவன் இணையும் பொருத்தப் பாட்டினை அடையலாம். பெண்ணின் எதிர்வினை புரியும் காலம்[79] குறைவாக இருந்தாலும் அவள் உச்சநிலை உணர் வினை அடையக்கூடியவளாக இருப்பின், இதில் யாதொரு சங்கடமும் ஏற்படக் காரணம் இல்லை. பெண்ணை அணுகு வதிலும் அவளிடம் தூண்டலை விளைவிப்பதிலும் நுட்பமான முறைகளை மேற்கொள்ளல், புணர்ச்சியின்பொழுது தம்பதி கள் மேற்கொள்ளும் பல்வேறு நிலைகள், காமக் களியாட்டத் தில் கூருணர்வுடனும் திறமையாகவும் இருத்தல் ஆகியவற் றைக் கொண்டு சிறிது காலத்திற்குள் பெண்ணிடம் கிளர்ச்சி யெழச் செய்து அதனால் அவள் பெறும் உச்சநிலை உணர்ச்சி

79. எதிர்வினை புரியும் காலம்—Reaction time

யும் ஆணின் உச்சநிலை உணர்ச்சியும் ஒரே காலத்தில் ஏற்படச் செய்யலாம். எவ்வளவு தூண்டலை எவ்வளவு காலம் உண்டாக்கினாலும் முழு அளவில் காமக் கிளர்ச்சியையே அவர்களிடம் எழுப்பமுடியாத எண்ணற்ற பெண்கள் உள்ளனர்; இப்பிரச்சினையைக் குறித்துப் பின்னர் ஆராய்வேன்.

இணைவிழைச்சு காலம்: சாதாரணமாக இணைவிழைச்சு எவ்வளவு காலம் நடைபெறல் வேண்டும் என்று அறிவதில் ஆவலுள்ளவனாக இருப்பாய் என்று கருதுகின்றேன். புணர்ச்சிக்கு முன்னர் மேற்கொள்ளும் காதல் விளையாட்டு, புணர்ச்சி, புணர்ச்சிக்குப் பின்னர் மேற்கொள்ளும் ஓய்வும் தளர் நிலையும் சேர்த்துதான் இணைவிழைச்சு என்றாக நதினால் இணைவிழைச்சின் கால அளவில் பல வேறுபாடுகள் உள்ளன. ஆண்குறியை நுழைப்பதிலிருந்து உச்சநிலை உணர்ச்சி ஏற்படும் காலம் வரைதான் கலவி என்பதாகக் கொண்டாலும் கூட, இக்கால அளவில் தனிநிலை வேறுபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. ஓர் ஆடவன் விந்து வெளியேற்றமின்றி விறைத்தலை அப்படியே வைத்துக்கொண்டிருக்கும் கால அளவு, பெண் எளிதாக அல்லது சிரமமாக உச்சநிலை உணர்சியை அடையக்கூடிய நிலை, புணர்ச்சி நடைபெறுங்கால் பாலிறுக்கம்[80] ஏற்படும் அளவு, அடிக்கடிப் பாலுறவு கொள்ளும் பழக்கம் போன்ற பல்வேறு கூறுகளைப் பொறுத்தே கலவிக் காலம் நீடிக்கின்றது. ஒரு சில ஆடவர்கள் கலவியையே பதினைந்து அல்லது இருபது நிமிடகால அளவு விந்து வெளியேற்றமின்றி நிகழ்த்துதலும் கூடும்; மற்றவர்கள் ஒரு நிமிட அளவு கூட நீடித்து நிகழ்த்த முடியாத நிலையிலும் உள்ளனர். ஐந்து நிமிடத்திற்குமேல் கலவிபுரியக் கூடியவர்கள் ஒரு சிலரே உள்ளனர் என்பர் ஸ்டெக்கெல்[81] என்ற அறிஞர். டிக்கின்சன்[82] என்பாரின் கருத்துப்படி ஒரு சராசரி மனிதன் ஐந்திலிருந்து பத்துநிமிடகாலம்வரை ஆண்குறியை

80. பாலிறுக்கம்—Sexual tension
81. ஸ்டெக்கெல்—Stekel
82. டிக்கின்சன்—Dickinson

விறைத்த நிலையில் வைத்துக் கொண்டிருக்க முடியும் ஆனால் பல தம்பதிகளைக் கண்டு பேசி அறிந்த மருத்துவ நிபுணர்கள் இந்தக் 'கால அளவு' அதிகம் என்று கருதுகின்றனர். ஆண் குறியைப் பெண் குறியில் நுழைத்த பிறகு விறைத்த நிலையில் இயக்காது அப்படியே வைத்துக் கொண்டிருப்பதற்கும், ஆண் குறியை இயக்க நிலையில் விறைத்த நிலையில் வைத்துக் கொண்டிருப்பதற்கும் வேறுபாடு உண்டு. தம்பதிகள் இருவரும் புணரும் நிலையில் குறிகளைப் பொருத்திக் கொண்டு வாளா இருப்பின், ஆடவன் சற்று நீண்டகாலம் விறைத்த நிலையில் குறியினை வைத்துக் கொண்டிருக்க கற்றுக் கொள்ளலாம். ஆனால், கலவி அசைவுகள் ஏற்பட்ட நிலையில் இருப்பின், மூன்று நிமிடங்களுக்குள் உச்சநிலை உணர்ச்சி ஏற்பட்டு விடுகின்றது. ஆகவே சராசரியாகக் கலவிபுரியும் கால அளவு இரண்டு நிமிடங்களேயாகும். கின்சே என்ற அறிஞர் கண்ட ஆராய்ச்சியின் முடிவும் இதனையே காட்டுகின்றது.

இனி, தம்பதிகள் கலவியின்பொழுது மேற்கொள்ளக் கூடிய ஒரு சில நிலைகளை[83] அடுத்தக் கடிதத்தில் எழுதுவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

---

83. நிலைகள்—Posturcs

# 34

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்; நலனேயாகுக.

புணர்ச்சி நிலைகள்: காம நூலார் தம்பதிகள் கலவி புரிவதில் பல நிலைகளைக் கண்டறிந்துள்ளனர். இவை பால் துலங்களின் தன்மையையும் உறைப்பையும் பாதிக்கலாம். கலவிக்குப் பொருத்தமாக அமைத்துக் கொள்ளக்கூடிய இந்த நிலைகளைப்பற்றிய அறியாமையே கலவிப் பொருத்தத் தடுமாற்றத்தின் காரணங்களுக்கும் சங்கடங்களுக்கும் அடிப் படையாக அமைகின்றது. எனவே, திருமணக்கலையைப் பற்றிய எந்தவித ஆராய்ச்சியிலும் புணர்ச்சி நிலைகளைப் பற்றிய[84] ஆராய்ச்சியும் ஒரு முக்கிய பகுதியாக அமைகின் றது. இந்தக் கடிதத்தில் எல்லா நிலைகளையும்பற்றி குறிப் பிடுவதற்கு இடமும் இல்லை. பெரும்பாலான நிலைகளைப் பற்றிய முழுவிவரங்களும் வாத்ஸ்யாயனரின் 'காம சூத்திரம்' போன்ற நூல்களில் கண்டுகொள்ளலாம். முக்கியமான நிலை களில் ஒரு சிறு மாறுதல்களின் அடிப்படையிலேயே அவை பல்வேறு நிலைகளாக அமைகின்றன

வாத்ஸ்யாயனர் கூறும் நிலைகள்: மேல்நாட்டில் 'அறி வியல்'[85] என்று குறிப்பிடப்பெறுபவையே நம்நாட்டில் 'சாத்திரம்' என்று வழங்கப்பெறுகின்றது. மனிதன் ஆற்றும் செயலில் இந்தச் சாத்திரத்தைப் பயன்படுத்து வதையே அவர்கள் 'கலை'[86] என்று குறிப்பிடுகின்றனர். பண்டைய நூல்கள் முப்பத்திரண்டு சாத்திரங்களையும்

84. புணர்ச்சி—Coital position
85. அறிவியல்—Science
86. கலை—Art

அறுபத்துநான்கு கலைகளையும் குறிப்பிடுகின்றன. கலை மகளைக் குறிப்பிடும்,

'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை'

என்ற வெண்பா அடிகளில் அறுபத்து நான்கு கலைகள் குறிப்பிடப் பெற்றிருப்பதைக் காண்க வாத்ஸ்யாயனர் பெண்ணின் பதிதை மட்டிலும் குறிக்கும் கருத்துகளைத் தன்னுடைய 'காம சூத்திரம்' என்னும் நூலில் விரிவாக ஆராய்ந்துள்ளார். அவர் பல்வேறுவகைப் புணர்ச்சி நிலைகளையும் எண்பத்து நான்காகப் பகுத்துப் பேசுகின்றார். இந்த நிலைகள் யாவும் (1) மனைவி முதுகைப் படுக்கையில் வைத்துப் படுக்கும் நிலை, (2) மனைவி ஒரு பக்கமாகப் படுக்கும் நிலை, (3) மனைவி உட்கார்ந்த நிலை, (4) மனைவி நிற்கும் நிலை, (5) மனைவி மண்டியிட்டுக் கால்களையும் கைகளையும் நிலத்தில் ஊன்றிப் பசுபோல் இருக்கும் நிலை என ஆறு பகுதிகளில் அடங்குகின்றன.

ஆடவர் பெண்டிரின் வகைகள்: இன்னொரு செய்தியையும் ஈண்டு நீ அறிதற்பாலது. பாலின் நோக்க அடிப்படையில் ஆடவரும் பெண்டிரும். [1] அவர்களின் உறுப்புகளுக்கேற்றவாறும், [2] மீப்பண்புகளுக்கேற்றவாறும்,[86] [3] செயலின் விசைக்கும்[87] தடுத்து நிறுத்தும் ஆற்றலுக்கும் ஏற்றவாறும் மூன்று வகைகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளனர். பாலுறுப்புகளின் பருமனுக்கேற்றவாறு[88] ஆண்கள் முயல் வகையினர், காளை வகையினர், குதிரை வகையினர் என்று மூன்று வகையினராகவும்; அதே அடிப்படையில் மகளிர் மான் வகையினர், பெண் குதிரை வகையினர், யானை வகையினர் என்று மூன்று வகையினராகவும் பிரிக்கப்பெற்றுள்ளனர்.

86. மீப்பண்பு—Temperament
87. செயலின் விசை—Force of action
88. பருமன்—Size

இவர்களுள் ஒன்றுபட்ட வகையினர் இணையுங்கால் பல்வேறு ஒத்தப் பாலுறவுகளும்,[89] மாறுபட்ட வகையினர் இணையுங்கால் இன்னும் அதிகமாகப் பல்வேறு ஒவ்வாத பாலுறவுகளும் ஏற்பட்டு எண்ணற்ற வகையான பாலுறவுகளை உண்டாக்குகின்றன.

புணர்ச்சி நிலைகளால் தாம்பத்திய உறவு சிறத்தல் : மேற்குறிப்பிட்ட வாத்ஸ்யாயனர் கண்டறிந்த பல்வேறு புணர்ச்சி நிலைகளால் தாம்பத்திய உறவு பல்லாற்றானும் சிறக்கின்றது என்பதை நீ நன்கு உணரவேண்டும். முதலாவதாக, இந்நிலைகளை மேற்கொள்வதால் தம்பதிகளிடையே இயல்பாக அமைந்துள்ள ஒவ்வாத கூறுகள் குறைக்கப்பெறுகின்றன. இரண்டாவதாக, தம்பதிகள் சிலசமயம் இப்புணர்ச்சி எப்பொழுதும் ஒரே மாதிரி உள்ளதே என்றும், தம்முடைய வயது நிலை, ஆண்டின் பருவநிலை, தம்முடைய மீப்பண்பு நிலை, தம்முடைய தனிப்பட்ட சிறப்பியல்புகள் ஆகியவற்றிற்கேற்றவாறு மாறுதுள்ளதே என்றும் ஒருவித சலிப்புடனிருக்கும்போது அச்சலிப்பினை நீக்குவதற்கு இந்நிலைகள் பயன்படுகின்றன. மூன்றுவதாக தம்முடைய பாலுறுப்புகளின் அமைப்பின் காரணமாக ஒரு குறிப்பிட்ட புணர்ச்சி நிலையில் திருப்திகரமாக உச்சநிலை உணர்ச்சியினை அடைய முடியாத பெண்கள் தமக்குப் பொருத்தமான வேறொரு புணர்ச்சி நிலையினை மேற்கொண்டு இந்த உணர்ச்சியை அடைய முடிகின்றது.

புணர்ச்சி நிலைகளின் பிரிவுகள்: மேலே குறிப்பிட்ட பல்வேறு புணர்ச்சி நிலைகளையும் நாம் நடைமுறையில், பயனை அடிப்படையாகக் கொண்ட சாதாரண நிலைகள் என்றும், விடுப்பையும்[90] (அறிவார்வம்), வகைப் பெருக்கத்தையும்[91] அடிப்படையாகக் கொண்ட 'புதிய முறைகள்' என்றும் இரு

---

89. பாலுறவு—Sex union
90. விடுப்பு—Curiosity
91. வகைப் பெருக்கம்—Variety

பெரும் வகைகளாகப் பகுத்துப் பேசலாம். ஒவ்வொரு வகை ஆண்களும் ஒவ்வொருவகைப் பெண்களுடன்புணரும்போது எந்தெந்தப் புணரும் நிலைகளை மேற்கொள்ள வேண்டும். அங்ஙனம் மேற்கொள்வதற்குக் காரணங்கள் யாவை என்ற விவரங்கள் யாவும் காம நூல்களில் நன்கு விளக்கப்பெறு கின்றன. அவை யாவும் உடற்கூறு நிலைகளைப் பொறுத்தே அமைந்துள்ளன; அவற்றால் பால் பொருத்தப்பாடு நன்கு அமைந்துஇருபாலாரிடையேயும் உச்சநிலைஉணர்ச்சி கிட்டத் தட்ட ஒரே சமயத்தில் ஏற்படத் துணை செய்கின்றன. அந்த விவரங்களையெல்லாம்யான் இங்குக் கூறப்போவதில்லை. அவை அவசியமும் இல்லை. நடை முறையிலுள்ள ஒரு சில வற்றை மட்டிலும் ஈண்டு விளக்குவேன்.

முகங்கள் நேருக்கு நேர் இருக்கும் நிலை: சாதாரண மாகத் தம்பதிகளின் முகங்கள் நேருக்கு நேர் இருக்குமாறு அமைந்துள்ள முறையையே பெரும்பாலோர் மேற்கொள்ளு கின்றனர். இம்முறையில் பெண் தன் முதுகைத் படுக்கையி லிருத்திப் படுத்துக்கொண்டு தொடைகளை அகட்டிய நிலையிலும் முழங்கால்கள் தன்னை நோக்கி மடித்து அல்லது நீட்டிய நிலையிலுமிருக்கின்றாள். ஆண் தன்னுடைய உடலின் மேற்பகுதி அவளுடைய உடலின் மீது பளுவின்றி இலேசாகப் பொருந்துமாறு அமைத்துக் கொண்டு அவளை அணைகின்றான். இப்பொழுது அவன் தன்னைத் தன்னுடைய முழங்கால்களின் மீதும் தரையில் ஊன்றிய கைகளின் மீதும் தாங்கிக் கொண்டு தன் உடற்பாரம் அவள் மீது படாத வாறு இருந்து கொண்டு புணர்கின்றான். இந்நிலையில் ஆண் குறியைப் பெண் குறியில் நுழைப்பது எளிதாக இருப்பது டன் இரண்டு குறிகளும் ஒன்றை யொன்று மிக நெருங்கிய நிலையிலும் அமைந்து கொள்ளுகின்றன. இந்நிலையில் முழங் கால் மடிந்திருக்கும்போது பெண்ணின் பாதங்கள் படுக்கை யில் பொருந்திஇருக்கலாம்; அல்லது நீட்டியநிலையில்இருக்க லாம். எனினும், ஓரளவு முழங்காலை மடிப்பது இன்றியமை யாதது. கணவனும் தன் கைகளைத் தரையில் ஊன்றிக்

கொண்டிருப்பதற்குப் பதிலாகச் சில சமயம் மனைவியின் கொங்கைகளைச் சற்று மெதுவாகப் பிடித்துப் பிசைந்து கொண்டும் இருப்பதுண்டு.

பெரும்பாலான தம்பதிகள் முதலில் அநுபவமில்லாத காரணத்தால் புணர்ச்சியை முற்ற முடியக் கொண்டு செலுத்த முடியாமல் திண்டாடுகின்றனர். இதற்குக் காரணம், பெண் கால்களை நீட்டிப் படுத்துக் கொள்வதால் ஆண் குறியைப் பெண் குறியில் நன்கு செலுத்த முடிவதில்லை. தொடைகளும் கால்களும் நீட்டிய நிலையில் இடுப்பெலும்புக் கட்டும் (பெல்விஸ்) சாய்ந்து கொள்வதால் யோனிக் குழலின் புகுவாய்க் கீழ் நோக்கிய நிலையில் அமைந்து கொள்ளுகின்றது. ஆண் குறி விறைத்த நிலையில் சற்று மேல் நோக்கியிருப்பதால், குறிகள் பொருந்தும் நிலை சரியாக அமைவதில்லை. பெண் முழங்கால்களைச் சற்று மடித்துக் கொண்டு தொடைகளை அகட்டி வைத்துக் கொண்டால் யோனிக் குழலின் வாய் மேல் நோக்கிய நிலையில் சாய்க்கப் பெறுவதுடன், அது சற்றுத் திறந்த நிலையிலும் உள்ளது. இப்பொழுது ஆண் குறியை நுழைப்பது எளிதாகின்றது. பெண் தன்னுடைய இடுப்பிற்கும் ஒரு தலையணையை வைத்துக் கொண்டால் இடுப்பெலும்புக் கட்டு இன்னும் நன்கு சாய்ந்து அமைந்து யோனிக் குழலின் வாயும் முன்னுக்கு வருகின்றது. இதனால் ஆண் குறியை ஆழமாகச் செலுத்த இயலுவதுடன் குறிகளும் நெருங்கி இணைகின்றன இதனால் பாலுணர்ச்சி மிகுவதுடன் உச்சநிலை உணர்ச்சி ஏற்படுவதற்கும் எளிதாகின்றது.

ஆண்குறி நன்கு செலுத்தப்பெற்றவுடன் முழங்கால்களைச் சற்று நீட்டித் தொடைகளையும் சற்று நெருக்கிக் கொள்ள வேண்டும். இந்நிலையில் ஆண் குறியை முற்றிலும் செலுத்த முடியாது போயினும், ஆண் குறியும் பெண்ணின் பிறப்புறுப்புகளின் வெளிப் பகுதியும் நன்கு நெருங்கிப் பொருந்துகின்றன. ஆணிடம் சக்தி குறைந்திருக்கும் பொழுதும் இந்நிலையை மேற்கொள்வது பெரிதும் விரும்பத்

தக்கது. ஆண்குறி நன்கு செலுத்திய நிலையில் அதனைப் பெண் குறியில் முன்னும் பின்னுமாக நகருமாறு இயக்கிக் கொண்டிருந்தால் ஒன்றிரண்டு நிமிடங்களில் இருவரும் உணர்ச்சி வயத்தராகி இன்பத்தின் மேல் எல்லையைக் காணும் நிலையை எதிர் நோக்கியிருப்பர். ஆணின் விந்து வெளிப்பட்ட நிலையில் இன்பத்தின் கொடு முடியை இரு வருமே காண்பர்.

பக்க வாட்டு நிலை: மேற் கூறிய புணர்ச்சி நிலையைச் சற்று மாற்றியமைத்த நிலையே 'பக்கவாட்டு நிலை' ஆகும். இந்நிலையில் பெண் முதுகைப் படுக்கையில் வைத்துக் கொண்டு படுப்பதற்குப் பதிலாக உடலைப் பக்க வாட்டில் வைத்துக் கொண்டும் முழங்கால்களை நீட்டிக் கொண்டும் தொடைகளை அகட்டி வைத்துக் கொண்டும் படுத்துக் கொள்ளுகின்றாள். கணவனும் அவளை நோக்கிய நிலையில் அவளுடைய கால்களுக்கிடையே படுத்துக்கொள்ளுகின்றான். அவள் வலப்புறமாகப் படுத்துக் கொண்டால் அவளது வலப் புறத் தொடை அவனுக்குக் கீழும், இடப்புறத் தொடை அவனது உடலுக்கும் மேலும் அமைகின்றன. இந்நிலையை மேற்கொள்ளுவது எளிது; கணவனும் மனைவியும் படுக்கையி லிருப்பதால் ஒருவருடைய பளு இன்னொருவர்மீது படுவ தில்லை. புணர்வதற்கும் இந்நிலை எளிதாக உள்ளது. வேறு விதமான 'பக்கவாட்டு நிலை' ஒன்றும் உண்டு. இதிலும் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு பக்க வாட்டில் படுத்துக் கொள்ளுகின்றனர். கணவன் இடப் புறமாகப் படுத்துக் கொண்டால், அவன் தன் இடப்புறத் தொடையை நீட்டுகின்றான். மனைவி அதன் மீது தன்னைத் தாங்கிக்கொள்ளுகின்றாள். அதன் பிறகு அவள் தன் இடக் காலை கணவன் உடலின்மீது வைக்கின்றாள். இந்நிலை ஒரு வாறு சிக்கலானது போலத் தோன்றலாம்; ஆனால் இதனை எளிதில் மேற்கொள்ளலாம். பலர் இந்நிலையைச் சௌகரிய மானதாக மேற் கொள்ளுகின்றனர்.

ஆணின் நிலையை பெண் மேற்கொள்ளுதல்: பெண் ஆணின் நிலையை மேற்கொள்ளும் புணர்ச்சி நிலையும் உண்டு.

இந்நிலையில் பெண் தொடைகளை அகட்டிக் கொண்டு உட்காருகின்றாள்; அல்லது கணவன் உடலின்மீது படுக்கின்றாள்; ஆண் தொடைகளைச் சேர்த்து வைத்துக்கொண்டு முதுகைப் படுக்கையின் மீது அமர்த்தி நீட்டிப் படுத்துக் கொள்ளுகின்றான். பெண் மண்டியிட்டுக் கொண்டு அவன் உடலில் குறுக்காக உட்கார்ந்து கொள்ளுகின்றாள் இந்நிலையில் ஆண் குறியைத் தன் குறியினுள் பெண் நன்கு செருகிக் கொள்ள முடிகின்றது. கணவன் தன் முழங்கால்களைச் சற்று உயர்த்தித் தன் மனைவியின் இடுப்பினைத் தாங்கினால், அவர்கள் இருவரின் உடலின் மேற்பகுதிகள் இணைந்து பொருந்தக் கூடும். இதனால் அணையவும் முத்தமிடவும் நல்லவாய்ப்பு ஏற்படுகின்றது. சில சமயம் கணவனது முதுகின் கீழ்ப்பகுதியில் ஒரு சிறு தலையணையை வைத்துக் கொண்டால் இம்முறை மிக்க திருப்தியை அளிக்கின்றது; வசதியாகவும் அமைகின்றது. பொதுவாக, இம்முறை பெண்ணுக்கு நன்கு இயங்கும் சுதந்திரத்தை அளிப்பதுடன், ஆழ்ந்து முழுமையாக ஆண்குறி நுழைவதற்கும் நெருங்கிய பாலுறவுஏற்படுவதற்கும் வாய்ப்பினைத் தருகின்றது. இதனால் சில சமயம் பெண் எளிதாக உச்சநிலை உணர்ச்சியை அடைவதற்கும் எளிதாகின்றது.

உட்காரந்த நிலை: புணர்ச்சியில் உட்கார்ந்த நிலை என்ற ஒரு நிலையும் உண்டு. இதில் ஆண் ஒரு நாற்காலியின் அல்லது கட்டிலின் ஓரத்தில் உட்கார்ந்து கொள்ளுகின்றான். பெண் அவனை நோக்கி அவன் தொடைகளில் உட்கார்ந்து கொண்டு புணர்கின்றாள். இம்முறை சில சமயங்களில்தான் மேற்கொள்ளப் பெறுகின்றது. இது நடைமுறையில் சாத்தியப்படக் கூடியதுமன்று; சௌகரியமானது மன்று. ஆனால், இம்முறையும் சில சமயங்களில் தூண்டல் மாற்றத்தை விளைவிக்கின்றது: மேற்கூறிய முறைகள் யாவும் பயனை அடிப்படையாகக் கொண்ட சாதாரண நிலைகள் ஆகும். இயற்றில் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் நேராகப் பார்க்கும் நிலையில் உள்ளனர்.

புதிய முறைகள்: இனி, புதிய முறைகளைச் சிறிது விளக்குவேன். இம்முறைகளில் ஒன்று 'பின் பக்க நிலை' ஆகும்.

மனிதனைத் தவிர பாலுண்ணிகள்[92] அனைத்தும் "பின் பக்க நிலை"யையே மேற்கொள்ளுகின்றன. அஃதாவது பெண்ணின் பின்புறமாக ஆண் இருந்து புணர்ச்சி நடைபெறுகின்றது. ஆனால், இம்முறை மானிட இனத்திடம் வழக்கமாக நடைபெறுவதில்லை. எனினும், உலகில் பல இடங்களில் இம்முறை ஒரு சிறிது சில சமயம் மேற்கொள்ளப்படுகின்றது. இதில் பெண் ஒரு பக்கமாகப் படுத்து கணவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டிருப்பாள். கணவனும் ஒரு பக்கமாகப் படுத்துக் கொண்டு பின்புறமாக மனைவியை அணுகுவான். இம்முறையில் பெண் முழங்கைகளையும் மார்பையும் படுக்கையில் வைத்துக் கொள்வதும் உண்டு. அஃதாவது, முழங்கால்கள் முழங்கைகள் ஆகியவற்றைப் படுக்கையில் வைத்துக் கொண்டு பசுவின் நிலையை மேற்கொள்ளுவாள். கணவன் அவளுக்குப் பின்புறமாக இருந்து கொண்டு ஒரு காளையைப் போல் அணுகிப் புணர்வான். சில சமயம் அறிவார்வத்தின்[93] காரணமாக ஆண் நாய், மான், ஆடு, கழுதை, பூனை, புலி, யானை, குதிரை நிலைகளை மேற்கொண்டு புணர்வதுமுண்டு; இவை ஒவ்வொன்றும் காம நூலில் ஒவ்வொரு பொருத்தமான பெயர்களால் வழங்கப்பெறுகின்றன. இம்முறைகளில் எல்லாம் வகைப் பெருக்கக்கூறும்[94] சிறுநீர்ப்புறவழிப்பகுதி நெருங்கி அமுக்கம்பெறுதல் அதே சமயத்தில் யோனிலிங்கமும் தூண்டப் பெறுதல் ஆகிய நன்மைகளையும் தவிர, வேறு குறிப்பிடத்தக்க சௌகரியம் ஒன்றும் இல்லை. இம்முறையில் ஆண்குறியை ஆழச் செலுத்த முடியாது. இஃது இருபாலருக்கும் உடல் சிரமத்தை விளைவிக்கின்றது. தவிரவும், நாகரிக மக்களிடம் புணர்ச்சியுடன் இன்றியமையாது நடைபெறும் தழுவி முத்தமிடுதலுக்கும் இம்முறையில் இடமில்லாது போகின்றது.

---

92. பாலுண்ணிகள்—Mammals.

93. அறிவார்வம்—Curiosity.

94. வகைப் பெருக்கக் கூறு—Element of variety.

புதிய முறைகளில் மற்றொன்று 'குறுக்கு நிலை' அல்லது 'கத்தரிக்கோள் நிலை' ஆகும். இதிலும் கணவனும் மனைவியும் நேருக்கு நேர் முகங்களை வைத்துக்கொள்ள முடியாத குறை உண்டு. மனைவி முதுகைப் படுக்கையில் வைத்துப் படுத்துக் கொள்ளுகின்றாள்: கணவன் அவளுக்கு நேர்க்குறுக்காக—நேர்கோணத்தில்—பக்கவாட்டில் படுத்துக் கொள்ளுகின்றான்: இப்பொழுது அவளது மேலுயர்த்தப் பெற்ற தொடைகளின் கீழ் அவனது இடுப்பு இருக்கும்; இடுப்பின்மீது அவளது தொடைகள் பொருந்தியிருக்கும். இந்நிலையை எளிதில் மேற்கொள்ளலாம்; ஒருவர் பளுவை மற்றவர் தாங்க வேண்டிய அவசியம் இல்லை. இருவரது கால்களையும் பல்வேறு விதமாகப் பின்னிக்கொண்டு புணர்ச்சி அசைவுகளின்றி இருக்கலாம். இந்நிலையில் ஆணுக்குப் பெண்குறியுடனும் யோனி லிங்கத்துடனும் நன்கு பொருத்தம் ஏற்படுகின்றது. இத்தகைய தூண்டலால் சிலரிடம் நல்ல முறையில் துலங்கல் ஏற்படலாம். தவிரவும், இம்முறை மனைவியின் கருப்பக் காலத்தில் பெரிதும் பயன்படுகின்றது.

புதிய முறைகளில் ஒரு நூதமான முறையும் உண்டு, கணவனோ, அல்லது மனைவியோ ஒரு சுவர் அல்லது தூண் அருகில் நின்று கொண்டு சிலவகைச் சூழ்ச்சித் திறனுடன் உணர்ச்சி மேற்கொள்ளப் பெறுகின்றது. எடுத்துக்காட்டாக கணவன் சுவர் அல்லது தூண் அருகில் நின்று கொள்ளுகின்றான். மனைவி தன் இருகைகளையும் வளைத்துக் கணவனது கழுத்தைச் சுற்றிக் கொண்டும், தன் இரு தொடைகளும் அவனது தொடைகளில் முறுக்கப்பெற்றும், கணவனது இருகைகளும் கோத்த தொங்கல் முடிச்சினால் தாங்கப்பெற்றும் இருப்பாள். ஆண்குறியைப் பெண் தன்குறியினுள் நன்கு நுழைத்துக்கொண்டதும் மாற்றி மாற்றித் தன்னுடைய கால்களை நன்கு பற்றிக்கொண்டும் விடுவித்துக் கொண்டும் முன்னும்பின்னுமான அசைவுகளை உண்டாக்கிக் கொண்டுப் புணர்வாள்.

புணர்ச்சி நிலைகளை மாற்றிக் கொள்வதால் தம்பதிகளிடம் உச்சநிலை உணர்ச்சி ஏற்படுவதுடன், அவர்கள் இது

காரும் இத்தகைய முழுமையான இன்பத்தை அடைய வில்லையே என்ற உணர்ச்சியையும் பெறுகின்றனர். ஆனால், சில புணர்ச்சி நிலைகளில் ஆணிடம்விந்து வெளிப்பட்டாலும், பெண்ணிடம் உச்சநிலை உணர்ச்சியும் ஏற்பட்டாலும், இருவரும் அன்று உண்மையானநிலை அன்று என்பதாகவே உணர்கின்றனர். ஆடவன் தன்னுடைய விந்து முழுவதும் வெளிப்படவில்லையே என்ற உணர்ச்சியை அடைகின்றான்; பெண்ணும் முழு இறுக்கமும் விடுவிக்கப்பெறவில்லையே என்று கருதுகின்றாள். ஆகவே, மணமக்கள் தத்தமக்கு எளிதாகவும் பயனுள்ளதாகவும்உள்ள புணர்ச்சி நிலைகளையே தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்; அவர்கள் ஏட்டுச் சுரைக்காயைக் கறியாக்க முயலவே கூடாது.

காம நூல்: இணைவிழைச்சு பாலுறவில் ஓர் இன்றியமை யாத பகுதியாகும்; வாத்ஸ்யாயனர் இப்பகுதியை விரிவாக வும் விளக்கமாகவும் கவர்ச்சித் தரும் முறையிலும் விரித் துரைக்கின்றார். கணவன் மனைவியை ஆட்கொள்ளுவதற்கும், முதன் முதலாக அவளிடம் புணர்ச்சியை மேற்கொள்வதற் கும் விரிவான நடைமுறைக் குறிப்புகளையும் தருகின்றார். பண்டைய அறிஞர்கள் தம்பதிகளிடையே வெற்றிகரமான தும் இன்பத்தை நல்குவதுமான பாலுறவினை ஏற்படுத்துவத னையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தனர். இன்பம்[95] மகிழ்ச்சியை[96]விடப் பலகோடி மடங்கு பெரியது. ஆகவே, அவர்கள் பால்வாழ்க்கையைக் கலையுணர்வுடன் நடத்த வேண்டும் என்று கவலையுற்றனர்; இதில் ஒவ்வொரு கூடலும் முக்கிய பங்கினைப் பெறுதல்வேண்டும் என்றும் விழைந்தனர். ஆடவனின் நோக்கம், பெண்ணின் நோக்கம், பிள்ளைப் பேற்றின் நோக்கம், இன்பத்தின் நோக்கம், கலையுணர்வு முதலிய அனைத்தும் பொருந்திய ஏற்பாட்டினைக் கண்டனர். இத்தகைய ஏற்பாடுதான் காமநூல். ஒவ்வொரு தம்பதியும்

95. இன்பம்—Happiness
96. மகிழ்ச்சி—Pleasure

இந்த நோக்கங்களைப் புரிந்து கொண்டு அந்நூலைப் பயில வேண்டும்.

திருமணக் கலையில்[97] ஒரு பகுதியே பால் கலையாகும்.[98] எனினும், இப்பகுதி மிகவும் இன்றியமையாத பகுதியுமாகும் திருமணம் என்பது சிக்கலான உறவு முறையாகும் அது மனநிறைவான முறையில் அமைய வேண்டுமாயின் எத்தனையோ ஆளுமைப் பொருத்தப்பாடுகளும் அனுசரணைகளும் தேவைப் படுகின்றன. இவற்றையெல்லாம் நன்கு உளங்கொண்டுதான் வள்ளுவப்பெருந்தகை 'மங்கலம் என்ப மனைமாட்சி'[99] என்றார். திருமணத்தில் இன்பம் தானாக வருவதில்லை. அந்த இன்பம் யாராலும் வழங்கப் பெறுவதன்று; அது முயன்று பெற வேண்டியதொன்று. ஆகவே, திருமணக்கலைக்கு உறவுடையதுயாதாக இருப்பினும், அதனை நன்கு புரிந்து கொள்ளவும் வேண்டும்; ஆராயவும்வேண்டும்; இதனை நன்குணர்ந்த நம்நாட்டு அறிஞர்கள் திருமணக் கலைக்கு இன்றியமையாததாகவுள்ள காமக்கலையை நன்கு வளர்த்துப் போற்றியுள்ளனர். இதனை நீ நன்கு உணர்ந்து கொள்வாயாக.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்,

97. திருமணக்கலை—Art of marriage.

98. பால்கலை—Art of sex. 99. குறள்-60

# பால் பொருத்தக் கேடுகள்

'திருமண உறவு' என்பது பல்வேறு நற்கூறுகள் அடங்கிய ஒரு வாழ்க்கை ஏற்பாடு. 'நூற்றைக் கெடுத்த தாம் குறுணி' என்பது போல இத்தகைய உறவினைப் பால் பொருத்தக் கேடு குலைத்து விடுகின்றது. சிறந்த முறையில் அமைந்த திருமணங்களையும் ஒரு சில பால் இணக்கமின்மை வகைகள் பெரிதாகப் பாதிக்கின்றன. திருமண வாழ்வில் புக நிற்கும் நம்பியரும் நங்கையரும் பாலுறவில் எதிர் பாராமல் நேரிடக்கூடிய பொருத்தக் கேடுகளையும், அவற்றைச் சமாளிக்குப் முறைகளையும் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். திருமண இணக்கத்திற்கு வேண்டிய பல்வேறு கூறுகள், பாலுறவினை முற்றுவிப்பதில் நேரிடும் சங்கடங்கள், பாலுறவில் மேற்கொள்ள வேண்டிய யுக்தி முறைகளை அறியாததால் நேரிடும் கேடுகள், யோனிக் குழல் வலிப்பு பிறப்புறுப்பு வலிப்பு போன்றவை நேரிடுவதற்குக் காரணங்கள், அவற்றைப் போக்கும் முறைகள், பெண்களிடம் பால் விருப்பமின்மை நேரிடக் காரணங்கள், அவற்றைப் போக்கும் சிகிச்சை முறைகள். உச்சநிலை உணர்ச்சித் திறனின்மைக்குரிய காரணங்கள், அவற்றை நிவர்த்தி செய்யும் வழிகள், ஆடவர்களிடம் காணப்பெறும் ஆண்மைக் குறைக்குரிய காரணங்கள், அவற்றை நீக்கும் முறைகள், பால் பொருத்தக் கேட்டிற்கு காரணமான பிறப்புறுப்புகளின் பொருந்தாநிலை, முட்டிமைதுனம், ஒத்த பாலுறவு ஆகியவை பற்றிய செய்திகள்—இப்பகுதியில் ஐந்து கடிதங்களில் (35-39) ஓரளவு தெளிவாக விளக்கம் பெறுகின்றன.

# 35

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்: நலனேயாகுக.

இதுகாறும் பாலுறவு கொள்ளுவதில் சில யுக்தி முறைகளையும், தம்பதிகள் இருவரும் திருப்திகரமான முறையில் இந்த உறவினைக் கொள்ள வேண்டிய முக்கியத்துவத்தையும் குறிப்பிட்டெழுதினேன். இக் கடிதத்திலும் இதனைத் தொடர்ந்து எழுதும் ஒரு சில கடிதங்களிலும் ஒரு சில பால் பொருத்தக்கேட்டு வகைகளை விளக்குவேன். திருமணம் புரிந்து கொண்ட இளைஞர்களும், புரிந்து கொள்ளப்போகும் இளைஞர்களும் இவற்றை அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதது. திருமணத்துக்குப் பிறகு எதிர்பாராதவகையில் ஒரு சில சங்கடங்கள் நேரிடுமாயின், அவற்றைக் குறித்துச் சிறிதும் அதிர்ச்சியடையாது எளிதில் தீர்வுகாண முயலலாம்: இதனால் அவர்கள் திருமணத்தை வெற்றியுடையதாகச்செய்யலாம். சுருங்கக்கூறின் திருமண உறவாகிய[2] ஆழியில் எதிர்பாராத வகையில் காணும் மணல் திட்டுக்கள், கடற்பாறைகள், பேரலைகள், நீரோட்டங்கள் ஆகியவைப்பற்றி ஒரு சிறிது அறிந்து கொள்வார்களாயின், இல்வாழ்க்கையாகிய தெப்பத்தை நன்முறையில் கொண்டு செலுத்தலாம்.

பாலுறவின் முக்கியத்துவம்: மேற்கூறியவற்றிலிருந்து பால் பொருத்தக் கேடுகளினால்தான் திருமணத்திற்குப் பின் தம்பதிகளிடையே பல சங்கடங்கள் எழுகின்றன என்று கருதுதல் வேண்டா. திருமண உறவுப் பொருத்தப்பாட்டில் எண்ணற்ற கூறுகள் பங்கு பெறுகின்றன. தம்பதிகளின்

---

1. பால் பொருத்தக் கேடு—Sexual disharmony.
2. திருமண உறவு—Matrimony.

ஆளுமைக்கூறுகள், உள்ளக் கிளர்ச்சிப் பாதுகாப்பின் அளவு, இருவரிடையேயுமுள்ள இணங்கிப் போகுந்தன்மை அவர்களுடைய சமூக, பொருளாதார நிலைகள், குடும்ப உறவுகள் ஆகியவைகளை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம், தொல்காப்பியர் கூறியுள்ள பத்துவகைப் பொருத்தங்களை யும் ஈண்டு சிந்தித்து உளங் கொள்வாயாக. எனினும், பாலுறவுக் கூறு மிகவும் முக்கியமானது. ஏனெனில், இது கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயுள்ள வேறு உறவுக் கூறுகளை நேர் முறையிலோ அல்லது நேரல் முறையிலோ[3] பாதிக்கின்றது. எனவே, பாலுறவும் பொருத்தக்கேடு களைத் தடுக்கக் கூடுமாயினும் அல்லது அவற்றைத் திருத்தக் கூடுமாயினும் திருமண உறவில் உறுதியான வெற்றியைக் காணலாம். இன்னொரு செய்தியும் ஈண்டு அறியத்தக்கது. வேறு உறவு முறைகளிலுள்ள பொருத்தக் கூறுகள் சில சமயம் பாலுறவுக் கூறினையும் குறைத்தல் கூடும். மன முவந்து மகிழ்ச்சியாகவுள்ள தம்பதிகளிடையே ஒரு சில பால் பொருத்தக்கேடுகள் புறக்கணிக்கப்பெறுதலையும் இன்று பல தம்பதிகளின் வாழ்க்கையில் காணலாம்; சில தம்பதிகளின் வாழ்வில் பரிசத் தொகை; தீபாவளி—பொங்கல் பரிசு முறைகள், மாமியார் கொடுமை போன்ற கூறுகள் பெருங்கேடுகளை விளைவித்தலையும், அவை அவர்களை வேறு சங்கடங்களுக்குள்ளாக்குவதையும் நாம் காணுமல் இல்லை.

பண்டிருந்ததைவிட இன்று பால் பொருத்தம்பற்றிய பிரச்சினைகள் அதிகமாக நம் கவனத்திற்கு வருகின்றன. பொருளாதார நிலையாலும் பண்பாட்டு நிலையாலும் பெண் களிடம் ஏற்பட்டுள்ள உயர்ச்சி பண்டிருந்து பெண்களிடம் இருந்து வந்த உள் தடைகளை[4] நீக்கிவிட்டன. அவர்களும் தம்முடைய பால் தேவைகளை நன்கு உணர்ந்துகொண்டனர். மனைவி பாலுறவுகளை ஒரு கடமையாக ஏற்றுக்கொண்ட

---

3. நேரல்முறை—In directy
4. உள் தடை—Inhibition

காலத்தில்தான் தன் கணவனின் பால் திறன்களும், தன்னுடைய பால் திறன்களும், இருவருடைய எதிர்வினைகளும் ஒரு பிரச்சினையாக எழவில்லை இன்று கணவன் மனைவி ஆகிய இருவருக்கும் திருப்தியான முறையிலுள்ள பாலுறவின் முக்கியத்துவத்தைப் பெண்கள் உணர்ந்து கொண்டுவிட்டதால் அவர்கள் பால்பொருத்தக் குறைகளையும் பொருத்தக் கேடுகளையும் நன்கு எண்ணத் தொடங்கிவிட்டனர். நவீன வாழ்க்கையிலுள்ள இறுக்கங்கள், பாதுகாப்பின்மைகள், உள்ளக் கிளர்ச்சி முரண்பாடுகள் போன்ற கூறுகள் பால் பற்றிய ஏலாநிலைகளை[5] அதிகமாக்கிவிட்டன என்பது மற்றொரு பொருத்தமான காரணமாகும் இயல்பூக்க உந்தல்கள், சமூக செல்வாக்குகள் என்ற இருகூறுகளால் மானிடப் பால் நடத்தை அறுதியிடப்பெறுகின்றது. நம்முடைய சமூகத்தில் சமூகம் பால்பற்றிய நடத்தையில் பெரும்பங்கு கொண்டுள்ளது. ஆதலின், விருப்பங்களுக்கும் உள்தடைகளுக்குமிடையே அடிக்கடி முரண்பாடு எழுகின்றது. பழங்கால மக்களிடையே சமூக வாழ்வும் பால் பற்றிய எண்ணங்களும் எளிய முறையிலிருந்ததால் பால் பற்றிய குறைபாடுகள் கவனத்திற்கு வந்ததில்லை. எனினும், நம்முடைய பண்பாட்டில் அன்றாட வாழ்விலுள்ள பல்வேறு இறுக்கங்கள் பால் செயலிலும் பால் திறனிலும் குலைவான விளைவினை உண்டாக்கியுள்ளன. இத்தகைய இறுக்கங்கள் ஒரு தம்பதிகளின் பால்வாழ்க்கையில் பல்வேறு பொருத்தக் கேடுகளை விளைவித்தல்கூடும்.

பாலுறவில் சங்கடங்கள்: பாலுறவுபற்றிய சங்கடங்கள் திருமண உறவு ஏற்பட்ட தொடக்கத்திலேயே நேரிடுகின்றன. முதல் சில வாரங்கள் அல்லது மாதங்கள் இவை பொறுக்கமுடியாத நிலையிலும் இருத்தல்கூடும். எடுத்துக் காட்டாக, பாலுறவு முற்றுப்பெறுவதிலேயே சங்கடங்கள் எதிர்ப்படலாம். அஃதாவது, ஆண்குறியை யோனிக் குழலில் நுழைப்பதிலேயே பல்வேறு தொல்லைகள் நேரிடலாம். புதிதாக மணந்துகொண்ட தம்பதிகள் புணர்ச்சியை முற்ற

5. ஏலாநிலை—Disability

முடியக் கொண்டு செலுத்துவதில் வெற்றியடையாது போக லாம்; அங்ஙனம் அவர்களுக்கு எதிர்பாராது ஏற்பட்ட சிக்க லான நிலைமையைக்கண்டு அவர்கள் திகைப்படைந்து மன உலைவு அடையலாம். இந்தச் சங்கடங்கள் சில வாரங்கள் அல்லது சில மாதங்கள் வரையிலும் தொடர்ந்து நிலைபெற்று தம்பதிகட்கு ஏமாற்றத்தையும் தொல்லையையும் அளிக்க லாம்.

பல்வேறு காரணங்கள்: மேற்குறிப்பிட்ட சங்கடங்கள் உண்டாவதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. புணர்ச்சி பற்றிய பொறிநுட்ப அறியாமை, அதனைச் செயற்படுத்தும் யுக்தி முறையில் தடுமாற்றம், யோனிக்குழல் வாயிலைச் சுற்றி யுள்ள தசைகள் தாமாகச் சுருங்குவதால் ஆண் குறியைச் செலுத்த முடியாத நிலை, இணைவிழைச்சு புரிய முயற்சி செய் யும் போதெல்லாம் விடாது பெண்ணுக்கு வலி ஏற்படுதல், குறியமைப்புகளில் உடற்கூறுபற்றிய இயல்பிகந்த நிலைகள், ஆணிடம் தேவையான அளவு புணரும் திறன் இல்லாமை போன்ற காரணங்களால் இச்சங்கடங்கள் எழலாம். மருத் துவ இலக்கியத்தில் கண்ட ஒரு குறிப்பிட்ட தம்பதிகள் புணர்ச்சிபற்றிய யுக்திமுறையை அறியாத காரணத்தால் ஓராண்டுவரை புணர்ச்சியை முற்றமுடியக் கொண்டு செலுத்த முடியாமல் திண்டாடினர். தம்பதிகள் ஒருவரோ டொருவர் மிக்க அன்புடையவர்களே; அவர்களுடைய திரு மணமும் இனிதாக நிறைவேறியது. ஆனால், புணர்ச்சிபற்றிய முயற்சிகள் யாவும் பயனளிக்காது போயின. இருவருக் கிடையே பிளவு மனப்பான்மையும் தோன்றத் தொடங்கி யது. அவர்களிருவரும் மருத்துவ யோசனையை நாடினர். மருத்துவர் சோதித்துப் பார்த்ததில் பெண் 'கன்னி கழியாம லேயே' இருந்தாள்! இவளிடம் யாதொரு உடற்குறையும் இல்லை. தம்பதிகளிருவரும் புணர்ச்சியின் யுத்தி முறையையே சிறிதும் அறியாதவர்கள். முயன்று தவறிக் கற்கும் முறை யிலும்[6] அவர்கள் வெற்றி பெறவில்லை! அவர்கள் புணருங்

6. முயன்று தவறிக் கற்கும் முறை—Trial-and-error method

கால் மனைவி தொடைகளையும் கால்களையும் நீட்டிப் படுத்துக் கொள்வதும் விறைத்த நிலையில் இருப்பதும் தெரிந்தது. இந்நிலையில் ஆண் குறியை யோனிக்குழலில் செலுத்தவே முடியாது: கால்களைச் சற்று மடித்துத் தொடைகளைச் சற்று அகட்டி வைக்கவேண்டுமென்பதைப்பற்றி அவள் சிறிது அறியாதவள். சங்கடங்களின் காரணங்களையும், புணரும் உடற்கூறினையும், யுக்தி முறையினையும் பற்றிச் சிறிது விளக்கியவுடன், அவர்களிடையே இருந்த சங்கடங்கள் மறைந்தன; தாம்பத்திய உறவும் தடையின்றி நடைபெற்றது. இந்த எடுத்துக்காட்டில் கணவனும் பாலுறவினைச் சிறிதும் அறியாதவன். ஒருக்கால் அவனுக்கு இஃது ஏற்பட்டிருந்த போதிலும், அவனுக்குத் தேவையான அளவு பாலுறவுபற்றிய அறிவு ஏற்பட்டிருக்கும் என்று சொல்வதற்கில்லை. திருமணத்திற்கு முன்னர் ஏற்படும் இத்தகைய அநுபவங்களில் பெண்களே புணர்ச்சி ஏற்பாடுகளை மேற்கொண்டு ஆணுக்கு வழிகாட்டுவர். திருமணம் ஆனதும் ஆணே புணர்ச்சிக்கு வழிகாட்டித் தொடங்கவேண்டியுள்ளது; அப்பொழுது அவன் வழி தெரியாமல் தடுமாறுவது இயல்பு.

பிறப்புறுப்பு வலிப்பு: கலவிபற்றிய அறியாமை அல்லது காதற்கலையில் போதுமான திறனின்மைதான் தொடக்கத்தில் ஏற்படும் சங்கடங்களுக்குக் காரணம் என்றுசொல்லவும் முடியாது. சில சமயங்களில் பெண்ணின் எதிர்வினைகளும் மனப்பான்மைகளும் கலவி நடைபெற முடியாத நிலையினை உண்டாக்கிவிடுகின்றன. பெரும்பாலான பெண்கள் முதன் முதலாகக் கலவியில் ஈடுபடுங்கால் பாலுறவினைத் தடுத்துநிற்கும் குணத்தினையுடையவர்கள். சாதாரணமாக இத்தடை விரைவில் மறைந்து நல்ல இணைவிழைச்சு நிலைநிறுத்தப்பெறுகின்றது. எனினும், இத்தடை சிலரிடம் பல வாரங்கள், மாதங்கள்வரை—ஏன்? சில ஆண்டுகள் வரைகூட—நீடிக்கின்றது; இது திருப்தியான பால்பொருத்தப்பாடு அமைவதற்கு முக்கிய முட்டுக்கட்டையாக உள்ளது. ஒன்றரையாண்டுகட்கு முன்னர் மணமான தம்பதிகள் சரியான முறையில் கலவிபுரிய முடியாதநிலையிலிருந்தனர்; மனைவியிடம் கிழியாத

'கன்னிச்சவ்வு' காணப்பெற்றது. கணவனுடைய ஆண்மைக்குப் கலவி அவாவிற்கும் குறைவில்லை. ஆயினும், குறியைச் செலுத்துதல் இயலாததாகவே இருந்தது. கணவன் இணைவிழைச்சு புரிய முயன்றால், மனைவிபயந்து நடுங்குவாள்; கணவன் தன்னை அணுகுவதற்குத் தடை செய்து எதிர்த்து நிற்பாள். இருவரும் முற்றுப்பெறக்கூடிய இணைவிழைச்சினை எதிர்நோக்கியே இருந்தனர்; தாம்சந்திக்கும்பொழுது எதிர்பாராத தடைகள் நேரிடுவதைப்பற்றிக் குழப்பமடைந்திருந்தனர். ஆனால், அவர்கள் தம் உடலிலுள்ள ஏதோ ஓர் இயல்பிசந்த அமைப்பினால் பாலுறவு புரிய முடியவில்லை என்று உறுதியாக நம்பினர்; பால்பொருத்தத்திலும் அவர்களிடம் பொருந்தாத இணைப்பு ஏற்பட்டுவிட்டது என்றும், இயல்டாகவே தம்மிடம் பொருத்தப்பாடு இல்லையென்றும் கருதினர். அவர்களை மருத்துவர் சோதித்ததில் மனைவியின் உடலியலில் கோளாறு இல்லையென்பதும், ஆண்குறி உள்ளே செல்ல முடியாமைக்கு அவளிடம் ஏற்பட்டுள்ள ஒரு தசை வலிப்பே[7] காரணம் என்பதும் தெரியவந்தன. அவளுடைய யோனிக்குழலின் வாயிலைச் சுற்றிலுமுள்ள தசைகள் மிகவன்மையாகவும் தாமாகவும் சுருங்கியிருந்தன; இதுவே குறி நுழைவதற்குத் தடையாக இருந்தது.

மேற்குறிப்பிட்ட வலிப்பு சில சமயம் 'யோனிக் குழல் சுருக்கம்'[8] என்று வழங்கப்பெறும். சாதாரணமாக இது திருமணத்தின்தொடக்கத்தில் ஏற்பட்டுப் பால்பற்றிய சங்கடங்களை விளைவிக்கும். இந்தத் தடை ஒருவித மறிவினை[9] யாகும். அது பெண்ணின் விருப்பார்ந்த கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டது. பெண் எல்லாக் கூறுகளிலும் சாதாரணமானவளாகவே இருப்பாள்; அவளிடம் மிகத் தீவிரமான பால் விருப்பங்களும் இருக்கும். பால் தழுவலுக்கு விருப்ப

7. தசைவலிப்பு—Muscular spasm
8. யோனிக்குழல் சுருக்கம்—Vaginimus
9. மறிவினை—Reflex action

முள்ளவளாகவும் ஆவலுள்ளவளாகவும்கூட இருப்பாள். ஆயினும், இணைவிழைச்சுக்கு முயலுங்கால் பிறப்புறுப்புத் தசைகளில் மறிவினை வலிப்பு[10] ஏற்பட்டுக் குறி உட்புக முடியாத நிலையினை உண்டாக்கி விடுகின்றது. பலவந்தமாக முயன்றால் மேலும் அச்சத்தை விளைவித்து நிலைமையைக் கடுமையாக்கி விடுகின்றது. மருத்துவர்கள் இந்நிலையினைப் 'பிறப்புறுப்பு வலிப்பு'[11] என்று வழங்குகின்றனர்.

காரணங்கள் : யோனிக் குழலின் கீழ்ப்பகுதியைச் சுற்றிலுமுள்ள தசைகள் தாமாகவே இறுகிவிடுகின்றன. உடலியல் அல்லது உள்ளக் கிளர்ச்சிக் கூறுகள் இதற்குக் காரணகளாக இருக்கலாம். புணர்ச்சியில் வலியைத் தரும் பிறப்புறுப்பின் சாதாரண நிலையும் இந்நிலையை விளைவித்து விடும். எனினும், பெரும்பாலோரிடம் 'பிறப்புறுப்பு வலிப்பு' பாலுறவிற்கு எதிரானஒரு நனவிலித் தற்காப்புப் பொறி நுட்பத்தினையே குறிக்கின்றது அச்சங்கள், கவலைகள், இளமைக் காலத்தில் புகட்டப்பெறும் பாலுறவினைப் பற்றிய உள் தடைகள்,[12] விலக்கல்கள்[13] போன்ற ஏதாவது ஒன்று திருமணக் காலத்தில் இவ்வகைத் தசை வலிப்பினை விளைவித்துவிடும்.

பொதுவாகப் பெற்றோர்கள் பால்பற்றிய பொருள்களைத்[14] திருட்டுத்தனமாகக் கையாள்வதால், பாலுறவு சிறுமியரின் மனத்தில் பாவம், வெட்கம், குற்றம் போன்றவற்றின் உணர்ச்சியாகக் கருதப்பெறுகின்றது. மேலும், பெற்றோர்கள் ஒரு பெண்ணைச் சிறு வயதிலிருந்தே அவளது பிறப்புறுப்புகளைத் தொடக் கூடாதென்றும், அப்படித் தொட்டால் கடுமையான தீங்கு விளையும் என்றும் அச்சுறுத்

---

10. மறிவினை வலிப்பு–Reflex spasm
11. பிறப்புறுப்பு வலிப்பு–Genital spasm
12. உள் தடை–Inhibition
13. விலக்கல்-Taboo
14. பால்பற்றிய பொருள்கள்–Sexual topics

திக் கொண்டு வருகின்றனர். இதன் விளைவாக அவள் தன் பின்புறுப்புப் பகுதிக்கு எந்தவிதமான தீங்கும் ஏற்படக் கூடாதென்று ஒருவித பாதுகாப்புணர்ச்சியை வளர்த்துக்கொண்டு வருகின்றுள்; பிற்காலத்தில் அந்த இளம் பெண் பால் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெற்றுவிட்டாலும், அவளிடம் பிள்ளைப் பிராயத்தின் பாதுகாப்பு மனப்பான்மைகளும் உள் தடைகளும் விடாமல் தங்கியிருத்தல் கூடும். இவை திருமணத்திற்குப் பிறகு அவளுடைய பால் பற்றிய எதிர்வினைகளிலும் துலங்கல்களிலும் தலையிடுதல் கூடும். அவள் தன் எண்ணமின்றியே புணர்ச்சியினின்றும் பின்னிடக்கூடும்; இஃது அவளிடம் பிறப்புறுப்பு வலிப்பு வடிவில் ஒரு பாதுகாப்புப் பொறி நுட்பமாகத்[15] தோற்றமளிக்கும். திருமணத்திற்குப் பின்னர் சாதாரணமான பாலுறவுகள் ஏற்பட்டவுடன் இத்தகைய தொடக்கக் கால இறுக்கங்களும் தடைகளும் மறைந்துவிடும் என்பது உண்மையாயினும், சில சமயம் அவை நீண்ட காலம் வரையிலும் ஒரு பெண்ணிடம் நீடிக்கவும் செய்யும்; குறிப்பாகக் கணவன் திறமையின்றியும் தடுமாற்றமுடனும் புணர்ச்சியை மேற்கொண்டால் அவைநிச்சயம் தலைக்காட்டும். திருமணச் சடங்கு ஒரு பெண்ணிற்குச் சட்டப்படியும் சமூக அங்கீகார முறைப்படியும் பாலுறவுகளை அளித்து விட்டபோதிலும், அவள் உடனே தான் வாழ்நாட் காலம் முழுதும் சேர்த்து வைத்துள்ள உள் தடைகளையும் விலக்குணர்ச்சிகளையும் களைந்து எறிந்துவிடுவதென்பது அவ்வளவு எளிதன்று: கணவன் தன் மனப்பான்மையிலும் நடத்தையிலும் பொறுமையற்றவனாகவும் இரக்கக் குணமில்லாதவனாகவும் இருந்துவிட்டால் அவன் அவளுடைய கவலைகளைப் பெருக்கி அவளுடைய தடையினை அதிகரிக்கச் செய்துவிடுவான்.

அச்சங்களைப் போக்கும் வழி : இத்தகைய அச்சங்களைப் போக்குவதற்கு வழியொன்றுமில்லையாஎன்று நீவினவலாம். உண்டு; கூறுவேன். வந்தபின் காப்பதைவிட வருமுன் காப்

15. பாதுகாப்புப் பொறிநுட்பம்–Defense mechanism

பதே சிறந்த வழியாகும். இளமையில் அறிவுக்குகந்த முறையில் பால் கல்வியை அளித்தல் வேண்டும் என்பதே இதன் அடிப்படை. ஒரு சிறுமியின் மனத்தில் அவளது தொடக்க வாழ்வில் பாலைப்பற்றி ஊன்றப் பெறும் மனப்பான்மைகள் பிற்கால வாழ்வில் அவளது பால் நடத்தையைப் பெரிதும் பாதிக்கலாம். நேர் முறையிலும் நேரல் முறையிலும் பெற்றோர்கள் பாலைப்பற்றி தம்முடைய மதிப்பீடுகளையும் மரபமைதிகளையும் வலுவந்தமாகச் சுமத்துகின்றனர். பெற்றோர்கள் சரியானவை எவை தவறானவை எவை என்றே, தகுந்தவை எவை தகாவை எவை என்றே, நல்லவை எவை தீயவை எவை என்றே கருதக் கூடிய உணர்வே அன்றாட வாழ்வில் அவர்களுடைய குழந்தைகளிடமும் கடத்தப் பெறுகின்றது. ஆகவே, பெற்றோர்கள் சில சமயம் தாம் தம்முடைய குழவிகளின் பாற்கோலத்தைத்[16] தாங்கள் உருவாக்கிய வரையறை செய்வதில் அமைக்கும் நிலைத்த விளைவினை உணர்தல் வேண்டும்.

மேலும், இளைஞர்கள் திருமண உறவினைப் பெறக்கூடிய அளவுக்கு அவர்களை ஆயத்தம் செய்து அதற்கேற்ற பாற் கல்வியினைப்புகட்டுவதிலும் பெற்றோர்கள் கவனம் கொள்ள வேண்டும். புணர்ச்சியின் தொடக்கத்தில் கணவன்தான் பொறுமையையும் அடக்கத்தையும் மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாமையை உணர்தல் வேண்டும்; தான் தன்னுடைய துணைவியின் முழு நம்பிக்கையையும் பொறுப்புறுதியையும் பெறுவதற்கு முயல வேண்டும் என்பதையும் புரிந்துகொள்ளல் வேண்டும். வாத்ஸ்யாயனரின் கருத்துப்படி பெண்கள் மென்மையானவர்கள்; இணை விழைச்சில் மென்மையாகத் தொடங்குவதை விரும்புவர்கள் தம்முடன் சரியாகப் பழகாத ஆண்கள் அவர்களை மிருகத்தனமாக நெருங்கினால், அவர்கள் சில சமயம் கலவியையே வெறுக்கக்கூடியவர்களாக மாறிவிடுவர்; சில சமயம் ஒரு

16. பாற்கோலம்-Sex pattern

சிலர் ஆணினத்தையே வெறுக்கக் கூடிய மனப்பான்மையை யும் பெறுவதுண்டு. இவற்றையெல்லாம் நன்குணர்ந்த தமிழர்கள் பெண்களை மெல்லியலார்' என்றும், ஆங்கிலேயர் 'Weaker Sex' என்றும் வழங்கினார்களோ என்று கருத வேண்டியுள்ளது. ஆகவே, கணவன், மனைவியின் விருப்பத் திற்கிணங்க அவளை நெருங்க வேண்டும் என்றும், அவளு டைய நம்பிக்கையைப் பெறுவதற்கேற்ற யுக்தி முறைகளை யெல்லாம் அவன் கையாள வேண்டும் என்றும் வாத்ஸ்யாய னர் கூறுவர். அதற்குரிய குறிப்புகளையும் தன் ''காம சூத்திரத்தில்'' தருவர்.

திருமணம் ஆனபிறகு ஒரு தம்பதிகளிடையே மேற்கூறிய தசையிறுக்கம் ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்றும் வினவலாம். கூறுவேன்; முதலாவதாக கணவனும் மனைவி யும் இந்த நிலைமை ஏற்பட்டதற்குரிய மூலகாரணத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்; சங்கடத்தின் இயல்பினை நன்கு புரிந்துகொண்டு விட்டதாலேயே அதனைத் திருத்துவதற் குரிய வாய்ப்புகள் அதிகம். உடலியல், உளவியல், பாலுற வுக்களைபற்றிய அறிவினைப் பெறுதல், மனைவியின் மனப் பான்மையை மாற்றியமைத்தல், உடற்கூற்றிலுள்ள இயல் பிகந்த அமைப்புகளைத் திருத்தியமைத்தல், தேவையானால் செயற்கை முறையில் கன்னிச் சவ்வினை விரித்தல் போன்ற முறைகளை மேற்கொண்டு நேரிட்ட இடர்ப்பாட்டினைப் போக்கிவிடலாம்.

தம்பதிகளிடையே தக்க பாற்கல்வியும் பாலைப் பற்றிய அறிவியல் மனப்பான்மையும் அமைந்திருந்தால் இத்தகைய கோளாறுகள் ஏற்படுவதற்கே காரணம் இல்லை.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 36

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,
நலன். நலனே விழைகின்றேன்:

இணைவிழைச்சில் வலி: இணைவிழைச்சின்பொழுது சிலருக்கு வலியுண்டாவதற்குக் காரணம் என்ன என்று வினவியிருந்தாய். அது பால்பற்றிய சங்கடங்களால் நிகழலாம்; ஆனால், கன்னிச் சவ்வு விரிவதனால் ஏற்படும் வலி தற்காலிகமானதே என்பதை நீ அறிதல் வேண்டும்; ஒரு வார காலத்திற்குள் இத்தகைய தொந்தரவு நீங்கிவிடுதல் வேண்டும். புணர்ச்சியின்பொழுது ஏற்படும் வலிக்கு வேறு முக்கியக் காரணங்களும் உள்ளன. இயல்பிகந்த உடற்கூறு அமைப்புகள் பாலுறுப்புக்களின் வெளிப்புற அல்லது உட்புற வீக்கங்கள், அருவருப்பான முறைகளில் புணர்வதால் உண்டாகும் எரிச்சல் போன்ற கூறுகள் ஆகியவையும் பிறவும் இத்தகைய வலிக்குக் காரணங்களாகலாம். இத்தகைய சங்கடம் மிகத் தீவிரமாக இருப்பின், புணர்ச்சி மனைவிக்கு மகிழ்ச்சியே அளிக்காது: அதை அவள் முற்றிலும்வெறுக்கக் கூடிய நிலையையும் அடைதல் கூடும்

எடுத்துக்காட்டு ஒன்று தருகின்றேன். ஒரு பெண்ணுக்குத் திருமணம் அண்மையில்தான் நடைபெற்றது. புணர்ச்சியில் ஈடுபடும் பொழுதெல்லாம் அவள் வலியினால் தொல்லைப் பட்டாள்; கன்னிச் சவ்வு நன்கு விரிந்த பல நாட்களுக்குப் பிறகும் வலி தொடர்ந்து இருந்து வந்தது. நாளடைவில் அது மிகக் கடுமையாயிற்று. இறுதியில் அவளுக்குப் புணர்ச்சியில் இன்பமே ஏற்படவில்லை; அதனால் கணவனுக்கும் அத்தகைய நிலை ஏற்பட்டது. ஆகவே, அவர்கள் இணைவிழைச்சினையே கைவிட்டனர். அவர்கள் தங்களுக்குள் பால் பொருத்தமில்லை என்றும், பாலுறுப்புகளின் அளவு வேறுபாடுகளே

இந்நிலைக்குக் காரணம் என்றும் கருதினர்; தம்முடைய திருமணம் பாழ்பட்டது என்றும் மனமுடைந்தனர். எனினும், மனைவி மருத்துவச் சோதனைக்குட்படுத்தப் பெற்றாள். அவளுடைய பெண் குறியிலும் யோனிக்குழலிலும் வீக்கம் கண்டிருந்தது. அவ்வீக்கம் சிகிச்சையினால் குணப்பட்டது. அதன் பிறகு அவர்கள் புணர்ச்சியில் ஈடுபடுங்கால் வலியே தலைக் காட்டவில்லை; நல்ல புணர்ச்சிப் பொருத்தப்பாடு அவர்களிடம் நிலவத் தொடங்கியது. தக்கக் கவனம் இல்லையாயின், ஒரு சிறு தடையும் மனமுறிவில் கொண்டு செலுத்துதல் கூடும் என்பதை வற்புறுத்தவே இதனைக் கூறினேன். மருத்துவர் கவனத்திற்குக்கொண்டு வராமல் எச்சங்கடத்தையும் வளரவிடக் கூடாது என்பதை நீ நன்கு உணர்தல் வேண்டும். 'இளைதாக முள்மரம் கொய்க'[17] என்ற வள்ளுவர் வாக்கினை ஈண்டு நினைவு கூர்க.

பெண்களிடம் பால் விருப்பமின்மை: பொதுவாக ஆண்களிடையேயும் பெண்களிடையேயும் பால்விழைவில் பல்வேறு வேறுபாடுகள் உள்ளன. சிலர் தீவிரமான பாலுந்தலையும் வேறு சிலர் குறைந்த அளவு [பாலுந்தலே[18] இல்லாமலும்] பாலுந்தலையும் பெற்றுள்ளனர். இவர்கட்கிடையில் உள்ளவர்கள் பல்வேறு படிகளில் பாலுந்தலைக் கொண்டுள்ளனர். பால் விருப்பமின்மை பெரும்பாலும் பெண்களாலேயே தான் அதிகமாக அதுவும் பல்வேறு வடிவங்களில்...தலைக் காட்டுகின்றது. சிலரிடம் பால் தூண்டலே[20] காணப்படுவதில்லை. அஃதாவது, அவர்களிடம் பால்விடாயே[21] இருப்பதில்லை. வேறு சிலரிடம் தீவிரமான விழைவு காணப்பெறுகின்றது; இவ்விழைவு எளிதிலும் எழுப்பப்பெற வல்லதாகவும் உள்ளது. ஆனால், அவர்கள் இணைவிழைச்சில்

---

17. குறள்—879
18. பாலுந்தல்—Sexual drive.
19. பால் விருப்பமின்மை—Sexual frigidity
20. பால் தூண்டல்—Sexual urge
21. பால்விடாய்—Sexual appetite

சிறிதும் இன்பத்தையே பெறுவதில்லை. இன்னும் சில பெண்கள் புணர்ச்சியினையே வெறுக்கும் இயல்பினையுடையவர்களாகவும் உள்ளனர்; இவர்கள் பாலுறவினைத் திருமணத்தின் இன்பமற்ற கடமையாகவே கருதுகின்றனர்.

பால்விழைவே இல்லாத மகளிரிடம் பாலுணர்வும் இராதா, அல்லது ஒரு குறிப்பிட்ட ஆணிடம் மட்டிலும் அவள் அங்ஙனம் பால் துலங்கல் கொள்ளாளா என்ற ஐயம் இயல்பாகவே உன்னிடம் எழலாம். தெளிவு படுத்துவேன். இதுபற்றிய செய்தியை ஒவ்வொருவரிடமும் தனித்தனியாகத் தீர்மானித்தல் வேண்டும். ஒரு பெண் முற்றிலும் பால் தூண்டலின்றி இருக்கலாம்; எந்தச் சூழ்நிலையிலும் அவளிடம் பால் விருப்பமே எழாது; அல்லது, திருமணத்துடன் உறவுள்ள பல்வேறு கூறுகளின் விளைவாக அவ்விழைவின்மை தற்காலிகமானதாகவோ தரத்தில் குறைவானதாகவோ அவளிடம் அமையலாம். நிரந்தரமாகவே பால் விழைவில்லாத பெண்ணைக் காண்பது அரிது. காமத் தூண்டலையே கண்டிராத பெண்ணிடம்தான் பாலுணர்வே இராது. அத்தகைய பெண்ணிடம் தக்க தூண்டலிருப்பின் பால் விழைவு எழும். பாலுறவில் கருத்தில்லாத பெரும்பாலான மகளிரின் வரலாற்றை ஆய்ந்த மருத்துவ நிபுணர்கள் அவர்களிடம் சில சமயம் பால்தூண்டல் இருந்ததாகவும் முட்டிமைதுனம்[22] அல்லது அது போன்ற பால் விளையாட்டின்[23] மூலம் அவர்கள் மனநிறைவு பெறுகின்றனர் என்றும் கூறுகின்றனர். இவர்களிடம் காம உணர்ச்சிகளை அடக்குவது, அல்லது ஒரு குறிப்பிட்ட முறையில் அணுகுவதற்கோ அல்லது தூண்டலுக்கோ துலங்காமை காணப்பெறுகின்றனவே யன்றி முற்றிலும் பால் விழைவு இல்லாமை அன்று.

இத்துறையில் ஆய்ந்த பாற்கலைநிபுணர்கள் பலஉண்மை

---

22. முட்டிமைதுனம்—Masterbation
23. பால் விளையாட்டு—Sex play

களைக் கண்டு வெளியிட்டுள்ளனர். ஆட்டோ ஆட்லர்[24] என்பார் பத்திலிருந்து நாற்பது சதவிகிதம் பெண்களிடம் முற்றும் அல்லது ஓரளவு இவ்விழைவின்மை காணப்பெறுவதாகக் கூறுகின்றார். வேறு சிலர் நாற்பதிலிருந்து ஐம்பது சதவிகிதம் காணப்பெறுவதாக உரைக்கின்றனர் ஆஸ்திரிய நாட்டினைச் சேர்ந்த உலகப் புகழ்பெற்ற பேராசிரியர் வில்ஹெல்ம் ஸ்டெகில்[25] என்பார் ஐம்பது சதவிகிதத்திற்கு மேல் எல்லாப் பெண்களும் ஆற்றலானவர்கள்[26] என்று கருதுகின்றார் இங்ஙனம் வேறு சில அறிஞர்களும் ஆராய்ந்து முடிவுகளைத் தெரிவித்துள்ளனர். இவற்றையெல்லாம் ஒரு சேரவைத்து யோசித்தால் நான்கு பெண்களில் ஒருவர் வீதம் பால் துலங்கலின்றி இருப்பதாக அறியடக்கிடக்கின்றது.

காரணங்கள்; இனி பால் விருப்பமின்மைக்குரிய காரணங்களை விளக்குவேன். பால்துடிப்பின் வளர்ச்சியும் அது செயற்படுவதும் உடல் உளக்கூறுகளைப் பொறுத்தவை. ஆகவே, உடற்குலேவோ உளக்குலேவோ பால் விருப்பத்தின் தீவிரத்தை அல்லது அளவினைப் பாதித்தல் கூடும். பெரும்பாலும் பிராணிகளிடையே பாற்செயல் ஹார்மோன்களால் கட்டுப்படுத்தப் பெறுகின்றது என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. எடுத்துக்காட்டாக, பெண் பிராணிகளிடம் முட்டை பக்குவப்படுங் காலங்களில் அதிகமான பால் விருப்பம் இருப்பதைக் காணலாம். இக்காலங்களில் அதிகமான ஹார்மோன் உற்பத்தியாவதே இதற்குக் காரணமாகும். பெண் பிராணிகளிடம் சூற்பைகளை நீக்கிவிட்டால், செயற்கை முறையில் பெண்ணின் பால்ஹார்மோன்களைச் செலுத்தி பாற்செயலைத் தூண்டலாம். ஆனால், பெண்களிடம் ஏற்படும் பால் உந்தல் குறைந்த அளவே ஹார்மோன் உற்பத்தியைப் பொறுத்துள்ளது. எனினும், தூம்பிலாச் சுரப்பிகள் செயற்படுவதில் நேரிடும் சங்கடங்களி

24. ஆட்டோ ஆட்லர்—Otto Adler.
25. வில்ஹெல்ம் ஸ்டெகில்—Wilhelm Stekel.
26. ஆற்றலற்ற—Impotent.

பால்விருப்பக் குறைவில் அல்லது பால் விருப்பமின்மையில் கொண்டு செலுத்தலாம். சில சமயம் உளக்கூறும் உடற் கூறும் சேர்ந்து பால்விருப்பமின்மையை விளைவித்தல் கூடும். சிறு வயதிலிருந்தே இச்சுரப்பிகள் சரியாகச் செயற்படா விடின், பால் உறுப்புகள் சரியான முறையில் வளர்ச்சி யடையாமற் போதல் கூடும். மனவளர்ச்சி குன்றியதன் காரணமாகக் குமரப் பருவத்தை எய்திய பெண்கள் வயது வந்தும் உச்சநிலை உணர்ச்சியைப் பெறக்கூடாத நிலையில் உள்ளனர். மேலும், அவர்களுடைய வெளிப்புற, உட்புறப் பால் உறுப்புகள் மிகச் சிறியனவாக இருத்தலின், ஆண் குறியைச் செலுத்துவதும் அவர்களிடம் சிறிதும் சாத்தியப் படுவதில்லை.

உளக்கூறுபற்றி நிகழும் பால் விருப்பமின்மையும் உடற் கூறினைச் சார்ந்தே ஏற்படுகின்றது. பெரும்பாலும் கன்னிச் சவ்வு கிழிதலையொட்டியே இஃது உண்டாகின்றது. கன்னிச் சவ்வு மிக உறுதியாக இருந்து புணர்ச்சியின்பொழுது அஃது அதிக வலியை விளைவித்தால், ஏற்கெனவே நரம்புக் கோளா றுள்ள பெண்களிடம் அந்த வலியின் நினைவே பால் விருப்ப மின்மையில் கொண்டு செலுத்திவிடும். எனினும், மூளையில் ஏற்படும் உடல் உளக் கூறுகளின் காரணமாக உண்டாகும் பால் விருப்பமின்மையே அதிகமாக நேரிடுகின்றது.

ஆனால், இன்றுவரை கிடைத்துள்ள புள்ளி விவரங்களி லிருந்து மனிதர்களிடம் ஏற்படும் பால் துடிப்பின் வளர்ச்சி யில் பெரும்பாலும் சமூக, பண்பாட்டு, உள்ளக்கிளர்ச்சி பற்றிய கூறுகளே பெரும்பங்கு பெறுகின்றன என்று அறியக் கிடக்கின்றது. பிராணிகளின் படிவளர்ச்சி ஏணியை உற்று நோக்கினால், மேலே போகப் போகப் பால் செயலும் பால் விருப்பமும் குறைந்த அளவு ஹார்மோன்களைப் பொறுத் திருப்பதையும், அதிக அளவு மூளையையும் நரம்பு மண்டலத் தையும் பொறுத்திருப்பதையும் காணலாம். அங்குப் பால் நடத்தை குறைந்த அளவு இயல்பூக்கத்தின் அடிப்படை யிலும் அதிக அளவு கற்றலின் செயலாகவும் நடைபெறு

வதைப் பார்க்கலாம். பாற்செயலிலும் பால் நடத்தையிலும் புறக் கூறுகளே அதிகமாக முக்கிய பங்கினைப் பெறுகின்றன. ஆகவே பால் விருப்பமின்மை உண்டாவதற்கு உடற்கூறு காரணமாவதுடன் சூழ்நிலைச் செல்வாக்கும் காரணமாகின்றது. எடுத்துக்காட்டாக கின்ஸே என்ற அறிஞர் பெண்களின் சமூகக் கல்வியின் பல்வேறு நிலைகளுக்கேற்றவாறு அவர்களிடம் குறிப்பிடத்தக்க பால்துலங்களின் வேறுபாடுகளின் தரம் காணப்பெறுகின்றது என்று கண்டறிந்துள்ளார். இதுபற்றிய முழு விவரங்களை அறிஞர்களின் நூல்களைப்[27] படித்து அறிந்துகொள்வாயாக.

பெரும்பாலான பெண்களிடம் பால் துலங்கலின்மைக்கு காரணம் திருமணத்திற்கு நீண்ட நாட்களுக்கு முன்னரே அமைந்து கிடக்கின்றது; சிலரிடம் குழந்தைப் பருவத்திலிருந்தே படிந்து கிடக்கின்றதாகவும் கண்டறிந்துள்ளனர். சில பெண்களிடம் பால் விருப்பமின்மையிருப்பதற்கு அவர்கள் வளர்க்கப்பெறும் சூழ்நிலையே காரணமாகும். இளமையில் தவறான முறையில் பாற்கல்வியைப் பெறுவதாலும், இளமையில் அடைந்த அச்சங்களையும் உள்தடைகளையும் நீக்க முடியாமையாலும் பெரும்பான்மையான பெண்களிடம் பால் விருப்பமின்மை காணப்பெறுகின்றது. ஏற்கெனவே, பெண்களிடம் பால்துலங்கலைக் குலைக்கக் கூடிய ஒரு சில கூறுகளைக் குறிப்பிட்டுள்ளேன். இக் கூறுகள் சில சந்தர்ப்பங்களில் பால் விழைவினை முற்றிலுமே வெளிப்படாது தடை செய்தல் கூடும். அச்சம், கவலை, பாலைப் பற்றிய பயம், பணிகின்றோம் என்ற அச்சம், வலியேற்படும் என்ற பயம், உடலுக்கு ஊறு விளையுமோ என்ற அச்சம், கருப்பம் ஏற்படுமே என்ற அச்சம், மூத்தோர் கடிவரே என்ற பயம் போன்றவை பால் விருப்பமின்மை எழுவதற்கு முக்கிய காரணங்களாகும். எடுத்துக்காட்டாக ஒரு பெண் பாலுறவு மிருகத்தனமானது, கேவலமானது, ஒழுக்கக் குறைவானது என்ற சூழ்நிலையில் வளர்க்கப் பெற்று அவள் அடிக்கடி காதலின் விலைவான உடலின்பத்தைப்

27. The Illustrated Encyclopaedia of Sex: Chap 33

பற்றி எச்சரிக்கப் பெற்றால், அவளிடம் பால் இயல்பாகவே தவறானது, நாணப்படக் கூடியது, பாவமானது என்ற தீவிர மான எண்ணம் வளர்தல் கூடும். திருமணத்திற்குப் பிறகும் இவ்வெண்ணத்தை அவளால் மாற்றிக்கொள்ள முடிவதில்லை; அவளிடம் அறிவு வளர்ச்சி நன்முறையில் ஏற் பட்டிருந்தாலும், பிள்ளைப் பருவத்தின் அச்சங்களும் உள் தடைகளும் உள்ளக்கிளர்ச்சியின் அடிப்படையில் அவளை அடிமையாகவே இருக்கச் செய்கின்றன. அன்றாட வாழ்க்கை யில் இதற்குப் பல எடுத்துக்காட்டுகளைக் காணலாம்.

சில பெண்களிடம் திருமணம் ஆகியும் யாதொரு மாற்ற மும் ஏற்படுவதில்லை. ஒரு பெண்ணிடம் அங்ஙனம் பால் விருப்பமின்மை ஏற்படுவதற்கு அவளுக்குத் துணைவனாக அமைந்த கணவனிடம் அமைந்த பல கூறுகளும் காரணமாக அமைகின்றன. சாதாரணமாகப் பெண்ணின் பால் துலங்கல் கள் அவளுடைய உள்ளக்கிளர்ச்சி எதிர்வினைகளுடன் நெருங் கிப் பிணைந்துள்ளன. மேலும், அவை அவள் தன்னுடைய கணவன்மீது கொண்டுள்ள மனப்பான்மையையும் பொறுத் துள்ளன. தான் காதலே கொள்ளாத அல்லது யாதொரு உறவும் இல்லாத ஒரு பெண்ணிடம் பாலுறவு கொள்வதால் ஆடவன் திருப்தியைப் பெறலாம். எனினும், ஒருபெண் தான் அன்பு கொள்ளாத ஆடவனிடமோ, அல்லது தன்னிடம் பரிவையும் பிரியத்தையும் காட்டாத ஆடவனிடமோ பால் துலங்கலைப் புரிதல் முடியாது; அவனிடம் கொள்ளும் உறவி னால் இன்பத்தையும் அடைதல் முடியாது. எனவே, ஒரு மனைவி தன் கணவன்மீது கொள்ளும் பால் எதிர்வினைகள் அவன் தன்னை ஒரு தனியாளாக மதித்தலையும், அவன் தன் மீது கொள்ளும் மனப்பான்மையையும், தன்மீது காட்டும் அக்கறையையும் தன்னுடன் பழகும் முறையையும் பொறுத் துள்ளன. இவற்றில் கணவன் தவறினால் மனைவியும் நாளடைவில் அவனிடம் பாலுறவு கொள்ளும் கவர்ச்சியினை இழத்தல் நேரிடும். கணவனுடைய இக்குறைகளும், அவனது ஒழுக்கக் குறைவும் எத்தனையோ பெண்களை விபசாரத்தில் ஈடுபடுத்தியுள்ளதை இன்றைய வாழ்க்கையில் காணலாம்!

மேலும், மனைவியின் பால்விருப்பமின்மைக்குக் கணவனின் பால்திறனும்[28] அவனுடைய பால் நடத்தையும்[29] காரணமாக அமைதல் கூடும். கணவன் மனைவியை அணுகுவதில் அருவருப்பாக இருந்தாலும், காதலூடாட்டத்தில் அவனிடம் கலையுணர்ச்சி இல்லாவிடினும், அவன் தன்னுடைய மனைவியிடம் பாலுணர்ச்சியைத் தூண்டிக் கிளர்ந்தெழச் செய்வதில் பொருத்தமற்ற முறைகளைக் கையாண்டாலும், அவளிடம் யாதொரு உணர்ச்சியும் தோன்றாமல் பாலுறவிற்குத் துலக்கமடையாமலே அவள் காணப்பெறுவாள். மேலும், கணவனுடைய பால்திறனும் போதுமான அளவு இல்லாவிட்டாலும், அவனிடம் பால்விருப்பம் குறைவானதாக இருந்தாலும், அவனிடம் விரைவாக அல்லது காலத்திற்கு முன்னர் விந்து வெளிப்பட்டாலும், அல்லது அவன் 'இடையீட்டு இணை விழைச்சினை' மேற்கொண்டாலும், மனைவியிடம் வெறுப்புணர்ச்சி தோன்றிப் பாலுறவினையே வெறுக்கக்கூடிய நிலை அவளிடம் ஏற்படக் காரணமும் உண்டு. இன்னும் அவளிடம் என்றுமே தூண்டப்பெறாத நிலை அமையலாம்; அடிக்கடி அவளிடம் உண்டாகும் மனமுறிவுகள் அவளிடம் இன்பவுணர்ச்சியே இல்லாது செய்தல் கூடும். அதனால் அவள் பாலுறவினைப்பற்றிய விழைவினையே இழத்தற்கும் ஏதுவுண்டு. அடிக்கடி அவள் இன்பவுணர்ச்சியின் எல்லையை அடையாது, 'திரிசங்கு சுவர்க்கநிலை'யை எய்த நேரிட்டால், நாளடைவில் தரையிலிருந்து எழுவதற்கே மறுத்தல் கூடும் என்பதை ஒவ்வொரு கணவனும் நினைவில் இருத்துதல் வேண்டும்!

கழுவாய்: திருமணம் நிறைவேறிய பிறகு கணவன் தன் மனைவியிடம் பால் துலங்கல் இல்லாதிருப்பதைக் காணின், அதற்கு யாதொரு கழுவாயும் இல்லையா என்று வினவியிருந்தாய். கூறுவேன்; ஒரு பெண்ணின் பால்துடிப்பு நீண்ட

---

28. பால்திறன்—Sexual capacity

29. பால் நடத்தை—Sexual behaviour

நாள்வரை உறங்கிய நிலையில் இருக்கும் என்பதை முதலில் கணவன் உணர்தல் வேண்டும் உண்மையில், அவள் இருபது வயது எய்திய பிறகுதான்—இன்னும் பின்னர் என்றுகூடச் சொல்லலாம்—அத்துடிப்பு முழுவளர்ச்சியினைப் பெறுகின்றது. மால்[30] என்ற அறிஞர் பாலுந்தலை[31] இரண்டு பிரிவாகப் பிரித்துள்ளார்; எதிர்பாலாரை அணுகுதல், தொடுதல், முத்தமிடுதல் போன்ற உடலுறவு கொள்ளுதல், ஒன்று; மற்றொன்று, பாலுறவு கொள்ளுதல், சிறுமியிடம் உடம்பைத் தொடுதல் போன்ற செயலின் விருப்பமே அதிகமாக இருக்கும்; ஆகவே தழுவுதல், அணைதல், முத்தமிடுதல் போன்ற செயல்களே பாலுறவினை விட அவளுக்குத் திருப்தியளிக்கக்கூடியனவாக இருக்கும். சில பெண்கள் திருமணத்தின் தொடக்கத்திலிருந்தே தீவிர மான பால் விருப்பங்களைக் கொண்டிருப்பார்; ஆனால் ஏனையோர் பல மாதங்கள் கழிந்த பின்னரே—சில ஆண்டு கள் எனக்கூடச் சொல்லலாம்—பாலுணர்ச்சிகள் தகுந்த அளவு எழுப்பப் பெற்றுப் பாலுறவில் தீவிரமான விருப்பங் களைப் பெற்றுப் பாற்செயலிலும் பேரின்பத்தை எய்துவர். மனைவியின் உறங்கிய நிலையிலுள்ள பால்திறன்கள் முழுதும் வளர்ச்சி பெறுமையின் காரணமாகவே முதலில் அவளிடம் முழுமையான பால் துலங்களைக் காண முடிகின்றதில்லை.

எனினும் பால்விருப்பமின்மை தொடர்ந்து காணப் பெறின், அந்நிலையைச் சமாளிப்பது அல்லது திருத்துதல் தனிப்பட்டோரின் இயல்பையும் அவரிடம் உள்ள காரணத் தையும் பொறுத்தது. தம்பதிகட்குப் போதுமான அளவு பாற்கல்வி அளித்தல், மனைவியின் அச்சங்களைப் பற்றிய மனப்பான்மைகளை நீக்குதல், காதற்கலையினையும் யுக்தி முறையினையும் பற்றிய விளக்கம் தருதல், திருப்தியானதும் நம்பிக்கையாதுமான கருத்தடை முறைகளைப் பற்றிய

30. மால்—Moll

31. பாலுந்தல்—Sexual urge

ஏற்பாடுகளைச் செய்துகொள்ளல் போன்றவைகள் இத்துறையில் பெரிதும் பயன்படுவனவாக இருக்கலாம். மணமக்கள் இவற்றில் தங்கள் கருத்தினைச் செலுத்துவார்களாக.

கணவன் தன்னுடைய மனைவியை நன்முறையில் புரிந்து அன்னியோன்யத்தை ஏற்படுத்திக்கொள்ளுதல், நுட்பமாகவும் திறமையாகவும் அவளுடன் பழகுதல், அவளுடைய பால் துடிப்புகளைச் சிறப்பாகவும், கலையுணர்வுடனும் எழுப்பும் திறனை பெறுதல், தனிப்பட்ட முறையில் அவளுக்குத் திருப்தியளிக்கக்கூடிய காதலூடாட்டத்தையும் கலவி புரியும் முறைகளையும் கண்டறிதல் போன்ற செயல்களில் அவன் முக்கியமாகக் கவனத்தைச் செலுத்துதல் வேண்டும். மனைவியைப் பொறுத்த வரையில், அவள் தன்னுடைய இயற்கைக் கோளாறுகளைப் புரிந்துகொள்ளுதல், தன்னுடைய குறைபாடுகளை அறிந்து அவற்றைத் திருத்திக்கொள்வதன் அவசியத்தை உணர்தல் ஆகியவை மிகவும் முக்கியமானவை. சாதாரணமாகப் பெண்கள் தங்கள் கலவியைப் பற்றிக் கவலை கொள்வதில்லை என்றும், கலவி தங்கட்கு யாதொரு இன்பத்தையும் அளிப்பதில்லை என்றும் மிகத் திருப்தியுடனும் பெருமிதத்துடனும் அடிக்கடிச் சொல்லிக் கொள்ளுதல் வழக்கம். பாலுணர்ச்சி இன்மையை அவர்கள் சிறந்த ஒழுக்கப் பண்பு என்றும், ஆன்ம நேயச்சிறப்பு என்றும் கருதிக்கொள்ளுகின்றனர். இத்தகைய ஒரு மனப்பான்மையே அவர்களிடம் பால்தோல்வியினை[32] உண்டாக்குவதற்கு ஒருகாரணமாக அமைகின்றது என்பதை ஒவ்வொரு பெண்ணும் நன்கு உளங்கொள்ளுதல் வேண்டும். திருமண இணக்கம் நன்முறையில் அமைய வேண்டுமாயின், ஒருவர் மீது மற்றவரின் பால்துலங்கல் மிகமிக இன்றியமையாதது என்றும், பால்விருப்பமின்மை உடற்குறைவினையோ அல்லது போதுமான உள்ளக் கிளர்ச்சியின்மையையோ காட்டுகின்றதேயன்றி அது பெருமிதத்திற்கோ திருப்திக்கோ காரணமாகாதென்றும் ஒவ்வொரு பெண்ணும் நன்கு உணர்தல் வேண்டும். தன்னுடம் தக்க முறையில் பால்

32. பால் தோல்வி—Sexual failure

துலங்கல் இரரவிட்டால், தன்னுடைய கணவனின் விருப்பமும் குறைந்து போதல் கூடும் என்றும், தன்னுடைய நன்மையின் பொருட்டும் மணவாழ்க்கையின் இன்பத்தின் பொருட்டும் தானும் பால்துலங்களிலும் பாற்கவர்ச்சியிலும் அக்கறைக் கொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது என்றும் ஒவ்வொரு பெண்ணும் தெளிவாகப் புரிந்துகொள்ளுதல் வேண்டும்.

இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டுக் கூறுவேன். உண்மையிலேயே மனைவியின் பால் விருப்பம் தீவிரமாக இராதிருப்பினும், அவள் தான் கலவியில் அக்கறைகொள்ள வில்லை என்றோ, அல்லது தன்னிடம் பால்துலங்கல் இல்லையென்றோ தன் கணவனிடம் அடிக்கடித் தெரிவிக்க வேண்டியதில்லை; தெரிவிக்கவும் கூடாது. சில சமயங்களில் அவள் கலவியிலேயே அக்கறை கொள்வது போன்ற தூண்டலை மேற்கொள்வதும் நன்று; கலவியினையே தொடங்குவதில் ஊக்கம் காட்டுதல் சிறந்தது. இதனால் அவர்களிடம் சிறந்த திருமண இசைக்கம் ஏற்படுவதுடன், பாலுறவில் அவளுடைய கருத்தின்மையையும் படிப்படியாகத் திருத்திக் கொள்வதற்கும் இஃது ஒரு வழியாகவும் அமைகின்றது. மணமக்களிடம் திருமண உறவு சிறப்பாக அமைய வேண்டுமாயின் அவர்கள் இருவருடைய ஒத்துழைப்பும் ஒவ்வொரு படியிலும் மிகவும் வேண்டற்பாலது.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 37

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு.

நலன். நலன் தெரிவிக்க.

உச்ச நிலை உணர்ச்சி: இதற்கு முன்னர் எழுதிய கடிதங்களில் ஒன்றில் உச்சநிலை உணர்ச்சியைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? அதையும் பால்விருப்பமின்மையையும் ஒன்றாக நினைத்துக் குழம்பிக் கொண்டுள்ளாய் என்று உன் கடிதத்திலிருந்து அறிந்தேன். உச்சநிலை உணர்ச்சியை அடையும் திறன் பால்விருப்பமின்மையினின்றும் முற்றிலும் வேறுபட்டது. பால்விருப்பமின்மையையுடைய பெண், பால்விருப்பம் என்ற அநுபவத்தையே அறியாள்; அல்லது அவளிடம் பாற்செயல் யாதொருவித இன்ப உணர்ச்சியையும் எழுப்புவதில்லை. உச்சநிலை உணர்ச்சியை அடைய முடியாத பெண்ணிடம் பால் விருப்பமும் இருக்கும்; பாற்செயலின்பொழுது உணர்ச்சிகளும் தீவிரமாகவே இருக்கும். ஆனால், உணர்ச்சியின் உயர்நிலையை அவளால் காண முடிகின்றதில்லை. இதுவே இரண்டிற்கும் உள்ள வேறுபாடு என்பதை அறிக.

உச்சநிலை உணர்ச்சியை அடைய முடியாத நிலையும் பால் பொருத்தமின்மைக்கு மற்றொரு மூலகாரணமாகின்றது. சாதாரணமாகப் புணர்ச்சியின் முடிவு கூரிய காம உணர்ச்சிகளாலும் உச்சநிலை உணர்ச்சியை உண்டாக்கும் தசைகளின் சுருக்கங்களாலும் நிறைவு பெறுகின்றது என்பதை நீ நன்கு அறிவாய் எனினும், பெரும்பான்மையான பெண்கள் இந்த முடிவான நிலையை அடைதல் அரிது; என்றுமே அவர்கள் அந்நிலையை உணர்வதே இல்லை என்றுகூடச் சொல்லலாம். சில சமயம் இக்குறையும் திருமண மகிழ்ச்சியின்மைக்குக்

தம்பதிகளின் ஒற்றுமைக் கேட்டிற்கும் கொண்டு செலுத்தி விடுகின்றது என்பதையும் நீ உணர்தல் வேண்டும்.

உச்சநிலை உணர்ச்சித்திறனின்மை பெரும்பாலும் பெண்களிடமே காணப்பெறுகின்றது. இக்கூறினையுடையவர்கள் பல்வேறு கூறுகளில் குறையின்றிச் சாதாரணமாகவே காணப்பெறுகின்றனர். உச்சநிலை உணர்ச்சியிலும் பல்வேறு நிலைகள் உள்ளன. அது சாதாரணமாகச் சிறிதுகாலமாக நிலைத்து நிற்கும் உணர்ச்சியிலிருந்து மிகப் பெரிய உடல் அநுபவம் வரையில் தரத்திலும் உறைப்பிலும் காணப்பெறக்கூடிய ஓர் இன்ப உணர்ச்சியாகும். சில பெண்கள் ஒவ்வொரு கலவியிலும் திருப்தியான முறையில் உச்சநிலை உணர்ச்சியினை அடைகின்றனர். மற்றும் சிலர் மூன்று, நான்கு, அல்லது அதற்கு மேற்பட்ட புணர்ச்சிகளில் ஒரே தடவைதான் இவ்வுணர்ச்சியினைப் பெறுகின்றனர்; வேறு சிலர் இவ்வுணர்வினைப் பெறுதலே அரிது; இன்னும் சிலர் புணர்ச்சியில் திருப்தியடையினும் இந்த எல்லையை எட்டிப் பார்க்காத நிலையிலே உள்ளனர். இவ்வுணர்ச்சி நிலையைப் பெறும் பெண்கள் எத்தனைபேர் என்பதைப்பற்றி மேனாட்டார் ஆராய்ந்து பல புள்ளிவிவரங்களை வெளியிட்டுள்ளனர். அவற்றை டிக்கின்சன், ஹிமில்ட்டன்,[34] போன்றவர்கள் எழுதியுள்ள நூல்களில் காணலாம்.

அடைய முடியாமைக்குக் காரணங்கள்: பெரும்பாலான பெண்களிடம் உச்சநிலை உணர்ச்சி நிலையை அடையும் தன்மையிராததற்குரிய காரணம்பற்றி இன்னும் கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன சிலர் பெண்ணின் உச்ச நிலை உணர்ச்சி எங்கும் காணப்பெறும் ஒரு செயல் அல்லவென்றும், புணருங்கால் பொதுவாகப் பெண் பிராணிகளிடம் இவ்வுணர்ச்சியே காணப்பெறுவதில்லை என்றும் கூறுகின்றனர். இவ்வுச்சநிலை உணர்ச்சியின் மறிவினை ஒரு சிறப்

33. டிக்கின்ஸன்—Dickinson
34. ஹிமில்ட்டன்—Himilton

பான மானிடப் பண்பு என்றும், அஃது உயிரியில் ஆழ்ந்து பதிந்திராததால் அதில் பல்வேறு மாற்றங்களும் இயல் பிகந்த நிலைகளும் காணப்பெறுகின்றன என்றும் அவர்கள் கருதுகின்றனர்: எனினும், சில மருத்துவ நிபுணர்கள் இந்நிலை சிலரிடம் காணப்பெறுமைக்குச் சில பிரத்தியேக மான உடல், உள்ளக்கிளர்ச்சி பற்றிய காரணங்கள் இருப்ப தாகக் கூறியுள்ளனர். அவற்றை ஈண்டு உனக்கு விளக்குவேன்.

உடல்பற்றிய காரணம் பெண்களின் பிறப்புறுப்புகளில் காதல் சார்ந்த உணர்ச்சிகளை எழுப்பவல்ல இடங்கள் அமைந்திருப்பதைப் பொறுத்துள்ளது. பெரும்பாலும்பெண் களின் காம உணர்வு எல்லைகள் யோனிலிங்கத்திலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் அமைந்துள்ளன என்பதை ஏற்கெனவே உனக்கு விளக்கியுள்ளேன். பாலுறவுகள் ஏற் படுவதற்கு முன்னர் இந்தப் பிறப்புறுப்புகளைக் குறிப்பாக யோனிலிங்கத்தைத் தூண்டிப் பெண்கள் காம இச்சையில் திருப்தியடைகின்றனர் என்பதையும் நீ நன்கு அறிவாய். இளமையிலும் முன்-குமரப் பருவத்திலும் இப்பகுதிகளைத் தானகத் தூண்டுவதனலும், பால்விளையாட்டில் இப்பகுதி தூண்டப் பெறுவதனலும் காம உணர்வுகள் யாவும் மேலும் இப்பகுதிகளிலேயேதிரளுகின்றன. பின்னர், பாலுறவுகளைத் தொடங்கியதும் ஆண்குறி யோனிக்குழலின் சுவர்களில் உராய்வதால் காம உணர்ச்சிகளை அடையலாம் என்று எதிர் பார்க்கப் பெறுகின்றது. ஆனல், பெரும்பாலான பெண்களி டம் யோனிக்குழல் காம உணர்வுடையதாக அமையவில்லை. பால் வாழ்க்கை முற்றிலும் நன்முறையில் அமைந்த பிறகும் கூட பாலுணர்ச்சிகள் யோனிலிங்கப் பகுதியிலேயே திரண்டு கிடக்கின்றன. இதனல்தான் பெரும்பாலான பெண்கள் பிறப்புறுப்புகளைத் தூண்டுவதனலேயே எளிதாக உச்சநிலை உணர்வினை அடைகின்றனர். ஆனல் அவர்கள் யோனிக்குழலின் மூலம் உச்சநிலை உணர்ச்சியினை அடையவே முடியாது; இணைவிழைச்சின்மூலம் சிறிதேனும் அவர்கள் திருப்தியை எய்துவதில்லை. யோனிக் குழலின் சுவர் களிலிருப்பதைவிட யோனிலிங்கத்திலும் சிறிய உதடுகளி

லும் மிக்க உணர்வுடைய நரம்பு முடிகள் அமைந்திருப்ப தால் இணைவிழைச்சின்போது இப்பகுதிகளைத் தூண்டுவதனு லேயே பெரும்பாலும் காம உணர்ச்சி முழுமை அடைந்து விடுகின்றது.

ஆனுல், பொதுவாக இணைவிழைச்சின்பொழுது நேர் முறையிலோ அல்லது தேவையான அளவிலோ யோனி லிங்கம் தூண்டப் பெறுவதில்லை. மானிடப் பெண்ணிடம் காணப்பெறும் இயல்பிகந்த தன்மைகளுக்கு இதுவும் ஒரு காரணமாகும் என்று மருத்துவ நிபுணர்கள் கருதுகின்றனர். படம்—52ஐ உற்று நோக்கிஞல்[35] யோனிக்குழல் வாயின் சுமார் ஓரங்குல உயரத்தில் யோனிலிங்கம் அமைந்திருப்பது தெரியவரும். இதனுல்தான் கலவியின்பொழுது ஆண்குறி யோனிலிங்கத்தின்மீது படுவதற்கே வாய்ப்பு இல்லாது போகின்றது. ஆனுல், ஆண்குறி ஆழமாக நுழையும் பொழுது யோனிலிங்கத்தின்மீதும் அதனைச் சுற்றியுள்ள பகுதியின்மீதும் வெளிப்புற அழுக்கம் ஏற்படலாம்; ஆண் குறி ஆழமாக நுழையாததனுல்தான் பெரும்பாலான இளம் பெண்களிடம் திருமணத் தொடக்கத்தில் நடைபெறும் புணர்ச்சிகளின் பால்துலங்கல் ஏற்படுவதில் சங்கடங்கள் நேரிடுகின்றன. மேலும், இருபாலாரின் உறுப்புகளும் நெருங்கி இணைவதற்கு வழியில்லாமலும் போகின்றது.

யோனிக்குழலின் வாய்க்கும் யோனிலிங்கத்திற்கும் இடைப்பட்ட தூரமும் ஒரு தனிப்பட்ட பெண் உச்சநிலை உணர்ச்சியை அடைவதற்கு ஒரு காரணமாக அமையலாம். என்றும் தோன்றுகின்றது. யோனிலிங்கம் மிக உயரத்தில் அமைந்து யோனிக்குழலின் வாயிலிருந்து அதன் தூரம் அதிக பட்டால், அதனைத் தொடும் வாய்ப்பு குறைவாகின்றது. அதனுல் திருப்தியான உச்சநிலைஉணர்ச்சியை அடைவதிலும் சங்கடம் அதிகமாகின்றன. அண்மைக் காலத்தில் யோனிக் குழலின் வாய்க்கும் யோனிலிங்கத்திற்கும் இடைப்பட்ட

35. இந்நூல் பக்கம்—398

தூரத்தை அளந்து அஃது அரை அங்குலத்திலிருந்து இரண்டரை அங்குலம் வரையிலும் இருப்பதாகவும் சராசரி தூரம் ஒன்றரை அங்குலம் என்றும் கண்டுள்ளனர்; எனிதில் உச்ச உணர்ச்சியை எய்தும் பெண்களிடம் இத்தூரம் குறைவாக உள்ளது என்றும் அவர்கள் கூறுகின்றனர். எனினும், உச்சநிலை உணர்ச்சியில் பங்குபெறும் வேறு உடல், உளக் கூறுகளையும் பொறுத்தே இதனை அறுதியிடல் வேண்டும் என்ற எச்சரிக்கையையும் அவர்கள் தந்துள்ளனர்.

இனி, உள்ளக்கிளர்ச்சிபற்றிய கூறுகள் எங்ஙனம் உச்ச நிலை உணர்ச்சியில் பங்கு பெறுகின்றன என்பதையும் ஒரு சிறிது விளக்குவேன்: ஏற்கனவே வேறு முறைகளில் பால் பொருத்தமின்மைக்குக் கூறிய காரணங்கள் அனைத்தையும் ஈண்டு மீண்டும் நினைவு கூர்க. பிறப்புறுப்பு வலிப்பிலும் பால் விருப்பமின்மையிலும் கொண்டுசெலுத்தக்கூடிய உளக் கூறுகள் அனைத்துமே உச்சநிலை உணர்வுத் திறனின்மையை விளைவித்தல்கூடும். தவறான முறையில் பால் போதனை, உள் தடைகள், அடக்கு முறைகள், அச்சங்கள், கவலைகள் யாதாவது ஒருவித பால் அதிர்ச்சிகள்[36] குழவிப் பருவப் பிடிப்புகள்[37], ஒரு பால் (homo sex) கவர்ச்சி போன்ற பாக்விலைகள்—ஆகியவற்றுள் ஏதாவதொன்று உச்சநிலை உணர்ச்சித் துலங்களில் சங்கடங்களை விளைவித்தல் கூடும். உச்சநிலை உணர்ச்சியினை அடைய முடியாத நிலை, பால் தழுவலுக்கு நனவிலி முறையில் முற்றிலும் சரண் அடை ஒப்புக்கொள்ளாத நிலையினை உணர்த்துகின்றது என்று உளவியலார் கருதுகின்றனர்.

ஒரு பெண்ணின் உடலைச் சோதித்து அவளுடைய பால் துலங்களின் திறனை அறுதியிடல் முடியாது. உடற் சோதனைகளால் இதனை முற்றிலும் அறிந்து கொள்ளவும் இயலாது. யோனிலிங்கம் அல்லது அதன் கவசத்தின் அளவு, அதன் கனம், அல்லது சிறிய உதடுகளின் அளவு, அவற்றின் கனம் போன்றவை பால் உணர்ச்சியை எழுப்பும்

36. பால் அதிர்ச்சிகள்—Sexual shocks

37. குழவிப் பருவப் பிடிப்புகள்—Infantile fixations.

திறனுக்கு அறிகுறியாக இருக்கலாம்: ஆனால், கலவியின் பொழுது ஒரு பெண் உச்சநிலை உணர்ச்சியினை அடைவாள் அல்லது அடையாள் என்பதனை உணர்த்தக்கூடிய எந்த விதமான உடல்பற்றிய அறிகுறிகளும் இல்லை. ஒரு பெண்ணின் பாலுறவில் எதிர் வினை புரியும் திறனின்மை உடல் பற்றிய திட்டமான இயல்பிகந்த எந்தவிதத் தன்மையுடனும் மிகவும் அரிதாகாகவே தொடர்பு கொண்டுள்ளது என்பதை நீ நன்கு அறிந்து கொள்ளவேண்டும்.

இன்னொரு உண்மையையும்ஈண்டு நீ அறிதல்வேண்டும். பெரும்பாலான பெண்கள் திருப்தியான முறையில் உச்ச நிலை உணர்ச்சியை அடைய முடியாததற்குக் கணவனின் பால் குறைவுடைமையே[38] காரணமாக அமைகின்றது. சாதாரணமாக ஒரு பெண்ணின் பால்–எதிர்வினை புரியும் செயல் ஆணின் பால் - எதிர்வினை புரியும் செயலைவிட மிகவும் மெதுவாகவே நடைபெற்று வருகின்றது. அஃதாவது, அவளிடம் காமஇச்சையை எழுப்புவதற்கும் அவள் உச்சநிலை உணர்ச்சியை அடைவதற்கும் அதிகக் காலம் ஆகின்றது. கணவன் பாலுறவினைத் தன்னுடைய பாலுந்தலைத் தணித்துக் கொள்ளும் முறை என்று கருதினாலும், பாலுறவிற்கு முன்னதாகத் தன்னுடைய துணைவியின் விழைவுகளை எழுப்புவதற்கு முயலாவிடினும், அல்லது ஆண் குறி விறைத்தல் நிலை அவனிடம் குறுகிய கால அளவே நீடித்து அவன் அதிக விரைவில் உச்சநிலை உணர்ச்சியை அடைந்தாலும், புணர்ச்சிக்கு முன்னர்த் தன் மனைவியும் உச்சநிலை உணர்ச்சியை அடைவதற்குத் துணை புரிவதற்கேற்றவாறு தூண்டப்பெறாத நிலையினைவிளைவித்தல் கூடும். சில சமயம் ஒரு பெண் ஓர் ஆடவனிடம் முற்றிலும் துலங்குவதற்கும், ஆயினும் அவள் பிறிதொருவனிடம் அங்ஙனம் துலங்குவதில் தவறுவதற்கும் இதுவும் ஒரு காரணமாக அமைகின்றது என்பதையும் நீ உணர்தல் வேண்டும். எனினும், கணவனது பால்வன்மை அல்லது திறன்

---

38. பால் குறைவுடைமை—Sexual inadequacy.

மட்டிலுமே பெண்ணின் உச்சநிலை உணர்ச்சித் துலங்கலுக்குரிய பிரச்சினை அல்லவென்று ஒரு சில மருத்துவ நிபுணர்கள் கருதுகின்றனர். கணவன்மாரின் ஆண்மை சராசரி நிலைக்கு அதிகமாக இருந்தும், புணர்ச்சிக்கு முன்னர் நீண்ட நேரம் காதலூடாட்டத்தை மேற்கொண்டும், கலவி புரிவதை நெடுநேரம் நீட்டியும்கூட உச்சநிலை உணர்ச்சியை அடைய முடியாத மனைவிமார் இருத்தலைக்கொண்டு வேறு உடல், உளக்கூறுகள் இந்நிலைக்குக் காரணங்களாக இருத்தல் வேண்டும் என்று அவர்கள் கருதுகின்றனர்.

பெரும்பாலான ஆடவர்கள் கலவியின்பொழுது ஒரு பெண் முழுமையாகத் துலங்காதிருப்பது அவள் தங்கள்மீது அன்பற்றிருப்பதற்கு ஓர் அறிகுறி என்று கருதுகின்றனர். ஆனால், அண்மையில் மேற்கொள்ளப் பெற்ற ஆராய்ச்சிகளால் உச்சநிலை உணர்ச்சியை அடையும் திறனின்மை எந்த விதத்திலும் அன்பின் குறைவினையோ கவர்ச்சின்மையையோ உணர்த்தவில்லை என்பதை நீ அறிதல் வேண்டும். ஒரு பெண் மிகவும் உண்மையாகவும் அதிகமாகத் தன் கணவன்மீது பற்றுடையவளாகவும் இருக்கலாம்; ஆயினும் அவள் அவனுடன் மேற்கொள்ளும் பாலுறவுகளில் ஆழ்ந்த திருப்தியை அடைய முடியாதவளாகவும் இருக்கலாம். பெரும்பாலான எண்ணிக்கையில் பெண்கள் கலவியில் பெறும் இன்பத்தைவிடக் கலவிக்கு முன்னர் மேற்கொள்ளப் பெறும் காதலூடாட்டத்தில் அதிக இன்பத்தை அடைகின்றனர். ஆகவே அவள் கலவியில் உச்சநிலை உணர்ச்சியை அடைவதில் தவறுவது எவ்விதத்திலும் தன் கணவன் மீது குறைவான அன்பையோ கவர்ச்சியையோ அவள்கொண்டுள்ளாள் என்பதற்கு அறிகுறியன்று என்பது உணரத்தக்கது.

உச்சநிலை உணர்ச்சியின்மையின் விளைவுகள்: ஒரு பெண் உச்சநிலை உணர்ச்சியை அடையத் தவறினால் அஃது அவளுடைய உடல் நலத்தைப் பாதித்தல் கூடுமா என்று நீ வினவலாம். கூறுவேன்; ஒரு பெண் தீவிரமான உணர்ச்சியை அடையமுடியாவிட்டாலும், அவள் கலவியினால் பெரிதும்

திருப்தியடைதல் கூடும் என்பதை உனக்கு வற்புறுத்த விரும்புகின்றேன். ஒரு சில பெண்கள் உரையாடலின் மூலமோ அல்லது ஒரு நூலின் மூலமோ அறியும்வரை, உச்சநிலை உணர்ச்சி இன்னதென்பதையே அறியாதிருப்பது கண்கூடு; அதன் பிறகுதான் அவர்கள் தம் கலவியநுபவங்களால் அடையமுடியாத முழு மன நிறைவைப்பற்றிக் கவலைப்படுகின்றனர். இலக்கியங்களில் வரும் உச்சநிலை உணர்ச்சியைப் பற்றிய வருணனைகள் யாவும் குறிக்கோள் நிலையைக் குறிப்பிடுவனவேயன்றி உண்மை நிலையைக்குறிப்பிடுவ தில்லை என்பதையும் நீ உணர்தல் வேண்டும். அவை ஆடவர்களையும் மகளிர்களையும் அநுபவத்தில் காணமுடியாத உணர்ச்சியினைப் பெறுதல் வேண்டும் என்ற எண்ணத்தில் கொண்டு செலுத்துகின்றன.

தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.[39]

தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.[40]

வீழும் இருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.[41]

என்ற குறள்மணிகளில் குறிப்பிடப்பெறும் அநுபவங்கள் யாவும் குறிக்கோள் நிலையினவே. உச்சநிலை உணர்ச்சியைத் தான் வள்ளுவப் பெருந்தகை 'முயக்கு' என்று குறிப்பிடுகின்றார் என்று கருதலாம். "ஆனந்த வெள்ளம்'[42] என்று மணிவாசகப் பெருமாள் குறிப்பிடுவதும் இதுவே என்க. இப்பாடல்களைப் படிக்கும் ஆடவரும் மகளிரும் அத்தகைய அநுபவங்களை எதிர்பார்ப்பது இயல்பே; ஆனால் ஒரு சராசரி ஆடவரிடமோ, அல்லது மகளிரிடமோ இத்தகைய அநுபவங்களை எதிர்பார்த்தல் முயற்கொம்பாகும்.

39. குறள்—1103.
40. குறள்—1107.
41. குறள்—1108.
42. திருக்கோவையார்—307.

உண்மையிலேயே ஒரு பெண்ணிடம் உச்சநிலை உணர்வின்மை இருக்குமாயின், அதன் விளைவு அப்பெண்ணின் காம இச்சையின் தீவிரத்தையும் அவள் பால் துலங்கல் எய்தும்பொழுது பெற்ற துடிப்பின் அளவினையும் பொறுத்தது; அவளது பால்துடிப்பு தீவிரமாக இராவிடினும், அவள் சிறிதளவே தூண்டப்பெற்றாலும், உச்சநிலை உணர்ச்சியின்மை அவளிடம் யாதொரு தீயவிளைவுகளையும் உண்டாக்குதல் இல்லை. ஆனால், அவள் மிக அதிகமாகத் தூண்டப்பெற்றால், உச்சநிலை உணர்ச்சியை எய்தமுடியாதநிலை அவளிடம் மனமுறிவினை விளைவித்துவிடும். இதனால் அவள் உடல்நிலைக் குலைவையும் உளநிலைக்குலைவையும் அடைய ஏதுவுண்டு. காமக்கிளர்ச்சி ஏற்படுங்கால், பால் உறுப்புகளில் குறிப்பிடத்தக்க உறுப்பு சார்ந்த[43] நெருக்கடியும் பொதுவாக உடல், உள இறுக்கங்களும் விளையும். கலவி முடியுங்கால் உச்சநிலை உணர்ச்சியை எய்தியதும் படிப்படியாக ஒருவித விடுதலையும் அதன் பிறகு மனநிறைவும் இளைப்பாறலும்[44] நேரிடுகின்றன. எனினும் உச்சநிலை உணர்ச்சி ஏற்படவில்லையாயின், இந்த விடுதலை யுணர்ச்சி முற்றுப்பெறுவதில்லை. சிறிதுநேரம் பெண்ணும் திருப்தியற்று அமைதியற்ற நிலையிலிருப்பாள். அடிக்கடி இத்தகைய நிலை ஒருத்தியிடம் ஏற்பட்டால் அஃது உடல், உளக்குலைவுகளில் கொண்டு செலுத்தும் என்பது ஒருதலை. சிலப்பெண்கள் வலிப்பு நோய் போன்ற நரம்புக்கோளாறுகளால் தொல்லைப்படுவதற்கு இந்நிலையும் ஒரு காரணமாகின்றது.

ஒருபெண் உச்சநிலை உணர்ச்சியை அடையும் திறனுக்கும் அவளது கருத்தரிப்பிற்கும்[46] தொடர்புள்ளதா என்று நீ வினவியிருந்தாய். இத்துறையில் ஆராய்ந்த மருத்துவ நிபுணர்கள் யாதொரு தொடர்பும் இல்லை என்ற முடிவுக்கே

43. உறுப்பு சார்ந்த—Local
44. இளைப்பாறல்—Relaxation
45. வலிப்பு நோய்—Hysteria
46. கருத்தரிப்பு—Fertility

வந்துள்ளனர். பெண்ணைப் பொறுத்தவரையில் உச்சநிலை யுணர்ச்சி என்பது உயிரியல் அடிப்படைத் தேவையன்று. இனப் பெருக்கத்திற்கு இவ்வுணர்ச்சி ஆணிடம் அவசியம் உண்டாதல் வேண்டும்; இந்த உச்சநிலை உணர்ச்சி ஏற்படும் பொழுதுதான் விந்துப் பாய்மம் பிறப்புறுப்புப் பாதையில் பாய்ச்சப்பெறுகின்றது; விந்துப் பாய்ச்சலின்றி ஆணின் விந்தணுக்கள் பெண்ணின்முட்டையணுவை அடையமுடியா தென்பதை நீ நன்கு அறிவாய். பெண்ணிடம் உச்சநிலை நிலை யுணர்ச்சி இத்தகைய உயிரியல்பற்றிய பங்குபெறுவதில்லை. உச்சநிலையுணர்ச்சியின் பொழுது அவளிடமிருந்து பிரத்தி யேகமான பாய்மம் ஒன்றும் வெளிப்படுவதில்லை; மனித இனத்தில் உச்சநிலை உணர்ச்சியைப் பொறுத்து சூற்பையிலி ருந்து முட்டை வெளிப்படுதல் இல்லை. கலவி முற்றுப்பெறும் நிலையில் பெண்ணின் கருப்பை சுருங்கி விரிகின்றது என்றும் இச்செயலால் அது விந்துப் பாய்மத்தை உறிஞ்சி உள்ளுக்கி ழுக்கின்றது என்றும், ஆகவே, உச்சிநிலையுணர்ச்சி கருத்தரிப் பிற்குத் துணைபுரிகின்றது என்றும் ஒரு சிலர் கருதுகின்றனர். இதுகாறும் இதைபற்றி யாதொருவிதமான சான்றும் கண் டறியப் பெறாததால் இது வாதத்திற்குரிய செய்தியாகவே உள்ளது. உச்சநிலை உணர்ச்சியின்றியே பெண்கள் கருவுறு கின்றனர் என்று மருத்துவ நிபுணர்கள் ஆராய்ந்து கண்டுள் ளனர்.

சமாளிக்கும் முறைகள்: உச்ச உணர்ச்சியை அடைய முடியாத பெண்ணின் நிலையை எங்ஙனம் சமாளிக்கலாம் என்பதைக் கூறுவதுடன் இக்கடிதத்தை முடிப்பேன். பெரும் பாலும் இது பெண்ணிடம் காணப்பெறும் குறையின் இயல் பையும் அதன் காரணத்தையும் பொறுத்தது. கணவனின் கலவி புரியும் முறையிலும் திறனிலும் குறையிருப்பின், அதனை அவன் முதலில் திருத்திக் கொள்ளல் வேண்டும். பெண்ணிடம் பாலைப்பற்றிய தவறான மனப்பான்மை குடி கொண்டிருந்தால், முதலில் அவளிடமுள்ள உள்தடைகளை[47]

[47] உள்தடைகள்—Inhibitions

யும் நனவு முறையிலும் நனவிலிமுறையிலும் அவளிடம் அமைந்து கிடக்கும் அச்சங்களையும் களைவது அவசியமாகின்றது. சில பெண்களிடம் ஹார்மோன் சிகிச்சை பயன் தருதல் கூடும்; சுரப்பிக் கோளாறுகள் உள்ளவர்களிடமே இதனை மேற்கொண்டால் பயனளிக்கும். இந்நிலையைச் சமாளிப்பதில் மருத்துவருடைய திறமை பெரும்பங்கு பெறுகின்றது என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

கணவன் மனைவியை அணுகும் முறையைப்பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளவற்றையெல்லாம் ஈண்டு நினைவு கூர்க. பாலுறவு கொள்வதற்குமுன் காதலூடாட்டமும் மனைவியைத் தூண்டி அவளிடம் புணர்ச்சித் துடிப்பும் அவசியம் உண்டாக்க வேண்டும் என்பதை என்றும் நினைவிருத்துதல் வேண்டும். மனைவியிடம் காமக்கிளர்ச்சியும் புணர்ச்சித் துடிப்பும் நன்கு ஏற்படாதவரையில் கணவன் தன் குறியை யோனிக்குழலில் நுழைத்தல் கூடாது. அன்றியும், அவன் இயன்றவரை புணர்ச்சியையும் நீடித்து மனைவியும் முழுமையாகத் துலங்குவதற்கு வாய்ப்பினை நல்குதல் வேண்டும்.

முன்னொருகடிதத்தில் வாத்ஷ்யாயனர் கண்டறிந்துள்ள பல்வேறு புணர்ச்சி நிலைகளையும் அவற்றின் இன்றியமையாமையையும் குறிப்பிட்டேன் அல்லவா?[48] அவற்றுள் யாதாவது பொருத்தமானவற்றைத் தேர்ந்தெடுத்து மேற்கொண்டு இவ்வாய்ப்பினை நல்கலாம். சில பெண்களிடம் பாலுறுப்புகளின் அமைப்பில் இயற்கையிலேயே அமைந்துள்ள கோளாறுகளின் காரணமாக இயல்பாக யாவரும் மேற்கொள்ளும் புணர்ச்சிநிலை பொருந்தாமல் இருக்கலாம்; ஒரு குறிப்பிட்ட புணர்ச்சிநிலை சௌகரியமாக அமைந்து மனைவியிடம் நல்ல பால்துலக்கம் ஏற்படலாம். தம்பதிகள் தமக்குள்ளே கலந்துயோசிப்பதில் யாதொரு தயக்கமுமின்றி தமக்குப் பொருத்தமான பால் விளையாட்டு வகைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வேண்டும். தம்முடைய

48. இந்நூல் பக்கம்—404

தேவைகளுக்கேற்பவும் விருப்பங்களுக்கேற்பவும் பால் யுக்தி முறைகளை அடிக்கடி மாற்றியும் சோதித்தும் தமக்குப் பொருந்தக்கூடியவற்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

பெரும்பாலான பெண்களிடம் உணர்ச்சித் துடிப்புகள் யாவும் யோனிலிங்கத்திலும் அதனைச் சுற்றியுள்ள இடத்திலுமே செறிந்திருப்பதால், அவர்கள் இணைவிழைச்சினால் உச்சநிலை உணர்ச்சியை அடைய முடியாது போயினும், யோனிலிங்கப் பகுதியை நேர் முறையில் தூண்டிவிடுவதால் அந்த உணர்ச்சியைப்பெறமுடிகின்றது. இந்நிலையினையுடைய பெண்ணிடம் தேவையானால் புணர்ச்சி நடைபெறும் பொழுதோ, அல்லது தான் உச்சநிலை உணர்ச்சியை அடைந்த பிறகோ கணவன் நேர்முறையில் யோனிலிங்கத்தைத் தூண்டுவது மிகவும் இன்றியமையாதது. புணர்ச்சியில் உச்சநிலை உணர்ச்சியை அடைய முடியாத நிலையை வாளா விட்டு விடுவதைவிட இம்முறையினால் அதனை எய்துவித்து மனைவியிடம் ஏற்படக்கூடிய மனமுறிவினைத் தடுப்பது மிகவும் சிறந்தது; இன்றியமையாது செய்யப்பெற வேண்டுவது.

மேற்கூறிய முறையை மேற்கொள்வது தவறு அன்று; வேண்டுமென்றே தவறான பாதையில் செல்லுவது என்றும் கருதுதல் வேண்டாம்: நேரிய முறையில் இணைவிழைச்சின் மூலம் பெறும் இன்பத்திற்குப் பதிலாகக் காம இச்சையை விளைவிக்கும் பால் விளையாட்டினை மேற்கொண்டு பெறும் இன்பம் தவறுடையதேயன்றி, நேரிய முறையில் மேற்கொள்ளும் இணைவிழைச்சு இன்பத்தை முற்றுப் பெறச் செய்வதற்கு இம்முறையினை மேற்கொள்வது எவ்விதத்திலும் தவறாகாது; இயல்பிகந்த செயலுமாகாது. இதற்கு மேலும் ஒன்று கூறுவேன்: கணவன் மனைவியரிடையே பால் பொருத்தமும் பால் இணக்கமும் ஏற்படுவதற்கு மேற்கொள்ளும் எந்த விதமான பால் பயிற்சியிலும் தவறில்லை என்பதே பல மருத்துவ நிபுணர்களின் கருத்தாகும்; இம்முறையில் கலைநுட்பங்களும் கலை மதிப்புகளும் பறிபோகா வண்ணம்

விழிப்புடன் இருக்க வேண்டுவது மிகவும்இன்றியமையாதது. இம்முறையெல்லாம் தனிப்பட்ட தம்பதிகளின் தீர்மானத்தையும் அவர்கள் ஒருவரையொருவர் புரிந்து கொள்ளும் தன்மையையும் பொறுத்தது. அன்பாலும் ஏனைய பண்புகளாலும் பிணிக்கப்பெற்றிருக்கும் தம்பதிகள் தமக்குப் பொருத்தமான எதனையும் மேற்கொள்வதில் சிரமம் ஒன்றும் இல்லை; அங்ஙனம் மேற்கொள்வதால் தவறும் இல்லை.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 38

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விளைக.

இதுகாறும் எழுதிய மூன்று கடிதங்களில் பெண்களிடம் காணப்பெறும் பால் பொருத்தமின்மைகளையும் அவற்றை நீக்கும் முறைகளையும் ஓரளவு விளக்கினேன். இத்தகைய நிலைமைகள் ஆண்களிடம் காணப்பெறவில்லையா என்று வினவியிருந்தாய். கூறுவேன்; பாலுந்தலிலும் பால் திறனிலும் ஆண்களிடம் விரிந்த நிலையில் வேறுபாடுகள் காணப்பெறுகின்றன சில ஆடவர்கள் தீவிரமான பால் தேவைகளைப் பெற்றுள்ளனர்; அவர்கள் அடிக்கடி கலவியில் விருப்பமுங் கொள்ளுகின்றனர். வேறு சிலரிடம் பால்விருப் பமே காணப்பெறுவதில்லை. இவர்கட்கிடைப்பட்டவர் களிடம் பல்வேறு அளவு நிலைமைகளைக் காணலாம். கின்ஸே என்ற அறிஞரின் கருத்துப்படி முப்பது வயதிற்குக் கீழுள்ள வர்கள் இணைவிழைச்சு மூலமோ வேறு முறையிலோ ஒரு வாரத்தில் சராசரி 3·3 தடவைகள் விந்துப் பாய்மத்தை வெளிப்படுத்துகின்றனர். இதே வயதுள்ள ஒரு சிலர் ஒரு வாரத்தில் ஒருதடவைக்குக் குறைந்தே விந்துவினை வெளி யேற்றுவதையும் காணலாம் என்று அவர் காட்டுகின்றார். மற்றும் சிலர் ஒரு வாரத்தில் ஏழு அல்லது அதற்கு மேற் பட்ட தடவைகளில் விந்துவினை வெளியேற்றுகின்றனர் என்றும் அவர் கூறுகின்றார். இந்த அளவு எண்கள் வயது, திருமண நிலை, சமூக நிலை, கல்வி நிலை, உடல் நிலை முதலிய வற்றிற்கேற்ப மாறுபடுகின்றன என்பதையும் அவர் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

**ஆண்களின் பால்விருப்பமின்மை:** பெண்களிடம் பால் விருப்பமின்மை பொதுவாக அதிகமாகக் காணப்பெறினும்

ஆண்களிடமும் இப்பண்பு தலைக்காட்டாமல் இல்லை. பல பெண்கள் தங்கள் கணவன்மாரிடம் பால் உணர்ச்சியற்ற தன்மையும்[49] காம இச்சையின்மையும் இருப்பதைக் காட்டியுள்ளதாக மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். சில பெண்கள் தம்மிடம் அவர்கள் அன்பற்று இருப்பதாகக் குறை கூறுவதுடன் அவர்கள் தம்மீது நம்பிக்கையின்றி இருப்பதாகவும் ஐயுறுவர். இவ்வாறு ஒரு சிலரிடம் ஒரு குறிப்பிட்ட துணைவியைப் பொறுத்துக் காணப்பெறும் உடல் விருப்பமின்மை காரணமாகப் பால்விருப்பமின்மை அமையினும், பெரும்பாலோரிடம் அஃது இயல்பாக அமைந்து கிடக்கும் குறைந்த அளவு பாலுந்தலின் காரணமாகவே ஏற்படுகின்றது. வேறு ஒருத்தியை மனைவியாக அவர்கள் ஏற்றுக்கொண்டாலும் அவளிடமும் இதே நிலையில்தான் அவர்கள் இருப்பர் என்பதற்கு ஐயம் ஒன்றுமில்லை.

ஆண்மைக் குறைவு: ஓர் ஆடவன் பால்விருப்பமின்மையுடனிருப்பின், அவனிடம் ஆண்மைக் குறைவும்[50] இருக்கும் என்ற நியதி இல்லை. பால்விருப்பமில்லா[51] ஆடவன் கலவியின் பொழுது வீரியமுள்ளவனாக இருக்கலாம்; கலவியையும் மிகத் திறமையாகப் புரியலாம். அவனிடம் பால்விடாய் இல்லாததால் அவன் பல வாரங்கள் அல்லது பல மாதங்கள் பால் மகிழ்ச்சியின்றியே[52] காலந்தள்ளலாம். ஆண்மைக் குறைவுள்ள ஆடவனிடம் தீவிரமான ஆர்வம் இருக்கும். அஃது அடிக்கடியும் நேரிடலாம். ஆனால், அவனால் தேவையான அளவு உறுதியான விறைத்தலை அடைய முடியாது; அல்லது பெண் குறியில் நுழைக்கும் கால அளவு வரை அவ்விறைத்தலை நிலைநிறுத்தவும் முடியாது. எனவே, ஓர் ஆடவ

---

49. பால் உணர்ச்சியற்ற தன்மை—Sexual apathy
50. ஆண்மைக் குறைவு—Impoteney
51. பால் விருப்பமில்லா—Sexullyf rigid
52. பால் மகிழ்ச்சி—Sexual gratifcation

னின் பால் தகுதி[53] அவனிடமுள்ள தீவிரமான பாலூந்தல்[54] திருப்திகரமான விறைத்தல் திறன், அவ்விறைத்தலைத் தேவையான காலஅளவுவரை நிலைநிறுத்தல் ஆகிய கூறு களைப் பொறுத்துள்ளது. பாலூந்தல் குறைவாக இருப்பி னும், விறைத்தலை மேற்கொள்ள முடியாவிடினும், அல்லது விரைவில் உச்சநிலை உணர்ச்சியை அடையினும், அந்த ஆடவனால் திருப்திகரமான பாலுறவுகளை மேற்கொள்ள இயலாது. திருமண வாழ்க்கையில் அவன் இன்பம்பெற முயல்வது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போலாகும்.

இன்று பெரும்பாலான ஆடவர்கள் தம்முடைய குறையை நன்கு அறிந்துகொள்ளாமலேயே திருமணம் புரிந்துகொள்ளுகின்றனர். திருமணத்திற்குப் பிறகும் சில ரிடம் பால் விருப்பமின்மையோ அல்லது ஆண்மைக் குறைவோ தோன்றலாம். திருமணத்திற்கு முன்னர் சாதா ரணமாக நல்ல பால் அநுபவங்களைக் கொண்டிருந்த ஆட வன் ஒருவன் திருமணத்திற்குப் பிறகு பல்வேறு உள, உள் ளக்கிளர்ச்சிபற்றிய காரணங்களால் தன் மனைவியுடன் பால் குறைவுடனிருப்பதைக் காணலாம். சில சமயம் ஓர் ஆடவன் தன்னிடம் பால் தகுதி முற்றிலும் இல்லையென்று நன்கு தெரிந்தும் தன்னுடைய இக்குறை திருமணத்தினால் நிறை வாகி விடும் என்ற நம்பிக்கையுடன் திருமணம் புரிந்து கொள்ளுகின்றான். இது மிகவும் கொடுமையான செயல் என்பதைச் சொல்லவும் வேண்டாம். ஆண்மைக் குறைவு இருப்பின் அதனைத் திருமணத்திற்கு முன்னரே குணப்படுத் திக்கொள்ள வேண்டுமேயன்றி திருமணம் அதற்கு மருந்து என்று நம்பிக்கை கொள்வது அறிவின்மையாகும். இத் தகைய நிலையில் திருமணத்தில் இறங்குதல் கூடாது; அதிலும் தனக்குத் துணைவியாக வர இருக்கும் பெண் தன் குறையை நன்கு அறிந்து அக்குறை யிருப்பினும் அவனைத் துணைவனாக

53. பால் தகுதி—Sexual competence
54. பாலூந்தல்—Libido

ஏற்றுக்கொள்வதற்கு ஒப்புக்கொள்ளும்வரை திருமணத்தில் ஈடுபடுதல் கூடாது இன்று மேற்புல நாடுகளில் வயது முதிர்ந்த ஆடவர்களும் பெண்களும் பால்கூறினையே கணக்கிற்கு எடுத்துக்கொள்ளாமல் நட்பிற்காகவும், 'இல்லம்' என்று ஒன்று ஏற்படுத்துவதற்காகவும் திருமணம் செய்து கொள்ளும் நிலை வேறு; மேற்குறிப்பிட்ட நிலைவேறு. இரண்டையும் வைத்து குழப்பிக் கொள்ளுதல் கூடாது. திருமணத்திற்கு முன்னர் தாம் பாலுறவுகொள்ள விரும்பினால் ஏற்படக்கூடிய சங்கடங்கள் அனைத்தையும் தம்பதிகள் நன்கு புரிந்துகொண்ட பிறகுதான் திருமணத்தில் இறங்க வேண்டும் என்பதை மிகவும் வற்புறுத்த விரும்புகின்றேன்.

**விரைவாக விந்து வெளிப்படுதல்:** இணைவிழைச்சு புரியும் கால அளவில் பல வேறுபாடுகள் உள்ளன என்பதை ஏற்கனவே உனக்கு விளக்கியுள்ளேன் அல்லவா? விந்துவை வெளிப்படுத்தாது நிலைநிறுத்தும் திறன் மனிதருக்கு மனிதர் வேறுபடுகின்றது என்பதையும் நீ அறிதல் வேண்டும். யோகத்தினாலும் பிற சாதனங்களாலும் விந்துவினை அடக்கும் முறைகளைப்பற்றிக் கேள்வியுறுகின்றோம் அல்லவா? சாதாரணமாக விறைத்த நிலையைப் பல நிமிடங்கள் நிலைநிறுத்தவேண்டும். ஆண்குறியை பெண்குறியில் நுழைத்த ஒன்று அல்லது இரண்டுநிமிடங்கள் வரையிலாவது—குறைந்தது பத்து, இருபது அல்லது அதற்கு மேற்பட்ட புணர்ச்சி இயக்கங்களை மேற்கொள்ளும்வரையிலாவது—விந்துவெளிப்படாதிருத்தல் வேண்டும். எனினும், சிலரால் இந்தக் காலம் வரைகூட விறைத்த நிலையை நிலைநிறுத்த முடிவதில்லை. அவர்கள் உச்சநிலை உணர்ச்சியை விரைவில் அடைந்துவிடுகின்றனர். இத்தகைய குலைவினால் தொல்லைப்படுகின்றவர்களிடம் ஆண்குறி பெண்குறியில் நுழைந்தவுடன் விந்து வெளிப்பட்டு விடுகின்றது. இன்னும் சிலரிடம் ஆண்குறி பெண் பிறப்புறுப்புகளைத் தொட்டவுடன் விந்து வெளிப்பட்டுவிடுகின்றது! இவர்களால் குறியை நுழைக்கவும் முடியாது. சாதாரணமாக புணர்ச்சியை மேற்கொள்ளவும் இவர்

கட்கியலாது. ஆண்களிடமுள்ள இக்குறையும் பால்பொருத்த மின்மைக்கும் திருமண இணக்கமின்மைக்கும் ஒரு முக்கிய காரணமாகின்றது என்பதை நீ நன்கு அறிந்துகொள்ள வேண்டும்.

**பால் விருப்பமின்மைக்குக் காரணங்கள்:** இனி, பொது வாக ஆடவர்களிடம் பால் விருப்பமின்மையும் ஆண்மைக் குறைவும் நேரிடுவதற்குரிய காரணங்களையும் அக்குறையை போக்கும் முறைகளையும் ஆராய்வேன். இக்காரணங்களை ஒவ்வொருவரிடமும் மருத்துவர்தான் கண்டறிதல்வேண்டும்; இக்குறை உடற்கோளாறுபற்றியதா அல்லது உளக் கோளாறுபற்றியதா என்பதை அவர்தான் அறுதியிடுதல் வேண்டும். அஃதாவது ஒரு குறிப்பிட்ட ஆடவனிடம் இயல்பாகவே பாலுந்தல் தாழ்ந்தநிலையிலுள்ளதா, அல்லது பால் முதிர்ச்சியின்மை, அநுபவமின்மை, அச்சம் அல்லது வேறு காரணங்களால் பாலுந்தல் உறங்கிய நிலையில் உள் ளதா என்பதை அவர் உறுதிப்படுத்துதல் வேண்டும். இக் காரணங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டுமாயின், விறைத்தலின் பொறிநுட்பத்தை[55] நன்கு அறிந்துகொள் ளல்வேண்டும். இச்செயலில் எந்தெந்த உறுப்புகள் பங்கு பெறுகின்றன என்பதை அறிந்துகொண்டால் உடல்பற்றிய ஆண்மைக்குரிய காரணங்களை அறிதல் எளிது.

விறைத்தல் நிகழ்வதற்கு முதலில் பாலுந்தல் இருக்க வேண்டுவது இன்றியமையாதது. புணர்தலில் விருப்பம் இல்லையாயின் விறைத்தல் நிகழாது. உடல் நலத்துடனிருப் பவர்களிடம் காதலூக்கம் முற்றிலும் இல்லாதிருத்தலைக் காணல் முடியாது. அத்தூண்டல் சிறிது காலத்திற்கோ அல்லது சற்று நீண்ட காலத்திற்கோ வன்மையற்றிருக்க லாம்; பெரும்பாலும் அளவுக்கு மீறிய உடல் உழைப்போ அல்லது மன உழைப்போ அந்நிலைக்குக் காரணமாக அமைய லாம்; பிறப்புறுப்புகளுடன் தொடர்பு கொள்ளாத நோய்

---

55. பொறிநுட்பம்—Mechanism

உடலையே சோர்வுறச் செய்வதனாலும் அது நேரிடலாம். தவிரவும் விறைத்தலுக்குப் பாலுந்தல் மட்டிலும்போதாது. தனியாள் தகுந்த மனப்பான்மையுடனும் இருத்தல் மிகவும் இன்றியமையாதது; அஃதாவது, அவர் காமத்துடிப்புடன் இருத்தல் வேண்டும். சாதாரணமாகப் பாலுணர்ச்சியுள்ள தனியாளிடம் அவர் ஒருகணிதப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதில் ஈடுபட்டிருக்குங்கால் விறைத்தல் நிகழாது என்பது வெளிப்படை.

சாதாரணமாகத் தழுவல், முத்தமிடல், அணைதல் போன்ற தொடுபுலத் துடிப்புகளாலும், காமத்துடிப்பினை விளைவிக்கும் பொருளையோ அல்லது காமத்திற்குக் காரணமான உடற்பகுதியினையோ காண்பதாலும், பெண்ணின் பேச்சினைக் கேட்பதாலும், அல்லது பெண் அணியும் மணமுள்ள பொருள்களின் மணத்தை முகர்வதனாலும் காமக் கிளர்ச்சி நிகழ்கின்றது. இக்கிளர்ச்சி முன் நிகழ்ச்சியின் நினைவுகளையும் புணர்ச்சியின் எண்ணங்களையும் நினைவு கூர்வதாலும் அல்லது கற்பனையில் காண்பதாலும் எழலாம். காமத்தை உண்டுபண்ணும் இலக்கியத்தைப் படிப்பதாலும் இஃது எழலாம். ஆயினும், மனத்தொல்லை, அருவருப் புணர்ச்சி அச்சம் போன்ற கூறுகள் காமக் கிளர்ச்சியைச் சிதைத்துவிடும்.

மனத்தில் எழும் காமக் கிளர்ச்சி மூளையிலிருந்து ஒரு குறிப்பிட்ட நரம்புகளின் வழியாக நடுநரம்பின் கீழ்ப் பகுதிக்கு அனுப்பப் பெறுகின்றது. இப்பகுதியில்தான் 'விறைத்தல் மையம்'[56] அமைந்துள்ளது. இந்த இடத்திலிருந்து ஆண்குறிக்குச் செல்லும் நரம்புகள் இத்துடிப்பினை ஆண்குறிக்குக் கொண்டு செல்லுகின்றன. இதனால் ஆண் குறியிலுள்ள பை போன்ற அறைகளில் குருதி நிரம்புகின்றது. ஒருவித தசைச் செயலால் இக்குருதி திரும்பிப் பாயாமல் அங்கேயே தங்குகின்றது. பை போன்ற அறைகள் மேலும் மேலும் குருதியை உறிஞ்சி ஆண் குறியின் பருமனை

56. விறைத்தல் மையம்—Erection-centre

அதிகரிக்கச் செய்வதுடன் அதனை உறுதியுடையதாகவும் செய்கின்றது பருமனும் உறுதியும் உயர்ந்த அளவு போகும் வரை குருதி பாய்ந்து கொண்டேயிருக்கும். புணர்ச்சியும்




படம்-33: சாதாரணமாக உடல், உள ஆண்மையினை விளக்குவது.

ஆண் குறியின் முனையிலுள்ள முடிவு நரம்புகளைத் துடிக்கச் செய்கின்றது. உச்சநிலை உணர்ச்சியும் விந்து வெளியேறுதலும் நடைபெறும் வரை இது தொடர்ந்து நிகழ்கின்றது. விந்துப் பைகளிலும் புராஸ்டேட் சுரப்பியிலும் உள்ள சில

தசைகள் சுருங்குவதனுல் விந்து வெளியேறுகின்றது. இச் செயல்களைப் படம் (படம்-53) விளக்குவதை உற்று நோக்கி உளங் கொள்க. எனவே, பால்விருப்பத்துடன் (1) காமக்




படம்-54: உடல், உள செயற்பாடு குறைகளினுல் ஆண்மை யின்மையை விளக்குவது.

கிளர்ச்சி, (2) துடிப்புகளைக் கொண்டு செலுத்துவதற்கு மூளையும் விறைத்தல்-மையப் பொறிநுட்பமும் சரியாகச்

சொற்படுதல், (3) நல்ல நிலையிலுள்ள ஆண்குறி ஆகிய மூன்று நிலைமைகளும் விறைத்தலுக்கு மிகவும் இன்றியமையாதவை என்பது பெறப்படுகின்றது. இவை மூன்றும் உடல் பற்றியவையாகும். மேற்கூறிய மூன்றிலும் உள்ள குறைகளால் விறைத்தல் நிகழா நிலையைப் படம் (படம்–54) விளங்குகின்றது. ஈண்டுக் காட்டப்பெற்றுள்ள இரண்டு படங்களையும் ஒப்பிட்டுப் பார்த்து உண்மை நிலைகளை அறிந்து கொள்க.

இனி, மேற்கூறிய மூன்று நிலைகளையும் ஒவ்வொன்றாக ஆராய்வேன். காமக் கிளர்ச்சி என்பது நம்முடைய புலன்கள் அல்லது நினைவு அல்லது கற்பனையால் தூண்டப் பெறும் ஒருவகை மனநிலை என்பதை நன்கு அறிவாய். இக்கிளர்ச்சி எழ வேண்டுமாயின் நம்முடைய குருதியில் தகுந்த அளவு ஹார்மோன்கள் பாய்தல்வேண்டும். இவை இல்லையெனில் காமக் கிளர்ச்சியே ஏற்படாது. மேலும் ஹார்மோன்களில்லையெனின், மூளை, விறைத்தல் மையம் இவற்றின் துடிப்பு நிலையும் குறைந்து விடுகின்றது. விரைகளில் ஏற்படும் நோய்களினால்மட்டிலும் ஹார்மோன் உற்பத்திக் குறைவு ஏற்படுகின்றது என்று சொல்வதற்கில்லை. ஆனால், பெரும்பாலும் அடித்தலைச் சுரப்பியும்[57] மாங்காய்ச் சுரப்பிகளும்[58] பாதிக்கப்படுங்கால் இக்குறை நேரிடுகின்றதாக மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். இக்குறை 'ஹார்மோன் ஆண்மை குறை' என்று வழங்கப்பெறுகின்றது. சுரப்பிபற்றிய குறையினால் ஏற்படும் ஆண்மைக் குறை சில சமயம் இனப் பெருக்கத்திறனின்மையிலும்[59] (இது ஒருவகை ஆண்மைக் குறை) கொண்டு செலுத்துகின்றது. இதனால் பாதிக்கப்பெறும் விரைகள் விந்தணுக்களை உற்பத்தி செய்யா. விரைகளுக்கு ஏற்படும் பல்வேறு வித ஊறுகளால்

57. அடித்தலைச் சுரப்பி–Pituitery gland.
58. மாங்காய்ச் சுரப்பி–Superarenal glands.
59. இனப் பெருக்கத் திறனின்மை - Incapacity to procreate (Impotentia Generandi).

(எ-டு. விரைகளின் நீக்கம், போரில் ஏற்படும் காயம்' வெள்ளை நோய், இருமல் நோய், மதுபானம் முதலியவை) ஆண்மைக் குறைவுநேரிடலாம். விரைகளின்றியும் சில ஆண் குழந்தைகள் பிறக்கின்றன என்றும் மருத்துவ இலக்கியத்தால் அறிகின்றோம்.

மூளையிலும் நடுநரம்பிலும் உள்ள விறைத்தல், மையங்களும் இணைக்கும் நரம்புகளும் நோய்களால் பாதிக்கப்பெறும் பொழுது உண்டாகும் ஆண்மைக் குறை மற்றொருவித ஆண்மைக் குறையாகும். மூளையில் ஏற்படும் பக்கவாதமும்[60], நடுநரம்பில் ஏற்படும் உடல் உருக்கி நோயும்[61] மேக நோயின்[62] பின் விளைவுகளாகும்.[63] இந்த இரண்டு நோய்களும் தோன்றுங்கால் அதிக அளவு ஆண்மையை விளைவித்து, பின்னர் ஆண்மையே இல்லாது செய்துவிடும் (இந்நோய்களையும் சிகிச்சை மூலம் குணப்படுத்திவிடலாம்). நரம்பு மண்டலம் முழுவதும் நோயினால் பாதிக்கப் பெறுங்கால் இணைக்கும் நரம்புகளும் பாதிக்கப் பெறும். சாராயம்[64] போபத்தினை விளைவிக்கின்றது: மார்ஃபைன், கொகைன், நிகோடைன் போன்ற நஞ்சுகளும் ஆண்மைக் குறைவினை விளைவிக்கும். நிகோடைனைப்பற்றி ஒரு ஃபிரெஞ்சு நாட்டுப் புதின ஆசிரியர் மிக அழகாகக் கூறியுள்ளார். ''புகையிலையும் பெண்களும் பகைவர்கள்; ஒன்றன் சுவை பிறிதொன்றன் சுவையைக் கெடுத்துவிடும்'' என்பது அவர் கூற்று; அதிகமாகச் சிறு சுருட்டு[65] பிடிப்பவர்களிடம் ஆண்மைக் குறைவு காணப் பெறுகின்றதென்றும், அப்பழக்கத்தை முற்றிலும் கைவிட்டால் ஆண்மை மீண்டும் நிறைவு பெறுகின்றது என்றும் மருத்துவ நிபுணர்கள் கண்

---

60. பக்கவாதம்-Paralysis.
61. உடல் உருக்கி நோய்-Tabes.
62. மேக நோய்-Syphilis.
63. பின்-விளைவுகள்-After-effects.
64. சாராயம்-Alcohol.
65. சிறு சுருட்டு-Cigarette.

டறிந்துள்ளனர். காய்ச்சலினால் நேரிடும் உடல்நலக் கேடும், நீரிழிவு நோயும், சிறு நீரக நோய்களும் ஆண்மையைக் குறைத்து விடுகின்றன.

மூன்றாவது வகை ஆண்மைக் குறைவு ஆண் குறியின் கோளாறுகளைப் பற்றியதாகும். சிலர் ஆண் குறியின்றியும், இன்னும் சிலர் இயல்பிகந்த முறையில் மிகச் சிறிய ஆண் குறியுடனும் பிறக்கின்றனர். இத்தகைய மனிதர்கள் மிகக் குறைவு. ஆண் குறியில் ஏற்படும் பல்வேறு வித ஊறுகளால் ஆண்மைக் குறைவு நேரிடுகின்றது.

பெண்களிடம் உள்ளது போலவே ஆண்களிடமும் உள்ளக்கிளர்ச்சிப் பற்றிய காரணங்களால் பால்விருப்பமின்மை அல்லது பால் திறனின்மை உண்டாகின்றது. குழந்தைப் பருவத்தில் நேரிடும் இக்கட்டுகள், தாயிடம் வைத்திருக்கும் அளவுக்கு மீறிய பற்று, பல்வேறு அச்ச வகைகள், கவலை வகைகள், உள்ளக்கிளர்ச்சிப் போராட்டங்கள், நரம்பு நோய் பற்றிய அறிகுறிகள் 'உறங்கிய நிலையிலுள்ள ஒரு பால்-புணர்ச்சி இயல்பு[66]—ஆகியவைபோன்ற உளக் கூறுகள் ஆடவனின் பால் வெறுப்பிற்கு அல்லது பால் திறனின்மைக்கு அடிப்படைக் காரணமாக அமைகின்றன. ஆணின் பால் நடத்தைக் கோலம்[67] குழந்தைப் பருவ அநுபவங்களாலும் பயிற்சியாலும் உருப்படுகின்றது. பாலில் ஆணின் பங்கு என்ன என்பதுபற்றிய கருத்துகள், பெண்கள் பால் அவன் கொண்டுள்ள மனப்பான்மை, அவனுடைய சமய, சமூக நோக்கங்கள் ஆகியவை யாவும் அவனுடைய பால் தேவைகளையும் பாற் செயல்களையும் குறிப்பிடத் தக்க அளவு பாதிக்கின்றன; சில சந்தர்ப்பங்களில் அவை அவனிடம் பால் வெறுப்பினையும் அல்லது பால் குறைவினையும் விளைவித்து விடுகின்றன.

நீக்கும் முறைகள்: இனி மேற் குறிப்பிட்ட பால் குறைவினைப் போக்கும் முறைகளைச் சிறிது விளக்குவேன். முதலா

66. ஒருபால் புணர்ச்சி இயல்பு—Homosexuality
67. நடத்தைக் கோலம்—Behaviour pattern

வதாக, நல்ல மருத்துவரை நாடி குறையின் மூலகாரணங் களை அறிதல் வேண்டும்.

நோய்நாடி நோயின் குணம்நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.[68]

என்பது வள்ளுவர் வாக்கன்றோ? இங்ஙனம் செய்யாமல் 'இழந்த இளமையைப் பெறுவதற்கான' மருந்து வகைகளை வாங்கி உண்டல் கூடாது. ஆண்மையைக் குறைக்கும் நோய் களைப் போக்கிவிட்டால், ஆண்மை தானாக மீண்டும் எழுந்து விடும். அங்ஙனமே மட்டும் மீறிய உடல் உழைப்பாலும் மன உழைப்பாலும் நேரிடக்கூடிய நரம்புச் சோர்வினையும், போதுமான ஓய்வு, ஊட்ட உணவு வகைகள், நல்ல காற்று போதுமான பொழுது போக்குக் கவர்ச்சிகள் ஆகியவற்றால் போக்கிக் கொள்ளலாம். இன்னும் உடல்பற்றிய கோளாறு களைத் தக்க ஹார்மோன்களாலும், விட்டமின் உணவுகளா லும், பிறப்புறுப்புப் பாதையில் செய்யும் சிகிச்சையாலும், மின்சாரச் சிகிச்சை முறைகளாலும் நிவர்த்திச் செய்து கொள்ளலாம். எனினும், பெரும்பான்மையானவர்களிடம் இவை அதிகப்பயன் அளிப்பதில்லை. அவர்கள் உள மருத்துவ முறைகளை மேற்கொண்டு அம்மருத்துவர் ஆலோசனைப்படி நடந்துகொள்ளல் வேண்டும்.

விரைவாக விந்து வெளியேறுதல் தீவிரமாக இராதிருந் தால், அதனை விடா முயற்சியுடன் மேற்கொள்ளப் பெறும் தற்பயிற்சியாலும்[69] கட்டுப்படுத்துவதாலும் குணப்படுத்தி விடலாம். ஆண்குறியை பெண்குறியில் நுழைத்தவுடன் ஏற்படக்கூடிய உச்சநிலை உணர்ச்சியைத் தடுக்க வேண்டு மாயின், குறியை நுழைத்தவுடன் புணர்ச்சி இயக்கங்களை மேற்கொள்ளாமல் அமைதியாக இயங்கா நிலையில் இருத்தல் வேண்டும். உடனே விந்து வெளியேறும் நிலை மறைந்ததும் இயக்கத்தைத் தொடங்கி விந்து வெளியேறுவதற்கு முன்

---

68. குறள்—948
69. தற்பயிற்சி—Self-training

நிறுத்திவிடுதல் வேண்டும். விந்து வெளியேறும் நிலையில் ஆழ்ந்த சுவாசத்தை மேற்கொள்ளலும் பிறப்புறுப்புத் தசைகளை நனவு நிலையில் தளர்வுறச் செய்தலும் பெருந்துணை புரிதல் கூடும். இவ்வாறு மாறி மாறி மேற்கொள்ளப்பெறும் இடைவேளை[70] ஒய்வால் படிப்படியாக விறைத்தலை நீண்ட நேரம் நிலைநிறுத்துவதும் பால் கட்டுப்பாட்டின்[71] ஆற்றலை வன்மையுடையதாகச் செய்வதும் இயலுகின்றது. எனினும் இந்த முதல் நிலை முயற்சிகளில் மனைவி கணவனுடன் முற்றிலும் ஒத்துழைத்தல் வேண்டும். இங்ஙனம் ஒத்துணர்ச்சியுடன் கூடிய மனப்பான்மையும் துணை புரிதலும் கணவனுக்குத் தேவையான உற்சாகத்தை அளித்தல் கூடும். நாளடைவில் இக்குறையும் படிப்படியாக நீங்கும்.

பிழைபாடான உணவு முறைகளின் கேடு: இறுதியாக ஒன்றை வலியுறுத்த விரும்புகின்றேன். அதுதான் பிழைபாடான உணவு முறைகளால் நேரிடும் கேடு ஆகும். இன்று நாகரிக மனிதனின் உணவில் அதிகமான புரதச் சத்துள்ள[72] பொருள்களும் குறைவான விட்டமின்களும் உள்ளன என்பதை நீ நன்கு அறிவாய். புரதத்தை அதிகமாக உட்கொள்வதால் அதிக அளவு அமிலம் உண்டாகி அது குருதியோட்டத்தில் கலந்து உடலெங்கும்பரவி சுரப்பிமண்டலத்தையே-குறிப்பாகப் பால் சுரப்பிகளைப்—பாதிக்கின்றது. கோதுமை, காய்கறிவகைகள், பழவகைகள், வாதுமைப் பருப்பு, மணிலா கொட்டை போன்ற கொட்டை வகைகள் ஆகியவற்றை அதிகமாக உட்கொண்டால் குருதியிலுள்ள அமிலத்தன்மை குறையும். நடுப்பருவ நிலையிலுள்ளவர்கட்கு — நாற்பது வயதினைத் தாண்டியவர்கட்கு —பெரும்பாலும் மரக்கறி உணவே[73] மிகவும் ஏற்றது என்பதை நன்கு உணர்வாயாக. விட்டமின்-E ஆண்மையை அதிகரிக்கச் செய்கின்றது என்று

70. இடைவேளை—Interval
71. பால் கட்டுப்பாடு—Sexual control
72. புரதம்—Protein
73. மரக்கறி உணவு—Vegetarian diet

கண்டறிந்துள்ளனர். கைக்குத்தரிசி, கோதுமை, காலிஃபிளவர், டர்னிப், பீட்ரூட், தக்காளி, முள்ளங்கி ஆகியவற்றைக் கொண்ட உணவு மிகவும் நன்மை பயக்கவல்லது; சாராயம், புகையிலை, காஃபி, தேநீர், மசாலா வகையறு ஆகியவற்றை அறவே நீக்கிவிடல் வேண்டும். இத்தகைய உணவு அமைப்பினுல் ஆண்மையை அதிகரித்துக் கொள்ளலாம்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 39

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

இதுகாறும் எழுதிய நான்கு கடிதங்களில் பல்வேறுபால் பொருத்தக் கேடுகளையும் அவற்றைப் போக்கும் முறைகளையும் ஓரளவு விளக்கினேன். இவற்றைத் தவிர வேறு சில இயல்புகளும் இயற்கைக் கோளாறுகளும் பால் பொருத்தக் கேடுகளை விளைவிக்கின்றன. அவற்றை இக் கடிதத்தில் விளக்குவேன்.

பாலுறுப்புகள் ஒவ்வாமை: பிறப்புறுப்புகள் ஒவ்வா நிலையும்[74] பால்பொருத்தக் கேடுகளை விளைவிப்பதாக மருத்துவ நிபுணர்கள் கருதுகின்றனர். ஆனால் இந்நிலையைக் காண்பது மிகவும் அரிது. புறனடையாக ஒருசிலரிடம் இணைவிழைச்சின்பொழுது பாலுறுப்புகளின் ஒவ்வாமை, சங்கடங்களை அல்லது பால் பொருத்தக் கேடுகளை உண்டாக்கலாம். புணர்ச்சியின்பொழுது ஒரு பெண் விறைத்த நிலையிலும் பயந்த இயல்புடனும் இருந்தால் சற்றுப் பெரிய ஆண்குறியையுடைய ஆடவன் புணருங்கால் அவளுக்கு அசௌகரியமும் வலியும் உண்டாகலாம்; ஆனால் இத்தகைய நிலை ஏற்படுவது மிகவும் அரிது. அங்ஙனமே, சிறிய அளவுள்ள ஆண்குறியும் மிகக் கடுமையான பால் இணக்கமின்மையை விளைவித்தல் அரிதாகும். ஒரு சில ஆடவர்கள் ஆண்குறி மிகப் பெரிதாக உள்ளதென்றும், மற்றும்சிலர் ஆண்குறி மிகச்சிறிதாத உள்ளதென்றும் கற்பனையாகக் கவலைகொண்டு துன்பப்படுகின்றனர். இந்த அளவில்தான் ஆண்குறி இருத்தல் வேண்டும் என்ற நியதி இயற்கையில் அமையவில்லை;

74. ஒவ்வாமை—Disproportion

யோனிக் குழலின் இழையங்கள்[75] நீண்டு விரியக் கூடியன வாக இருப்பதால் ஆணுறுப்பின் அளவுகளுக்கேற்றவாறு அவை பொருத்தப்பாடு அடைவது எளிது.

ஒரு சில இளைஞர்கள் தங்கள் ஆணுறுப்பு மிகச் சிறிய தாக உள்ளதென்று பயந்து சாகின்றனர்; அதனால் தங்கள் திருமண உறவு பாதிக்கப்பெறலாம் என்றும் அஞ்சுகின்றனர்; ஒரு சிலரிடம் இந்த அச்சம் குமரப் பருவத்தைக் கடந்தும் செல்லுகின்றது; தங்களுடைய குறை வெளிப்பட்டுவிடும் என்று சிலர் திருமணத்தைப் புறக்கணிக்கவும் செய்கின் றனர்; இன்னும் சிலர் பாலுறவினையே மேற்கொள்ளாது அமைகின்றனர். மருத்துவ இலக்கியத்தில் கண்ட ஓர் எடுத் துக்காட்டினை ஈண்டுத் தருகின்றேன். நல்ல உடல்வளமும் மனவளமும் உள்ள இருபத்தேழு வயதுடைய ஒருபட்டதாரி தன்னுடைய ஆணுறுப்பு மிகச் சிறியதாகவுள்ளதென்று கருதினார். தன்னுடைய முன் குமரப் பருவம் முழுவதும் இந்தக் 'கற்பனைக் குறை'யினால் தொல்லைப்பட்டார். அவர் பிறர் தன்னை ஆடையில்லாத நிலையில் பார்க்க வாய்ப் பினையே தருவதில்லை; பிறர் முன்னிலையில் அவர் தன் ஆடை யைக்கூட மாற்றிக்கொள்ளார். இவரை மருத்துவச் சோதனைக்குட்படுத்தியதில் அவருடைய ஆணுறுப்பு தொங் கிய நிலையிலும் விறைத்த நிலையிலும் சராசரி நிலைக்கு மேல் இருந்தது தெரிந்தது. வேறு குறை ஒன்றுமே அவரிடம் காணப்பெறவில்லை. சாதாரணமாக இத்தகைய கவலைகட் குரிய காரணம் மிக ஆழமானதாகவே இருக்கும். பெரும் பாலும் பிள்ளைப்பருவ 'மனக்கோட்டைகளை'ப் பற்றியே[76] இருக்கும். இளமையில் இவருடைய தந்தையார் இவரிடம் முட்டிமைதுனத்தை மேற்கொள்வோரிடம் ஆணுறுப்பு வளராது என்று சொல்லியிருந்தார். சில ஆண்டுகள் அவர் இப்பழக்கத்தில் ஈடுபட்டிருந்ததால், அவருக்கு இத் திகில் ஏற்பட்டு தன் உறுப்பு இருக்க வேண்டிய அளவுக்கு இரா

75. இழையங்கள்—Tissues
76. மனக்கோட்டை—Fantacy

தென்று கருதியே மனக் குழப்பத்துடன் தொல்லைப்பட்டுக் கொண்டிருந்தார் என்பது பின்னர் தெரியவந்தது.

பெண்களின் யோனிக் குழலிலும் சில கோளாறுகள் ஏற்படலாம். சிரமமான பிரசவங்களில் யோனிக்குழலின் இழையங்கள் தளர்ந்து விரிந்து விடுவதனால் ஆணுறுப்பு சரியாக உராய முடியாதுபோய்ப் புணர்ச்சியினால் திருப்தி இல்லாமல் போகின்றது. நவீன பிரசவ முறைகளினால் இத் தளர்ச்சி நிகழாமல் தடுக்கப்பெறுகின்றது; அப்படி நேரிட்டாலும் அறுவைமுறைச் சிகிச்சையினால் சரிசெய்யப்பெறுகின்றது. இத்தகைய நிலைமை நீடித்தாலும் தக்க பொருத்தப் பாட்டினால் இக்குறையைத் தவிர்க்கலாம். புணர்ச்சியின் பொழுது யோனிக்குழலின் தசைகளை அடிக்கடி இறுகவும் தளரவும் செய்து மனைவி தன்னுடைய பிறப்புறுப்புகள் நன்கு படிவதற்கு வாய்ப்பளித்துத் தன்னுடை உணர்ச்சியையும் தன் கணவனின் உணர்ச்சியையும் அதிகப்படுத்தலாம்.

முட்டிமைதுனம்:[77] முட்டிமைதுனப் பழக்கமும் ஒருவகையில் பால் பொருத்தக் கேட்டினை விளைவிக்கின்றது. இப் பழக்கம் உலகிலுள்ள எல்லாச் சமூகங்களிடையேயும் இருந்து வருகின்றதாகப் பல அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். ஆண்பாலாரிடம் இப்பழக்கம் அதிகமாக இருப்பதாகவும், பெண்பாலாரிடம் அது மிகக் குறைவாக இருப்பதாகவும் அவர்கள் கூறுகின்றனர். மனிதர்களுடைய பால் நடத்தையையும் பிராணிகளின் பால்நடத்தையும் ஆராய்ந்த ஃபோர்ட்[78], பீச்[79] என்ற அறிஞர்கள் பொதுவாகப் பிராணிகள் வாழ்க்கையில் அவற்றின் பிறப்புறுப்புகளில் இப்பழக்கம் தானாகத் தூண்டும் முறையில் மிக அதிகமாக அமைந்திருப்பதால் அதனை 'இயல்பிகந்த' செயலாகவோ[80] நெறி

77. முட்டி மைதுனம்—Masterbation
78. போர்ச்—Ford
79. பீச்—Beach
80. இயல்பிகந்த—Abnormal

கோணிய' செயலாகவோ[81] கருத முடியாது என்றும், அஃது எல்லாப் பிராணிகளும் தம்முடைய பிறப்புறுப்புகளைச் சோதிக்கவும், தூய்மையாக்கவும், செயற்படுத்தவும் மேற்கொள்ளும் ஒருவகை உயிரியல் போக்கின் பகுதி என்றும் கருதுகின்றனர். படிமுறை வளர்ச்சிக் கொள்கைபடி[82]ப்படி இது காலப்போக்கில் கற்றலும் பரிசோதித்தலுமான திறன் அதிகரிக்கவே வெளிப்படையாகப் புணர்ச்சியின் குறையை நிரப்பும் செயலாகவோ அல்லது புணர்சிக்குப் பதிலீடாகவோ வெளிப்படையாகவோ மேற்கொள்ளப் பெறுகின்றது என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

அண்மைக் காலம்வரை முட்டிமைதுனம் பல்வேறு உடல் உளக் கோளாறுகளை விளைவிக்கின்றது என்று கருதப் பெற்று வந்தது. இன்று அவை யாவும் வெறும் கற்பனையில் எழுந்த அச்சங்கள் என்றும், அவ்வாறு ஏற்படுவதற்கு யாதொரு அறிவியல் அடிப்படையும் இல்லையென்றும் சில மருத்துவ நிபுணர்கள் கருதுகின்றனர். இத்தீய பழக்கத்தை மேற்கொள்வதால் ஏற்படும் அச்சம், குற்ற மனப்பான்மை, கேவல நிலை போன்ற உணர்ச்சிகளே தீய விளைவுகளுக்குக் காரணம் என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். ஆராய்ச்சி ஒருபுறம் இருக்க, நடைமுறையில் இத்தீய பழக்கத்தைத் தொடர்ந்து மேற்கொள்வோருடைய நிலையைக் கவனித்தால் அது மிகவும் பரிதாபப்பட வேண்டியதாயுள்ளது! இதைப்பற்றி திரு. வி.க. அவர்களின் கடிந்துரையைப் படித்து உண்மை நிலையை உணர்க[83].

நீண்ட நாட்களாக இத்தகைய "ஒருதலைக் காம விளையாட்டில்" (!) ஈடுபட இளைஞர்களும் பெண்களும் திரு

81. நெறி கோணிய—Perverse

82. படிமுறை வளர்ச்சி—Evolution

83. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை—எட்டாம் பதிப்பு-பக்கம்(148-152)

மணம் ஆனவுடன் தம்முடைய பால் பழக்கங்களைத் திரும்ப வும் சரிவர அமைத்துக்கொண்டு பாலுறவில் முழுமையான திருப்தியை அடைவதில் சங்கடப்படுகின்றனர். அதுவும் பெண்ணிடத்தில் இப்பழக்கம் மிகவும் குறிப்பிடத்தக்க தீய விளைவினை உண்டாக்கி விடுகின்றது. பெரும்பாலும் இப் பழக்கத்தை மேற்கொள்ளும் பெண்கள் யோனிலிங்கத்தைத் தூண்டியே[84] இன்பம் எய்துகின்றனர்; திருமணம் ஆனபின் னர் பாலுறவு கொள்ளும் பொழுது யோனிக்குழலைத் தூண்டுவதால் இவர்கட்கு இன்பம் ஏற்படுவதில்லை. படித்த பெண்களிடமே இக்கொடிய பழக்கம் அதிகமாக நிலவு கின்றது. பெண்களிடம் இப்பழக்கம் நேரிடும் விவரங் களைப்பற்றி அறிஞர் நூல்களைப் படித்து அறிந்துகொள்க[85]. இத்தகைய தீய பழக்கத்தால் ஒரு பெண்ணிடம் ஏற்படும் பால் பொருத்தக் கேட்டினை எளிதில் நிவர்த்தி செய்து கொள்ளலாம். இப்பழக்கத்தைப் போக்க முயல்வதைவிட அதனை வேறு பக்கமாகத் திருப்பி மறக்கச் செய்தும் புதிய பழக்கத்தை உண்டாக்கியும் அதனை மாற்ற முயல்வதே சிறந்தது. முதலில் கணவன் தன் கையினாலேயே யோனி லிங்கத்தை மீட்டித் துணைவியை உச்சநிலை உணர்ச்சியை அடையச் செய்தல் வேண்டும். சில தடவைகள் இங்ஙனம் செய்த பிறகு கூடியவரை பெண் அறியாமலேயே தன் ஆணுறுப்பையும் பயன்படுத்தவேண்டும்; அதே சமயத்தில் கையைப் பயன்படுத்தி யோனிலிங்கத்தைத் துடிக்கச் செய் வதும் தொடர்ந்து நடைபெறுதல் வேண்டும். இத்தகைய "கூட்டுப் புணர்ச்சியால்" பெண் உச்சநிலை உணர்ச்சியை எய்தியதும், நாளடைவில் யோனிக்குழல் தூண்டுதலை-இயல் பான இணைவிழைச்சினை—மேற்கொண்டு அவளிடம் உச்ச நிலை உணர்ச்சி ஏற்படச் செய்தல்வேண்டும். பெண் திறமை யுடையவளாகவும், அநுபவம் மிக்கவளாகவும் பெண் எதை யும் எளிதில் புரிந்துகொள்ளும் கூரிய அறிவுடையவளாகவும் இருப்பின் இத்தகைய "சிகிச்சை" உடனே பலன்தரும்.

84. யோனிலிங்கம்—Clitoris
85. Illustrated Encylopaedia of Sex chap-37

ஒருபால்-புணர்ச்சி இயல்பு; பெரும்பாலான பெண்களும் ஆண்களும் எதிர்பால் புணர்ச்சி இயல்புடனுள்ளனர்; அஃதாவது, எதிர்பாலாரிடம் பாலுறவு கொள்ளுவதனுலேயே இன்பம் அடைகின்றனர். ஆயினும், ஒரு சிலர்—கின்ஸேயின் கணக்குப்படி நான்கு சதவிகிதம் என்று சொல்லலாம்—ஒரு பால்-புணர்ச்சி இயல்பினை யுடையவர்களாயுள்ளனர். இத்தகைய இயல்பு எல்லா நாட்டு மனித சமூகத்தினரிடமும் காணப்பெறுகின்றது. பெரும்பாலும் இந்தஇயல்பு முன்-குமரப் பருவத்தினரிடையே அதிகமாகத் தலைக்காட்டுகின்றது; பெண்களைவிட ஆண்களிடமே இப்பழக்கம் அதிகமாகவும் காணப்பெறுகின்றது. எதிர்பாலார் கிடைக்காததால்தான் இப்பழக்கம் தோன்றுகின்றது. வாழ்க்கையின் பல்வேறு சூழ்நிலைகள் மனிதர்களை இத் தீய பழக்கத்தில் கொண்டு செலுத்துகின்றன. மாணுக்கர் விடுதிகள், போர் முகாம்கள், சிறைச்சாலைகள் போன்றவைகளில் ஆண்களும் பெண்களும் பிரிந்து இருக்க நேரிடுவதால் இத்தகைய ஒருபால் உறவுகள் தோன்றுகின்றன; இவற்றின் மூலம் அவர்கள் பால் வேட்கையைத் தணித்துக் கொள்ளுகின்றனர். எதிர்பாலார் தொடர்பு ஏற்பட்டதும் இப்பழக்கம் பெரும்பாலும் மறைந்து விடுகின்றது. எனினும், ஒரு சிலரின் ஆளுமைக் குலைவின்[86] காரணமாக இப்பழக்கம் நீடித்துவிடுகின்றது; எதிர்பாலாரின் சந்திப்பு ஏற்படினும் இக் கவர்ச்சிகளையே அவர்கள் நாடுகின்றனர். இங்ஙனம் அவர்களிடம் இத்தகைய பழக்கம் ஏற்படுவதற்குக் காரணம் இன்னும் தெளிவாக ஆராய்ந்து கண்டறியப்பெறவில்லை.

ஒருபால்-புணர்ச்சி இயல்பும் பால்பொருத்தக் கேட்டினை உண்டாக்குகின்றதா என்று நீ வினவலாம்; கூறுவேன்; உண்டாக்க வேண்டும் என்று கட்டாயம் இல்லை. வாழ்க்கையில் ஏதோ சந்தர்ப்பக்குறைவினுல் ஒரு சிலரிடம் இத்தகைய பழக்கம் ஏற்பட்டு விட்டாலும், நல்ல சூழ்நிலை உண்டான பிறகு இப்பழக்கம் அவர்களிடம் தலைக்காட்டுவதில்லை.

86. ஆளுமைக் குலைவு—Personality disturbance

பெரும்பாலோரிடம் இப் பழக்கம் அடியோடு மறைந்தே போகின்றது. ஒருவருடைய தோற்றத்திலிருந்து அவரிடம் இப் பழக்கம் உள்ளது என்று கண்டறிந்து கொள்ளவும் இயலாது.

ஒருபால்-புணர்ச்சிப் போக்கினையும் எதிர்பால்-புணர்ச்சிப் போக்கினையும் கொண்டுள்ள ஒருசிலர் திருமணம் புரிந்து கொண்டு சாதாரணமான குடும்பஉறவினை ஏற்படுத்தவிழைகின்றனர். சிலர் தம்முடைய ஒருபால்-புணர்ச்சி விழைவுகளின் அளவினை அறியாமலேயே மணம் புரிந்துகொள்ளுகின்றனர்; திருமணம் தம்மிடம் இப்போக்கினை மாற்றிவிடும் என்று கருதியே இவர்கள் திருமணத்தில் இறங்குகின்றனர். எனினும், இவ்வாறு வேறுபட்டுச் செல்லும் போக்குகள் திருப்தியான திருமணப் பொருத்தத்தினை உண்டாக்குதல் அரிது. எனவே, ஒருபால்-வேட்கையினையுடையவர்கள் திருமணத்தில் இறங்கவேகூடாது; திருமணம் இப்போக்கினை நீக்கும் என்று கருதுவது அறிவுடைமையுமன்று. இது திருமணம் பைத்தியத்தைப் போக்கிவிடும் என்று கருதுவதனோடொக்கும்.

திருமண வாழ்க்கையில் இறங்கப் போகின்றவர்கள் அனைவரும் இந்த ஐந்துகடிதங்களிலும் கூறப்பெற்றுள்ள பல்வேறு பிரச்சினைகளையும் அறிந்து கொள்ள வேண்டும் என்று கருதியே அவற்றைக் கூறினேன். அடுத்து எழுதும் கடிதங்களில் திருமணத்தின் உடல்நலக்கூறில் உன் கவனத்தைத் திருப்புவேன்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# திருமண வாழ்வில் உடல்நலம்

'சுவரை வைத்துக் கொண்டுதான் சித்திரம் எழுத வேண்டும்' என்பது ஆன்றோர் வாக்கு. 'உடம்பார் அழியில் உயிரார் அழிவர்' என்பது திருமூலரின்[1] திருவாய் மொழி. திருமண வாழ்க்கை நன்றாக அமையவேண்டு மாயின் உடல்நலத்தைத் தம்பதிகள் நன்கு கவனிக்க வேண்டும். பாலுறவு கொள்வதில் உணர்ச்சிகளை ஒரு நெறிப்படுத்தி ஒழுகவேண்டும். வழி விலகிச் சென்று பல இன்னல்களை தருவித்துக் கொள்ளக் கூடாது. திருமணத் திற்குரிய வயது, கணவன் மனைவியருக்கிடையே இருக்க வேண்டிய வயது வேற்றுமை, மணமக்கள் முதல் கரு பத்தைத் திட்டமிடல், கருத்தடை முறைகளைத் தேர்ந் தெடுத்தல், இனை விழைச்சினைக் கட்டுப்படுத்தி ஆளுதல், தம்பதிகளிடையேயுள்ள பால் வேட்கை வேற்றுமையைச் சமாளித்தல், மாதவிடாய் கருப்பகாலம் சூதக ஓய்வு காலங் களில் உறவு கொள்வதுபற்றிய குறிப்புகள், சிலரது எல்லை மீறிய செயல்கள், பால் அடக்கத்தின் விளைவுகள், திருமணத்திற்கு முன்னர் உறவுகள், குறிக்கோள் திருமணம் போன்ற பல செய்திகளும் அவற்றுடன் தொடர் புள்ள பிறவும் இப்பகுதியிலுள்ள நான்கு கடிதங்களில் (40-43) ஆராயப்பெறுகின்றன.

1. திருமந்திரம்—724

# 40

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்:

நோயற்ற வாழ்வு: 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பது ஆன்றோர் அருளிய வாக்கு. திருமணம் புரிந்து கொண்டு இல்வாழ்க்கையில் புகும் மண்மக்கள் உடல்நலத்துடன் திகழவேண்டும். பாலுறவு கொள்ளுவதிலும் பிறவற்றிலும் அவர்கள் அளவுடன் இருத்தல்வேண்டும்; ஒரு முறையுடன் நடந்துகொள்ளவேண்டும். இன்றைய நாகரிக வாழ்க்கையில் பலர் வழி விலகிச் சென்று பல இன்னல்களை எய்த ஏதுவுண்டு. ஆகவே, இக்கடிதத்திலும் இதனைத்தொடர்ந்து எழுதும் ஒரு சில கடிதங்களிலும் தம்பதிகள் உடல் நலத்துடன் வாழ்ந்து இல்லற வாழ்க்கையின் இன்பப் பேறுகளை அடைவதற்கான ஒரு சில செய்திகளை விளக்குவேன்.

திருமண வயது: தக்க வயது வந்தவுடன்தான் நம்பியரும் நங்கையரும் திருமணம் புரிந்துகொள்ளவேண்டும்; 'பிஞ்சில் பழுக்கக்கூடாது.' 'பொம்மைக் கல்யாண முறை' போன்ற வழக்கமே தலைக்காட்டலாகாது. முன்னொரு கடிதத்தில் தொல்காப்பியர் வரையறை செய்துள்ள பத்துவகைப் பொருத்தங்களைக் குறிப்பிட்டேன் அல்லவா? அதில் 'வயது' என்ற கூறினை வற்புறுத்த விரும்புகின்றேன். இதுபற்றியும் ஆண்டுக் குறுப்பிட்டுள்ளேன். பெரும்பாலும் பால் சுரப்பிகள்[2] பதினைந்து வயதிற்கு மேற்பட்டே சரியான முறையில் செயற்படும். ஆனால், இந்தவயதிற்குச் சற்று முன்னதாகவே அவர்களிடம் பால் முதிர்ச்சி ஏற்படினும், ஒரு சில ஆண்டுகள் கழிந்த பிறகே அவர்கள் பாலுறவு கொள்ளவேண்டும். பண்டைத் தமிழ் அகப்பொருள் இலக்கணத்தில் தலைமகன் பதினைந்து யாண்டு பத்துத் திங்களும், தலைமகள் பதினொரு யாண்டு பத்துத் திங்களும் நிரம்பப்பெற்றவர்களாக இருந்து

2. பால் சுரப்பிகள்—Sex glands

இரண்டு திங்கள் 'களவில்' ஒழுகி அதன் பின்னர் மணந்து கொண்டு 'கற்பில்' ஒழுகுவர் என்று கூறப்பெற்றுள்ளதை ஈண்டு நினைவு கூர்க. இங்ஙனம் அவர்கள் கருதியது குறிக்கோள் நிலையினதேயன்றி, நடைமுறையிலிருந்ததையன்று. "இவ்வாற்றானும் இஃது உலகத்து இயல்பன்று என்பதுபெற்றும், உலகத்து ஒழுக்கத்திற்குக் காலவரையறை இன்மையான் என்பது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த விடத்துப் பிராயமும் ஈங்கே உரைக்கப்பட்டதாம். பதினோராண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகளோடும் பதினையாண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகனைப் போலும் புணர்தல் வேண்டிற்று என்பது பெற்றும். அவளும் இரு திங்கள் களவொழுக்கொழுகப் பன்னீராட்டைப் பிராயத்தாளாம். அது மக்கட் பேற்றுக்குக் காலம்; களவொழுக்கத்திற்குப் பொருந்தாதென விலக்கப் பெற்றதாம் ஆசிரியர்களான் என்பது. இவனும், இரு திங்கள் களவொழுக்கொழுகப் பதினாறாட்டைப் பிராயத்தானும். அஃது ஆண்மை நிலைபெறும் காலமாகலான், களவொழுக்கிற்கு விலக்கப்பட்டது என்பது" என்ற இறையனார் களவியலுரைப் பகுதி[3] ஈண்டு சிந்திக்கற்பாலது. எனவே, தலைமக்களிடையே களவில் நிகழ்ந்த புணர்ச்சி உள்ளுறு புணர்ச்சியேயன்றி, மெய்யுறு புணர்ச்சியன்று என்பதும் இதனால் உறுதிப்படுகின்றது; இதுபற்றிய தடைவிடைகளை நக்கீரரின் உரை கண்டு அறிக.[4]

இன்றைய அறிவியல் கருத்துப்படி உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சியும் சமூக முதிர்ச்சியும் ஏற்பட்ட பிறகே திருமணத்தில் இறங்கவேண்டும். உயிரியல் அடிப்படையில் இளந்தம்பதிகள் (சுமார் 12 வயதிற்கு மேற்பட்டுப் பெண்களும், சுமார் 16 வயதிற்கு மேற்பட்டு ஆண்களும், இணைவிழைச்சிற்கும் இனப்பெருக்கத்திற்கும் தயாராகிவிட்டனர்போலக் காணப்பெறினும், அவர்களிடம் உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சியும் சமூக முதிர்ச்சியும் தக்க முறையில் ஏற்பட்டிருக்கா. தாய் தந்தையராதற்குரிய பொறுப்பு

3. இறையனார் களவியல்—நூற்பா 32-இன் உரை
4. " நூற்பா 2-இன் உரை

அந்த வயதில் அவர்களிடம் ஏற்படாது. அதற்குப் பல ஆண்டுகள் கழிந்த பின்னரே அப்பொறுப்பு அவர்களை வந்தடைகின்றது. இன்று சில செல்வந்தர் குடும்பங்களில்—ஏன்? பல குடும்பங்களில்—பன்னிரண்டு வயது முடிந்த பெண்ணுக்கும், பதினாறு வயது முடிந்த ஆணுக்கும் திருமணம் நடைபெற்று ஓராண்டு முடிவதற்குள் குழந்தைப் பேறும் ஏற்படுவதைக் காண்கின்றோம். பெரும்பாலும் மணமக்களின் பெற்றோர்களே குழந்தையைப் பராமரிக்கும் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலையிலிருப்பதையும் பார்க்கின்றோம். திருமணத்திற்குச் செல்வநிலையையும் ஓரளவு கணக்கிற்கு எடுத்துக் கொள்ளவேண்டும். இதனால்தான் இன்றும் மணமக்களுக்குத் தரும் பரிசம் சீர் முதலியவற்றைத் தவிர, மணமக்கள் தனிக் குடும்பம் வைத்த பிறகு ஓராண்டு வரை பெண்ணின் பெற்றோர் தம்பதிகளின் வாழ்க்கைச் செலவுகள் அனைத்தையும் ஏற்கும் வழக்கமும் இருந்து வருகின்றது. மணமக்களிடம் பொருளாதாரப் பொறுப்பு—தாமே பொருளீட்டும் திறன்—இருப்பின் இத்தகைய வழக்கம் ஒன்று—இருக்க வேண்டியதில்லையல்லவா? செல்வந்தர் குடும்பங்களிலும் இத்தகைய வழக்கத்தை வற்புறுத்தும் நிலையும் இருந்து வருகின்றது!

விவசாய நாடுகளில்தான் இளமை மணம்: இளமையில் திருமணம் செய்யும் பழக்கம் பெரும்பாலும் இந்தியா, சீனா போன்ற விவசாய நாடுகளில்தான் அதிகமாக இருந்து வருவதாக அறியக் கிடக்கின்றது. இயற்கைவளம் நிறைந்த மக்களிடையே போதுமான சுறுசுறுப்பும் இருப்பதில்லை; வாழ்க்கை வருவாயைப்பற்றிய கவலையும் அதிகமாக இருப்பதில்லை. தொழிற்சாலைகள் நிறைந்த நாடுகளில் சாதாரணமாகத் திருமணம் செய்யும் சராசரி வயது சற்று அதிகமாகவே உள்ளது; ஒவ்வொருவரும் உழைப்பின் மூலமே வருவாயைப் பெறவேண்டியிருப்பதாலும், பிள்ளைப்பேறு ஏற்பட்டால் வருவாய் போதாது என்ற அச்சம் இருப்பதாலும், இளமைத் திருமணங்களுக்கு அங்கு அதிக ஆதரவு இல்லை; ஆயினும், கருத்தடை முறைகள் அதிகமாகப் பரத

வரும் இக்காலத்தில் அங்கும் இளமை மணம் அதிகமாகத் தலைக்காட்டத் தொடங்கியுள்ளது என்று சொல்லுகின்றனர். நம் நாட்டிலும் சாரதா சட்டம் போன்ற தடைகளால் 'பொம்மைக் கல்யாணம்' போன்ற இளமை மணங்கள் பெரும்பாலும் நீங்கிவிட்டன. ஆயினும் சிற்றூர்களிலும், செல்வந்தர் குடும்பங்களிலும் மணமக்களுக்கு உள்ளக் கிளர்ச்சி முதிர்ச்சி ஏற்படுவதற்கு முன்னரே திருமணம் நடைபெற்று விடுகின்றது. நம் நாட்டைப் பொருத்தமட்டிலும் ஆண்களுக்கு இருப்பத்தொரு வயது நிறைந்த பிறகும், பெண்களுக்குப் பதினெட்டு வயது நிறைந்த பின்னரும் திருமணம் செய்வது சாலச் சிறந்ததாகும். இந்த வயதில் மணமக்களுக்கு ஓரளவு மனப்பக்குவமும் ஏனைய பொறுப்புகளும் வந்துவிட்டன என்றே கருதலாம்.

**தம்பதிகளின் வயது வேற்றுமை:** பெரும்பாலும் மணமக்களிடையே நான்கு வயது வேற்றுமை இருக்க வேண்டும் என்ற பண்டையோரின் கருத்தினை அப்படியே நாமும் மேற்கொள்வது சாலச் சிறந்ததாகும். புள்ளி விவர ஆராய்ச்சி மூலம் எண்பது சத விகிதம் ஆண்கள் தம்மைவிடச் சில ஆண்டுகள் குறைந்தவயதுப் பெண்களையே மணப்பதாகவும், பத்து சத விகிதம் அவர்கள் ஒத்த வயதுடைய பெண்களை மணப்பதாகவும் பத்து சதவிகிதம் தம்மைவிட மூத்த பெண்களை மணப்பதாகவும் அறியக்கிடக்கின்றது. இன்னும் சில சமூகங்களில் பல ஆண்டுகள் மூத்த பெண்ணை ஒன்றுமறியாப் பாலகனுக்கு மணம் செய்து கொடுக்கும் பழக்கம் இருந்து வருகின்றது. பையனுக்குத் திருமண வயது வருங்கால் பெண் பல குழந்தைகட்குத் தாயாக இருப்பாள்! இத்தகைய பழக்கம் இன்னும் சில சமூகங்களில் வழி வழி வந்து கொண்டே உள்ளது. ஆயினும், பெரும்பாலும் சில ஆண்டுகள் வயதில் குறைவாகவுள்ள பெண்ணை மணந்து கொண்டால்தான் திருமணம் பல்லாற்றாலும் மகிழ்ச்சியுடையதாக அமையும். இருவருக்கும் இடையே பல ஆண்டுகள் வயது வேற்றுமை இருக்குமாயின், அத்தகைய திருமணங்களை நன்கு யோசித்த பிறகுதான் நிறைவேற்று

விக்க வேண்டும். இங்கு மணக்கப் போகும் ஆணும் பெண்ணும் மணப்பதற்கு முன்னர் ஒருவர் மற்றவருடைய ஆளுமைக் கோலங்கள், மீப்பண்புகள், கவர்ச்சிகள், மதிப்பீடுகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை நன்கு அறிந்து கொள்ளல் வேண்டும்.

முதல் கருப்பம்: திருமணம் ஆனபிறகு எத்தனையாண்டுகள் கழிந்தபிறகு முதல் கருப்பத்திற்குத் திட்டமிடுதல் வேண்டும் என்று வினவியிருந்தாய். கூறுவேன்; இதில் யாரும் திட்டமாக அறுதியிட்டுக் கூறுவது சரியன்று; பெரும்பாலும் இது தம்பதிகளின் வயது, அவர்களின் உடல் நலம், அவர்களுடைய சமூக, பொருளாதாரநிலை, அவர்களுடைய சொந்த விருப்பு-வெறுப்புகள் ஆகியவற்றைப் பொறுத்தது. ஒன்றிரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர் பிள்ளைப்பேறு ஏற்படுவதுதான் சிறப்பு என்பது என் கருத்தாகும்: வெவ்வேறு சூழ்நிலைகளில் வளர்ந்தவர்கள், வெவ்வேறு ஆளுமைகளை உடையவர்கள், வெவ்வேறு பழக்கத்தைக் கொண்டவர்கள் திருமணத்தினால் ஒன்றாக இணைகின்றனர். அன்றாட வாழ்க்கையில் இவர்களிடையே முதலில் நல்ல பொருத்தப்பாடு ஏற்படுதல் வேண்டும். ஒருவர் மற்றவருடைய மீப்பண்புகளுடனும் எதிர்வினைகளுடனும் ஒத்துப் போவதற்கும் ஒருவர் மற்றவருடைய நட்பை வளர்த்துக் கொள்வதற்கும் இவருடைய அன்பும் இணக்கமும் நன்கு உறுதிப்படுவதற்கும், நெருங்கிப் பொருந்துவதற்கும், தனிக் குடும்பத்தைச் செவ்வையாக நடத்திச் சமூகவாழ்வில் பொருத்தமுறுவதற்கும் இத்தனைக்கும் மேலாகத் தாய் தந்தையராவதற்குப் பொருளாதார முறையிலும் உள்ளக் கிளர்ச்சி முதிர்ச்சியிலும் தம்மை ஆயத்தம் செய்து கொள்வதற்கும் சிறிது காலம் வேண்டுமல்லவா? இதற்கு ஒன்றிரண்டு ஆண்டுகளாவது பிள்ளைப்பேறு ஏற்படாதிருக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாதது. செல்வந்தர் குடும்பத்தினர்களும், ஏனைய வசதிகள் நிறையப் பெற்றவர்களும் இதற்கு விதி விலக்காகலாம்.

பொதுவாகப் பெண்களுக்கு இருபது அல்லது இருபத்தொரு வயதில் பிள்ளைப்பேறு ஏற்படின் நன்று; ஆனால், முதல் பிள்ளைப் பேறு முப்பது வயதிற்குமேல் ஏற்படுதலும் நன்றன்று. ஒரு பெண் பூப்பு எய்துவிடுதலைக்கொண்டு, அவள் இனப்பெருக்கத்திற்கு ஆயத்தமாகிவிட்டாள் என்று கருதுதல் தவறு. பல யாண்டுகள் முன்–குமரப் பருவம் கடந்து நல்ல உடல் வளர்ச்சியும் மன வளர்ச்சியும் பெற்ற பிறகே குழந்தைப் பேற்றையும் குழந்தை வளர்ப்பையும் அவள் மேற்கொள்வதற்குத் தகுதியுடையவளாகின்றாள். ஆனால், இன்னும் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதிலேயே பெண்கள் குழந்தைகளைப் பெற்றெடுப்பதை நாம் காணாமல் இல்லை. பூப்பெய்தியதும் திருமணம் செய்துவிடுகின்றனர்; தாம்பத்திய உறவிற்கும் ஏற்பாடு செய்கின்றனர். குழந்தைகளும் வரிசை வரிசையாகப் பிறக்கின்றன! இப் பழக்கம் உயிரியல் அடிப்படையிலும் நன்றன்று; உடலியல் அடிப்படையிலும் சிறிதும் பொருத்தமன்று. பதினெட்டு வயதாவது நிறைவு பெறாமல் பிள்ளைப்பேறு ஏற்பட்டால் தாயின் உடல்நிலை பெரிதும் பாதிக்கப்பெறும். அங்ஙனமே பெண்ணின் பிள்ளைப்பெறுந் திறன் நாற்பது வயதிற்கு மேலும் உள்ளது என்றாலும், வயதுசென்ற பிறகு ஒருபெண் பிள்ளை பெற்றாலும் நவீன மருத்துவ முறைகளில் சிக்கல்களைச் சமாளித்துக் கொள்ளலாம் என்றபோதிலும், முதல் குழந்தைப்பேறு பெண்ணின் முப்பதுவயதிற்குமேல் தள்ளிப் போதல் கூடாது என்பதே மருத்துவ நிபுணர்களின் கருத்து; சமூக நன்மைகளை யொட்டி அறிஞர்களின் கருத்தும் இதுவேயாகும்.

குழந்தைகளின் எண்ணிக்கை: ஒரு தம்பதிகள் எத்தனை குழந்தைகள் வரையில் பெறுவது விரும்பத்தக்கது என்றும் வினவி இருந்தாய். இதில் திட்டமான பரிந்துரை தருவது மிகவும் சிரமம்; சாத்தியமுமன்று. இதில் தாய் தந்தையரின் உடல் நலம்—சிறப்பாகத் தாயின் உடல் நலம்—அவர்களின் வயது, அவர்களின் சமூகப் பொருளாதார நிலை, அவர்களின் விருப்பு-வெறுப்புகள் முதலிய பல்வேறு கூறுகள் பங்கு

பெறுகின்றன. தாயின் உடல்நிலை நன்னிலையிலிருந்து குபேர சம்பத்துள்ளவர்கட்குப் பல குழவிகள் பிறந்தாலும் பிறக்கும் குழவிகளின் பாதுகாப்பிற்குக் குறைவில்லை. குசேலர் நிலையிலுள்ளவர்கட்குப் பல குழவிகள் பிறந்தால் என்ன செய்வது?

ஒருமகவுக்கு அளித்திடும்போது ஒருமகவு
 கைநீட்டும்; உந்தி மேல்வீழ்ந்து
இருமகவும் கைநீட்டும்; மும்மகவும்
 கைநீட்டும்; என்செய் வாளால்!
பொருமிஒரு மகவழும்; கண் பிசைந்தழுதற்—
 றொருமகவு; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவுஎங்—
 ஙனம்சகிப்பாள் பெரிதும் பாவம்!

'அந்தோ!என் வயிற்றெழுந்த பசியடங்கிற்று
 இல்லை!'என அழுமால் ஓர்சேய்;
'சிந்தாத கஞ்சிவாக் கிலையெனக்கன்
 னைய்!'எனப்பொய் செப்பும் ஓர்சேய்;
முந்தார்வத்து ஒருசேய்மி சையப்புகும்போ—
 தினிலோர்சேய் முடுகி ஈர்ப்ப,
நந்தாமற்று அச்சேயும் எதிரீர்ப்பச்
 சிந்துதற்கு நயக்கும் ஓர்சேர்.[5]

என்று கவிஞர் வருணிப்பதுபோல் அன்றுட உணவிற்கே சொல்லொணாத் துயர் எய்த நேரிடும். பிறகு இவர்களின் உடை, கல்வி, ஏனைய பாதுகாப்பு வசதிகட்கு என்ன செய்வது? பொதுவாக ஒரு தம்பதிகள் இரண்டு அல்லது மூன்று குழந்தைகள் வரை பெறுவது சிறப்பாகும். இவைகளில் ஒரு குழந்தை பெண் குழந்தையாக இருப்பின் பெற்றோர்களின் மகிழ்ச்சி முற்றிலும் நிறைவு பெறும். இங்ஙனம் ஒரு வரையறை இருந்தால்தான் பெற்றோர்கள் தங்கள் வருவாயைக் கொண்டு குழந்தைகட்குத் தக்க கல்வியளித்துவாழ்க்கைக்கு வழிவகுத்துக் கொடுத்து, அவர்களைச் சமுதாயத்தில் 'மனிதர்களாக' ஆக்க வேண்டிய பொறுப்பைச் செவ்வனே நிறை

5. குசேலோபாக்கியானம்—செய். 70, 71.

வேற்றுதல் முடியும் இதனால் தாயின் உடல்நலமும் கெடா திருக்கும்.

தாம்பத்திய உறவு ஏற்பட்ட ஒரு சில மாதங்களிலேயே பல பெண்கள் கருவுறுகின்றனர். சிலர் திருமணம் ஆன வுடன் 'வீட்டுக்கு விலக்காகும்' வாய்ப்பினையே பெறுவ தில்லை; முதல் மாதத்திலேயே கருவுறுகின்றனர்! பெரும்பா லும் திருமணம் ஆனவுடனேயே மணமக்களின் பெற்றோர்கள் பேரன் பேத்தியைத் தம் கைகளினால் தூக்கிப் பார்க்கவேண் டும் என்ற அவாவுடன் உள்ளனர்; அந்நாளை ஆர்வத்துடன் எதிர்நோக்கியே இருக்கின்றனர். இந்நிலையில் மேல்நாடுகள் போல் கருத்தடை முறைகளை கையாண்டு பிள்ளைப்பேற்றினை ஒத்திப் போடுதல் இயலாத செயலாகும். அதிகம் கல்வி யறிவு ஏற்படாத தம்பதிகளிடம் இது நடைபெறுவது முயற் கொம்பாகும். நன்கு படித்த மணமக்கள் பெரும்பாலும் தக்க வயது வந்தபிறகே திருமணம் புரிந்துகொள்ளுகின்றார்க ளாதலின், அவர்கள் கருத்தடை முறையைக் கையாளவேண் டிய அவசியமே இல்லை. அப்படி ஒன்றிரண்டு ஆண்டுகள் தமக்குப் பிள்ளைப்பேறு ஏற்படாதிருந்தால் தம்முடைய பாலுறவுக்கு நலமாக இருக்கும் என்று அவர்கள் கருதினால், கருத்தடை முறைகளைக் கையாளுவது அவர்கட்குச் சிரமமு மன்று. படித்தவர்களாதலின் அம்முறைகளை அவர்கள் எளிதில் மேற்கொள்ளலாம்.

**கருத்தடையும் பால்பொருத்தமும்:** கருத்தடை முறைகளை மேற்கொள்ளுவதிலும் தம்பதிகள் விழிப்பாக இருத்தல்வேண் டும். சில முறைகளினால் இருவருக்கும் பால்பொருத்தப்பாடு ஏற்பட்டு கலவியில் ஒருவித திருப்தியும் ஏற்படலாம்; சில முறைகளினால் அவ்வித வாய்ப்பு நேரிடாமலும் போகலாம். எடுத்துக்காட்டாக, பெரும்பாலான பெண்கள் கணவன் 'இடையீட்டு இணைவிழைச்சு' முறையைக் கையாளுவதனால் உச்சநிலை உணர்ச்சியை அடைய முடிவதில்லை. இங்குக் கண வன் தக்க முறையைத் தேர்ந்தெடுத்துத் திருப்தியான பாலு றவினை ஏற்படுத்திக் கொள்ளல் வேண்டும். அங்ஙனமே, பெண்கள் உறைகளை அணிவதனால் ஆண்கள் அதனைத் தமது

திருப்தியான உறவிற்குப் பெருந்தடையாகக்கருதுகின்றனர். இங்கு மனைவி தக்க முறையினைத் தேர்ந்தெடுத்துத் திருப்தியான இணைவிழைச்சு ஏற்படுவதற்கு வகை செய்துகொள்ளல் வேண்டும்.

இன்று குடும்பக் கட்டுப்பாட்டு அலுவலகங்களில் அங்கீகரிக்கப்பெற்ற முறைகளை கையாளுவதனால் யாதொரு தீங்கும் இல்லை என்பதைத் தம்பதிகள் உணர்தல் வேண்டும். பெரும்பான்மையான மருத்துவநிபுணர்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற முறைகளாதலின், அவற்றைத் தம்பதிகள் யாதொரு ஐயுறவுமின்றி மேற்கொள்ளலாம். கருப்பையில் கருவிகளைச் செருகிக் கொள்ளுதல், இடையீட்டு இணைவிழைச்சினைத் தொடர்ந்து விடாதுமேற்கொள்ளல், "டூஷ்' செய்து கொள்வதில் தீவிரமான வேதியியற் பொருள்களைப் பயன்படுத்தல்—போன்ற முறைகளைக் கையாளுவதால் உறுப்புகளில் நெருக்கம் அல்லது வீக்கம் ஏற்பட்டுத் தொல்லைகள் நேரிடலாம். ஆனால், அங்கீகாரம்பெற்ற முறைகளில் இத்தகைய குறைபாடுகள் யாதொன்றும் இல்லையென்பது அறியத்தக்கது. மேலும், அதிக நாட்கள் கருத்தடை முறைகளைக் கையாளுவதாலும் பெண்ணிடம் மலட்டுத் தன்மை[6] போன்ற குறைகளும் நேரிடுவதில்லை என்பதையும் நினைவிலிருத்துவாயாக. இவ்வாறு குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திலுள்ள ஆயிரம் பெண்கள் இம்முறைகளைக் கைவிட்டதும் பெரும்பான்மையோர் ஆறு மாதத்திற்குள் கருவுற்றனர் என்றும் இவர்களிலும் பெரும்பான்மையோர் முதல் இரண்டு மாதங்களுக்குள் சூல் கொண்டனர் என்று சோதனைகள் மூலம் கண்டுள்ளனர். எனவே, கருத்தடை முறைகளை மேற்கொள்வதால் மலட்டுத்தன்மை ஏற்படும் என்ற அச்சமே கொள்ளத் தேவையில்லை.

யோனிக்குழல் கசிவுகள்: இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் தெரிவித்து இக்கடிதத்தை முடிக்க எண்ணுகின்றேன். சாதாரணமாகப் பெண்களின் யோனிக்குழலில் சிறிதளவு கசிவு இருந்துகொண்டேயிருக்கும். இதில் ஒரு

6. மலட்டுத்தன்மை—Sterility

பகுதிகருப்பையின்வாயிலிருந்தும், ஒருபகுதியோனிக்குழலின் சுவரிலிருந்தும், ஒருபகுதி யோனிக்குழலின் நுழைவாயிலின் அருகிலுள்ள பர்த்தோலின் சுரப்பிகளினின்றும் வெளி வருகின்றன. இது மிகவும் குறைந்த அளவு இருப்பதால் இதனைப் பெண் கவனிப்பதே இல்லை. மாதவிடாய்க்குச் சற்று முன்னும் பின்னும் இவ்வொழுக்குச் சற்று அதிகமாகவே காணப்பெறும். முட்டை பக்குவமடையும் காலத்தில் சில பெண்களிடம் பசைபோன்ற திரவமும் வெளிப்படுதலுண்டு. இவ்வொழுக்கு தொடர்ந்தும் அதிகமாகவும் காணப்பெறின் அது "லூக்கோரியா"[7] என்ற நோய்க்கு அறிகுறியாகும்; இது பிறப்புறுப்பில் ஏற்படும் அரிப்புக்கோ அல்லது தொற்றுக்கோ அறிகுறியாதலின் உடனே இதனை மருத்துவரின் கவனத்திற்குக் கொண்டுவருதல் வேண்டும்; மற்று, இது "இரகஸ்ய நோய்களுக்கு"[8] அறிகுறியன்று என்பதையும் நீ அறிதல் வேண்டும். பல்வேறு காரணங்களால் யோனிக்குழலில் ஒழுக்கு ஏற்படுகின்றது. எடுத்துக்காட்டாக, யோனிக்குழலில் 'டிரைக்கோமானஸ் வெஜினலிஸ்[9] என்ற மிகச் சிறிய ஒற்றையணுவாலாகிய உயிரியினாலும், அல்லது 'மானிலியா'[10] எனப்படும் காளான் வகையைச் சார்ந்த உயிரியினாலும் இவ்வொழுக்கு நேரிடுகின்றது. இந்த உயிரிகள் என்றுமே கலவியநுபவம் இல்லாத பெண்களைப் பாதிக்கும். எங்ஙனம் இவை யோனிக்குழலினுள் புகுகின்றன என்பதை இன்னும் தெளிவாக அறியக்கூடவில்லை; எப்படியோ அவை நேராகப் புகுந்திருக்கவேண்டும், அல்லது குடலிலிருந்து தொற்றியிருக்க வேண்டும் என்று கருதப் பெறுகின்றது. யோனிக்குழலிலுள்ள இந்நிலையால் எரிச்சல், அரிப்பு, கலவியின்பொழுது வலி முதலியவை உண்டாக

7. லூக்கோரியா—Leukorrhea.
8. இரகசிய நோய்கள்—Venereal diseses.
9. டிரைக்கோமானஸ் வெஜினலிஸ்—Trichomonas vagenalis
10. மானிலியா—Monilia

லாம். சிலசமயம் ஆணுக்கும் இந்நோய் தொற்றி, சிறுநீர்ப் புறவழியில் சிறிதளவு ஒழுக்கினை விளைவிக்கலாம்; சிறுநீர் கழிக்கும்போது சிறிதளவு எரிச்சலையும் உண்டுபண்ணலாம். இவ்வாறுள்ள ஆண்மகனாலும் இத்தொற்று பெண்களுக்கு ஏற்படக் காரணம் ஆகலாம்.

''டூஷ்'' செய்து கொள்ளல்: நடைமுறையில் யோனிக் குழலைத் தூய்மையாக்குவதற்கு ''டூஷ்'' முறையைக் கையாள வேண்டியதில்லை. இயற்கையில் உடலியல் அமைப்பினால் நேரிடும் செயல்களினாலேயே யோனிக்குழல் தூய்மையாகவே வைத்திருக்கப்பெறுகின்றது. அடிக்கடி ''டூஷ்'' செய்வதனால் இந்நிலை பாதிக்கப்பெறலாம். திட்டமான தேவையின் பொழுதுதான் ''டூஷினை'' மேற்கொள்ளுதல் வேண்டும். தொல்லை தரக்கூடிய அளவு யோனிக்குழல் ஒழுக்கு ஏற்படும் பொழுது சாதாரணமாகத் தூய்மை செய்யக்கூடிய அளவு ''டூஷ் செய்து கொள்ளலாம். ஒரு தேக்கரண்டி அளவு சாதாரண உப்பினை ஒருகுவார்ட் அளவு (காலனில் நான்கில் ஒரு பங்கு) வெந்நீரில் போட்டு அந்நீரினைக் கொண்டு ''டூஷ்'' செய்து கொண்டால் போதுமானது. ஒழுக்கு மிக அதிகமாக இருப்பின், மருத்துவர் யோசனைப்படி மருந்துநீரைப் பயன்படுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்.

# 41

அன்பார்ந்த செந்தில் வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

இணைவிழைச்சு: திருமண வாழ்க்கையில் மிகவும் இன்பத்தைத் தரும் பகுதி இணைவிழைச்சு ஆகும். ஆணும் பெண்ணும் தக்க முதிர்ச்சியடைந்ததும் அவர்களிடம் ஒன்று சேர்வதற்கான காமம் அரும்புகின்றது. அஃது இருபாலாரையும் ஒன்று சேர்த்து, வாழ்க்கையின்பத்தைத் தந்து, உலகை இடையறுது நடைபெறச் செய்யும் அற்புத ஆற்றலாக இலங்குகின்றது. 'காமம்' என்ற சொல்லை வள்ளுவரும் தொல்காப்பியரும் பல இடங்களில் உரிய பொருள்களில் ஆண்டுள்ளனர். இன்பக் கூறுன இணைவிழைச்சு ஆண்-பெண் என்ற இருபாலின்கண் நிகழும் என்ற கருத்தை ஆசிரியர் தொல்காப்பியனூர்,

'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வருஉம் மேவற் றுகும்'[11]

என்ற நூற்பாவில் எடுத்தோதியுள்ளார். இன்பம் என்பது மக்களிடத்தேயன்றி விலங்கு பறவை முதலிய எல்லா உயிர்களிடத்தேயும் பொருந்தி நிகழுமாதலின், அதனைச் சிறப்பித்துள்ளார். இங்ஙனம் இன்பம் எல்லா உயிர்க்கும் பொதுவாக நிற்றலின்,

'இன்பமும் பொருளும் அறனும் என்றுங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்'[12]

என்ற நூற்பாப் பகுதியிலும் 'இன்பக் கூற்றினை' முதலில் எடுத்தோதியுள்ளார் என்பதை அறிதல் வேண்டும். "பலவகை உயிர்கட்கும் வரும் இன்பம் இருவகைப்படும். அவை யாவன, போகம் நுகர்தலும் வீடு பெறுதலும் என.

---

11. தொல்—பொருளியல்-நூற்-27 (இளம்)
12. ,, களவியல்-நூற்1 [இளம்]

அவற்றுள் வீடுபேறு துறவறத்தில் நின்றார்க் கல்லது எய்தல் அரிதாயிற்று. போக நுகர்தல் மனையறத்தார்க் கெய்வது" என்ற இளம்பூரணரின் உரைப்பகுதியால் போகம் நுகர்தலில் 'இணை விழைச்சும்' ஒரு பகுதியாம் என்பது பெறப்படுகின்றது. கரு உருவாகும் நிலையை அடைந்ததும் தானாக எழும் உணர்ச்சியாகிய காமத்தால் தூண்டப்பெற்ற ஆணும் பெண்ணும் ஒன்றுகூடி இணைவிழைச்சு புரிகின்றனர். இந்தப் புணர்ச்சி உலகுயிர் தோற்றத்திற்கும் வாழ்க்கை நலத்திற்கும் இன்றியமையாக் காரணமாக இருத்தலானும், அப் புணர்ச்சி நிகழும் அகவொழுக்கம் இன்றியமையாப் பொருள்களில் ஒன்றாக இருத்தலானும் அதனைப் பண்டைப் பெரியோர் அகப்பொருள் எனச் சிறப்பித்து அதனைப் பலவாறு விரித்தும், இலக்கணவரையறை செய்தும், இலக்கியத்தில் பொதிந்தும் பொன்னேபோற் போற்றினர். அந்த அகப்பொருளின் அருமை பெருமையை இன்றைய மணமக்கள் நன்குணர்ந்து, அதன் தகுதியறிந்து, நுகர்ந்து, இன்புற்று, இனிது வாழ்தல் வேண்டும். இது கருதியே அறிவியல் அடிப்படையில் இணைவிழைச்சினை எங்ஙனம் மணமக்கள் வரையறை செய்து கொள்ள வேண்டும் என்பதை இக்கடிதத்தில் உனக்கு உணர்த்த விரும்புகின்றேன்.

கலவி புரிதலில் கணக்கு: எத்தனை நாளுக்கொரு முறை கலவி புரியலாம் என்பது பற்றி ஆராய்ச்சி நினைப்பிற்கெட்டாத நெடுங்காலத்திலிருந்தே நடைபெற்று வந்துள்ளது. திங்களுக்கு இரண்டு முறை மனைவியுடன் சேருமாறு நமது நாட்டு நூல்கள் கூறுகின்றன; அதாவது மாதப் பூப்புக்கு முன்னொரு நாளும் சூதகம் நின்ற பின்னொரு நாளும் என்று சிலர் கூறுப. கருத்தரிக்கும் நாட்களில் இரண்டொரு நாட்கள் கலவி புரிந்து மற்றநாட்களில் அதனை விலக்கி வாழ்தல் அறிவுடைமை. 'மாதத்துக்கு இரண்டு முறை மங்கையரைப் புணர்தல்' என்ற அநுபவமொழியை நோக்குக. 'கொரான்' என்ற இஸ்லாமிய வேதாகமத்தில் வாரத்திற் கொருமுறை கலவி புரிதல் வேண்டும் என்று முகமது விதி செய்துள்ளார். இஸ்லாமியர் ஒன்றுக்கு மேற்

பட்ட துணைவிரைக் கொள்ளலாம். என்ற விதி யிருத்தலின் இந்தவரையறை பெண்ணுக்குமட்டிலுமே என் பதும், ஆண்களை இந்த வரையறை கட்டுப்படுத்தவில்லை என் பதும் வெள்ளிடைமலை. யூதர் நூலிலும் கணவனது உடல் நலத்தைப்பொறுத்தும், அவன்மேற்கொண்டுள்ள அலுவலை முன்னிட்டும் வாரத்திற்கொரு முறையிலிருந்து நாளுக்கு ஒரு முறைவரை மாற்றிக்கொள்ளலாம் என்ற நியதி உள் ளது. விவிலிய நூலிலும் லூதர்[13] என்பார் வாரத்திற்கு இரு முறை கலவியை மேற்கொண்டால் தம்பதிகளின் உடல்நலம் பாதிக்கப்பெறாது என்று சொன்னதாகச் சான்று உள்ளது. இன்றைய நடைமுறையிலும் வாரத்திற்கிருமுறை மேற் கொள்ளலே சிறப்பு என்று அறிஞர்கள் கூறிவருகின்றனர்.

திருமணவாழ்க்கையில் இணைவிழைச்சின் அதிர்வு எண்[14] எப்படி உள்ளது என்பது பற்றி மேலநாடுகளில் பல புள்ளி விவர ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. 1920-இல் காத்தரின் டேவிஸ்[15] என்பார் ஆயிரம் பெண்களை விசாரித்த தில் எழுபது சதவிகிதம் வாரத்திற்கு ஒன்றிலிருந்து பல தடவைகள் வீதமும், இருபது சதவிகிதம் வாரத்திற்கு ஒரு தடவைக்குக் குறைந்தும், சுமார் பத்து சதவிகிதம் ஒரு நாளைக்கு ஒரு தடவை வீதமும் அல்லது அடிக்கடியும் மேற் கொண்டதாகத் தெரியவந்தது. 1933-இல் நியூயார்க் நகரிலுள்ள மார்க்கரெட் சாங்கா ஆராய்ச்சிக்கழகத்திலுள்ள[16] பத்தாயிரம் பதிவேடுகளைப் பகுத்துப் பார்த்து எண்பத்து ஐந்து சதவிகிதம் தம்பதிகள் வாரத்திற்கு ஒன்றிலிருந்து மூன்று தடவைகள் வீதமும், நான்குசதவிகிதம் நாடோறும் அல்லது அடிக்கடியும் பாலுறவு கொண்டனர் என்றும் அறியப்பெற்றது. இன்னொரு ஆராய்ச்சியில் மூவாயிரம்

---

13. லூதர்—Luther
14. அதிர்வு-எண்—Fre uency
15. காத்தரின் டேவிஸ்—Catharine Davis
16. மார்க்கரெட் சாங்கர் ஆராய்ச்சிக் கழகம்—Margaret Sanger Research Bureau.

பெண்களை ஆய்ந்ததில் வாரத்திற்கு இரண்டிலிருந்து மூன்று தடவைகள் விதம் உறவு கொண்டதாகத் தெரிய வந்தது. இந்த ஆராய்ச்சிகளில் கண்டுள்ள தம்பதிகள் யாவரும் திருமணம் ஆகிச் சில காலம் கழித்தவர்கள் திருமணம் ஆனவுடன் ஆராய்ந்தால் இந்த அதிர்வு-எண் இன்னும் அதிகம் இருக்கும்; நாடோறும் ஒரு தடவையாவது இருக்கும்.

அமெரிக்க ஆடவர்களை ஆய்ந்த கின்ஸே[17] என்பார், இந்த அதிர்வு எண் பெரும்பாலும் கணவனின் வயதைப் பொறுத்து மாறுகின்றது என்று காட்டியுள்ளார். திருமணம் ஆன இருபத்தொன்றிலிருந்து இருபத்தைந்து வயதுக்குட்பட்டவர்கள் வாரத்திற்குசராசரி மூன்று தடவைக்குச்சற்று அதிகமாகவும், முப்பத்தொன்றிலிருந்து முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்கள் வாரத்திற்குச்சராசரிஇரண்டுதடவைக்குச் சற்று அதிகமாகவும் மேற்கொள்ளுவதாகவும் கூறியுள்ளார். இந்த எண்ணும் நாற்பதிலிருந்து நாற்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்களிடம் வாரத்திற்குச் சராசரி ஒன்றரைதடவைகள் விதமும், ஐம்பத்தாறு வயதிற்கு மேற்பட்டவர்களிடம் வாரத்திற்குச் சராசரி ஒரு தடவைக்குக் குறைந்தும் இருக்கின்றது. எனினும், ஒவ்வொரு வயதுக் குழுவிலுள்ளோரிடமும் வீச்சில்[18] அதிக வேறுபாடும் காணப்பெறுகின்றன.

மேற்கண்ட ஆராய்ச்சிகளிலிருந்து வாரத்திற்கு இத்தனை தடவைதான் கலவி புரிதல் வேண்டும் என்ற பிடிவாதக் கொள்கையை[19] வற்புறுத்த முடியாதென்று ஓரளவு அறிகின்றோமல்லவா? தனிப்பட்டோரின் பால்திறன், பால்விருப்பம், அடிக்கடி மாறுபடக்கூடிய பல்வேறு நிலைகள், சூழ்நிலைகள் போன்ற பல்வேறு கூறுகள் கலவியின் அதிர்வு எண்ணை அறுதியிடுகின்றன. உடல்நலக் குறைவு, குறைவான உணவு, அளவுக்கு மீறிய வேலை, உள்ளக்கிளர்ச்சிச் சோர்வு

17. கின்ஸே—Kinsey
18. வீச்சு—Range
19. பிடிவாதக் கொள்கை—Dogmatism

முதலியவை பால் தூண்டலைக் குறைத்துவிடும்; ஓய்வு, ஊட்ட உணவு, காமத்தை எழுப்பும் தூண்டல்கள், இன்னும் இவை போன்ற கூறுகள் பால் தூண்டலை மிகவும் அதிகரிக்கச்செய்யும். அதிலும் அன்றாடம்வெளியாகும் சிறுகதைகள், தொடர்கதைகளைப் படிப்பதாலும், படக்காட்சிகளை அடிக்கடிப் பார்ப்பதாலும், நாடகம் நாட்டியம் போன்ற கேளிக்கைகளில் அதிகம் ஈடுபடுவதாலும் மக்களிடையே இணைவிழைச்சு நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றது என்பதைக் கூற வேண்டியதில்லை.

தனிப்பட்டோரிடம் இயல்பாக எழும் விருப்பம், அவருடைய பால்திறன் ஆகிய கூறுகள் பாலுறவினைக் கட்டுப்படுத்தவே சிறந்த விதியாகும். கலவி புரிந்தவுடன் ஒருவரிடம் ஏற்படும் உடற்சோர்வினை இதனை அறுதியிடும் அளவாக கொள்ளலாம். புணர்ச்சி முடிவுற்றதும் அல்லது அதற்கு மறுநாளும் ஒருவரிடம் அதிகச் சோர்வு காணப்பெற்றால், அவர் கலவி செயல்களை குறைத்துக் கொள்ளல் வேண்டும். எனினும், கலவிச்செயலுக்குப் பின்னர் ஒருவிதத் தளர்ச்சியும் திருப்தியும் இருக்குமாயின், அது பாலுறவுகள் அவரிடம் அதிகப்படவில்லை என்பதற்கு அறிகுறியாகும். எனவே, தம்பதிகள் 'அளவுக்கு மீறினால் அமிழ்தமும் நஞ்சு' என்ற பழமொழியை நினைவிற்கொண்டு தமது உடல்நிலை, மனநிலைக்கேற்றவாறு கலவியை மேற்கொள்ளலே சாலச் சிறந்தது என்பதை உணர்வாயாக.

**கணவன்-மனைவியின் பால் வேட்கை வேற்றுமை:** இசைக் கச்சேரியில் தாளமும் சுருதியும் ஒத்துக்கொள்ளாதபொழுது பாடகர் அவற்றை அநுவத்திலெழுந்த இலாவகத்தால் சரிப்படுத்திவிடுகின்றார்; இசை விருந்தும் இனிதாக அமைகின்றது; அங்ஙனமே, கணவன் மனைவியரிடையே எழும் பால்வேட்கையின் அளவில் வேறுபாடு இருப்பின், கூடியவரை அவர்கள் தம்முடைய ஒத்துழைப்பால் அதனைச் சமாளித்துக்கொள்ள முயலவேண்டும்; அப்பொழுது இல்வாழ்க்கையாகிய வீணையில் தக்க பொருத்தப்பாடுகள்

அமைந்து சிறப்பாக இயங்கும். திருமணத்தில் பொருத்தப் பாடு ஏற்படுவதற்கு இது மிகவும் இன்றியமையாதது என் பதை ஒவ்வொரு மணமக்களும் உணர்ந்துகொள்ளல் வேண்டும். பால்வேட்கையில் இருவரிடையேயும்குறிப்பிடத்தக்க அளவு அதிகவேற்றுமையிருப்பின், அதுபால் சங்கடங்கட்கும் பால் இணக்கமின்மைக்கும் இடங்கொடுப்பதாகஇருக்கும். இதனை இருவரும் ஒருவருக்கொருவர் பரிவுடனும் ஒருவரையொரு வர் நன்குபுரிந்துகொள்ளும் மனப்பான்மையுடனும் அனுகித் திருப்தியான முறையில் சரிப்படுத்திக் கொள்ளல் வேண்டும். இதற்குப் பல்வேறு நிலைகளைக் கவனித்தல் வேண்டும். கலவி புரிவதில் பொதுவாகஆணே தொடங்கி வைப்பதுடன் செயற் படவும் செய்கின்றான். பெண் உயிரியல் அடிப்படையில் செயற்படா நிலையில் ஆணை ஏற்கவேண்டியவளாகவும் உள் ளாள். நம்முடைய சமூக வாழ்வில் இச் செயற்படாநிலை பயிற்சியாலும், பயிற்றலாலும், மரபு வழியாக வரும் பழக் கத்தாலும் சதா வற்புறுத்தப்பெற்று வருகின்றது. சில சமூகங்களில் தம்பதிகள்இருவரும் தொடங்கிவைப்பதாலும் செயற்படுவதிலும் சரிசமமாக இருந்தபோதிலும், பெரும் பாலான சமூகங்களில் பாலுறவுகளில் பெண் செயற்படா நிலையையே மேற்கொள்ள வேண்டியுள்ளது. ஆகவே, சாதா ரணமாகத் திருமணம் ஆன தொடக்கக் காலத்தில் பால் இணக்கத்தில் மனைவி தொடங்கிவைக்கும் செயலை மேற் கொள்வது அரிது; பெரும்பாலான உறவுகள் கணவனது விழைவுகளையொட்டியே நடைபெற்று வருகின்றன. மேலும் இளவயதுடைய மனைவியின் பால்துடிப்புகளும் உறங்கிய நிலையிலிருப்பதால்[20] முதலில் அவள் தன்னுடைய பால் தேவைகளையும் பால்திறன்களையும் அறிந்துகொள்வதிலும் இயலாத நிலையிலிருக்கின்றாள். சிறிது காலம்வரை திருமண உறவுகள் ஓரளவு நன்முறையில் அமைந்த பின்னரே அவ ளுடைய காம இச்சைகளும் கிளர்ந்தெழுந்து வளரத் தொடங்குகின்றன; ஆகவே, அவற்றைப் பாலுறவிற்கு ஒரு

---

20. உறங்கிய நிலை—Dormant state

வழிகாட்டியாக மேற்கொள்ளலாகாது: இவ்வுண்மையினை நன்குணர்ந்த பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற கவிஞர் பொருள் வயிற்பிரியும் தலைவனுக்குத் தோழி உணர்த்தும் வாயிலாக,

"உண்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றாகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவ தன்றே;"[21]

என்ற அடிகளில் இதனைப் பெற வைக்கின்றார். "பசியுடையார் அஃதில்லாரிடத்துச் சென்று தாழ்வு சொல்லி இரந்து நின்று உணவுக் கடன் பெற்றுத் தம் பசி தீர்வதுபோல, முன்னர் வேட்கையுடைய நீ வேட்கை பிறக்கின்ற பருவத்தளாய தலைவியிடத்து வந்து தாழ்வு சொல்லி இரந்து நின்று அவளது நலத்தினை நுகர்ந்து உனது வேட்கை தீர்ந்தனையே! அப்பசி தீர்ந்தார் பின்னர்ப் பசியுற்றவிடத்து, 'முன்னர் எம்மாற் பசி தீர்ந்தவராய இவர் இன்று எமது பசியைப் போக்காமற் போகார்' என்று துணிந்து அவரிடம் சென்று இரந்த வழி அவர் சிறிதும் இரங்காதது போல, உன்வேட்கை தணித்தவள் பின்னர் வேட்கை பிறந்த பருவத்தளாயவிடத்து, 'முன்னர் என்னால் வேட்கை தணிந்தவராய இவர் இன்று எனது வேட்கையைத் தணியாமற் போகார்' என்று துணிந்து, உன்னிடம் வந்து இரந்தவழி நீ சிறிதும் இரங்கலையே!' என்ற தோழியின் குறிப்பு ஈண்டு எண்ணற்பாலது; மேலும், ஆணைப் பொறுத்தே அடிக்கடி மேற்கொள்ளப் பெறும் பாலுறவுகளும் நடைபெற வேண்டியுள்ளன என்பதற்கு மற்றொரு காரணமும் உள்ளது. பாலுறவுக்குப் பெண் இணங்கக் கூடியவளாக இருந்தாலும், அல்லது விருப்பமின்றியே பணியக்கூடியவளாக இருந்தாலும், ஆணிடம் காம இச்சை எழாவிட்டாலும், அஃது எழுந்தும் விறைத்தல் நிகழாவிட்டாலும் அவன் இணைவிழைச்சில் எங்கு பெறமுடியாது. அவனிடம் விருப்பமில்லாவிடினும், அல்லது தற்காலிகமாக அவனிடம் சோர்வோ களைப்போ

21. பாலைக்கலி 21

ஏற்பட்டிருப்பினும், அவன் பாலுறவில் பங்கு பெறுவது சாத்தியப்படுவதில்லை. ஆகவே, திருமணத்தில் பாலுறவு கொள்வதில் கணவனது பால்திறனே பெரும் பங்கு பெறுகின்றது என்பது நன்கு உளங்கொள்ளத் தக்கது.

எனவே, பாலுறவுகளைக் கட்டுப்படுத்தித் தன் மனைவியின் விருப்பத்திற்கேற்பவும் ஒருநெறிப்படுத்தும் செயல் கணவன் கையில்தான் உள்ளது. அவன் தன்னுடைய விழைவுக்கேற்பப் பாலுறவினை வலுவந்தமாக மேற்கொள்ளாது தன் மனைவியின் பால்துலங்கலுக்கேற்பவும், தான் அணுகும்போது அவள் புரியும் எதிர்வினைகளுக்கேற்பவும் மட்டுப்படுத்திச் சரிப்படுத்திக்கொண்டு கலவியை மேற்கொள்ளல் வேண்டும்; பாலுறவில் இறங்குவதற்கு அவளிடம் திட்டமான மறுப்புகளிருப்பின், கணவன் அவளைப் பாலுறவிற்கு வலுக்கட்டாயப்படுத்தலாகாது. பாலுறவினால் அவள் முழு மன நிறைவு கொள்ளக்கூடிய செவ்வியை அறிவதற்கு அவன் முயலவேண்டும்; மேலும் கணவனே பாலுறவினைத் தொடங்கி வைக்கவேண்டும், மனைவியைத் தழுவ வேண்டும் என்ற நியதியையும் மேற்கொள்ள வேண்டுமென்பதில்லை; அடிக்கடி மனைவியும் கணவனை அணுகுவதில் முயற்சியெடுத்து அவனைக் கட்டித் தழுவுதல் இருவருக்கும் இன்னும் அதிக மகிழ்ச்சியை அளிக்கும். எனவே பொதுவாக ஏனைய கூறுகளிலெல்லாம் பொருத்தப்பாடுகளைக் கொண்டுள்ள கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் ஆழ்ந்த அன்பினையும் பரிவினையும் கொண்டிருப்பதால் இருவருக்கும் இணக்கத்தையும் திருப்தியையும் தரும் காலத்தையறிந்து அதில் பாலுறவு கொள்ளுவதில் யாதொரு சங்கடத்தையும் அடைய வேண்டியதில்லை. ஆயினும், அவர்கள் ஒருவர் மற்றவருக்குத் தன்னுடைய உணர்ச்சிகளையும் விழைவுகளையும் வெளிப்படையாகத் தெரிவித்துக் கொள்வது மிகமிக முக்கியமாகும் என்பதை உணர்வாயாக:

பால் விழைவில் நாள் இயக்கம்: ஒரு பெண்ணின் வாழ்க்கையில் மாதந்தோறும் சில நாட்களில் அவளிடம் பாலுந்

தல் அதிகமாகவும், சில நாட்களில் குறைவாகவும் ஒரு தாள இயக்கம்போல் இருப்பதாக அறிஞர்கள் ஆராய்ந்து கண்டுள் ளனர். ஹேவ்லக் எல்லிஸ், மேரி ஸ்டோப்ஸ், காத்தரின் டேவிஸ் போன்றவர்களும் பிறரும் ஒரு பெண்ணின் மாத விடாய் வட்டத்தில் அவளிடம் ஏற்படும் பால் விருப்பத்தில் ஏற்றமும் இறக்கமும் இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். பெரும்பான்மையோரிடம் இதனைக் காணலாம் என்று மருத்துவ நிபுணர்களும் கூறுகின்றனர். மாதவிடாய் தோன்றுவதற்குச் சில நாட்களுக்கு முன்னிருந்தே தம்மிடம் காம இச்சை அதிகம் எழுவதாகப் பெரும்பான்மையான பெண்கள் கூறுகின்றனர்; இன்னும் சிலர் மாதவிடாய் தோன்றியதற்குப் பிறகு தம்மிடம் இச்சை அதிகமாக வுள்ளது என்றும் செப்புகின்றனர். பின்னர்க் கூறிய நிலை சிலரிடமே காணப்பெறலாம். நான்கைந்து நாட்கள் பாலுறவு கொள்ளாதிருந்தமையால் ஏற்பட்ட விடாயே இதற்குக் காரணமாகலாம் என்றும் கருதலாம். மாதவிடாய் குப் பின்னர் பிறப்புறுப்புகளில் தோன்றும் மாற்றங்கள் உச்சநிலையிலிருப்பதில்லையாதலின். உடலியலடிப்படையில் இதற்குக் காரணம் ஒன்றும் இல்லை. ஒரு சில பெண்கள்—மிகக் குறைவான எண்ணிக்கையிலுள்ளோர்—மாதவிடா யின் பொழுதே பாலுறவு கொள்வதற்கும் விழைகின்றனர். மாதவிடாய் வட்டத்தின் நடுப்பகுதியில் ஒரு சில நாட் களில் பால் விருப்பம் அதிகமிருப்பதாக மேரிஸ்டோப்ஸ் குறிப் பிடுகின்றார். ஆனால் பெரும்பான்மையான மருத்துவ நிபுணர்கள் மாதவிடாய் தோன்றுவதற்குச் சில நாட்களுக்கு முன்னரும் மாதவிடாய் வட்டத்தின் நடுப்பகுதியில் முட்டைப் பக்குவம் அடையும் காலத்திலும் இச்சை அதிகம் இருப்பதாகக் கருதுகின்றனர். ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் அவளிடம் ஏற்படும் பால் துடிப்புகள் படத் தில் (படம்–55) காட்டப்பெற்றுள்ளன. தொடர்ந்தாற் போல் நிகழும் இரண்டு மாதவிடாய் வட்டங்களைப் படம் உணர்த்துகின்றது. ஆயினும், தனிப்பட்டோரிடம் இவ் வாறு தோன்றுவதில் மாற்றம் இருக்கலாம்; ஒவ்வொரு

பெண்ணும் இதனைக் கவனித்து அவளே அறிந்துகொள்ள முயலுதல் வேண்டும்.

பால் விழைவும் முட்டை பக்குவமும்: மேற்கூறியவற்றிலிருந்து ஒரு பெண்ணின் மாதவிடாய் வட்டத்தில் முட்டை தோன்றும் பருவத்திற்கும் காம இச்சை எழுவதற்கும் யாதாவது தொடர்பு உள்ளதா என்பதையறிய ஆவலுள்ளவனாயிருப்பாய் என்று கருதுகிறேன்: பிராணிகளின் வாழ்க்கையில் இந்த இரண்டிற்கும் ஒரே திட்டமான குறிப்பிடத்தக்க உறவு இருப்பதைக் காணலாம். உண்மையில், இச்சையின் உச்சநிலையும் முட்டை தோன்றும் நாளும் விலங்கு வாழ்க்கை




படம்—55: ஒரு பெண்ணிடம் காம இச்சை எழும் நாட்களைக் குறிப்பிடுவது.

யில் பொருந்துகின்றன; பெண் பிராணி புணர்ச்சியினை நாடி அலையும் காலம் பெரும்பாலும் அதனிடம் முட்டை பக்குவமடைந்து சூற்பையினின்றும் வெளிப்படும் காலத்தையொட்டியே உள்ளது. ஆகவே, புணர்ச்சி நடைபெற்றதும் அது கருவுறுகின்றது. 'காளைக்குக் கத்தும்' பசுவினைப் பொலி

காளை பாலுறவு கொண்டதும் அப்பசு கருவுறுவதிலிருந்து நாம் இதனை அறியலாம். எனவே, கீழான உயிரினங்களிடம் புணர்ச்சி பலனளிக்கும் என்ற நிலையில்தான் அவைகளிடம் இணைதல் நடைபெறுகின்றது. பெரும்பான்மையாக இந்நிலையைப் பிராணிகளின் வாழ்க்கையில் காணலாம். மானிடக் குரங்குகள் போன்ற உயர்நிலைப் பிராணிகளிடம்[22] எப்பொழுது வேண்டுமாயினும் புணர்ச்சி நிகழும். ஆனால், அவற்றிடமும் பால் விருப்பமும் பால் நடத்தையும் ஒரு மாதத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில்தான் அதிகமாகக் காணப்பெறுகின்றன. முட்டை பக்குவப்படும் காலத்தில்தான் இங்ஙனம் தோன்றுகின்றன என்று அறிவியலறிஞர்கள் கூறுகின்றனர்.

மானிடப் பெண்ணிடமும் முட்டை பக்குவப்படும் காலத்திற்கும் காம இச்சை எழும் காலத்திற்கும் உள்ள தொடர்பு தெளிவாக அறியக்கூடியதாக இல்லை. மேலே குறிப்பிட்ட காம இச்சை எழும் இரண்டு காலங்களில் மாதவிடாய் தோன்றுவதற்கு முன்னருள்ள காலம் பெண் கருவுறுவதற்கான காலம் அன்று. முட்டை தோன்றும் காலம் பெண் கருவுறுவதற்குரிய காலமாக இருப்பினும், அவ்வுண்மை இன்னும் ஆராய்ச்சிகளால் உறுதிப்படுத்தப்பெறவில்லை. முட்டை பக்குவப்படுங்கால் பெண்ணிடம் நேரிடும் உள்ளக்கிளர்ச்சிக் குலைவுகளின்றும் அவளிடம் காம இச்சை எழுவதற்கு இயற்கையே துணை செய்கின்றது என்று காரண காரியப் பொருத்தம் காணலாம். அங்ஙனமே, மாதவிடாய் தோன்றுவதற்கு முன்னர் கருப்பையின் அணைச்சவ்வில் குருதி நெருக்கடி ஏற்பட்டு அஃது உப்புவதால் அப்பொழுதும் அவளிடம் ஒரு வகைக் கிளர்ச்சி எழுகின்றது என்றும் கூறுகின்றனர். மேலும், கருவுறுவதற்கு வாய்ப்பில்லாத காலத்தும் பெண் பாலுறவு கொள்வதற்கு விரும்புவதினின்றும் ஓர் உண்மை அறியக்கிடக்கின்றது. அஃதாவது, மனிதர்களைப் பொறுத்த மட்டிலும் பால்நடத்தை இனப்பெருக்கத்தை முன்னிட்டு

22. உயர் உயிரினம்—Primate

மேற்கொள்ளப்பெறுவதுடன், அதில் ஒரு திட்டமான சமூக உயிரியல் மதிப்பும் அடங்கி உள்ளது என்று கருதவும் இடம் உண்டு. எப்பொழுது வேண்டுமாயினும் பெண் ஆணைப் பாலுறவிற்கு ஏற்பதால்தான் மேலான உயிர்களிடம் பாலுறவிலும் ஒருவளர்ச்சி காணப்பெறுகின்றது; குடும்ப வளர்ச்சியும் தலைக்காட்டுகின்றது. மனிதர்களிடம் இக் குடும்பம் மிக உயர்ந்த நிலையில் அமைந்து நாகரிக வளர்ச்சிக்கும் பண்பாட்டு வளர்ச்சிக்கும் உயிர்நாடியாக இலங்குகின்றது.

சில வகை உயிரினங்களில் பெண்ணிடம் தோன்றும் இச்சையில் ஓர் ஒழுங்குமுறை இருப்பதைப் போலவே, ஆணிடமும் ஒழுங்குமுறை அமைந்துள்ளது. இவ்வுயிரினங்களில் ஆண் ஆண்டின் சில குறிப்பிட்ட பருவங்களில் விந்தணுக்களை உற்பத்தி செய்வதில்லை; இப்பொழுது அதன் பால் செயல்கள் உறங்கிய நிலையிலுள்ளன. உயிரினங்களில் பெண்ணைப் போலன்றி ஆண் தொடர்ந்து விந்தணுக்களை உற்பத்தி செய்துகொண்டே இருப்பதால் அஃது எப்பொழுதுவேண்டுமாயினும் பெண்ணைக் கருவுறச் செய்யக்கூடியதாக உள்ளது; அதற்கேற்றாற்போலவே அதன் பால்விருப்பங்களும் பால் செயல்களும் பருவ வேறுபாடுகளுக்கேற்ப மாறக்கூடியன. வாக இல்லை. மனிதனைப் பொறுத்தமட்டிலும் அவனிடம் யாதொரு பால்வட்டமும்[23] இருப்பதாகத் தெரியவில்லை; இதுகாறும் அஃது ஆராய்ந்து கண்டறியப்பெறவும் இல்லை; சில சமயம் அவனிடம் தோன்றும் இச்சையின் ஏற்றமும் இறக்கமும் சூழ்நிலைகளையோ அல்லது பொதுவாக உடல், உள்ளக்கிளர்ச்சிகளில் நேரிடும் மாற்றங்களையோ பொறுத்தவையேயன்றி அவை உடலியல் அடிப்படையில் அமைந்தவை அன்று என்பதை உளங்கொள்வாயாக.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து எப்பொழுதும் கணவன் மனைவியின் காம இச்சையின் உச்சநிலையை அறிந்துதான் அவளிடம் பாலுறவு கொள்ளல் வேண்டும் என்ற தவறான கருத்தினைக்கொள்ளற்க. கணவன் மனைவியின் விருப்பத்தை

23. பால்வட்டம்—Sexual cycle

அறிவதற்கு ஓரளவு முயலவேண்டும் என்று தெரிவிப்பதற்கும். அது சரியான திருமண உறவுகளை விளைவிப்பதற்கும் நல்ல இணக்கத்தையும் பால் பொருத்தத்தையும் ஏற்படுத்துவதற்குத் துணைபுரியக் கூடுமென்று வற்புறுத்துவதற்குமே இவ்வளவு தூரம் விளக்கினேன்; மேலும் மனைவியிடம் இச்சை எழும் இந்தக் காலங்களில் மட்டிலுந்தான் கணவன் அவளிடம் தொடர்பு கொள்ளல் வேண்டும், ஏனைய காலங்களில் கொள்ளவே கூடாது என்ற கட்டுப்பாடும் இல்லை. நல்ல பொருத்தப்பாடுற்ற தம்பதிகளுள் ஒருவரிடம் இச்சையே இல்லாதிருந்து மற்றவரின் இச்சைக்காக மேற்கொள்ளப்பெறும் புணர்ச்சியில் இரு பாலாரும் திருப்தியான அநுபவங்களைப் பெறும் சந்தர்ப்பங்களும் உள்ளன என்பதை அநுபவத்தில்தான் நீ நன்கு அறிவாய்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 42

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனுக்கும் பிறவற்றிற்கும் அடிக்கடி எழுதுக.

மாதவிடாயின்பொழுது உறவு: ஒரு சில பெண்கள் மாத விடாயின் பொழுதே இணைவிழைச்சு புரிய விழைகின்றனர் என்று சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? சில ஆடவர்களும் அந்நாளில் உறவு கொள்ள விழைகின்றனர். இதனால் இருபாலாருக்கும் தீங்கொன்றும் நிகழாதா? என்பதுபற்றி ஆராய விரும்புகின்றேன். முதலில் பண்டையோரின் கருத்து யாது என்பதைக் காட்டுவேன்.

> தீண்டாநாள் முந்நாளும் நோக்கார்நீ ராடியபின்
> ஈராறு நாளும் இகவற்க என்பதே
> பேரறி வாளர் துணிவு.[24]

[நோக்கார்-நினையார்; இகவற்க-பிரியற்க, அகலற்க.]

என்பது ஆசாரக் கோவை. முதல் மூன்று நாட் கூட்டமும் நோய்க்கு இடமாதலானும், முதல் மூன்று நாளும் கருவமையாமையானும் முதல் மூன்று நாட்கள் 'தீண்டா நாட்கள்' ஆயின. இதுபற்றியே பூப்பு 'தீட்டு' என்று வழங்கப் பெறுகின்றது: இந்த ஆசாரக்கோவைச் செய்யுளை விளக்குவதுபோல,

> 'பூத்த காலைப் புனையிழை மனைவியை
> நீரா டியபின் ஈராறு நாளும்
> கருவயிற் றுறூஉங் கால மாதலின்
> பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்.'[25]

---

24 ஆசாரக் கோவை-42

25. இலக்-அகத்திணை-நூற்-87

என்ற இலக்கண விளக்க நூற்பா அமைந்திருப்பதைக் காண்க. மேலும், தலைவனின் பரத்தையிற் பிரிவில் தலைவிக்குப் பூப்பு நிகழின் தலைவன் எவ்வாறு ஒழுகுவான் என்பதைக் குறிப்பிடும்,

பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி
பூப்பின் பிறப்பா டீரா றுநாளும்
நீத்தகன் றுறைதல் அறத்தா றன்றே.[26]

என்ற இறையனார் அகப்பொருள் நூற்பாவின் உரையில் வாயில்களால் தலைவியின் பூப்பினை அறிந்த தலைவன் எவ்வாறு ஒழுகுவான் என்பதை நக்கீரர் இவ்வாறு விளக்குவர்; "......பூப்பு உணர்த்தப்பெற்ற தலைமகன், வாயில்களோடுஞ் சென்று, தலைமகளிடத்தானாய், முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைவானாவது. 'முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைதற்குக் காரணம் என்னை?' எனின், தலைமகன் பரத்தையர் மாட்டானாக முன்னின்ற பொருளை உண்டென்று எய்தும். முந்நாளுஞ் சொற்கேட்கும் வழி உறையவே நீங்கும். நீங்கியபின்றைக் கூடும். ஆகவே, கரு நின்றது மாட்சிமைப்படும். அது நோக்கி உணர்த்தப் பட்டது; அதனான் அறமெனப்பட்டது. அல்லாவிடில், தலைமகள்மாட்டு ஒரு பொருளை தோன்றும் பரத்தையர் மாட்டு நின்று வந்தானென; அப்பொருளை ஒரு வெகுளியைத் தோற்றுவிக்கும்; அவ்வெகுளி பெரியதோர் வெம்மையைச் செய்விக்கும்; அவ்வெப்பதினால் கருமாட்சிமைப்படாதாம்; படாதாமாகவே, அறத்தின் வழுவாம் என்பது. அதனான், முந்நாளுஞ் சொற்கேட்கும் வழி உறையல்வேண்டுமென்பது. 'பூப்புப் புறப்பட்ட முந்நாளும் உள்ளிட்ட பன்னிரு நாளும் என்பது துணிவு' என்றார்க்கு, முந்நாளுங்கூடி உறையப் படுங் குற்றம் என்னோ எனின், பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றில் அழியும்; இரண்டாம் நாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறு வாழ்க்கைத்

26. இறை—கள—நூற். 43.

தாம்; வாழினுந் திருவின்றும்; அதனாற் கூடப்படாது என்பது

"பூப்புமுதல் முந்நாள் புணரார்; புணரின்
யாப்புறு மரபின் ஐயரும் அமரரும்
யாத்த கரணம் அழியும் என்ப.

எனப் பிறரும் ஓதினாராகலான், அமையாதென்பது." நச்சினார்க்கினியரின் இந்த உரைப் பகுதியினால் மாதவிடாயின் பொழுது இணைவிழைச்சே கூடாது என்பது பண்டையோரின் விதி என்பது ஒருவாறு தெளியப்பெறும். இன்னும் தொல்லாசிரியராகிய தொல்காப்பியரும்,

பூப்பின் புறப்பா டீரா றுநாளும்
நீத்தகன் றுறையர் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.[27]

என்ற கற்பியல் நூற்பாவால் விதி செய்திருப்பதையும் காண்க. "பரத்தையர் சேரியானாயினும் பூப்புத்தோன்றி மூன்று நாள் கழிந்த பின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று என்றவாறு. இதனாற் பயன் என்னையெனின், அது கருத்தோன்றும் காலம் என்க" என்று இளம்பூரணரும்; "பூப்பின் முன்னாறு நாளும் பின்னாறு நாளும் என்றும், பூப்புத் தோன்றிய நாள் முதலாகப் பன்னிரண்டு நாளும் என்றும், நீத்தல் தலைவன்மேல் ஏற்றியும், அகன்றலைத் தலைவிமேல் ஏற்றியும் உரைப்பாரும் உளர்......பூப்புப் புறப்பட்ட ஞான்றும் மற்றைநாளும் கருத்தங்கில், அது வயிற்றில் அழிதலும் மூன்றாம் நாள் தங்கில் அது சில்வாழ்க்கைத் தாகலும்பற்றி முந்நாளும் கூட்டம் இன்று என்றார்" என்று நச்சினார்க்கினியரும் கூறும் விளக்க உரைகளாலும் இது நன்கு தெளியப்பெறும். இவ்விடத்தில் குடும்பக் கட்டுப்பாடுபற்றிக் கூறும்பொழுது கூடுபருவத்தை வரையறுத்துக் காட்டிய பகுதியில் கண்ட கருத்துகளுடன் இவ்வறிஞர்களின் கருத்துகளை ஒப்பிட்டு உணர்க.[28] இன்று நடை

27. தொல்-பொருள்-கற்: 46 (இளம்.)
28. இந்நூல்-பக்கம். (253-266)

முறையில் பெரும்பாலான சமூகங்களில் மாதவிடாய் ஆகியுள்ள பெண்களைத் தனியாகவே ஒதுக்கி வைக்கின்றனர். விவிலிய நூலிலும் இவ்வாறு ஒதுக்கி வைக்கும் பழக்கம் குறிப்பிடப்பெற்றிருப்பதுடன், விலக்கான பெண்ணுடன் உறவு கொள்ளுதல் ஆபத்து என்றும், பாபம் என்றும் கூறப் பெற்றுள்ளது.

அறிவியலாரின் கருத்து: இனி, இன்றைய அறிவியலாரின் கருத்தினை ஆராய்வேன். இன்று 'நாகரிக மக்கள்' மாதவிடாய் ஆகியுள்ள பெண்ணிடம் யாதொரு குறிப்பிட்ட 'தூய்மையின்மை'யும் இருப்பதாகக் கருதவில்லை. சில ஆராய்ச்சியாளர்கள் பெண்களின் மாதவிடாய் ஒழுக்கில் சில நச்சுப் பொருள்கள் இருப்பதாகக் கண்டறிந்திருந்த போதிலும், மாதவிடாய் ஒழுக்கு ஒரு தொற்று என்று கருதுவதே முடப்பழக்கத்தின் அறிகுறி என்று சிலரால் கருதப் பெறுகின்றது: நாகரிகம் அடைந்த சமூகங்களில் மாதவிடாய் ஆகியுள்ள பெண்களைத் தீண்டாதிருத்தல் என்ற பழக்கமே மறைந்து விட்டது எனலாம்; அவர்கள் எல்லாச் சமூக உறவுகளிலும் பங்கு கொள்ளுகின்றனர், மாதவிடாய் ஆகியுள்ள பெண்களிடம் இணைவிழைச்சு புரிதலால் யாதொரு தீங்கும் இல்லை என்றும், அது விரும்பத் தகாததன்று என்றும் பெரும்பாலோர் கருதுகின்றனர். எனினும், மாதவிடாயின்பொழுது பெண்களின் பாலுறுப்புகளில் மிக அதிகமான நெருக்கடி ஏற்பட்டுள்ளது என்றும், இந்நிலையில் பாலுறவு கொள்ளின் அதனால் ஒழுக்கு அதிகரிப்பதுடன் பெண்ணுக்கு அதிகமான அசௌகர்யங்களை விளைவிக்கும் என்றும் நாம் நினைவிலிருத்துதல் வேண்டும். மேலும், காப்புறையை அணிந்து கலவி புரிந்தாலும், கலவிக்குப் பின்னர் ஆணின் சிறுநீர்ப் புறவழியில் சில சமயம் ஒருவித எரிச்சல் தோன்றுகின்றது. இது மாதவிடாய்க் கசிவுகள் இப்பாதையில் நுழைந்ததனால் உண்டாகியிருக்கலாம் என்று கருதப் பெறுகின்றது.

மேற்குறிப்பிட்ட மருத்துவக் காரணம் ஒருபுறம் இருக்க, அதிகமாக ஒழுக்கு இருக்கும் பொழுது புணர்தல்

அழகுணர்ச்சியையே பறிபோகச் செய்வதாகும் என்று பெரும்பான்மையோர் கருதுகின்றனர். அன்றியும், விலக்கானவர்களிடம் அதிக பால்விருப்பமும் இராது என்றும் ஒரு கருத்து நிலவி வருகின்றது. 'மாதத் தீட்டு' என்பதே பெண்களால் உண்டாக்கப்பெற்ற ஒருவித ஏற்பாடு என்றும், கருவுறும் நிலைமையில்லாதபொழுது பெண் பிராணிகள் ஆண் பிராணிகளைக் கலவிக்கு ஏற்காதிருப்பது போன்ற ஒருவித நிலையே இதுவாகும் என்றும் பிரிஃபால்ட்[29] என்ற ஓர் அறிஞர் கருதுகின்றார். ஆனால், ஒரு சில பெண்கள் மாதவிடாயின் பொழுது அதிகமான பால்விழைவினைக் கொண்டிருப்பது விதிவிலக்காகுமேயன்றி, அதனைப் பொதுவாக எல்லோரிடமும் காணப்பெறும் இயல்பு என்று கருதுவது கூடாது. ஆகவே, மாதவிடாயின்பொழுது உறவு கொள்வதற்கு வேறு காரணங்களும் இருக்கலாம். இது தனிப்பட்டோரின் யோசனையையும் அவர்கள் மேற்கொள்ளும் முடிவினையும் பொறுத்ததாகும். பெரும்பான்மையான மருத்துவ அறிஞர்கள் இக்காலத்தின்பொழுது கலவி புரிதலால் தீங்கில்லை என்று கருதினும், அவர்கள் யாவரும் கலவி புரியாதிருத்தலே விருப்பப்படுவது என்றும் கூறுகின்றனர். அதிகமான ஒழுக்கிருக்கும்பொழுது பால்தூண்டலே கூடாது என்றும் கருதுகின்றனர்.

கருப்ப காலத்தில் உறவு: பெண்களிடம் கருப்பகாலத்தில் உறவு கொள்வதைப்பற்றிய சில கருத்துகளையும் தெரிவிக்க விரும்புகின்றேன். பெரும்பான்மையான பாலுண்ணிகளிடம் பெண் கருவுற்றதும் அஃது ஆணைப் பாலுறவிற்கு ஏற்பதில்லை அதனுடைய பால்செயல் கருப்ப காலத்திலும் குட்டிக்குப் பாலூட்டும் பருவத்தின் முதற்பகுதியிலும் நின்று போகின்றது. பழங்கால மனிதர்களிடமும் கருப்ப காலத்திலும் குழந்தை பால் பருகும் பருவத்திலும் பாலுறவு கொள்வது தவறு என்ற பழக்கம் இருந்து வந்தது. பிரிஃபால்ட் என்ற அறிஞர் மாதவிடாயின்பொழுது ஏற்படுத்திய தடை

29. பிரிஃபால்ட்—Briffault.

யைப்போலவே பெண்களே இத்தடையை முதன் முதலாகத் தொடங்கியிருக்க வேண்டும் என்றும், இப்பருவத்தில் பெண்ணின் காம உணர்ச்சி ஏறத்தாழ அமைதி பெற்றிருப்பதால் அதையே காரணமாகக் கொண்டு இத்தகைய பால் தடையை விதித்திருக்க வேண்டும் என்றும் கருதுகின்றார். நாளடைவில் படிப்படியாக இக் கட்டுப்பாடுகள் புதிய பொருளைத் தாங்கி பயமும் திகிலும் கொள்ளக் கூடியனவாக மாறிவிட்டன. ஆயினும் அவற்றின் மூலகாரணம் யாதாக இருப்பினும் இன்றைய நாகரிக வாழ்க்கையில் இத்தடைகள் மறைந்தே போயின; கருப்ப காலத்தில் உறவு கொள்வதை மக்கள் தீங்கு தரும் என்றோ அல்லது பாபம் என்றோ கருதுவதில்லை. சுருங்கக் கூறின், நாகரிக வாழ்வில் மக்கள் விலங்கினும் கேடாக மாறிவிட்டனர்.

மருத்துவரின் பரிந்துரை: கருப்பகாலத்தில் பெண்ணுக்கு யாதொரு கோளாறும் இல்லாவிடில் குழந்தை பிறக்கும் எட்டு அல்லது ஆறு வாரங்கள் முன்னர்வரையிலும் பாது காப்புடன் பாலுறவு கொள்ளலாம் என்பது இன்றைய மருத்துவ உலகம் ஆமோதித்த உண்மையாகும். ஒரு சிலர் கருப்பம் ஏற்பட்ட இரண்டு அல்லது மூன்று மாதங்கள் வரையிலும் பாலுறவுகூடாது என்றும் கருதுகின்றனர். காலமல்லாக்காலத்தில் பிரசவம் ஏற்பட்டுவிடும் என்ற சந்தர்ப்பத்திற்கு இடங்கொடுக்கக் கூடுமாதலாலும், கருக்குழலிலும் கருப்பையிலும் பாக்டீரியா புகுவதற்கு ஒரு வாய்ப்பினை விளைவிக்கக் கூடுமாதலாலும் கருப்பகால இறுதியில் பாலுறவினைத் தவிர்க்க வேண்டும் என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். எனினும், ஒரு பெண்ணிடம் ஏற்கனவே கருக்குலைவு ஏற்பட்டிருந்தாலும், அல்லது கருக்குலைவினை முன்னறிவிக்கும் குருதிக் கறையும் வலிப்பும் தென்பட்டாலும் கருப்ப கால முழுவதிலும் பாலுறவினை மேற்கொள்ளவே கூடாது. இந்நிலையிலுள்ள பெண் மருத்துவர் யோசனையையும் அடிக்கடி நாடுதல் வேண்டும்.

கருப்பகாலத்தில் கலவியை மேற்கொள்வதிலும் அதனைப் புரிவதிலும் ஒரு நிதானமும்வேண்டும். அடிக்கடியும் கூடாது; வன்மையாகவும் புரிதல் கூடாது. கருப்பகாலத்தில் யோனிக்குழல் சிறுத்துவிடும்; குறுகியும்போகும். கருப்பையின் மீது அழுக்கத்தைத் தவிர்க்க வேண்டுமாதலின் குறியினை ஆழச் செலுத்துதல் கூடாது. ஆகவே, இக்காலத்தில் மேற்கொள்ளப்பெறும் புணர்ச்சியில் பின்-நிலை, பக்கவாட்டு-நிலை அல்லது கத்தரிக்கோல்-நிலை ஆகிய மூன்று நிலைகளும் ஒரு கருவினைத் தாங்கும் பெண்ணுக்கு மிகவும் ஏற்றனவாக இருக்கும் என்று மருத்துவ நிபுணர்கள் கருதுகின்றனர்.

கருவுயிர்த்தலுக்குப்பின் கலவி: *சாதாரணமாக* ஒரு பெண் கருவுயிர்த்த ஆறு வாரங்கள் வரையிலும் அவளுடன் பாலுறவு கொள்வதைத் தவிர்த்தல் வேண்டும். பழங்காலத்தில் குழந்தை பால் குடிக்கும் வரையிலும் மனைவியிடம் கணவன் பாலுறவு கொள்ளல் கூடாது என்ற விதியும் இருந்தது. சிலரிடம் தாய் குழந்தையைப் பராமரிக்கும் வரையிலும் பாலுறவு கொள்ளாப் பழக்கமும் இருந்து வந்தது. இக்காலம் மூன்று ஆண்டுகள் வரையிலும்,—ஏன்? அதற்கு மேலும்—நீடிக்கக்கூடியதாக இருந்ததால், கருவுற்ற பிறகு ஒரு பெண் சில யாண்டுகள் பாலுறவே கொள்ளும் வாய்ப்பே இல்லாதிருந்தது. இதனால்தான் பரத்தையிற் பிரியும் வழக்கமும் தமிழ் நாட்டில் இருந்தது போலும்! இத்தகைய குறிப்புகளை தமிழ் அகப்பொருள் இலக்கியங்களில் காணலாம். கருவுயிர்த்த பெண்ணிடம் உறவு கொள்ளுவதுபற்றிய தடை விவிலிய நூலில் அதிகக் கடுமையானதாக இல்லை. மோசைக் சட்டபடி[30] ஆண் குழவியைப் பெற்றெடுத்த பெண் நாற்பத்தொரு நாட்களும், பெண் குழவியைப் பெற்றெடுத்த பெண் எண்பது நாட்களும் தீட்டுள்ளவளாகக் கருதப் பெற்றாள். இத்தகைய வேறுபாட்டிற்கு உடலியல் பற்றிய காரணம் தெளிவாக அறியக்

---

30 மோசைக் சட்டங்கள்—Mosaic Laws:

கூடவில்லை; ஆயினும், இந்த ஆறுவார இடைவெளி இன்றைய மருத்துவர் கூறும் ஆறு வாரத்துடன் பொருந்து கின்றது. கருப்ப காலத்திலும் கருவுயிர்க்கும்பொழுதிலும் பெண்ணின் பிறப்புறுப்புகள் மிக அதிகமான மாற்றங்களை அடைகின்றன என்பது வெளிப்படை; அவை சாதாரண மாகத் தம்முடைய பழைய நிலையை அடைவதற்குக் குறைந் தது ஆறு வாரங்களாவது வேண்டும் என்பது மருத்துவர் களின் கருத்து. எனவே, இக்காலத்தில் பாலுறவு கொள்ளா மல் அவற்றின் இயல்பான சுருக்கத்திற்கு வாய்ப்புத்தர வேண்டியது மிகவும் இன்றியமையாதது என்பதை ஒவ் வொரு மணமக்களும் உணர்தல் வேண்டும்.

சூதக ஓய்வினால் ஏற்படும் மாறுதல்கள்: முன்னொரு கடிதத்தில்[31] சுமார் நாற்பத்தைந்து வயதில் பெண்களுக்கு ஏற்படும் சூதக ஓய்வினைக் குறிப்பிட்டேன் அல்லவா? பெண் களிடம் இந்த மாற்றம் ஏற்படுவதற்குச் சற்று முன்னரும் ஏற்படுங்காலத்திலும் எத்தனையோ விதமான கோளாறுகள் நேரிடலாம். அவற்றினையெல்லாம் ஈண்டுவிரிவாக விளக்கு தற்கு இடம் இல்லை; அவற்றை அறிஞர் நூல்களில் கண்டு தெளிக.[32] ஒரு சிலதகவல்களை மட்டிலும் ஈண்டுத் தருகிறேன். இப்பருவத்தில் ஏற்படும் மாறுபாடுகளை உடல் மாறுபாடுகள், உளமாறுபாடுகள் என்று பகுத்துப் பேசலாம்.

உடல் மாறுபாடுகள்: முதலில் உடலில் ஏற்படும் மாறு பாடுகளைக் கூறுவேன். சில பெண்களிடம் பெண்ணுருவமே மாறிவிடுகின்றது; முகம் ஆண் முகம்போல் தோற்றமளிக் கின்றது. உடலெங்கும் 'ஊளைச் சதை' திரளுகின்றது. இந்த வகைச் சதையும் குறிப்பாகக் கன்னங்கள், தாடைகள் போன்ற இடங்களில் அதிகமாகத் திரளுகின்றது. இதனால் திரைத்த தோலால் மூடப்பெற்ற தொங்கிய கன்னங்கள், கொழுத்த தாடை தோன்றி முக அழகையே மாற்றிவிடு கின்றன.

---

31. இந்நூல்—பக்கம் 147

32. Illustrated Encylopaedia of sex—Chaps 52, 53, 54, 55—(Cadillac Publishing Company. New York.)

சிலருக்குக் கழுத்திலும் கொழுப்பு ஏறுகின்றது; புயங்களிலுள்ள உருண்ட வடிவம் மறைகின்றது; தோல் தொங்கி தசைகளும் மெதுவாகின்றன. கொங்கைகளிலும் அதிகச் சதையேறித் அவற்றைத் தொங்கச் செய்கின்றன. பெரும்பாலோரிடம் பால்சுரப்பிகளே முற்றிலும் மறைந்து விடுகின்றன; முலைக்கண்கள் எடுப்பாகவும் அதனைச் சுற்றியுள்ள இடம் அதிகக் கறுப்பாகவும் தோற்றமளிக்கின்றன; சில சமயம் அந்த இடத்தில் உரோமங்களும் தோன்றுவதுண்டு. உடலிலும், குறிப்பாகப் பால் உறுப்புகள், கால்கள் ஆகியவற்றில், அதிக உரோமங்கள் தோன்றுகின்றன; முதுகிலும் பிற இடங்களிலும் அருவருப்பான தவிட்டு நிறப்புள்ளிகள் தோன்றுகின்றன.

பெண் குறியின் மேலுள்ள தசைகளும் பெரிய உதடுகளும் சுருங்குகின்றன. பெண்குறியும் சிறிதாகித் தொங்குகின்றது. சிறிய உதடுகளும் வற்றி அதிலுள்ள மடிப்புகள் மாறுகின்றன. யோனிக்குழலிலும் மடிப்புகள் மறைந்து வழுவழுப்பான தோற்றம் ஏற்படுகின்றது. அதிலுள்ள சதையும் வற்றி, குழலும் படிப்படியாகச் சுருங்கி, குறுகலாகவும், குட்டையாகவும், நீளும் தன்மையை இழந்தும் போகின்றது. தொடக்கத்தில் கருப்பையில் அதிகக் குருதி ஏறி அளவில் பெருத்த போதிலும், நாளடைவில் அதுவும் சுருங்கி, அளவில் சிறியதாகவும், மெல்லியதாகவும், குறுகலானதாகவும் மாறித் தட்டையான வடிவங் கொள்ளுகின்றது. சூற்பைகளும், கருக் குழல்களும் சுருங்குவதுடன் சூற்பைகள் ஃபாலிகள் உற்பத்தியை இழப்பதால் எண்டோகிரின் மண்டலத்திலேயே பெருமாற்றம் நேரிடுகின்றது. இதனால் பலவிதக் கோளாறுகள் எழுகின்றன. இக்காலத்தில் பெண்களிடம் பல்வேறு நோய்களும் தோன்றலாம். அதிகமாக வியர்த்துக் குளிர் ஏற்பட்டு முகம் சிவத்தல், மயக்கம், பல்வேறுவிதக் காது ஒலிகள், புயங்களிலும கால்களிலும, குத்தல்வலிகள், தலைவலி, குடல் கோளாறுகள், தூக்கமின்மை, வாந்தி, கருப்பைப் புற்றுநோய் போன்ற தொல்லைகளால் பெண்கள் தொல்லையுறுவர். இவற்றை விரிக்கின் பெருகும்.

உள மாறுபாடுகள்: இனி, உள்ளத்தில் ஏற்படும் மாறுபாடுகளைத் தெரிவிப்பேன். சூற்பைகளின் செயல்கள் நின்று போவதே இம்மாறுபாடுகள் ஏற்படுவதற்குக் காரணம் ஆகும். இதனால் பெண்ணின் மனப்பான்மையே மாறுகின்றது. அச்சம், சினம், துயரம், சகிப்புத்தன்மையில் குறைவு போன்ற உணர்ச்சிகள் அடிக்கடித் தோன்றுகின்றன. சாதாரணமாக இவை தனிப்பட்ட பெண்களின் தன்னடக்கம் மீப்பண்பு ஆகியவற்றிற்கேற்ப குறைவாகவோ அதிகமாகவோ உண்டாகின்றன. மேற்கூறியவை யாவும் பழங்காலப் பெண்களிடம் தலைக்காட்டுவதே இல்லை; ஆனால், நாகரிக நாரியர் நரம்புத்தளர்ச்சியாலும் மனக்கோளாறுகளாலும் பாதிக்கப் பெற்றிருப்பதற்கேற்ப இவற்றால் அதிகத் தொல்லைப்படுகின்றனர்.

சூதக ஓய்வின் பொழுது கலவி: சூதக ஓய்வு காலத்தில் கலவி புரியலாமா என்பதையும் உனக்குத் தெளிவுபடுத்த விரும்புகின்றேன். பெரும்பாலான தம்பதிகள் இதனை மருத்துவர்களிடம் கலந்தாலோசிக்க நாணப்படுவர். இப்பருவத்துப் பெண்களில் பெரும்பாலோர் வயதுவந்தோர்பலருக்குத் தாயாக இருப்பர்; அல்லது மாமியாராக இருப்பர்; அல்லது பாட்டியாகவும் இருப்பர். ஆகவே, இந்நிலையில் கலவியைப் பற்றிக் கலந்தாய்ந்தால் அவர்கட்கும் அவர்களது துணைவர்கட்கும் துன்பம் தருவதாக இருக்கும். எனவே, இதனை ஒவ்வொரு தம்பதிகளும் அறிந்துகொள்ளுதல் இன்றியமையாதது.

பெரும்பான்மையான பெண்களிடம் சூதக ஓய்வு ஏற்படுங் காலத்திலும் அதற்கு முன்பும் தீவிரமான காமக் கிளர்ச்சி தோன்றுகின்றது; அவர்கள் பால்விழைவினால் அதிகம் உந்தப்பெற்றுப் பாலின்பத்தை நாடுவர். இதற்குப் பல காரணங்கள் உள்ளன. யோனிக்குழலிலும் கருப்பையிலும் ஏற்படும் மாற்றங்கள் பிறப்புறுப்புகளில் அதிக அரிப்பினை விளைவிக்கின்றன; இதனால் பெண்ணின் கவனம் பிறப்புறுப்புகளின் மீது செல்லுகின்றது. இந்த அரிப்பு சில சமயம் தாங்க முடியாத எரிச்சல்களை உண்டாக்குவதுடன் காம

உணர்ச்சிகளையும் தூண்டிவிடுகின்றது. இந்த உணர்ச்சிகள் மிகத் தீவிரமாக எழுவதால் இவற்றிற்கு இணைவிழைச்சினைத் தவிர வேறு மருந்தே இல்லை. மேலும், இயல்பாகவே காமக் களியாட்டத்தை நாடும் பெண்களிடம் தம்மிடம் பால் வாழ்க்கை முடியப் போகின்றது என்ற அச்சம், இனிமேல் கருப்பம் ஏற்படாது என்ற துணிச்சலான எண்ணம், அதனால் தாம் அதிகமாகக் கலவி புரியலாம் என்ற சுதந்திர எண்ணம் ஆகியவை அதிகமான காமக் கிளர்ச்சிக்குக் காரணங்களாகும். இங்ஙனம் அதிகமான பால்விழைவு பெண்ணிடம் ஏற்படுவதற்கு நேர்மாறான மாற்றம் கணவனிடம் காணப்படுகின்றது. மனைவியைவிட சில ஆண்டுகள் மூத்தவனாக இருப்பதனாலும், முன்னைய ஆண்டுகளைவிட இப்பொழுது அவனிடம் ஆண்தன்மை சற்றுக் குறைந்திருப்பதாலும் இல்வாழ்க்கை இன்பத்தையே குலைப்பதற்கான பேரிடர் —அவல விளைவு—காத்துக்கொண்டுள்ளது.

சிலரது எல்லைமீறிய செயல்: பெண்ணின் உளவியலை அறியாதோரும் பெண்ணின் உடலழகு அவளது உள வாழ்க்கையில் பெரும்பங்கு பெறுகின்றது என்பதை நன்கு அறிவர். சூதக ஓய்வுக்குப் பின்னர் தமது அழகெல்லாம் பறிபோகும் என்ற எண்ணமும், வயது ஆகிக்கொண்டுள்ளது என்ற கவலையும் பெண்ணின் மனத்தில் குடிகொள்ளுகின்றன. இந்த எண்ணங்கள் அவளிடம் புதிய மனப்பான்மையைத் தோற்றுவிக்கின்றன; இதன் விளைவு பயங்கர வடிவெடுக்கின்றது. வயது வந்த பலருக்கு தாயாக ஆன பின்னரும், சில பெண்களிடம் தோற்றத்திலும் ஆடையணிவதிலும் இளமையாக இருக்க வேண்டும் என்ற மட்டுமீறிய ஆவல் திடீரென்று தோன்றுகின்றது. இஃது அவளது உள்ளத்தில் காம இச்சை மறையப் போகின்றதே என்ற நனவிலி அல்லது நனவுப் போராட்டத்தின் அறிகுறியாகும். பல பெண்கள் இப் பருவத்தில் ஏளனத்திற்கு அல்லது ஆபத்திற்குக் காரணமாகும் அளவிற்கு எல்லைமீறிப் போகின்றனர்! அவர்கள் செய்யும் சில தகாத செயல்கள் சமூகத்தோடும் தம் கணவன்மாரோடும் முரண்பாட்டினை விளைவிக்கின்றன. இவை மண

முறிவினை உண்டாகுவதுடன் சமூகத்தில் அவர்கட்கு இடம் இல்லாமலும் செய்கின்றன. சில சமயம் ஒழுக்கத்தை நாடும் பெண்களிடமும் தம்முடைய பால்துடிப்புகளைத் திருப்தி செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் மிக வன்மையாகத் தோன்றி அவர்களால் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு வளர்ந்து விடுகின்றது. இப்பருவத்திலுள்ள சில பெண்கள் ஒரே ஒரு மணவெழுச்சிமிக்க காமக்களியாட்டத்தைப் பெறுவான் வேண்டிப் பணம், காதல், நட்பு முதலியவற்றையெல்லாம் பறிகொடுத்து அனைத்தையும் துறக்கின்றனர்; அல்லது மறக்கின்றனர். இத்தகைய பெண்கள் பெரும்பாலும் இளைஞர்களையே—சில சமயம் சிறுவர்களையும்—கூட்டாளிகளாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டு தம்முடைய இன்ப வாழ்க்கையின் 'ஈமச் சடங்கு' போன்ற நாடகத்தை நடித்து முடிகின்றனர். இன்றைய வாழ்க்கையில் நாம் பல எடுத்துக்காட்டுகளின்மேல் இடறித்தான் விழவேண்டும்! வயதாகிக் கிழப்பருவத்தை நோக்கிச் செல்லும்பெண் மறைந்து போகும் தன் இளமையை நம்பிக்கையின்றிப் பற்றிக்கொண்டு பருவம்முதிராத பாலகனைக்காததலைக் கொண்டு நடத்தும் வாழ்க்கையின் இறுதி நாடகம் பல புதின ஆசிரியர்கட்குக் கதைப் பொருளாக இருந்து வருகின்றது.

மன நிறைவு பெற்ற கற்புடை மகளிர்: மேலே கூறியவை அனைத்தும் இயல்பாகவே எல்லாப் பெண்களிடமும் தோன்றும் செயல்கள் என்று கருதுதல் வேண்டா. பல குழந்தைகட்குத் தாயாகி குடும்பப்பாரத்தைத்தாங்குவதுடன் அவர்களின் பாதுகாப்பிலும் கல்வியிலும் ஈடுபட்டுக் கவலைகொள்ளும்பெண்களும், அல்லது சமூக அலுவல்களிலும் பிறபணிகளிலும் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் பெண்களும் இவ்வழிகளில் எளிதாகத் திரும்புவதில்லை. பெரும்பாலும் குழந்தைகளின்றியிருக்கும் காமம் மீதூர்ந்து நிற்கும் பெண்களும், யாதொரு திட்டமான வேலையுமின்றி சதா களியாட்டம், கேளிக்கை சொகுசான வாழ்க்கை, காலவண்ணம்[54] சதா

54. காலவண்ணம்—Fashion

தன் உடலைப் பற்றிய கவனம் போன்றவற்றில் நாட்டமுள்ள பெண்களும் மேற்கூறிய எல்லைமீறிய செயல்களுக்கு இலக்காகின்றனர். இதற்கு மாறாகப் பெரும்பான்மையான பெண்கள் இன்பகரமான இல்வாழ்க்குப் பின்னர் யாதொரு அக முரண்பாடுகளின்றியே இந்தப் பருவத்தைத் தாண்டுகின்றனர். இதனைக் கடந்த பின்னர் இயல்பாக நடைபெற வேண்டியவற்றில் தன்னையே மறந்து மகிழ்ச்சியும் அமைதியும் நிறைந்த வாழ்க்கையில் திளைக்கின்றனர்.

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.[55]

என்று தொல்காப்பியர் கூறும் குறிக்கோளுக்கு இலக்காகின்றனர். இக்காலத்தில்தான் சில கணவன்–மனைவிமாரிடம் உண்மை நட்பும் அன்னியோனியமும் ஏற்படுகின்றன.

சூதக ஓய்வுக்குப் பின்னர் கலவி: ஒரு பெண்ணிடம் முற்றிலும் மாதவிடாய் ஒழுக்கு நின்றபின்னர், பால் விழைவும் மறைந்து விடுகின்றதா, அக்காலத்தில் அவள் கலவி புரியலாமா என்று நீ வினவலாம். கூறுவேன்; சூதக ஓய்வு ஏற்பட்ட நீண்டகாலம் வரையிலும் பால் விழைவு பெண்களிடம் இருக்கத்தான் செய்கின்றது; சிலரிடம் அதிகமாகவும் உள்ளது. இனப் பெருக்கத் திறன் நின்றுபோவது பாலூக்கம் மறைவதற்கும் காரணமாதில்லை. வயதான பெண்ணிடம் சாதாரணமாகப் பால் வேட்கை மறைதல் இயல்பே; ஆயினும் சூதக ஓய்வு நின்ற பின்னரும் ஒரு பெண்ணிடம் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகள்வரையிலும்—அதற்கு மேலும்—தீவிரமான பால்விடாய் உள்ளது. எனவே, அறுபதுயாண்டுகட்கு மேலும் ஒருபெண் மட்டான முறையில் பாலுறவு கொள்ளலாம்; சூதக ஓய்வுக் காலத்தில் உள்ளிருக்கும் பாலுறுப்புகளில் மிகத் தளர்ச்சி ஏற்பட்டு

55. தொல்-பொருள்-கற்பு—51 (இளம்)

விடுவதால், அவை ஊறு நேர்வதைத் தடுக்கும் ஆற்றலை இழந்து கிடக்கின்றன. எனவே, இக்காலத்தில் கலவி புரியும் கணவன் மிக அதிகமான பாதுகாப்பினை மேற்கொள்ளல் வேண்டும். இந்நிலையிலும் ஏதாவது ஊறு விளைவதாகத் தெரிந்தால், கலவியை அடியோடு விட்டொழித்துவிடுதல் வேண்டும். இக்காலத்தில் கணவன் மனைவிமீது அதிக அன்புடனிருப்பின் அது கலவியைவிட அவளுக்குப் பேரின்பத்தைத் தரும் என்பதை ஒவ்வொரு மணமகனும் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 43

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

மணமக்களின் வாழ்க்கையில் உடல்நலத்தைப்பற்றிய வேறு சில செய்திகளை இக்கடிதத்தில் கூறுவேன்.

ஆணிடம் 'மாற்றம்': பெண்ணின் வாழ்க்கையில் ஏற்படும் சூதக ஓய்வு போன்ற மாற்றம்—அதனுடன் ஒப்பிடக்கூடிய மாற்றம்—ஏதாவது ஆணிடம் நிகழ்கின்றதா என்பதையறிய அதிக ஆவலுள்ளவனாக இருப்பாய் என்று கருதுகின்றேன். பல அறிஞர்கள் இத்துறையில் ஆராய்ச்சிகளை மேற்கொண்டு பல கொள்கைகளை வெளியிட்டுள்ளனர். அவற்றை உரிய நூல்களில் கண்டுகொள்க.[56] ஐம்பதுயாண்டுகட்குமேல் சில ஆடவர்களிடம் ஏற்படும் உடல், உள்ளக் கிளர்ச்சிபற்றிய மாற்றங்கள் 'வாழ்க்கையின் மாற்றம்' என்று வழங்கப் பெறினும், அவை பெண்களிடம் தோன்றும் சூதக ஓய்வினைப் போன்ற மாற்றங்கள் அன்று. பெண்களிடம் மாத ஒழுக்கு நின்று இனப் பெருக்கத் திறனும் மறைவது போன்று ஆண்களிடம் இனப்பெருக்கத் திறனில் யாதொரு மாற்றத்தையும் விளைவிப்பதில்லை; உடல் நிலையிலும் உள்ளக்கிளர்ச்சி நிலையிலும் யாதொரு அறிகுறிகளையும் தோற்றுவிப்பதில்லை.

எனினும், மிக அதிகமான வயதானதும் மனிதனும் படிப் படியாகப் பால் திறன்களை இழக்கின்றான். மூப்பு ஆக ஆக பால் விழைவும் பால் திறனும் அவனிடம் ஓர் ஒழுங்கில் மறைந்துகொண்டே வருகின்றன. விறைத்தல் நிகழ்வதற்கே அதிகக் காலம் ஆகின்றது. பெரும்பாலும் இந்து உடல் பற்றிய கூறே முக்கிய காரணமாக இருப்பினும், ஓரளவு

56. Illustrated Encylopaedia of Sex—Chap.—47.

சமூக, உளவியல்பற்றிய கூறுகளும் இதில் பெரும் பங்கு பெறுகின்றன.

இளமையில் கலவியில் அதிகத் தீவிரமாகப் பங்கு பெறுவோர் வயது ஆக ஆக பால் திறனை இழப்பரோ என்ற ஐயம் உன்பால் எழலாம்; எழுவது இயற்கையே. உண்மையில் அஃது அங்ஙனம் இல்லை. அதற்கு நேர்மாறான சான்றுதான் உள்ளது. இளமையில் கலவியில் அதிகமாக ஈடுபடுவோர் பிற்காலத்திலும் அதிகத் தீவிரமாகவும் அடிக்கடியும் இச்செயலில் ஈடுபடுவதைத்தான் காண்கின்றோம். உடல் நன்னிலைமையிருந்தமையால்தான் விரைவில் பால் விழைவும் பால் செயலும் தோன்றின என்றுதான் நாம் ஒரு முடிவுக்கு வருதல் வேண்டும்.

பால் அடக்கத்தின் விளைவுகள்: பால் அடக்கம்[57] தீங்கு பயக்குமா என்றும், பால் விழைவினை மனமறிந்து கட்டுப்படுத்தினால் அதனால் தீவிளைவுகள் ஏற்படுமா என்றும் வினவியிருந்தாய். பால் அடக்கத்தை எல்லோரும் மேற்கொள்ள முடியாது; புலனடக்கப் பயிற்சியுள்ள ஒரு சிலரால்தான் அதனை அடக்குதல் முடியும். உணவு முறை, வாழ்க்கை முறை, தியான சமாதிகளை மேற்கொள்ளல் போன்ற உபாயங்களால் ஓரளவு கட்டுப்படுத்தலாம். எல்லோருக்கும் இம்முறைகள் சரிப்பட்டு வாரா. பால் விழைவினை வேருடன் களைவதென்பது குதிரைக் கொம்பு; இயலாத செயல். இனவிழைச்சினை அறவே நீக்குதலால் நலம் பயக்குமா என்ற பொருள் வாதத்திற்கிடமானது; பல்வேறு கருத்து வேறுபாடுகளைக் கொண்டது. பாலியலில் இதனைப்போன்ற வாதத்திற்கிடமான வேறு பொருளே இல்லை எனலாம். தொடர்ந்து பாலுறவுகளின்றி இருத்தல் முற்றிலும் கேடு பயக்காது என முன்னையோர் பொதுவாக நம்பி வந்தனர். அண்மைக் காலத்தில், அதுவும் ஃபிராய்டின் உளவியல் செல்வாக்குப் பெற்ற பிறகு, முற்றிலும் பெண்ணுறவின்றியே தன்னடக்

57. பால் அடக்கம்—Sexual continence.

கத்துடன் இருத்தல் உடல் நலத்திற்குப் பொருந்தாது என்று பல மருத்துவ நிபுணர்கள் நம்பத் தொடங்கினர். ஆயினும் இன்னும் இத்துறையில் சரியான அறிவியலறிவு ஏற்படாத தால் இதுபற்றிய திட்டமான முடிவு ஒன்றும் சொல் வதற்கில்லை.

தொடர்ந்து தன்னடக்கத்துடன் இருத்தல் ஒரு சிலரிடம் தீவினைவினை உண்டாக்குவது அவர்கள் தனிப்பட்ட நிலை யினைப் பொறுத்தது. தீவிரமான காம உணர்ச்சியினை யுடைய[58] ஆடவரும் பெண்டிரும், அல்லது அடிக்கடிக் காமத் தூண்டலைப் பெறுவோரும் பாலுறவுகளைத் தவிர்த்த லால் உள்ளக்கிளர்ச்சி முறைகளில் பாதிக்கப்பெறுவர்; குறைந்த அளவு பால் விழைவினை உடையோரும் கன்னி மாடம் அல்லது துறவியர் குடில்களில் வாழ்வோரும் இதனால் அதிகம் பாதிக்கப்பெறுவதில்லை. ஆகவே, ஃபிராய்ட் [59] என் பாரின் கருத்துப்படி ஒரேவிதமான பால் வாழ்க்கையை எல் லோரும் மேற்கொள்ள வேண்டும் என்று வரையறுப்பது மிகவும் அநீதியானது ஒரு சிலருக்குப் பொருந்துவது வேறு சிலருக்குப் பொருந்தாது போகும் என்பது அவருடைய கருத்து. இணைவிழைச்சினைத் தம் வாழ்க்கையின் பிற்பகுதி யில் சற்றுத் தள்ளி வைத்துக்கொண்டு நல்ல உடல் நலத் துடன் வாழும் ஆடவரும் பெண்டிரும் இருக்கத்தான் செய் கின்றனர். பால் விழைவினை அடக்குவதனால் உடலியல் முறையிலும் உள்ளக்கிளர்ச்சி முறையிலும் தொல்லையுறு வோர் மிகப் பலர். எனவே, ஒரு நிலையாக்கப்பெற்ற பால் வாழ்க்கை அனைவருக்கும் பொருந்தாது என்பதை நீ உணர் வாயாக.

திருமணத்திற்கு முன்னர் உறவுகள்: இக்காலத்தில் என்றுமே இராத அளவுக்கு இளைஞர்கள் திருமணத்திற்கு முன்னரே பாலுறவுகளைப் பெறுகின்றனர் என்பதை அறிஞர் கள் உணர்ந்து வருகின்றனர். சமூகத் துறையிலும் மருத்

58. காம உணர்ச்சி—Libido
59. பிராய்ட்—Freud

துவத் துறையிலும் நேரிட்டுள்ள பல்வேறு வளர்ச்சிகளின் காரணமாகவே இந்நிலை ஏற்பட்டுள்ளது என்று கருதலாம். திருமணத்திற்கு முன்னர் பாலுறவுகொள்வதையும் மேனாட்டார் அங்கீகரித்து வருகின்றனர்; நம்நாட்டில் அதனை ஒருவரும் அங்கீகரிப்பதில்லை; அதற்கு ஆதரவும் தருவதில்லை. பண்டையோர் கண்ட களவியலிலும் தலைவன்-தலைவியர் உள்ளுறு புணர்ச்சியை மேற்கொண்டதாகவே சொல்வது பொருத்தமாகும்; இது முன்னரும் காட்டப்பெற்றது.[60] இது நிற்க; ஒழுக்க, சமய அடிப்படை ஒருபுறமிருக்க, திருமண உறவுக்கு அப்பாற்பட்ட உறவுகளும் இன்று எங்கனும் பெரு வழக்காக உள்ளன. டாக்டர் டிக்கின்ஸன்[61] என்பார் கருத்துப்படி இவற்றிற்குக் கருப்பம்,[62] தொற்று,[63] உளவு வெளிப்பாடு[64] ஆகிய மூன்றும் முக்கிய தடைகளாக உள்ளன. இவற்றுள் முதல் இரண்டு கூறுகளும் பெரும்பாலாக நீங்கிவிட்டன. நவீன கருத்தடை முறைகள் விரும்பாத கருப்பத்தைப் பெரும்பாலும் குறைத்துவிட்டன; எதிர் நச்சு மருந்துகளின்[65] வளர்ச்சி தொற்றினால் வரும் விபத்துக்களைப் பெரும்பாலும் போக்கிவிட்டன என்று சொல்லலாம். மூன்றாவதாக உள்ள தடை சமூகம் கடியும் உளவு வெளிப்பாடேயாகும். இதுவும் இன்றைய நாகரிக வளர்ச்சியில் குறைந்துகொண்டு வருகின்றது. எனவே, பாலுறவுகளில் பண்டிருந்த கட்டுப்பாடுகள் நீங்கிச் சுதந்திரம் தோன்றியுள்ளது. இந்த வகை மனப்பான்மையினால் சமூகமும் இளைஞர் உலகமும் பாழடைந்து வருகின்றன. காட்டுமிராண்டிகளிலும் கேவலமாக மக்களின் போக்கு போய்க்கொண்டுள்ளது. என்னே இந்த நாகரிகத்தின் கொடுமை!

---

60. இந்நூல்—பக்கம். 527
61. டிக்கின்ஸன்—Dickinson.
62. கருப்பம்—Conception.
63. தொற்று—Infection.
64. உளவு வெளிப்பாடு—Deteciion.
65. எதிர் நச்சு மருந்து வகைகள்—Antibiotics.

மேற்குறிப்பிட்ட சுதந்திரம் ஆடவர் உலகுக்கு நன்றாக அமைந்து விட்டது என்றாலும் பெண்டிர் உலகிற்குச் சிறிதும் பொருத்தமற்றதாகவே உள்ளது. இஃது இறைவன் படைப்பில் ஏற்பட்ட ஒரு நன்மை என்றே கொள்ளவேண்டும். பெரும்பாலும் ஆடவர்கள் பால் செயலில் நெறி தவறிப் போகலாம்; அதற்கு அவர்கட்குச் சுதந்திரம் உள்ளது. சமூகம் அந்த நெறியை அவ்வளவாகக் கடிவதில்லை; பொருட்படுத்துவதுமில்லை. மகளிரிடையே திருமணத்திற்கு முன்னர் பாலுறவு கொள்வதை சமூகம் அங்கீகரிப்பதில்லை. மேனாட்டிலும் இந்த நிலைதான். சமூகத்தில் பெரும்பாலோர் பெண்ணின் கற்பினைத் திருமணத்தின் ஒரு முக்கிய கூறாகக் கொள்ளுகின்றனர்; கன்னிசழியாதிருப்பது ஒரு மணப் பெண்ணின் இன்றியமையாத பண்பாகவே கருதப்பெறுகின்றது. திருமணத்திற்கு முன்னர் வேறு காரணத்தால் கருவுயிர்த்த மச்சகந்தியும்[66] குந்தியும்[67] மீண்டும் சமூகம் அறியாவண்ணம் கன்னிப்பெண்களாகவே மாற்றப்பெற்றமையும் இந்தப் பண்பின் அடிப்படையில்தான் என்பது உணரத்தக்கது. அரசியல், பொருளாதார, பண்பாட்டு முறைகளில் பெண்களின் கற்பு பெரிய அளவுகளில் தளர்ந்து விட்ட போதிலும் திருமணத்திற்கு முன்னர் ஒரு பெண் பாலுறவில் இறங்கத் துணிவளேயாயின், அவள் தன் கற்பினைப் பணயம் வைக்கின்றாள் என்றே கொள்ளல் வேண்டும்; அத்தகையவள் சமூகத்தின் மதிப்பினைப் பெறுவாள் என்றும் சொல்லுவதற்கில்லை. மேலும் விரும்பத்தகாத கருப்பம் கூட இதனால் நேரிடவும் இடமுண்டு. கருத்தடை முறைகளை மேற்கொள்வதில் கவனக்குறைவாலோ, அல்லது அம்முறைகளிலுள்ள குறைகளினாலோ கருப்பம் ஏற்பட்டு

66. மச்சகந்தி—மீனவனின் மகள்; பராசரரால் கருவுற்று வேதவியாசரைப் பெற்றெடுத்தவள். பராசரரின் தவமகிமையால் மீண்டும் கன்னியானவள்.

67. குந்தி—பாண்டவரின் தாய்; திருமணத்திற்கு முன்னர் கதிரவன் அருளால் கர்ணனை ஈன்று மீண்டும் அவன் துணையாலேயே கன்னிமையை அடைந்தவள்.

விட்டால் பேராபத்துதான். திருமணம் ஆன பெண் விருப்ப மின்றித் தற்செயலாகக் கருவுற்றாலே அதனை அழிப்பது சங்கடம். திருமணத்திற்கு முன்னதாக அவள் கருவுற்று விட்டால் அதனால் ஏற்படும் பிரச்சினைகள் பயங்கரமானவை; பல வழிகளிலும் பெண்ணின் வாழ்க்கையையே சீரழித்துக் குலைப்பவை என்பதை ஒவ்வொரு பெண்ணும் நன்கு உணர் தல் வேண்டும். இங்ஙனம் ஒரு பெண்ணின் வாழ்க்கைக்கே ஊறு விளைவிக்கும் வண்ணம் தகாத முறையில் பாலுறவு கொள்வது எவ்வளவு கேடான—பாபமான—செயல் என் பதை ஒவ்வொரு ஆண் மகனும் உணர்தல் வேண்டும்.

பழங்காலத்தில்— ஏன்? அண்மைக் காலம் வரையிலும்— பெரும்பாலும் திருமணங்கள் இளமையிலேயே நடைபெற் றன; உயிரியல் முதிர்ச்சி ஏற்பட்டதும் பாலுறவுகளும் நடை பெற்று வந்தன. பல்வேறு காரணங்களால் இன்று திரு மணங்கள நிறைவேறுவது சாத்தியப்படுவதில்லை, பொருளா தாரநிலை, பெண் கல்வியில் முன்னேற்றம், வரதட்சணைமுறை போன்றவையே இந்நிலைக்குக் காரணங்கள் என்று சொல்ல லாம். ஒருபக்கம் ஒழுக்க, அற, சமய, சட்டக் கட்டுப் பாடுகள் திருமணத்திற்கு முன்னர் நடைபெறும் பாலுறவு களைக் கடிந்தவண்ணமிருக்கின்றன. எனினும், அதே சமயத் தில் இன்னொரு பக்கம் பாலுணர்ச்சி வணிக முறையில் சதா சுரண்டப்பெற்று வருகின்றது; பால் விழைவு பல்வேறு முறைகளில் தூண்டப்பெறுகின்றது. நாடக மேடைகள், பேசும் படக் காட்சிகள், புற்றீசல்கள்போல் அன்றாடம் பத்திரிகைகளில் பிறக்கும் சிறு கதைகள், தொடர்கதைகள், வண்ணப் படங்களுடன் வெளியாகும் பருவ வெளியீடுகள், செய்தித்தாள்கள், வணிக விளம்பர முறைகள்— இவையாவும் பெரும்பாலும் பால் விழைவினைத் தூண்டும் மூலங்களாக அமைந்துள்ளன. இங்ஙனம் இளம் பருவத்தினர் விடாது ஒரு பக்கம் பால் தூண்டலையும் மற்றொரு பக்கம் கட்டுப்பாடுகளை யும் ஒரு பக்கம் காமக்கிளர்ச்சியினையும் மற்றொரு பக்கம் அடக்கவேண்டிய நிலையினையும் மேற்கொள்ள வேண்டி

யுள்ளது. இஃது அவர்களின் உடல், உள்ளக்கிளர்ச்சி உறுதிப் பாட்டில் பெரிய அளவில் இடர் விளைவிக்கின்றது; உடல் நலக் கேட்டினையும் உளக்குலைவினையும் உண்டாக்குகின்றது.

மேற்கூறிய முரண்பாட்டினைச் சமாளிக்கப் பலர் பல கருத்துகளைத் தெரிவிக்கின்றனர். ஒரு சாரார் திருமணத் திற்கு முன்னர் பெண்ணிடமுள்ள ஒழுக்கத்திற்கும் சமூகப் பண்பிற்கும் அடிப்படையாகவுள்ள கற்பு மிகவும் இன்றியமை யாவது என்றும், எவ்வாற்றாலும் அதனை நிலை குலையாமல் பாதுகாக்கவேண்டும் என்று கூறுவர். திருமணம் முடிவு பெறும் வரையிலும் சமய, ஒழுக்க அடிப்படையில் பால் அடக்கம் பல்லோராலும் விரும்பப்பெறுகின்றது என்றும், அது மன உறுதியையும் சால்பினையும் வலுப்படுத்துவதால் சொந்த முன்னேற்றத்திற்கும் அருஞ்செயல் திறத்திற்கும் நன்மை பயப்பதாகவும் உள்ளது என்றும் உரைப்பர். மற் றொரு சாரார் இளமையிலேயேமணம் முடித்துவிடவேண்டும் என்றும், அப்படி முடியாவிடில் சமூகம் அங்கீகரிக்கக்கூடிய முறையில் பாலுறவுகளைக் கொள்ளும் திருமண முன்னேற் பாடுகளைச் செய்து விடவேண்டும் என்றும் பகர்வர். இந்த ஏற்பாட்டினைச் சட்டம் ஒப்புக்கொள்ளல் வேண்டும்என்றும், இந்த ஏற்பாட்டினால் தொடக்கத்தில் யாதொரு நிரந் தரப் பிடிப்போ அல்லது பொருளாதாரப் பொறுப்போ இருக்கக் கூடாதென்றும் வரையறையும் காட்டுவர். இத்தகைய உறவுப் பொருத்தம்-நிச்சிதார்த்தம்—ஒரு குறிப் பிட்ட கால எல்லையைத் தாண்டியவுடன், அல்லது பெண் கருவுற்றதற்குப் பின் நிரந்தரமான திருமணக்கூறுகளை யெல்லாம் அடைந்துவிட வேண்டும் என்று யோசனையும் கூறுவர். இன்னும் ஒரு சாரார் வயதுவந்தோரின் பால் நடத்தையில் சமய, சமூகக் கட்டுப்பாடுகளே கூடாது என்றும், இன்றைய வாழ்வில் கட்டுப்பாடுகள் தளர்ந்துவரும் முறையே சரியென்றும் கருதுகின்றனர். இவர்கள் விலங்கு வாழ்க்கை காட்டுமிராண்டி வாழ்க்கை ஆகியவற்றைவிடக் கேடானநிலை மக்கள் வாழ்க்கையில் நேரிட்டுவிடும் என்று

எண்ணிப் பார்ப்பதே இல்லை. ஆயினும், இந்த மூவகை யோசனைகளுள் ஒன்றாவது இன்றையத் தேவைகளைத் திருப்தியான முறையில் சமாளிக்கக்கூடியதாக இல்லை. இளைஞர்களின் பால் தேவைகளில் எழும் பிரச்சினைகளைத் தீர்க்கக் கூடிய சமூக அங்கீகாரம்பெற்ற யாதொரு முறையும் இன்னும் கண்டறியப் பெறவில்லை என்பதை நாம் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

ஓர் எச்சரிக்கை: திருமணத்திற்கு முன்னர் உறவு கொள்வதில் ஒன்றை வற்புறுத்த விரும்புகின்றேன். பாலுறவு என்பது தனிப்பட்டோரைப் பொறுத்ததன்று; அதில் வேறொருவருடைய உரிமைகளும் சலுகைகளும் பங்கு பெறுவதுடன் பல சமூகச் சிக்கல்களும் அடங்கியுள்ளன. ஆகவே, பால் நடத்தைப்பற்றிய சமூகக் கட்டுப்பாடு மிக மிக இன்றியமையாதது; பல சமூகங்களிடையேயும் இத்தகைய கட்டுப்பாடு காணப்பெறுகின்றது. இன்றைய ஒழுக்கம் பற்றிய விதிகள் நிலவும் வரை பால் நடத்தையில் சுதந்திரம் இயலாததொன்று. சமூகம் அங்கீகரித்த ஒழுக்க விதிகளையும் கட்டுப்பாடுகளையும் மீறி இரகசியமாக மேற்கொள்ளப்பெறும் உறவு முறைகள், பால் துடிப்புகளை மனமறிந்து அடக்குவதால் உண்டாகும் கேடுகளைவிட அதிகமான கேடுகளை விளைவித்து ஆளுமைக் குலைவினையும் உள்ளக் கிளர்ச்சிச் சமநிலைச்[68] சீர்கேட்டையும் உண்டாக்குகின்றன. சமூக மரபு முறைகளைப்பற்றி ஒருவர் அறிவு நிலையில் சுதந்திரமாக இருக்கலாம்; ஆயினும் உள்ளக் கிளர்ச்சி முறையில் கட்டுப்பட்டே இருக்கவேண்டியுள்ளது. இங்ஙனம் உயிரியலுக்கும் பண்பாட்டிற்கும், விருப்பத்திற்கும் உள்தடைக்கும் இடையேயுள்ள அடிப்படையான முரண்பாட்டினை ஒவ்வொருவரிடமும் தனிப்பட்ட முறையில் சமாளித்துத் தீர்வு காணவேண்டும்.

68. சமநிலை-Balance

இளமைப் பருவத்திலுள்ள பால் தேவைகளைப்பற்றிய பிரச்சினைக்கு முழு பால் சுதந்திரம் தேவையான அளவு தீர்வினை அளிக்கக் கூடியதன்று. பாலுறவு என்பது உடலுறவு மட்டுமன்று; அதில் உள்ளக் கிளர்ச்சியுறவும் அடங்கியுள்ளது. உண்மையில் மனிதர்களின் பால் வாழ்க்கையில் பின்னர்க் கூறப்பெற்ற கூறே பெரு மகிழ்ச்சியையும் அதிக மன நிறைவினையும் அளிக்கின்றது. இத்தகைய மனநிறைவு வகையினைச் சாதாரணமாகத் தற்காலிக உறவினால்—விலை மாதர்களிடம் பெறும் உறவினைப் போன்றோ, சமூகத்தடைகட்கு அஞ்சி இரகசியமாகப் பெறும் 'அவசர' உறவினைப் போன்றோ உள்ள உறவினால் பெறுதல் முடியாது. அவையெல்லாம் 'இருட்டறையில் ஏதில் பிணந்தழீ இயற்று'[69] என்பது போன்ற அநுபவமாகவே முடியும். வேகமாக மாறிக் கொண்டு வரும் இன்றைய சமுதாய வாழ்க்கையில் பால் வாழ்க்கைபற்றிய மதிப்பீடுகளின் தரம் மாறிக் கொண்டு வந்தாலும், ஒருவன்–ஒருத்தி உறவே மிகச் சிறந்த மானிட உறவாகும். 'இந்த இப்பிறவியில், இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்று கம்பன் காட்டும் குறிக்கோள் நிலையை[70] ஒவ்வொரு மணமக்களும் நினைவில் இருத்துதல் வேண்டும்.

குறிக்கோள் திருமணம்: இனி, குறிக்கோள் திருமணம் பற்றி[71] ஒரு சில சொற்கள் பகர்ந்து இக் கடிதத்தை முடிப்பேன். திருமணப் பொருத்தங்களைக் குறிப்பிட்டபோது நட்பு, பாலுறவு, குடும்பம் ஆகிய மூன்றையும் திருமணத்தின் நோக்கங்களாகக் குறிப்பிட்டேன் அல்லவா? இவை யாவும் நிறைவேறுமாயின், அதுவே குறிக்கோள் திருமணம் ஆகும்.

---

69. குறள்–913
70. கம்பரா-சுந்தர-சூளாமணி-செய். 34.
71. குறிக்கோள் திருமணம்–Ideal marriage

பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே.[72]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் கண்ட பத்துவித ஒப்புமைகளும் கணவன்-மனைவியரிடையே அமைதல் பெரிதும் வேண்டற்பாலது. இந்தப் பத்தினையும் இளம்பூரணர் விளக்கியுள்ளபடி கூறுவேன். பிறப்பு என்பது, அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் ஆயர் வேட்டுவர் குறவர் நுளையர் என்றாற்போல் வரும் குலம். குடிமை என்பது, அக்குலத்தி லுள்ளோர் எல்லோரும் சிறப்பாக ஒவ்வாமையின் அச்சிறப்பாகிய ஒழுக்கம்பற்றிய குடிவரவு. ஆண்மை என்பது, ஆண்மைத் தன்மை; அஃதாவது, ஆள்வினையுடைமையும் வலிபெயராமையுமாம். அது தலைமகள் மாட்டுப் பெண்மையாகும்; அஃதாவது பெண்டிர்க்கு இயல்பாகிய நாணம் முதலாயினவும் பெண்ணீர்மையும். ஆண்டு என்பது, ஒருவரின் ஒருவர் முதியரின்றி ஒத்த பருவத்தராதல்; அது குழவிப் பருவங் கழிந்து பதினாறு பிராயத்தானும் பன்னிரண்டு பிராயத்தாளும் ஆதல். உரு என்பது, வனப்பு. நிறுத்த காம வாயில் என்பது, நிலைநிறுத்தப்பட்ட புணர்ச்சிக்கு வாயில். அஃதாவது, ஒருவர்மாட்டு ஒருவர்க்கு நிகழும் அன்பு. நிறை என்பது, அடக்கம். அருள் என்பது, பிறர் வருத்தத்திற்குப் பரியும் கருணை. உணர்வு என்பது, அறிவு. திரு என்பது, செல்வம். இவற்றை இக்காலத்தியல்புகளோடு எண்ணி ஏற்றவற்றை அறிந்து கொள்வாயாக

நட்பு என்பது "காமஞ்சான்ற கடைக் கோட்காலை" என்ற தொல்காப்பிய நூற்பாவில் குறிப்பிட்ட உணர்வு ஆகும்.[73] அன்பும் இதில் அடங்கியுள்ளது. பால் பொருத்தத்தின் இன்றியமையாமையைப்பற்றிக் குறிப்பிட்டவை

72. தொல்-பொருள்-மெய்ப்-25 (இளம்.)
73. தொல்-பொருள்-நூற். 190 (இளம்.)

அனைத்தும் வேண்டற்ப லவை. மணவாழ்க்கையில் மக்கட் பேறின்றேல் அது பாலை நிலம் போல் வறண்ட வாழ்க்கை ஆகும்.

மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.[74]

என்ற வள்ளுவர் வாக்கையும் ஈண்டு ஓர்க.

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோர்.[75]

என்ற அகப்பாட்டடிகளில் பொதிந்துள்ள கருத்தினையும் உன்னுக. கணவனையும் மனைவியையும் இறுக்கப் பிணிக்கும் கண்ணி[76] குழந்தை என்றால் அது மிகையன்று.

பொருளாதாரக் காப்பு: திருமணத்தில் பொருளாதாரம் நேர் முறையில் பங்கு பெறாவிடினும், அதுவே திருமணத்தை வெற்றியாக்கும் பெருவிசையாகத் திகழ்கின்றது. வாழ்க்கை நடத்துவதற்கு ஓரளவு செல்வம் வேண்டுமேயன்றி, அதற்காக மணமக்கள் 'பணப் பேயாட்டம்' ஆட வேண்டிய இன்றியமையாமை இல்லை. வேண்டிய அளவு அன்பிருந்தும், பால் பொருத்தப்பாடு இருந்தும், மக்கட்பேறு இருந்தும் பல திருமணங்கள் வாழ்க்கைத் தேவைகளின்மையால், வறுமையால், பொருளாதாரப் பாதுகாப்பின்மையால்[77] முறிந்து போகின்றதை நாம் காணாமல் இல்லை. இப்பொருளாதாரக் குறைவினால் எத்தனையோ ஆடவரும் பெண்டிரும் மணமின்றி இருப்பதையும் காண்கின்றோம். எனவே, திருமண வெற்றிக்குப் பொருளாதாரக் காப்பும் மிகவும்

---

74. குறள்-60
75. அகம்-66 வரி [1-4]
76. கண்ணி-Link
77. பொருளாதாரக் காப்பு-Economic security

இன்றியமையாதது என்பதை ஒவ்வொரு மணமக்களும் நன்கு உணர்தல் வேண்டும். இதைச் சிந்தியாது 'காதலுணர்ச்சி' என்று தவறாகக் கற்பனை செய்து கொண்டு 'காம வெறிக்குப்' பலியாகி வாழ்க்கையைப் பாழ்ப்படுத்திக் கொள்ளலாகாது. 'எண்ணித்துணிக கருமம்'[78] என்ற பொய்யாமொழியை உணர்ந்து திருமணத்தில் இறங்குதல் வேண்டும்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்

---

78. குறள்-467

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாக
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒள்நுதல் முகனே.

—குறுந்தொகை-167

இயல்—9

# மகிழ்வுடைய இல்வாழ்க்கை

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று வள்ளுவர் போற்றும் இல்வாழ்க்கை மகிழ்வுடையதாக அமைதல் வேண்டற்பாலது. முன்னையோரின் வாழ்க்கை பின்னையோருக்கு வழிகாட்டியாக அமையக்கூடியது. காலப் போக்கில் முன்னையோர் வாழ்க்கை எத்தனையோ முறைகளில் — போக்குகளில் — விரிந்தும் திரிந்தும் மாற்றம் அடைந்துள்ளது நாகரிகம் வாழ்க்கையை நாளு விதங்களில் மாற்றம் அடையச் செய்துவிட்டது. எனவே, திருமணத்தை உளவியல் சமூக இயலின் அடிப்படையில் ஆராய்தல் இன்றியமையாததாகின்றது. பண்டைத் தமிழரின் திருமண முறைகள், ஆரியரின் எண்வகை மணங்கள் இரண்டற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள், களவு-கற்பு விளக்கம், நாகரிக வாழ்வின் விளைவுகள், திருமண வாழ்க்கையில் தம்பதிகளிடையே எழும் முரண்பாடுகள், அவை எழுவதற்குக் காரணங்கள், அவை எழும் மூவகை மூலங்கள், திருமண வெற்றிக்கான கூறுகள் பற்றிய ஆராய்ச்சிகள், திருமணத்திற்கு முன்னர் மணமக்கள் மேற்கொள்ள வேண்டிய இரண்டு படிகள், மணமக்கள் மகிழ்ச்சியான வாழ்வு பெறுவதற்குரிய குறிப்புகள் ஆகிய செய்திகளும் அவற்றுடன் தொடர்புள்ள பிறசெய்திகளும் இப்பகுதியில் ஆறு கடிதங்களில் (44-49) ஓரளவு விளக்கம் பெறுகின்றன.

# 44

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விளைக:

இதுகாறும் எழுதிய கடிதங்களில் திருமணத்தைப் பெரும்பாலும் அறிவியலடிப்படையில்தான் ஆராய்ந்தேன்: அறிவியலடிப்படையில் பலசெய்திகளை மணமக்கள் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது என்று கருதினமையான் அவற்றை உணர்த்தினேன். இனி சமூக, உளவியல் கூறுகள் எங்ஙனம் திருமண வாழ்க்கையில் பங்கு பெறுகின்றன என்பதை விளக்குவேன். முதலில் இக் கடிதத்தில் பழந்தமிழர் கொண்ட மணமுறைகளை ஓரளவு விளக்குவேன்.

**ஊழ்வலியால் தொடர்பு:** பழங்காலத்தில் தமிழ் மக்கள் ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஏற்படும் காதல் உறவு ஊழின் வலியால்தான் ஏற்படுகின்றது என்று நம்பினர்.

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்"[1]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் இதனை அறியலாம். அன்புடையார் இருவர் யாதொரு முயற்சியும் உள்ளக் குறிப்புமின்றி முற்பிறப்பின் நல்வினைப் பயனாகத் தம்மியல்பில் நிகழும் இந்த உறவினைப் பண்டையோர் 'இயற்கைப் புணர்ச்சி' என்றும், தெய்வப் புணர்ச்சி' என்றும் வழங்கினர். முதற்காட்சிக்கு நல்லூழே காரணம் என்று கருதப்பெற்றமையால் 'உயர்ந்த பால தாணையின்' என்றும், அவ்விருவரும் பண்டைப் பிறப்புகளில் பயிலியது செழீஇய நட்புதான் அந்த ஊழின் ஆணைக்குக் காரணம் என்றும் கருதப்பெற்ற

---

1. தொல்-பொருள்-களவு—நூற். 2 [இளம்]

மையால் 'ஒன்றியுயர்ந்த பாலதாணை' என்றும் ஆசிரியர் பெற வைத்தமையை எண்ணி உணர்க. இறையனார் களவியலுரையாசிரியரும் காதலர் கருத்தொருமித்து ஆதாவுபட்டதற்குப் 'பால்வரைத் தெய்வமே' [ஊழே] காரணம் என்று வற்புறுத்துவர். "'ஒளிப்பினும் ஊழ்வினை ஊட்டாது கழியாது'...வடகடலிட்ட ஒரு நுகம் ஒரு துளை தென்கடலிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும், வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தங்கதி வழுவித் தலைப்பெய்தாற் போலவும் தலைப்பெய்தி ஒருவர் ஒருவரைக் காண்டல் நிமித்தமாகத் தமியராவர்" என்ற உரைப்பகுதியால்[2] இதனையறியலாம்.

**தமிழரின் மணவகைகள் :** ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழும் ஒழுக்கத்தினைப் பண்டையோர் 'அகத்திணை' என்ற பெயரால் குறித்தனர். அகத்திணை என்பது, அகவொழுக்கமாகும். திணை—ஒழுக்கம். இந்த ஒழுக்கத்தைக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என ஏழுவகையாகப் பிரித்து உரைத்தனர் பண்டைப் பெரியோர்கள். கைக்கிளை என்பது, ஒருதலைக்காமம். ஒருவன் ஒருத்தியென்னும் இருவருள் ஒருவர் மட்டும் அன்பினால் கூடி வாழ்தலில் அளவிறந்த வேட்கையுடையராகவும், மற்றவர் அவரது அன்பின் திறத்தை உணர்ந்துகொள்ள முடியாத நிலையிலும் இருக்கும் நிலையே ஒருதலைக் காமம் ஆகும். இதனை இளம்பூரணர் 'பெருமை இல்லாத தலைமக்கள் உறவு' என்பர்; கை என்பது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இடைச்சொல் என்று கூறி கைக்குடை, கையேடு, கைவாள் என்ற சொற்றொடரில் கை சிறுமைபற்றி வந்துள்ளது என்று சான்றுகள் காட்டி விளக்குவர். ஐந்திணை என்பது, ஒத்த காமம்; தலைவனும் தலைவியும் ஒத்த அன்பின் காரணமாகக் கூடிவாழும் ஒழுக்கம். இறையனார் களவியலாசிரியர் இதனை 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை' என்று குறிப்பிடுவர். அது குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்து வகைப்படும். அதில் புணர்தல்,

2. இறைய. களவி—நூற் 2—இன் உரை.

இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் என்று ஒத்த அன்புடை யாரது ஒழுகலாறு பிரித்துப்பேசப் பெறும். குறிஞ்சி முதலிய ஐந்தும் இடத்தையும் ஒழுக்கத்தையும் குறிக்கும் பொதுச் சொற்களாகும். இந்த ஐந்துவகை ஒழுகலாறுகளும்,

போக்கெல்லாம் பாலை, புணர்தல் நறுக்குறிஞ்சி
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம்,—நோக்குங்கால்
இல்லிருத்தல் முல்லை, இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருத்த நூலின் தொகை.

என்ற பழம்பாட்டில் கூறப்பெற்றிருத்தலைக் கண்டு மகிழ்க. பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்; அஃதாவது ஒவ்வாக் காமம். குட்டநோய் 'பெருநோய்' எனப்பட்டது போலவும், இறப்பு 'பெரும் பிரிவு' எனப்பட்டது போலவும் பொருந்தாத காமம்—கொடிய காமம்—பெருந்திணை எனப் பட்டது. ஒருவன் ஒருத்தியாகிய இருவருள் ஒருவருக்கொரு வர் அன்பின்றிக் கூடிவாழும் நிலையே பெருந்திணையாகும். உலகில் பெரும்பாலும் இவ்வகை உறவே இருத்தலின் இது 'பெருந்திணை' என்று வழங்கப்பெற்றது. எனவே, பண்டை யோர் அகத்திணையொழுக்கத்தை ஒருதலைக் காமம், ஒத்த காமம், ஒவ்வாக் காமம் என்று மூன்று தொகுப்பாகக் கூறி யுள்ளனர் என்பதை அறிவாயாக. இதனை தொல்காப்பியர்,

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப[3]

என்ற நூற்பாவால் பெற வைக்கின்றார். கைக்கிளையை முதலிலும், பெருந்திணையை இறுதியிலும் கூறி 'எழுதிணை' என்று தொகை கூறியதால் இடைநின்றது 'ஐந்திணை' எனப் பட்டது என்பதை உணர்வாயாக.

தமிழரின் உலக வழக்கு : பழந்தமிழ் மக்கள் ஆண் பெண் கூட்டு வாழ்க்கையின் உண்மைப் பொருளை நன்கு உணர்ந்தி ருந்தனர். அவர்களில் ஒத்த பருவமுள்ள காளையரும் கன்னி

---

3. அகத்திணை—நூற். 1

யரும் காதலால் தூண்டப்பெற்றுத் தத்தமக்கேற்றதுணைவர்களைத் தேடிக்கொண்டனர். இது பெரும்பாலும் பிறர்க்குத் தெரியாமல் நடைபெற்று வந்தது. நாளடைவில் இதனை அவர்கள் தங்கள் தோழன் அல்லது தோழியர்க்கு வெளிப்படுத்துவர் இதனை அறிந்த அன்னோர் அவர்தம் பெற்றோருக்குக் குறிப்பாகக் கூறி மணம் முடிக்க முயல்வர். இருவர் பெற்றோரும் கலந்து பேசி அக்காதலருக்கு மணம் முடிப்பர்; சில சமயம் பெற்றோரே இக் காதலை அறிந்து மணம் முடிப்பதும் உண்டு. காதல் மணம் நடைமுறையில் இன்மையால், பெரும்பாலும் அக் காதலர்க்கே மணவினை நடக்காது போவதுமுண்டு. இங்ஙனம் ஒரு சில பெண்ணின் பெற்றோரோ அல்லது மணமகனின் பெற்றோரோ அக்காதற் கலப்பைத் தடுத்தாலும், அல்லது மணவினைக்குத் தடையாக இருந்தாலும், இருவரும் வீட்டைவிட்டு வெளியேறி வேற்றூர் சென்று அங்குத் திருமணம் செய்துகொள்வர். சில சமயம் பெண்ணின் சுற்றத்தார் அவர்களைத் தேடிச்சென்று இருவரையும் அழைத்துவந்து திருமணம் செய்தலும் உண்டு. இவ்வாறு நடக்கும் காதற்கலப்பில் பெரும்பாலும் உள்ளப்புணர்ச்சியே நடைபெறும். பலர் அறிய மணந்துகொண்ட பின்னரே மெய்யுறு புணர்ச்சி நிகழும். ஒரு சிலரிடம் மெய்யுறு புணர்ச்சி நிகழினும் நிகழலாம். சில சமயம் பெண்ணின் காமக் குறிப்பை அறிந்த பெற்றோர் தம் மகள் துணைவனை நாடுகின்றாள் எனக் கருதி ஒத்த பருவமுள்ள வேறொருவனுக்கு மணம் பேச முனைந்தால் அதையறிந்த அப்பெண் நேராகவோ அல்லது தோழி முதலியோர் மூலமாகவோ தன் கருத்தினைத் தன் பெற்றோர்க்கு அறிவிப்பாள்; பெற்றோரும் அவளை அவள் காதலனுக்கே மணம முடிப்பதும் உண்டு.

சில பெண்கள் நாணம் மிக்கு தம் கருத்தை வெளியிடாமல் காமக்காய்ச்சலால் உண்ணாமலும் உறங்காமலும் உடல் வாடிப் பைத்தியம் பிடித்தவர் போலிருப்பர் அது கண்ட பெற்றோர் அதன் காரணமறியாது மதிமயங்கிக் குறத்தியிடம் குறி கேட்பர்; வெறியாட்டாளனை அல்லது உடுக்கையடிக்கும் பூசாரியை வினவி நோயின் காரணத்தை அறிய

முயல்வர். அது கண்ட அப் பெண்கள் தம் தோழியர் மூலம் உண்மையைப் புலப்படுத்துவர். பெற்றோரும் உண்மையை அறிந்து அவள் காதல் கொண்ட மகனுக்கே மணம் புரிவிப்பர். அச்சமும் அவாவும் மிகுந்தால் ஊணுறக்கமின்மை, உடல் நலிவு, தூக்கத்தில் உளறல் போன்ற நிலைகள் ஏற்படும் என்று கூறுவர் உளவியலார். பருவப் பெண்கள் இன்று பேய் பிடித்ததென்றும், தெய்வக்குறை யென்றும் உண்ணாமல் உறங்காமல் உளறிக்கொண்டு படுத்த படுக்கையாய்க் கிடக்கும் நிலையைப்போன்றதே இந்நிலையாகும். காமநோயே இவை யனைத்திற்கும் காரணமாகும் என்பது அறியத்தக்கது. திருமணம் உரிய முறையில் உரியவருக்கே நடைபெற்றுவிட்டால் அனைத்தும் கதிரவனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடும். இங்ஙனம் உலகவழக்கில் செயல்கள் நடைபெற்று வந்ததாக இலக்கியக் குறிப்புக்களைகொண்டு ஒருவாறு ஊகிக்கலாம். இதுவே இலக்கண நூலார் குறிக்கும் 'உலக வழக்கு' ஆகும்.

நாடக வழக்கு: இலக்கியம் வாழ்க்கையினின்றும் மலர்கின்றது என்றும், அது வாழ்க்கைக்கே உரியது என்றும், அது வாழ்க்கைக்காகவே நிலைபெற்று நிற்கின்றது என்றும் இன்றைய மேனாட்டுத் திறனாய்வாளர்கள் கூறுவர்.[4] இக்கருத்தினையொட்டியே மேற்கூறியவாறு நடைபெற்ற உலக வழக்கம் நாளடைவில் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பெறும் நிலையை அடையலாயிற்று, சிறந்த புலவன் வாழ்க்கையிலிருந்து எடுத்த செய்திகளை அப்படியே தன் இலக்கியத்தில் படைப்பதில்லை. அவற்றை மாற்றியும் ஒரு நெறியில் அமைத்தும் தாழ்ந்தவற்றை உயர்ந்தவையாக மாற்றியும் தன் கற்பனைத் திறத்தால் ஒரு குறிக்கோள் நிலையினைத் தன் இலக்கியத்தில் படைப்பான். இதனைப் படிக்கும் சமூகம் தன்னிலையினின்றும் மேலும் உயரும். இத்தகைய செயலையே பண்டைத் தமிழ்ப் புலவர்கள் செய்தனர். இதனையே இலக்கண நூலார் 'நாடக வழக்கு' என்று வழங்குவர். இதனைச்

4. Hudson, W. H: An Introduction to the Study of Literature, page 92.

'செய்யுள் வழக்கம்' அல்லது 'புலனெறி வழக்கம்' என்று வழங்குவதும் உண்டு. இதனை,

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம் [5]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் அறியலாம். "'நாடக வழக்காவது, சுவைபடவருவனவெல்லாம் ஓரிடத்து வந்தவனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போருமின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும்; பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்குவந்தனவாகக் கூறுதல். உலகியல் வழக்காவது, உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருதல். பாடல் சான்ற புலனெறி வழக்கமாவது, இவ்விரு வகையானும் பாடல் சான்ற கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்க் கூறப்படுகின்ற அகப் பொருள்." என்ற இளம் பூரணரின் இந்நூற்பாவிற்குரிய உரைப் பகுதி இதனை இன்னும் தெளிவாக்கும். இந்த அகப் பொருள், இலக்கணத்தில் களவு, கற்பு என்று இருவகையாகப் பகுத்துப் பேசப் பெறும். இவற்றைப் பின்னர் விளக்குவேன்.

ஆரியரின் எண்வகை மணங்கள்: தமிழரின் திருமண வாழ்வினைப் புலனெறி வழக்காகச் சித்திரிக்கும் தொல்காப்பியர் காலத்தில் வடவர் நாகரிகம் மெல்லப் பரவத் தலைப்பட்டது; எனவே, வடவர் நூலில் ஓதப்பெற்றுள்ள மண முறைக்கும் தென்றமிழ் நாட்டு மண முறைக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளங்க உரைக்க வேண்டியது அவரது கடமையாயிற்று. ஒருவன் ஒருத்தியரிடையே உண்டாகும் கூட்டுறவை மேலே எடுத்துரைத்தவாறு கைக்கிளை,

---

5. தொல்-பொருள்-அகத்திணை—நூற் 56 (இளம்)

அன்பினைந்திணை பெருந்திணை என மூவகையாகப் பகுத்துப் பேசுதல் தமிழ் மரபு. பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்று மறையோர் தேசத்து மன்றல் எட்டு வகையாகப் பகுத்து உரைக்கப்பெறும். பிரமம் என்பது, நாற்பத்தெட்டி யாண்டு பிரம்மச்சரியம் காத்தாற்குப் பன்னிரண்டு வயதுப் பருவமுள்ள கன்னியை அணிகலன் அணிந்து கொடுப்பது. பிரசாபத்தியம் என்பது, மைத்துன கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறுக்காமல் கொடுப்பது ஆரிடம் என்பது, காளை பசு ஆகிய இரண்டின் கொம்புகளுக்கும் குளம்புகட்கும் பொற்பூண் அணிந்து அவற்றின் நடுவில் மண மக்களை நிறுத்திப் பொன்பூட்டி 'நீவிரும் இவைபோலப் பொலிந்து வாழ்வீராக' என நீர்வார்த்துப் பெண்ணைக் கொடுப்பது. தெய்வம் என்பது, வேள்வி செய்த ஆசிரிய னுக்கு வேள்வித் தீ முன்னர் கன்னியைக் காணிக்கையாகக் கொடுப்பது. காந்தருவம் என்பது, ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்ட இடத்தில் கூடிப் பிரிவது. அசுரம் என்பது, கொல்லும் இயல்பினையுடைய எருதினை அடக்கியவன் இப் பெண்ணை மணத்தற்குரியவன், வில்லேற்றினான் இவளை மணத்தற்குரியவன், இன்னதொரு பொருள் தந்தான் இவளை மணத்தற்குரியவன் என இவ்வாறு சொல்லிச் சொல்லிய வண்ணம் செய்தாற்குப் பெண்ணைக் கொடுப்பது. இராக் கதம் என்பது, தன்னால் விரும்பப்பட்ட பெண்ணை அவள் விரும்பாமலும் பெற்றோர் கொடாமலும் வலிதிற் கவர்ந்து செல்வது. பைசாசம் என்பது, மூத்தாள் துயின்றாள் கள்ளுண்டு களித்தாள் ஆகியோரைக் கூடுவது. இவ்வெட்டு மணங்களையும் முறையே அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், யாழோர் கூட்டம், அரும்பொருள் வினை நிலை, இராக்கதம், பேய்நிலை என வழங்குவர் இறையனார் களவிய லுரையாசிரியர். இவற்றுள் முதல் நான்கும் ஆரிய பிராமண ருக்கும், அசுரமும் இராக்கதமும் பெரும்பாலும் அரசர்க் கும், பைசாசம் சூத்திரர்க்கும், காந்தர்வம் எல்லார்க்கும் உரியனவாகக் கூறப்பெற்றுள்ளது.

காந்தருவம்—களவு: ஒற்றுமை: மேற்கூறிய எண்வகை மணத்தினுள்ளும் அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய மூன்றும் தமிழர் கூறியுள்ள கைக்கிளையின்பாற்படுவன என்றும், பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்ற நான்கும் பெருந்திணையில்டங்கும் என்றும் காந்தருவம் மட்டிலும் ஐந்திணையின்பாற்படும் என்றும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறுவர். கந்தருவ குமாரரும் கன்னியரும் தம்முன் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தாற்போலத் தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டு புணர்வது களவொழுக்கமாகும் எனக் காந்தருவத்திற்கும் களவொழுக்கத்திற்குமிடையே அமைந்த ஒற்றுமையினை விளக்கியுள்ளார் நச்சினார்க்கினியர்.

இரண்டற்குமுள்ள வேற்றுமை: இனி, இந்த இரண்டற்குமுள்ள வேற்றுமைகளையும் நீ அறிதல் வேண்டும். காந்தருவ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோன்றுவது. அதன் பயிற்சியால் உள்ளப் புணர்ச்சி நிலைபெற்றுச் சாகுமளவும் கூடி வாழ்தலும் உண்டு; உள்ளப் புணர்ச்சி தோன்றாது தம் எதிர்ப்பட்டாரைக் கூடி மாறுதலும் உண்டு; என்றும் பிரியா நிலையில் நிறை கடவாது அன்பினாற் கூடும் உள்ளப் புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பாகும். உலகியலில் உளவாகும் பலவகை இடையூறுகளால் ஒருவரையொருவர் மணந்துகொள்ள இயலாமல் உள்ளப் புணர்ச்சியளவே கூடிவாழ்ந்து, பின்னர் இறந்த காளையரும் தமிழகத்து இருந்தனர். மணிமேகலையிற் கூறப்படும் தருமதத்தன், விசாகை என்னும் இருவர் யாழோர் கூட்டமாகிய காந்தருவ முறையிற் பொருந்தியவர்கள் எனத் தம்மை நோக்கி ஊரார் கூறிய பழிமொழியை விலக்கித் தம் வாழ்நாள் முழுவதும் மெய்யுறு புணர்ச்சியை விரும்பாது உள்ளப்புணர்ச்சியளவில் நின்று உயிர் துறந்த வரலாற்றினை ஈண்டுச் சிந்திப்பாயாக. மேற்கூறிய இதுவே தமிழியல் வழக்கமான களவுக்கும் வடவர் மணமாகிய காந்தருவத்திற்கும் உள்ள உயிர் நிலையாய வேறுபாடாகும் என்பதையும் உளங்கொள்க. 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக் கூட்டம்' என்று

தொல்காப்பியரும், 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை' என்ற இறையனார் களவியலாசிரியரும், 'அன்புடை நெஞ்சந் தாங் கலந்தனவே' எனவே குறுந்தொகைப் புலவரும் உள்ளப் புணர்ச்சியொன்றையே களவிக்குரிய சிறப்பியல்பாக விரித் துரைத்துள்ளமையையும் அறிக. ஆரிய மணமாகிய காந்தரு வத்திற்கும் தமிழர் நெறியாகிய களவொழுக்கத்திற்கும் உள்ளவேற்றுமையினையும் களவொழுக்கத்தின் தூய்மையினை யும் ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அறிவிக்கும் நோக்கத்து டன் கபிலர்பாடிய 'குறிஞ்சிப்பாட்டு' இருவகை நெறிகட்கும் உள்ள வேற்றுமையினை இனிது விளக்குவதாகும். இந்நுட் பத்தினை நன்குணர்ந்தே நச்சினார்க்கினியாரும், "காந்தருவற் குக் கற்பின்றி அமையவும் பெறும், ஈண்டுக் கற்பின்றிக் களவேயமையாது"[6] என்று கூறியுள்ளவை நோக்கத்தக்கது. இக்களவொழுக்கம் ஒழுகும் ஒருவனும் ஒருத்தியும் ஒப்புயர் வில்லா உயர் மக்களாவர். அவர்கள் இருவரிடையேயும்,

பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோ(டு)
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே[7]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் கூறப்பெற்றுள்ள பத்து வகைப் பொருத்தங்களும் அமைந்திருத்தல் வேண்டும்.

களவு—விளக்கம்: இனி, மேற்குறிப்பிட்ட களவு என்ன என்பதை விளக்குவேன். ஒத்த பருவம் உருவம் முதலிய பத்தும் உள்ள ஒருவனும் ஒருத்தியும் தம்மைக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றிப் பால்வரைத் தெய்வத்தின் ஆணையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடும் கூட்டமே களவாகும். இம் முறையில் தமக்கேற்ற வாழ்க்கைத்துணைவரைத் தாமாகவே தேர்ந்தெடுத்துக் கொள்வர். இஃது இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம்

6. தொல்-பொருள்-களவு—நூற் 1 (நச்)
7. தொல்-பொருள்-மெய்ப்—நூற் 25.

என்ற நான்குவகையாக அமையும். இந்த நான்கிலும் பல உட்பிரிவுகளும் ஒவ்வொரு உட் பிரிவிலும் பல துறைகளும் உள்ளன.

**கற்பு விளக்கம்:** கற்பு என்பது, களவு முற்றிய தலைவனும் தலைவியும் இருவர் பெற்றோரும் உடன்பட்டுப் பல்லோரிடையே மணம்புரிவிப்பித்ததும் மணந்துகொண்டு இல்வாழ்க்கையைத் நடத்துதலாகும். எனவே, கற்பு களவொழுக்கத்தின் கனி என்பதும், அன்பின் வெற்றி என்பதும் பெறப்படுகின்றது. ''மறை வெளிப்படுதல் கற்பு'' ஆகும். இதுவும் மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு என்று ஐந்து வகையாக அமையும். அவற்றுள் மலிவு என்பது, களவு முற்றி மணந்துகொண்ட காதலர், மனக்குறை தீரக் கூடிக் கலந்து இன்புற்று வாழ்தல் ஆகும். மலிவு–மகிழ்ச்சி. புலவி, ஊடல், உணர்வு என்ற இம்மூன்றும் ஒன்றையொன்று பிரிக்க முடியாத பொருள்களாகும். புலவி என்பது, தலைவி தலைவனிடத்திலுள்ள அன்பில் சிறிது மாறுபட ஒழுகுவது. புலவி–மனவேறுபாடு. அந்தப் புலவி நீட்டிப்பின் அஃது ஊடல் எனவும், ஊடல் மிக்கது 'துனி' எனவும் வழங்கப் பெறும். தலைவனின் வேண்டலால் தலைவி ஊடல் தணிந்து அன்புறுவதை உணர்த்த உணர்தல் உணர்வு ஆகும். பிரிவு என்பது, தலைவன் ஓதல் பகை தூது காவல் பொருள் முதலியவற்றின் பொருட்டுத் தலைவியை விட்டுப் பிரிவதாகும். இவற்றிலும் பல உட்பிரிவுகளும் ஒவ்வொன்றிலும் பல துறைகளும் உள்ளன.

எனவே, மேற்கூறியவாறு பண்டைத் தமிழர்களிடம் காணப்பெற்ற பழக்கங்களாகிய உலக வழக்கினையே பொருளாகக் கொண்டு பழந்தமிழ்ப் புலவர்கள் இலக்கியம் செய்தனர். இதுவே உலக வழக்கினை அழகுறப் புனைந்து புலவர் பாடும் செய்யுள் வழக்கமாகும். இங்ஙனம் தமிழ் இலக்கியங்களிலும் தமிழ் இலக்கணங்களிலும் புலனெறி வழக்கமாகக் காணப்பெறும் தமிழரின் மணவாழ்க்கையை இன்றைய மண

கக்கள் ஆராய்ந்தறிவது இன்றியமையாக் கடமைகளுள் ஒன்றாகும். இதுபற்றியே இதனை ஓரளவு சுருக்கமாகக் கூறினேன். இவற்றை ஓரளவு விரிவாக அறிந்துகொள்ள வேண்டுமானால் "தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை"[8] என்ற நூலினைப் படித்து அறிந்துகொள்வாயாக.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

---

8. சுப்பு ரெட்டியார், ந: தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை. (பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி-2)

# 45

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன்: நலன் தெரிவிக்க.

இன்றைய மக்களின் வாழ்க்கையில் எத்தனையோ மாற்றங்கள் நடைபெற்றுள்ளன. படித்தவர்களின் வாழ்க்கை ஒரு விதமாகவும் பாமரர்களின் வாழ்க்கை மற்றொரு விதமாகவும் அமைந்திருக்கின்றன. இன்று தமிழ் மக்களிடையே பெரும்பாலும் நடைபெற்று வரும் திருமணங்களை முன் கடிதத்தில் குறிப்பிட்ட 'பிரசாபத்தியம்' என்ற திருமண வகையில் அடக்கலாம். மணமகன் வீட்டாரிடமிருந்து பரியம் வாங்குதலும், பெண் வீட்டார் பெண்ணுக்குச் சீர் முதலியவை கொடுத்தலும் இன்று வழக்கிலிருந்து வருகின்றன. சில வகுப்பாரிடை பிற்குறிப்பிட்ட வழக்கம் வரதட்சிணையாக மாறி இருக்கின்றது. அண்மையில் இக்கொடுமையான கேடு பயக்கும் பழக்கத்தைப் போக்குவதற்காக இயற்றப்பட்ட சட்டத்தாலும் குறிப்பிடத்தக்க நன்மையொன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. இதனால் 'வரதட்சிணைப்பேய்' 'அன்பளிப்புத் தேவதை'யாக மாறியுள்ளது! அவ்வளவுதான்.

நாகரிக வாழ்வின் விளைவுகள்: இன்றைய நாகரிக வாழ்க்கையில் விரைவாக ஏற்பட்டுவரும் மாற்றங்கள் இன்னும் நம் நாட்டுப் பண்பாட்டுடன் நன்கு இணையவில்லை. கல்வி மக்களிடையே வேகமாக வளர்ந்து வருகின்றது. பெண்களும் அதிகமாகப் படிக்கத் தொடங்கியுள்ளனர் அவர்கள் அரசியல் அலுவல்களிலும் பிற அலுவல்களிலும் பணியாற்றுகின்றனர். ஓரளவு விரைவாக வளர்ந்துவரும் தொழில் முன்னேற்றத்தாலும் மக்கள் வாழ்க்கை மாறி வருகின்றது. பெரும்பாலும் படித்தவர்களும் அலுவல் பார்க்கின்றோரும் நகர்புறத்தை நாடிக் குடியேறி வருகின்றனர். இத்தகைய

காரணங்களால் பண்டிருந்த குடும்ப வாழ்க்கை மாறிப் புதிய விதமான குடும்ப அமைப்பு ஏற்பட்டுள்ளது பல காரணங் களால் கணவனும் மனைவியும், மக்களும் பெற்றோரும், தாம் பழகிவந்த சமூகத்தை விட்டுப் புதிய சமூகங்களிடையே வாழவேண்டிய இன்றியமையாமையும் வாய்ப்புகளும் ஏற்பட்டு வருகின்றன. பெண்களும் சம்பாதிக்கவேண்டும் என்ற நிலையும் சில குடும்பங்களில் ஏற்பட்டு வருகின்றது. குடும்பம் ஒரு தனி நிலையம்போல் இயங்கி வந்தது மாறி அது சிறிது சிறிதாகச் சிதறி வருகின்றது. சில சமயம் கணவன் ஓரிடம், குடும்பம் ஓரிடம், பெற்றோர் ஓரிடம், பிள்ளைகள் ஓரிடம்-என்று மாறி வாழவேண்டிய நிலையையும் இன்றைய சமூகத்தில் காணலாம். இங்ஙனம் குடும்பப் பொறுப்பும் அமைப்பும் ஓரளவு மாறிவருகின்றது; ஆயினும் குடும்பத்தினுள்ளேயிருக்கும் தனிப்பட்ட கணவன்-மனைவிய ரின் உறவு பெற்றோர் பிள்ளைகளின் சொந்த உறவு நெருங்கி வருகின்றது. அலுவலின் நிமித்தம் கணவனும் மனைவியும் தம் பெற்றோர்களைவிட்டு வேர் றூர்களில் வாழவேண்டி யிருப்பதால் இருவரிடையே உறவு நன்கு வலுப்படுகின்றது.

திருமணத்தின் நன்மைகள்: நவீன நாகரிக சமூகத்தில் அன்பிற்கு இருப்பிடமாகவும், உள்ளக்கிளர்ச்சிப் பாதுகாப் பிற்காகவும், பாலுறவில் மனநிறைவு பெறவும், மக்கட் செல்வம் அமையவும், வழிவழியாகவரும் மரபுவழிப் பண்பு சரியாக இறங்கவும் 'திருமணம்' இருந்து வருகின்றது; இத் தகைய முக்கிய செயல்களைத் திருமண உறவு-குடும்ப அமைப்பு-நிறைவேற்றி வருகின்றது. பகலெல்லாம் வெளி யிடங்களில் சென்று உழைத்து அலுத்துத் திரும்பும் ஆட வரும் பெண்டிரும் வீட்டில்—குடும்ப அமைப்பில்—ஓர் அமைதியைப் பெறுகின்றனர். கணவன் மட்டிலும் அலுவல் பார்க்கும் குடும்பத்தில் மனைவி இல்லக்கிழத்தியாக இருந்து வீட்டு அலுவல்களைத் திறம்படப் பார்த்து வருகின்றாள்; திரு மணத்தில் 'குடும்ப விளக்காகத்' திகழ்பவளும் அவளே. கணவனும் மனைவியும் தனித்து வாழும் குடும்பத்தில்தான் இருவருக்கிடையே ஆன்மநேய ஒருமைப்பாடும், 'நமது'

என்ற உணர்ச்சியும், ஒருவரையின்றி ஒருவர் அமையாமை என்ற எண்ணமும் ஏற்பட்டு இருவருடைய ஆளுமைகளும் நன்கு வளர்ச்சி பெறுகின்றன. இங்குத்தான்,

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.[9]

என்ற வள்ளுவப் பெருந்தகையும் பிறரும் போற்றும் 'மக்கட் பேறு' ஏற்படுகின்றது; இது சமூகத்தினரால் ஒப்புக்கொள்ளப்பெற்ற செல்வமாகும். குடும்பச் சூழ்நிலைதான் குழந்தைகளின் உடல், உள்ளவளர்ச்சிகட்கு ஏற்றது என்று உளவியலாரும் கருதுகின்றனர்; பெற்றோரின் அன்பும் அரவணைப்பும் குழந்தையின் உள்ளக்கிளர்ச்சி வளர்ச்சிக்கும் அதன் ஆளுமை வளர்ச்சிக்கும் மிகவும் இன்றியமையாதவை என்று நவீன உளமருத்துவ இயலாரும்[10] வற்புறுத்தி வருகின்றனர்; எனவே, மானிட இன மேம்பாட்டில் குடும்பமே பண்பாட்டு, சமூக அடிப்படைக் கூறாகத் திகழ்கின்றது. இத்தகைய குடும்பம் சமூக அறத்தின் அடிப்படையில் அமைந்துவிட்டால் அதுவே சாலச் சிறந்ததாகும்.

திருமண முரண்பாடுகள்: இத்தகைய பல நலன்களும் அடங்கியுள்ள இல்வாழ்க்கையில் இக்காலத்தில் கணவன் மனைவி பிணக்குகளும் மண முறிவுகளும் அடிக்கடி நேரிடுகின்றனவே என நீ வினவலாம். இத்தகைய இடையூறுகள் எல்லாக் காலத்திலும்தான் நடைபெற்றன. நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாகவே ஒரு சிலரிடம் இத்தகைய மண வேற்றுமைகள் நிகழ்ந்துதான் வந்தன; ஆயினும், பண்டைக்காலத்தில் இத்தகைய முரண்பாடுகள் எழினும், குடும்பம் சிதைவுறவில்லை; சமயம், சட்டம், சமூகக் கட்டுப்பாடு ஆகிய புறவிசைகள் திருமணத்தையும் குடும்பத்தையும் சிதையாமல் கட்டுப்படுத்தி வந்தன. இன்று அப்புறவிசைகளால்பொருந்தாத திருமணங்களைக்கட்டுப்படுத்த

9 குறள்—61.
10 உளமருத்துவ இயல்—Psychiatry.

முடியவில்லை. எனவே, இன்று குடும்பம் ஒன்றுபாட்டுடன் திகழவேண்டுமாயின், கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயும், பெற்றோர்கட்கும் குழந்தைகட்கும் இடையேயும் அகவிசைகளும், அகவொற்றுமையும் நிலவ வேண்டியுள்ளன. பண்டிருந்ததைவிட இன்று மக்கள் திருமணத்தினால் அதிகமான நலன்களை எதிர்பார்க்கின்றனர். மருத்துவமனைகளில் இன்று காணப்பெறும் அதிகமான நோயாளிகளின் எண்ணிக்கையைக்கொண்டு இன்று உலகில் நோய் அதிகமாகிவிட்டது என்று சொல்ல முடியாது: மருத்துவமனைகள் அதிகமாகத் தோன்றியிருப்பதால் அந்த வசதிகளை அதிகமான மக்கள் பயன்படுத்திக்கொண்டு வருகின்றனர் என்றுதான் கருதவேண்டும். அங்ஙனமே, அதிகமான மணமுறிவுகளும், ஜீவனும்ச வழக்குகளும் அதிகமாக இருப்பதுபோல் தோன்றுவதற்குக் காரணம், மக்கள் பொருந்தாத திருமணத்திலுள்ள குறைகளைப் போக்குவதற்கு நீதி மன்றங்களைப் பயன்படுத்துகின்றனர் என்பதேயாகும். ஆகவே, உண்மையில் குடும்பம் சிதைந்து போகவில்லை; அது புதிய சூழ்நிலைக்கேற்றவாறு பொருத்தப்பாடு அடைந்து வருகின்றது என்று கொள்வாயாக.

முரண்பாட்டிற்குக் காரணங்கள்: திருமண உறவில் நேரிடும் காரணங்களை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதலாவது: கணவனோ, மனைவியோ, அல்லது இருவருமோ உள்ளக் கிளர்ச்சியில் முதிராத நிலையில் இருக்கலாம்; அல்லது நரம்பு நோய்பற்றிய ஆளுமையுடையவர்களாகவும் இருக்கலாம். இதனால் இருவரிடையேயும் திருப்திகரமான முறையில் பொருத்தப்பாடு அமைய முடிவதில்லை. இரண்டாவது: ஒரு குறிப்பிட்ட தம்பதிகளின் உறவு சரியாக அமையாதும் இருக்கலாம். அவர்களுடைய மனப்பான்மைகள், மதிப்பீடுகள், கவர்ச்சிகள் ஆகியவற்றில் குறிப்பிடத்தக்க அளவு வேறுபாடுகளிருக்கலாம்; அல்லது இருவரிடையேயும் போதுமான அளவு காதலும் அன்பும் இல்லாதிருக்கலாம். அவர்களுடைய பால் வாழ்க்கை திருப்தியில்லாதிருக்கலாம்; அல்லது குழந்தை இல்லா நிலையும் மனக்

குறைக்கு ஒரு காரணமாக அமையலாம். இவற்றால் அவர்கள் இணைந்திருக்க முடிவதில்லை மூன்றாவது: இவரிடையேயும் எழும் முரண்பாடுகள் சமூகப் பொருளாதார நிலைகள், பெற்றோர் தலையீடு போன்ற புறவிசைகளால் எழலாம்; இக்கூறியவற்றுள் யாதாவது ஒன்று கணவன்-மனைவியரிடையே வளரும் நல்லுறவினைக் குலைத்துவிடல் கூடும். சுருங்கக் கூறினால் திருமண முரண்பாடுகளின் மூலங்கள் தம்பதிகளின் ஆளுமைகள், பொருந்தாத் திருமணம், அவர்கள் வாழும் சூழ்நிலை ஆகிய மூன்று பகுதியில் அடங்குகின்றன. பெரும்பாலும் முரண்பாடுகள் எழுவதற்குரிய காரணங்கள் இவற்றுள் யாதாவது ஒருதலைப்பினுள் அடக்கவோ, அல்லது அவற்றைத் தனியாகப் பிரித்தறியவோ இயலாது. ஏனெனில், ஒன்றில் பல்வேறு கூறுகள் பங்கு பெறுகின்றன. இக்கூறுகளும் ஒன்றைவிட்டு ஒன்றினைப் பிரித்தறிய முடியாதவாறு பின்னிப்பிணைந்து கிடக்கின்றன.

மேற்கூறிய மூன்று பகுதிகளாகப் பிரித்துக் காட்டிய காரணங்கள் யாவும் இதற்கு முன்னர் தொல்காப்பியர் காட்டியுள்ள பத்துவகைப் பொருத்தங்களில் ஒன்றோ பலவோ இல்லாமையால்தான் எழுகின்றன என்பது ஆராய்ந்து பார்ப்பவர்கட்குப் புலனாகும். இங்ஙனம் உணர்ந்து பார்க்கும்பொழுதுதான் வாழ்க்கையின் பல்வேறு கூறுபாடுகளையும், மனித இயல்பின் பல்வேறு போக்குகளையும் நன்கு எண்ணிய தொல்காப்பியரின் பெருமையும் அவர் அருளியுள்ள வாழ்க்கைக் கண்ணாடியாகிய தொல்காப்பியத்தின் அருமைப்பாடும் நமக்கு நன்கு புலனாகும்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 46

அன்பார்ந்த செந்தில் வேலனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

சென்ற கடிதத்தின் இறுதியில் திருமண வாழ்க்கையில் எழும் காரணங்களை மூன்று பகுதியில் தொகுத்துக் கூறினேன் அல்லவா? அவற்றை ஈண்டுச் சற்று விரிவாக ஆராய்வேன்.

ஆளுமைக் கூறுகள் : முதலாவதாக ஆளுமைக் கூறுகள் திருமண வெற்றியில் எங்ஙனம் பங்கு பெறுகின்றன என்பதை ஆராய்வேன். தம்பதிகளின் சால்பு[11] மீப்பண்பு[12] மனநிலை[13], நடத்தைக் கோலங்கள், சிந்தனை, செயல் முதிர்ச்சிகள்—ஆகிய இவைகள் திருமண இணைவிற்கும் அல்லது திருமண முறிவிற்கும் மிக முக்கியமானவை என்பதை அறிவாயாக. திருமணப் பொருத்தங்களைப் பற்றிக் கூறிய இடத்தும் சிலரிடம் உள்ளக் கிளர்ச்சியளவில் பொருத்தம் ஏற்படுவதில்லை என்று குறிப்பிட்டது உனக்கு நினைவிருக்கும் என்று கருதுகின்றேன். நரம்பு நோயுடைய[14] ஆளுமைக் கூறுகளைக் கொண்ட மக்களும், உள நோயினையுடைய[15] போக்குகளைக் கொண்டோரும் எந்தவிதமான மானிட உறவுகளிலும் பொருத்தப்பாடு அடைவதில் சங்கடப்படுவர். அன்றாட வாழ்க்கையில் மிக அன்னி

11. சால்பு-Character
12. மீப்பண்பு-Temperament
13. மனநிலை-Disposition
14. நரம்பு நோயுடைய-Neurotic
15. உளநோய்-Psychopathy

யோன்னியம் வேண்டப்படும். திருமண உறவில் அத்தகை யோர் எங்ஙனம் பொருத்தபாடு அடைதல் இயலும்? அத்தகையோர் திருமணம் புரிந்து கொண்டால் தம்மு டைய நரம்பு நோய் நடத்தையைத் திருமண உறவிலும் கொண்டு செலுத்துவர். பெற்றோரைச் சார்ந்தே இருக்கும் பெண்ணிடம் தற்சார்பு துளிகூட இல்லாததால் கணவனி டம் ஒரு சிறு பிணக்கு ஏற்பட்டாலும் அவள் தாய் வீட் டிற்கு ஓடிவிடுவாள்; அங்ஙனமே தன்னுடைய விருப்பங் கட்குச் சிறு தடை ஏற்பட்டாலும் ஆடவர் வெகுளியின் உச்ச நிலையை அடைந்துவிடுவார்; சிலசமயம் தம் பொறுப்பு களைத் தட்டிக் கழிப்பதற்காகவே குடித்துவிட்டு மயங் கிக்கிடப்பார். இத்தகைய தம்பதிகளின் வாழ்வில் பிரச்சினை அவர்களின் ஆளுமையிலுள்ளதேயன்றி திருமண உறவில் அன்று என்பதை அறிவாயாக.

இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் வேண்டும். சில சமயம் திருமணம் தம்பதிகளின் நடத்தைக் கோலங்களையே மாற்றிவிடுகின்றது; இருவருமே 'புதிய மனிதர்களாக' மாறிவிடுகின்றனர். திருமண உற வினால் ஏற்படும் அன்பு, பாதுகாப்பு, மகிழ்ச்சி ஆகியவை நிறைந்துள்ள புதிய சூழ்நிலையில் தம்பதிகளிடம் அறிவு முதிர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சியும் ஏற்பட்டுவிடுகின் றன. எனினும், முக்கியமாக, ஆடவரும் பெண்டிரும் ஒரு வகையில் நிலையான ஆளுமை அமைப்புடனேயே திருமணத் தில் இயைபுறுகின்றனர்; திருமணம் முடிந்ததும் அன்றாட வாழ்வில் அவர்களிடம் அவர்களது முன்னைய நடத்தையே தோன்றுகின்றது.

அன்புடனும் நட்புடனும் கூட்டுறவுடனும் எதையும் பொறுமையுடன் ஏற்கும்இயல்புடனும் ஆடவர்களும் மகளி ரும் சிறந்த கணவர்களாகவும் மனைவியர்களாகவும் திகழ்வ தைச் சில ஆராய்ச்சிகளால் அறிகின்றோம். இவர்கள் தம் முடைய இந்தச் சிறப்பியல்புகளைக் குடும்பத்திலும் குடும்ப உறவிலும் காட்டுவதுதான் இந்த வெற்றிக்குக் காரணமா கின்றது. பொறுப்பற்ற தன்மையுடனோ அல்லது ஆக்கிர

மிக்கும் இயல்புடனே திகழும் ஓர் ஆடவர் திருமணத்திற்குக் பின்னரும் அங்ஙனமே இருப்பதையும், சதா 'அரித்துப்பிடுங் கும்' இயல்புடனே அல்லது எதையும் பொறுக்க முடியாத இயல்புடனே உள்ள ஒரு பெண் திருமணத்திற்குப் பிறகு அங்ஙனமே இருப்பதையும் நாம் காணுமல் இல்லை. ஆகவே, தன்னுடைய இயல்புகட்கும் நடத்தைக் கோலங்கட்கும் ஏற்றவாறு ஒரு பெண்ணை மாற்றி விடலாம் என்று எதிர் பார்க்கும் கணவனும் அங்ஙனமே தன்னுடைய விருப்பத் திற்கேற்றவாறு திருத்தி விடலாம். அல்லது தன்னுடைய எண்ணத்திற்கேற்றவாறு தன் கணவனை மாற்றி விடலாம் என்று கருதும் மனைவியும் மிக அதிகமான ஏமாற்றத்தையே அடைதல் கூடும் என்பதை அறிவாயாக. எனவே, கணவன் மனைவியரின் ஆளுமைக் கூறுகள், அவர்களுடைய மனநிலை கள், அவர்களுடைய முதிர்ச்சி ஆகியவையே திருமணத்தில் மகிழ்ச்சியைத் தரக் கூடியனவாகும். தம்பதிகளின் தன்மை களே திருமணத்தின் தன்மையை அறுதியிடுகின்றன.

உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சி: ஆளுமைக்கூறுகளில் மிகவும் முக்கியமானது உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சி என்பது. சரியான அளவு ஏற்படும் வளர்ச்சியே முதிர்ச்சியாகும். உடல்நிலை யிலும் உளநிலையிலும், உள்ளக்கிளர்ச்சி நிலையிலும் ஒரு குழந்தை முதிர்ச்சி அடையவில்லை என்பதை நீ அறிவாய். ஒருகுழந்தையால் நடக்கமுடிவதில்லை; தன்னுடையதேவை கட்கும், ஆதரவுக்கும் வழிகாட்டப் பெறுவதற்கும் குழந்தை பிறரையே சார்ந்துள்ளது அங்ஙனமே, ஒரு குழந்தை காரண காரிய முறையில் சிந்திக்க முடியாத நிலையிலுள்ளது; தன்னுடைய பேச்சிலும் செயலிலும் சரியான கட்டுப்பா டின்றியும் உள்ளது. வயது ஆக ஆக குழந்தை உடல் வன் மையைப் பெறுகின்றது; நடப்பதற்குப் பிறருடைய ஆதரவு தேவையில்லை; அதிகமான அறிவுத்திறனையும் அதிகமான உள் ளக்கிளர்ச்சியையும் பெறுகின்றது. அஃதாவது, உடல் கட் டுப்பாட்டுடனும் உள்ளக்கிளர்ச்சிக் கட்டுப்பாடுடனும் வினை புரியவும் எதிர்வினைபுரியவும் தேவையான திறனை அடைகின்

றது. சில குழவிகள் உடல் வளர்ச்சியின்றி வலிவற்றும் வளர்ச்சி தடைப்பட்டும் கிடக்கின்றன; சில குழவிகள் அறிவு வளர்ச்சியின்றி மந்த மதியுடனும் உள்ளன; இன்னும் சில குழவிகள் உள்ளக்கிளர்ச்சி வளர்ச்சியின்றி முதிர்ச்சியடையா நிலையில் இருக்கின்றன. பெரும்பாலான மனிதர்கள் முழு வளர்ச்சியை ஒருபொழுவதும் அடைவதே இல்லை. அவர்கள் தம்முடைய சிந்தனையிலும், உணர்ந்து பார்க்கும் தன்மையிலும், தம்முடைய செயல்களிலும் "குழந்தை நிலையிலேயே' உள்ளனர். அன்றாட வாழ்க்கையில் இதற்கு எண்ணற்ற எடுத்துக்காட்டுகளைக் காணலாம்.

முதிர்ச்சியின் அறிகுறிகள்: ஒருவரிடம் காணப்பெறும் முதிர்ச்சிக்கான அறிகுறிகள் யாவை? இவற்றை நீ அறிந்துகொள்ளவேண்டும். முதலாவதாக, முதிர்ச்சி அடைந்த மனிதனின் சிந்தனையின் உள்நோக்கும்[16] முன்நோக்கும்[17] காணப்பெறும். அவன் தன்னையும் தன்னைச் சுற்றியுள்ள உலகையும் சரியாக அளவிட்டு மதிப்பீடு செய்து கொள்ளுகின்றான். இளமையில் நாம் சாதாரணமாக மனக்கோட்டை கட்டிக்கொண்டு அதில் வாழ்கின்றோம்; நம்மை நாம் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்கள் என்றும், அன்புக்கு உரியவர்கள் என்றும், கதாநாயகர்கள் என்றும் ஒருவிதமாகவும், அல்லது உதறித் தள்ளப்பெற்றவர்கள் என்றும், வெறுக்கப்பெற்றவர்கள் என்றும், கேவலப்படுத்தப்பெற்றவர்கள் என்றும் மற்றொரு விதமாகவும் எண்ணிக்கொள்ளுகின்றோம். நாம் வளர வளர நம்மை நாம் படிப்படியாக நன்கு புரிந்து கொள்ளக் கற்றுக் கொள்கின்றோம்; நம்முடையவன்மையும் மென்மையும், திறனும் திறனின்மையும் நமக்கு நன்கு புலனாகத் தொடங்குகின்றன. நம்முடைய சிந்தனையிலும் உணர்விலும் நடத்தையிலும் நாம் உள்நோக்கினை அடைகின்றோம்.

---

16. உள்நோக்கு—Insight

17. முன்நோக்கு -Foresight.

நாம் வளரவளர முன்நோக்கும் வளர்ச்சி யடைகின்றது. வாழ்க்கையின் உண்மைகளை அப்படியே ஏற்றுக்கொள்ளவும் நம்முடைய செயல்களின் முடிவுகளை முன்னதாகவே எதிர் பார்க்கவும் கற்றுக் கொள்ளுகின்றோம்; நம்முடைய நடத்தையின் உத்தேசமான விளைவுகள் என்னவாகும் என்பதை முன்னதாக அறுதியிடவும் நம்மால் முடிகின்றது. நம்முடைய சிந்தனையிலும் செயலிலும் நம்முடைய விருப் பங்களை ஆக்கிரமிக்க நாம் அனுமதிப்பதில்லை; விருப்பங் களைக் கட்டுப்படுத்தி ஆளும் திறன் நமக்குக் கைவருகின்றது. சுருங்கக்கூறின் நம்முடைய அறிவுக்கூறு புலன் உணர்ச்சி[18], புலன் காட்சி[19], கருத்து[20], நினைவு[21] சிந்தனை[22] ஆகியவற் றின் மூலம் துலங்கி[23] வளருகின்றது.

உள்ளக்கிளர்ச்சியைப் பொறுத்தவரையில் முதிர்ச்சி யடைந்த மனிதனிடம் விடுதலையுணர்ச்சியும் அமைகின்றது. நாம் வளர்ந்ததும் நம்மையே நாம் கவனித்துக் கொள்ளும் திறனை அடைகின்றோம்; எச்செயலிலும் நாமே நமது முடிவுகளையும் தீர்மானங்களையும் செய்கின்றோம். ஒருவரைச் சார்ந்துள்ள மனிதனிடம் பாதுகாப்பு இல்லை; அவனுடைய திறன்களில் அவனுக்கே நம்பிக்கை குறைவாகவுள்ளது. ஆகவே, அவன் அனைத்திற்கும் பிறரையே தொங்க வேண்டி யுள்ளது; அவன் ஆதரவிற்கும் பாதுகாப்பிற்கும் பிறரையே நாடுகின்றான். முதிர்ச்சியடைந்தவன் தன்னையே சார்ந்துள் ளான்; தன் நடத்தைக்குத்தானே பொறுப்பாளியாகின்றான். அவன் பகற்கனவுகளையோ வானக்கோட்டைகளை அமைப் பதையோ அல்லது மயக்கம் தரும் பானங்களையோ மேற் கொள்ளுவதில்லை.

18. புலன் உணர்ச்சி—Sensation.
19. புலன் காட்சி—Perception.
20. கருத்து—Concept.
21. நினைவு—Memory.
22. சிந்தனை—Thinking.
23. துலங்கு—Develop.

பிறருக்கு அன்பும் காதலும் காட்டுவதும் தானும் அவற்றைப் பகிர்ந்து கொள்வதும் முதிர்ச்சியின் மற்றோர் அறிகுறியாகும். குழவிப் பருவத்திலும் பிள்ளைப் பருவத்திலும் அன்புணர்ச்சி, அடிப்படையில் தன்னைச் சுற்றியே அமைகின்றது. ஒரு குழந்தை தன்னுடைய விருப்பங்களையும் தேவைகளையும் நிறைவேற்றிக்கொள்ளவே ஒரு பொருளை விரும்புகின்றது. அது பிறருக்கு அதனைக் கொடுப்பதற்கோ அல்லது பிறருடன் அதனைப் பகிர்ந்து கொள்வதற்கோ சிறிதும் விருப்புவதில்லை. ஆனால், முதிர்ச்சி யடைந்தவரின் அன்பின் பண்பே வேறு போக்கினையுடையது. அவர் எண்ணங்களையும், உணர்வுகளையும், உடைமைப் பொருள்களையும் பிறருடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற உண்மையான விருப்பத்தையுடையவராக உள்ளார். தான் மகிழ்வுடன் இருக்க வேண்டும் என்பதுடன் தன் அன்புக்குரியாருக்கும் மகிழ்ச்சியை அளிக்கவேண்டும் என்ற எண்ணமும் தான் மனநிறைவு பெறவேண்டும் என்பதுடன் தன் அன்புக்குரியவருக்கும் அதனை அளிக்கவேண்டும் என்ற விருப்பமும் அவரிடம் உள்ளது. இத்தகைய அன்புணர்ச்சியே வெற்றியைத் தரும் திருமண உறவிற்கு மிகவும் இன்றியமையாதது.

முதிர்ச்சியடைந்த சிந்தனையும் உணர்ச்சியும் முதிர்ச்சியடைந்த செயல்களிலும் நடத்தையிலும் பிரதிபலிக்கின்றன. ஒரு குழந்தை மறிவினையின் அடிப்படையில் செயற்படுகின்றது; வயது வந்தவன் சிந்தனையின் அடிப்படையில் செயற்படுகின்றான். குழந்தையின் செயல்கள் துடிப்பின் அடிப்படையில்-இயல்பூக்க அடிப்படையில்-நடைபெறுகின்றன. தெருவிற்கு உருண்டோடின பந்தினைப் பற்றுவதற்காக தெருவின் குறுக்கே ஓடுகின்றான் சிறுவன்; வண்டிகளாலும் வாகனங்களாலும் தனக்கு நேரிடக்கூடிய விபத்துகளை அவன் சிந்திப்பதில்லை; இந்நிலையில் வயது வந்தவரின் செயல்கள் சிந்தனையின் அடிப்படையில்தான் அமையும்; அவர் நேரிடக்கூடிய இடர்களை எண்ணி அவற்றினைத் தவிர்ப்பதற்கேற்றவாறு தம் செயல்களை மாற்றிக்கொள்வார். முதிர்ச்சியடைந்தவரின் நடத்தையில் வளைந்துகொடுக்கும் தன்மையும் கட்டுப்பாடும் காணப்பெறும்; நிலைமைக்குத் தகுந்த

வாறு அவர் தம் செயலைப் பொருத்தப்பாட்டடையும்படி செய்து கொள்வார். அவர் ஆணையையும் ஒழுங்கினையும் ஏற்றுக்கொள்வார்; பொறுப்பையும் அதிகாரத்தையும் ஏற்றுக்கொள்ளவும் கூடும். வாழ்க்கையில் தக்க பொருத்தப் பாடு அடைவதற்காக அவர் பிறருடன் எப்படி வேண்டுமோ அப்படி ஒத்துழைத்து நிலைமையினைச் சமாளித்துக் கொள்வார்.

உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சி மனிதருக்கு மனிதர் அளவிலும் தன்மையிலும் மாறுபடும். இந்த உலகில் இரண்டு பேர்கள் ஒரே மாதிரிமாக இருப்பதில்லை. உடல் நிலையிலும், அறிவு நிலையிலும், உள்ளக்கிளர்ச்சி நிலையிலும் அவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபடுவர். பிறப்பாலும் வளர்ப்பு முறையினாலும் நம்முடைய உடலும் மனமும் அமைகின்றன; பெற்றோரிடமிருந்து நாம் பெறும் உடற்பண்புகளும்' வளருங்கால் சூழ்நிலையின் மூலம் நாம் பெறும் கூறுகளும் நம்மிடம் அமைந்துள்ளன. அங்ஙனமே நம்முடைய ஆளுமைகளிலும், உணர்ச்சிகளிலும், மனப்பான்மைகளிலும், காணப்பெறும் வேறுபாடுகள் ஓரளவு நம் பெற்றோரிடமிருந்து அடைந்த உடற்கூறுகளின் காரணமாகவும், ஓரளவு குழவிப்பருவத்தில் நாம் வாழ்ந்த சூழ்நிலைகளிலிருந்து பெற்ற உள சமூகக் கூறுகளினாலும் அமைகின்றன. இந்தச் சூழ்நிலைக் கூறுகள் மனிதருக்கு மனிதர் கட்டாயம் மாறக்கூடுமாதலின், நம்முடைய மனப்பான்மைகளும் நடத்தைக் கோலங்களும் மாறுகின்றன. எடுத்துக்காட்டாக அன்பும் ஆதரவும் நிறைந்த சூழ்நிலையில் வளர்க்கப்பெற்ற ஒரு குழவியிடம் தேவையுணர்வும், உடைமையுணர்வும், பாதுகாப்பு உணர்வும் வளர்க்கின்றன; பொறுப்பற்ற அல்லது விரோதம் நிறைந்த சூழ்நிலையில் வளர்க்கப்பெற்ற குழவியிடம் இவ்வுணர்வுகள் வளர்வதே இல்லை. இங்ஙனம் ஆடவரும் மகளிரும் உருப்பெறும் ஆண்டுகளில் தாம் பெறும் உணர்ச்சிகளும் மனப்பான்மைகளும்தாம் அவர்களுடைய முதிர்ச்சிப்பருவத்தில் அவர்களுடைப் ஆளுமையைப் பாதிக்கின்றன. இவையே திருமணத்திலும் வாழ்க்கையிலும் அவர்கள் அடையும் பொருத்தப்பாட்டு வகைகளுக்கும் காரணமாகின்றன.

மேற்கூறியவற்றிலிருந்து எல்லாவகையிலும் தேவையான அளவு முதிர்ச்சியடைந்த மனிதர்களைக் காண்டல் அரிது என்பது தெளிவாகின்றதல்லவா? நம்முள் பலர் ஒன்று அல்லது பிறிதொரு கூறில் முதிர்ச்சியடையாதுள்ளனர். சிலசமயம் நாமே நடத்தையிலும் சிந்தனையிலும் குழந்தையைப்போலுள்ளோம்; இன்றைய வாழ்வில் நாம் குழவிப் பருவத்தில் பெற்ற அநுபவங்கள், இறுக்கங்கள், பாதுகாப்பின்மை ஆகியவற்றின் விளைவுகளே இதற்குக் காரணமாகும். எனினும், நாம் நம்மிடமும் நம்முடைய துணைவியரிடமும் சிலசமயம் காணப்பெறும் முதிர்ச்சியடையாத வினைகள் எதிர் வினைகளின் அறிகுறிகளையும் காரணங்களையும் புரிந்துகொள்ள முயலுவோமாயின், நம்மிடம் பொறுக்கும் பண்பும் ஏற்றுக்கொள்ளும் பண்பும் வளரும். இதுவே முதிர்ச்சி பெற்றதற்கு ஒருவகைச் சான்றுகும்; இங்ஙனம் பெற்றோர் நிலைமையைப் புரிந்து கொள்வதாலும் வழிகாட்டுவதாலும், பாதுகாப்பு தருவதாலும் நிலைத்த சமூக ஒழுங்காலும் எதிர்கால மக்களின் முதிர்ச்சி அமைகின்றது என்பதை ஒவ்வொரு தம்பதிகளும் உணர்தல் வேண்டும்.

பண்பாட்டுப் பொருத்தப்பாடு : சாதாரணமாக ஒரு தம்பதிகளிடம் நாம் மேலே கூறியஉள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சி அமைந்திருக்கலாம். ஆயினும், அவர்கள் இரு வேறுபட்ட பண்பாட்டின் அடிப்படையில் வளர்ந்தவர்களாதலாலும் கல்வி கவர்ச்சிகள் போன்றவற்றில் வேறுபட்டவர்களாதலாலும், அவர்களிடமும் அதிகமான முரண்பாடுகள் எழுகின்றன. இத்தகைய முரண்பாடுகள்யாவும் முன்கடிதத்தின் இறுதியில் குறிப்பிட்ட இரண்டாவது வகை முரண்பாடுகளின் மூலங்களாகும். இதற்கும் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. சில சமயம் பெரிய இடங்களில் கல்லூரி பல்கலைக் கழகங்களில் படித்துப் பல பட்டங்கள் பெற்று உயர்ந்த பதவியிலிருக்கும் ஆடவருக்குச் செல்வந்தர் குடும்பத்திலுள்ள பெண் (சாதாரணமாக ஐந்தாவது வகுப்பு வரை படித்தவள்) வாழ்க்கைப்படுவதுண்டு. அங்ஙனமே,

பட்டம்பெற்ற ஒரு பெண் பள்ளியிறுதித் தேர்வுகூடப் பார்க்காத ஆலை முதலாளி மகனுக்கு வாழ்க்கைப்படவும் நேரிடலாம். இத் திருமணங்கள் யாவும் செல்வத்தின் அடிப்படையிலும் அத்தை மகன் மாமன் மகள் உறவு போகக் கூடாதென்ற எண்ணத்திலும் ஏற்படக்கூடியவை. இத்திருமணங்களில் சில வெற்றியாதலும் உண்டு; சில பொருத்தமில்லாத் திருமணங்களாக முடிவதும் உண்டு. முதலில் குறிப்பிட்ட ஆடவர் அலுவல் பார்க்கும் இடங்களிலும் படித்த பெண்களுடன் தாராளமாகப் பழகுவதை அவர்மனைவி பொறுக்காமல் முரண்படுவதுண்டு. அங்ஙனமே, இரண்டாவதாகக் குறிப்பிட்ட பெண் வீட்டிலும் வெளியிலும் சில படித்தவர்களுடன் தாராளமாகப் பழகுவதைக் கண்டு அவளுடைய கணவன் வீணாக அவளது பழக்கங்களின் மீது ஐயப்படுவதுண்டு. இங்ஙனம் இன்றைய வாழ்க்கையில் பல்வேறு காரணங்களின் அடிப்படையில் முரண்பாடுகள் அமைந்த தம்பதிகளைக் காணலாம். இத்தகைய முரண்பாடுகளின்காரணங்களைப்பற்றிஅவர்கட்கு சிறிதளவுஉள்நோக்கு இருப்பினும், அவர்களது வாழ்க்கை செவ்வனே அமைதல் கூடும். இதிலிருந்து வெவ்வேறுபட்ட சமூக பண்பாட்டுச் சூழ்நிலை வேறுபாடுகளைக் கொண்ட இருவரும் திருமணம் புரிந்து கொள்ளக் கூடாது என்று கருதுவதும் தவறு. இங்குக் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டு ஒருவர் மற்றவரின் மனப்பான்மைக்கேற்ற வாறு நடந்துகொள்ளல் வேண்டும் என்று வற்புறுத்தா திருந்தால், அவர்களின் இல்வாழ்க்கை செவ்வையாக அமையும். இங்ஙனம் இறுவேறு வாழ்க்கைநிலை, சமூகநிலை, படிப்புநிலை போன்ற கூறுகளையுடையவர்களும் மணந்து கொண்டு சிறந்த தம்பதிகளாகத் திகழ்வதற்கும் ஏராளமான எடுத்துக் காட்டுகள் தரலாம். வெவ்வேறு சமயத்தைச் சார்ந்தவர்களும் மணந்து கொண்டு சிறப்பாக இல்வாழ்க்கை நடத்துவதையும் நாம் காணுமல் இல்லை.

ஒத்தவாழ்க்கை நிலை, ஒத்தகவர்ச்சிகள், ஒத்த பண்பாடு, ஒத்த சமயம், ஒத்த வாழ்க்கைப் போக்கு முதலியனயாவும் அமைந்தவர்களும் திருமணம் புரிந்துகொண்ட பிறகு தக்க

பொருத்தப்பாடு அமையாது திண்டாடுவதையும் காண்கின்றோம். இதற்குக் காரணம் என்ன? திருமணம் என்பது மேற்குறிப்பிட்டவை அனைத்தும் பொருந்துவதற்காகச் செய்யப்பெறும் ஏற்பாடு அன்று. திருமணம் என்பது, ஏற்கனவே பல இடங்களில் வற்புறுத்தியதுபோல், அன்புக்கும் நட்புக்கும், திருப்தியான முறையில் அமைந்த பாலுறவுக்கும், குடும்பத்தை அமைப்பதற்கும் செய்யப்பெறும் ஓர் ஏற்பாடு என்பதை நினைவில் இருத்துவாயாக. எனவே ஒரு தம்பதிகள், நல்ல நண்பர்களாகவும், நல்ல பாலுறவுப் பங்காளிகளாகவும், நல்ல பெற்றோர்களாகவும் இருப்பின் அவர்கள் மும்மடங்கு ஆகியைப் பெற்றவர்களாவர். ஆயினும், உண்மை வாழ்க்கையில் இவை மூன்றும் சமமாக அமையா. இவற்றுள் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவற்றில் அடிப்படைத் தேவைகளையும் நோக்கங்களையும் பெற முடியாத நிலைமையும் ஏற்படுகின்றது. இதையும் நீ பலரது வாழ்க்கையில் காணலாம்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# 47

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் தெரிவிக்க.

சென்ற கடிதத்தில் திருமணப் பொருத்தப்பாட்டில் பிரச்சினைகளைத் தரும் இருவகை மூலங்களை மட்டும் ஆராய்ந்தேன். அவை யாவும் தம்பதிகளைப்பற்றியுள்ள அகக்கூறுகளால் எழுபவையாதலின், அவற்றைத் தனியாக ஆராய்ந்தேன். இனி, தம்பதிகளுக்குப் புறக்கூறுகளாக அமையும் மூலங்களையும், அவற்றில் எழக்கூடிய ஒரு சில பிரச்சினைகளையும் இக்கடிதத்தில் கூறுவேன்.

பொருளாதாரக் கூறுகள்: திருமணப் பொருத்தங்களை ஆராய்ந்தபொழுது பொருளாதாரப் பொருத்தத்தைக் குறிப்பிட்டேன் அல்லவா? கணவன்தான் பொருள் தேடும் பொறுப்பாளி என்றும், மனைவி குடும்பத்தை நடத்தும் பொறுப்பினையுடையவள் என்றும் குறிப்பிட்டதும் உனக்கு நினைவு இருக்கும். பழங்காலத்தில் பெரும்பாலும் எல்லாச் சமூகங்களிலும் இந்நிலையே இருந்து வந்தது. இன்றைய சமூகத்தில் இந்நிலை மாறிக் கொண்டு வருகின்றது. நாட்டுப் புறங்களிலும் வணிகர் சமூகத்திலும் ஆடவன்தான் சம்பாதிக்க வேண்டும் என்ற நிலைமை இருந்த போதிலும், படித்த நடுத்தர வருவாய் உள்ள சமூகங்களில் இந்நிலை மாறி வருகின்றது. பெண்கள் அதிகமாகப் படித்து வருவதால், அவர்களும் அலுவல்கள் பார்க்கத் தலைப்பட்டு விட்டனர். படிக்காத பாமர ஏழைக் குடும்பங்களில் பெண்களும் உழைத்துச் சம்பாதிக்க வேண்டிய நிலையிலிருப்பதை நாம் காணாமல் இல்லை. இதனால் பெண்ணுலகத்திற்கு ஓரளவு சுதந்திரம் வந்துள்ளது. இதனால் பல நன்மைகள் ஏற்பட்டுள்ளன. பொருளாதாரச் சுதந்திரம் இல்லாதபொழுது கணவனுக்

கும் மனைவிக்கும் இடையே ஏற்படும் சிறு கருத்துவேறுபாடு களால் தொடர்ந்தரவு இல்லாமலிருந்தது. இன்று இவையே மணமுறிவுக்குப் போதுமானவையாகவுள்ளன. எல்லாப் பொருத்தங்களும் சரியாக அமைந்துவிட்டால் எந்தவிதத் தொல்லைகளும் இல்லை. சிலவற்றில் குறையிருப்பின் அவை பொருளாதாரச் சுதந்திரத்தினால் மணமுறிவில் கொண்டு செலுத்திவிடுகின்றன.

சில குடும்பங்களில் கணவன் குடும்பத்தைக் காக்கும் அளவுக்குப் பொருளாதாரநிலை சரியாக இருப்பதில்லை. பொருளாதாரக் குறைவு, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற நிலைமைகள் கணவனுக்கும் மனைவிக்கும் இடையே பிணக்குகளை உண்டாக்கி அது மணமுறிவிலும் கொண்டு செலுத்திவிடுகின்றது. "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்"[24] என்ற வள்ளுவப்பெருமானின் வாக்கை ஓர்க. அது வேறு காரணத்திற்காகக் கூறப்பெற்றிருப்பினும், சில குடும்பங்களில் மனைவியும் கணவனை மதிக்காது போய்விடும் நிலைமைக்கும் இது பொருந்துகின்றது என்றும் கருதலாம். மேலும், பணத்தின் பெருமையை அவ்வைப் பிராட்டியும்,

கல்லானே யானாலுங் கைப்பொருளொன்று உண்டாயின்
எல்லாருஞ் சென்றங்கு எதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும்வேண்டாள்மற்றுஈன்றெடுத்ததாய்வேண்டாள்
செல்லாது அவன் வாயிற் சொல்.[25]

என்றும்,

மானம் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம்உயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்.[26]

---

24. குறள்—752.
25. நல்வழி—34.
26 நல்வழி—26.

என்றும் கூறியிருப்பதிலிருந்து திருமண உறவிற்குப் பொருளாதாரம் எவ்வளவு இன்றியமையாதது என்பதை உணர்வாயாக. பொருளாதாரப் பாதுகாப்பின்மையால் ஏற்படும் கவலைகளும் அச்சங்களும் குடும்பத்தைப் பெரிய அளவில் பாதிக்கும்; இதனால் கணவனுக்கும் மனைவிக்கும் இடையே ஓயாத பூசல், சச்சரவு முதலியவற்றைக் காணலாம். இதனால் செல்வம் அதிகமிருந்தால் கணவன்–மனைவியரிடையே அதிகமான உறவு இருக்கும் என்றும் கருதல்வேண்டா. கணவன் மனைவியரின் ஆளுமைக் கூறுகளைப் பொறுத்தே திருமண உறவு நன்கு ஏற்படும் என்பதை உளங்கொள்க. சமூகப் பொருளாதாரத் தொல்லைகள் இருப்பினும் ''கணவவே கண் கண்ட தெய்வம்'' என்று உறுதியுடன் அனைத்தையும் பொறுமையாகச் சகித்துக்கொண்டு இல்லறம் நடத்தும் பெண் மணிகள் இன்றும் இருக்கின்றனர். தகாத வழியில் செல்லும் கணவன்மார்களைத் திருத்தி நல்வாழ்க்கையில் ஈடுபடுத்தும் நாரியர்கள் இன்றும் உள்ளனர். இப்பொருளாதாரத்தைத் தவருக உணர்ந்ததால்தான் வரதட்சிணைக் கொடுமைகளும் பிறவும் தோன்றின.

**மாமனார், மாமியாரின் தொல்லைகள்:** சில குடும்பங்களில் கணவன் மனைவியர் சுயேச்சையாக வாழ்வதற்கு மாமனார், மாமியார் பெருந்தடைகளாக உள்ளனர். இவர்கள் இளந் தம்பதிகளிடம் திருப்தியான நல்லுறவு ஏற்படுவதற்குத் தடைகளாக இருப்பதுடன் அடிக்கடி முரண்பாடுகள் எழுவதற்கும் காரணமாகவுள்ளனர். இவர்களால் உண்டாகும் சங்கடங்கள் இரண்டு விதமாக எழலாம்: கணவனோ மனைவியோ எடுத்ததற்கெல்லாம் தம் பெற்றோர்களைச் சார்வதனாலும், அல்லது பெற்றோர்கள் வயது வந்த தம் பிள்ளைகட்கு யாதொரு விதமான பொறுப்புகளையும் தராமல் எல்லாச் செயல்களிலும் தாம் தலையிடுவதினாலும் இந்தச் சங்கடங்கள் எழுகின்றன.

தக்க வயதுவந்த பின்னரும் பலர் தம் தாயின் முன்றானையைப் பற்றிக்கொண்டே இருக்கின்றனர். அவர்களிடம்

தாமாகவே செயற்படும் திறன் வளர்வதற்கு வாய்ப்பே இல்லை. அவர்கட்குத் திருமணம் முடிந்த பின்னரும் ஆதரவிற்குத் தங்கள் பெற்றோர்களையே நாடுகின்றனர். கணவன் வீட்டில் யாதேனும் சிறு சங்கடம் ஏற்பட்டாலும் அதைச் சமாளிக்கும் திறனின்றி தாய் வீட்டை நோக்கி ஓடுகின்றனர். பரிவையும், யோசனையையும் துணையையும் அங்குத்தான் பெற நினைக்கின்றனர். எனக்குத் தெரிந்த ஒரு பெண்ணின் வாழ்க்கை இங்ஙனம்தான் அமைந்துள்ளது. அவளுக்குத் திருமணம் ஆகிச் சுமார் 20 ஆண்டுகள் ஆகின்றன; ஆறு குழந்தைகட்குத் தாயாகிவிட்டாள். மருமகனும் மருமகளும் வரும் வாய்ப்பும் அண்மையில்தான் இருக்கிறது. ஆயினும் அவள் இன்னும் எல்லாவற்றிற்கும் தாயையே நாடுகின்றாள்; கணவனைப் பொருட்படுத்துவதே இல்லை; எந்த யோசனையையும் அவனைக் கலந்தே ஆய்வதில்லை. அவனும், 'எப்படியாவது ஒழியட்டும்; குடும்பம் நடந்தால் சரி' என்ற மனப்பான்மையைக் கொண்டிருப்பதால் அக்குடும்பத்தில் யாதொரு தொல்லையும் இல்லை. இதனால் வெளியாரும் இக்குறைகளை அறிவதற்கில்லை. அவர்கள் நல்ல பொருத்தப்பாடமைந்த தம்பதிகளாகவே காட்சி அளிக்கின்றனர்! இங்குக் குறிப்பிட்ட தம்பதிகளில் மனைவி அவர்கள் பெற்றோர்க்கு ஒரே பெண்; உடன் பிறந்தவர்கள் (ஆண்கள்) இருக்கின்றனர். இருந்தாலும் சிறு வயதிலிருந்தே செல்லப் பிள்ளையாக வளர்க்கப் பெற்றாள்; பிள்ளைப்பேறில்லாத சிற்றன்னையும் அன்பு காட்டி வந்தாள். பெற்றோர்கள் சிறு வயதிலிருந்தே ஒன்றையும் அவளாகச் செய்ய வாய்ப்பே தருவதில்லை. இதனால் அவள் நடத்தையிலும் செயலிலும் குழந்தையைப் போலவே இருக்கின்றாள். என் செய்வது? முன் செய்த வினை இங்ஙனம வந்து மூண்டதுவே!

வேறு சிலரிடம் பெற்றோர் யாதொரு விதமான சிறு பொறுப்புகளையும் தராது இருப்பதைக் காணலாம். மணமாகிக் கணவன் வீடு சென்ற பிறகும் சில பெண்களின் தாய்மார் கணவன் வீடு சென்று தம் கருத்துகளை இளந்தம்பதிகளின்மீது வலிந்து திணிக்கின்றனர். கட்டில், நாற்காலி,

மேசை, முகம் பார்க்கும் கண்ணாடி, துணிமணிகள் ஆகியவற்றை வாங்குவதற்கும் மகளைக் கணவனுடன் தனியாக விடுவதில்லை. அனைத்திலும் தலையிட விரும்புகின்றனர். இளம் பிராயத்திலுள்ள அவர்கட்கு ஒன்றுந்தெரியாது என்று கருதுகின்றனர். மருமகன் இதனை விரும்பாவிடினும் இத்தலையிடு நடைபெற்றுதான் வருகின்றது! இதுவே சில சமயம் திருமணமுரண்பாடுகட்கும் காரணமாகின்றது.

திருமணம் ஆனதும் தம்பதிகள் தனிக்குடும்பம் வைத்து வாழ்வதுதான் சிறந்தது. பண்டைக் காலத்தில் தமிழர் வாழ்வில் இம்முறைதான் இருந்து வந்தது. இன்று திருமணம் ஆனதும் தம்பதிகள் சில குடும்பங்களில் மனைவியின் பெற்றோருடனோ (இது மிகக்குறைவு) கணவனின் பெற்றோருடனோ சேர்ந்து வாழ்ந்து வரும் பழக்கம் இருந்து வருகின்றது. சிலருக்கு இம்முறை பொருந்துமாயினும், பலருக்கு இது பொருந்தாது. இம்முறையினால் தம்பதிகளின் ஆளுமை வளர்ச்சி குன்றி வடுகின்றது. பொறுப்புகளை ஏற்று நடத்தும் வாய்ப்புகளே இல்லாது போகின்றது. தனியாக வாழ்வதில் எத்தனையோ நன்மைகள் ஏற்படுகின்றன.

வெற்றிக்குரிய கூறுகள் : திருமணம் வெற்றியாக வேண்டுமாயின் அது மூன்று முக்கிய கூறுகளைப் பொறுத்துள்ளது. என்பதை திருமண முரண்பாடுகளைப் பற்றி ஆராய்ந்தபோது கூறினேன். அவற்றுள் ஒன்று: தம்பதிகளின் ஆளுமைக் கூறுகள், அவர்களது உள்ளக்கிளர்ச்சி முதிர்ச்சி, அவர்களது சமநிலை, உறுதி ஆகியவை அடங்கிய தொகுதியாகும். மற்றொன்று: தம்பதிகள் இருவரும் இணங்கிப்போகும் அளவு, அவர்களது ஒத்த கவர்ச்சிகள், வாழ்வின் போக்குகள் ஆகியவையும்; நட்பிற்கும் அன்பிற்கும், பாலுறவு திருப்திக்கும், குடும்பத்தை நடத்துவதற்கும் அவர்களிடம் அமைந்துள்ள அடிப்படைத் தேவைகளும் அடங்கிய தொகுதியாகும். இன்னொன்று; பொருளாதாரப் பாதுகாப்பு, சமூகப் பொருத்தப்பாடுகள், திருப்தியான குடும்ப உறவுகள் ஆகியவை அடங்கிய தொகுதியாகும்.

இந்த மூன்று தொகுதிகளாடங்கிய கூறுகளும் எண்ணற்ற முறைகளில் எதிர்வினை புரிந்து திருமணத்தின் சிறப்பினைப் பல்வேறு முறைகளில் உயர்வாக்குகின்றன. வாழ்க்கை விரிய விரிய இவற்றை இளம் தம்பதிகள் நன்கு அறிவர்; தெளிவாகப் புரிந்துகொள்வர்.

சில சோதனைகள்: அண்மையில் பல திறமையான ஆராய்ச்சியாளர்கள், திருமண வெற்றிக்கான எக்கூறுகள் தம்பதிகளிடையே அமைந்திருத்தல் வேண்டும் என்பதை அறுதியிட பல சோதனைகளை ஆயத்தம்செய்ய முனைந்தனர். முதலில் அவர்கள் திருமணங்களை அறுதியிடும் [rating] ஒப்பளவுக் கூறுகளைக்[27] கண்டனர்; அதன் பிறகு கணவன் மனைவியர் வளர்ந்த சூழ்நிலை, அவர்களது ஆளுமைபற்றிய ஏராளமான தகவல்களைச் சேகரித்தனர்; இந்த இரண்டு ஆராய்ச்சி முடிவுகளையும் தம்பதிகளின் திருமண வெற்றி அளவுடன் பொருத்திப் பார்த்தனர். இந்த ஆராய்ச்சியில் அவர்கள் தம்பதிகள் வாழ்ந்த சூழ்நிலைகள், அவர்களது வயதுகள், கல்வி, தொழில், திருமணத்திற்கு முன்னர் அவர்கள் அறிமுகமான கால அளவு, அவர்களது உடல்நல நிலை, சமயம், பால், குழவிகள் இவைபற்றி அவர்களது மனப்பான்மைகள் போன்ற கூறுகளையும் அவர்களது ஆளுமைக் கூறுகளையும் அவர்கள் கவனித்து ஆய்ந்தனர். இந்தக் கூறுகளின் அடிப்படையில் அவர்கள், எக்கூறுகள் திருமண வெற்றிக்கு உகந்தவை, எவை ஒவ்வாதவை என்பதைக் காண முயன்றனர்.

இந்த ஆராய்ச்சிகள் யாவும் நம்முடைய கவனத்திற்கு உரியவை. இந்த ஆராய்ச்சிகளைக்கொண்டே அன்றைய நிலையில் திருமணத்தின் வளர்ச்சியினை ஓரளவு முன்னரே அறிந்து கூறலாம் என்றும் சிலர் நம்புகின்றனர். ஆயினும், சில அறிஞர்கள் இச் சோதனைகள் இன்னும் 'சோதனை நிலையிலேயே' இருப்பதாகக் கருதுகின்றனர் இச் சோதனைகளைக் கொண்டு ஒரு தனியாள் உள்ள குழுவினைப்பற்றிய சில முடிவுகளை அறுதியிடலாமேயன்றி அத் தனியாளைப்

27. ஒப்பளவுக் கூறுகள்—Criteria.

பற்றிய முடிவுகளை முற்கூற இயலாது. எனினும், இத்துறையில் மேலும் பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டு திருமண வெற்றியினை முற்கூறும் சோதனைகளைப் பயனளிக்கவல்ல ஒரு சிறந்த சமூக அளவு கருவியாக அமைத்துவிடலாம் என்று பல அறிஞர்கள் கருதுகின்றனர். சமூக அறிவியல்[28] விரைவாக வளர்ந்துவரும் இக்காலத்தில் இத்தகைய சோதனைகள் சிறந்தவையாக—பயனுள்ளவையாக—அமையும் என்றே தோன்றுகின்றது.

அன்புள்ள,
திருவேங்கடத்தான்,

28. சமூக அறிவியல்—Social science.

# 48

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலனே விழைவல்.

நான் உனக்கு எழுதிவரும் கடிதங்களைப் பலரும் படித்திருப்பர் என நினைக்கின்றேன். ஏனெனில், திருமணம் செய்துகொள்வதற்கு முன்னர் இளைஞர்கள் செய்யவேண்டியவை யாவை என்பதுபற்றிப் பலர் கடிதம் எழுதி வினவியுள்ளனர், ஒவ்வொரு இளைஞனும். இளம் பெண்ணும் திருமணத்திற்கு முன்னர் மேற்கொள்ள வேண்டியவற்றை இக்கடிதத்தில் கூறுவேன்.

முதற்படி: இளம் வயதினர் கவனிக்கவேண்டிய முதற்படி முதலில் திருமணத்திற்குத் தம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளவேண்டியதாகும். இன்று ஆடவரும் பெண்டிரும் ஓரளவு பொதுக் கல்வி பெற்று வாழ்க்கையின் தத்தமக்குப் பொருத்தமான தொழில் துறைகளிலும் பயிற்சி பெறுகின்றனர். ஏராளமான பணத்தையும் காலத்தையும் இதற்காகச் செலவிடுகின்றனர். ஆனால், ஒருவராவது வாழ்க்கையில் தமக்கு மிகவும் இன்றியமையாதனவாயுள்ள திருமண உறவு, தாம் பெற்றோராதல் என்பவைபற்றிச் சிறிதளவேனும் அக்கறை கொள்வதில்லை; பொறுப்பும் எடுத்துக் கொள்வதில்லை. அவற்றைப்பற்றிக் கவலை கொள்வதும் இல்லை. எத்தனையோ துறைகளில் அறிவியல் பொது மக்களின் அன்றாட வாழ்வில் புகுந்துள்ளது. அதன் நன்மைகளை அன்றாட வாழ்வில் அவர்கள் துய்த்தும் வருகின்றனர். ஆயினும், வாழ்வின் ஒரு கூறாகவேவுள்ள திருமணம்பற்றி ஒருவரும் அக்கறை கொள்ளாதது வருந்தத் தக்கதாகவே உள்ளது.

யான் சில ஆண்டுகளாக நெருங்கிப் பழகும் அன்பர் ஒருவருக்குத் திடீர் திடீரென்று உத்தியோகத்தில் ஏற்றம்

உண்டாகிவிட்டது. கார் வாங்கவேண்டும் என்று என்னி டம் தெரிவித்தார். நான் அவரிடம், "அன்பரே, கார்வாங்க வேண்டியது அவசியம். நீரோ இளைஞர்; மாதந்தோறும் வாங்கும் அதிகப் பணத்தை என்ன தான் செய்வது? நீர் கார் வாங்குவதற்கு முன்னர் அதனைக் கடவும் முறையை அறிந்து கொள்வீர்; வண்டியோட்டிக்குத் தரவேண்டிய சம்பளம் மீதமாகும். தவிர, காரின் பொறிநுட்பத்தையும்[29] ஓரளவு நன்கு அறிந்துகொண்டால், வண்டியில் யாதாவது பழுது ஏற்பட்டால் அஃது எதனால், எங்கு விளைந்தது என்பதை உறுதியாக நீங்களே ஓரளவு அறுதியிடலாம். குறைந்த செல வில் பழுதினைச் சரிப்படுத்த இந்த அறிவு துணை செய்யும்" என்று கூறினேன். அதற்கு அவர், "மிஸ்டர் திருவேங்கடத் தான், நான் சுமார் இருபது யாண்டுகளாக மிதிவண்டி[30] வைத்திருக்கின்றேன். ஆனால். அந்த வண்டியின் பாகங்களின் பெயர்களைக்கூட அறியேன். வண்டியில் ஏதேனும் இடையூறு ஏற்பட்டால், வண்டியை உடனே பழுதுபார்ப் போரிடம் கொடுத்துச் சரிப்படுத்திக் கொள்வது வழக்கம். இந்நிலையில் நான் காரின் பொறிநுட்பத்தைக் கற்றுக்கொள் வது எங்கே?" என்றார். உடனே நான், "இதில் என்ன அதி சயம்? நீங்கள் மட்டும் என்ன? வழி வழி வரும் நமது மூதாதையர் யாவரும் நமது உடலின் பொறிநுட்பத்தைச் சிறிதேனும் அறிந்துகொள்ளாமலேயே கலவி புரிந்து வரு கின்றனர்; குழவிகளைப் பெற்றும் வருகின்றனர். நிமிடந் தோறும் இனப்பெருக்கம் நடைபெற்றுக்கொண்டுதான் வரு கின்றது!" என்று பதிலிறுத்தேன். இந்த நகைச்சுவை அரு கிலிருந்த நண்பர்கட்கும் ஒரு விருந்தாகவே அமைந்தது. இன்று விடுப்பூக்கம்[31] பலருக்குப் பல துறைகளில் உள்ளது என்பது உண்மையே. ஆயினும், பெரும்பாலோருக்கு உடலின் பொறிநுட்பத்தை அறிந்துகொள்ளவேண்டும் என்ற விடுப்பே இல்லை. நிற்க.

---

29. பொறிநுட்பம்—Mechanism
30. மிதிவண்டி—Cycle.
31. விடுப்பூக்கம்—Instinct of curiosity

திருமணத்திற்குமுன் தம்மை ஆயத்தப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றேன். ஒரு திருமணத்தின் தன்மை உடற்கூறு, மனப்பான்மை ஆகிய இரண்டு கூறுகளைப் பொறுத்ததாகும். ஆகவே வையத்தில் உடல் நலத்துடன் வாழ்வாங்கு வாழ்வதற்கு ஒவ்வொருவரும் மானிட உடலைப்பற்றியும் மானிட உள்ளக்கிளர்ச்சிகளைப் பற்றியும்[32] நன்கு அறிந்திருக்க வேண்டியது மிகவும் இன்றியமையாதது. ஒருவர் எவ்வளவுக்கெவ்வளவு பாலின் அமைப்பு. பாலின் செயல்கள் இனப்பெருக்க உறுப்புகளின் அமைப்பு, அவற்றின் செயல்கள் ஆகியவைபற்றிய உண்மைகளை அறிந்துகொள்ளுகின்றாரோ, அவ்வளவுக்கவ்வளவு அவர் திருமணத்தில் நல்ல உடற்பொருத்தப்பாடுகளை அமைத்துக்கொள்ள முடியும். அங்ஙனமே, அவர் திருமணத்தைப் பற்றியும் குடும்ப வாழ்க்கையைப்பற்றியும் தம்முடைய மனப்பான்மைகளையும் தமக்கு வாழ்க்கைத்துணையாக வருவோரின் மனப்பான்மைகளையும் அறிந்துகொள்வதுடன் பொதுவாக மானிட நடத்தையை ஊக்குவிக்கும் கூறுகளையும், தமது சிந்தனை உணர்ச்சி ஆகியவற்றில் பங்குபெறும் கூறுகளையும்பற்றிய தெளிவான அறிவும் பெற்றால், அவர் தமது குடும்பத்தில் மிக நல்ல முறையில் உள்ளக்கிளர்ச்சிபற்றிய பொருத்தப்பாடு அடைவதற்குத் துணையாக இருக்கும். சுருங்கக்கூறின், ஒவ்வொருவருக்கும் உடலியல், உளவியல்பற்றிய அடிப்படை அறிவு மிகவும் இன்றியமையாதது.

கல்வியைப்போலவே திருமண ஆயத்தமும் தொடர்ந்து நிகழவேண்டிய செயலாகும். அஃது அன்றாட வாழ்வின் ஒரு பகுதியுமாகும். திருமணத்தைப்பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் நம்முடைய மனப்பான்மைகள் நம்முடைய வாழ்க்கையின் தொடக்கத்திலேயே அமைவதால், உண்மையில் திருமணத்தைப்பற்றியகல்வி பிள்ளைப்பருவத்தில் பெற்றோர் இல்லத்திலேயே தொடங்கி முதிர்ச்சி யடையும்வரை தொடர்ந்து நிகழ்கின்றது. வாழ்க்கையில்பௌதிக உண்மை

32. உள்ளக்கிளர்ச்சி—Emotion

களை அறிந்துகொள்வதற்கு நீண்ட நாட்களுக்கு முன்னதாகவே குழந்தைகளிடம் மனப்பான்மைகளும் மதிப்பீடுகளும் வளர்ச்சி பெறுகின்றன. ஆகவே, பிற்காலத்தில் பெறும் தகவல்களைவிடப் பிள்ளைப்பிராயத்தில் பெறும் நல்ல மனப்பான்மைகளே மிகவும் முக்கியமானவை என்பதை அறிவாயாக. திருமணத்தைப்பற்றியும் பெற்றோராதல்பற்றியும் அமையவேண்டிய கல்வி நம்முடைய பொதுக்கல்வியின் ஒரு பகுதியாக அமைதல்கூட நல்லது என்பது என் கருத்தாகும். இத்துறையில் பாலர்களைப் பள்ளி வாழ்க்கையிலேயே நெறிப்படுத்துதல் பள்ளிகளின் முக்கிய பங்காதல் வேண்டும். ஆகவே, பள்ளி வாழ்க்கையில் மாணாக்கர்களின் கவர்ச்சிகளுக்கேற்ப பால்பற்றியும் இனப்பெருக்கம்பற்றியும் திருமணம் குடும்ப வாழ்க்கை ஆகியவற்றின் சமூக நலங்கள்பற்றியுமான தகவல்களைக் கல்வியுடன் கலந்து பயிற்றுதல் மிகவும் விரும்பத்தக்கது பால்-கல்வியைப் புகட்டும் முறையைப்பற்றியும் அதன் இன்றியமையாமைபற்றியும் கல்வி உளவியல் நூல்களில் கண்டுகொள்க.[33] கல்லூரிகளில் திருமணம் குடும்ப வாழ்க்கைபற்றிய பாடத் திட்டங்களை கல்வி ஏற்பாட்டில்[34] முக்கிய பங்கினைப் பெறுதல் வேண்டும் அமெரிக்காவில் நூற்றுக்கணக்கான கல்லூரிகளில் மாணாக்கர்கட்கு இத்தகைய வாய்ப்பு அளிக்கப்பெறுகின்றது. மற்றும் நீ இதுகாறும் எழுதப்பெற்ற கடிதங்களில் திருமணத்தைப் பற்றி பல செய்திகளை அறிந்துகொண்டது போல் திருமணம் புரிந்துகொள்ளும் முன்பு இளைஞர்கள் அனைவரும் அநுபவம் மிக்க மூத்தோர்களை நாடித் தாம்பத்திய வாழ்க்கையின் விவரங்கள் அனைத்தையும் அறிந்துகொளுதல்வேண்டும். இதனால் நடைபெறப்போகும் திருமணமும் குடும்ப வாழ்க்கையும் செவ்வனே அமையும் என்பதற்கு ஐயமே இல்லை.

---

33. சுப்புரெட்டியார், ந: கல்வி உளவியல் பக்[324-27] [எஸ். வாசன் கம்பெனி, சென்னை-1]

34, கல்வி ஏற்பாடு—Curiculum

இரண்டாவது படி: இளம் வயதினர் தம்முடைய வாழ்க்கைத் துணையை யோசித்து நன்முறையில் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்பது இரண்டாவது படியாகும். பெரும்பாலான நாடுகளில் துணைவியை அல்லது துணைவனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு குடும்பங்களையே சார்ந்துள்ளது. குடும்பத்திலுள்ள பெற்றோர்களும் ஏனைய மூத்தோர்களும் மணப் பெண் அல்லது மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்கின்றனர். தம்பதிகட்கு இதில் சிறிதும் பொறுப்புமில்லை. அண்மைக் காலத்தில் இப்பழக்கம் மாறிக்கொண்டு வருகின்றது கல்வியறிவில்லாதவர்களும் தம் பெண் அல்லது மாப்பிள்ளையைத் தாம் தெரிந்தெடுத்த மாப்பிள்ளை அல்லது பெண்ணின் மனத்திற்குப் பிடித்தமா என்று வினவும் பழக்கம் தலைக்காட்டி வருகின்றது. படித்தவர்களிடம் இப் பழக்கம் தெளிவாகவே மாறி வருகின்றது. பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருவருக்கொருவர் பழகும் வாய்ப்பு அளிக்கப்பெறாது போயினும் ஒருவரையொருவர் பார்க்கும் வாய்ப்பு பெரும்பாலும் தரப்பெறுகின்றது. திருமண வயது வந்த பிறகும் பெரும்பாலோருக்கு சில செய்திகளை அறிந்து கொள்வதற்கு அநுபவம் போதாது. பெற்றோர் அல்லது மூத்தோரின் துணை அவற்றில் இன்றியமையாது வேண்டப் பெறுவதாகும்.

இன்று மேல்நாடுகளில் இளைஞர்களே தம் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளத் துணைபுரியும் வகையில் அறிவியலடிப்படையில் சோதனைகளையும் வினாத்தாள் முறைகளையும் ஆயத்தம் செய்வதில் முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன. இவற்றால் தம்பதிகளிடையே இருக்க வேண்டிய பொருத்தக் கூறினையும் திருமண வெற்றியைப் பற்றிய கூறுகளையும் அறுதியிட்டுவிடலாம் என்று ஆய்வாளர்கள் நம்புகின்றனர். இத்தகைய சோதனைகள் சில விஷயங்களில்உள்ள தடைகளையும் இடையூறுகளையும் எங்ஙனம் சமாளிக்கலாம் என்பதைத் தம்பதிகள் ஓரளவு அறிந்து கொள்வதற்குத் துணை செய்யலாம். ஆயினும், துணைவரைத் தேர்ந்தெடுக்கத் துணைபுரிவதற்கேற்றவாறு இதுகாறுத்

உடல், உளசோதனைகள் கண்டறியப் பெறவில்லை. ஆயினும், அநுபவத்தால் இதனை அறுதியிடலாம் என்று சில மேனாட்டறிஞர்கள் கருதுகின்றனர். அவர்களின் கருத்துப்படி திருமணம் புரிந்து கொள்வதற்கு முன்னர் அவர்கள் நன்கு பழகும் வாய்ப்புகள் தருதல்வேண்டும்; பல்வேறு சந்தர்ப்பங்களில் தனியாகவும் குழுவிலும் அவர்கள் எவ்வாறு செயற்படுகின்றனர் என்று காணவும், ஓய்விலும் வேலையிலும், இன்பத்திலும் துன்பத்திலும், சாதாரண நிலைரிலும், நெருக்கடியான நிலையிலும் அவர்கள் எவ்வாறு செயற்படுகின்றனர் என்று காணவும், ஒருவருடைய மனப்பான்மைகள் உளப்போக்குகள், மதிப்பீடுகள் முதலியவற்றை மற்றவர் அறியவும் வாய்ப்புகள் தருதல்வேண்டும். இத்தகைய சூழ்நிலைகளில் இருவருடைய இயல்புகளும் பிறவும் பெரும்பாலும் ஒத்திருந்தால் அவர்கள் சிறந்த தம்பதிகளாதல் கூடும் என்றும் அவர்கள் நம்புகின்றனர். நமது நாட்டுப் பழக்கவழக்கங்களையொட்டி இம்முறைகள் எந்த அளவு சாத்தியப்படும் என்பதை அநுபவத்தால்தான் அறுதியிடுதல் வேண்டும்.

திருமணம் என்பது நீண்டகாலத்துப் பயிராதலின் அதனை அவசரமாக நிச்சயித்தல் பெருந்தவறாக முடியும், இன்றைய நாகரிக உலகில் "கண்டதும் காதல்" என்ற முறையில் நிச்சயிக்கப்பெறும் திருமணங்கள் பெரும்பாலும் வெற்றியளிக்காதிருப்பதைக் காணலாம்: திருமணம் வெற்றி பெறுவதற்கு இன்றியமையாது வேண்டப்பெறுவது காதலே. கணவனுக்கும் மனைவிக்கும் இடையே ஆழ்ந்த அன்பு இல்லையாயின் திருப்தியான திருமண உறவு ஏற்படாது என்பது உண்மையே: ஆனால், காதல் என்பது ஓர் உள்ளக் கிளர்ச்சியன்று; அது பல்வேறு உணர்வுகளையும் ஊக்கிகளையும் கொண்ட ஒரு சிக்கலான உள்ளக்கிளர்ச்சி என்பதைத் தம்பதிகள் நன்கு உணர்தல் வேண்டும். முகவெட்டு, மேனியழகு, உறுப்புகளின் திரட்சி இவற்றை மட்டிலும் அடிப்படையாகக்கொண்டு எழுந்த காதல் நாளடைவில்

குறைந்துவிடும் என்று சொல்லத் தேவை இல்லை. முதிர்ந்த அன்பில் ஒருவர் மற்றவரது நலனைநாடுவதில் உண்மையான பண்பு அமைந்திருக்கும். அஃது ஆன்மநேய உறவாகும்; அது முன்னொரு கடிதத்தில்[35] தோழியின் ஒம்படைக்கிளவி யாகக் குறிப்பிட்ட நற்றிணைப் பாடலில் கண்ட உணர்ச்சி யைப் போன்ற பண்பாகும்.

இக்கால இளைஞர்களும் இளம் பெண்களும் காதலைத் தவறாக உணர்ந்துவருகின்றனர். அவர்கள் உடலின்பம்தான் காதல் என்று திரிபுணர்வு பெறுகின்றனர். அன்றாடம் செய்தித்தாள்களிலும் பருவ இதழ்களிலும் வெளியாகும் கதைகளைப் படிப்பதனாலும், மக்களிடையே செல்வாக்குப் பெற்றுள்ள காதல் பாட்டினை அடிக்கடிக் கேட்பதனாலும், நாடக நாட்டியம் பேசும் படங்கள் ஆகிய கேளிக்கைகளை அடிக்கடி காண்பதாலும் இத்தவறான உணர்வு அவர்களி டம் ஆழ்ந்து பதிகின்றது. கானலை நீர் என்று நம்பும்போக்கு அவர்களிடம் நிலைபெறத் தொடங்குகின்றது. சிலர் நிழற் படத்தில் காணும் நடையுடை பாவனைகளையுடைய பெண் ணைப் போன்ற ஒருத்தி தனக்கு மனைவியாக வாய்க்க வேண் டும் என்றும் பித்தேறி மலைவுறுகின்றதையும் நாம் காணாமல் இல்லை. ஆனால், பெண்மக்களிடம் இத்தகைய மயக்க உணர்வு அதிகமாக இல்லை.

ஆகவே, நம் நாட்டுப் பண்பாட்டைப் பொறுத்தமட்டி லும் திருமண உறவுக்குத் தம்பதிகளிடம் காணப்பெறும் 'காதல்' மட்டிலும் போதாது. அவர்களிடம் பல்வேறு ஒத்த கவர்ச்சிகள், ஒத்த அநுபவங்கள், ஒத்த மனப்பான்மை கள், ஒத்த மதிப்பீடுகள், ஒத்த கருத்துகள், ஒத்த குறிக் கோள்கள் முதலியவை அமைந்திருத்தல் வேண்டும். ஒரு வர் மற்றவரது சிந்தனைக்கும் உணர்ச்சிக்கும் மதிப்பு தருதல் வேண்டும். பொது வாழ்வில் இருவரும் பல்லாற்றானும்

35. இந்நூல்—பக்கம், 354

இணைந்து போதல் வேண்டும். இருவரும் "வாழ்க்கை" என்ற நெடுநாள் பயணத்தின் அடிப்படைக் கருத்தையும், பண்டையோர் கண்ட இந்த நாகரிக ஏற்பாட்டின் உள்ளுறைப் பொருளையும் நன்கு உணர்ந்தால்தான் அவர்களிடம் 'இன்ப வாழ்வு' இயல்பாக அமையும்.

அன்புள்ள,

**திருவேங்கடத்தான்.**

# 49

அன்பார்ந்த செந்தில்வேலனுக்கு,

நலன். நலன் வேண்டுகிறேன்.

மணமக்கள் மகிழ்ச்சியான வாழ்வு பெறுவதற்குத் துணையாக இருக்கக்கூடிய குறிப்புகளைத் தருமாறு எழுதியிருந்தாய். வாழ்க்கை என்பது வரையறை இல்லாத ஒரு பெருங்கடல். அதில் பிரயாணம் செய்வோருக்குக் குறிப்புகள் தருவதென்பது எளிய செயலன்று. என்ன குறிப்புகளைத் தந்தாலும் அவை யாவும் எல்லோருக்கும் பொருந்துவதும் கடினம். ஒவ்வொருவருடைய வாழ்க்கையும் ஒவ்வொரு விதமாக இருப்பதால் இக்குறிப்புகள் ஓரளவுதான் பொருத்தமாக இருக்கும். பலருக்கும் ஓரளவு பயன்தரத்தக்க வகையில் ஒரு சில குறிப்புகளை இக்கடிதத்தில் தருகின்றேன்; உனக்கேற்றவற்றை மட்டிலும் எடுத்துக்கொள்க.

முதலாவது: ஒவ்வொருவரும் 'தம்மை நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.' அப்படியானல் என்ன? உடல் செயற்படும் முறைகள், மனம் செயற்படும் முறைகள், மானிட இயல்பு ஆகியவற்றை நன்கு அறிந்துகொள்ளல் வேண்டும்; நல்ல உடற்பொருத்தம் அமையவேண்டுமாயின் பால்செயல்களையும் இனப்பெருக்கச் செயல்களையும் பற்றிய அறிவுநன்கு ஏற்படவேண்டும்; உள்ளக்கிளர்ச்சிப் பொருத்தம் வேண்டுமாயின் சிந்தனை, உணர்ச்சி ஆகியவை பற்றியஅறிவு மிகவும் இன்றியமையாதது. நம்மை எவ்வளவுக்கெவ்வளவு நன்கு அறிந்து கொள்கிறேமோ, அப்படித்தான் நம்முடைய துணையைப்பற்றியும் நன்கு அறிந்துகொள்ள முடியும். இத்தகைய அறிவு புரிந்துகொள்ளும் மனப்பான்மையையும், தெளிவினையும், சகிப்புத் தன்மையையும் பிறரைப்பற்றிய

ஆலோசனையையும் நம்மிடம் வளர்க்கும். தம் நிலையில் வைத்துப் பிறரைப் புரிந்துகொண்டால் அனைத்தும் சீர்படும்; செவ்வையாக அமையும்.

இரண்டாவது: துணைவியைப் போற்றிப் பாராட்டுதல் வேண்டும்; அன்புடன் நடத்த வேண்டும். அடிமைபோல் நடத்தலாகாது; ஆக்கிரமிப்பும் கூடாது. திருமணம் என்பது ஒருவரையொருவர் சார்ந்து வாழ்தல் என்ற உடன்படிக்கையாகும்; உறுதிமொழியுமாகும். 'உன்னைப் பிரியேன்; பிரியின் தரியேன்' என்று அகப் பொருள் நூல்களில் காணப்பெறும் தலைவனின் உறுதிமொழியை ஈண்டு நினைவு கூர்க. வாழ்விலும் தாழ்விலும், இன்பத்திலும் துன்பத்திலும், நலத்திலும் நோயினும் போற்றிப் பாதுகாப்பதுதானே திருமண உறுதிமொழி? இந்த மனப்பான்மையிருந்தால்தானே தம்பதிகளின் அன்பும் செழித்து வளர்ந்தோங்கும். கணவனின் உண்மையன்பும் மகிழ்ச்சியும் மனைவியிடம் அன்பினை வளர்த்து இன்ப உணர்ச்சி பொங்கச் செய்யும். சிலப்பதிகாரக் கோவலன்,

> மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே
> அரும்பெற்ற பாவாய் ஆருயிர் மருந்தே
> பெருங்குடி வணிகன் பெருமட மகளே
> மலையிடைப் பிறவா மணியே என்கோ
> அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
> யாழிடைப் பிறவா இசையே என்கோ
> தாழிருங் கூந்தல் தையால் நின்னை'[36]

என்று உலவாக் கட்டுரை பல பாராட்டுவதை இளங்கோ அடிகளும், சீவகன் தன்மனைவியரிடம் நலம் பாராட்டுவதைத் திருத்தக்க தேவரும் காட்டுவதைப்போன்ற முறைகளில் சமயம் வரும்பொழுதெல்லாம் துணைவியரைப் புகழ்ந்து கூறுதல் பெருநலம் பயக்கும்.

---

36. சிலப்.—மனையறம்—வரி (73–80)

தம்பதிகள் அன்புக் கயிற்றால் பிணைக்கப்பெற்றுள்ளனர் என்பதை நன்கு அறிவோம். இக்கயிற்றில் பல இழைகள் (புரிகள்) உள்ளன. இவற்றுள் அன்பின் இழைகள் அதிகம். அன்பு இழைகளைத் தவிர வேறு இழைகளும் கயிற்றின் உறுதிக்கு மிகவும் இன்றியமையாதவை. ஒத்த கவர்ச்சிகள், ஒத்த அநுபவங்கள், ஒத்த பற்றுறுதிகள்[37] ஒத்த வாழ்க்கை முறைகள் முதலியவையே இந்த இழைகளாகும். இத்தகை இழைகள் அன்புக் கயிற்றில் அதிகம் பிணைந்தால் திருமணம் உறுதியாக நிலைபெறுடையதாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இங்ஙனம் உறுதியான, நீடித்து நிற்கக்கூடிய, என்றும் அறுத தன்மையுள்ள கயிற்றினை ஆக்குவது கணவனின் கடமையாகும்; ஏன்? தம்பதிகளின் கடமை என்றே சொல்லலாம்.

மூன்றாவது: திருமணம் ஆனவுடன் கணவனும் மனைவியும் கூடியவரை பெற்றோர்களைப் பிரிந்து தனிக் குடும்பம் அமைத்துக்கொண்டு வாழ முயலவேண்டும். பெற்றோர்களுடன் சேர்ந்து வாழ்வதனால் அன்றாட வாழ்வில் பல்வேறு சிறுசிறு பிரச்சினைகள் எழுந்து அவை யாவும் ஒன்று திரண்டு பெரிய சிக்கலாக அமைவதற்கு ஏதுவுண்டு. மாமியார் மருமகள் பூசல், நாத்தியின் பொறாமை, சிறு சிறு செயல்களிலெல்லாம் பெற்றோர்களின் தலையீடு போன்ற பிரச்சினைகள் எழாமலே தடுத்துத் திருமணத்தை வெற்றியுடையதாக்கலாம். பெற்றோர்களை மதிப்பதும் அவரது யோசனைகட்கு மதிப்புத் தருவதும் பிள்ளைகளின் கடமையாகும். வயது வந்த பிறகும் சில பொறுப்புகளைத் தம்பதிகள் மேற்கொள்ளாவிட்டால் வாழ்க்கையின் தத்துவமே அவர்கட்குப் புதிராகப் போய்விடும். அன்றாட வாழ்வில் எழும் பல பிரச்சினைகளைத் தீர்க்கும் அநுபவமே அவர்கட்கு ஏற்படாது. எனவே, தம்பதிகள் பெற்றோர்கட்குத் தாம் ஆற்றவேண்டிய கடமைகளையும் வயது வந்த பிறகு தாம் மேற்கொள்ள

---

37. பற்றுறுதி—Loyalty

வேண்டிய உரிமைகளையும் இன்னவென தெளிவாகப் புரிந்து கொண்டு இரண்டையும்நிறைவேற்றுதல் வேண்டும். வீணுக இரண்டையும் குழப்பிக்கொண்டு வகையறியாது விழிப்பது அறிவுடைமையன்று என்பதை நன்கு உணர்வாயாக.

நான்காவது : உடலுறவு மூலம் அன்பு செலுத்தும் கலையைக் கணவன் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். நன் முறையில் பால் பொருத்தம் அமைந்தால் திருமண உறவும் பலமாக அமையும். காதல் விளையாட்டுகளையும், பாலுறவு இருவருக்கும் ஒரே காலத்தில் திருப்தி யளிக்கக்கூடியவாறு கலவி புரியும் முறைகளையும் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். இருவரும் இணைந்து பிணைந்து வாழுங்கால் பற்றி னையும் சிற்றின்ப உணர்வினையும் நன்குவளர்த்துக் கொள்ள வேண்டும். பாலுறவுகள் மிகத் திருப்தியாக நடைபெறு வதற்கேற்றவாறு திருமண வெற்றியும் அதிகமாகும் என் பதை அறிவாயாக. இறையனுர் களவியல் ஆசிரியர் "காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்"[38] என்று கூறியிருத்தலையும் அதற்கு நக்கீரர் கூறும் உரை நயத்தையும் அறிந்தால் இதன் இன்றியமையாமை உனக்குத் தெளிவாகும். வள்ளுவரின் இன்பத்துப் பாலில் கூறியுள்ள பல நிகழ்ச்சிகளும் இளம் தம்பதிகட்குத் துணையாக இருக்கும். தம்பதிகளிடம் எப் பொழுதும் இன்பச் சூழ்நிலை நிலவுவது மிகவும் இன்றியமை யாதது என்பதை மிகவும் வற்புறுத்துவேன்.

ஐந்தாவது : தாய் தந்தையர்--பெற்றோர்—என்ற நிலைக்கு மணமக்கள் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும். குழந்தைப் பேறுபற்றியும் குழந்தை வளர்ப்பு பற்றியும் அடிப்படைக் கருத்துகளை விளக்கும் நூல்களைப் படித்து அச்செய்திகளை அவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளவேண்டும். பெற்றோர்கள் குழந்தைகளை இளமை யில் வளர்க்கும் முறைகளைப் பொறுத்தே அவர்களின் உடல், உள்ள-நலன்கள் அமைகின்றன என்பதை மணமக்கள்

---

38. இறையனுர் களவியல்-நூற் 2

நன்றாக மனத்தில் இருத்துதல் வேண்டும். நல்ல உணவு, நல்ல உடை, போதுமான பாதுகாப்பு, இன்றியமையாத அளவு கல்வி முதலியவற்றைப் பருவத்தில் அளித்தால்தான் அவர்கள் எதிர்காலத்தில் சிறந்த இளைஞர்களாக வளர்ந்து உயர்ந்த குடிமக்களாகத் திகழ்வர் என்பதை நீ நன்குஉணர வேண்டும்.

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.[39]

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.[40]

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.[41]

என்றகுறள் மணிகளின் அறிவொளியை நோக்குவாய நிலத்தை நன்கு உழுது நல்ல விதைகளை ஊன்றினால் நல் விளைவினைப் அடையுமாப்போலே பெற்றோர் தம் குழவிகட்கு வாழ்க்கையில் நல்ல தொடக்கத்தை ஏற்படுத்தித் தருதல் வேண்டும்; வாய்ப்புகளை அமைத்து வழிகாட்ட வேண்டும். நல்ல குடும்ப வாழ்க்கை ஒரு குழத்தையின் இருப்பு முதல்[42] ஆகும். இன்பம் ததும்பியோடும் குடும்பங்களிலிருந்து வரும் குழந்தைகளும், அன்பு இணக்கம் ஆதரவு முதலிய பண்புகள் நிலவும் குடும்பங்களிலிருந்து வரும் குழவிகளும் எதிர் காலத்தில் தாம் தம்முடைய திருமணங்களைச் சிறந்த முறையில் அமைத்துக் கொள்வார்கள் என்பது ஒரு தலை. ஆகவே, நல்ல தாய்தந்தையர் ஆவதற்கு நல்ல திருமணம் அடிப்படையாக அமைகின்றது என்பதை ஒவ்வொரு மணமக்களும் நன்கு உளங்கொள்ளல் வேண்டும்.

---

39. குறள்—67. 40. குறள்—69
41. „ 68. 42. இருப்பு முதல்—Asset.

ஆறுவது: 'அறிவறிந்த மக்கட் பேறு'[43] என்று வள்ளுவர் வாக்கை எண்ணி குடும்பக் கட்டுப்பாட்டை அறிவுடைமையுடன் அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதை மணமக்கள் நன்கு உணர வேண்டும். முதற் குழவிக்குத் திட்டமிடுவதற்கு முன்னர்த் தம்பதிகளிடம் நல்ல உள்ளக் கிளர்ச்சிப் பொருத்தம் ஏற்பட்டுவிடல் வேண்டும். கீரியும் பாம்புமாகஇருக்கும் நிலையில் குழவியைப்பெற்று வளர்த்தல் சமுதாயத்திற்கே பெருந் தீங்கு விளைவிப்பதாகும். மணமக்கள் நம்பிக்கையான கருத்தடை முறைகளை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்; அவற்றைக் கையாளும் முறைகளையும் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். பெற்றோர்கள் விரும்புங்கால் குழந்தைப் பேறு ஏற்படுதல்தலையாயது; தற்செயலாகக் குழந்தைப் பேறு ஏற்படுவது சிறந்ததன்று. உடல் நலத்துடனும் மன வளத்துடனும் வாழும் பெற்றோர்கள் அறிவியல் முறையில் திட்டமிட்டுக் குழவிகளைப் பெறுதல் மிகவுப் சிறந்தது. மிக இளமையில் குழந்தைப்பேறு ஏற்படுவதும், முதுமையில் அப்பேறு ஏற்படுதலும் விரும்பத்தக்கதன்ற. தக்கப் பொறுப்புகள் வந்தவுடன் குழந்தைகளைப் பெறுதல் அறிவுடைமையாகும். உடல் நிலை உள்ள நிலைபற்றிய காரணங்களின் அடிப்படையில் இளமையில் குடும்பம் வளர்தல் விரும்பத்தக்கது. ஒரு குழவி பிறப்பதற்கும் மற்றொரு குழவி பிறப்பதற்கும் இடையிலுள்ள கால அளவு நான்கு யாண்டுகள் இருப்பது சிறந்தது; தாயின் உடல்நிலைக்கு மிகவும் நல்லது. நம்முடைய நாட்டைப் பொறுத்தவரை மூன்று குழவிகட்குமேல் தாய்தந்தையராதல் விரும்பத்தக்கதன்று. குழவிகளை 'அறிவறிந்த மக்களாக'ச் செய்தலும் அவர்களைச் சிறந்த முறையில் வாழ்க்கையில் ஈடுபடச் செய்தலும் பெற்றோரின் முதற் கடமை என்பதை மணமக்கள் நன்கு உணர்தல் வேண்டும்.

ஏழாவது: திருமண வாழ்வில் மணமக்களிடையே சகிப்புத்தன்மை வளர வேண்டும். திருமணத்தை ஓர் இன்னிசை நிகழ்ச்சிக்கு ஒப்பிடலாம். ஒருவரே ஒருபண்ணில் பாடி தாள

43. குறள்—61.

மும் போட்டுக் கொள்ளல் எளிது; அவர் பண்ணுக்கேற்ற வாறு தாளத்தை எளிதில் அமைத்துக் கொள்ளலாம். பாடுவது ஒருவரும் தாளம் போடுவது ஒருவருமாக அமைந்தால் இந்நிலையை எளிதில் அமைத்துக்கொள்ள இயலாது. பண்ணும் தாளமும் ஒத்துப் போகுமாறு செய்தல் இருவர் பொறுப்பிலுமுள்ளது. தொடக்கத்தில் இது பொருந்துவது சற்றுக் கடினமாக இருப்பினும், பயிற்சியாலும் முயற்சியாலும் நாளடைவில் இந்நிலை சரியாக அமைந்துவிடும். திருமணத்திலும் மணமக்களிடையே திருப்தியான முறையில் உடல், உள்ளக்கிளர்ச்சிப் பொருத்தப்பாடுகள் அமைவதற்குச் சிறிது காலம் வேண்டும். ஒருவரது நடத்தைக் கோலங்களும் வாழ்க்கை முறைகளும் மற்றவரது நடத்தைக் கோலங்களுடனும் வாழ்க்கை முறைகளுடனும் பொருந்துவதற்குச் சிறிது காலம் கட்டாயம் வேண்டும். சகிப்புத் தன்மையும் பொறுமையும் இருந்தால் திருமண வாழ்க்கை வெற்றியாக முடியும். மணமக்களின் குடும்பத்தாரிடம் இணக்கம் ஏற்படுவதற்கும் சிறிது காலம் வேண்டும்; அவர்களுடன் மணமக்கள் ஒத்துப் போவதற்கும் கால இடையீடு அவசியம் வேண்டும். மருமகள் மாமனார் மாமியாருடன் ஒத்துப் போதற்கும், அங்ஙனமே மருமகன் மாமனார் மாமியாருடன் ஒத்துப் போதற்கும் சிறிது காலம் வேண்டும். ஒருவர் மற்றவரது நோக்கங்களையும், வாழ்க்கை முறைகளையும், பண்பாட்டினையும் புரிந்துகொண்டு திருப்தியான உறவு அமைவதற்கு இரு சாரார்பாலும் பொறுமையும் சகிப்புத்தன்மையும்வேண்டும்; 'கலந்து' உறவாடுவதற்குக் கால இடையீடும் வேண்டும்.

எட்டாவது: மணமக்கள் திருமணத்தைப் பேணி வளர்த்தல் வேண்டும். சிறுசெடியை மரமாதல் வரையிலும் அதற்குப் பின்னரும் தோட்டக்காரன் கண்ணும் கருத்துடனும் பேணுவதைப் போலவே, புதிய திருமண உறவைப் போற்றி வளர்த்தல் வேண்டும். உயர்ந்த முறை உரங்களும் ஒழுங்கான நீர்ப்பாய்ச்சலும் செடி நன்கு செழித்து வளர்வதற்குத் துணையாக அமைகின்றன. அங்ஙனமே, மணமக்கள் ஒருவர்பால் மற்றவர் காட்டும் அன்பு, பரிவு, கவனம்,

இணக்கம், நடத்தை நயம் போன்ற பண்புகள் இருவரிடை யேயுள்ள உறவு செழித்து வளரத் துணை செய்யும்; அவை வெயிலும் மழையுமாக இருந்து அதனை வளமாக வளரச் செய்யும். மணமக்களிடையே உள்ள அன்பு மனத்தளவில் நிற்றல் போதாது; சொல்லாலும் செயலாலும் அது வெளிப் படுதல் வேண்டும். மன அளவிலுள்ள அன்பு மிக ஆழமாக அமைந்திருப்பினும் புறத்தே அது வெளிப்படையாகத் தெரிதல் வேண்டும். சொல்லும் செயலும் இதற்குத் துணை செய்யும். தோட்டக்காரன் செடியின் வளர்ச்சிக்கு இடை யூறுகளாக உள்ள களைகளை அடிக்கடி நீக்குவதுபோலவே, திருமண உறவுக்குத் தடைகளாக அமையும் கூறுகளை அவ்வப்பொழுது நீக்கி அமைத்தல் மிகவும் இன்றியமை யாதது. மணமக்களின் அன்றாட வாழ்வில் தோன்றும் கருத்து மாறுபாடுகள், கோபதாபங்கள், வேறு பிரச்சினை கள் போன்றவற்றை இருவரும் நன்கு கலந்து பேசி நீக்கிக் கொள்ளல் வேண்டும். 'இளைதாக முள் மரம் கொல்க'[44] என்ற பொய்யா மொழியை எண்ணி அவற்றை அவ்வப் பொழுது நீக்கிக்கொள்ளல் சாலப் பயன்தரும். நாளடை வில் அவை எழாமலே போதலும் கூடும்.

ஒன்பதாவது: தேவையுள்ள பொழுது மணமக்கள் தக்கா ரின் அறிவுரையைக் கோருதல் மிகவும் வேண்டற்பாலது. மணமக்கள் தம் இடையூறுகளைத் தாமாகப் போக்கிக் கொள்ள இயலாத நிலையிலிருந்தால் தக்காரை நாடுதல் வேண்டும். திருமணம்பற்றிய அறிவுரை வழங்குதல் இன்று மேனாடுகளில் ஒரு சமூக அறிவியலாகவும் சமூகக்கலையாகவும் வளரத் தொடங்கியுள்ளது. மருத்துவர்கள், அமைச்சர்கள், சமூக அறிவியலறிஞர்கள், கல்வி நிபுணர்கள் ஆகியோர் இப் புதியவகை சமூகத் தொண்டிலும் பயிற்சியிலும் தம்மை ஈடு படுத்திக்கொண்டு வருகின்றனர். பயிற்சி பெற்ற நிபுணர்கள் திருமணம்பற்றிய அறிவியலடிப்படையிலமைந்த அறிவுரை

44. குறள்—873

களால் பல தடைகளை நீக்குவதற்குத் துணையாக இருப்பர். மணமக்கள் மறைந்த நிலையிலிருந்து ஊக்கிவிடும் முரண்பாட்டு மூலங்களை அறிதல் அருமையினும் அருமையாகும். இணக்கமின்மைக்குரிய சில காரணங்கள் தெளிவாகப் புலனாகா. ஒரு சிறிய எளியவாதத்தின் பின்புறத்தில் ஆழ்ந்த பாதுகாப்பு இன்மையின் உணர்ச்சி, அல்லது அதிகார அவா, அல்லது பாலுறவுபற்றிய ஏமாற்றம் அமைந்து கிடக்க ஏதுவுண்டு. மணமக்கள் தாமாகவே பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள இயலாவிடில் தக்காரைக்கொண்டு அதற்குத் தீர்வு காணல்வேண்டும். திருமண வெற்றிக்கு இது அவசியம் வேண்டும்.

பத்தாவது : தம்மைப் பிறர் நிலையில் வைத்தெண்ணுதலும் பிறரைத் தம்நிலையில் வைத்துக் கருதுதலும் ஆகிய பண்பு மணமக்களுக்கு மிகவும் இன்றியமையாததாகும். ஒருவர் மற்றவரது உணர்ச்சிகளையும் தேவைகளையும் அறிதல் வேண்டும். ஒருவர் செய்யும் தவற்றினை மற்றவர் உடனுக்குடன் மன்னித்தல் வேண்டும். இயன்றவரை ஒருவர் மற்றவர்மீது ஆக்கிரமிப்பு கூடாது; ஒருவர் மற்றவரைக் கடிதல் கூடாது; மரியாதைக் குறைவாகவோ அல்லது நம்பிக்கைக் குறைவாகவோ நடந்துகொள்ளல் ஆகாது. இவை யாவும் மானிட உறவுக்கு மிகவும் வேண்டற்பாலவை. திருமண உறவிலும் இவ்விதிகள் கையாளப்பெறின் திருமணம்வெற்றியுடன் திகழும். நம்நாடு விடுதலை பெற்றுள்ளது. மக்கள் எதனையும் விடுதலையுணர்ச்சியுடன் சிந்தனை செய்கின்றனர். குடும்பத்திலும் இந்த விடுதலையுணர்வு புகத் தொடங்கியுள்ளது. திருமண வாழ்க்கையில் எழும் எல்லாப் பிரச்சினைகளையும் குடியாட்சி முறையில் தீர்த்துக் கொள்ள முயன்றால் அனைத்தும் சீர்படும். திருமண வாழ்க்கையும் சீருடன்பொலிவுறும் என்பதை மணமக்கள் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

இதுகாறும் எழுதிய பல கடிதங்களில் திருமணம்பற்றிய பல்வேறு பிரச்சினைகளை ஆராய்ந்தேன். இவற்றை உயிரியல் அடிப்படையிலும் சமூக மனப்பான்மைகளின் அடிப்படை

யிலும் விளக்கினேன். திருமண வாழ்க்கையில் புகும்நிலை யிலுள்ள உனக்கு இவை பெரிதும் பயன்படும் என்பது என் நம்பிக்கை. வாழ்க்கை நெடுந்தொலைவு உடையது; அதன் நீள, அகல, ஆழங்களைக் காணமுடியாது. இத்தகைய வாழ்க் கைக் கடலில் பிரயாணம் செய்யும் மணமக்களுக்கு இக் கடிதங்கள் மாலுமியாகவும் திசைகாட்டியாகவும் அமைதல் கூடும் என்றும் கருதுகின்றேன்.

அன்புள்ள,

திருவேங்கடத்தான்.

# மங்கல வாழ்த்து

ஒத்த நலனும் ஒத்த கல்வியும் பிறவும் உடைய ஒருவனும் அவையெல்லாம் அமைந்த ஒருத்தியும் சேர்ந்து வாழ்ந்து அன்பு நிலையைக் காண்டல் அறிவுடைமை. 'சொற்பால் அமுதிவள் யான் சுவை'[1] என்று மணிவாசகப் பெருமான் கூறியவாறு கூடி வாழும் மணமக்கள்,

'இறைகளோ டிசைந்த இன்பம்
இன்பத்தோ டிசைந்த வாழ்வை'க்[2]

காண்பர். அத்தகைய மணமக்கட்கு இப்பகுதியில் 'வாழ்த்து' கூறப்பெறுகின்றது. 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்க' என்று அவர்களை வாழ்த்துகின்றான் திருவேங்கடத்தான்.

1. திருக்கோவையார்—8
2. தேவாரம்—அடங்கன் முறை 7297. [சுந்தரர்]

# 50

அன்பார்ந்த செந்தில் வேலனுக்கு.

நலம். நலனேயாகுக.

இதுகாறும் எழுதிய கடிதங்களில் திருமணத்தைப்பற்றியும் இல்வாழ்க்கையைப்பற்றியும் பல்வேறு செய்திகளை அறிவியல் அடிப்படையில் அறிந்து கொண்டாய். திருமண வாழ்க்கையில் புகும்—புகுந்த—ஒவ்வொரு நம்பிநங்கையருக்கும் அவை மிகவும் இன்றியமையாதவை; பொன்னேபோற் போற்றி உணரத்தக்கவை. இனி, பொதுவாக ஒரு சிலகருத்துகளைத் தெரிவிப்பதுடன் வாழ்த்து கூறி இக்கடிதத் தொடரை முடிக்கின்றேன்.

ஆணும் பெண்ணும் உற்ற பருவம் எய்தியதும் இன்ப உணர்வு தோன்றுகின்றது; இருவரும் இயற்கைவழி கூடி இல்வாழ்வில் நுழைவதற்காகவே அவ்வுணர்வு தோன்றுகின்றது. திருமணம் புரிந்துகொண்டு வாழ்க்கை நடத்துங்கால் இருவரிடையேயிருந்த அழுக்காறு, அவா முதலிய மன மாசுகள் தேய்ந்து அழிகின்றன. அவை இருந்த இடத்தில் பொறுமை, தியாகம், இவை எல்லாவற்றிற்கும் அடிப்படையாயுள்ள அன்பு முதலியவை படிப்படியே கால் கொண்டு கோயில் கொள்ளுகின்றன. இருவர் வாழ்விலும் தன்னலம் கெட்டுப் பரநலம் பெருகுகின்றது. இவன் இவள் ஆகின்றான்; இவள் இவன் ஆகின்றாள். இருவரும் 'ஓருயிர் ஈருடல்' எனப் பொலிகின்றனர். ஒருவரிடத்தில் முன்னே கட்டுப்பட்டுக் கிடந்த அன்பு இப்பொழுது இருவர் பாலும் பரவி நிற்கின்றது குழந்தைப்பேறு ஏற்பட்டதும் இவ்வன்பு மூன்றுவது உயிர்களிடைப் பரவி நிற்கின்றது. இருவரும் தம்மை மறந்து குழந்தைகளின் நலத்துக்கென வாழ்வோராகின்றனர்.

கல்லா மழலைக் களியுறல்
கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி அழுதோடித்
தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு
மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வின்
இனிமை என்னாம்?[3]

என்று பாண்டு குந்திக்கு மகப்பேற்றின் சிறப்பை எடுத்தோதுதலால் மக்கட்பேற்றின் பெருமையை உணரலாம். மகப்பேற்றிற்குப் பிறகு இருவரும் இளமையில் ஏட்டில் படித்த அன்மை இப்பொழுது வாழ்வில் காண்கின்றனர்.

உடல்-மனம்-அறிவு என்னும் மூன்றும் ஒருமைப்பட்ட வாழ்வே அன்புக்குரிய இல்வாழ்வாகும். இம்முத்திற ஒற்றுமையை இருபாலாரிடையே தோற்றுவிப்பது கல்வியாகும்; கல்வியே இவ்வொற்றுமைக்கு அடிப்படைக் கல்லாகும். இத்தகைய கல்வியைப் பெற்று உற்ற வயதில் மேற்கொள்ளும் கலவிதான் உடல்வளத்துக்கும் அறிவு விளக்கத்திற்கும் துணை செய்வதாகும்.

பொறையிலா அறிவு போகப்
புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனச வாவி
துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி
நலமிலாப் புலமை நன்னர்ச்
சிறையிலா நகரம் போலும்
சேயிலாச் செல்வ மன்றே.

என்ற வளையாபதிச் செய்யுளை நோக்குக. எனவே, ஒரு பாதியாகிய ஆணும் ஒரு பாதியாகிய பெண்ணும் தத்தமக்குப்

3. வில்லிபாரதம்-சம்பவச் சுருக்கம்-58 [எஸ். ராஜம் பதிப்பு.]

பொருத்தமான மற்றொரு பாதியைத் தேடிப் பிடிப்பதில் பெரும் பொறுப்பு வேண்டும்; அரிதில் முயன்று பெறவேண்டிய தொன்று இது. இரு பாதியும் அன்பினால் பிணைக்கப் பெறல் வேண்டும். இதுவே சிறந்த திருமணத்திற்கு உயிர் நாடியாகும். உள்ளப் பொருத்தமே உடற் பொருத்தத்திற்கு இன்றியமையாது வேண்டப்பெறுவது:

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினர்.[4]

என்ற பாடலை நோக்குக. இது மிதிலைச் செல்வியும் அயோத்தி அண்ணலும் இணைந்ததைக் காட்டுவது. இவர்கள்பால் நிலவிய அன்பு இளந் தம்பதிகட்கு எடுத்துக்காட்டாக இருத்தல் வேண்டும்.

இளந் தம்பதிகளிடையே ஒழுங்குபட்ட இல்லறம் நாளடைவில் வீடு பேற்றை அளிக்கும். 'வீடு' என்பது தனித்து ஓர்எல்லைக்குள் கட்டுப்பட்டுக் கிடக்கும் ஓரிடம் அன்று என்பதை வள்ளுவர் கோட்பாட்டால் அறியப்பெறும் ஓர் உண்மை. வள்ளுவர் முப்பால் கூறினரேயன்றி நாற்பால் கூறினரில்லை. 'வீடு' என்னும் தமிழ்ச் சொல் வினையினடியாகப் பிறந்த தொழிற் பெயர். கட்டு அல்லது தளை விட்ட இடம் வீடு; அதாவது கட்டினின்றும் விடுதலை அடைவது வீடாகும் ஒருவனும் ஒருத்தியும் அன்பால் விழுங்கப் பெற்றுக் கட்டு நீங்கி இன்ப வாழ்வு நடத்தும் இடமே வீடாகும். சுருங்கக் கூறின் துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உற்ற இடமெல்லாம் வீடேயாகும். இவ்வுலகில் துன்பமின்றி இன்பம் நிலவும் இடம் பெற்ற 'வீடு' என்னும் வழக்கு முழுத் துன்ப நீக்கமும் முழு இன்ப ஆக்கமும் உற்ற நிலையாகிய வீடு என்னும் முதன்மையினின்றும் பிறந்தது என்பர் அறிஞர் எனவே, வீடு என்பது அன்பிலும் அறத்திலும் இன்பத்திலும் நிலவும் ஒரு நிலையாகும்.

---

4. கம்பராமா-மிதிலைக்காட்சி-செய். 37.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.[5]

என்ற வள்ளுவர் வாய்மொழியை ஓர்க. 'ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை'[6] என்ற சொற்றொடரை உன்னுக.

வையத்துள் வாழ்வாங்கு வாழவே ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழ்கின்றனர். அழியா இன்பத்தைப் பெறவே இல்வாழ்க்கை வழியாக அமைகின்றது. இத்தகைய இல்வாழ்க்கையில் அழியா இன்ப ஊற்றைத் திறக்கும் கருவி பெண்ணாக அமைகின்றது. 'இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை'[7] என்ற அவ்வைப் பிராட்டியாரின் அமுத வாக்கை எண்ணுக. பெண்ணில்லா வீடு காடு; சுடுகாடு; நரகம் இல்வாழ்க்கையில் குடும்ப விளக்காக—தெய்வமணி விளக்காக—அமைபவள் பெண் ஆவாள்.

மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு.[8]

[மாண்ட—மாட்சிமைப்பட்ட]

என்ற நாலடியாரை நோக்குக. எவ்வளவு செல்வச் சிறப்புடையதாயினும் நல்ல மனையாள் இல்லாத வீடு சிறிதும் பயன்படாது என்பது உணரத் தக்கது.

இல்வாழ்க்கையில் 'அழியா இன்பம்' என்பது கலவியால் மட்டிலும் விளைவதன்று; அது கலவியுடன் பிறவும் சேர்ந்த ஒன்று. அது புணர்ச்சி கடந்த ஒரு நிலையில் கைக்கூடுவது.

5. குறள்-46
6. குறள்-48
7. மூதுரை-51
8. நாலடியார்-86

வாழ்வில் கலவி ஒரு கூறுதலின், அதை வாழ்நாள் முழுவதும் வைத்துக்கொள்ளல் ஆகாது. சூதக ஒய்வு நிற்பதற்கு முன்னர் மெய்யுறு புணர்ச்சியை நிறுத்தி விடுதல் நன்று. இதன் பிறகு கணவன் மனைவியைத் தன்னுடன் பிறந்த ஒருத்தியாகவும் தாயாகவும் கொள்ளப் பயிலல் வேண்டும். அங்ஙனமே, மனைவியும் கணவனைத் தன்னுடன் பிறந்த ஒருவனாகவும் தந்தையாகவும் கொள்ளப் பயிலல்வேண்டும். இருவரும் மெய்யுறு புணர்ச்சி நீத்த பின்னர் உடல் கடந்த உள் நிலையில் கருத்தினைச் செலுத்தி உடம்பினுள் கோயில் கொண்டுள்ள அன்புக் கடவுளோடு உறவு கொள்ளப் பழகுதல் வேண்டும். பெண் எல்லாப் பண்புகளும் நிறைந்த ஒரு வாழ்க்கை துணையாதலின் அவளை ஆன்றோர்கள் பலபடக் கூறியுள்ளனர்.

வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அறனுக்குத்
தாயும் மகளும்நல் தாரமும் ஆமே.[9]

தாரமு மாகுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடையாளே.[10]

என்று திருமூலர் பெண்ணைத் தாரமாகவும், தாயாகவும் மகளாகவும், கடவுளாகவும் கொண்டிருத்தலைக் காண்க. மற்றும்,

அன்னை தயையும் அடியாள் பணியுமலர்ப்
பொன்னின் அழகும் புவிப்பொறையும்—வன்னமுலை
வேசி துயிலும் விறன்மந் திரியும்
பேசில்இவையுடையாள் பெண்.[11]

[விறல்—வல்லமை]

9, திருமந்திரம்-1178. 10. ௸, 1179
11. நீதிவெண்பா-80

என்று நீதிவெண்பா பெண்ணின் இயல்பை எடுத்துப் பேசுகின்றது. இன்னும்,

தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—தூயவுடன்
வந்தோன் மரிக்கில் வலிபோம் மனையெனிலோ
அந்தோ இவையெலாம் போம்,[12]

என்ற நீதிசாரத்தையும் காண்க. இவ்வான்றோர் மொழிகளின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து வாழ்தல் வாழ்வை உணர்ந்து வாழ்தலாகும். வாழ்வை அறிவால் ஒழுங்கு படுத்தி நிறுத்துதல் அறிவுடைமைக்கு அழகு. பெண்ணின் பாலுள்ள தெய்வ இன்பத்தை நுகர்ந்த நம்பியாரூரர்,

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே, மற்றாரை யுடையேன்.[13]

என்று தனக்கும் தன் துணைவிமார்க்கும் ஏற்பட்ட பற்று கடவுள் பற்று என்பதை அறிக.

உனக்கு உன் பெற்றோர் தேர்ந்தெடுத்த பெண் உன் மனத்திற் குகந்தவள் என்பதை அறிந்தேன்; மகிழ்ந்தேன். இஃது ஊழ்வலியால் நேரிட்டது என்பதை எண்ணி மகிழ்க. நீயும் நின் வாழ்க்கைத் துணைவியும் இந்த ஐம்பது கடிதங்களையும் படித்து அக்கருத்துகளை நன்கு உளங்கொள்வீர்களாக. சில அறிவியல் உண்மைகள் உன் துணைவிக்குப் புரியவில்லையாயின் நீ அவற்றை அவளுக்கு விளக்குவாயாக. வாழ்க்கை நடத்தும்போதுதான் பல உண்மைகள் உனக்கும் விளக்கம் எய்தும்; இயற்கை நுட்பங்கள் யாவும் இனிது புலனாகத்தொடங்கும். பெண்ணும் ஓர் இயற்கை வனம்போலக் காட்சியளிப்பாள்; "நீல வானமும் வெண் திங்களும், மாங்குயிலும், நீல மஞ்ஞையும், அழகிய மலரும், விரைக் கொடியும், அருவிகொழிக்கும் மணிகளும், பிறவும் ஒருங்கு திரண்டு பெண்ணெனப் பொலிதலை" நீ காண்பாய். அப்பொழுது

12. நீதிசாரம்.
13. தேவாரம்—அடங்கன் முறை—7701

தான் பெண் தன்மை—அருட்டன்மை—கட்புலனுயதோர் அமைதித் தன்மை—உனக்கு இன்னதெனப் புலனுகும். இங் ஙனம் வாழ்வின் பல உண்மைகளையும் கண்டு, உணர்ந்து, நீயும் நின் துணைவியும் மனமொத்து வள்ளுவன் வகுத்த வாழ்க்கை நெறியில் ஒழுகவும், பல்புகழ் ஈட்டிப்பல்லாண்டு கள் வாழவும், பல நற்பேறுகளைப் பெறவும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாளுக என்று அவன் திருவடிகளை நினைந்து வாழ்த்துகின்றேன்.

ஃ ஃ ஃ

"மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து
இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்;
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.[14]

—கம்பர்

இங்ஙனம்,

திருவேங்கடத்தான்.

இல்லற நெறி முற்றும்.

14. பாலகாண்ட-கடிமணப்-86

பின்னிணைப்பு–1

# பயன்பட்ட நூல்கள்

## A–ஆங்கில நூல்கள்

1. Amram Scheifeld: The New You and Heredity
2. Edith Sproul: The Science Book of Human Body
3. Gandhi, M. K: Self-restraint versus Self—indulgence
4. Drs. Hanna and Abrahamstone: A Marriage Manual
5. Pitirim A. Sorokin: Sane Sex Order
6. Roberts & Harry: The Miracle of the Human Body
7. Vatsyayana: Kama Sutra
8. Ers. Willy, Vander and Fisher; The Illustrated Encyclopaedia of Sex

## B–தமிழ் நூல்கள்

1. அகநானூறு
2. ஔவையார் ; நல்வழி
3. ,, : மூதுரை
4. இளங்கோ அடிகள் : சிலப்பதிகாரம்
5. இறையனார் : இறையனார் களவியல்
6. கம்பர் : கம்பராமாயணம்
7. கலித்தொகை
8. குறுந்தொகை
9. சமண முனிவர்கள் : நாலடியார்
10. சீத்தலைச் சாத்தனார் : மணிமேகலை

11. சுப்புரெட்டியார், ந. பேராசிரியர் : கல்வி உளவியல்
12. ,, : தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
13. ,, : மானிட உடல்
14. ,, : வாழையடி வாழை
15. சுவாமிநாத தேசிகர் ; திருசெந்திற் கலம்பகம்
16. சென்னை அரசாங்கம் ; குடும்பக் கட்டுப்பாடு கைப் புத்தகம்
17. திரிபுரசுந்தரி, எஸ். டாக்டர் : பத்து மாதம்
18. திருமூலர் : திருமந்திரம்
19. திருவள்ளுவர் : திருக்குறள்
20. திரு. வி. க. : பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை
21. தேவாரம் : அடங்கன் முறை
22. தொல்காப்பியர் : தொல்காப்பியம்—பொருளதிகாரம் (இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் உரைகள்)
23. நற்றிணை
24. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
25. நீதிசாரம்
26. நீதிவெண்பா
27. பாரதிதாசன் : கவிதைகள்
28. பாரதியார் : கவிதைகள்
29. பெருவாயின் முள்ளியார் : ஆசாரக்கோவை
30. மாணிக்க வாசகர் : திருக்கோவையார்
31. ,, : திருவாசகம்
32. வல்லூர் தேவராசப்பிள்ளை : குசேலோபாக்கியானம்.
33. வளையாபதி
34. வில்லிபுத்தூரார் : பாரதம்

பின்னிணைப்பு-2

# பொருளடைவு

[எண், பக்க எண்]

ம



மா



மி



மீ



மு

---

# ஆசிரியரின் மற்ற நூல்கள்

ஆராய்ச்சி :

| | |
|---|---|
| Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar. | 96—00 |
| Collected Papers. | (In The Press) |

ஆசிரியம் :

| | |
|---|---|
| தமிழ் பயிற்றும் முறை | (அச்சில்) |
| அறிவியல் பயிற்றும் முறை | 6 00 |
| கல்வி உளவியல் | 6 00 |
| யுனெஸ்கோ: அறிவியல் பயிற்றும் மூல நூல் | 10 00 |

**இலக்கியம் :**

| | |
|---|---|
| கவிஞன் உள்ளம் | (அச்சில்) |
| கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி | (அச்சில்) |
| காலமும் கவிஞர்களும் | 2 50 |
| காதல் ஓவியங்கள் | 2 50 |
| அறிவுக்கு விருந்து | 3 50 |
| முத்தொள்ளாயிர விளக்கம் | 7 00 |
| பரணில் பொழிவுகள் | 4 00 |
| மலைநாட்டுத் திருப்பதிகள் | 5 00 |
| தொண்டைநாட்டுத் திருப்பதிகள் | 6 00 |
| பாண்டி நாட்டுத் திருப்பதிகள் | 9 00 |
| அறிவியல் தமிழ் | 6 00 |
| சிலநோக்கில் நாலாயிரம் | (அச்சில்) |
| வேமனர் | (அச்சில்) |
| கம்பனில் மக்கள் குரல் | (அச்சில்) |
| கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள் | (அச்சில்) |

**திறனாய்வு :**

| | |
|---|---|
| கவிதை யநுபவம் | (அச்சில்) |
| தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை | 14 50 |
| அகத்திணைக் கொள்கைகள் | (அச்சில்) |

**அறிவியல் :**

| | |
|---|---|
| மானிட உடல் | 5 00 |
| அணுவின் ஆக்கம் | 8 00 |
| இளைஞர் வானொலி | 1 50 |
| அதிசய மின்னணு | 2 00 |
| இராக்கெட்டுகள் | 2 00 |
| இளைஞர் தொலைக்காட்சி | 3 00 |
| நமது உடல் | 3 00 |
| அம்புலிப் பயணம் | 5 00 |
| தொலை உலகச் செலவு | 7 50 |
| அறிவியல் விருந்து | 4 50 |
| வாழையடி வாழை | (அச்சில்) |
| அணுக்கரு பௌதிகம் | 7 00 |

